தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண் – 142

# பன்னாட்டுப் பொருளாதாரம்–II

## (THE INTERNATIONAL ECONOMY)

ஆசிரியர் :
பி. டி. எல்ஸ்வொர்த்

தமிழாக்கம் :
கே. எஸ். இராமசாமி, எம்.ஏ., எம்.காம்.,
விரிவுரையாளர், வணிகவியல் துறை,
இஸ்லாமியக் கல்லூரி, வாணியம்பாடி.



தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண் – 142

# பன்னாட்டுப் பொருளாதாரம்–II

## (THE INTERNATIONAL ECONOMY)

ஆசிரியர் :
பி. டி. எல்ஸ்வொர்த்

தமிழாக்கம் :
கே. எஸ். இராமசாமி, எம்.ஏ., எம்.காம்.,
விரிவுரையாளர், வாணிகவியல் துறை,
இஸ்லாமியக் கல்லூரி, வாணியம்பாடி.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

# அணிந்துரை

(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வியமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாண வர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின் றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்லமெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான 'பன்னாட்டுப் பொருளாதாரம்-II' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 142ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 177 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலை மண்டபத்தில் கொலுவீற்றிருக்கிறாள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

பக்கம்

## மடல் IV
### அயல்நாட்டுச் செலுத்துநிலையும் அதன் சீரமைவும்



## மடல் V
### பன்னாட்டுப் பொருளாதாரத்தின் சரிவு



## மடல் VI
### புனரமைப்பு, மாறுதல், சீர்திருத்தம்

மடல் IV

# அயல்நாட்டுச் செலுத்துநிலையும் அதன் சீரமைவும்

# (The Balance of Payments and its Adjustment)

## 14. நாட்டு வருமானமும் அயல்நாட்டுச் செலுத்துநிலையும்

## (National Income and the Balance of Payments)

உலகத்தின் உற்பத்திச் சாதனங்கள் முழுமையாகப் பயன்படுத்தப் படுகின்றன என்று வைத்துக்கொண்டு, அவற்றை எப்படியெல்லாம் பங்கிடமுடியும் என்பதை இதற்கு முந்திய அத்தியாயங்களில் முக்கிய மாகப் பார்த்தோம். வாணிபத்தின்மீது தடைகள் இல்லாதிருந்தால் வெவ்வேறு பொருள்களின் உற்பத்தியில் வெவ்வேறு நாடுகள் பெற்றுள்ள தராதரச் சிறப்புகளைப்பொறுத்துச் சாதனங்கள் பங்கிடப் பெறுகின்றன. அத்தகைய தடையிலா வாணிபமே இதில் சம்பந்தப் பட்ட அனைவருக்கும் பொதுவாக மிகவும் உயர்ந்தது என்பதை நாம் அறிந்துகொண்டோம். இப் பொதுக் கோட்பாட்டுக்குக் குறிப்பிட்ட சில விதிவிலக்குகள்மட்டுமே அதுவும் ஒரு குறுகிய வரம்புக்கு உட்பட்டவைமட்டுமே நம்மால் ஒப்புக்கொள்ளக்கூடியவை ஆகும்.

பிற நாடுகளுடன் ஒப்பிட்டால் ஒரு நாடு எவ்வாறு உற்பத்திச் சாதனங்களைப் பெற்றுள்ளது, உற்பத்தியின் அகச் சிக்கனங்களையும் (internal economies) புறச் சிக்கனங்களையும் (external

economies) அது எவ்வாறு அதிகமாக்க முடியும் என்பதைப் பொறுத்தே உற்பத்தியிலும் வாணிபத்திலும் அந்நாடு பெறும் சிறப்பு உள்ளது என்பதைப் பார்த்தோம். போக்குவரத்துச் செலவு இருப்ப தால் இயற்கையாகவே கிடைக்கும் பாதுகாப்பாலும் சுங்கவரிச் சட்டங்கள் செயற்கையாகத் தரும் பாதுகாப்பாலும் திருத்தப்பட்டு, இந்த மூலகாரணங்கள்தான் ஒரு நாடு எவ்வெந்தப் பொருள்களை ஏற்றுமதி அல்லது இறக்குமதி செய்கிறது என்பதைத் தீர்மானிக் கின்றன.

சிறப்பாய் உற்பத்தி செய்வதிலும் (specialization) வாணிபத் திலும் ஒரு சிக்கலான அமைப்பு பத்தொன்பதாம் நூற்றுண்டில் எப்படி வளர்ந்தது என்பதையும் நாம் பார்த்தோம். அத்தகைய உலகில், நாட்டுக்கு நாடு மூலதனப் பெயர்ச்சி இல்லாமலும், தேவைகள் திடமாகவும் இருந்தால், பரஸ்பரத் தேவைகளின் (reciprocal demands) விளைவாக ஒவ்வொரு நாட்டின் ஏற்றுமதிகளும் இறக்குமதி களும் ஒன்றுக்கொன்று சமமாகும். அதன் பன்னாட்டுச் செலாவணி வருவாய்களும் செலுத்துகைகளும் அதாவது, அதன் அயல்நாட்டுச் செலுத்துநிலை, திடமான சமநிலையைப் பெறும்.

ஆனால், உண்மையில் தேவைகள் மாருமல் இல்லை. மக்களின் விருப்புவெறுப்புகள், தொழில்நுட்ப வளர்ச்சி இவற்றைப் பொறுத்து அவை மாறுகின்றன. தவிர, முதலீட்டில் வரும் லாபத்தில் ஏற்படும் மாறுதல்களின் விளைவாக மூலதனப் பெயர்ச்சிகளும் ஏற்படத்தான் செய்கின்றன. நாட்டு வருமானமும், அத்துடன் மொத்தத் தேவை களும், குறிப்பிட்ட தேவைகளும்கூட மாருமல் இல்லை; வளர்ச்சி ஏற்படும்போது படிப்படியாகவும், வாணிகச் சுழலின் ஏற்ற இறக்கங்கள் (cyclical fluctuations) ஏற்படும்போது விட்டுவிட்டும் வருமானம் மாறுகின்றது என்பதை நாம் அறிவோம். இந்தக் காரணங்களால், ஒரு நாட்டின் பன்னாட்டு வருவாய்களும், செலுத்துகைகளும் நெடுநாட் களுக்குத் திடமான சமநிலையில் இருக்காது; அடிக்கடி சமநிலை கெடுவது நிச்சயம். அவ்வாருயின், சிறியதும் பெரியதுமான இத்தகைய சமநிலைக் கோடுகளை ஒரு நாடு எப்படிச் சரி செய்து கொள்கிறது என்று கேள்வி எழுகிறது. அதுவும், தொடர்ந்து பெரிய அளவுக்கு வருவாயை மிஞ்சி செலுத்துகைகள் பெருகினல் அந்நாடு தன் பன்னாட்டுக் கணக்கில் மீண்டும் சமநிலையை எப்படி ஏற்படுத்திக் கொள்கிறது?

இந்த முக்கியமான கேள்விகளுக்கு விடை அளிப்பதே இந்நூலின் இப் பகுதியின் நோக்கம். பன்னாட்டு விவகாரங்களின் கணக்கு எப்படி வைக்கப்படுகிறது; அவை எதை விளக்குகின்றன, எதை விளக்குவ தில்லை; மோசமாகச் சலனமுற்ற செலுத்துநிலையில் சமநிலையை

மீண்டும் கொணரும் செயல்முறைகள் யாவை? - ஆகியவற்றை ஆராய்ந்து, அரசாங்கங்கள் எவ்வெந்தக் கொள்கைகளை மாற்று வழிகளாகக் கடைப்பிடிக்கலாம் என்பதைப் பார்ப்போம். ஒரு நாடு வெளி உலகத்தோடு கொண்டுள்ள எல்லாப் பொருளாதார விவகாரங்களையும் அதன் செலுத்துநிலை பிரதிபலிக்கிறது. அதன் வருமானத்தின் அளவும் அதன் மொத்தத் தேவையின் (aggregate demand) அளவும் பெரும் அளவுக்கு அதன் பொருளாதார விவகாரங்களை பாதிக்கின்றன. ஆகையால், ஒரு நாட்டின் வருமானத்துக்கும் அதன் செலுத்து நிலைக்கும் உள்ள தொடர்பை முறையாக முதலில் பரிசீலிப்போம்.

முதலில் பன்னாட்டுச் சிறப்புத் தேர்ச்சி, வாணிபம் இவற்றின் அடிப்படைகளைப்பற்றி விவரிக்கும்போது சாதனங்கள் முழுமையாகப் பயன்படுவதாக வைத்துக்கொண்டோம். ஆனால், விலைகள் மட்டும் மாறுவதாக எடுத்துக்கொண்டோம். இப்போது அதற்கு நேர் எதிராக, விலைகள் மாறுவதில்லை என்று எடுத்துக்கொள்வோம். இது உண்மையாக இருக்கும்வரை, பணச் செலவு அதிகமானால் பயன் பாட்டுக்கு வரக்கூடிய பயன்படாத சாதனங்கள் இருக்கவேண்டும். பண வருமானமும் (money income) உண்மை வருமானமும் (real income) ஒன்றாக, சாதனங்கள் முழுமையும் பயன்படும் நிலைவரை உயரும். அதன் பின்னரோ, பணச் செலவு (money expenditure) மேலும் உயர்ந்தால் விலைகள் உயரும். அது நமது மாதிரி அமைப்பின் (model) எல்லைக்கு அப்பாற்பட்டது. விலைகள் மாறாது என்று எடுத்துக்கொண்டது உண்மைக்குப் புறம்பாகத் தோன்றினும் இங்கு நமக்குப் பயன்படும். நாட்டு வருமானத் துக்கும் செலுத்து நிலைக்குமுள்ள தொடர்பை நாம் பரிசீலனை செய்யப் போகிறோம். அதைத் தனியாக எடுத்துப்பார்க்க இது நமக்கு உதவுகிறது. பின்னர் விலைகள் வருமானம் இரண்டும் மாறும் உண்மை நிலையை எடுத்துக்கொண்டு பார்க்கலாம்.

## நாட்டின் மொத்த ஆக்கம்
## (Gross National Product)

ஒரு நாட்டின் உற்பத்தி நடவடிக்கையைப் பலவாறு விவரிக்கலாம். அவற்றுள் அடிப்படையானது நாட்டின் மொத்த ஆக்கம் (*GNP*) என்ற கோட்பாடு. ஒரு குறிப்பிட்ட காலத்தில், சாதாரணமாக ஓர் ஆண்டில் ஒரு பொருளாதாரத்தின் உற்பத்திப் பணியின் விளைவான இறுதி ஆக்கத்தின் (final product) மொத்த மதிப்பைப் பணத்தில் அளந்து இது தருகிறது. ஒரு பொருளாதாரத்தில் உற்பத்திப் பணியின் விளைவாக நுகர்வுப் பொருள்களும் பணிகளும் கிடைக்கின்றன. இவை உற்பத்தியாளர்களுக்கும் அவர்களைச் சார்ந்தவர்களுக்கும் உடனடி

யாகத் திருப்தி அளிக்கின்றன. இது தவிர அவ் வுற்பத்தி நடவடிக்கைகளின் மற்றொரு குறிக்கோள் அச் சமூகத்தின் மூதற்பொருள்களின் இருப்பைப் பராமரிப்பதும் வளர்ப்பதும் ஆகும். அதை வேறு விதமாகச் சொன்னால், இறுதி ஆக்கம் இருவகையானது; நுகர்வுக்கான (consumption) பொருள்கள் (மற்றும் பணிகள்), மூதற்பொருள் இருப்பைப் பராமரிப்பவையும் அதிகரிப்பவையும் அல்லது மொத்த முதலீடு (gross investment).

இறுதி ஆக்கம் என்பதில் இடைநிலைப் பொருள்களைச் (intermediate goods) சேர்ப்பதில்லை. இது இரட்டைக் கணக்கெடுப்பைத் தவிர்ப்பதற்காக. உதாரணமாக, செருப்புத் தொழிலின் உற்பத்தியின் மதிப்பில் வாங்கிய தோலின் மதிப்பு அடங்கியுள்ளது. எனவே, தோலின் உற்பத்தியாளர்கள், தோல் பதனிடுவோர் ஆகியோர் இறுதி ஆக்கத்தில் கொண்டுள்ள பங்கும் இதில் அடங்கியுள்ளது. மற்றொரு வழி, உற்பத்தியின் ஒவ்வொரு பங்கையும் கடைசிப்படி உட்பட, தனித் தனியாகக் கணக்கெடுப்பது, ஆனால் ஒவ்வொரு படியிலும் 'சேர்க்கப்பட்ட மதிப்பை' மட்டும் எடுத்துக்கொண்டு கூட்டுவது.

இறுதி ஆக்கத்தின் மொத்த மதிப்பு என்று குறிப்பிடுவதற்குக் காரணம் இது. நடப்பு முதலீட்டில் ஒரு பகுதி நடப்பு வருமானத்தை உற்பத்தி செய்யும்போது தேய்ந்துபோகிற அல்லது காலம் மாறிப் போகிற மூதற்பொருள்களுக்கு ஈடுசெய்வதற்காக என்பதை முன்னறிவிக்கவே அவ்வாறு குறிப்பிடப்படுகிறது. அதாவது $GNP$-ன் முதலீட்டுப் பகுதி, நாட்டின் செல்வ இருப்பை அதிகமாக்காமல், தேய்ந்து எறியப்படும் பகுதியைமட்டும் புதுப்பிப்பதன்மூலம் அச் செல்வத்தை அதே நிலையில் பராமரிக்கும் மூதற்பொருள்களின் உற்பத்தியைமட்டும் கொண்டுள்ளது.

## நாட்டு வருமானச் சமன்பாடுகள்
## (The National Income Equations)

நாட்டு ஆக்கம் அல்லது வருமானம் ஒரு வட்டமான ஓட்டம். நுகர்வோர், முதலீடு செய்வோர் ஆகியோரின் செலவுகளே இவ் வோட்டத்தைத் தோற்றுவிக்கும் மூலசக்தி. இவையே உற்பத்திக்கான உத்தரவுகள். இந்த உத்தரவுகளுக்கிணங்க உற்பத்தி செய்யப்படும் போது, முதலீடு செய்வோரும் நுகர்வோரும் வாங்குவது, உற்பத்தியாளர்களின் விற்பனை ஆகிறது—அதாவது, முதலீடு செய்வோர் நுகர்வோர் ஆகியோரின் செலவுகள் உற்பத்தியாளர்களின் வரவுகள் ஆகின்றன. ஒரே விஷயத்தை வெவ்வேறு கோணங்களில் பார்ப்பவை தாம் இவை. அதாவது, நாட்டு வருமானத்தின் உற்பத்திப்

பக்கத்தை வெவ்வேறு கோணங்களில் பார்ப்பவை. வாங்குவோரை நோக்கிப் பொருள்களும் பணிகளும் ஓடுகின்றன. அதற்கு எதிர்த் திசையில் உற்பத்தியாளர்களின் பணப்பெட்டிகளை நோக்கிப் பணச் செலவுகள் ஓடுகின்றன.

நாட்டு வருமானம், அல்லது ஆக்கத்தைப் பங்கீட்டுப் பக்கத்திலிருந்தும் பார்க்கலாம். தம் உழைப்பையும், மூலதனத்தையும், நிலத்தையும் உற்பத்திப் பணியில் ஈடுபடுத்தியதற்காகத் தனி மனிதர்களுக்கு உற்பத்தித் துறையினர் தாம் செய்த பொருள்களை விற்றுவந்த பணத்தைத் தருகின்றனர். காரணிகளுக்குக் கொடுக்கும் இத் தொகைகளைத் தவிர, வியாபார மாற்றுதல்களுக்காகத் தனி மனிதர்களும் மறைமுக வரிகளாகவும், கம்பெனி வரிகளாகவும் அரசாங்கத்துக்கும்கூட விற்பனை வருவாய் பங்கிடப்படுகிறது.[1] இவ்வாறு பங்கிடப்பட்ட வருவாய் செலவுக்குத் தயாராக உள்ளது. இவ் வருவாய்களைப் பெறுவோர் அவற்றைச் செலவிடும்போது அப் பணம் உற்பத்தியாளர்களைச் சேர்ந்து வட்ட ஓட்டத்தை முடிக்கின்றது.

வருமானத்தின் இந்த வட்ட ஓட்டத்தை நமக்கு வசதியாக சமன்பாடுகளாக நாம் இப்போது எழுதலாம். உற்பத்திக்கு மூலகாரணமான சக்தி $GNP$ மீது செய்யப்படும் செலவுகள் என்று தொடங்குவோம். ஒரு மூடிய பொருளாதாரத்தில் (closed economy) இவை நுகர்வோர் வாங்குவது முதலீடு செய்வோர் வாங்குவது, அப்போதைய நுகர்வு (consumption), முதலீடு (investment) இரண்டுக்காகவும் அரசாங்கம் வாங்குவது ஆகிய அனைத்தும் கொண்டது. இதை ஓர் எளிய சமன்பாடாகக் கூறலாம்.[2]

$$GNP = C + I_g + G_c + G_i$$

வெளிநாட்டுடன் வாணிபம் செய்யும் ஒரு பொருளாதாரத்தை எடுத்துக்கொண்டால் சரக்கு ஏற்றுமதிகளையும், அயல்நாட்டாருக்காகச்

[1] தனியவர் வருமானங்கள்மீதுள்ள வரிகளும், சொத்து வரிகளும் இங்கு சேர்க்கப்படவில்லை. ஏனெனில், உற்பத்தியினின்றும் கிடைக்கும் வருவாய் பங்கிடப்பட்ட பின்னரே தனி மனிதர்மீது அவை விதிக்கப்படுகின்றன.

[2] $G_c$ என்பது அரசாங்கத்தின் நுகர்வுச் செலவைக் குறிக்கிறது. அரசாங்க ஊழியர்களின் பணிகளை வாங்கவும், அன்றாடம் பயன்படும் எழுதுபொருள்கள், போர்ப் படைகளுக்குச் சீருடைகள், உணவு போன்றவற்றுக்காகவும் செலவிடப்படும் தொகை இது. $G_i$ என்பது அரசாங்க முதலீடு. அதாவது கட்டடங்கள், மின்சார உற்பத்தி ஆலைகள் போன்றவற்றுக்காகச் செலவிடப்படுவது. முதலீட்டின் ($I$) கீழே g என்று குறிப்பிடுவது அது மொத்த (gross) முதலீடு (investment) என்பதைக் காட்டுவதற்காக.

செய்யப்பட்ட பல்வேறு பணிகளையும் சேர்க்கவேண்டும். இதை மட்டும் சேர்த்தோமாயின் நம் சமன்பாடு நாட்டின் மொத்த ஆக்கத்தைக் குறிக்காது ; அப் பொருளாதாரத்தில் உற்பத்தியான எல்லாப் பொருள்கள் பணிகள் ஆகியவற்றின் மொத்த மதிப்பையும் குறிக்காது ; உற்பத்தித் துறையிலிருந்து மொத்தத்தில் வாங்கப்பட்டவற்றின் மதிப்பைத்தான் குறிக்கும். ஆனால், வாங்கப்பட்ட ஒவ்வொரு வகைப் பொருள்களிலும் இறக்குமதிகள் கலந்துள்ளன. பல கடைகளில் இறக்குமதியான வினைமுடிந்த பொருள்கள் விற்கப்படுகின்றன. ஏற்றுமதிகளின் மதிப்பிலே இறக்குமதியான கச்சாப் பொருள்களின் மதிப்பும் அடங்கியிருக்கும். எனவே, ஒரு திறந்த பொருளாதாரத்தின் (open economy) நாட்டு மொத்த ஆக்கத்தைக் கூறவேண்டுமானால் பொருள், பணி ஏற்றுமதிகளைக் கூட்டி அத்தகைய இறக்குமதிகளைக் கழிக்க வேண்டும். அப்போது நம் சமன்பாடு பின்வருமாறு இருக்கும்.

$$GNP = C + I_g + G_c + G_i + X - M$$

இனி நாட்டின் மொத்த ஆக்கத்தை அதன் உற்பத்தியைக் கொண்டு அன்றி அதன் பங்கீட்டைக் (distribution) கொண்டு நோக்கலாம். $GNP$-ன் பெரும்பகுதி, தனி மனிதர்களுக்குக் காரணிகளுக்கான செலுத்துகைகளாக (factor payments), அதாவது கூலி (Wages) ($W$), வட்டி (Interest) ($I$), வாடகை (Rent) ($R$), மற்றும் லாபம் (Profits) ($P$) ஆகக் கொடுக்கப்படுகின்றன. இவற்றைத் தவிர வியாபார மாற்றுகைகள் (business transfers) இருக்கலாம். ஆராய்ச்சியை எளிதாக்க அவற்றை இங்கு விட்டுவிடுவோம். இவை தவிர, நிச்சயமாக வரிகள் (taxes) ($T$) இருக்கும் ; அதாவது, மறைமுக வரிகளும் கம்பெனி லாபத்தின்மீதான (Corporate profits) வரிகளும் இருக்கும். மேலும், தாம் பெறும் லாபம் அனைத்தையும் பங்குதாரர்களுக்கு வியாபார நிறுவனங்கள் பங்கிட்டுவிடுவதில்லை ; சாதாரணமாக, ஏதாவது ஒரு பகுதியை நிறுத்திவைத்துக்கொள்கிறார்கள், அதாவது சேமிக்கிறார்கள் (save) ($S$). இறுதியாக, முன்னிருந்த முதற்சாதனங்கள், பொறிகள் ஆகியவற்றில் நாட்டு ஆக்கத்தை உற்பத்தி செய்யும்போது பயனாகிப்போய்விடும் பகுதிகளுக்குப் பதிலாகப் புதுச் சாதனங்களுக்கு ஏற்பாடு செய்ய, போதுமான அளவு ஒரு தொகை ஒதுக்கிவைக்கவேண்டும். நடைமுறையில், தேய்மானத்துக்காக (depreciation) ($D$) ஒரு தொகையை லாபத்திலிருந்து ஒதுக்குவதன்மூலம் இதற்கு ஏற்பாடு செய்யப்படுகிறது.[3] பங்கிடப்

[3] பொறிகள், சாதனங்கள் ஆகியவற்றின் மதிப்பில் உண்மையில் ஏற்படும் குறைவைத் தோராயமாகத்தான் இது மதிப்பிடுகிறது. இதைவிட உயர்ந்த முறை வேறில்லையாதலின், இதுவே பொதுவாகப் பயன்படுகிறது.

பட்ட வருவாய்கள், வரிகள், கம்பெனி சேமிப்புகள், தேய்மானம் இவற்றுக்காக GNP எப்படி ஒதுக்கப்படுகிறது என்பதை ஒரு சமன்பாடாக இப்போது கூறலாம் :

$$GNP = W + i + R + P + T + S + D$$

உற்பத்தியான GNPயும் பங்கிடப்பட்ட GNPயும் ஒரே விஷயத்தின் இரண்டு பார்வைகள்தாம். எனவே, இவ்விரண்டும் சமம் என்பதைப் பின்வரும் சமன்பாடு கூறுகிறது :

$$C + I_g + G_c + G_i + X - M = GNP = W + i + R + P + T + S + D$$

## நாட்டுக் கணக்குகள்

## (National Accounts)

ஒரு நாட்டின் மொத்த ஆக்கத்தில் பிரதிபலிக்கும் அந்நாட்டு உற்பத்தி நடவடிக்கைகளுக்கும் அதன் செலுத்துநிலையில் காணப்படும் அதன் பன்னாட்டு விவகாரங்களுக்கும் உள்ள தொடர்பைக் காட்டுவது தான் நாம் உடனடியாகச் செய்யவேண்டிய முக்கியப் பணியாகும். பொதுவாக இவற்றின் உறவு நமக்குத் தெரிந்ததே. நாட்டு ஆக்கத்தின் ஒரு பகுதியை ஏற்றுமதிகளை உற்பத்தி செய்வதில் ஈடுபட்டுள்ளவர்கள் ஆக்குகின்றனர் ; எப்போதும் நாட்டு வருமானத்தின் ஒரு பகுதி இறக்குமதிகள்மீது செலவழிக்கப்படுகிறது. இவ்வாறு வெளிப்படை யாகத் தெரியும் உறவுகள்மட்டும் நம் ஆராய்ச்சிக்குப் போதாது. ஒரு நாட்டின் பன்னாட்டு விவகாரங்களோ பலவகையானவை ; ஒரு நாட்டின் பொருளாதாரமும் உலகின் பிறவும் சந்திக்கும் இடங்கள் பலப்பல ; அவற்றின் உறவுகள் சிக்கலானவை. ஒரு நாடு பிற எல்லா நாடுகளுட னும் கொண்டுள்ள மிக முக்கியமான பொருளாதார உறவுகளைத் தெளிவாகவும் செம்மையாகவும் கூறவேண்டியது அவசியம். அத்தகைய தெளிவும் செம்மையும் வேண்டுமானால், பொருளாதாரத்தின் பல துறைகளில் உள்ள நடவடிக்கைகளையும் விவகாரங்களையும் காட்டும் நாட்டுக் கணக்குகளின் ஒரு தொகுதியை இங்குப் புகுத்துவது உபயோக மாக இருக்கும்.[4]

[4] *International Trade: Theory and Policy* (Richard D. Irwin, Inc., Homewood, Ill, 1962) என்ற நூலின் 2ஆம் அத்தியாயத்தில் 'Jaraslav Vanek' பயன்படுத்தியுள்ள முறையிலேயே இங்கு விவரங்கள் கொடுக்கப்படு கின்றன. நாட்டுக் கணக்குகளின் தொகுப்பையும் நாட்டு வருமானச் சமன்பாடு களையும் நான் இணைத்திருக்கிறேன்.

**நாட்டின் மொத்த ஆக்க வருமானக் கணக்கு** (Gross National Product and Income Account ($IA_p$)

நாட்டின் மொத்த ஆக்கம், வருமானக் கணக்கிலிருந்து தொடங்குவோம். *GNP*-க்கான சமன்பாட்டில் காணப்படும் விஷயத்தையே ஓரளவுக்கு மேலும் விவரமாக இது தருகிறது. *GNP* சமன்பாட்டின் இரு பக்கங்களுக்கும் சரியாக இந்தக் கணக்கின் இரு பக்கங்களும் உள்ளன. நுகர்வோர், முதலீடு செய்வோர், அரசாங்கம், அயல் நாட்டார் ஆகியோரின் செலவுகளிலிருந்து விளையும் உற்பத்தியிலிருந்து நாட்டு வருமானம் தோன்றுவதை ஒரு பக்கத்தில் காண்கிறோம். உற்பத்திக்காக உழைப்பு, முதற்பொருள்கள் அல்லது பிற சாதனங்களை அளித்தவர்களுக்கு அவ் வுற்பத்தியினின்று விளைந்த வருமானம் எவ்வாறு பங்கிடப்படுகிறது என்பதை மறுபக்கம் காட்டுகிறது. ஒரு நாட்டின் எல்லாப் பொருளாதார அலகுகளும்—அதாவது கம்பெனிகள், சிறு நிறுவனங்கள், விவசாயிகள், உயர்ந்த தொழில்களைச் செய்பவர்கள் (professional people), அத்துடன் அரசாங்கமும்கூட—ஈடுபட்டுள்ள நடவடிக்கைகளை,இக் கணக்குக் காட்டுகிறது. பொருள்கள், பணிகளின் உற்பத்தியில் அவை பங்கு கொள்ளும் அல்லது அவ் வுற்பத்தியைப் பகிர்ந்துகொள்ளும் அளவை மொத்த நாட்டு ஆக்க, வருமானக் கணக்குக் காட்டுகிறது. ஒரு பொருளாதாரத்தின் உற்பத்தித் துறையின் கணக்கு அது.

1950-ல் தொடங்கிய பத்தாண்டுகளின் இடையில் அமெரிக்காவில் ஆக்கமும் வருமானமும் இருந்த நிலையை, அதிக வித்தியாசம் இல்லாமல், இங்குக் கொடுக்கப்பட்டிருக்கும் மொத்த நாட்டு ஆக்க, வருமானக் கணக்குக் காட்டுகிறது. அனுவசியமான சிக்கல்களைத் தவிர்க்க விவரங்கள் காட்டப்படவில்லை. எண்ணிக்கைகள் முழு பிலியன்களில் சரிசெய்து தரப்பட்டுள்ளன, சில எண்ணிக்கைகள் மாற்றப்பட்டுள்ளன. இருந்தாலும், அந்தக் காலத்து நிலையை ஏறக்குறைய இருந்தவாறே இப் பட்டியல் (14·1) தருகிறது.

பலவகைப் பொருள்களையும் பணிகளையும் உற்பத்தி செய்து விற்பதனால் எங்கிருந்தெல்லாம் வருமானம் வருகிறது என்பது வலப் பக்கத்தில் கொடுக்கப்படுகிறது. ஒவ்வொரு விவரத்தையும் அடுத்து ஓர் எழுத்து குறிக்கப்பட்டுள்ளது. *GNP* சமன்பாட்டில் நீங்கள் ஏற்கெனவே பார்த்த அடையாள எழுத்துகளில் ஒவ்வொன்றுக்கும் சரியாக இவ் வெழுத்துகள் குறிக்கப்பட்டுள்ளன.[5] (ஓர் எஃகுக்

[5] சில புதிய எழுத்துகளும் உள்ளன. சரக்கு ஏற்றுமதிகள் ($X$) அல்லாமல் பல்வேறு பணிகளுக்காக வெளிநாட்டாரிடமிருந்து கிடைக்கும் வருவாயை ($F_p$) குறிக்கிறது. அவர்கள் செய்த பணிகளுக்காக அவ்வாறு செய்யும் செலுத்துகளைக் குறிக்கத் தலைக்குறியிட்ட ($F'_p$) என்ற எழுத்து பயன்படுத்துகிறது.

## பட்டியல் 14.1. நாட்டின் மொத்த வருமானம், ஆக்கக் கணக்கு ($IA_p$) (பிலியன் டாலர்களில்)

| | பங்கிடப்பட்ட வருமானம் (பற்றுகள்) ($Drs.$) | | உற்பத்தி வரவுகள் ($Crs.$) | | |
|---|---|---|---|---|---|
| | கூலிகள், சம்பளங்கள் : | | நுகர்வோருக்கு விற்றது | 230 | $C$ |
| $W_p$ | தனியார்துறை ஊழியர்கள் | 175 | அரசாங்கத்திற்கு விற்றது : | | |
| $W_p$ | அரசாங்க ஊழியர்கள் | 35 | நடப்புக் கணக்கில் | 75 | $G_c$* |
| $i_p$ | வட்டி | 12 | முதலீட்டுக் கணக்கில் | 5 | $G_i$ |
| | கம்பெனிகள் அல்லாத நிறுவனங்களின் வருமானம் : | | முதலீட்டுக் கணக்கிலும் நிலைத்த சொத்துகள் சேரவும் உற்பத்தியாளருக்கு விற்றது | 50 | $I_g$ |
| $W_p$ | கூலிகள் | 24 | சரக்கு இருப்புச் சேர்ந்தது | 2 | $I_g$ |
| $R$ | வாடகை | 10 | சரக்கு ஏற்றுமதிகள் | 17 | $X$ |
| $i_p$ | வட்டி | 5 | கப்பல் தொழில், உல்லாசப் பிரயாணிகள் | 3 | $F_p$ |
| $P$ | லாபங்கள் | 15 | அயல் நாட்டாரிடமிருந்து பெற்ற வட்டி, பங்கு ஈவுகள், பிற வருமானம் | 3·5 | $F_p$ |
| $t_p$ | வியாபார மாற்றுகைச் செலுத்தல்கள் | 1 | கழிக்க : | | |
| | கம்பெனி லாபங்கள் : | | சரக்கு இறக்குமதிகள் | –10 | $F'_p$ |
| $P$ | பங்கு ஈவுகள் | 18 | கப்பல்தொழிலும் உல்லாசப் பிரயாணிகளும் | –5 | $F'_p$ |
| $S_p$ | பங்கிடப்படாத லாபங்கள் | 8·5 | வெளி நாட்டாருக்குத் தந்த வட்டி, லாப ஈவுகள், பிற வருவாய்ச் செலுத்துகைகள் | –1 | $F'_p$ |
| $T_p$ | கம்பெனி லாப வரி | 20 | | | |
| $D$ | தேய்மான ஒதுக்கீடுகள் | 23 | | | |
| $T_i$ | மறைமுக வரிகள் | 30 | | | |
| | கழிக்க : | | | | |
| $i_g$ | அரசாங்க வட்டியும் பண உதவிகளும் | –7 | | | |
| | | 369·5 | | 369·5 | |

* நுகர்வோர்துறை அளிக்கும் பணிகள் உட்பட (அதாவது, அரசாங்க ஊழியர்களின் பணிகள்). பிலியன் = 1,000,000,000.

கம்பெனி தன் சொந்த உபயோகத்துக்காக அமைத்த ஊது உலை போன்று) உற்பத்தி செய்தவர்கள் தாமே சேர்த்து வைத்துள்ளவையும் பிற உற்பத்தியாளர்களுக்கு விற்றவையுமான மூலதனப் பொருள்கள், சரக்கு இருப்பில் சேர்க்கைகள் என இரு பிரிவுகள் மொத்த முதலீட்டில் ($I_g$) சேர்ந்திருப்பதைக் கவனியுங்கள். $GNP$ சமன்பாட்டைப்பற்றி விவரிக்கும்போது நாம் குறிப்பிட்டபடி, அயல்நாட்டவரிடமிருந்து பெற்ற இறக்குமதிகளையும் பிற பணிகளையும் மொத்த ஆக்கத்திலிருந்து கழிக்கவேண்டும்; ஏனெனில், அவை இவ்வாக்கத்தின் பகுதிகளாக அத் தொகையில் சேர்க்கப்பட்டுள்ளன.

வருமானப் பக்கத்தின் பங்கீட்டை இப்போது பார்ப்போம். நமக்கு மிகவும் தெரிந்த உற்பத்திக் காரணிகளின் பங்குகளை அங்குக் காணலாம். அவற்றுள், கம்பெனிகள், அரசாங்கம், [விவசாயிகள், உயர்ந்த தொழில் செய்வோர், பிற சுய-வேலைக்காரர்கள்[6] (self-employed) ஆகிய] கம்பெனிகள் அல்லாத நிறுவனங்களிடமிருந்தும் வரும் கூலிகள் ($W_p$) உள்ளன. உற்பத்தியில் ஈடுபட்டுள்ள மூலதனம் சம்பாதிக்கும் வட்டி ($i_p$) இரண்டு இடத்தில் காணப்படுகின்றன : (1) கம்பெனிகளின் மூலதனத்துக்கான ஒரு பொதுவான குறிப்பும் (2) கம்பெனி அல்லாத நிறுவனங்கள் என்பதன்கீழ் பொருளாதாரத்தின் பிற துறைகளில் உள்ள மூலதனத்துக்கான வட்டியும். ஆனால், அரசாங்க வட்டி ($i_g$) அரசாங்கம் தரும் பண உதவிகளுடன் (subsidies) கழித்தலில் குறிக்கப்பட்டுள்ளது. பெரும்பாலும் உற்பத்தியாளருக்கும் தனி மனிதர்களுக்கும் அரசாங்கம் செலுத்தும் வட்டி போர்கள் நடத்துவது போன்று உற்பத்திக்கல்லாது மூலதனத்தை உபயோகித்தற்கே ஆதலின் உற்பத்திப் பக்கத்தில் அதைச் சேர்ப்பதில்லை. ஆனால், பங்கிட்ட வருமானத்தில் இவ் வட்டி சேர்க்கப்பட்டுள்ளது. எனவே, உற்பத்தியான வருமானத்தைவிடப் பங்கிடப்பட்ட வருமானம் அதிகமாகாமல் இருக்க அதைக் கழிக்கவேண்டியிருக்கிறது.[7]

[6] சாதாரணமாக கம்பெனி அல்லாத நிறுவனங்களின் வருமானமானது விவசாய வருமானம், வாடகைகள், உயர்ந்த தொழில் வருமானம், பிற வருமானம் என்று பிரிக்கப்படும். ஏனெனில், அவ் விவரங்களைச் சேகரிக்கும் முறையில் அவற்றைக் காரணிகளின் பங்குகளின் அடிப்படையில் பிரித்துக் காண்பிக்க முடிவதில்லை. இங்கு அந்த வருவாய் இப் பங்குகளுக்கிடையில் நம் இஷ்டப்படி பிரிக்கப்பட்டுள்ளன. இல்லாவிடில் இனி வரப்போகும் $GNP$ சமன்பாட்டில் அனுவசியமாக மிக அதிகமான அடையாள எழுத்துகளைக் குறிக்கவேண்டியிருக்கும்.

[7] அதேபோல உற்பத்திப் பகுதியில் அரசாங்கம் தரும் பண உதவியைச் சேர்க்கவில்லை. ஏனெனில், அவை விற்கப்படும் பொருள்கள், பணிகளின் மார்க்கெட் விலையில் சேருவதில்லை. (பண உதவி இருப்பதால், அது இல்லாவிட்டால் விற்கக்கூடியதைவிடக் குறைவான விலைக்கு ஒரு பொருள் மார்க்கெட்டில் விற்கப்படுகிறது.) ஆனால், இப் பண உதவிகள், அரசாங்க வட்டியைப்போலவே

கம்பெனி லாபங்களின் கூட்டல் தொகை $ 69·5 பிலியனாக இருந்த போதிலும் அதன் பகிர்வுக்கு ஏற்பக் கணக்கில் அதைப் பிரித்துக் காட்டியிருக்கிறது. லாப ஈவுகள் ($P$) $ 18 பிலியன்; கம்பெனி சேமிப்புகள் அல்லது பங்கிடப்படாத லாபங்கள் ($S_p$) $ 8·5 பிலியன்; கம்பெனி வருமான வரியாக ($T_p$) அரசாங்கத்துக்குக் கொடுத்தது $ 20 பிலியன்; தேய்மான ஒதுக்கீடுகள் $ 23 பிலியன். கடைசியில் சொன்னது, கம்பெனி சேமிப்புகளைப் போல, உற்பத்தி செய்த வருமானத்தில் பங்கிடப்படாது, தனியாக வைக்கப்பட்ட பகுதியைக் குறிக்கிறது. இவ்வாறு ஒதுக்கி வைப்பானேன்? நாட்டு ஆக்கத்தை உற்பத்தி செய்யும்போது மூலதனச் சாதனங்களில் சில தேய்ந்தும் காலம் கடந்தும் போகின்றன. அந்தப் பொருளாதாரத்தின் உற்பத்தித் திறனை அப்படியே வைத்திருக்க வேண்டுமானால் உற்பத்தியான வருமானத்தில் ஒரு பகுதியை அச் சாதனங்களுக்குப் பதில் சாதனங்களை அமைப்பதற்காக ஒதுக்கி வைக்கவேண்டும்.

கடைசியாக இன்னும் ஒரு குறிப்பைப்பற்றிக் கூறவேண்டும். அது வியாபார மாற்றுகைச் செலுத்தல்கள் ($t_p$). உற்பத்தியின் விளைவாக ஏற்படும் நாட்டு வருமானத்தில் ஒரு பகுதி காரணிகளின் ஊதியப் பங்காகக் கொடுக்கப்படுவதில்லை. மாறாக, அதிலிருந்து தருமங்கள் செய்யப்படுகின்றன; தொழிலாளருக்குக் கிருத்துமஸ் போனசுகள், பரிசுகள் ஆகியவை தரப்படுகின்றன. ஏற்கெனவே பார்த்த சமன்பாட்டைப் போன்ற ஆனால், அதைவிட விவரமான ஒரு சமன்பாடாக, ஆக்க வருமானக் கணக்கை எழுதி இப் பகுதியை முடிப்போம்.

$$W_p + i_p + R + P - i_g + S_p + D + T_p + T_i = GNP$$
$$= C + G_c + G_i + I_g + (X + F_p) - (M + F'_P)$$

**தனிநபர் வருமானம், செலவுக் கணக்கு ($IA_c$)**

தனி நபர்கள் உற்பத்தியாளர்களாக மேற்கொள்ளும் நடவடிக்கைகள் உற்பத்திப் பட்டியல் அல்லது $GNP$ கணக்கில் பதிவாகின்றன. உற்பத்தியாளர்களாகமட்டுமன்றி அவர்கள் நுகர்வோர்களாகவும் குடும்பத் தலைவர்களாகவும் கூடச் செயலாற்றுகின்றனர். அத்தகையவர்களாக, உற்பத்தியாளர்களோடு அவர்கள் மேற்கொள்ளும் $GNP$ கணக்கில் பதிவான விவகாரங்களைமட்டுமன்றி, ஒருவரோடொருவரும், அரசாங்கத்துடனும், அயல்நாட்டாருடனும்கூட அவர்கள் பல விவகா

---

தனி மனிதர்களுக்கும் நிறுவனங்களுக்கும் தரப்படுகிறது. எனவே, வருமானப் பகுதியிலிருந்து அவற்றைக் கழித்தால்தான், தோன்றிய வருமானமும் பங்கிடப்பட்ட வருமானமும் சமமாக இருக்கும்.

ரங்களில் ஈடுபடுகின்றனர். எனவே, ஒரு நாட்டின் பொருளாதார விவகாரங்களை முழுமையாக உணரவேண்டுமாயின், தனி நபர்கள் நுகர்வோராக மேற்கொள்ளும் நடவடிக்கைபற்றிய கணக்கும், பொருளாதாரத்தின் முக்கியமான ஒரு பகுதியான அரசாங்கத்தின் கணக்கும், எல்லாத் துறையினரும் வெளிநாட்டாருடன் கொண்டுள்ள தொடர்புபற்றிய கணக்கும் நமக்குத் தேவை.

இந்தக் கணக்குகளை இங்குப் புகுத்துவதன் மற்றோர் அவசியம், பொருளாதாரத்தின் எல்லா விவகாரங்களுக்கும் சரியான சமநிலை இருக்கவேண்டியதாகும். ஒவ்வொரு விவகாரத்துக்கும் இரண்டு பக்கங்கள் உள்ளன; ஒரு பொருளாதார அலகின் வரவு மற்றொன்றின் செலவாகும். எனவே, எல்லா விவகாரங்களுக்கும் முழுமையாகக் கணக்கு வைக்கவேண்டும் என்றால் ஒவ்வொரு செலுத்துகைக்கும் அதற்கு ஈடான வருவாயையும் ஒவ்வொரு வருவாய்க்கும் அதற்கு ஈடான செலுத்துகையையும் நாம் காண்பிக்கவேண்டும். வியாபாரக் கணக்கு மொழியில், ஒவ்வொரு பற்றுக்கும் ஈடாக ஒரு வரவு இருக்க வேண்டும். உற்பத்தித் துறையின் கணக்கில் உள்ள வருவாய்களுக்கு எதிரிணையான செலுத்துகைகளையும், அதன் செலுத்துகைகளுக்கு எதிரிணையான வருவாய்களையும் காட்டவேண்டுமானால், குடும்பத் துறையின் நடப்புக் காலத்து நடவடிக்கைகளையும், அரசாங்கத்து நடப்பு விவகாரங்களையும், (இதற்குப் பின்னர்) வெளிநாட்டாருடன் நடக்கும் விவரங்களையும் காட்டும் கணக்குகளை இங்குப் புகுத்தவேண்டும். 14·2 பட்டியலில் உள்ளதும் நாம் ஏற்கெனவே பார்த்த நாட்டின் மொத்த ஆக்க, வருமானக் கணக்குக்கு ஏற்றதுமான தனி நபர் வரவு செலவுக் கணக்கை முதலில் பார்ப்போம்.

வருமான வருவாய்கள் (வரவுகள்) பகுதியில், எழுத்தில் குறிப்பிட்ட முதல் ஐந்து குறிப்புகள்—$W_p$, $R$, $i_p$, $P$, $t_p$ ஆகியவை—$GNP$ கணக்கில் செலவுகளாக அல்லது பற்றுகளாக வந்தன. இங்கு, குடும்பத் தலைவர்களாகவும், நுகர்வோராகவும் தனி நபர்கள் பெறும் அவற்றுக்கிணையான வரவுகளை அவை குறிக்கின்றன. இந்தத் தனி நபர்கள் அரசாங்கத்திடமிருந்தும் மாற்றுகைச் செலுத்துதல்களாக ($t_g$) வருவாய்களைப் பெறுகின்றனர்; முதியோர் உபகாரச் சம்பளங்கள், வேலையின்மை நஷ்ட ஈடு, வீரர்கள் போனசுகள் போன்றவை அவை. இவை தனி நபர்களின் வருவாயோடு சேரும் செலுத்துதல்களாயினும், உற்பத்தி நடவடிக்கைகளினின்று தோன்றுமையால் இங்குதான் காண்பிக்கப்படுகின்றனவே அன்றி உற்பத்தித் துறைக் கணக்கில் சேருவதில்லை. அவை வெறும் மாற்றுகைச் செலுத்துதல்கள்; தான் வசூலித்த வரிகளின் ஒரு பகுதியிலிருந்து அரசாங்கம் அவற்றைச் செலுத்துகிறது.

**பட்டியல் 14.2. தனிநபர் வருவாய், செலவுக் கணக்கு ($IA_c$)**

| | செலவு (பற்றுகள்) | | வருவாய் (வரவுகள்) | | |
|---|---|---|---|---|---|
| $C$ | நுகர்வோர் செலவுகள் | 230 | கூலிகளும் சம்பளங்களும் : | | |
| | தனிநபர்கள் கட்டும் வரிகள் : | | கம்பெனிகளிடமிருந்து | 175 | $W_p$ |
| $T_c$ | வருமான வரிகள் | 40 | அரசாங்கத்திடமிருந்து | 35 | |
| | சொத்து வரிகள் | 3 | கம்பெனி அல்லாத நிறுவனங்களிடமிருந்து | 24 | |
| | சமூக இன்ஷூரென்ஸ் செலுத்துகைகள் | 8 | வாடகை | 10 | $R$ |
| | | | வட்டி | 17 | $i_p$ |
| $F'_c$ | வெளிநாட்டுக்கு மாற்றுகைச் செலுத்தல்கள் | 1 | லாபங்கள் : | | |
| $S$ | சேமிப்புகள் | 25 | கம்பெனிகளிலிருந்து பங்கு ஈவுகள் | 17 | $P$ |
| | | | கம்பெனி அல்லாத நிறுவனங்களினின்று | 15 | |
| | | | வியாபார மாற்றுகைச் செலுத்துதல்கள் | 1 | $t_p$ |
| | | | அரசாங்கத்திடமிருந்து மாற்றுகைச் செலுத்தல்கள் | 12 | $t_g$ |
| | | 307 | | 307 | |

தனியார் துறை தன் வருவாயான $ 307 பிலியனை எவ்வாறு செலவு செய்தது என்பதற்குக் கணக்கின் செலவு அல்லது பற்றுப் பக்கத்தைப் பார்க்கவேண்டும். நுகர்வோர் செலவுகளான $ 230 பிலியன், உற்பத்தித் துறையில் இப் பொருள்களின் விற்பனைக்கு எதிரிணைக் குறிப்பு. வருமான, சொத்து வரிகள், சமூக இன்ஷூரென்ஸ் செலுத்துகைகளோடு தனிநபர் வரிகளான ($T_c$) $ 51 பிலியனில் அடங்கியுள்ளன. அவர்கள் தம் உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும், தருமத்துக்கும் வெளிநாடுகளுக்கு அனுப்பியது $ 1 பிலியன். இறுதியாக, அவர்கள் செலவழிக்காத தொகையை சேமித்தார்கள் ($S_c$); இது தனியார் துறையின் மூலதனக் கணக்குக்கு மாற்றப்படுவதை விரைவில் பார்ப்போம்.

*GNP* கணக்கின் இரு பக்கங்களும் சமமாக உள்ளதை ஒரு சமன்பாடாக நாம் கூற முடிந்தது. அதேபோல தனியார் துறை வருவாய்க் கணக்கையும் அத்தகைய ஒரு சமன்பாடாகக் கூறமுடியும்.

$$C+T_c+S_c+F'_c=W_p+R+i_p+P+t_p+t_g$$

**அரசாங்க வரவு செலவுக் கணக்கு ($IA_g$)**

பொருளாதாரத்தின் மூன்றாவது, கடைசி அங்கம் அரசாங்கம். அதன் நடப்பு விவகாரங்களை மிகச் சுருக்கமாக விவரிப்போம் (பட்டியல் 14·3).

**பட்டியல் 14·3. அரசாங்க வருவாய், செலவினக் கணக்கு ($IA_g$)**

| | செலவுகள் (பற்றுகள்) | | வருவாய்கள் (வரவுகள்) | | |
|---|---|---|---|---|---|
| $G_c$ | நடப்புப் பொருள்கள், பணிகளுக்காக அரசாங்கச் செலவு | 75 | தனிநபர் வருமான வரிகள் | 20 | $T_c$ |
| | | | சமூக இன்ஷ்யூரன்ஸ் செலுத்தல்கள் | 8 | $T_c$ |
| $i_g$ | அரசாங்க வட்டியும் பண உதவிகளும் | 7 | சொத்து வரிகள் | 3 | $T_c$ |
| | | | கம்பெனி லாப வரி | 20 | $T_p$ |
| $t_g$ | தனி நபர்களுக்கு மாற்றுகை கொடுத்தது | 12 | மறைமுக வரிகள் | 30 | $T_i$ |
| $F'_g$ | வெளிநாட்டாருக்கு மாற்றுகை கொடுத்தது | 6 | வெளிநாட்டு அரசாங்கங்களிடமிருந்து வட்டியும் மாற்றுகை செலுத்தல்களும் | 0·5 | $F_g$ |
| $S_g$ | உபரி | 1·5 | | | |
| | | 101·5 | | 101·5 | |

அரசாங்க வருவாய்களின் முதல் மூன்று வகைகள், தனிநபர் செலுத்திய வரிகள் ($T_c$), கம்பெனி வரிகள் ($T_p$), மறைமுக வரிகள் ($T_i$) ஆகியவற்றின் எதிரிணைகள். இங்கு வரவுகளாக இருப்பவை, $IA_p$யில் செலுத்துதல்களாக இருந்தன. பாக்கியுள்ளது அயல்நாட்டு அரசாங்கங்கள் கொடுக்கும் வட்டியும் மாற்றுகைச் செலுத்துதல்களுமான ஒரு சிறிய தொகை ($F_g$).

தன் வருவாயிலிருந்து அரசாங்கம் செய்யும் செலவுகளில் முதல் மூன்றை நாம் முன்னரே பார்த்தோம். பொருள்கள், பணிகள்மீது அரசாங்கத்தின் நடப்புச் செலவுகள் ($G_c$) உற்பத்தித் துறையின் நடப்புக் கணக்கில் அரசாங்கத்துக்கு விற்ற தொகைக்கு இணையானது. அரசாங்கத்தின் வட்டியும் பண உதவிகளும் ($i_g$) $IA_p$யில் பங்கிடப்பட்ட வருமானத்திலிருந்து கழித்துக் காண்பிக்கப்பட்டது. ஏனெனில், அது உற்பத்திப் பணிகளுக்காகச் செலுத்தியது அன்று. இங்கு அது சேர்க்கப்படுகிறது. தனி நபர்களுக்குக் கொடுத்த மாற்றுகைகள் ($t_g$) $IA_c$யில் வருவாயாக வருகிறது. முக்கியமாக வெளிநாடுகளுக்கு உதவித் தொகையாக, அரசாங்கம் அயல்நாட்டாருக்கு $ 6 பிலியனை மாற்றியது

($F'_g$). இறுதியாக, அரசாங்கத்தின் செலவுகளைவிட வரவுகள் அதிகமாயிருப்பதால், ஒரு சிறு உபரித் தொகை ($S_g$) மிஞ்சி மூலதனக் கணக்கில் சேருகிறது.

அரசாங்கத் துறையின் செலவுகளையும் வருவாய்களையும் ஒரு சமன்பாடாக எழுதினால் பின்வருமாறு இருக்கும் :

$$G_c + i_g + t_g + S_g + F'_g = T_c + T_p + T_i + F_g$$

## வருமானக் கணக்குகளைத் தொகுத்தல்
## (Consolidation of the Income Accounts)

பொருளாதாரத்தின் மூன்று துறைகளின் வருமானப் பட்டியல்கள் அல்லது நடப்புக் கணக்குகள் இப்போது நம்மிடம் உள்ளன. எனவே, அவற்றைத் தொகுக்கலாம், அதாவது ஒன்று சேர்க்கலாம். இரண்டு கம்பெனிகள் ஒன்றோடொன்று இணையும்போது அவற்றின் கணக்குகள் தொகுக்கப்படுகின்றன. அப்போது அவற்றுக்கிடையே முன்னர் நடந்த விவகாரங்கள் அனைத்தும் இப்போது உள் விவகாரங்களாகி விடுவதால் கணக்குகளிலிருந்து மறைந்துவிடுகின்றன. இணைந்து தோன்றிய புதுக் கம்பெனி, மூன்றாவது மனிதர்கள் அல்லது நிறுவனங்களோடு நடத்தும் விவகாரங்கள்மட்டுமே இனிப் பதிவாகும். பொருளாதாரம் முழுவதையும் ஒரே அமைப்பாக எடுத்துக்கொண்டு ஒரு வருமானப் பட்டியல் தயாரித்தாலும் இதேபோலத்தான். உள் விவகாரங்கள் மறைந்துபோய்ப் பின்வருவனதான் மிஞ்சும் : வெளிநாட்டாருடன் நடக்கும் விவகாரங்கள் ; வருமானத்தின் நடப்பு வருவாய்கள் செலுத்துதல்கள், அப்போதைய உபயோகத்துக்காகப் பொருள்களையும் பணிகளையும் விற்றல், வாங்குதல் ஆகியவை அன்றி முதற்பொருள் சொத்துகளைத் தோற்றுவிப்பதும் அச் சொத்துகளின் மீது பாத்தியதைகள் ஏற்படுத்துவதுமான, நடப்பு விவகாரங்கள் அல்லாத சில விவகாரங்கள்.

மொத்த நாட்டு வருமானமும் ஆக்கமும் சமம் ; தனிநபர் வரவுகளும் செலவுகளும் சமம் ; அரசாங்க வரவுகளும் செலவுகளும் சமம் ; ஆகியவற்றைக் குறிக்கும் சமன்பாடுகளின் உதவியால் வருமானக் கணக்குகளைத் தொகுக்கும் செயல்முறையை இனிது காட்டலாம். இந்தச் சமன்பாடுகளனைத்தையும் ஒன்றன்பின் ஒன்றாக எழுதி அல்ஜீப்ரா முறையான கூட்டலைச் செய்யவேண்டியதுதான் தேவை. எந்த இரு சமன்பாடுகளிலும் எதிரெதிர்ப் பக்கங்களிலுள்ள சர்வ சமமான உருப்படிகளை ஒன்றுக்கொன்று அடித்துவிடலாம். அதேபோல ஒரே பக்கத்தில் உள்ள நேர் கணிய எதிர் கணிய உருப்படிகளும் அடிபட்டுப்போகும்.

$$IA_p \quad W_p+i_p+R+P-i_g+S_p+D+T_p+T_i+t_p$$
$$+ \qquad = C+G_c+G_i+I_g+X+F_p-(M+F'_p)$$
$$IA_o \quad C+T_c+S_c+F'_c$$
$$+ \qquad = W_p+R+i_p+P+t_p+t_g$$
$$IA_g \quad G_c+i_g+t_g+S_g+F'_g$$
$$\| \qquad = T_c+T_p+T_i+F_g$$
$$IA \quad (S_p+S_c+S_g)+D+(F'_p+F'_c+F'_g)+M$$
$$= I_g+G_i+X+F_p+F_g$$

பொருளாதாரம் முழுமைக்கான தொகுத்த வருமானக் கணக்கின் சமன்பாடு இது. வெவ்வேறு துறைகளுக்கு இடையில் நடந்த நடப்பு விவகாரங்கள் (current transactions) அனைத்தும் இதில் நீக்கப் பட்டுவிட்டன. எஞ்சியிருப்பது, வெளிநாட்டாருடன் நடப்பு விவகாரங் களும், பொருளாதாரத்துக்குள்ளே நடக்கும் மூலதன விவகாரங்களும் தொடர்புடைய உருப்படிகளை ஒன்றாகக் காட்ட இச் சமன்பாட்டின் அங்கங்களை நம் வசதிக்காக மாற்றிச் சேர்ப்போம் :

$$(S_p+S_c+S_g)$$
$$= (I_g-D)+G_i+(X-M)+(F_p+F_g)-F_p'+F'_c+F'_g)$$

இனி இதை மேலும் எளிய ஒரு சமன்பாடாகச் சுருக்குவோம். $(S_p+S_c+S_g)$ என்பது நிகர உள்நாட்டுச் சேமிப்பு ஆகும். எனவே, இவற்றுக்குப் பதிலாக $S$ என்ற ஒரே ஓர் எழுத்தைப் போடலாம். அதேபோல $(I_g-D)+G_i$ என்பது நிகர உள்நாட்டு முதலீடு. அதற்குப் பதிலாக $I_d$ என்ற எழுத்தை உபயோகிப்போம். சமன்பாட்டில் எஞ்சி யிருப்பது அயல்நாட்டுப் பொருள், பணிகளின் நடப்பு வியாபாரத்தின் சமநிலை, அதாவது, நடப்புக் கணக்கிற்கான அயல்நாட்டுச் செலுத்து நிலை. ஏற்றுமதிகளோடு வெளிநாட்டாரிடமிருந்து வரும் நடப்பு வருவாய்களை $(F_p+F_g)$ சேர்ப்போம். இறக்குமதிகளோடு வெளி நாட்டாருக்குக் கொடுக்கும் நடப்புச் செலுத்தல்களைச் சேர்ப்போம். இப்போது $X$-ம் $M$-ம் வெளிநாட்டாரிடமிருந்து வரும் எல்லா நடப்பு வருவாய்களையும், வெளிநாட்டாருக்குக் கொடுக்கும் எல்லா நடப்புச் செலுத்தல்களையும் குறிக்கின்றன. முன்னைவிட எளிதாக அச் சமன் பாட்டை இப்போது மாற்றி எழுதலாம்.

$$S = I_d+X-M$$

ஒரு சமூகத்தின் நிகர சேமிப்புகள், அதன் நிகர உள்நாட்டு முதலீட்டோடு அதன் நடப்புப் பன்னாட்டு வருவாய்கள், செலுத்தல்

களின் நிகர நிலுவையைச் சேர்த்த தொகைக்குச் சமம் என்று இச் சமன்பாடு கூறுகிறது. இவ்வுறவு மிக உபயோகமானது என்பதைப் பின்னர்க் காண்போம்.

## மூலதனக் கணக்குகள்
## (The Capital Accounts)

இதுவரை நாம் பார்த்த கணக்குகளில் சேர்ந்த விவகாரங்களில் பெரும்பாலானவை நடப்பு (current) நடவடிக்கைகளைமட்டுமே பற்றியவை. இவை நடப்பு ஆண்டின் நுகர்வில் சேர்ந்த பொருள், பணிகளின் விற்றல் வாங்கல், அல்லது நடப்பு ஆண்டின் பண வருமானங்களின் செலுத்தல், பெற்றல் ஆகியவற்றைப்பற்றியவை. ஆனால், நுகர்வோரின் நடப்புத் தேவைகளைத் தீர்ப்பதிலும் நடப்புப் பண வருமானங்களை அதிகரிப்பதிலும் நேரிடையாக ஒரு பங்கும் பெறாத பல பொருளாதார விவகாரங்கள் உள்ளன. அவை முதலீடு, சேமிப்பு நடவடிக்கைகளைப் பற்றியவை. அவை சமூகத்தின் செல்வ இருப்பைப் பராமரிக்கின்றன; அதிகரிக்கின்றன. அதன் மூலதனச் சொத்துகளை அவை அதிகமாக்கி, அவற்றின்மீது பாத்தியதைகளையும் பொறுப்புகளையும் ஏற்படுத்துகின்றன. இதை இனிப் பார்ப்போம். சமூகத்தின் சொத்துகள் பொறுப்புகளில் ஏற்படும் மாற்றங்களைக் காட்ட வேறு கணக்குகளின் தொகுதி தேவை. அவை மூலதனக் கணக்குகள்.[8] அந்த ஆண்டின் சேமிப்பு, முதலீடு ஆகிய நடவடிக்கைகளினின்று ஒரு துறையில் விளையும் சொத்து, பொறுப்பு மாற்றங்கள், அந்த ஆண்டில் தனியாக நடந்த நிதி விவகாரங்களினால் விளைந்த மாற்றங்கள் ஆகிய இரண்டும் இந்தக் கணக்குகளில் சேர்க்கப்பட்டுள்ளன. இந்த மூலதனக் கணக்குகளைப் புரிந்துகொள்ளவேண்டுமானால், அத்தகைய கணக்கானது அதில் பதிவான சொத்து, பொறுப்புகளின் சுதந்திரமான காப்பாளராகக் (custodian) கருதினால் நலம். உதாரணமாக, உற்பத்தித் துறையின் மூலதனக் கணக்கை, அத் துறையினின்று தனியாக நின்று, அத் துறையின் சொத்துகளை வைத்திருப்பதாகக் கருதிப் பாருங்கள். இச் சொத்துகள் மீது அத் துறையின் உரிமைகளும், அத் துறைக்கு வெளியில் உள்ள மற்றவர்களின் உரிமைகளும் பொறுப்புகளாக அதில் பதிவாகி

[8] ஒரு குறிப்பிட்ட சமயத்தில் வைத்துள்ள அல்லது கொடுக்கவேண்டிய எல்லாச் சொத்து, பொறுப்புகளோடு, வருமான காலத்தில் ஏற்பட்ட மாற்றங்களையும் சேர்த்து ஒரு முழுமையான மூலதனக் கணக்கு காண்பிக்கிறது. ஆனால் இங்கு, ஏற்பட்ட மாற்றங்களை மட்டுமே நாம் கவனிப்போம். அவற்றை மட்டுமே மூலதனக் கணக்குகள் காண்பிக்கும்.

யிருக்கிறது. நடப்பு அல்லது வருமானக் கணக்குகளில் கையாண்ட வழக்கப்படியே, வாங்கின பொருள்கள் எல்லாம் பற்றுகள் (debits). (உதாரணமாக, வாங்கிய சொத்துகளும் தவணை முற்றிய கடனைச் செலுத்துவதுபோலக் குறைந்த பொறுப்புகளும் பற்றுகளாகும்.) வரவுகள் (credits), காப்பாள மூலதனக் கணக்கிலிருந்து கொடுத்துவிடப் பட்ட உருப்படிகளைக் குறிக்கின்றன: உதாரணமாக, கடன் கொடுத்தவர்களுக்கும், உற்பத்தித் துறைக்குமே சொத்துகள்மீது வழங்கிய உரிமைகள் அல்லது விற்கப்பட்ட சொத்துகள், வரவுகளாகும்.

### உற்பத்தித் துறையின் மூலதனக் கணக்கு ($KA_p$)

உற்பத்தித் துறையின் மூலதனக் கணக்கோடு தொடங்குவோம். நாட்டின் மொத்த ஆக்கக் கணக்கிலும் சமன்பாட்டிலும் வரவுகளாக வரும் அத் துறை உற்பத்தி செய்த சொத்துகள் இங்குப் பற்றுகளாகக் குறிப்பிடப்படுகின்றன: ஆலைகளும் எந்திரங்களும் (50), சரக்கு இருப்பில் சேர்ந்தது (2) ஆகிய பொருள்கள் உற்பத்தித் துறையால் ஆக்கப்பட்டன; ஆனால், நடப்பு உபயோகத்துக்காக நுகர்வோருக்கு விற்கப்படவில்லை; உற்பத்தித் துறையிலுள்ள நிறுவனங்களுக்கு விற்கப்பட்டு அவற்றின் கைகளில் உள்ளன; அவை நுகரப்படவில்லை. எனவே, அவை சொத்துகளோடு சேரும் தொகை ஆகும். அதாவது, அவை முதலீடு ($I_g$) ஆகின்றன. காப்பாளர் மூலதனக் கணக்கின் சொத்துகள் பக்கத்தில் அவற்றின் மதிப்பை எழுதுவதன் மூலம் உற்பத்தித்துறைச் சொத்துகள் அதிகமாகும் தொகை பதிவாகிறது.

இந்தக் கணக்குகள் எந்தக் காலத்தைப் பொறுத்தவையோ அக்காலத்தில் வேறு பல சொத்துகளும் பெறப்படுகின்றன. அவை அரசாங்கப் பத்திரங்கள், தனியார் கடனுக்கான பத்திரங்கள், மற்றும் வெளிநாட்டுச் சொத்துகளும் பங்கு வைப்புகளும் ஆகும். அவற்றோடு சேர்த்து மொத்தம் சொத்துகள் அதிகமான தொகை $ 61 பிலியன். இவ்வளவு நிறைய அவை எப்படி அதிகரித்தன?

சம்பாதித்த நிகர வருமானம் அனைத்தையும் தனிநபர்களுக்குக் கொடுத்துவிடுவதில்லை என்று கம்பெனி டைரக்டர்கள் முடிவு செய்வது ஓரளவுக்கு இதற்குக் காரணமாகும். கம்பெனி லாபங்களில் $ 8·5 பிலியனை அவர்கள் நிறுத்திவைத்துத் தேவையான சில சொத்துகளில் முதலீடு செய்திருக்கிறார்கள். இதன் மூலம் உற்பத்தித் துறையின் அதிகமாகியுள்ள சொத்துகள்மீது ஓர் உரிமையை அவர்கள் ஏற்படுத்தினார்கள். இந்த உரிமையைக் காப்பாளர் மூலதனக் கணக்கின் பொறுப்புகள் பக்கத்தில் குறித்திருக்கிறது.

## பட்டியல் 14·4

## உற்பத்தித் துறையின் மூலதனக் கணக்கு ($KA_p$)

| | சொத்துகள் (பற்றுகள்) | | பொறுப்புகள் (வரவுகள்) | | |
|---|---|---|---|---|---|
| $I_g$ | ஆலைகளும் எந்திர சாதனங்களும் | 50 | நிகர மதிப்பு : | | |
| | | | பங்கிடாத லாபங்கள் | 8·5 | $S_p$ |
| | சரக்கு இருப்பில் சேர்க்கை | 2 | தேய்மானம் | 23 | $D$ |
| $B_{gp}$ | உள்நாட்டு அரசாங்கப் பத்திரங்கள் | 4 | சாதாரண மற்றும் சலுகை பெற்ற பங்குகள் | 20 | $O_c$ |
| $B_c$ | தனியார் கடன்கள் | 3 | நெடுங்காலக் கடன் (தனியார்) | 3 | $L_c$ |
| $\bar{F}'_p$ | வெளிநாட்டுச் சொத்துகளில் முதலீடு | 1·5 | குறுகிய காலக் கடன் : தனியார் | 2 | $L_c$ |
| | வெளிநாட்டு பாங்கிகளில் வைப்புகள் | 0·5 | வெளிநாட்டார் | 1·5 | $\bar{F}_p$ |
| | | | நடப்பு வைப்புகள் : | | |
| | | | தனியார் | 2 | $m_c$ |
| | | | அரசாங்கம் | 0·5 | $m_g$ |
| | | | வெளிநாட்டார் | 0·5 | $\bar{F}_p$ |
| | | 61 | | 61 | |

கம்பெனி வருவாய்களில் ஒரு பகுதி தேய்மானச் சேம நிதிகளாக (depreciation reserves) ஒதுக்கப்பட்டது. (எனவே, அவையும் செலவிடப்படவில்லை); இத் தொகையும் ஏதாவது ஒரு சொத்தில் முதலீடு செய்யப்பட்டது. இதைப் பின்னர் காசாக்கித் தேய்ந்துபோன வற்றுக்குப் பதிலாகப் புது ஆலை, எந்திரச் சாதனங்களை அமைக்க முடியும். இவ்வாறு செலவிட மறுத்த தொகையும் ஒரு வகை (மொத்த) சேமிப்பாகும். சொத்துகள் அதிகமானதற்கு ஈடாக உற்பத்தித் துறைக்கு ஒரு பொறுப்பை (23) இது தருகிறது.

மற்றொரு 20 பிலியன் தனியார் துறையிலிருந்து வந்தது. தனி நபர்கள் இந்த மதிப்புக்குக் கம்பெனிகள் புதிதாக வழங்கிய பங்குகளை வாங்கினர் ($O_c$). இதனாலும் உற்பத்தித் துறையின் சொத்துகள்மீது ஒரு பொறுப்பு ஏற்பட்டது.

இறுதியாக, தனிநபர் துறையிலிருந்தும் (உள்நாட்டு நெடுங்கால, குறுகிய காலக் கடன்கள், $ 5 பிலியன்) வெளிநாட்டாரிடமிருந்தும்

($ 1·5 பிலியன்) உற்பத்தித்துறை, கடன்களை வாங்கியது. தனியார், அரசாங்கம், வெளிநாட்டார் ஆகியோருக்கு, கேட்டதும் தரவேண்டிய பொறுப்புகளை (நடப்பு வைப்புகளை) அதிகரிப்பதன் மூலம் நடைமுறையில் பாங்குகள் $ 3 பிலியனுக்குக் 'கடன் வாங்கின'. நடப்பு விவகாரங்களைப்போலன்றி, இந்த நிதி மூலதன விவகாரங்கள், அவற்றின் காரணமாக உற்பத்தித் துறை பெற்ற சொத்துகளுக்கு எதிராக உரிமைகளை அல்லது பொறுப்புகளை ஏற்படுத்தின.

நடப்புக் கணக்குகளைச் சமன்பாடுகளாக எழுத முடிவதுபோல, மூலதனக் கணக்குகளையும் செய்யலாம். $KA_p$ யில் உருப்படிகளுக்குப் பக்கத்தில் குறிக்கப்பட்ட அடையாள எழுத்துகளை உபயோகித்தும், அவற்றுள் ஒரே மாதிரியான உருப்படிகளைக் கூட்டி அவற்றுக்கு ஒரே எழுத்தை உபயோகித்தும் உற்பத்தித் துறையின் மூலதனச் சமன்பாட்டைப் பின்வருமாறு எழுதலாம் :

$$I_g + B_{gp} + B_c + \bar{F}'_p = S_p + D + O_c + L_c + \bar{F}_p + m_c + m_g$$

## தனியார் துறையின் மூலதனக் கணக்கு ($KA_c$)

தனியார் துறையிலுள்ள தனிநபர்கள் $ 28 பிலியன் மதிப்புக்குச் சொத்துகளைப் பல வகைகளில் பெற்றுர்கள் ; அரசாங்கப் பத்திரங்களை அவர்கள் வாங்கினுர்கள் ($B_{gc}$, $ 1 பிலியன்) ; நடப்பு வைப்புகளைப் பெற்றுர்கள் ($m_c$, $ 2 பிலியன்) ; உற்பத்தித் துறைக்குக் கடன் கொடுத்தார்கள் ($L_c$, $ 5 பிலியன்) ; கம்பெனிப் பங்குகளை வாங்கினுர்கள் ($O_c$, $ 20 பிலியன்).

### பட்டியல் 14·5

### தனியார் துறையின் மூலதனக் கணக்கு ($KA_c$)

| | சொத்துகள் (பற்றுகள்) | | பொறுப்புகள் (வரவுகள்) | | |
|---|---|---|---|---|---|
| $B_{gc}$ | அரசாங்கப் பத்திரங்கள் வாங்கினது | 1 | சேமிப்பு | 25 | $S_c$ |
| $m_c$ | நடப்பு வைப்புகள் | 2 | பாங்குகளினின்று கடன், முதலியவை | 3 | $B_c$ |
| | வியாபாரத்துக்குக் கடன்கள் : | | | | |
| $L_c$ | குறுகிய காலம் | 2 | | | |
| | நெடுங்காலம் | 3 | | | |
| $O_c$ | பங்குகள் வாங்கினது | 20 | | | |
| | | 28 | | 28 | |

இவற்றை வாங்குவதற்குத் தேவைப்பட்ட பணம் அவர்களது சேமிப்பிலிருந்தும் ($S_c$, \$ 25 பிலியன்), உற்பத்தித் துறையிலிருந்து அவர்கள் பெற்ற கடன்களிலிருந்தும் ($B_c$, \$ 3 பிலியன்) வந்தது. அவர்கள் தம் வருமானங்களைவிடக் குறைவாகச் செலவழித்தார்கள் என்பதை அவர்கள் சேமித்த \$ 25 பிலியன் காட்டுகிறது. எந்த நடப்புக் கணக்கிலிருந்தும் இந்த மூலதனத்துக்கு வந்த ஒரே ஒரு விவகாரம் இச் சேமிப்புதான். மீதமுள்ள உருப்படிகள் எல்லாம் நடப்பு விவகாரங்களோடு நேரிடைத் தொடர்பு அற்ற மூலதனத்தை மட்டும் பற்றிய விவகாரங்களையே குறிக்கின்றன.

தனியார் துறையின் மூலதன விவகாரங்களை இப்போது ஒரு சமன்பாடாகச் சுருக்கித் தரலாம் :

$$B_{gc}+m_c+L_c+O_c= S_c+B_c$$

**அரசாங்கத் துறையின் மூலதனக் கணக்கு ($KA_g$)**

பொருளாதாரத்தின் பிற இரு பிரிவுகளைப்போலவே அரசாங்கமும் தன் சொத்துகளைக் கணிசமாக அதிகரித்துக்கொண்டது. முதல் பற்று உருப்படி, உற்பத்தித் துறையின் நடப்பு ஆக்கத்தை வாங்கிய தன் மூலம் அரசாங்கத்தின் ஜட சொத்துகள் உயர்ந்ததைக் குறிக்கிறது ($G_i$, \$ 5 பிலியன்). இதைத் தவிர வெளிநாட்டு அரசாங்கங்களுக்கு அது \$.3 பிலியன் கடன் கொடுத்தது ($\bar{F}'_g$). பாங்குகளில் பண நிலுவைகளையும் அது பெற்றது ($m_g$).

## பட்டியல் 14·6

### அரசாங்கத் துறையின் மூலதனக் கணக்கு ($KA_g$)

| | சொத்துகள் (பற்றுகள்) | | பொறுப்புகள் (வரவுகள்) | | |
|---|---|---|---|---|---|
| $G_i$ | மூலதனப் பொருள்கள் வாங்கியது | 5 | உபரி | 1·5 | $S_g$ |
| $\bar{F}'_g$ | அயல்நாட்டு அரசாங்கங்களுக்கு நெடுங்காலக் கடன்கள் | 3 | புது அரசாங்கக் கடன்கள் | 5 | $B_{gp,c}$ |
| $m_g$ | நடப்பு வைப்புகள் | 0·5 | வெளிநாட்டுக் கடன்கள் திரும்பி வந்தது | 1 | $\bar{F}_g$ |
| | | | வெளிநாட்டில் பொன் விற்றது | 1 | $\bar{F}_g$ |
| | | 8·5 | | 8·5 | |

இந்தச் சொத்துகளை வாங்கத் தேவையான நிதிகள் பின்வருமாறு வந்தன: அரசாங்க பட்ஜெட்டில் உபரி ($S_g$, $ 1·5 பிலியன்); உற்பத்தித்துறை, தனியார் துறையிலிருந்து கடன் வாங்கியது ($B_{gp,c}$, $ 5 பிலியன்); அயல்நாட்டு அரசாங்கங்கள் பழைய கடன்களைத் திருப்பித் தந்தது $ 1 பிலியன்; கருவூலத்திலிருந்து பொன் விற்றது $ 1 பிலியன்.

இந்த அரசாங்க மூலதன விவகாரங்களைச் சமன்பாடாக எழுதினால்

$$G_i + m_g + \bar{F}'_g = S_g + B_{gp,c} + \bar{F}_g$$

## மூலதனக் கணக்குகளின் தொகுப்பு

பொருளாதாரம் முழுவதற்குமான நிகர நடப்பு விவகாரங்களை மட்டும் காட்டுமாறு வருமானக் கணக்குகளை முன்னர் தொகுத்தோம்; அதாவது ஒன்று சேர்த்தோம். பொருளாதாரத்தின் பிரிவுகளில் ஒன்றுக்கும் மற்றதற்கும் இடையில் நடந்த விவகாரங்கள் அனைத்தும் ஒன்றையொன்று அடித்துவிட, மூலதனக் கணக்கைச் சேர்ந்த நடப்பு விவகாரங்களும், வெளிநாட்டாருடன் ஏற்பட்ட நடப்பு விவகாரங்களும் தான் மிஞ்சின. அதேபோன்று மூலதனக் கணக்குகளையும் தொகுக்கலாம். ஒவ்வொரு துறையின் மூலதனக் கணக்கையும் எடுத்து எழுதிக் கூட்டினால் பின்வருமாறு வரும்:

$$
\begin{array}{ll}
KA_p & I_g + B_c + B_{gp} + \bar{F}'_p = S_p + D + O_c + L_c + \bar{F}_p + m_c + m_g \\
+ & \\
KA_c & B_{gc} + O_c + L_c + m_c = S_c + B_c \\
+ & \\
KA_g & G_i + \bar{F}'_g + m_g = S_g + B_{g,pc} + \bar{F}_g \\
\| & \\
KA & I_g + G_i + \bar{F}'_p + \bar{F}'_g = S_p + S_c + S_g + D + \bar{F}_p + \bar{F}_g
\end{array}
$$

பொருளாதாரத்தின் வெவ்வேறு பிரிவுகளுக்கிடையில் நடக்கும் மூலதன விவகாரங்கள் அனைத்தும் அடிபட்டுப் போகும். இருவகை விவகாரங்கள் எஞ்சி நிற்கும்: (1) வருமானக் கணக்குகளிலிருந்து கொண்டுவரப்பட்ட சேமிப்பு, முதலீடு சம்பந்தமான நடப்பு விவகாரங்களினின்று சொத்து, பொறுப்புகளில் விளையும் நிகர மாற்றங்களைப் பிரதிபலிப்பன; (2) வெளிநாட்டாரோடு நடக்கும் நிகர மூலதன விவகாரங்கள். தொடர்புடைய விவகார வகைகளை ஒன்றுசேர்த்து உருப்படிகளை மாற்றி எழுதினால் இதே முடிவை மேலும் தெளிவாகக் காட்டலாம்:

$$(I_g - D + G_i) + (\bar{F}'_p + \bar{F}'_g) - (\bar{F}_p + \bar{F}_g) = (S_p + S_c + S_g)$$

மூலதனக் கணக்குகளின் தொகுப்புச் சமன்பாட்டை இவ்வாறு மாற்றி எழுதினது ஒரு முக்கியமான பொருளாதார உண்மையைக் காட்டுகிறது. அதாவது, ஒரு பொருளாதாரத்தின் நிகரச் சேமிப்புகளும் அதன் நிகர உள்நாட்டு முதலீடு, வெளிநாட்டாரோடு உள்ள நிகர மூலதன விவகாரங்கள் இவ்விரண்டின் தொகையும் அளவில் சமம். வெளிநாட்டாருடன் நிகர மூலதன விவகாரங்கள் என்பதுதான் நிகர வெளிநாட்டு முதலீடு ($I_f$) ஆகையால் எளியமுறையில் இச் சமன்பாட்டைப் பின்வருமாறு கூறலாம்:[9]

$$I_d + I_f = S$$

அதாவது, ஒரு சமூகத்தின் நிகர சேமிப்பு அதன் மொத்த நிகர முதலீட்டுக்குச் சமம். மொத்த நிகர முதலீடு என்பது அதன் நிகர உள்நாட்டு முதலீடு, நிகர வெளிநாட்டு முதலீடு எனும் இரண்டின் கூட்டல் தொகை.

## மொத்தத் துறைக் கணக்குகளைத் தொகுத்தல்: அயல்நாட்டுச் செலுத்துநிலை

## (Consolidation of Total Sectoral Accounts: The Balance of International Payments)

மேலும் ஒருபடி செல்வோம். நடப்பு விவகாரங்களின் நிகர முடிவையும் (தொகுத்த வருமானப் பட்டியல்), மூலதன விவகாரங்களின் நிகர முடிவையும் (தொகுத்த மூலதனக் கணக்கு) இப்போது கூட்டுவோம்; அதாவது தொகுப்போம். அனுவசியமான வேலையைக் குறைக்க, எளிதாக்கப்பட்ட, தொகுத்த வருமான, மூலதனச் சமன்பாடுகளைப் பயன்படுத்துவோம்.

$$\begin{array}{ll} IA & S = I_d + X - M \\ + & \\ KA & I_d + I_f = S \\ \| & \\ BP & I_f = X - M \end{array}$$

[9] வெளிநாட்டுச் சொத்துகளை வாங்குவது, விற்பது, கடன் கொடுப்பது (வெளிநாட்டார்மீது உரிமைகளை 'வாங்குவது'), கடன் வாங்குவது (தன்மீது பாத்தியதைகளை வெளிநாட்டாருக்கு 'விற்பது') ஆகியவை வெளிநாட்டாருடன் செய்யும் மூலதன விவகாரங்கள். வெளிநாட்டுச் சொத்துகளையும் (பத்திரங்களையும்கூட) வாங்குவதும், உரிமைகளை வாங்குவதும், அவற்றை விற்பதைவிட அதிகமானல், மூலதனநிதிகள் நிகரமாக வெளியேறுகின்றன. அதுதான் நிகர வெளிநாட்டு முதலீடு. உள்நாட்டு முதலீடும் இதுவும் எல்லா விஷயங்களிலும் சரிசமமாக இராமல் இருக்கலாம். ஆனல், இது நம் ஆராய்ச்சிக்கு முக்கியமன்று.

அல்லது, வெளிநாட்டு முதலீட்டை, அது முன்னிருந்த உருவத்தில், மூலதன விவகாரங்களாகக் குறித்தால் :

$$\bar{F}' - \bar{F} = X - M$$

மூலதன விவகாரங்கள், நடப்பு விவகாரங்கள் இரண்டுமாகப் பொருளாதாரத்தின் எல்லா வெளிநாட்டு விவகாரங்களும்தான் இங்கு எஞ்சியுள்ளன.[10] தொகுத்த கணக்குகளுக்குப் பொதுவான எல்லா விவகாரங்களும் தொகுப்பின்போது அடிபட்டுப்போய்விடுமாதலின் இதைத்தான் நாம் எதிர்பார்த்திருப்போம்.

பொருளாதாரத்தின் எல்லா விவகாரங்களும் என்றால் அதன் அயல்நாட்டுச் செலுத்துநிலையை அல்லவா குறிக்கிறது? எனவே, இவ் விறுதிச் சமன்பாடு நம் பொருளாதாரத்தின் அயல்நாட்டுச் செலுத்து நிலையைக் குறிப்பதாகும். மேலும் துல்லியமாகக் கூறினால், ஒரு நாட்டின் பன்னாட்டுச் செலுத்தல்களின் சமநிலை என்பது, அந் நாட்டவர்கள் வேறு எல்லா நாட்டவர்களுடனும் கொண்டுள்ள விவகாரங்களின் சுருக்கமான பட்டியல் அல்லது கணக்கு.

அயல்நாட்டுச் செலுத்துநிலை என்பது ஒரு குறிப்பிட்ட விவகாரங்களின் தொகுதியின் கணக்கு. உற்பத்தித் துறையின் நடப்பு நடவடிக்கைகளின் கணக்கைப்போல, நாம் இதுவரை பார்த்த எந்த வகைக் கணக்கையும் போலவேதான் செலுத்துநிலைக் கணக்கும் இருக்கும்.[11] வருவாய்களை (வரவுகள்) விளைவிக்கும் விவகாரங்கள் ஒரு பக்கத்தில் பதிவாகி யிருக்கும். செலுத்தல்களை விளைவிக்கும் விவகாரங்கள் (பற்றுகள்) எதிர்ப்பக்கத்தில் குறிப்பிட்டிருக்கும். அது முழுக் கணக்காக இருக்கவேண்டுமானால் எதையும் விடக்கூடாது. வருவாய்கள் எல்லாம் எதற்காகவாவது செலவிடப்படுகின்றன அல்லது ஒதுக்கப் படுகின்றன. எனவே, செலுத்துநிலைக் கணக்கின் இரு பக்கங்களும் சமமாக இருக்கவேண்டும்; பற்றுகள், வரவுகளுக்குச் சரியாக இருக்க வேண்டும்.

[10] வருமான, மூலதனக் கணக்குகளின் தொகுப்புகளின் சுருக்கமான சமன் பாடுகளுக்குப் பதிலாக விரிவானவற்றை உபயோகித்தால் தொகுப்பின் முடிவாக இந்த விரிவான சமன்பாடு கிடைக்கும் :

$$(\bar{F}'_p + \bar{F}'_g) - (\bar{F}_p + \bar{F}_g) = (X - M) + (F_p + F_g) - (F'_p + F'_c + F_g')$$

[11] அந்தக் கணக்குகளினின்று இது ஒரு விஷயத்தில் மாறுபடுகிறது. ஒவ் வொரு துறையிலும் நடப்பு விவகாரங்கள் ஒரு கணக்கிலும், மூலதன விவகாரங்கள் மற்றொன்றிலும் பதிவாயின. ஆனால், இதில் நடப்பு, மூலதன விவகாரங்கள் இரண்டும் இணைந்துள்ளன.

ஆனால், நம் செலுத்துநிலைச் சமன்பாடு இந்தக் கணக்கு விதிக்கு ஏற்றபடி சரியாக இல்லை. சமன்பாட்டின் ஒவ்வொரு பக்கத்திலும் வருவாய், செலவு உருப்படிகள் கலந்திருக்கின்றன. ஏற்றுமதிகள் அப் பொருளாதாரத்தின் வருவாய்களைத் தோற்றுவிக்கின்றன (வரவுகள்); இறக்குமதிகள் செலுத்தல்களை விளைவிக்கின்றன (பற்றுகள்). அதேபோல, மூலதன விவகாரங்களும்: $\bar{F}'$, வாங்கிய சொத்துகள் அல்லது தீர்க்கப்பட்ட பொறுப்புகளைக் குறிக்கிறது (செலுத்தல்கள் அல்லது பற்றுகள்); $\bar{F}_g$ கடன்கள் வாங்கியது அல்லது சொத்துகளை விற்றதைக் குறிக்கிறது (வருவாய்கள் அல்லது வரவுகள்). எனவே, நம் சமன்பாட்டின் உருப்படிகளைப் பற்றுகள் ஒரு புறமும், வரவுகள் மறு புறமும் வரும்படி மாற்றி எழுதவேண்டும்:

$$\bar{F}' + M = \bar{F} + X$$

எந்த முழுக் கணக்கும் செய்யவேண்டியதுபோல, இது பற்றுகளும் வரவுகளும் ஒன்றாக இருந்து கணக்கு சமநிலையில் இருப்பதைக் காட்டுகிறது.

## ஒரு நாட்டின் பன்னாட்டுக் கணக்கு: அயல்நாட்டுச் செலுத்தல்களின் சமநிலை

அயல்நாட்டுச் செலுத்துநிலைக் கணக்கை இப்போது நம்மால் தயாரிக்க முடியும். வெளிநாட்டாரிடமிருந்து வருவாய்கள் வரக்கூடிய எல்லா உருப்படிகளையும் வரவுகளாகக் குறிக்கவேண்டும். வெளிநாட்டாருக்குச் செலுத்தவேண்டியதற்கான எல்லா உருப்படிகளையும் பற்றுகளாகக் குறிக்கவேண்டும். நாம் ஏற்கெனவே எழுதிய ஆறு கணக்குகளிலிருந்து இவற்றைப் பொறுக்கி எடுக்கலாம். வழக்கமாகச் செய்வதுபோல நடப்பு விவகாரங்களையும் மூலதன விவகாரங்களையும் பிரித்து எழுதுவோம். அயல்நாட்டு உதவிகள் கடன்களைப் போலன்றி நன்கொடையாகச் செய்யப்படுபவை. அத்தகைய ஒருதலையான மாற்றுகைகள், வெளிநாடுகளினின்று அரசாங்கம் பெறும் வியாபார சம்பந்தமற்ற வருவாய்கள் ஆகியவை சாதாரணமாக நடப்புக் கணக்கில் வரும் பிற உருப்படிகளினின்று தனியாக அவற்றின் பின்னால் சேர்க்கப்பட்டுள்ளன (பட்டியல் 14·7).

$S = I_d + I_f$ என்ற நம் சமன்பாட்டை இப்போது சரிபார்ப்போம். $S_p$, $S_c$, $S_g$ ஆகியவற்றின் கூட்டல், சேமிப்பு; அதாவது $8{\cdot}5 + 25 + 1{\cdot}5$ கூட்டல் தொகை 35. நிகர உள்நாட்டு முதலீடு $I_g - D + G_i$ அல்லது $52 - 23 + 5 = 34$. உள்நாட்டு முதலீட்டைவிடச் சேமிப்பு அதிகமாக உள்ள தொகையும் அயல்நாட்டு முதலீட்டுத் தொகையும் ஒன்றே.

## பட்டியல் 14·7. அயல்நாட்டுச் செலுத்துநிலை

### நடப்புக் கணக்கு

| | **செலுத்தல்கள்** (பற்றுகள்) | | **வருவாய்கள்** (வரவுகள்) | | |
|---|---|---|---|---|---|
| $M$ | சரக்கு இறக்குமதிகள் | 10 | சரக்கு ஏற்றுமதிகள் | 17 | $X$ |
| $F'_p$ | கப்பல் தொழில், உல்லாசப் பிரயாணம் | 5 | கப்பல் தொழில், உல்லாசப் பிரயாணம் | 3 | $F_p$ |
| | வட்டி, லாப ஈவு, வெளிநாட்டாருக்குச் செலுத்தும் பிற வருமானங்கள் | 1 | வட்டி, லாப ஈவு, வெளிநாட்டாரிடமிருந்து பெறும் பிற வருமானங்கள் | 3·5 | |
| | | 16 | | 23·5 | |
| $F'_c$ | மாற்றுகைச் செலுத்தல்கள், தனியாருக்கு | 1 | அயல் நாட்டினரிடமிருந்து அரசாங்கத்துக்குக் கிடைக்கும் வட்டியும் மாற்றுகைச் செலுத்தல்களும் | 0·5 | $F_g$ |
| $F'_g$ | அயல்நாட்டு உதவி | 6 | | | |
| | (நிகர வரவு நிலுவை | 1) | | | |

### மூலதனக் கணக்கு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | தனியார் : | | தனியார் : | | |
| $\bar{F}'_p$ | வெளிநாட்டுச் சொத்துகளில் முதலீடு | 1·5 | குறுகிய கால வெளிநாட்டுக் கடன் | 1·5 | $\bar{F}_p$ |
| | வெளிநாட்டு பாங்குகளில் வைப்புகள் | 0·5 | வெளிநாட்டார் வைத்துள்ள பாங்கு வைப்புகள் | 0·5 | |
| | அரசாங்கம் : | | அரசாங்கம் : | | |
| $\bar{F}'_g$ | அயல்நாட்டு அரசாங்கங்களுக்கு நெடுங்காலக் கடன்கள் | 3 | அயல்நாட்டுக் கடன் திரும்பி வந்தது | 1 | $\bar{F}_g$ |
| | | | பொன் விற்றது | 1 | |
| | | | (நிகர பற்று நிலுவை | 1) | |
| | | 28 | | 28 | |

இச் செலுத்துநிலைப் பட்டியலைப் பார்த்தால் நடப்புக் கணக்கில் ஏற்றுமதி உருப்படிகளின் தொகை (வரவுகள்), இறக்குமதி உருப்படிகளின் தொகையை (பற்றுகள்) விட $ 1 பிலியன் அதிகமாக இருப்பதைக் காணலாம். மூலதனக் கணக்கில் அதே தொகைக்கு ஒரு பற்று நிலுவை இருப்பதையும் பார்க்கலாம். வெளிநாட்டார்மீது ஏற்படுத்தப்பட்ட பொறுப்புகள் நம் நாட்டின்மீது ஏற்படுத்தப்பட்ட

உரிமைகளைவிட $1 பிலியன் அதிகமாக உள்ளதன் விளைவு இது.[12] எனவே, வெளிநாட்டாரோடு செய்த நிகர மூலதன விவகாரங்களின் அளவு, இறக்குமதி உருப்படிகளைவிட ஏற்றுமதி உருப்படிகள் அதிகமாக உள்ள அளவுக்கு, அதாவது நடப்புக் கணக்கின் உபரிக்குச் சமம். $I_f = X - M$ ; இது இவ்வாறுதான் இருக்கவேண்டும்.

## முடிவு

ஒரு நாட்டின் பொருளாதாரத்தின் உற்பத்தித் துறையிலும், அதன் தனியார், அரசாங்கத் துறைகளிலும் நடக்கும் லட்சக் கணக்கான விவகாரங்களும் சுதந்திரமான விவகாரங்கள் என்பதை மறக்கக்கூடாது. உள்நாட்டுப் பொருள்களையும் இறக்குமதி யானவையுமான பலவகை நுகர்ச்சிப் பொருள்களை நுகர்வோர் வாங்க முடிவு செய்கின்றனர் ; குறிப்பிட்ட சில வகை எந்திரங்கள், சாதனங்கள், கருவிகள் ஆகியவற்றை முதலீடு செய்வோர் வாங்க முடிவு செய்கின்றனர் ; நாட்டின் ஏற்றுமதிப் பொருள்களை வாங்க வெளி நாட்டார் முடிவு செய்கின்றனர் ; அவை அனைத்தையும் இவ் விவகாரங்கள் குறிக்கின்றன. இச் செலவுகளுக்கு இணங்கித் தேவைப் படும் பொருள்களையும் பணிகளையும் உற்பத்தி செய்வதென வாணிப நிறுவனங்களும் தனிநபர்களும் முடிவு செய்வதையும், வெளிநாடு களுக்கு நன்கொடைகள் அனுப்பத் தனிநபர்கள் முடிவு செய் வதையும், நாட்டுச் சட்டங்களின்படி சமூகப் பாதுகாப்புத் தொகை களையும் வேறு மாற்றுத் தொகைகளையும் தர அரசாங்கம் முடிவு செய்வதையும் வேறு பலவற்றையும் இவ் விவகாரங்கள் குறிக்கின்றன. இக் கணக்கிலடங்காத முடிவுகளின் காரணமாகவும் வருமானம் உற்பத்தியாகிறது, பங்கிடப்படுகிறது ; பலவகைப்பட்ட சொத்துகள், பொறுப்புகள் வாங்கப்படுகின்றன ; கொடுக்கப்படுகின்றன.

இந்த முடிவுகளும் அவற்றால் விளையும் விவகாரங்களும் பெரும் பாலும் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாதவை. இருப்பினும் எல்லா நடப்பு விவகாரங்களையும் (மேலும் துல்லியமாகக் கூறினால், அவை பதி வான கணக்குகளை) தொகுத்தபோது ஒன்றை ஒன்று நிறைவு செய் யும் விவகாரங்கள் யாவும் அடிபட்டுப் போயின. (1) சேமிப்பு மற்றும் முதலீடு மூலம் சொத்து, பொறுப்புகளின் அளவை மாற்றும் நடப்பு விவகாரங்களும் (2) வெளிநாட்டாருடன் நடந்த நடப்பு விவகாரங் களும் மட்டுமே எஞ்சி நின்றன. இத் தொகுப்பிலிருந்து மற்றொரு

12 பன்னாட்டுச் செலுத்தல்களுக்கு ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு சாதனம் பொன். எனவே, மூலதனக் கணக்கில் வரவுப் பக்கத்தில் 'பொன்னின் விற்பனைகள்' சேர்க்கப்பட்டுள்ளன. பொன்னை ஏற்றுமதி செய்வதால், ஒரு மூலதனச் சொத்து நம் நாட்டைவிட்டுச் செல்கிறது.

முக்கியமான முடிவும் தெரிந்தது : ஒரு நாட்டின் நிகர சேமிப்பானது, அதன் நிகர உள்நாட்டு முதலீடு, வெளிநாட்டாரோடு அதன் நிகர நடப்பு விவகாரங்கள் இவ்விரண்டின் தொகைக்குச் சமமாக இருக்கவேண்டும்.

எல்லாத் துறைகளின் மூலதனக் கணக்குகளையும் தொகுத்தோம். மீண்டும், அச் சமூகத்தின் நிகர சேமிப்புகள், அதன் நிகர உள்நாட்டு முதலீட்டையும் வெளிநாட்டாரோடு அதன் நிகர மூலதன விவகாரங் களையும் சேர்த்த தொகைக்குச் சமம் என்பதைப் பார்த்தோம். இறுதியில் அச் சமூகத்தின் தொகுத்த வருமானக் கணக்கையும் அதன் தொகுத்த மூலதனக் கணக்கையும் ஒன்றுக இணைத்து, வெளிநாடுகள் அனைத்துடன் அது கொண்ட எல்லா விவகாரங்களின் தொகையில் அதாவது அந் நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் வந்து முடித்தோம். எந்தக் கணக்கையும்போல இதன் இரு பக்கங்கள் சமமாக இருக்கவேண்டும். தவிர இந்தப் பன்னாட்டுக் கணக்கின் நடப்புப் பகுதியின் நிகர நிலுவை, மூலதனப் பகுதியின் நிகர நிலு வைக்குச் சமமாக இருக்கவேண்டும் ; அப்படியே அதுவும் இருந்தது.

## பார்வைக்குரிய சில நூல்கள்

Ackley, Gardner, *Macroeconomic Theory*. New York; Macmillan, 1961. இரண்டாவது, மூன்றுவது அத்தியாயங்களில் நாட்டு வருமானம், நாட்டு ஆக்கம் ஆகிய கோட்பாடுகள் விவரிக்கப் பட்டுள்ளன. நாட்டுக் கணக்குகளின் அமைப்புக்கு நல்ல அறிமுக மாக அவை விளங்குகின்றன.

Ruggles, Richard and Nancy D. Ruggles, *National Income Accounts and Income Analysis*. New York. McGraw-Hill, 1956. நாட்டுக் கணக்குகள் எழுதும் முறைகளைப் பற்றி எதையும் விடாமலும் தெளிவாகவும் கொடுக்கப்பட்டுள்ளது.

# 15. நாட்டின் மொத்த ஆக்கத்தில் மாறுதல்களும் அயல்நாட்டு வாணிபப் பெருக்கியும்

# (Changes in Gross National Product and the Foreign Trade Multiplier)

## நாட்டின் மொத்த ஆக்கத்தில் மாறுதல்கள்

ஒரு நாட்டின் மொத்த ஆக்கத்துக்கும் அதன் செலுத்து நிலைக்கும் இடையில் சில முக்கிய தொடர்புகளை நாம் கண்டோம். நாட்டு வருமானம் அல்லது ஆக்கத்தின் மாறுதல்கள் எவ்வாறு செலுத்து நிலையைப் பாதிக்கின்றன, அதற்கு எதிராக செலுத்து நிலையின் பாகங்களான ஏற்றுமதி, இறக்குமதிகளில் ஏற்படும் மாறுதல்கள் எப்படி நாட்டின் மொத்த ஆக்கத்தைப் பாதிக்கின்றன என்பனவற்றை இனி பார்க்கலாம்.

வருமானத்தை உண்டாக்கும் எந்தத் துறையிலும் ($C$, $I$, $G$ அல்லது $X$-ல்) ஏற்படும் மாறுதல், வேறொரு துறையில் அதற்குச் சமமானதும் எதிர் வகையானதுமான ஒரு மாறுதலால் ஈடு செய்யப் பட்டாலொழிய, $GNP$யைப் பாதிக்கும். $GNP$யில் ஒரு முதலீடு ஓர் அங்கம். அம் முதலீடு $ 10 பிலியன் அளவுக்கு அதிகரித்தால், $C$, $G$ அல்லது $X$ அதே சமயம் குறைந்தாலொழிய, $GNP$ அத் தொகைக்கு அதிகரிக்கும்.

**‘பெருக்கி’ விளைவு** (The Multiplier Effect)

ஓர் அங்கத்தில் ஏற்படும் மாற்றத்துக்குச் சரியாக வேறோர் அங்கத்தில் ஓர் எதிர் மாற்றம் ஏற்படும் என்பது மிகவும் எதிர்பார்க்க முடியாது; சாதாரணமாக, பொருளாதாரத்தின் ஓர் அங்கத்தில்

மாற்றம் ஏற்பட்டால் அதேபோல மற்ருெரு பாகத்திலும் ஒரு மாற்றம் ஏற்பட்டு அதைப் பலப்படுத்தும்.[1] முதலில் ஏற்பட்ட மாற்றத்தின் விளைவுகள்தான் இதற்குக் காரணம். வேலையின்மையின் உருவத்தில் பொருளாதாரத்தில் ஏதாவது தளர்ச்சி இருந்தால், முதலீட்டுச் செலவில் $ 10 பிலியன் அதிகரித்தால் சிலருக்கு மீண்டும் வேலை கிடைக்கும். கட்டட வேலைக்காரர்கள், எந்திரக்கருவி ஆலைகளில் வேலை செய்வோர், சாதாரணமாக முதற்பொருள்கள் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளவர்கள் ஆகியோருக்கு மீண்டும் வேலை கிடைக்கும். தம் புது வருமானங்களின் ஒரு பகுதியை அவர்கள் செலவழிப்பார்கள். இச் செலவினுல், அவர்கள் தேவைகளைப் பூர்த்திசெய்ய மேலும் சிலபேருக்கு வேலை கிடைக்கும். பின்னுல் கூறிய இந்தத் தொழிலாளிகளின் புது வருமானங்களாலும் அதே விளைவு ஏற்படும்; வேலை வாய்ப்பும், வருமானமும் அதிகரித்துக்கொண்டே போகும்; ஆனுல், அதிகரிக்கும் அளவு போகப்போகக் குறையும். ஓர் அமைதியான குளத்தில் ஒரு கல்லைப் போட்டால் எப்படிச் சிறு அலைகள் வரிசையாகத் தோன்று கின்றனவோ அதைப்போல இருக்கும் இது.

தொடக்கத்தில் முதலீடு குறைந்தால், அதை அடுத்து இதற்கு எதிர்மாறுன விளைவுகள் வரிசையாக ஏற்படும்: மூலதனப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் வேலைகளும் வருமானமும் குறையும்; இப்போது வேலை போனவர்களின் செலவு குறையும்; அதனுல் அவர்கள் தேவைகளை அளித்து வந்த தொழில்களில் வேலைகளும் வருமானமும் குறையலாகும்; இப்படிப் போய்க்கொண்டேயிருக்கும்.

முதலீட்டில் இவ்வாறு ஏற்படும் (நேர்கணிய அல்லது எதிர்கணிய) மாறுதல் நாட்டு வருமானத்தையும் ஆக்கத்தையும் மொத்தமாக எப்படிப் பாதிக்கிறது? முதலில் அதிகமாகும் வருமானத்தில் எப் பகுதியை அதைப் பெறுபவர்கள் நுகர்வுச் செலவுகளாகப் பிறரிடம் கொடுக்கிருர்கள், எந்த விகிதத்தில் அதனின்று சேமிப்பு, வரிகள் அல்லது இறக்குமதிகளாகப் பணம் போய்விடுகிறது என்பதைப் பொறுத்தது அது. முதலீடு, நுகர்ச்சி, வருமானம் ஆகியவை மாறும்போது, வருமானத்தின் பிற பகுதிகளில்—அரசாங்கச் செலவு, மற்றும் ஏற்றுமதிகளில்—மாறுதல்கள் ஏற்பட்டாலொழிய, அம் மூன்றின் தொடர்பு நாம் விவரித்த மாதிரியே இருக்கும். இப் பகுதிகளை, பெரும்

[1] சில சமயங்களில் ஏற்படக்கூடிய முக்கியமானதான ஒரு விதி விலக்கை இங்குக் கவனிக்கவேண்டும். அரசாங்கம் செலவழிப்பதைக் கண்டு வணிகர்கள் பயந்திருக்கும் நிலையில் அரசாங்கச் செலவு அதிகரிக்கும்போது, அதனுல் வணிகர்களின் நம்பிக்கை மனப்பாங்கு பாதிக்கப்படுவதால் தனியார் முதலீடு அடியோடோ ஓரளவுக்கோ குறைய நேரலாம்.

அளவுக்குச் சுதந்திரமான பாகங்களாகக் கருதுவது சரி. முதலீட்டை அதிகரிக்க முடிவு செய்யும் வணிகர்களும் தம் செலவை விரும்பும் நுகர்வோரும் வேறு, அரசாங்கச் செலவுபற்றிய முடிவுகளைச் செய்யும் மனிதர்கள் வேறு. முதலில் சொன்னவர்களின் முடிவுக்கும் அரசாங்க முடிவைச் செய்பவர்களது செயல்களுக்கும் தொடர்பு இல்லை. ஏற்றுமதிகளைப் பொறுத்தவரை, வெளிநாட்டு வணிகர்கள், நுகர்வோர், அரசாங்கங்கள் ஆகியோரின் முடிவுகளின் விளைவாகவே இவற்றில் மாறுதல்கள் ஏற்படுகின்றன. இம் முடிவுகள் நாம் ஆராயும் பொருளாதாரத்துக்கு வெளியே இருப்பவை, வெளியே தோன்றுபவை.[2]

இனிக் கூறப்போகும் விஷயங்களுக்கு நாட்டின் மொத்த வருமானத்தைவிட உகந்த ஒரு வருமானக் கோட்பாடு, நாட்டின் நிகர ஆக்கம் அல்லது வருமானம். அதை நாம் நாட்டு வருமானம் என்று குறிப்பிடுவோம். அதற்கு $Y$ என்ற அடையாள எழுத்தைத் தருவோம். இதற்கும் $GNP$-க்கும் உள்ள வித்தியாசம், நாட்டு ஆக்கம், பங்கிடப் பட்ட வருமானம் இரண்டிலிருந்தும் தேய்மானத்தைக் கழித்ததுதான். முதலீடு என்பது இப்போது நிகர முதலீடு ; அதை $I$ என்ற எழுத்தால் குறிப்போம்.

### பெருக்கியின் சூத்திரம்

முதலில் அதிகமான வருமானத்தைப்போல ($\Delta I$) இரு மடங்கு நாட்டு வருமானம் உயருகிறதா அல்லது அதைவிட அதிகமாகவா அல்லது அதைவிடக் குறைவாகவா என்பது, அவ்வதிக வருமானத்தில் எந்த விகிதாசாரத்தில் நுகர்ச்சிப் பொருள்களின் செலவுக்காக உள் நாட்டில் ஒதுக்கப்பட்ட தொகை உள்ளது என்பதைப் பொறுத்தது என்று முன்னர் கூறினோம். இதற்குப் பொருளாதாரத்தில் ஒரு கலைச் சொல் தரப்பட்டிருக்கிறது: அதற்கு ‘இறுதிநிலை நுகர்ச்சி நாட்டம்’ (marginal propensity to consume) என்று பெயர்: அதாவது அதிகமான வருமானத்தில் நுகர்ச்சிப் பொருள்கள்மீது செலவாகும் விகிதாசாரம் அல்லது $\Delta C/\Delta Y$. இது பொதுவாக நுகர்ச்சிப் பொருள்கள்மீது வருமானம் செலவிடப்படுவதைக் குறிக்கும் கோட்பாடு. அந் நுகர்ச்சிப் பொருள்கள் உள்நாட்டில் உற்பத்தியாகலாம், அல்லது வெளிநாட்டில் உற்பத்தியாகலாம். எனவே, இதில் இறக்குமதிமீது

[2] நம் பொருளாதாரத்தில் வருமானம் அதிகமாவதால் இறக்குமதிகள் அதிகமாவதன் மூலம் வெளிநாடுகளில் வேலைகளும் வருமானமும் அதிகமாகின்றன என்பதைப் பின்னர் பார்ப்போம். இவ்வாறு அதிகமான வெளிநாட்டு வருமானத்தில் ஒரு பகுதி இறக்குமதிக்காகச் செலவிடப்படும். அவை நம் நாட்டின் ஏற்றுமதிகள். எனவே, இந்நாட்டின் வருமானத்தின்மீது இரண்டாவது முறையாக ஒரு விளைவு சிறிய அளவுக்கு உண்டாகிறது. இந்தத் திருத்தத்தைப் பின்னர் கவனிப்போம்.

செய்யப்படும் செலவும் கலந்துள்ளது. ஒரு மூடிய (அயல்நாட்டு வாணிபம் இல்லாத) பொருளாதாரத்தின் எளிய மாதிரி அமைப்பைக் (model) கொண்டு இதை முதலில் பரிசோதித்துப் பார்க்கலாம். இறக்குமதிகளைப் பின்னர் புகுத்தலாம். இதை முதலில் செய்தால் இறக்குமதிகளால் ஏற்படும் சிக்கலைத் தவிர்ப்பது எளிதாகும்.

இறுதிநிலை நுகர்ச்சி நாட்டம் $\frac{1}{2}$ என்று கொள்வோம். அதாவது வருமானத்தில் என்ன உயர்வு ஏற்படுகிறதோ அதில் பாதி நுகர்ச்சிப் பொருள்களை வாங்க ஒதுக்கப்படுகிறது. மீதி பாதி சேமிப்புக்கும் வரிக்கும் ஒதுக்கப்படுகிறது. முதலீடு அதிகமாகும் அளவு 10 ஆனால் வருமானத்தின்மீதும் நாட்டு ஆக்கத்தின்மீதும் ஏற்படும் மொத்த விளைவு 15·1 பட்டியலில் காட்டப்படுகிறது. அதில் ஒரொரு பத்தியும் (column) வருமானமானது போகப்போகக் குறைவான அளவில் அதிகரிக்கும் அடுத்தடுத்த படிகளை அல்லது அலைகளைக் குறிக்கின்றன. ஒவ்வொரு வரிசையும் (row) ஒரு வருமானக் காலத்தைக் குறிக்கிறது. (ஒரு டாலர் வருமானம் அதை வாங்கும் ஒருவனது கைகளிலிருந்து அடுத்தவன் கைகளுக்குச் செல்லும் சராசரிக்காலம் என்று அதற்கு இலக்கணம் கூறலாம். அமெரிக்காவில் இக் காலம் சுமார் மூன்று மாதங்கள் என்று பல மதிப்பீடுகள் கூறுகின்றன.)[3]

## பட்டியல் 15·1

### வருமானத்தின் பெருக்கம் : ஒரே ஒரு முதலீட்டை உட்செலுத்தியது

| வருமானச் செலுத்தல் காலம் | $I$ | $C_1$ | $C_2$ | $C_3$ | $C_4$ |
|---|---|---|---|---|---|
| 1 | 10 | | | | |
| 2 | | ↘ 5 | | | |
| 3 | | | ↘ 2·5 | | |
| 4 | | | | ↘ 1·25 | |
| 5 | | | | | ↘ 0·625 |

[3] Fritz Machlup, 'Period Analysis and Multiplier Theory.' *Quarterly Journal of Economics*, LIV (1939); American Economic Association, *Readings in Business Cycle Theory*-இல் மீண்டும் அச்சிடப்பட்டது, பக்கங்கள் 213–15. பதிப்பு 1949, பதிப்பாளர் The Blakiston Co., Philadelphia. இதில் அவருடையதும் வேறு பலருடையதுமான மதிப்பீடுகள் தரப்பட்டுள்ளன.

ஒரு பதினைந்து மாதங்கள் கழிந்த இடைவெளியில் வருமானம் அதிகமாகும் எண்களை இப் பட்டியல் வரையறுத்துக் கொடுக்கிறது. இங்குக் காணும் எல்லா உயர்வுகளையும் கூட்டினால், அந்தக் காலத்தில் ஏற்படும் மொத்த வருமான உயர்வு கிடைக்கும் :

$$10+5+2{\cdot}5+1{\cdot}25+0{\cdot}625=19{\cdot}375$$

இதை இந்த மாதிரியும் எழுதலாம் :

$$10\left(1+\tfrac{1}{2}+\tfrac{1}{2}^2+\tfrac{1}{2}^3+\tfrac{1}{2}^4\right) = 19{\cdot}375$$

முதலாவதற்கு அடுத்த ஒவ்வொரு படியிலும், முதலில் ஏற்பட்ட முதலீட்டு உயர்வு, $\Delta I$, இறுதிநிலை நுகர்ச்சி நாட்ட எண்ணின் அதிகமாகிக்கொண்டே போகும் விசைப் பெருக்கத்தால் (increasing power) பெருக்கப்படுவதைக் காணலாம். நாம் இறுதிநிலை நுகர்ச்சி நாட்டத்தை ($\Delta C/\Delta Y$, அல்லது சுருக்கமாக,c) $\frac{1}{2}$ என்று கொண்டோம். ஆனால், அது 0-க்கும் 1-க்கும் இடையில் இருக்கக்கூடிய எந்த மதிப்பையும் கொண்டிருக்கலாம். பொதுப்படையான உருவமளித்து எழுதினால், ஒரு வரையறுக்கப்படாத எண் ($n$) அளவான வருமானச் செலுத்தற் காலங்களை எடுத்துக்கொண்டால், அக் காலங்களின்போது முதலீட்டில் முதன் முதல் ஏற்பட்ட ஓர் உயர்வினால் வருமானத்தின் மீது ஏற்படும் மொத்த விளைவைப் பின்வரும் சமன்பாடாகக் கூறலாம் :

$$\Delta Y=\Delta I\,(1+c+c^2+c^3+c^4\ldots+c^n).$$

அடைப்புக்குள் கூறப்பட்டதைக் கணிதம்மூலம் மேலும் எளிதாகச் சுருக்கலாம் :[4] $\frac{1}{1-c}$.

இதுவே, ஒரு மூடிய பொருளாதாரத்தின் 'பெருக்கி' ($k$) என்பது. $I$ போன்று வருமானத்தின் ஓர் அங்கம் முதலில் அதிகரித்தால்

[4] பெருக்கியை மூலத்தினின்று, $k$, அதாவது, $\frac{1}{1-c}$ என்று வருவிப்பது பின் வருமாறு :

$$k = 1 + c + c^2 + \ldots\ldots c^n$$
$$kc = c + c^2 + c^3 + \ldots\ldots c^{n+1}$$
$$k-kc = 1-c^{n+1}$$
$$k(1-c) = 1-c^{n+1}$$
$$k = \frac{1-c^{n+1}}{1-c}$$

$n$ அனந்தமாக (infinite) இருந்தால்,

$$k = \frac{1}{1-c}$$

வருமானம் எவ்வளவு அதிகரிக்கும் என்று இதைக்கொண்டே உடனடியாகச் சொல்லலாம்.

நாம் எடுத்துக்கொண்ட உதாரணத்தில் அது :

$$\Delta Y = \Delta I \cdot \frac{1}{1-c} = 10 \cdot \frac{1}{1-\frac{1}{2}} = 10 \cdot 2 = 20.$$

அதாவது, $c = \frac{1}{2}$ ஆனால் ஒரு (முடிவில்லாத) வரம்பு குறிப்பிடாத காலத்தில் $I$-யில் ஏற்படும் எந்த மாறுதலும் $Y$-யை இரு மடங்கு அதிகரிக்கச் செய்யும். இவ் விளைவின் பெரும் பகுதியை மிகக் குறுகிய காலத்திலேயே காணலாம். நம் பட்டியல் 15 மாத காலத்துக்குதான் வரையப்பட்டது. இருந்தும் மொத்த உயர்வான 20-ல், இதிலேயே 19·375 வந்துவிட்டது; அது 96·875 சதவீதமாகும். நம் பட்டியலை இரண்டு ஆண்டு காலத்துக்கு நீட்டினால், மொத்த விளைவு 19·921875 ஆக இருக்கும்; அதாவது, இறுதித் தொகையான 20-ல் 99·61 சதவீதம். எனவே, சாதாரண உபயோகத்துக்கு எட்டு அல்லது பத்து வருமான காலங்களுக்குப் பின் ஏற்படும் மிகச் சிறிய மாறுதல்களை நாம் பொருட்படுத்தவேண்டியதில்லை.

**பெருக்கப்படும் உருப்படி (Multiplicand) எதுவாயினும் இருக்கலாம்**

முதலீட்டு உயர்விலிருந்துதான் வருமானம் அதிகரிக்கவேண்டும் என்பதில்லை. வருமானத்தின் வேறு எந்தத் துறையில், $C$, $G$ அல்லது $X$-ல் மாறுதல்கள் ஏற்பட்டாலும், அதன் விளைவாக வருமானம் அதிகரிக்கலாம். புறத்தூண்டுதலின்றித் தாமாகவே அதிகரிக்கக் கூடியவை முதலீடு, அரசாங்கச் செலவுகள், ஏற்றுமதிகள் ஆகியவை. எதிர்காலத்தைப்பற்றித் தொழில் வணிகரின் மதிப்பீடுகள் மாறினால் முதலீடு தானாகவே அதிகரிக்கும். பொருளாதார மந்த நிலையை மாற்றப் பொதுத்துறைப் பணிகளை அதிகரிக்க அரசாங்கம் முடிவு செய்தால் அரசாங்கச் செலவுகள் அதிகரிக்கின்றன. வெளிநாடுகளில் இறக்குமதி வரிகள் குறைந்தாலோ, வருமான உயர்வினால் வெளிநாட்டில் பொருள்களை வாங்க அதிகமாகப் பணம் செலவிடப்பட்டாலோ ஏற்றுமதிகள் அதிகரிக்கின்றன. நாட்டு வருமானத்தின் இப் பகுதிகள் நுகர்வைவிட அதிகமாகத் தம்மியல்பாகவே மாறக்கூடியவை. நுகர்வு வருமானத்தைப் பொறுத்தது; வருமானத்தின் சார்பு (function) அது; தன்னியல்பாக நிர்ணயிக்கப்படுவதில்லை.

நாட்டு வருமானத்தில் மாறக்கூடிய பகுதிகள் குறையலாம் அல்லது அதிகரிக்கலாம். உதாரணமாக, ஏற்றுமதிகள் குறைந்தால், பன்மடங்கு வருமானம் குறைவதை அது துவக்கி வைக்கும்.

வருமானம் விரிவடைவதுபோன்றதுதான் இது ஏற்படும் முறையும்; ஆனால், அதற்கு நேர் எதிரானது.

**பெருக்கப்படும் உருப்படி தொடர்ச்சியாக வருவது** (A Continuing Multiplicand)

நாம் கொண்ட மூன்று மாத வருமான காலங்களில் முதலாவதில் ஒரே ஒருமுறைமட்டும் முதலீடு அதிகமாவதை நம் உதாரணத்தில் எடுத்துக்கொண்டோம். ($c = \frac{1}{2}$ என்றால்) முதலீட்டில் ஏற்பட்ட முதல் உயர்வைப்போல மொத்த வருமானம் இருமடங்கு அதிகரிக்கும் என்றும், ஆனால் இவ்விளைவு காலப்போக்கில் நடக்கிறது என்றும், அது போகப்போக சக்தி குறைந்து மறைந்துவிடுகிறது என்றும் பார்த்தோம். இனி, நாம் அதைவிடச் சாதாரணமாக நடக்கக்கூடிய ஓர் உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். முதலீட்டுச் சூழ்நிலையில் எந்த மாறுதலின் காரணமாகத் தொழில் வணிகர்கள் தம் முதலீட்டுச் செலவை அதிகரித்தனரோ, அதே காரணத்தினால் தம் முதலீட்டுச் செலவை அதே அளவுக்குத் தொடர்ந்து அதிகரிக்கிறார்கள் என்று கொள்வோம். நம் பட்டியல் அப்போது 15·2 பட்டியலில் இருப்பது போலத் தோன்றும்.

### பட்டியல் 15·2

**வருமானத்தின் பெருக்கம் : முதலீடு தொடர்ந்து உட்செலுத்தப்படுகிறது**

| வருமானச் செலுத்தல் காலம் | $I$ | $C_1$ | $C_2$ | $C_3$ | $C_4$ | $C_5$ | $C_6$ | $C_n$ |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 10 | | | | | | | |
| 2 | 10 | ↘5 | | | | | | |
| 3 | 10 | ↘5 | ↘2·5 | | | | | |
| 4 | 10 | ↘5 | ↘2·5 | ↘1·25 | | | | |
| 5 | 10 | ↘5 | ↘2·5 | ↘1·25 | ↘0·625 | | | |
| : | | | | | | | | |
| $n$ | 10 | ↘5 | ↘2·5 | ↘1·25 | ↘0·625 | ↘0·3125 | ↘0·15625 | ......0 |

ஒவ்வொரு மூன்று மாத காலத்திலும் நாட்டு வருமானம் நிலையாக அதிகரித்துக்கொண்டே வருகிறது. ஐந்தாவது காலத்தில் (அதாவது,

15 மாதங்களுக்குப் பிறகு) முதலில் இருந்த அளவைக் காட்டிலும் அது 19·375 அதிகமாகியிருக்கிறது; இறுதியில் இவ்வுயர்வு 20 வரம்பை எட்டும். முதலீடு அதன் புதிய உயர்ந்த அளவில் இருக்கும்வரை வருமான உயர்வு 20-ல் நிற்கும்.

## இறக்குமதிக் கசிவு (The Import Leakage)

இறக்குமதிகளுக்குள் வருமானம் கசிவதைச் சேர்த்துக்கொண்டு, நம் ஆராய்ச்சியைத் திறந்த பொருளாதார நிலை விஷயத்தில் தொடருவோம். இதற்காகச் செய்யவேண்டிய மாறுதல் மிக எளிது. இறுதி நிலை நுகர்ச்சி நாட்டம் என்பதில், சாதாரணமாக, இறக்குமதியான பொருள்கள் உள்நாட்டுப் பொருள்கள் இரண்டின்மீது செய்யப்படும் செலவுகள் அடங்கியுள்ளன என்று கொள்கிறோம். அப்படியானால், இறக்குமதிகளை வாங்குவதில் கசியும் செலவுக்காகப் பெருக்கியைத் திருத்தினால் அதன் சரியான மதிப்பு கிடைக்கும். இதற்காக மற்றொரு கோட்பாட்டை இங்குப் புகுத்துகிறோம். அது இறுதிநிலை இறக்குமதி நாட்டம் (marginal propensity to import) எனப்படுவது. வருமானத்தில் ஏற்படும் உயர்வில் இறக்குமதிகள்மீது செலவிடப்படும் தொகையின் விகிதாசாரம் அது.

நமது உதாரணத்தைத் தொடர்வோம். இறுதிநிலை நுகர்ச்சி நாட்டம் $\frac{1}{2}$ ஆனால், இறுதிநிலை இறக்குமதி நாட்டம் ($m$) $\frac{1}{4}$ எனக் கொள்வோம். அப்போது, ஒவ்வொரு முறையும் வருமானம் $ 10 அதிகமாகும்போது, $ 5 சேமிப்புக்கும் வரிக்கும் போய்விடும்; $ 5 நுகர்ச்சிப் பொருள்கள்மீது செலவிடப்படும். ஆனால், இறுதிநிலை இறக்குமதி நாட்டம் $\frac{1}{4}$ என்றால், அந்த $ 10-ல் $ 2·50, அல்லது நுகர்ச்சிப் பொருள்கள்மீது செய்யப்படும் செலவில் பாதி இறக்குமதிகளை வாங்கப் பயன்படுத்தப்படும். பட்டியல் 15·1-ல் கொடுத்ததுபோல் அடுத்தடுத்த வருமான உயர்வுகள் 10+5+2·5+1·25+0·625...என்று இருக்காது; ஆனால், 10+2·5+0·625+0·15625...என்று இருக்கும்.

இறக்குமதிகளுக்காகக் கசிவு இல்லாதபோது இருந்ததைவிட வருமானத்தின் மொத்த உயர்வு மிகவும் குறைவாக இருக்கும். எவ்வளவு குறைவாக இருக்கும்? அது பெருக்கியைப் பொறுத்தது. மூடிய பொருளாதாரத்துக்கு அது $\frac{1}{1-c}$ ஆக இருந்தது; அப்போது $c=\frac{1}{2}$ ஆனால், பெருக்கியின் மதிப்பு 2. ஆனால், இப்போது c-லிருந்து $m$-ன் மதிப்பைக் குறைக்கவேண்டும். $m$ என்பது இறக்குமதிகளுக்காகப் புது வருமான உயர்விலிருந்து செலவிடப்படும் விகிதாசாரம்.

எனவே, நம் பெருக்கி இப்போது $\frac{1}{1-(c-m)}$ ஆகும். அடைப்புகளை எடுத்துவிட்டால், அது $\frac{1}{1-c+m}$ ஆகும்.

$c=\frac{1}{2}$, $m=\frac{1}{4}$ என்ருல், பெருக்கியின் மதிப்பு

$$\frac{1}{1-\frac{1}{2}+\frac{1}{4}}=\frac{1}{\frac{3}{4}}=\frac{4}{3}=1{\cdot}33.$$

பொருளாதாரத்துக்குள் செலுத்திய ஒவ்வொரு டாலர் முதலீட்டுக்கும் நாட்டு வருமானம் மொத்தம் \$ 1·33 அதிகமாகும். அல்லாமல் $c=\frac{2}{3}$, $m=\frac{1}{3}$ என்ருல், பெருக்கி

$$\frac{1}{1-\frac{2}{3}+\frac{1}{3}}=\frac{1}{\frac{2}{3}}=\frac{3}{2}=1{\cdot}5;$$

அல்லது $c=\frac{8}{4}$, $m=\frac{1}{8}$ ஆனுல், பெருக்கி

$$\frac{1}{1-\frac{6}{8}+\frac{1}{8}}=\frac{1}{\frac{3}{8}}=\frac{8}{3}=2{\cdot}67.$$

இறுதிநிலே நுகர்ச்சி நாட்டத்தின் மதிப்பு அதிகமாக இருந்தால் பெருக்கியின் மதிப்பு அதிகமாகும்; இறுதிநிலே இறக்குமதி நாட்டத்தின் மதிப்பு அதிகமாக இருந்தால் பெருக்கியின் மதிப்புக் குறையும். அதிகமாகியுள்ள வருமானத்தில் உள்நாட்டுப் பொருள்களே வாங்கச் செலவிடப்படும் பகுதி அவ் வருமானத்தை மேலும் வளர்க்கும். ஆனுல், வெளிநாட்டுக்குக் கசியும் பகுதியினுல் அத்தகைய (நேரிடையான) விளேவு ஏதுமில்லே.

**பெருக்கியை எளிய வடிவாக்குதல்**

பெருக்கியின் சூத்திரத்தை மேலும் எளியதாக்கலாம். அதற்காக $I-c$ என்பதற்குப் பதிலாக ‘s’ என்ற எழுத்தைப் போடுவோம். $I-c$ என்பது ஒரு டாலர் வருமானத்துக்கும், அதிலிருந்து செலவிடப்படும் தொகைக்கும் உள்ள வித்தியாசம். அதாவது, ஒரு டாலர் வருமானத்தில் உள்நாட்டுக் கசிவுகளுக்கு (சேமிப்புகளுக்கும் வரிகளுக்கும்) செல்லும் பகுதி. இவ்வுள்நாட்டுக் கசிவுகளே s என்று குறிக்கலாம். இப்போது பெருக்கி $\frac{1}{s+m}$ ஆகிறது. இதில் பின்னத்தின் அடி எண் கசிவுகளின் தொகையைக் குறிக்கிறது எனலாம்.

## பெருக்கியின் செயல்முறை

**ஓர் எளிய மாதிரி அமைப்பு**

பெருக்கியின் செயல்முறையைக் காட்டப் படங்கள் மிக உதவும். ஓர் எளிய நிலேமையை முதலில் எடுத்துக்கொண்டு, பின்னர் அதை

விடச் சிக்கலான நிலைமைக்குச் செல்வோம். 15·1(a) படத்தில் படுக்கை அச்சில் (horizontal axis) நாட்டு வருமானத்தின் அளவுகள் குறிக்கப்படுகின்றன. செங்குத்து அச்சில் (vertical axis) முதலீடும் சேமிப்பும் குறிக்கப்படுகின்றன. எதிர்கால லாப நிலையின் மதிப்பீடுகளைப் பொறுத்து முதலீடு சம்பந்தமான முடிவுகள் மேற்கொள்ளப்படுகின்றன என்று கொள்ளப்படுகிறது. அவை அப்போதைய வருமானத்தின் அளவைப் பொறுத்தனவல்ல. எனவே, முதலில் ஏற்படும் முதலீடு ஒரு குறிப்பிட்ட உயரம், அதாவது, அளவு கொண்ட ஒரு படுக்கைக் கோடாகக் காட்டப்படுகிறது. அதற்கு மாறாக, வருமானத்தைப் பொறுத்தது சேமிப்பு. அது வருமானத்தின் சார்பாகும். எனவே, சமூகத்தின் மொத்தச் சேமிப்புகள், நேர்கணியச் சாய்வுடைய கோடாகக் காட்டப்படுகின்றன. முதலில் குறைந்த வருமான நிலையில் எதிர்கணியச் சேமிப்புகளாக, அதாவது, சேமிப்பு அழிப்பாகத் (dissaving) தொடங்கி, வருமானம் அதிகரிக்கும்போது சேமிப்பும் அதிகரிக்கிறது. $Y_0$ வருமானம் இருக்கும் போது சமநிலை ஏற்படுகிறது. அப்போது முதலீடும் சேமிப்புகளும் சமம்.







(a) (b)

படம் 15. 1. (a) முதலீட்டுப் பெருக்கி
(b) சேமிப்பு ஏதுமில்லா நிலையில், அயல்நாட்டு வாணிபப் பெருக்கி

இப்போது, எதிர்காலத்தைப்பற்றி முதலீடு செய்வோரின் அபிப்பிராயம் அபிவிருத்தி அடைவதாகக் கொள்வோம். முதலீடு $dI$ அளவுக்கு அதிகரித்து, இப்போது $I+dI$ ஆக நிற்கிறது. பட்டியல் 15·2-ல் காட்டியுள்ளபடி ஒரு வருமானப் பெருக்கச் செயல் துவங்குகிறது. ஒரு குறிப்பிட்ட காலத்தில் $Y$, $Y_0$-லிருந்து $Y_1$-க்கு அதிகரிக்கும். சேமிப்புகளும் $S(Y)$ கோடு காண்பிக்குமாறு அதிகரிக்கும். வருமானத்தைப் பொறுத்து சேமிப்பு இருப்பதை இது குறிக்கிறது. வருமானம் $Y_1$ ஆக இருக்கும்போது சமநிலை ஏற்படும். ஏனெனில், இந்த அளவில்தான் சேமிப்பும் முதலீடும் சமமாக இருக்கும்

$(S = I + dI)$. இதைவிட உயர்ந்த வருமான அளவில் முதலீட்டைவிடச் சேமிப்பு அதிகமாக இருக்கும். எனவே, அது வருமானத்தை மந்தப் படுத்தும். இதைவிடக் குறைந்த வருமான அளவிலோ, சேமிப்பைவிட முதலீடு அதிகமாகி மேலும் வருமானம் உயரத் தூண்டும்.

இதில் எல்லாம், பெருக்கி எங்கே? $S(Y)$ என்பது மொத்தச் சேமிப்புச் சார்பு (total saving function) என்பதைக் கவனிக்கவும்; இக் கோட்டில் எந்தப் புள்ளியை எடுத்துக்கொண்டாலும் (செங்குத்து அச்சில் அளந்தால்), அதற்குச் சரியான வருமான அளவுக்கு எவ்வளவு மொத்தச் சேமிப்போ அதைக் காட்டுகிறது. எனவே, அச் சமூகத்தின் சராசரி சேமிப்பு நாட்டத்தை (the average propensity to save) $S(Y)$ காட்டுகிறது. அதற்கு மாறாக, இறுதிநிலைச் சேமிப்பு நாட்டம் (the marginal propensity to save) (s) என்பது, வருமானம் அதிகமாகும் அளவுக்கு (increment) ஏற்பச் சேமிப்பு அதிகமாகும் அளவாகும். இந்தப் படத்தில், இது $S(Y)$ கோட்டின் சாய்வாகும். ஆனால் $Y_0$, $Y_1$ வருமான அளவுகளுக்கு இடையில், இச் சாய்வு s, $\frac{dI}{dY}$ ஆகும். பெருக்கியான $\frac{I}{s}$, $S(Y)$ கோட்டின் சாய்வின் தலைகீழ்ப் பின்னமாகும் (reciprocal). அதாவது $\frac{dY}{dI}$ ஆகும். இறுதியில் கூறியது, பெருக்கி என்ற சொல்லின் பொருளுக்கேற்பவும் உள்ளது; முதலீடு அல்லது வேறு பெருக்கப்படும் தொகையைப் போல எத்தனை மடங்கு வருமானம் அதிகரிக்கிறது என்பது அது.

மற்றோர் எளிய உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். அதாவது, ஒரு திறந்த பொருளாதாரம், ஆனால், அதில் சேமிப்பும் முதலீடும் இல்லை—படம் 15.1 (b). முதலீட்டைப்போலவே ஏற்று மதிகள் நாட்டு வருமானத்தைப் பொறுத்தவை அல்ல என்று கொள் வோம். ஏனெனில், வெளிநாட்டாரின் முடிவுகளைப் பொறுத்தவை அவை. ஆனால், இறக்குமதிகளுக்கும் வருமானத்துக்கும் சார்புத் தொடர்பு உண்டு. $M(Y)$ கோடு அச் சமூகத்தின் சராசரி இறக்குமதி நாட்டத்தைக் காட்டுகிறது. சேமிப்பைப்பற்றிக் கூறியதுபோலவே, இக் கோட்டின் சாய்வுதான் இறுதிநிலை இறக்குமதி நாட்டம் $(m)$ ஆகும்.

வருமானத்தின் சமநிலை அளவு ஒன்றிலிருந்து $(Y_0)$ தொடங்கு வோம். இங்கு $X = M$. இப்போது ஏற்றுமதிகளை அதிகரித்தால், வருமானம் $Y_1$-க்கு உயரும். இறக்குமதிகள் $M(Y)$ கோடு காட்டு வதுபோல மீண்டும் ஏற்றுமதிகளுக்குச் சமமாகும்வரை $(X + dX)$ உயரும். இப்போது ஒரு புதுச் சமநிலை ஏற்பட்டுள்ளது. பெருக்கி, அதாவது, $\frac{dY}{dX}$ இப்போது $\frac{I}{m}$ மதிப்பைப் பெறுகிறது.

சேமிப்பே இல்லாததனால்தான் ஏற்றுமதி அதிகமானதும், இறக்குமதி அதிகமானதும் சரியாக ஒரே அளவாக இருந்தன என்பதைக் கவனிக்கவேண்டும். நமது அடுத்த மாதிரி அமைப்பில் சேமிப்புகளைச் சேர்ப்போம். அப்போது, அதிகமான வருமானத்தில் ஒரு பகுதி, இறக்குமதியை நோக்கிச் செல்லாமல் சேமிப்பு வழியில் போசிகிறது.

**மேலும் உண்மை நிலைக்கேற்ற மாதிரியமைப்பு** (A More Realistic Model)

ஏற்றுமதி, இறக்குமதிகள் செய்யும் திறந்த பொருளாதாரம் ஒன்றை எடுத்துக்கொள்வோம். அதில் முதலீடும் சேமிப்பும்கூட இருப்பதாகக் கொள்வோம். அத்தகைய நிலைக்குப் படம் 15.2 ($a$) விளக்கம் தருகிறது. அரசாங்கச் செலவுகளும் வரிகளும் இதில் சேர்க்கப்படவில்லை. படங்களில் சிக்கலைத் தவிர்க்கவே இவற்றை விட்டுவிட்டோம். அவற்றைச் சேர்ப்பதால் நம் முடிவுகள் எவ்விதத்திலும் பாதிக்கப்படமாட்டா.







படம் 15.2. அயல்நாட்டு வாணிபப் பெருக்கி

முன்போலவே, முதலீடும் (நிகர உள்நாட்டு முதலீட்டைக் குறிக்க, $I_d$) ஏற்றுமதிகளும் வருமானத்தைப் பொறுத்தவை அல்ல. முதலீடு செய்வோர் முடிவு செய்துள்ள செலவுகளை $I_d$ கோடு குறிக்கிறது. $X+I_d$ கோடு முதலீடு, ஏற்றுமதி இரண்டின் கூட்டல் தொகை. எனவே, $I_d$, $X+I_d$ கோடுகளுக்கிடையே உள்ள செங்குத்துத் தூரம், ஏற்றுமதிகளின் மதிப்பாகும். முன்போலவே $S(Y)$ கோடு, அச்சமூகத்தின் சராசரி சேமிப்பு நாட்டத்தைக் காட்டுகிறது. சராசரி சேமிப்பு நாட்டம், இறக்குமதி நாட்டம் இவ்விரண்டின் தொகையை $[M+S]$ $(Y)$ கோடு காட்டுகிறது. எனவே, இதற்கும் $S(Y)$ கோட்டுக்கும் இடையுள்ள தூரம் சராசரி இறக்குமதி நாட்டத்துக்குச் சமம். $Y_0$ வருமான அளவில் சமநிலை இருக்கும்; அப்போது உள்நாட்டு முதலீடு சேமிப்புக்குச் சமம், ஏற்றுமதிகள் இறக்குமதிகளுக்குச் சமம்.

இனி, வெளிநாடுகளில் சுங்கவரிகளைக் குறைத்ததால் அல்லது வெளிநாட்டில் வருமானம் பெருகியதால் ஏற்றுமதிகள் அதிகரிப்ப

தாகக் கொள்வோம். முதலீடு, ஏற்றுமதி இரண்டின் தொகையை $(X+I_d)$ காட்டும் கோடு மேல்நோக்கி இடம் மாறி $(X+dX)+I_d$ என்று 15.2 (b) படத்தில் குறிப்பிட்ட விட்டுவிட்டு வரையப்பட்ட கோடாக இருக்கும். வருமானம் $Y_1$-க்கு அதிகரிக்கிறது. ஏற்றுமதி உயர்வின் விளைவாக வருமான உயர்வு என இலக்கணம் பெறும் பெருக்கி, $dY/dX$. படத்தின்படி, $Y_0Y_1$ $(=dY)$ தூரத்துக்குச் சமமாக $X+I_d$ கோட்டில் ஒரு தூரத்தை எடுத்து $dX$ செங்குத்துத் தூரத் தால் வகுக்கவேண்டும். இங்கு இந்த $dY/dX$ விகிதம், $[M+S](Y)$ கோட்டின் சாய்வான $(m+s)$-ன் தலைகீழ்ப் பின்னம், அதாவது, $1/m+S$ பெருக்கியின் இம் மதிப்பை நாம் முன்னரே வருவித்திருந்தோம்.

### நாட்டு வருமானத்தில் சமநிலை

வருமான அளவு முதலில் சமநிலையில் இருந்தபோது $(Y_0)$, உள் நாட்டு முதலீடு சேமிப்புக்குச் சமமாக இருந்தது; ஏற்றுமதி இறக்கு மதி இரண்டும் சமமாக இருந்தன. ஆனால், வருமானம் $Y_1$ ஆக உள்ள போது இந்த உறவு இல்லை என்பதைக் கவனிக்கவேண்டும். 15.2(b)-யில் அடைப்புப் போட்ட தூரங்களைக் (bracketed distances) கவனித்தால், இறக்குமதிகளைவிட ஏற்றுமதிகள் அதிகம், முதலீட்டைவிட சேமிப்பு அதிகம் என்பது தெரியும். இருப்பினும், $I_d+X=S+M$.

போன அத்தியாயத்தின் இறுதியில் கூறிய முடிவுகளை மீண்டும் பார்ப்போம். ஒரு பொருளாதாரத்தின் செயல்முறைக் கணக்குகளி லிருந்து, ஒரு சமூகத்தின் நிகர சேமிப்புகள், அதன் நிகர உள்நாட்டு முதலீட்டோடு அதன் நடப்பு வெளிநாட்டு விவகாரங்களின் நிலுவை யைக் கூட்டின தொகைக்குச் சமம் என்று நிரூபித்தோம்: $S=I_d+X-M$. இதுவும், நாம் இப்போது இப் படத்திலிருந்து வரு வித்த சமன்பாடும் ஒன்றே. ஒரு திறந்த பொருளாதாரத்தில் வருமானம் சமநிலையில் இருக்கவேண்டிய நிபந்தனையை இது கூறுகிறது. 14ஆவது அத்தியாயத்தில் $I_f=X-M$ என்றும், $S=I_d+I_f$ என்றும்கூடப் பார்த் தோம். வேறுவிதமாகச் சொன்னால், வருமானச் சமநிலைக்கான நிபந் தனை, சேமிப்பும் மொத்த முதலீடும் சமமாக இருக்கும் என்பதே. திறந்த பொருளாதாரம், மூடிய பொருளாதாரம் இரண்டுக்கும் வரு மானத் திடநிலை நிபந்தனைகள் ஒன்றே; ஒரே ஒரு வித்தியாசம் என்ன வென்றால், முன்னதில் முதலீட்டின் ஒரு பகுதி உள்நாட்டில் இல்லாமல் வெளிநாடுகளில் இருக்கும்.

### வருமானம் பரவுதல் (Income Propagation)

ஏற்றுமதிகள் அதிகரித்ததனால் அல்லாமல் முதலீடு அதிகரித்த தனால்தான் முதலில் வருமானம் உயர்வதற்கான ஊக்கம் உண்டாயிற்று என்று கொள்வோம். பெருக்கம் உண்டாகும் வழி இரண்டிலும் ஒன்று

தான். ஆனால், வெளிநாடுகளில் வருமானங்களில் குறிப்பிடத்தக்க மாறுதல் உண்டாகும். முதலீடு அதிகமாவதைப் படத்தில் காட்ட முதலீட்டுக் கோட்டை எல்லாவற்றுக்கும்மேலே வைத்துக்கொள்வது வசதியாக இருக்கும்: எனவே, 15.3 படத்தில் இறக்குமதிகள், முதலீடு இரண்டின் இடத்தை முன்பின்னாக மாற்றுவோம். சேமிப்பு நாட்டம், இறக்குமதி நாட்டம் இரண்டின் இடத்தையும் முன்பின்னாக மாற்றுவோம்.

முன்போலவே வருமானம் $Y_0$-லிருந்து $Y_1$-க்கு உயருகிறது. இறக்குமதிகள் வருமானத்தின் உயரும் சார்பு (increasing function). எனவே, இறக்குமதிகள் முன்னைவிட இப்போது அதிகமாக இருக்கும். ஒரு நாட்டின் இறக்குமதிகள், மற்றவற்றின் ஏற்றுமதிகள். எனவே, வெளிநாடுகளில், ஒரு பெருக்கப்படும் உருப்படி செயற்பட்டு அதன் காரணமாக வருமானம் உயரும். இதன் விளைவு எவ்வளவு அதிகமாக இருக்கும் என்பது வெளிநாடுகளில் உள்ள சேமிப்பு, முதலீடுபற்றிய நாட்டங்களைப் பொறுத்தது.

பெருக்கியின் செயல்முறையால் ஒரு நாட்டின் வருமான உயர்வு பிற நாடுகளுக்குப் பரவுகிறது என்பதை இங்கு முக்கியமாகக் கவனிக்க வேண்டும். முதல் மாற்றம் அமெரிக்காவைப்போன்ற பொருளாதார முக்கியத்துவம் பெற்ற நாட்டில் ஏற்பட்டால், பிற நாடுகளில் ஏற்படும் விளைவுகள் மிக அதிகமாக இருக்கும். சுபீட்சம்—அல்லது, 1929-30-ல் ஏற்பட்டதுபோல, மந்தம்—பன்னாட்டு அளவில் பரவக்கூடும்.




படம் 15.3 அயல்நாட்டு வாணிபப் பெருக்கி: முதலீட்டில் ஒரு மாற்றம்

முன்போலவே, வருமானம் ஒரு திடமான நிலை $Y_1$-ஐ அடையும் போது சமநிலை நிபந்தனை பூர்த்தியாகிறது: $S+M=I_d+X$. ஆனால், இந்த உதாரணத்தில் $I_d$, $S, M$ எல்லாம் உயர்ந்துள்ளன; ஆனால், ஏற்றுமதிகள்மட்டும் மாறவில்லை.[5] தவிர, உள்நாட்டு முதலீட்டை

[5] வெளிநாடுகளில் இதன் காரணமாக வருமானங்கள் உயர்ந்ததால் ஓரளவுக்கு ஏற்றுமதிகள் அதிகரிக்கும். இதை அடுத்த பிரிவில் சேர்த்துக்கொள்வோம்.

விட அதிகமாக இருப்பதற்குப் பதிலாக, சேமிப்புகள் குறைவாக இருக்கின்றன. இறக்குமதிகள் அதிகமாவதன்மூலம் சமன்பாட்டின் இரு பக்கங்களும் சமமாக இருக்கமுடிகிறது. அப்படியானல், வெளி நாட்டு முதலீட்டின் ( $I_f = X - M$ ) நிலை என்ன? இப்போது இறக்கு மதிகள் ஏற்றுமதிகளைவிட அதிகமாதலின், வெளிநாட்டு முதலீடு எதிர்க் கணியமானது. அதாவது, நம் நாட்டின் சேமிப்புகளோடு வெளி நாட்டாரின் சேமிப்பும் சேருகிறது; வெளிநாட்டார் சேமிப்புகளால் தான் உபரி இறக்குமதிகளைச் செய்யமுடிகிறது.

## வெளிநாடுகளில் எதிர்விளைவுகள்
## (Foreign Repercussions)

ஒரு குறிப்பிட்ட நாட்டின் எல்லைகளுக்குள் செலவுகளில் ஏற்படும் மாறுதல்களைமட்டுமே பெருக்கியின் உருவத்தைப்பற்றி விவரிக்கும் போது கணக்கில் எடுத்துக்கொண்டோம். ஆனல், ஒரு நாட்டு வருமானத்தில் மாறுதல் ஏற்படும்போது அதன் இறக்குமதிகளில் ஏற்படும் மாறுதலின்மூலம் உலகின் பிற நாடுகளுக்கும் வருமான மாற்றம் பரவுகிறது என்பதைச் சற்று முன்னர்க் குறிப்பிட்டோம். அமெரிக்காவில் வருமானம் உயர்ந்தால், அதன் இறக்குமதிகளும் உயரும். அதனால் உலகின் பிற பாகங்களில் வருமானம் உயர்வதை அது தூண்டும். வெளிநாடுகளில் வருமானம் அதிகரித்தால் அவற் றின் இறக்குமதிகளும் அதிகரிக்கும். அவற்றில் சில அமெரிக்காவி லிருந்தும் போகும்; ஆதலின், அமெரிக்க வருமானம் மேலும் உயரும். விளையாட்டிலே பந்து போய்வருகிற மாதிரி ('play-back' effect) இவ்வாறு வெளிநாட்டிலே ஏற்படும் எதிர்விளைவையும் கருத்தில் கொள்ளவேண்டும். இதற்குப் பெருக்கியின் சூத்திரத்தை மாற்றினாலே போதுமானது.

பெருக்கி செயலாற்றும் சூழ்நிலைகள் மாறுபடக்கூடும்; ஆதலின், நாம் பயன்படுத்தும் சூத்திரமும் அதற்கேற்றவாறு மாறும். அது எப்படி வந்தது என்பதை விவரிக்காமல், இரண்டு வகைச் சூழ்நிலை களுக்கு அயல்நாட்டு வாணிபப் பெருக்கிகளின் சூத்திரங்களைமட்டும் இங்குக் கொடுக்கப்போகிறேன்.[6] முதலாவதாக வருமான உயர்வை

[6] பெருக்கிகளின் சூத்திரங்களை, முக்கியமாக எல்லா நிலைமைகளுக்கும் பொதுவான சூத்திரத்தைக் கண்டுபிடிப்பதில் ஆர்வம் உடையவர்கள், **Kindleberger**, *International Economics* (1963பதிப்பு) நூலின்பிற்சேர்க்கை E அல்லது **Jaroslav Vanek**, *International Trade: Theory and Economic Policy*, ஏழாம் அத்தியாயத்தைப் பார்க்கவேண்டும். (அத்தியாயத் தின் முடிவில் பார்வைக்குரிய நூல்களின் பட்டியலைக் காண்க.)

னக்கியது—அதாவது, பெருக்கப்படும் உருப்படி—ஏற்றுமதிகளின் உயர்வாக இருந்து, அது ஏற்படும்போது அதே அளவுக்கு வெளிநாடுகளில் உள்நாட்டுப் பொருள்களின் நுகர்ச்சிச் செலவு குறைந்தால், வெளிநாட்டு எதிர்விளைவுகள் இருக்கும்போதுள்ள பெருக்கியின் சூத்திரம்

$$k=\frac{1}{s_a+m_a+m_b\left(\frac{s_a}{s_b}\right)}.$$

$a$ என்று கீழே குறிப்பிடுவது ஏற்றுமதிகளும் வருமானமும் அதிகரிக்கும் நாட்டை; $b$ என்பது உலகின் பிற பகுதிகளை; $s$, $m$ இரண்டும் அவற்றின் சாதாரண அர்த்தமாகிய உள்நாட்டு, வெளிநாட்டுக் கசிவுகளைக் குறிக்கின்றன.

இரண்டாவதாக, $A$ நாட்டில் நுகர்வோர், முதலீடு செய்வோர் அல்லது அரசாங்கம் செய்த செலவு தானே அதிகரித்தது, அல்லது $B$ நாடு $A$ நாட்டிடமிருந்து வாங்கிய இறக்குமதிகள் அதிகரித்தன என்றும், கடன்கள் அதிகரித்ததனால் நிதிவசதி ஏற்பட்டு அவ்வாறாயிற்று என்றும் கொள்வோம். அப்போது அயல்நாட்டு வாணிபப் பெருக்கியின் மதிப்பு மேலும் அதிகமாகப் பின்வருமாறு இருக்கும் :

$$k=\frac{1+\frac{m_b}{s_b}}{s_a+m_a+m_b\left(\frac{s_a}{s_b}\right)}.$$

**எச்சரிக்கை**

கண்ணை மூடிக்கொண்டு நுகர்ச்சி, இறக்குமதிபற்றிய இறுதி நிலை நாட்டங்களைப் பயன்படுத்துவது அபாயகரமானது. முக்கியமாக எந்த நிலைமையிலும் அவற்றின் மதிப்புகள் மாறா என்று கொள்ளக் கூடாது. உதாரணமாக, 1920 தொடங்கிய பத்தாண்டுகளின் முதற் பாகத்திலிருந்து இரண்டாவது உலகப் போர்வரை, ஐக்கிய அமெரிக்காவின் புள்ளிவிவரங்களின்படி, இறுதிநிலை நுகர்ச்சி நாட்டம் சுமார் 0·8 ஆக இருந்தது. சுமார் இருபது ஆண்டுகளுக்குச் சராசரி மதிப்பு இது. இந்தக் காலத்துக்குள் இது பெரும் அளவுக்கு வித்தியாசப் பட்டிருக்கலாம். 1930-க்கு அடுத்த சில ஆண்டுகளில் தேர்ந்த பெரும் பொருளாதார மந்தத்தின் முதல் ஆண்டுகளில், அது அந்த அளவை விட மிகவும் குறைவாக இருந்தது. அப்போது தொடர்ந்து வேலையில் இருந்தவர்களை வேலையின்மை அபாயம் பெரிதும் பயமுறுத்திக் கொண்டிருந்தது. 1920-க்குப்பின் பத்தாண்டுகளின் பிற்பகுதியில் பொருளாதாரத்தில் உற்சாகமும் எதிர்காலம்பற்றிய நம்பிக்கையும்

ததும்பி வழிந்துகொண்டிருந்தன. அப்போது அந் நாட்டத்தின் அளவு அதைவிட அதிகமாக இருந்தது. சூழ்நிலைக்கு ஏற்றவாறு இறக்குமதி நாட்டமும் மாறியது. பொருளாதாரம் முழு வேலைநிலையை எட்டும் சமயத்தில் அது அதிகமாக இருக்கும். அத்தகைய நிலையில் உள்நாட்டு உற்பத்தியை மேலும் உயர்த்துவது கடினம். பெரும் அளவுக்கு மேலும் பொருள்களை வாங்கவேண்டுமாயின் வெளிநாடுகளினின்றும்தான் வாங்கவேண்டும். மேலும், வருமான உயர்வைத் தூண்டும் முதலீடு பெரும்பாலும் சரக்கு இருப்புகள்மீது செய்யப்படுமானால், அவற்றில் இறக்குமதியான கச்சாப் பொருள்கள் உள்நாட்டில் உள்ளவற்றைவிட அதிகமாக இருக்குமானால், இறக்குமதி நாட்டம் அதிகமாக இருக்கும். இதற்கு மாறாக, முக்கியமாக உள் நாட்டு மூலப்பொருள்களைப் பயன்படுத்திக் கட்டடங்களில் அம் முதலீடு செய்யப்படுமானால், இறக்குமதி நாட்டம் அதிகமாக இருக்காது. பெருக்கி, இறுதிநிலை நுகர்ச்சி நாட்டம், இறுதிநிலை இறக்குமதி நாட்டம் மூன்றும் அருமையான ஆராய்ச்சிக் கருவிகள். ஆனால், கைவினைஞர் பயன்படுத்தும் கருவிகளைப்போலன்றி இவற்றின் அளவு நாம் அறியா மலேயே மாறக்கூடும். இவற்றை ஒரு பிரத்தியட்சமான சூழ்நிலையில் பயன்படுத்துபவர்கள் இவ்வாறு நடக்கும் என்பதை உணர்ந்து, அதை மறக்காமலிருக்கவேண்டும்.

இறுதியாக ஒன்று; வருமானம் சுருங்கும்போதெல்லாம் பெருக்கி ஆராய்ச்சியைப் பயன்படுத்தலாம். ஆனால், வளர இடமிருந்தால்தான் வளர்ச்சி விஷயத்தில் அதைப் பயன்படுத்தமுடியும். அதாவது, பண வருமானமும் விலைகளும் அல்லாமல் உண்மை வருமானங்கள் அதிகரிக்கவேண்டுமானால், வேலையற்ற சாதனங்களின் உருவத்தில் பொருளாதாரத்தில் ஒரு தளர்ச்சி இருக்கவேண்டும். அத்தகைய தளர்ச்சி இராவிட்டால், ஏற்றுமதிகள் அதிகரிப்பது அல்லது முதலீடு அதிகரிப்பது போன்று வருமானத்தையும் வேலை வாய்ப்புகளையும் அதிகப்படுத்தும் சக்தி ஒன்று செயலாற்றினால், பணவீக்கம் ஏற்பட்டு விலைகள்தாம் உயரும். ஏனெனில், அப்போது நடப்பு விலையில் கிடைக்கும் உற்பத்திச் சாதனங்களுடைய மதிப்பைவிட மொத்தச் செலவுகள் அதிகமாகும். இதைத்தான் பணவீக்க நிலைமை என்று கூறுகிறோம். கடந்த அத்தியாயத்தின் தொடக்கத்தில் குறிப்பிட்டது போல, வெளிப்படையாக விலைகள் மாறவில்லை என்று நாம் கொள்ளும் போது வேலையற்ற காரணிகள் உள்ளன என்பதை உள்ளூர ஒப்புக் கொள்கிறோம்.

## பார்வைக்குரிய சில நூல்கள்

Kindleberger, Charles P., *International Economics, 3rd ed.* Homewood, *Ill.*: Richard, D. Darwin., Inc., 1963.

இங்குக் கொடுத்துள்ளதைவிட ஓரளவு விரிவாகவும், பல எடுத்துக் காட்டுகளுடனும் பெருக்கியை விவரமாக விளக்குகிறது 10ஆம் அத்தியாயம். பெருக்கியின் பல உருவங்களின் சூத்திரங்களை வருவிப்பதை Appendix E-ல் காணலாம்.

Machlup, Fritz, *International Trade and the National Income Multplier*. The Blakiston Co., 1943. இப்போதுள்ள நூல்களில் பெருக்கியையும், அயல்நாட்டு வாணிபத்தோடு அதன் தொடர்பையும் மிகவும் பூரணமாகவும் விரிவாகவும் விவரிக்கும் நூல் இதுவே. சுருக்கமாகக் கூறவேண்டும் என்பதற்காக இங்கு விடப்பட்ட வேறு பல நிலைமைகளை அதில் காணலாம்.

Meade, James E., *The Balance of Payments*. New York: Oxford University Press, 1951. உள்நாட்டுச் செலவுகளின் மாற்றங்களால் வருமானம், விலைகளில் ஏற்படும் விளைவுகள் ஆகியவற்றை இரண்டாம் பாகம் விரிவாகக் கூறுகிறது.

Palok, J. J., "The Foreigen Trade Multiplier", Haberter, G., "Comment", Polak and Haberter, "A Restatement", *American Economic Reveiw*, XXXVII (1947). ஏற்றுமதிகளில் ஏற்படும் மாற்றம் காரணமாக நாட்டு வருமானம் மாறும்போது எந்தப் பெருக்கப்படும் தொகையை உபயோகிப்பது ஏற்றது என்ற பிரச்சினையை முக்கியமாகக் கருதும் விவாதம் இது.

Vanek, Jaroslav, *International Trade: Theory and Economic Policy*. Homewood, Ill.: Richard D. Irwin, Inc., 1962. அயல்நாட்டுச் செலுத்துநிலை, நாட்டு வருமானக் கணக்குகள் பற்றி முதல் பாகம் விவரிக்கின்றது. அயல்நாட்டு வாணிபப் பெருக்கியின் கணித சூத்திரங்களை இரண்டாம் பாகம், 7ஆம் அத்தியாயத்தில் காணலாம்.

# 16. அயல்நாட்டுச் செலுத்துநிலை
## (The Balance of International Payments)

அயல்நாட்டுச் செலுத்துநிலை என்னும் முக்கியமான கோட்பாடு ஓரளவுக்கு நமக்கு அறிமுகமாகியிருக்கிறது. ஒரு நாடு வெளிநாட்டாருடன் கொள்ளும் எல்லா விவகாரங்களும் இதில் அடங்கியுள்ளன என்பதை 14-ஆம் அத்தியாயத்தில் பார்த்தோம். பொருள்களையும் பணிகளையும் ஏற்றுமதி இறக்குமதி செய்யும் நடப்பு விவகாரங்களும், வெளிநாட்டுச் சொத்துகளை வாங்குவது, விற்பது, வெளிநாட்டாரிடமிருந்து கடன்வாங்குவது, அவர்களுக்குக் கடன் கொடுப்பதுபோன்ற நிதி விவகாரங்களும் அதில் அடங்கியுள்ளன. ஒரு பொருளாதார அமைப்புக்கும் உலகின் மற்ற எல்லாப் பொருளாதாரங்களுக்கும் இடையில் நடக்கும் விவகாரங்களின் முழுக் கணக்காதலின், அயல் நாட்டுச் செலுத்துநிலையின் இரு பக்கங்களும் எப்போதும் சமமாக இருக்கவேண்டும் என்பதையும் பார்த்தோம்.

அயல்நாட்டுச் செலுத்துநிலைபற்றிய இந்த விவரங்களை நிரூபித்தது ஆரம்பக் கட்டம்தான். அது மிகவும் பயனுள்ளதும், பல விஷயங்களை நமக்கு அறிவிக்கும் அட்டவணையும் ஆதலின், அதில் அடங்கிய உருப்படிகள், அவை ஒன்றோடொன்றும் செலுத்து நிலையோடும் கொண்டுள்ள தொடர்பு ஆகியவைபற்றி மேலும் நிறைய அறிந்துகொள்ளவேண்டியது அவசியமாகும்.

**காரணங்கள்**

ஒரு குறிப்பிட்ட காலத்துக்கான செலுத்துநிலைகள் இரண்டை எடுத்து ஒப்பிட்டுப்பார்த்தால், அந் நாட்டின் வியாபார நிலைமையில் ஏற்பட்ட மாற்றங்கள் தெரிகின்றன—அதாவது, ஒன்றோடொன்று ஒப்பிட்டால், ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் எப்படி மாறியுள்ளன என்பது தெரியும். வியாபாரக் கொள்கைகளையும் சுங்கக் கொள்கைகளையும் தீர்மானிப்பதற்கு இவ்விவரம் முக்கியமானது என்பது

தெளிவு. இம் மாற்றங்களால் வேலை வாய்ப்புகளும் உற்பத்தியும் எப்படி பாதிக்கப்படும் என்பது பணக்கொள்கை, அரசாங்க நிதிக் கொள்கை ஆகியவற்றைப் பொறுத்தவரையில் முக்கியமானது. பொன்னுகவும் அன்னியச் செலாவணியாகவும் ஒரு நாடு வைத்திருக்கும் பன்னாட்டுச் சேமநிதிகளில் ஏற்படும் மாற்றங்களும் இவ்வாறே முக்கியமானவை. ஒரு நாட்டின் நிகரமாகக் கடன் கொடுத்த நிலை அல்லது நிகரமாகக் கடன் வாங்கிய நிலையில் ஏதாகிலும் மாற்றம் ஏற்பட்டுள்ளதா என்பதையும் இவற்றினின்று அறியலாம். அதனுல் எதிர்கால வருமானம் அல்லது செலுத்தல்கள் எப்படி இருக்கும் என்பதையும் அறியலாம்.

## நடப்புக் கணக்கில் செலுத்துநிலை
## (The Balance of Payments on Current Account)

அயல்நாட்டுச் செலுத்துநிலைபற்றிய நம் விவரமான ஆராய்ச்சியை நடப்புக் கணக்கிலிருந்து தொடங்குவோம். பன்னாட்டுச் செலாவணி நிதி (International Monetary Fund) வெளியிடும் செலுத்து நிலை நடப்புக் கணக்கின் பாகுபாடு செய்யப்பட்ட விவகார வகைகளைப் பின்வரும் பட்டியல் விளக்கக் குறிப்புகளுடன் தருகிறது.

## A நாட்டின் செலுத்துநிலையின் நடப்புக் கணக்கில் அடங்கியவை

**பற்றுகள் (செலுத்தல்கள்)**

சரக்கு இறக்குமதிகள் (வெளியிலிருந்து இறக்குமதியாகும் எல்லாப் பொருள்களும்).

அயல்நாட்டில் பிரயாணம் (வெளிநாடுகளில் பிரயாணம் செய்யும் அல்லது தற்காலிகமாக வசிக்கும் *A* நாட்டில் சாதாரணமாக வசிப்பவர்களுக்கு விற்கப்பட்ட பொருள்களும், தரப்பட்ட வசதிப் பணிகளும்).

போக்குவரத்து (*A*-யில் வசிப்பவருக்குப் பன்னாட்டுப் போக்குவரத்துக் கம்பெனிகள் அளிக்கும் பிரயாணிப் போக்குவரவு அல்லது சாமான் போக்குவரவு வசதிகள்).

இன்ஷூரன்சு (வெளிநாட்டில் பதிவான கம்பெனிகள் *A* வாசிகளுக்கு வழங்கிய இன்ஷூரன்சு ஒப்பந்தங்களுக்கான பிரிமியக் கட்டணங்களும், *A*-யில் பதிவான கம்பெனிகள் அயல் நாட்டினருக்கு வழங்

கிய இன்ஷ்யூரன்சு ஒப்பந்தங்களுக்காகச் செலுத்திய நஷ்ட ஈட்டுத் தொகைகளும்).

முதலீட்டு வருமானம் (பிறநாட்டுவாசிகளுக்குச் சொந்தமாக $A$-யில் உள்ள சொத்துகள், அல்லது அவர்களுடைய பத்திரங்களின்மீது வட்டியும் லாப ஈவும்).

அரசாங்கம் (வெளிநாடுகளில் உள்ள $A$-யின் தூதரகம், அல்லது படைநிறுவனங்கள் அயல்நாட்டாரிடமிருந்து வாங்கிய பொருள் களும் பணிகளும், அல்லது அரசாங்கம் வெளிநாட்டில் செலவிட்ட பிற தொகைகள்).

சில்லறைச் செலுத்தல்கள் (சினிமாப் பட ராயல்டி தொகைகள், தந்தி, தொலைபேசி வசதிகள், நிர்வாகம், பொறியியல் நிபுணர்களுக்கும் ஒப்பந்தக்காரர்களுக்கும் கொடுக்கும் கட்டணங்கள் போன்ற வற்றுக்கான செலுத்தல்கள்).

**வரவுகள் (வருவாய்கள்)**

சரக்கு ஏற்றுமதிகள் (வெளிநாடுகளுக்கு அனுப்பிவைக்கப்பட்ட எல்லாப் பொருள்களும்).

வெளிநாட்டுப் பிரயாணம் ($A$-யில் பிரயாணம் செய்யும் அல்லது தற்காலிகமாக வசிக்கும் அயல்நாட்டினருக்கு விற்ற பொருள் களும், அளித்த வசதிப் பணிகளும்).

போக்குவரத்து (பன்னாட்டுப் போக்குவரத்தில் ஈடுபட்டுள்ள $A$ நாட்டுக் கம்பெனிகள் வெளிநாட்டாருக்கு அளித்த பிரயாணி அல்லது சாமான் போக்குவரவு வசதிகள்).

முதலீட்டு வருமானம் ($A$ வாசிகளுக்குச் சொந்தமான வெளிநாட்டுப் பத்திரங்கள், சொத்துகளினின்று வரும் வட்டி, லாப ஈவுகள்). இன்ஷ்யூரன்சு ($A$-யில் பதிவான கம்பெனிகள் வெளிநாட்டாருக்கு வழங்கிய இன்ஷ்யூரன்சு ஒப்பந்தங்களுக்காக வரும் பிரிமியக் கட்டணங்களும், $A$ வாசிகளுக்கு வெளிநாட்டுக் கம்பெனிகள் வழங் கிய இன்ஷ்யூரன்ஸ் ஒப்பந்தங்களின்படி வரும் நஷ்ட ஈட்டுத் தொகைகளும்).

அரசாங்கம் ($A$-யில் உள்ள வெளிநாட்டுத் தூதரகங்களுக்கும் படை நிறுவனங்களுக்கும் விற்ற பொருள்களும் பணிகளும்; அன்னிய அரசாங்கங்களுக்கு விற்ற பிற பொருள்களும் பணிகளும்).

சில்லறை வரவுகள் (சினிமாப் பட ராயல்டிகள், தொலைபேசி, தந்திவசதி, நிர்வாகம், பொறியியல் நிபுணர், ஒப்பந்தக்காரர் கட்டணங்கள் போன்றவற்றுக்காக வெளிநாடுகளில் சம்பாதித்தவை).

செலுத்துநிலையின் அங்கங்களான இப் பெரிய உருப்படிகளில் மிகப் பெரியவை, சாதாரணமாக, சரக்கு ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் தாம். பல நாடுகளுடைய செலுத்துநிலையில் இவை மொத்தத்தில் மூன்றில் இரண்டு பங்குக்கு இருக்கும். சில நாடுகளின் செலுத்து நிலையில் வெளிநாட்டுப் பிரயாணம், அதாவது, உல்லாசப் பிரயாணம் முக்கியமாக இருக்கிறது. இது அமெரிக்கா விஷயத்தில் முக்கியமாகப் பொருந்தும்; அமெரிக்காவுக்கு நிகரமாக இது ஒரு செலுத்தல்; அதாவது, பற்று உருப்படி. மெக்சிகோ, மேற்கு ஐரோப்பிய நாடுகள் ஆகியவற்றுக்கும் இது முக்கியம்; அவற்றுக்கு இது ஒரு வருமானம். சமீப காலத்தில் அமெரிக்காவின் அரசாங்கம் படைச்செலவுகளாகச் செலவழிப்பதுமட்டும் கிட்டத்தட்ட $ 3 பிலியனை எட்டுகிறது.

முதலீட்டு வருமானம் நடப்புக் கணக்கில் சேர்க்கப்பட்டிருப்பது ஏனெனில், அது ஒரு வசதிக்கான வருமானம் ஆகும்; அதாவது, ஒருவரது மூலதனத்தைப் பயன்படுத்துவதற்காகக் கொடுக்கப்படும் தொகையாகும். எந்த நாடு மூலதனத்தைக் கடனாக வாங்கியுள்ளதோ அல்லது எதில் வெளிநாட்டவருக்குச் சொந்தமான, வருவாய் சம்பாதிக்கும் சொத்துகள் உள்ளனவோ அந் நாட்டுக்கு இது செலுத்தலாகும்; கடன் கொடுத்த அல்லது முதலீடு செய்த நாட்டுக்கு வருவாய் ஆகும்.

விவகாரங்கள் தனி நபர்களாலும், கம்பெனிகளாலும், அரசாங்கத் தாலும் செய்யப்படுகின்றனவேயன்றி, நாடு என்ற அருவப் பொருளால் (abstraction) செய்யப்படுவதில்லை. எனவே, ஒரு நாட்டின் வாசிகளுக் கும் (residents), மற்றொரு நாட்டின் வாசிகளுக்கும் இடையே இவ் விவகாரங்கள் நடக்கின்றன என்று கூறுவதுதான் சரி. ஆனால், சுருக்க மாக எழுதவேண்டித் தொடர்ந்து ஒரு 'நாட்டின்' விவகாரங்கள் என்று கூறுவோம். அதனால் பொருள்படுவது அந் நாட்டில் வசிக்கும், சட்டத்தின் நோக்கின்படி, ஓர் ஆள் அல்லது வாழ்கின்ற ஓர் அமைப்பு நடத்தும் விவகாரங்கள் என்பதே ஆகும்.

பெரும்பாலான இடங்களில் ஒரு குறிப்பிட்ட நாட்டில் வசிப்பவர் யார்? அதன் வாசிகள் அல்லாதவர் யார்? என்பது தெளிவாகத் தெரியும். ஆனால், சில சமயங்களில் சிக்கல்கள் ஏற்படும். ஓர் உல்லாசப் பிரயாணி அவனது தாய்நாட்டின் வாசியாகக் கருதப்படுகிறான்.

அவன் வெளிநாடுகளில் செய்யும் செலவுகள் அவனது நாட்டின் அயல் நாட்டுச் செலுத்தல்களாகக் கருதப்படும். உண்மையில் அவற்றுக்கும் பொருள்கள், பணிகளை இறக்குமதி செய்வதற்கும் வித்தியாசம் இல்லை. ஆனல், அவனது நாட்டின் சட்டங்கள் தம் மனம்போல் நிர்ணயித்த ஒரு குறிப்பிட்ட காலத்துக்குமேல் ஒருவன் வெளிநாட்டில் வசித்தால், அவன் வெளிநாட்டுவாசியாகக் கருதப்படுகிருன். அவன் வசிக்கும் நாட்டு மக்களது விவகாரங்களைப்போலவே அவனது விவகாரங்களும் கருதப்படுகின்றன.

அமெரிக்காவில் இருக்கும் ஒரு மூலக் கம்பெனியை (parent corporation) எடுத்துக்கொள்வோம். அதன் துணை நிறுவனங்கள் (subsidiaries) வெளிநாடுகளிலிருந்தால், அவற்றின் மூலதனம் முழுவதும் அமெரிக்க மூலக் கம்பெனிக்குச் சொந்தமாக இருந்தாலும் அதை வெளிநாட்டுவாசிகளாகவே கருதப்படுகின்றன. ஏனெனில், அவை இருக்கும் நாட்டின் சட்டங்களின்படி அவை பதிவு செய்யப்படுகின்றன. எனவே, (சட்டப்படி) அவை அந் நாட்டுவாசிகள் ஆகின்றன. இதனல், மூலக் கம்பெனிகளுக்கும் அதன் துணை நிறுவனங்களுக்கும் இடையே நடக்கும் விவகாரங்கள் பன்னுட்டு விவகாரங்கள் ஆகின்றன ; இரண்டு நாடுகளின் அயல்நாட்டுச் செலுத்துநிலைப் பட்டியல்களிலும் அவை சேருகின்றன. ஒரு துணைக்கம்பெனி, அது இருக்கும் நாட்டுவாசிகள் பிறருடன் நடத்தும் விவகாரங்கள் முற்றிலு உள்நாட்டு விவகாரங்களே.

மூலக் கம்பெனியின் புறவீடுகளாகக் (outposts) கிளை அலுவலகங்கள் (branch offices) கருதப்படுகின்றன. மூலக் கம்பெனிக்கும் அதன் கிளை அலுவலகங்களுக்குமிடையே நடக்கும் விவகாரங்கள் உள்நாட்டு விவகாரங்கள். ஆனல், கிளை அலுவலகம் இருக்கும் நாட்டில் பிற நிறுவனங்கள் அல்லது தனி நபர்களோடு நடக்கும் விவகாரங்கள் பன்னுட்டு விவகாரங்களாகும். ஒரு நாட்டின் தூதரகங்கள், கான்ஸல் அலுவலகங்கள் அல்லது படை அமைப்புகள் ஆகியவை வெளிநாடுகளில் இருந்தால், அவைபற்றிய விவகாரங்களும் அவ்வாறே. பன்னுட்டுச் செலாவணி நிதி, உலக பாங்கு போன்ற பன்னுட்டு நிறுவனங்கள் அமைந்திருக்கும் இடம் வெளிநாடோ, உள்நாடோ எப்படி இருப்பினும், அவற்றை வெளிநாட்டுவாசிகளாகவே கொள்ளவேண்டும். ஆனல், அவற்றின் ஊழியர்கள் அப்படிக் கொள்ளக்கூடாது. எனவே, இவை இரண்டும் வாஷிங்டனில் (*D. C.*) அமைந்திருப்பினும், அமெரிக்கா இவற்றுடன் கொண்ட விவகாரங்கள் பன்னுட்டு விவகாரங்களாகக் கருதப்பட்டு, அமெரிக்காவின் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் இடம்பெறுகின்றன.

**செலுத்துநிலைக் கணக்கு வைத்தல்**

செலுத்துநிலைப் பட்டியலை எப்படி அமைப்பது என்பது மேலும் தெளிவுபடுத்தப்பட வேண்டிய ஒரு விஷயம். இரட்டைப் பதிவுக் கணக்கு முறையின் (double entry book-keeping) விதிகளின்படி செலுத்துநிலைப் பட்டியலை எழுதவேண்டும் என்பது கோட்பாடு. இம் முறையின் அடிப்படை விதி பின்வருமாறு: ஒவ்வொரு வியாபார விவகாரமும் இரண்டு பக்கங்களைக்கொண்டது; அவை இரண்டையும் பதிவு செய்யவேண்டும். எல்லா வியாபார விவகாரங்களிலும் அடிப்படையாக உள்ள பொருளாதாரக் கோட்பாட்டைத்தான் இது கூறுகிறது: உனக்கு என்ன கிடைக்கிறதோ, அதற்காக நீ கொடுக்கிறாய்; அதாவது, ஒன்றும் கொடுக்காமல் ஏதாவதொன்றை ஒருவன் எப்போதும் பெறுவதில்லை. (நன்கொடைகள் ஒரு விசேஷமான பிரச்சினை. அதை விரைவில் கவனிக்கலாம்.)

ஏற்கெனவே கூறியதுபோல, வியாபாரக் கணக்குமுறையில் ஒரு வழக்கமாவது, ஒரு கணக்கு யாருடையதோ அவன் பெறும் ஒவ்வொன்றுக்கும் அவன்மீது கணக்கு எழுதுவது. அதாவது, அவன் கணக்கில் பற்றாக (debit) எழுதுவது. அவன் கொடுத்துவிடும் ஒவ்வொன்றுக்கும் அவன் கணக்கில் வரவாக (credit) வைப்பது. எனவே, ஒரு வியாபாரி $ 100-க்குப் பொருள்களை விற்று, அதற்கான பணம் அவனுக்குச் செலுத்தப்பட்டால், அவனது கணக்குப் பின்வருமாறு இருக்கும்:

| **பற்று** | **வியாபாரியின் கணக்கு** | | **வரவு** |
|---|---|---|---|
| பணம் | $ 100 | சரக்கு | $ 100 |

அவன் கொடுத்த சரக்குக்கு அவனது கணக்கில் வரவு வைக்கப்பட்டது. அவன் மாற்றாகப் பெற்ற பணத்துக்கு அவன் கணக்கில் பற்று எழுதப் பட்டது.

வேறு எந்தக் கணக்குக்கும் பொருந்துவதுபோல ஒரு நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலையின் நடப்புக் கணக்குக்கும் இந்த விதிகள் பொருந்தும். ஒரு செலுத்துநிலையைக் கற்பனை செய்து இவற்றைக் கையாண்டு பார்ப்போம். முன்பு பட்டியலில் கொடுக்கப் பட்ட வசதிப் பணிகள் அனைத்தும் சுருக்கமாக இருப்பதற்காக ஒரே உருப்படியாக எழுதுவோம். வெனிசுவேலாவை (Venezuela) உதாரணமாக எடுத்துக்கொள்வோம். அதன் மக்கள் தம் அயல்நாட்டு விவகாரங்களைப் பெரும்பாலும் நியூயார்க் பாங்குகள்மூலமாகச் செய்கின்றனர். அவர்கள் நியூயார்க்கில் வைத்துள்ள பாங்கு வைப்புகளிலிருந்து பொருள்கள் வாங்கியதற்குப் பணம் கொடுக்கிறார்கள்;

பொருள் விற்ற தொகைக்கு அந்த பாங்கு வைப்புகள் உயருகின்றன என்றும் கொள்வோம். $ 1,800 மிலியன் மதிப்புக்கு அந் நாடு பொருள் களை இறக்குமதி செய்கிறது என்றும், $ 2,300 மிலியன் மதிப்பிற்குச் சரக்கு ஏற்றுமதிகளைச் செய்கிறது என்றும், கப்பல் தொழில், உல்லாசப் பிரயாணம்போன்ற வசதிப் பணிகளை அந் நாடு $ 200 மிலியன் மதிப்புக்கு அளித்து, அத்தகைய வசதிகளைப் பிறரிடமிருந்து $ 300 மிலியனுக்குப் பெறுகிறது என்றும் கொள்வோம். அந் நாட்டின் செலுத்துநிலையின் நடப்புக் கணக்கு, பட்டியல் 16·1-ல் கொடுத்திருப் பதுபோல இருக்கும்.

## பட்டியல் 16·1

**பற்று A நாட்டின் நடப்புக் கணக்கின் செலுத்துநிலை வரவு**

| | (மிலியன்) | | (மிலியன்) |
|---|---|---|---|
| நியூயார்க் நிலுவைகள் அதிகமானது | $ 2,300 | சரக்கு ஏற்றுமதிகள் | $ 2,300 |
| சரக்கு இறக்குமதிகள் | 1,800 | நியூயார்க் நிலுவைகள் குறைந்தது | 1,800 |
| நியூயார்க் நிலுவைகள் அதிகமானது | 200 | வசதிப் பணிகள் | 200 |
| வசதிப் பணிகள் | 300 | நியூயார்க் நிலுவைகள் குறைந்தது | 300 |
| | $ 4,600 | | $ 4,600 |

ஒவ்வோர் உருப்படியும் பற்று, வரவு ஆகிய இரு பக்கங்களிலும் எழுதப்படுவதால், கணக்கு சமநிலையில் இருக்கிறது. ஒவ்வொரு குறிப்பும் எண்ணற்ற தனி விவகாரங்களைச் சுருக்கி ஒரு தொகுப்பாகத் தருகிறது. எனவே, ஒருசில குறிப்புகளே இதில் இருக்கின்றன. (நடைமுறையில், 'வசதிப் பணிக்' குறிப்புகளை நாம் பாகுபாடு செய்த வகைகளின் அடிப்படையிலாவது பிரித்துக் காட்டவேண்டும்.) சுருக்கம் செய்வதில் மேலும் ஒருபடி செல்லுவோம். நியூயார்க் பாங்குகளில் செலுத்தும் தொகையும், அவற்றினின்று எடுக்கும் தொகையும் பெரும் அளவுக்கு ஒன்றை ஒன்று ஈடு செய்கின்றன. உள்ளே செலுத்தியது $ 2,500 மிலியன்; வெளியே எடுத்தது $ 2,100 மிலியன். இருவகைச் செலுத்தல்களும் நியூயார்க் பாங்கு வைப்புகளையே குறிக்கின்றன. எனவே, சிறிய தொகையைப் பெரியதி லிருந்து கழித்து நிகர மாற்றத்தைமட்டும் காட்டலாம்.

அப்போது *A*-யின் பன்னாட்டுக் கணக்குப் பட்டியல் 16·2-ல் இருப்பதுபோல இருக்கும்.

## பட்டியல் 16·2

| பற்று | A நாட்டின் நடப்புக் கணக்கின் செலுத்துநிலை | | வரவு |
|---|---|---|---|
| | (மிலியன்) | | (மிலியன்) |
| சரக்கு இறக்குமதிகள் | $ 1,800 | சரக்கு ஏற்றுமதிகள் | $ 2,300 |
| பணிகள் | 300 | பணிகள் | 200 |
| நியூயார்க் நிலுவைகளில் நிகர உயர்வு | 400 | | |
| | $ 2,500 | | $ 2,500 |

### பொதுவாக வெளிநாட்டு நிலுவைகள்

தன் பன்னாட்டு விவகாரங்களின் ஒரு பகுதியை A நாடு லண்டன் மூலமாகவோ, பிற நிதிக் கேந்திரங்களின்மூலமாகவோ நடத்தியிருந்தால், அதன் ஏற்றுமதி உருப்படிகளுக்காக உள்ளே செலுத்திய தொகைகளும், இறக்குமதிகளுக்காக வெளியே செலுத்திய தொகைகளும் பவுன்களிலும் வேறு நாணயங்களிலும் செலுத்தப்பட்டிருக்கும். A-யின் பாங்குகளுக்குச் சொந்தமாக லண்டனில் உள்ள பாங்கு வைப்புகள் அதிகமாகியிருக்கும் அல்லது குறைந்திருக்கும். இவற்றை நியூயார்க் நிலுவைகளினின்றும் தனியாகப் பிரித்துக்காட்ட விசேஷக் காரணம் ஏதாகிலும் இருந்தாலொழிய, சமநிலைப்படுத்தும் நிதிக்குறிப்பு, அதாவது, நடப்புக் கணக்கின் உபரி, பொதுப் பெயரால், ‘வெளிநாட்டு நிலுவைகளில் நிகர உயர்வு’ என்று அப்போது அழைக்கப்படும். (இதைமட்டுமன்றிச் செலுத்துநிலையின் எல்லா உருப்படிகளையும் டாலர்களிலோ, அந் நாட்டின் சொந்த நாணயத்திலோ குறிப்பிடலாம். நம் ஆராய்ச்சிக்கு, அது எப்படிக் குறித்திருந்தாலும் ஒன்றே.)

### வெளிநாட்டாருக்குச் சொந்தமான உள்நாட்டு நிலுவைகள்

ஃபிரான்ஸ் அல்லது ஸ்விட்சர்லாந்தைப்போல, A நாட்டிலேயே ஓரளவு முக்கியத்துவம் பெற்ற பன்னாட்டு நிதிக் கேந்திரம் ஒன்று இருப்பதாகக் கொள்வோம். அப்போது அதன் விவகாரங்களில் சில அந் நாட்டு நாணயத்திலேயே தீர்க்கப்படலாம். இதனால் ஏற்படும் வித்தியாசத்தை நன்கு புரிந்துகொள்ளவேண்டும். A-யின் செலாவணியில் பொருள்கள், பணிகளின் இறக்குமதிக்காகப் பணம் செலுத்தப்பட்டால், வெளிநாட்டு பாங்குகள் A-யின் பாங்குகளில் வைத்துள்ள வைப்புகளை A-யின் இறக்குமதியாளர்கள் அதிகரிக்கச் செய்வர். அதேபோல ஏற்றுமதிகளுக்கும் அச் செலாவணியிலேயே பணம் செலுத்தப்பட்டால், இந்த வைப்புகளிலிருந்து A-யின்

ஏற்றுமதியாளருக்குத் தொகைகளை மாற்ற வேண்டும். இதனால் அயல்நாட்டாருக்குச் சொந்தமான வைப்புகள் குறையும். வெளி நாட்டு நிதிக் கேந்திரங்களின்மூலம் நடத்தப்படும் விவகாரங்களில் ஏற்றுமதிகளின் விளைவாக *A*-யின் வெளிநாட்டுச் சொத்துகள் (வெளிநாட்டு பாங்குகளில் வைப்புகள்) அதிகரிக்கும்; இறக்குமதிகள் அவற்றைக் குறைக்கும். *A*-யின் செலாவணியில் நடக்கும் விவகாரங்களில் — அதன் நிதிக் கேந்திரத்து பாங்குகள்மூலம் நடப்பவற்றில் — ஏற்றுமதிகள் *A*-யின் வெளிநாட்டுப் பொறுப்புகளை (*A*-யின் பாங்குகளில் வெளிநாட்டாரின் வைப்புகளைக்) குறைக்கும்; இறக்குமதிகள் அவற்றை அதிகரிக்கும்.

அன்னியச் செலாவணிகளில் நடக்கும் விவகாரங்களும், அந் நாட்டின் சொந்தச் செலாவணியில் நடப்பவையும் செலுத்துநிலையில் சாதாரணமாகப் பிரித்துக் காட்டப்படும். நம் உதாரணத்தில் *A*-யின் பொருள், பணி ஏற்றுமதிகளில் $ 200 மிலியனுக்குச் சொந்தச் செலாவணியில் பணம் செலுத்தப்படுகிறது என்றும், அவ்வாறே இறக்குமதிகளில் $ 100 மிலியன் என்றும் கொள்வோம். இதன் விளைவாக, *A*-யின் பாங்குகள் வெளிநாட்டாருக்குத் தரவேண்டிய பொறுப்புகள் நிகரமாகக் குறையும். அந்த அளவுக்கு *A*-யின் வெளிநாட்டு நிலுவைகள் உயர்வது குறையும். *A*-யின் நடப்புக் கணக்குப் பட்டியல் 16·3-ல் உள்ளதுபோல இருக்கும்.

## பட்டியல் 16·3

**பற்று** **A நாட்டின் நடப்புக் கணக்கின் செலுத்துநிலை** **வரவு**

| | (மிலியன்) | | (மிலியன்) |
|---|---|---|---|
| சரக்கு இறக்குமதிகள் | $ 1,800 | சரக்கு ஏற்றுமதிகள் | $ 2,300 |
| பணிகள் | 300 | பணிகள் | 200 |
| வெளிநாட்டு நிலுவைகளின் நிகர உயர்வு | 300 | | |
| வெளிநாட்டாருக்குத் தர வேண்டிய நிலுவைகள் நிகரமாகக் குறைந்தது | 100 | | |
| | $ 2,500 | | $ 2,500 |

### நன்கொடைகளைக் கணக்கில் சேர்ப்பது

நடப்புக் கணக்கில் சேர்க்கப்பட்டுள்ள சாதாரண வியாபார விவகாரங்களுக்கும் நன்கொடைகளுக்கும் (donations) ஒரு

வித்தியாசம் உள்ளது. நன்கொடைகள் பணத்துக்காகப் பொருள்களையும் பணிகளையும் மாற்றுவதைக் குறிக்கவில்லை (அல்லது பண்டமாற்று விவகாரங்களில் உள்ளதுபோலப் பொருள்களுக்குப் பொருள்கள் மாற்றுவதையோ, அல்லது நெடுங்காலக் கடன்கள்மூலம் ஏற்றுமதிகளுக்கு நிதி ஏற்பாடு செய்யும்போது கடன் பத்திரங்களுக்குப் பொருள்கள் மாற்றுவதையோகூட நன்கொடைகள் குறிப்பதில்லை). நன்கொடைகள் விஷயத்தில் 'இதற்கு மாற்றாக அது' (quid pro quo) என்பது கிடையாது. ஒரு தனிநபர் அல்லது அரசாங்கம் மற்றொரு தனிநபர் அல்லது அரசாங்கத்துக்குப் பொருள்களையோ, பணிகளையோ, பணத்தையோ தருகின்றனர். ஆனால், அதற்கு ஈடாக ஒன்றையும் பெறுவதில்லை. ஆனாலும், எந்தக் கணக்கு முறையிலும், நடக்கும் எல்லா விவகாரங்களையும் பதிவு செய்ய வேண்டும். ஏதாவது சில உருப்படிகளைக் கொடுத்திருந்தால், அவற்றைக் கணக்கில் சேர்க்கவேண்டும். இதைப் பின்வருமாறு செய்யவேண்டும். கொடுக்கிற அல்லது பெறுகிற பொருளை அதற்குச் சரியான பக்கத்தில் குறித்து, அதற்கு எதிர்ப் பக்கத்தில் அந்த நன்கொடையின் விவரத்தைக் குறிக்கவேண்டும். இது அந்த நன்கொடைக்குக் கணக்கு வைப்பதோடு, கணக்கின் சமநிலையையும் பாதுகாக்கிறது.

உதாரணமாக, ஒரு பணக்கார மனிதன் தன் பெண்ணுக்கு அவளது திருமணத்தை முன்னிட்டு ஒரு வீடும் மனையும் கொடுக்கிறான் என்று கொள்வோம். அவனது சொந்தக் கணக்கில் பின்வருமாறு இது காட்டப்படும் :

| பற்று | | திரு. வெல்ஃபிக்ஸ்டின் கணக்கு | வரவு |
|---|---|---|---|
| பெண்ணுக்குக் கலியாணப் பரிசு | $ 35000 | நிலம், வீடு | $ 35,000 |

(1) திரு. வெல்ஃபிக்ஸ்டு (Mr. Wellfixed) $ 35,000 மதிப்புடைய ஸ்தாவர சொத்தைக் கொடுத்திருக்கிறார். (2) தவிர, அதற்குப் பணமோ வேறு பொருளோ ஈடாகப் பெறாமல், அதைப் பரிசாகக் கொடுத்திருக்கிறார் என்ற உண்மையை இது காட்டுகிறது.

ஒரு நாட்டின் செலுத்துநிலையில் நன்கொடைகள் என்று சேர்க்கப்படுவதில் பலவகை விவகாரங்கள் அடங்கியிருக்கின்றன : படையுதவி, பொருளாதார உதவி, தொழில்நுட்ப உதவி, குடியேறி வந்தவர்கள் அனுப்பும் தொகைகள், திருச்சபைகள் (churches)

செய்யும் தருமம், *CARE* * போன்ற அமைப்புகள் அனுப்பும் உதவித் தொகைகள், மற்றும் கட்டாயமாகச் செலுத்தவேண்டிய நஷ்ட ஈட்டுத் தொகைகள் (reparations). அவை ஒருமுகமான நடவடிக்கைகள் ஆதலின், அவற்றை 'ஒரு பக்க மாற்றுகைகள்' (**unilateral transfers**) என்று சாதாரணமாக அழைப்பதுண்டு.

ஏற்கெனவே விவரித்ததுபோல, ஒரு நாட்டின் செலுத்துநிலையில் இத்தகைய மாற்றுகைகள் பதிவு செய்யப்படும். ஒரு நாடு மற்றென் றுக்குப் படைச் சாதனங்களையோ மூலதனச் சாதனங்களையோ உதவியாகக் கொடுத்திருந்தால், கொடுத்த நாட்டின் செலுத்துநிலையில் வரவுப் பக்கத்தில் இப் பொருள்கள் ஏற்றுமதிகளோடு குறிக்கப்படும். அதற்கு ஈடாகப் பற்றுப் பக்கத்தில், இதற்காகப் பணம் ஏதும் வாங்கவில்லை. ஆனால், இவை நன்கொடைகள் என்பதற்கு ஒரு குறிப்பு எழுதப்படும். உதாரணமாக, *A* நாட்டின் ஏற்றுமதிகளான $ 2,300 மிலியனில் வளர்ச்சி குறைவான நாடுகளுக்குப் பொருளாதார உதவியாகக் கொடுக்கப்பட்ட இயந்திரங்களும் சாதனங்களும் $ 100 மிலியன் மதிப்புடையவை என்று கொள்வோம். இதனால் ஏற்றுமதி களினின்றும் கிடைக்கும் நிகர வருவாய் அதே தொகைக்குக் குறைகிறது. நன்கொடை செய்யப்பட்டதைப் பதிவு செய்ய ஒரு பற்றுக் குறிப்புத் தேவைப்படுகிறது. *A*-யின் செலுத்துநிலை மாற்றப்பட்டுப் பட்டியல் 16·4-ல் உள்ளதுபோலத் தோன்றும்.

அந்த நன்கொடை, பொருள்கள், பணிகளாக முன் உதாரணத் தில் கூறியதுபோலன்றிப் பணமாகக் கொடுக்கப்படுகிறது என்று கொள்வோம். குடியேறி வந்தவர்கள் அனுப்பும் தொகைகளும் சிலவகை அரசாங்க மாற்றுகைகளும் இத்தகையவை. இவையும் கணக்கில் பொருள் நன்கொடைகளைப் போலவே குறிக்கப்படும். *A*-யின் நன்கொடைகள் எல்லாம் தனி நபர்களாலும் தனி நிறுவனங்களாலும் செய்யப்படுகின்றன என்று கொள்வோம். அப்போது, செலுத்துநிலையில் பின்வரும் மாறுதல்தான் காணப்படும். நன்கொடைகள் 'அதிகாரபூர்வமான' (official) என்பதற்குப் பதில் 'தனிப்பட்ட' (private) என்றிருக்கும். இந் நன்கொடைகள் அனைத்தும் உறவினர்கள் அல்லது தரும ஸ்தாபனங்களுக்கு வெளி நாட்டு வைப்புகளை அனுப்பியதாக இருந்தால், நடப்புக் கணக்கின் உபரியான $ 400 மிலியனில் $ 100 மிலியனை *A*-யின் வாசிகள் வெளி நாட்டாருக்குத் தருவதற்காக வாங்கிவிட்டனர் என்பதைக் கணக்குக் குறிப்புப் பதிவு செய்யும். இவர்கள் அதை வாங்காமல் இருந்தால், *A*-யின் குறுகிய கால முதலீட்டுநிலை மேலும் நன்றாக இருக்கும்.

* Cooperative for American Relief to Everywhere.

## பட்டியல் 16·4

**பற்று A நாட்டின் நடப்புக் கணக்கின் செலுத்துநிலை வரவு**

| | (மிலியன்) | | (மிலியன்) |
|---|---|---|---|
| சரக்கு இறக்குமதிகள் | $ 1,800 | சரக்கு ஏற்றுமதிகள் | $ 2,300 |
| பணிகள் | 300 | பணிகள் | 200 |
| வெளிநாட்டு நிலுவைகளில் நிகர உயர்வு | 200 | | |
| வெளிநாட்டாருக்குத் தர வேண்டிய நிலுவைகள் குறைந்தது | 100 | | |
| நன்கொடைகள் : அதிகாரபூர்வமானவை | 100 | | |
| | $ 2,500 | | $ 2,500 |

**மதிப்பீடுகளும் (Estimates) கணக்குகளும்**

அரசாங்கங்கள் பன்னாட்டு விவகாரங்களுக்கு ஒரு கணக்குப் புத்தகத்தை வைத்து அதில் ஒவ்வொரு விவகாரத்தையும் பதிவு செய்தால், அப் புத்தகத்தின் ஒவ்வொரு கணக்கையும் மூடிக்கொண்டே (நிலுவை கண்டுபிடித்துக்கொண்டே) வந்தால், சுலபமாகச் செலுத்து நிலைப் பட்டியலை எழுதிவிடலாம். ஒரு கணக்குக் காலத்தின் முடிவில் (சாதாரணமாக ஓர் ஆண்டின் முடிவில்), அக் கணக்குகளின் சுருக்க அட்டவணை—அதாவது, அயல்நாட்டுச் செலுத்தல்களின் சமநிலை வருவாய்களைத் தரும் ஒவ்வொருவகைக் கணக்கிலும் (வெளிநாடு களுக்கு விற்ற பொருள்களும் பணிகளும் போன்றவை) மொத்தம் எவ்வளவு ஆயிற்று, செலுத்தல்கள் செய்யவேண்டிய ஒவ்வொருவகைக் கணக்கிலும் (வெளிநாட்டாரிடமிருந்து வாங்கிய பொருள்கள், பணிகள் போன்றவை) மொத்தம் எவ்வளவு ஆயிற்று என்ற விவரங்களைக் காட்டும். பணவரவுகளும் செலுத்தல்களும் உண்மையில் பதிவாகும் கணக்கு அல்லது கணக்குகள்—அதாவது, உள்நாட்டிலும் வெளிநாட்டி லும் உள்ள பாங்கு நிலுவைகள்—நிகர மாற்றத்தைமட்டும் காட்டும்.

ஆனால், அவ்வாறு கணக்குப் புத்தகம் எதுவும் வைக்கப்பட்டிருக்க வில்லை. அதற்குப் பதிலாக ஒவ்வொரு பற்று அல்லது வரவு உருப் படியும் மதிப்பிடப்படுகிறது. இம் மதிப்பீடு சில உருப்படிகள் விஷயத்தில் மிகவும் துல்லியமாக இருக்கும்; வேறு சில உருப்படிகள் விஷயத்தில் அவ்வளவு துல்லியமாக இராது. சரக்கு ஏற்றுமதி களையும் இறக்குமதிகளையும் பொறுத்தவரை எண்கள் சாதாரணமாக மிகத் துல்லியமாக இருக்கும். ஏனெனில், பொருள்கள் நாட்டுக்குள்

வரும்போதும், நாட்டைவிட்டுப் போகும்போதும் சுங்க அதிகாரி களுக்குச் சொல்லப்படுகிறது. ஆனால், பிற உருப்படிகளை மதிப்பிடத் தான் வேண்டும். உதாரணமாக, பல நாடுகளில் அந் நாடுகளின் வாசி களின் வெளிநாட்டுப் பிரயாணச் செலவுகளை, திரும்பிவரும் உல்லாசப் பிரயாணிகள் பூர்த்தி செய்துதரும் கேள்விப் பட்டியல்களைக் (questionnaires) கொண்டு, மாதிரி ஆராய்ச்சி (sample survey) மூலம் முடிவு செய்து மதிப்பிடுகிறார்கள். ஒரு நாட்டிற்கு வந்த அயல்நாட்டு உல்லாசப் பிரயாணிகளிடமிருந்து கிடைத்த தொகையை, உள்ளே வரும்போதும் வெளியே போகும்போதும் அவ்விரு சமயங்களிலும் அவர் களிடமிருந்த உள்நாட்டு, வெளிநாட்டுச் செலாவணிகளின் அளவு பற் றிய அறிக்கைகளிலிருந்தோ, பிரயாணிகளின் செக்குகள் (traveller's checks) காசாக்கப்பட்ட மொத்தத் தொகைபற்றி பாங்குகள் தரும் அறிக்கைகளிலிருந்தோ மதிப்பிடலாம். ஒரு நாட்டு பாங்குகளில் வெளி நாட்டார் வைத்துள்ள நிலுவைகள், அந்த பாங்குகள் வெளிநாடுகளில் வைத்துள்ள நிலுவைகள் ஆகியவற்றில் ஏற்படும் மாறுதல்களையும், மற்றும் அவற்றின் மேற்பார்வையில் நடக்கும் விவகாரங்களையும் பற்றித் தெரிவிக்குமாறு அந்த பாங்குகளுக்கு உத்தரவிடப்படலாம். இத்தகைய மதிப்பீடுகளில் பல தவறுகள் ஏற்படக்கூடும் என்பது தெளிவு. உண்மையில் எந்தச் செலுத்துநிலைப் பட்டியலிலும் இரு பக்கங்களும் சமமாக இருக்குமா என்பது சந்தேகமே. எனவே, 'தவறுகளும் விட்டுப்போனவைகளும்' (errors and omissions) என்று ஒரு தொகையைக் குறித்துச் செலுத்துநிலையைச் சமநிலை உடையதாகச் செய்யவேண்டும்.

தவறுகள் ஏற்படுவது தவிர்க்க முடியாததாயினும், அதையே சரியான ஓர் இரட்டைப் பதிவாக எடுத்துக்கொண்டு ஒரு நாட்டின் பன்னாட்டுக் கணக்கை ஆராய்ந்துபார்க்க முடியும். ஏனெனில், ஒரு கணக்குச் சுருக்கம் காட்டக்கூடிய உண்மைகளை அது தோராயமாகக் காட்டுகிறது. எனவே, அதையே ஒரு கணக்குச் சுருக்கமாகக் கருத லாம். சில சமயம் அத் தவறுகளும் விட்டுப்போனவையும் எதனால் நேர்ந்தன என்பதற்குப் புலன்கள் கிடைக்கும். கண்டுபிடிக்க மிகவும் கஷ்டமானவை குறுகிய கால மூலதன விவகாரங்களே. எனவே, அவை நிறைய நடந்திருந்தன என்பதற்கு ஆதாரம் இருந்தால், அவை அனைத்தையும் எண்ணாமல் விட்டுப்போனதுதான் இத் 'தவறுகளும் விட்டுப்போனவையும்' தொகையில் பெரும் அளவுக்குக் காரணமாக இருந்திருக்கும்.

## மூலதனக் கணக்கு

பட்டியல் 16·4-ல் இருந்தபடி $A$-யின் நடப்புக் கணக்கின் செலுத்து நிலையை மீண்டும் பார்ப்போம். பொருள்களும் பணிகளும் ஏற்றுமதி

செய்தது $ 2,500 மிலியன்; அவற்றின் இறக்குமதிகளும், அரசாங்க நன்கொடைகளும் சேர்ந்த தொகையைவிட $ 300 மிலியன் அதிகம். இதனுல் அயல்நாடுகளில் நிலுவைகள் $ 200 மிலியன் அதிகமாயிற்று; அயல்நாட்டினருக்குத் தரவேண்டிய நிலுவைகள் $ 100 மிலியன் குறைந்தது.

வெளிநாட்டில் நிலுவைகள் அதிகமாயின என்ருல், எளிதில் காசாக்கக்கூடிய வெளிநாட்டுச் சொத்துகளை *A* வைத்துள்ள அளவுக்கு அதிகமாயின; வெளிநாட்டாருக்குத் தரவேண்டிய நிலுவைகள் குறைந்தன என்ருல், அவர்களுக்குத் தரவேண்டிய குறுகிய காலப் பொறுப்புகள் குறைந்தன என்று ஆயிற்று. சொத்துகளும் பொறுப்பு களும் ஒரு நாட்டின் மூலதனக் கணக்கின் பகுதிகளல்லவா? அவை *A*-யின் நடப்புக் கணக்கில் என்ன செய்துகொண்டிருக்கின்றன? அவை ஒரு நாட்டின் மூலதன நிலையைப் பிரதிபலிப்பதால், அவை மூலதனக் கணக்கைச் சேர்ந்தவை என்பது தெளிவு. அவற்றின் சரியான இடத்துக்கு அவற்றை மாற்றுவோம். இப்போது *A*-யின் செலுத்துநிலைப் பட்டியல் 16·5-ல் இருக்கும் உருவத்தைப் பெறும்.

## பட்டியல் 16·5

| பற்று | A-யின் செலுத்துநிலை | | வரவு |
|---|---|---|---|
| | **நடப்புக் கணக்கு** | | |
| | (மிலியன்) | | (மிலியன்) |
| சரக்கு இறக்குமதிகள் | $ 1,800 | சரக்கு ஏற்றுமதிகள் | $ 2,300 |
| பணிகள் | 300 | பணிகள் | 200 |
| நன்கொடைகள்: | | | |
| அதிகாரபூர்வமானவை | 100 | | |
| | 2,200 | | 2,500 |
| | **மூலதனக் கணக்கு** | | |
| குறுகிய கால மூலதனம் (நிகர மாறுதல்) | 300 | | |
| | $ 2,500 | | $ 2,500 |

மூலதன உருப்படிகளைக் கீழே மூலதனக் கணக்குக்குக் கொண்டு வந்ததோடு, அவற்றை ஒரே குறிப்பாக இணைத்துக் 'குறுகிய கால மூலதனம்' என்று மறுபெயரிட்டோம். அது காட்டும் நிகர மாறுதல், குறுகிய கால வெளிநாட்டுச் சொத்துகள் அதிகரித்த $ 200 மிலியனை

யும், குறுகிய கால வெளிநாட்டுப் பொறுப்புகள் குறைந்த $ 100 மிலியனையும் குறிக்கிறது.

### நடப்புக் கணக்கின் நிலுவையும் வெளிநாட்டு முதலீடும்

*A* நாடு இறக்குமதி உருப்படிகளுக்காகவும் நன்கொடைகளுக் காகவும் தரவேண்டியதைவிட ஏற்றுமதி உருப்படிகள்மூலம் அதற்குக் கிடைக்கும் வருவாய்கள் அதிகம் ஆதலின், அதன் நடப்புக் கணக்கு உபரியாக (surplus) இருப்பதாகச் சொல்கிறோம். (எதிர்த்திசையில், அதாவது, ஏற்றுமதியைவிட இறக்குமதி உருப்படிகள் அதிகமாக இருந்தால், அதில் பற்றுக்குறை (deficit) இருப்பதாகச் சொல்கிறோம்.) 14ஆவது அத்தியாயத்தில் எல்லா நடப்புக் கணக்கு அம்சங்களையும் கொண்டவை என்ற பரவலான அர்த்தத்தில், ஒரு நாட்டின் ஏற்று மதிக்கும் இறக்குமதிக்கும் உள்ள வித்தியாசம் அதன் வெளிநாட்டு முதலீடாகும் என்று அறிந்தோம்: $I_f = X - M$. நடப்புக் கணக்கில் *A*-யின் உபரி, உலகின் பிற பகுதிகளுக்கு எதிராக அதன் (குறுகிய கால) மூலதன நிலைமையில் ஓர் அபிவிருத்திக்கு அடிப்படை யாக உள்ளது, அல்லது நேர்கணியப் பன்னாட்டு முதலீட்டுக்கு அடிப்படையாக உள்ளது என்பதை இங்குப் பார்க்கிறோம்.

மொத்தச் சேமிப்பு, உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் செய்யப்படும் மொத்த முதலீட்டுக்குச் சமம் என்பதையும் பாருங்கள்: $S = I_d + I_f$. இச் சமன்பாட்டைச் சிறிது மாறுபட்ட உருவிலும் நாம் கண்டிருக் கிறோம்: $S - I_d = X - M$. ஒரு நாடு வெளிநாட்டு முதலீட்டைச் செய்துகொண்டிருந்தால் அதன் உள்நாட்டு முதலீட்டைவிட அதன் சேமிப்பு அதிகமாக இருக்கவேண்டும் என்பதை இச் சமன்பாடு கூறு கிறது; மொத்தச் சேமிப்பில் ஒரு பகுதி உள்நாட்டு முதலீடாகிறது; அதாவது, உள்நாட்டு முதலீட்டுக்குத் தேவையான பணத்தைத் தருகிறது. அதற்கு அதிகமான சேமிப்புகள், நாம் எடுத்துக்கொண்ட உதாரணத்தில், வெளிநாட்டு நிலுவைகளையோ அல்லது உள்நாட்டில் வெளிநாட்டார் வைத்துள்ள நிலுவைகளையோ, அல்லது பொன்னையோ பெறப் பயன்படுகின்றன. ஒரு நாட்டின் செலுத்துநிலை இருக்கும் நிலை மையின் விளைவே இத்தகைய வெளிநாட்டு முதலீடு; இது எண்ணமல் நிகழ்வது; மற்றொன்றின் விளைவாக ஏற்படுவது; தன்னிச்சையான தன்று.

வேண்டுமென்றே வெளிநாட்டில் முதலீடு செய்வது லாபகரமாக இருக்கக்கூடிய சூழ்நிலை ஏற்படவும் கூடும்.[1] ஒரே மாதிரியான இரு

[1] 19ஆவது அத்தியாயத்தில், ஒரு நாட்டின் செலுத்துநிலை நடப்புக் கணக்கில் தொடர்ந்து சில காலம் உபரி இருந்தால், அதன் விளைவாகத் தோன்றும் சக்திகள் வெளிநாட்டு முதலீட்டுக்கு வழிசெய்வதை ஆராய்வோம்.

முதலீடுகளில் வெளிநாட்டின் லாபம் உள்நாட்டின் லாபத்தைவிட அதிகமாக இருந்தால், $A$-யின் முதலீட்டுக்காரர்கள் வெளிநாட்டுப் பத்திரங்களையும் வேறு லாபம் தரும் சொத்துகளையும் வாங்க ஒப்புக் கொள்வர். வெளிநாட்டு நிலுவைகளாகவும் பொன்னுகவும் குறுகிய கால நீர்த்த (எளிதில் காசாக்கக்கூடிய—liquid) சொத்துகளை வைத்திருப் பதற்குப் பதிலாக, அத்தகைய பத்திரங்களை வாங்குவதற்கு, $A$-யின் உள்நாட்டு முதலீட்டைவிட அதிகமான சேமிப்புத் தொகை பயன் படுத்தப்படும். இந்தச் சூழ்நிலை ஏற்பட்டு, $A$-யின் முதலீட்டுக்காரர்கள் வெளிநாட்டுப் பங்குகள், கடன் பத்திரங்களில் \$ 250 மிலியனை முதலீடு செய்யத் தாமாகவே முன்வருகிருர்கள் என்று வைத்துக்கொள்வோம். இப்போது, $A$-யின் சேமிப்பில் இப் பகுதி நெடுங்கால வெளிநாட்டு முதலீட்டை நாடிச் செல்கிறது. எனவே, $A$-யின் செலுத்துநிலையில், மூலதனக் கணக்கில் இரு குறிப்புகள் இருக்கும் :

| | |
|---|---|
| குறுகிய கால மூலதனம் (நிகர மாற்றம்) | 50 |
| நெடுங்கால மூலதனம் | 250 |

இப்போதும் $A$-யின் வெளிநாட்டு முதலீடு, அதன் நடப்புக் கணக்கின் உபரிக்குச் சர்வசமம் ; $I_f = X - M$. இப்போது, தானே ஒரு கேள்வி எழுகிறது. ஒரு குறிப்பிட்ட செலுத்துநிலைக் காலத்தில் ஒரு நாடு வெளிநாட்டில் முதலீடு செய்யக்கூடிய தொகையின் மீற முடி யாத உச்சவரம்பு, அந் நாட்டின் நடப்புக் கணக்கின் உபரித்தொகை யின் அளவுதானு ? ‘ வெளிநாட்டு முதலீடு ’ என்பதற்குமுன் ‘ நிகர ’ என்ற உரிச்சொல்லைச் சேர்த்தால், விடை ‘ ஆம் ’தான்.

அப்படியாயின், $A$-யின் செலுத்துநிலை குறிப்பிடும் காலத்தில் (அதாவது, ஓர் ஆண்டுக் காலத்தில்), வெளிநாட்டுப் பத்திரங்கள் தரும் லாபம் மிகவும் கவர்ச்சிகரமாக இருப்பதால், $A$யின் முதலீட்டுக்காரர்கள் \$ 250 மிலியனுக்குப் பதிலாக \$ 500 மிலியனை முதலீடு செய்ய விரும்பு கிருர்கள் என்று கொள்வோம். $A$-யின் நடப்புக் கணக்கின் உபரி யிலிருந்து நெடுங்கால முதலீடுகளை வாங்க முடியும் ; ஆனுல், \$ 300 மிலியனுக்குத்தான் முடியும். தாம் விரும்பிய அளவுக்குப் பத்திரங்களை வாங்க, மேலும் \$ 200 மிலியனுக்கு $A$-யின் முதலீட்டாளர்கள் எங்கே போவார்கள் ? அவர்களுக்கு இருக்கும் ஒரே வழி, தம் நாட்டுப் பணத்தைக் கொண்டு, தம் நாட்டு பாங்குகள் முன்னர் வாங்கி இப்போதும் வைத்திருக்கும் வெளிநாட்டு நிலுவைகளை வாங்கலாம்,[2]

[2] தனியார்துறை பாங்குகள் ஒரு குறைந்தபட்ச அளவுக்குத்தான் வெளி நாட்டு வைப்புகளை வைத்திருப்பது வழக்கம். எனவே, A-யின் மத்திய பாங்கிட மிருந்து ‘ அதிகாரபூர்வமான ’ வெளிநாட்டு நிதிகளைத்தான் வாங்க வேண்டி யிருக்கும். மத்திய பாங்குகள் வெளிநாட்டு வைப்புகளைப் பெரும் அளவுக்கு வைத் திருக்கின்றன. அவற்றை விரைவில் பெறவும் அவற்ருல் முடியும்.

அல்லது பொன்னை வாங்கி ஏற்றுமதி செய்யலாம்; அல்லது, வெளி நாட்டு பாங்குகள் ஒப்புக்கொண்டால், $A$-யிலுள்ள பாங்கு நிலுவைகளை வேண்டுமான பத்திரங்களாக நேரிடையாக மாற்றிக்கொள்ளலாம். இவ் விவகாரங்கள் முடிந்தபின் $A$-யின் அயல்நாட்டுச் செலுத்துநிலைப் பட்டியல் 16·6-ல் உள்ளதுபோல இருக்கும்.

## பட்டியல் 16·6

| பற்று | A-யின் செலுத்துநிலை | | வரவு |
|---|---|---|---|
| | **நடப்புக் கணக்கு** | | |
| | (மிலியன்) | | (மிலியன்) |
| சரக்கு இறக்குமதிகள் | $ 1,800 | சரக்கு ஏற்றுமதிகள் | $ 2,300 |
| பணிகள் | 300 | பணிகள் | 200 |
| நன்கொடைகள் : | | | |
| அதிகாரபூர்வமானவை | 100 | | |
| | 2,200 | | 2,500 |
| | **மூலதனக் கணக்கு** | | |
| நெடுங்கால மூலதனம் | 500 | குறுகிய கால மூலதனம் (அதிகாரபூர்வமானது) | 150 |
| | | பொன் ஏற்றுமதிகள் | 50 |
| | $ 2,700 | | $ 2,700 |

இவ்வாறு அயல்நாட்டுப் பத்திரங்களை வாங்குவதானல் இப்போதுள்ள ஒரு குறுகிய கால வெளிநாட்டுச் சொத்து, ஒரு நெடுங்காலச் சொத்தாக மாற்றப்படுகிறது, அல்லது ஒரு நெடுங்கால வெளிநாட்டுச் சொத்துக்காக ஒரு குறுகிய கால வெளிநாட்டுப் பொறுப்பு ஏற்படுகிறது. அந்த நாட்டின் மொத்த வெளிநாட்டுச் சொத்து, பொறுப்புகளில் நிகரமாக ஒரு மாறுதலும் ஏற்படவில்லை. அதன் நிகர வெளிநாட்டு முதலீடு ஒரு டாலர் அளவுக்குக்கூட அதிகரிக்கவில்லை. ஒரு நாட்டின் செலுத்துநிலை நடப்புக் கணக்கு உபரிக்குச் சமமான அளவுக்குதான் நிகரமாக அது வெளிநாடுகளில் முதலீடு செய்ய முடியும்.

ஒரு நாட்டின் பொருள், பணி இறக்குமதிகள் அவற்றின் ஏற்றுமதிகளைவிட அதிகமாக இருப்பின், அதன் செலுத்துநிலை நடப்புக் கணக்கில் பற்றுக்குறை இருக்கிறது என்கிறோம். எனவே, அத்தகைய நாட்டின், அதாவது, $A$-யின் வெளிநாட்டு முதலீடு எதிர்க்கணியத் தொகையாக இருக்கும் என்பது தெளிவு. $S-I_d=X-M$ சமன்பாட்டை மீண்டும் நோக்குவோம். அதன் உள்நாட்டு முதலீடு அதன் உள்

நாட்டுச் சேமிப்புகளைவிட அதிகமாக இருக்கும். அயல்நாட்டார் இந் நாட்டில் முதலீடு செய்துகொண்டிருக்கிறார்கள். இந்த முதலீடு அவர்கள் வேண்டுமென்று செய்யாமல் தானே ஏற்படலாம். இம் முதலீட்டால் அவர்கள் மேலும் பாங்கு நிலுவைகளையும் பொன்னையும் பெறுகிறார்கள், அல்லது $A$-க்குத் தரவேண்டிய அவர்களுடைய குறுகிய காலப் பொறுப்புகள் குறைகின்றன; இந்தக் குறுகிய காலச் சொத்துகளை வேண்டுமென்றே நெடுங்கால முதலீடுகளாக அவர்கள் மாற்றிக் கொள்ளலாம்.

**எந்தச் சொற்களை உபயோகிப்பது ?**

நெடுங்கால வெளிநாட்டு முதலீடு ஏற்படும்போது, அப்போதோ, அதற்கு முந்தியோ பெற்ற வெளிநாட்டு நிலுவைகளையோ அல்லது பொன்னையோ அல்லது தன் பாங்குகளில் உள்ள வைப்புகளையோ கொடுத்து, அவற்றுக்கு மாற்றாக நெடுங்கால அல்லது காலம் வரையறுக்கப்படாத பங்குகள், கடன் பத்திரங்கள் அல்லது சொத்து மூலதனத்தை முதலீடு செய்யும் நாடு பெறுகிறது. மூலதனக் கணக்கில் பற்றாகப் 'பத்திர இறக்குமதி' (security imports) என்று செலுத்துநிலைப் பட்டியலில் இதைக் குறிப்பதுதான் சரியானதாகும். இப்படி எழுதுவதன் நன்மை யாதெனில், என்ன இறக்குமதி ஆகிறது என்பதை அது குறிப்பாகக் கூறுகிறது; அது இறக்குமதியாதலின் அதற்குப் பணம் செலுத்த வேண்டும் என்பதையும் அது கூறுகிறது. அதற்கு இணையான வரவுப் பக்கக் குறிப்பு, வெளிநாட்டு நிலுவை அல்லது பொன்னிலும் (குறைகிறது) அல்லது அயலாருக்குச் சொந்தமான உள்நாட்டு நிலுவைகளிலும் (அதிகரிக்கிறது) செய்யப்படும். இந் நிலுவைகள் குறுகிய கால மூலதனம் என்று ஏற்கெனவே கூறியுள்ளோம். எனவே, இவ்வகை விவகாரத்தில் முதலீடு செய்யும் நாட்டின் நெடுங்காலச் சொத்துகள் அதிகரிக்கின்றன; அதன் குறுகிய காலச் சொத்துகள் குறைகின்றன (அல்லது குறுகிய காலப் பொறுப்புகள் அதிகரிக்கின்றன).

ஒரு நெடுங்காலக் கடன் அல்லது முதலீட்டைப் 'பத்திர இறக்குமதிகள்' என்று கணக்கில் பற்றுவைப்பது ஏற்றதொரு குறிப்பாக இருப்பினும், சாதாரணமாக அப்படி எழுதப்படுவதில்லை. பல ஆசிரியர்கள் 'நெடுங்கால மூலதன ஏற்றுமதி' என்ற சொற்றொடரைப் பிரயோகிக்கிறார்கள். மூலதனம் எத் திசையில் ஓடுகிறது என்பதை இது காட்டுகிறது. இதனால் ஒரு குழப்பம் ஏற்படலாம். பொருள்களை ஏற்றுமதி செய்தால் ஏற்றுமதியாளனுக்குப் பணம் வரும். ஆனால், மூலதன ஏற்றுமதி செய்தால் ஏற்றுமதியாளன் பணம் தரவேண்டும். நடுநிலையான சொற்றொடராகிய 'நெடுங்கால மூலதனம்' என்பதைப் பொதுத்தலைப்பாகப் பன்னாட்டுச் செலாவணி நிதி உபயோகித்து, அதன்

கீழ்ப் பலவகையான பன்னாட்டு மூலதன விவகாரங்களைத் தருகிறது. குறிப்பிட்ட நாடு வெளிநாட்டுக்குக் கடன் கொடுத்தால், அதாவது, அங்கு முதலீடு செய்தால்—அதாவது, மூலதனத்தை ஏற்றுமதி செய்தால்—செலுத்துநிலையின் பற்றுப் பக்கத்தில் அதுபற்றிய குறிப்புகள் வரும். எவ்வகையிலும் கடன்வாங்கிய, அதாவது, மூலதனம் இறக்குமதி செய்த விவகாரங்களில் அவை வரவுப் பக்கத்தில் குறிக்கப்படும்.

### நெடுங்கால முதலீட்டின் வகைகள்

நெடுங்கால முதலீடு முக்கியமாக மூன்று வகைப்படும்: நேரிடையான முதலீடு, நிர்வாக உரிமை தராத முதலீடுகள் (portfolio investment), கடன் தீர்த்தல் (amortization); முதலீடு செய்வோருக்கு நிர்வாக உரிமை தரும் வெளிநாட்டு நிறுவனங்களின் பங்குகளும் கடன் பத்திரங்களும் வாங்குவதும்; அந்நிறுவனங்களுக்குச் சொந்தமாகிற நிலம், கட்டடங்கள் அல்லது பிற ஜட சொத்துகளும் நேரிடை முதலீடுகள். அரசாங்கக் கடன்கள், முதலீடு செய்வோருக்கு நிர்வாக உரிமை தராத கம்பெனிப் பத்திரங்கள் போன்ற பிற எல்லாப் பங்குகளையும் கடன் பத்திரங்களையும் வாங்குவது போர்ட்போலியோ முதலீடு. வெளிநாட்டாருக்கு முன்னர் விற்றிருந்த பத்திரங்களைத் திருப்பிவாங்குதல் அல்லது தீர்ப்பது கடன் தீர்த்தல் ஆகும். முதல் இருவகை முதலீடுகளைப் போலவே இதிலும் முதலீட்டுக்காரர்கள் மூலதனத்தை ஏற்றுமதி செய்து பத்திரங்களை இறக்குமதி செய்கிறார்கள்; ஆனால், இறக்குமதியாகும் பத்திரங்கள் வெளிநாட்டுப் பத்திரங்கள் அல்ல; முன்னர் வெளிநாட்டவருக்கு விற்கப்பட்டு இப்போது திருப்பி வாங்கப்படும் உள்நாட்டுப் பத்திரங்கள் அவை.

ஒரு வகை நேரிடை முதலீடு விசேஷமானது; அதை நன்கு கவனிக்க வேண்டும். ஓர் அமெரிக்கக் கம்பெனி வெளிநாட்டிலுள்ள தன் கிளைத் தொழிற்சாலைக்கு எந்திர சாதனங்களை ஏற்றுமதி செய்வதாகக் கொள்வோம். அமெரிக்காவின் செலுத்துநிலையில் இப் பொருள்கள் ஏற்றுமதிகளுடன் பதிவாகும்; அப்படியாயின், ஏற்றுமதி செய்யும் கம்பெனிக்குப் பணம் வரவேண்டும். ஆனால், அவ்வாறு பணம் ஒன்றும் அதற்கு வருவதில்லை. அதற்குப் பதிலாக வெளிநாட்டில் அதற்குச் சொந்தமாக உள்ள சொத்துகளின் மதிப்பு உயருகிறது. நேரிடை முதலீட்டின்கீழ் இது ஒரு பற்றுக் குறிப்பாகக் காட்டப்படும்.

### குறுகியகால மூலதனப் பெயர்ச்சிகள்

நடப்புக் கணக்கில் உபரி அல்லது பற்றுக்குறையின் விளைவாக ஒரு நாட்டின் குறுகியகால மூலதன நிலையில் நிகர உயர்வு அல்லது தாழ்வில் குறுகியகால மூலதனப் பெயர்ச்சி ஏற்படுவதை ஏற்கெனவே-

பார்த்திருக்கிறோம்.[3] ஆனால், நெடுங்கால மூலதனப் பெயர்ச்சிகளைப் போலவே, குறுகியகால மூலதனப் பெயர்ச்சிகளும் அவற்றுக்காகவே தன்னிச்சையாக மேற்கொள்ளப்படுவதும் உண்டு.

அவற்றுக்குக் காரணமான குறிக்கோள்களைப் பொறுத்துக் குறுகிய கால மூலதன விவகாரங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். (1) உள்நாட்டில் அத்தகைய குறுகிய கால முதலீடுகளில் கிடைப்பதை விட அதிகமான லாபம் சம்பாதிக்க முடிவதால் (கருவூல உண்டியல்கள், வாணிப உண்டியல்கள், பாங்கு உண்டியல்கள் ஆகிய வெளி நாட்டுக் குறுகிய கால முதலீடுகளை ஒருவன் வாங்க விரும்பலாம். இத் தகைய மூலதன விவகாரங்கள் வருமானக் குறிக்கோளுடையவை. (2) ஒரு குறிப்பிட்ட நாட்டின் செலாவணியின் பன்னாட்டு மதிப்பில் எதிர்பார்க்கப்படும் மாறுதல்களை (அதாவது, அச் செலாவணியின் நாணயமாற்று வீதத்தில் மாறுதல்களை) மனத்தில் கொண்டு அச் செலா வணியின் விலை குறைவாகத் தோன்றும்போது அதை வாங்கியும், அதிகமாகத் தோன்றும்போது விற்றும் லாபம் சம்பாதிக்கச் சிலர் முன் வருவார்கள். இத்தகைய விவகாரங்கள் ஊக வாணிபத்தைச் சேர்ந் தவை. (3) போர், அரசியல் குழப்பம் அல்லது பண வீக்கத்துக்குப் பயந்து ஒரு நாட்டின் வாசிகளோ அந்நாட்டில் சொத்துகளை வைத் திருக்கும் அயல்நாட்டினரோ நிலையான சொத்துகளைக் காசாக்கி இவற்றையும் பிற நீர்த்த சொத்துகளையும் (liquid assets) வெளிநாடு களுக்கு மாற்றக்கூடும். இத்தகைய விவகாரங்கள் பயத்தை அடிப் படையாகக் கொண்டவை.

## குறுகியகால மூலதனப் பெயர்ச்சிகளும் அயல்நாட்டுச் செலுத்து நிலையும்

ஒரு குறுகியகால மூலதனப் பெயர்ச்சியின் குறிக்கோள் எதுவாக இருப்பினும், ஒரு நாட்டின் செலுத்துநிலையை அது ஒரே மாதிரிதான் பாதிக்கும். உதாரணமாக, ஃபிரான்ஸில் வசிப்பவர்கள் அமெரிக்காவில்

[3] உண்மையில், நடப்புக் கணக்கில் ஒவ்வொரு விவகாரமும், இன்னமும் சொல்லப்போனால், எந்த வகை விவகாரமும் நடப்புக்காலத்தில் தீர்க்கப்படும்போது, அதாவது, அதற்குப் பணம் செலுத்தப்படும்போது ஒரு குறுகியகால மூலதனப் பெயர்ச்சி ஏற்படுகிறது. ஏனெனில், இவ் விவகாரங்கள் உள்நாடு அல்லது வெளி நாடுகளில் உள்ள பாங்கு வைப்புகள்மூலம் தீர்க்கப்படுகின்றன. பாங்கு வைப்பு களோ அவை வைத்துள்ள பாங்குகளுக்குப் பொறுப்பு ; அவற்றை வைத்திருப்பவருக் குச் சொத்து. நடப்புக்கணக்கு விவகாரங்களின் விளைவாக ஏற்படும் வருவாய்கள் செலுத்துகைகளின் பெரும் பகுதி ஒன்றை ஒன்று ஈடு செய்கின்றன. எனவே, நிகர வருவாய் அல்லது நிகரச் செலுத்தல்களை மட்டும் நாம் கவனித்தோம். இவையே ஒரு நாட்டின் குறுகியகாலமூலதன நிலையின் நிகர மாற்றத்தைப் பிரதி பலிக்கின்றன.

குறுகியகாலச் சொத்துகளை வாங்குவதாக எடுத்துக்கொள்வோம். (அவை கருவூல உண்டியல்களாக இருக்கலாம் அல்லது வெறும் டாலர் வைப்புகளாக இருக்கலாம்.) அப்போது ஃபிரான்ஸின் செலுத்துநிலை யில் இச் சொத்துகள் வாங்கப்பட்டது குறுகியகால மூலதனம் என்று பற்று வைக்கப்பப்படும். எது வாங்கப்பட்டது என்பதை அது குறிக் கிறது. (இது பன்னாட்டுச் செலாவணி நிதியின் வழக்கம்; வேறு சிலர் அந்தப் பற்றுக் குறிப்பை 'குறுகியகால மூலதன ஏற்றுமதி' என்று கூறுவர்.) அதற்கு இணையான செலுத்தலை அயல்நாட்டுச் செலுத்து நிலையில் வரவுப் பக்கம் எழுதவேண்டும். நியூயார்க்கில் ஃபிரெஞ்சுக் காரருக்குச் சொந்தமான வைப்புகளைக் குறைத்தோ அல்லது பாரிஸில் வெளிநாட்டாருக்குச் சொந்தமான வைப்புகளை அதிகரித்தோ இக் குறிப்பைப் பதிவு செய்யவேண்டும். இவ்வாறு, ஒரு குறுகியகால வெளிநாட்டுச் சொத்துக்கு ஈடாக மற்றொன்றைப் பண்டமாற்றுச் செய் வதுதான் ஒரு தன்னிச்சையான குறுகியகால மூலதனப் பெயர்ச்சியின் இறுதி விளைவாகும்; அல்லது இதனால் ஒரு வெளிநாட்டுச் சொத்துக் கும், வெளிநாட்டாருக்குத் தரவேண்டிய ஓர் உள்நாட்டுப் பொறுப்புக் கும் பண்டமாற்றுச் செய்யப்படலாம்.

இது இத்துடன் நிற்கவில்லை. அவ் வெளிநாட்டுச் சொத்துகள் யாருக்குச் சொந்தம் என்பது முக்கியம். குறுகியகால மூலதனப் பெயர்ச்சியால் அந்தச் சொத்துகளின் உடைமை உரிமை மாறுவது ஒரு நாட்டிற்குப் பிரதிகூலமாக இருக்கலாம். இதை விளக்க, மீண்டும் $A$-யின் அயல்நாட்டுச் செலுத்துநிலையை எடுத்து ஆராய்வோம்.

நாம் அதைக் கடைசியாக விட்ட இடத்தில், $A$-யின் மக்கள் வெளி நாடுகளில் நெடுங்காலத்துக்கு $ 500 மிலியனை முதலீடு செய்துகொண் டிருந்ததை $A$-யின் மூலதனக் கணக்குக் காண்பித்தது. இம் முதலீட் டுக்குத் தேவையான நிதிவசதி, $A$-யின் ஏற்றுமதிகள் இறக்குமதிகளை விட அதிகமாக இருந்ததனால் $ 300 மிலியனுக்குக் கிடைத்த குறுகியகால வெளிநாட்டுச் செலாவணியிலிருந்தும், மத்திய பாங்கு தந்த 'அதி காரபூர்வமான' நிதிகளும், பொன் ஏற்றுமதியும் சேர்ந்த $ 200 மிலிய னிலிருந்தும் வந்தது.

இனி, $A$-யில் வழங்கும் வீதங்களைவிட ஒரு வெளிநாட்டு நிதிக் கேந்திரத்தில் (உதாரணமாக, $B$-யில்) குறுகியகால வட்டி வீதங்கள் அதிகம் என்று கொள்வோம். $A$-யின் வணிக பாங்குகள் அந்தச் செலாவணி மார்க்கெட்டில் $ 50 மிலியனைக் கடன் தர முடிவு செய்கின் றன. தம் சேமநிதி வைப்பின்மீது செக்கு எழுதி மத்திய பாங்கிட மிருந்து வெளிநாட்டு நிலுவைகளை அவை வாங்கி, அந்த $B$ நிலுவை

களைக் கருவூல உண்டியல்களிலோ வேறு ஏற்ற குறுகிய காலச் சொத்து களிலோ முதலீடு செய்யும்.

$A$-யின் செலுத்துநிலையில் இதன் விளைவாக ஒன்றும் ஏற்பட வில்லை; மத்திய பாங்கு வைத்திருந்த வெளிநாட்டுக் குறுகியகாலச் சொத்துகள் இப்போது வணிக பாங்குகளுக்குச் சொந்தமாக இருக் கின்றன; அவ்வளவுதான். இன்று பெரும்பாலான நாடுகளில் வெளி நாட்டு விவகாரங்களில் ஈடுபட்டுள்ள வணிக பாங்குகள் செலாவணி அதிகாரிகளினால் கட்டுப்பாடு செய்யப்படுகின்றன. பாங்கு வைப்பு களுக்குப் பதிலாக $B$-யின் கருவூல உண்டியல்களாக அவ் வெளிநாட்டுச் சொத்துகள் இருப்பதனால் பாதகம் ஒன்றும் இல்லை. அந்த உண்டி யல்களும் வைப்புகளைப் போலவே எளிதில் காசாக்கக்கூடியவையே.

ஆனால், மூலதன ஏற்றுமதியை பாங்குகள் செய்யாமல் தனி நபர்கள் செய்தால் அவ் விஷயம் வேறு; ஏனெனில், அப்போது செலாவணி அதிகாரிகளின் கட்டுப்பாட்டில் இதுவரை இருந்த வெளிநாட்டு நிலுவைகள் அவர்களது கட்டுப்பாட்டுக்கு அப்பாற்பட்ட தனிநபர் களின் கைக்கு மாறிவிடுகின்றன. இந் நிலுவைகள் இனி அந் நாட்டின் பன்னாட்டுச் சேமநிதிகளின் (International reseves )ஒரு பகுதியாக இல்லை (பின்னால் பார்க்க); தேவை வரும்போது செலாவணி அதிகாரி களுக்கு அவை கிடைக்கா.

வட்டி விகிதங்களின் வித்தியாசத்தைப் பயன்படுத்திக் குறுகிய கால மூலதனத்தை ஏற்றுமதி இறக்குமதி செய்பவர்களுள் வேறெல்லா ரையும்விட வணிக பாங்குகளே முக்கியமானவை. தனி நபர்கள் செய்யும் குறுகியகால மூலதனப் பெயர்ச்சிகள், ஊக வாணிபம் அல்லது பயம் காரணமாகத்தான் பெரும்பாலும் ஏற்படுகின்றன. அவை மிகச் சிறிய அளவில் இருந்து மத்திய பாங்கு வைத்திருக்கும் வெளிநாட்டு நிலுவைகளை அதிகமாகக் குறைக்காமல் இருந்தால் அவற்றைப் பொருட்படுத்தத் தேவையில்லை. அவை பெரிய அளவில் இருந்தாலோ, கடுமையான பிரச்னைகளை அவை எழுப்பக்கூடும்.

நம் செலுத்துநிலை குறிப்பிடும் ஆண்டுக் காலத்தில் $A$-யில் மோசமான பணவீக்கம் ஏற்பட்டு, அதன் பலனாக ஒரு மூலதன ஓட்டம் ஏற்படுகிறது எனக் கோள்வோம். $A$-யில் உள்ள தனி நபர்களும் கம்பெனிகளும் \$ 500 மிலியன் மதிப்புக்கு உள்நாட்டுத் தொகைகளை பணவீக்கம் இல்லாத வெளிநாட்டுக் கேந்திரங்களில் நிலுவைகளாக மாற்ற விரும்புகிறார்கள். இதைச் செய்ய அவர்கள் உள்நாட்டுச் செலாவணியையும் வைப்புகளையும் வணிக பாங்குகளிடம் அளிக்க வேண்டும். அவை தினப்படி நடைமுறைத் தேவைக்கான நிலுவைகளை

மட்டுமே வெளிநாடுகளில் வைத்துள்ளன என்று கொண்டால், தேவைப் படும் வெளிநாட்டு நிலுவைகளை வணிக பாங்குகள் மத்திய பாங்கிட மிருந்து பெறவேண்டும். $A$-யின் பன்னாட்டு விவகாரங்கள்மீது கட்டுப் பாடுகள் இல்லையெனில், மத்திய பாங்கு தேவைப்பட்ட நிலுவைகளைத் தன்னால் இயன்ற அளவு அளிக்கும். ஆனால், 16·6 பட்டியலில் பதிவானதுபோல அதிகாரபூர்வமான நிலுவைகளில் $ 150 மிலியனை மாற்றிய பின்னர், மீதி இருக்கும் மத்திய பாங்கின் வெளிநாட்டு வைப்பு களின் மதிப்பு $ 300 மிலியன்தான் என்று கொள்வோம். இதை மத்திய பாங்கு கொடுத்துவிடுகிறது. தன் சேமநிதியிலிருந்து பொன்னை எடுத்து வெளிநாடுகளுக்கு அனுப்பித்தான் எஞ்சிய $ 200 மிலியனை அது அளிக்க முடியும். அப் பொன் வெளிநாட்டில் வைப்பாகிறது. இவ் வைப்புகளும் மூலதனம் ஏற்றுமதி செய்வோருக்கு விற்கப்படுகிறது. $A$-யின் அயல்நாட்டுச் செலுத்துநிலை 16·7 பட்டியலில் உள்ளதுபோல மாறும்.

## பட்டியல் 16·7

| பற்று | $A$-யின் அயல்நாட்டுச் செலுத்துநிலை | | வரவு |
|---|---|---|---|
| | **நடப்புக் கணக்கு** | | |
| | (மிலியன்) | | (மிலியன்) |
| சரக்கு இறக்குமதிகள் | $ 1,8000 | சரக்கு ஏற்றுமதிகள் | $ 2,300 |
| பணிகள் | 300 | பணிகள் | 200 |
| நன்கொடைகள் : | | | |
| அதிகாரபூர்வமானவை | 100 | | |
| | 2,200 | | 2,500 |
| | **மூலதனக் கணக்கு** | | |
| குறுகிய கால மூலதனம் (தனியார்) | 500 | குறுகிய கால மூலதனம் (அதிகாரபூர்வமானது) | 450 |
| நெடுங்கால மூலதனம் | 500 | பொன் ஏற்றுமதிகள் | 250 |
| மொத்தம் | $ 3,200 | மொத்தம் | $ 3,200 |

தனி நபர்கள் $ 500 மிலியனுக்கு குறுகியகால மூலதனத்தை அனுப்பியிருக்கிறார்கள். இதை அத்தொகைக்கான பற்றுக் குறிப்புக் காண்பிக்கிறது. இந்த நபர்கள் பெற்ற வெளிநாட்டு நிலுவைகளை அது காட்டுகிறது. முன்னர் வரவுப் பக்கத்தில் ‘குறுகியகால மூலதனம்

(அதிகார பூர்வமானது) $ 150 மிலியன் ' என்றிருந்த குறிப்பு $ 300 மிலியன் அதிகமாகி உள்ளது. *A*-யின் தனிநபர்களுக்கு மத்திய பாங்கு முன்னர் வைத்திருந்த வெளிநாட்டுச் சொத்துகள் மாற்றப்பட்டதை அது காட்டுகிறது. முன்னேவிடப் பொன் ஏற்றுமதிகள் இப்போது $ 200 மிலியன் அதிகமாகியுள்ளன. இந்தப் பணம் *A*-யில் வசிப்பவர்களுக்குச் செலுத்தப்படவேண்டுமாதலின் இத்தொகை வரவுப் பக்கத்தில் சேர்க்கப்பட்டது. வெளிநாட்டு நிலுவைகளில் மேலும் $ 200 மிலியன் இந்தச் செலுத்தலாகும்; தனியார் குறுகிய கால மூலதனம் என பற்றுவைக்கப்பட்ட $ 500 மிலியனில் இது ஒரு பகுதியாக இருக்கிறது.

பயம் காரணமாகப் பெரிய அளவில் பெயர்ந்த இந்த மூலதனம் இரு முக்கியமான விளைவுகளை ஏற்படுத்துகிறது; அந்நாட்டின் பன்னாட்டுச் சேமநிதிகளை அது தீவிரமாகக் குறைக்கிறது; செலுத்து நிலையில், இருந்த சிறிய பற்றுக்குறையை மிகப்பெரிய பற்றுக் குறையாக அது மாற்றுகிறது. இவ்விரண்டு விஷயங்களையும் மேலும் பரிசீலிக்க வேண்டும். ஒரு நாட்டின் செலுத்துநிலையின் பற்றுக்குறை, உபரி இவ்விரண்டின் முழுப்பொருளையும் மேலும் விளக்குவோம்.

## பற்றுக்குறை, உபரி, சேமநிதிகள்

### பற்றுக்குறை, உபரி இவற்றின் பொருள்

செலுத்துநிலையின் நடப்புக் கணக்கை ஆராயும்போது இச் சொற்களை முதலில் பார்த்தோம். பொருள்கள், பணிகளின் ஏற்றுமதிகளினின்று கிடைக்கும் வருவாய்கள், அவற்றின் இறக்குமதிகளுக்குத் தரவேண்டிய செலுத்தல்களைவிட அதிகமாக இருந்தால் நடப்புக் கணக்கில் உபரி ஏற்படுகிறது என்று கூறுகிறோம். அத்தகைய செலுத்தல்கள் அவற்றுக்கிணையான வருவாய்களைவிட அதிகமாக இருப்பதைப் பற்றுக்குறை என்ற சொல் குறிக்கிறது என்கிறோம்.

முழுச் செலுத்துநிலையை எடுத்துக்கொண்டால் இந்தக் கோட்பாடுகளின் பொருள் என்ன என்பதை ஐயமறப் புரிந்துகொள்ள வேண்டுமாயின், தமக்காகவே மேற்கொள்ளப்படும் விவகாரங்களுக்கும், அவற்றின் விளைவான விவகாரங்களுக்கும் உள்ள வேறுபாட்டை நன்கு புரிந்துகொள்ளவேண்டும். இவ் வேறுபாட்டை நாம் முன்னரே புகுத்தியுள்ளோம். தமக்காகவே மேற்கொள்ளப்படும் விவகாரங்கள் அவை தரும் லாபம் அல்லது திருப்திக்காக மேற்கொள்ளப்படும் தன்னிச்சையான (autonomous) விவகாரங்கள் இவற்றின் விளைவானவை தூண்டப்பட்ட (induced)

விவகாரங்கள். நடப்புக் கணக்கை மீண்டும் பார்ப்போம்; பொருள்கள், பணிகளின் ஏற்றுமதி இறக்குமதிகள் அவை தரும் லாபத்துக்காக மேற்கொள்ளப்படுகின்றன— அவை தன்னிச்சையான விவகாரங்கள். அவை மாறுபடும்போது, அதன் விளைவாக வெளிநாட்டு நிலுவைகளில் ஓர் உயர்வோ, தாழ்வோ தூண்டப்படுகின்றன; ஒரு குறுகியகால மூலதனப் பெயர்ச்சி உண்டாகிறது; அது அதற்காகவே செய்யப் படுவது அன்று; ஏற்றுமதி இறக்குமதிகளின் தராதர அளவின் விளைவு அது.

நாம் கருதிய செலுத்துநிலை விவகாரங்களில் மற்றவற்றுள், நன்கொடைகள் தன்னிச்சையானவையே, வேண்டுமென்றே செய்யப் படுபவை. நெடுங்கால மூலதனப் பெயர்ச்சிகள்கூட ஏற்றுமதியாயினும், இறக்குமதியாயினும் அத்தகையவே. அதிக வருவாய் பெறவோ, ஊக வாணிப லாபம் பெறவோ, மூலதனத்தை மேலும் பாதுகாப்பான இடத்துக்கு எடுத்துச் செல்லவோ மேற்கொள்ளப்படும் குறுகியகால மூலதனப் பெயர்ச்சிகளைக்கூடத் தன்னிச்சையானவையாகக் கருதலாம். அவற்றுக்காகவே செய்யப்படும் விவகாரங்கள் அவை.

நாம் எடுத்துக்கொண்ட உதாரணத்தில் இனி எஞ்சியிருப்பவை பொன் அனுப்பப்படுவதும், அதிகாரபூர்வமான குறுகியகால மூலதனப் பெயர்ச்சிகளுமே. இவை பிற விவகாரங்களின் விளைவுகளே என்பது தெளிவு. *A*-யின் மத்திய பாங்கு, தானே செய்த முடிவினாலன்றி, செலுத்துநிலையின் அழுத்த சக்திகளின் விளைவாகவே தன் வெளிநாட்டு நிலுவைகளைக் குறைத்தது. செலுத்துநிலையின் தேவைக்கு இணங்கித்தான் அது பொன்னை ஏற்றுமதி செய்ததும்.

செலுத்தல்கள் தேவைப்படும் தன்னிச்சையான விவகாரங்கள், வருவாய்கள் வரும் தன்னிச்சையான விவகாரங்களைவிட அதிகமானால் செலுத்துநிலையில் பற்றுக்குறை ஏற்படுகிறது என்று நாம் முடிக்கலாம். அதேபோல, வருவாய்கள் வரும் தன்னிச்சையான விவகாரங்கள், செலுத்தல்கள் தேவைப்படும் தன்னிச்சையான விவகாரங்களைவிட அதிகமாக இருந்தால் செலுத்துநிலையில் உபரி உள்ளது.

### பன்னாட்டுச் சேமநிதிகள்

நம் உதாரணத்தில் சேமநிதிகளின் இடப்பெயர்ச்சிகள் தூண்டப்பட்ட விவகாரங்கள். எப்போதும் இவை அத்தகைய விவகாரங்களே. செலுத்துநிலையின் இடைவெளியை நிரப்புவதே பன்னாட்டுச் சேமநிதிகளின் பயனாகும். உபரி அல்லது பற்றுக்

குறையின் அளவை, சேமநிதி இடப்பெயர்ச்சிகளின் அளவைக் கொண்டு அளக்கலாம். இதற்கு, சேமநிதிகளின் இடப்பெயர்ச்சி என்பது எதைக் குறிக்கிறது என்பதைத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகிறது. சேமநிதி இடப்பெயர்ச்சிகள்பற்றிப் பன்னாட்டுச் செலாவணி நிதி கூறும் கோட்பாட்டைப் பயன்படுத்திப் பின்வரும் விளக்கப்பட்டியல் தயாரிக்கப்பட்டுள்ளது.[4]

### பன்னாட்டுச்சேமநிதி நடமாட்டங்களின் அங்கங்கள்

செலாவணிப்பொன். செலாவணி நிர்வாகத் துறையினரின் (கருவூலம், மத்திய பாங்கு அல்லது நாணயமாற்றுச் சமன்பாட்டு நிதி) இருப்புகளோடு சேரும் பொன்னும் அதனின்று போகும் பொன்னும் மட்டும் கணக்கிடப்படும். (தென் ஆப்பிரிக்கச் சுரங்கங்களைப் போன்ற) உற்பத்தியாளர்கள் அனுப்பும் பொன்னும், தொழிற்சாலைகளுக்கு அனுப்பப்படுவதும், தனியார் சேமிப்புகளிலிருந்து வருவதும் அவற்றுள் சேருவதும் சாதாரணப் பொருள் ஏற்றுமதி இறக்குமதிகளில் சேர்க்கப்படும்.

செலாவணி நிர்வாகத்தினர் வைத்துள்ள, அல்லது அவர்களது கட்டுப்பாட்டுக்குட்பட்டு வணிக பாங்குகள் வைத்துள்ள அன்னியச் செலாவணி அல்லது பாங்கு வைப்புகள் (அதிகாரபூர்வமான இருப்புகள்).

அதிகாரபூர்வமான இருப்புகளும், நிலையான விலையில் விரைவாகக் காசாக மாற்றக்கூடியவையுமான (கருவூல உண்டியல்கள், பாங்கு உண்டியல்கள் போன்ற) குறுகிய கால.வெளிநாட்டுப் பொறுப்புகள். பொன்னாக மாற்றக்கூடிய நாணயங்களில் இருந்தால் இவையும்,

[4] ஒரு நாட்டின் செலுத்துநிலையின் பற்றுக்குறை அல்லது உபரிக்கு இணங்கப் பன்னாட்டுச் சேமநிதிகள் பயணுவது பற்றி நாம் இங்குப் பார்க்கிறோம். எனவே, எந்த ஒரு சமயத்திலும் ஒரு நாடு மொத்தம் வைத்துள்ள பன்னாட்டு நிதிகளைப்பற்றிக் கருதாமல் சேமநிதிகள் நாடுவிட்டு நாடு போவதை மட்டும் ஆராய்வோம். இதனால் ஒரு நன்மையுண்டு. ஒரு நாட்டின் மொத்தப் பொன் இருப்புக்கும், அதன் செலாவணிக் காப்பு நிதிக்காக அது சட்டப்படி வைத்திருக்கவேண்டிய பகுதிக்கும் உள்ள பாகுபாடு, அயல்நாட்டாருக்குத் தரவேண்டிய மொத்தக் குறுகியகாலப் பொறுப்புகளுக்கும், செலுத்துநிலை உபரி அல்லது பற்றுக்குறைக்காக அவற்றை உண்மையில் உபயோகித்தது அல்லது உபயோகிக்கக் கூடியதற்கும் உள்ள பாகுபாடு ஆகியவற்றையெல்லாம் விவரித்துக்கொண்டிருக்க வேண்டியதில்லை. இந்தப் பிரச்சினைகளைப் பற்றிய ஆராய்ச்சிக்கு International Monetary Fund, *Balance of Payments Yearbook* 1938–1946–1947 (Washington D. C., 1949) 4–23 பக்கங்களைப் பார்க்கவும்.

வெளிநாட்டு பாங்கு வைப்புகளும் உண்மையில் முழுமையான சேமநிதிகளாகும். பொன்னுக மாற்றுவது வரையறுக்கப்பட்டிருந்த நாணயங்களில் உள்ள இருப்புகளின் சேமநிதியாக இருக்கும் பண்பு பாதிக்கப்படுகிறது.

அயல்நாட்டுச் செலாவணி நிர்வாகத்தினரும் பாங்குகளும் உள்நாட்டில் வைத்திருக்கும் பாங்கு வைப்புகள்.

அத்தகையினரே வைத்திருக்கும் உள்நாட்டுக் குறுகிய காலப் பொறுப்புகள். வெளிநாட்டுச் சேமநிதிகளின் எதிரிணை உருப்படிகள் இவ்விரண்டும்; இவற்றில் ஏற்படும் மாறுதல்களினுல் பற்ருக்குறை அல்லது உபரிக்கு நிதி ஏற்பாடு உண்டாகிறது.

நிர்வாகத்தினர் வைத்திருக்கும் நெடுங்காலப் பத்திரங்களை விற்பது. (இத்தகைய பத்திரங்களை வைத்திருக்கும் தனிநபர்களிடமிருந்து அரசாங்கம் கேட்டு வாங்கி விற்பதும் இதில் அடங்கியுள்ளது.) வாங்குவது இங்குச் சேர்க்கப்படுவதில்லை. ஏனெனில், நெடுங்காலப் பத்திரங்களை வாங்குவது என்பது, குறைந்த வருமானம் தரும் அயல்நாட்டுச் சொத்துகளை அதைவிட அதிகம் தருவனவாக மாற்றுவதன்றி வேறில்லை.

பன்னுட்டுச் செலாவணி நிதி வசதிகளைப் பயன்படுத்துதல்.

**பற்ருக்குறைகளுக்கும் உபரிகளுக்கும் நிதி ஏற்பாடு**

எத்தகைய செலாவணி, நாணயமாற்று முறை வழங்குகிறது என்பதைப் பொறுத்து செலுத்துநிலையின் பற்ருக்குறை அல்லது உபரிக்குச் செய்யப்படும் நிதி ஏற்பாடு மாறுகிறது.

1914-க்கு முன்னிருந்த பன்னுட்டுப் பொன் திட்டத்தின்கீழ்ப் பற்ருக்குறைகளும், உபரிகளும், அவற்றுக்கான நிதி ஏற்பாட்டு வழிகளும் ஒரே சமயத்தில் தோன்றின. அந் நிதி ஏற்பாடு, பொன் அல்லது மூலதனப் பெயர்ச்சியின் உருவில் தானே இயங்கிற்று. வெளிநாட்டு வைப்புகளின் நடைமுறை நிலுவைகளை வசதியாக வணிக பாங்குகள் வைத்திருந்தன. அவற்றின் அளவு அதிகம் மாருமல் அவை பார்த்துக்கொண்டன. உதாரணமாக, அமெரிக்காவுக்கு அதன் பன்னுட்டுக் கணக்கில் உபரியும், பிரிட்டனுக்குப் பற்ருக்குறையும் உள்ளன என்று கொள்வோம். அப்போது நியூயார்க் பாங்குகளின் பெயரில் லண்டனில் பாங்கு வைப்புகள் சேர்ந்தன. சாதாரணமாக நியூயார்க் பாங்குகள் இவற்றைப் பொன்னுக மாற்றி அவற்றை அமெரிக்காவுக்குக் கொண்டு

வரும்.[5] அமெரிக்க உபரிக்கான நிதி ஏற்பாடு பொன்னின் இப் பெயர்ச்சி. பிரிட்டனின் பற்றுக்குறையின் ஒரு பகுதிக்காவது இதே பெயர்ச்சி, நிதி ஏற்பாடாயிற்று.

அத்தகைய சூழ்நிலைகளில் பலமுறை இங்கிலாந்து பாங்கு (Bank of England) பொன் வெளியேறுவதைத் தடுக்க அநன் உண்டியல் கழிவு வீதத்தை உயர்த்தி மார்க்கெட் வீதங்களை மேலே தூக்கிற்று. லண்டனில் வட்டி வீதம் அதிகமாயிருப்பதால், தம் கணக்கில் சேர்ந்த தொகைகளை அங்கேயே விட்டுவைத்து, அவற்றைப் பணச் சந்தையில் கடனாகக் கொடுப்பது நியூயார்க் பாங்குகளுக்கு லாபகரமாயிற்று. பொன்னின் ஓட்டத்துக்குப் பதிலாக அமெரிக்கா குறுகிய கால மூலதனத்தை ஏற்றுமதி செய்தது. (அதாவது, பிரிட்டனின் குறுகிய காலப் பொறுப்புகள் இறக்குமதியாயின.) அமெரிக்காவைப் பொறுத்தவரை இம் மூலதன நடமாட்டம் அதற்காகவே செய்யப்பட்டது; அதிக வட்டி பெறுவதே அதன் நோக்கம். அமெரிக்காவின் அயல் நாட்டுச் செலுத்துநிலையில் மற்றொரு தன்னிச்சையான விவகாரமாக, இது நிதி ஏற்பாடு செய்யவேண்டியிருந்த உபரியைக் குறைத்தது அல்லது ஒழித்துவிட்டது. ஆனால், இங்கிலாந்தைப் பொறுத்தவரையில், பற்றுக்குறைக்கு ஒரு நிதி ஏற்பாடாக, பொன் ஏற்றுமதிக்கு மாற்று வழியாக வேண்டுமென்றே இம் மூலதன இறக்குமதி ஆதரிக்கப்பட்டது என்பதில் ஐயமில்லை. பிரிட்டன் குறுகிய காலக் கடன் வாங்கியது அதற்காகவே அல்ல, பற்றுக்குறைக்கு நிதி ஏற்பாடு செய்வதற்காகவே.

பொன்னோடு நாணயங்கள் இணைக்கப்பட்டிருப்பதால் நாணய மாற்று வீதங்கள் நிலையாக இருக்கின்றன. அவ்வாறன்றி நாணய மாற்று வீதங்கள் மாறும் நிலையில், செலுத்துநிலையில் சமநிலை தவறினால் ஏற்படக்கூடிய நிலையை இரண்டாவதாகப் பார்ப்போம். இது முந்திய நிலையினின்று மிகவும் மாறுபட்டது. அந்நிலையில், தன்னிச்சையான செலுத்தல்களைவிட வருவாய்கள் அதிகமாகி அதன் விளைவாக வெளிநாட்டு நிலுவைகள் சேர்ந்தால், வெளிநாட்டுச் செலாவணிகளின் மதிப்புக் குறைந்து வருவாய் செலுத்தலை மிஞ்சுவது நிற்கும். இறக்குமதிகளின் விலை குறைகிறது. வெளிநாட்டாருக்கு ஏற்றுமதிகளின் விலை அதிகமாகிவிடும்; உபரி மறைந்துவிடும். உபரிக்கு ஈடாக நிதி ஏற்பாடு ஏதும் தேவையில்லை.

அரசாங்கங்கள் பன்னாட்டுச் செலுத்தல்களைத் திறம்படக் கட்டுப்படுத்துவதனின்று மற்றொரு வகை நிலை ஏற்படுகிறது. இன்று உலகின்

[5] உண்மையில் நடைபெற்றது இவ்வளவு நேரிடையாக இல்லை. ஆனால், முடிவு இதுதான். 19ஆவது அத்தியாயத்தில் இது விவரிக்கப்படுகிறது.

பெரும் பகுதியில் இதுபோன்ற நிலை உண்டு. இறக்குமதிகளின் அளவுகள் கட்டுப்படுத்தப்படுகின்றன; வெளி நாடுகளிலிருந்து வரும் பணத்தை எப்படி உபயோகிப்பது என்பதன்மீதும் கட்டுப்பாடுகள் உண்டு. இத்தகைய கட்டுப்பாடுகளை விதிக்கும் நாடுகளில் பொது வாகச் செலுத்துநிலைப் பற்றுக்குறையின் அளவைக் கட்டுப்பாட்டு அதிகாரிகள் விரும்பும் அளவுக்குக் குறைக்கலாம். அப்போது ஏதாவது பற்றுக்குறை ஏற்பட்டால் அது வேண்டுமென்றே திட்டமிட்டுச் செய்யப் பட்டதாகும்; அதற்காக எப்படிப் பணம் செலுத்துவது என்பதை முடிவு செய்வது செலாவணி நிர்வாகத்தினரின் கடமையாகும். அவர்கள் அதற்காகச் செய்வதற்கு 'அதிகாரபூர்வமான ஈடுகட்டும் நிதி ஏற்பாடு' (Compensatory Official Financing) என்று பெயர். அதற்காகப் பின்வரும் பலவகைச் சேமநிதிப் பெயர்ச்சி களில் ஒன்றை அவர்கள் தேர்ந்தெடுத்து அனுமதிப்பார்கள். உதாரண மாக, அதற்காக, வெளிநாட்டு நிலுவைகளிலிருந்து பணம் பெறலாம்; அதிகாரபூர்வமாக வெளிநாட்டில் வைத்துள்ள சொத்துகளைப் பண மாக்கலாம்; பன்னாட்டுச் செலாவணி நிதியினின்று பணம் வாங்கும் உரிமையைப் பெறலாம். பன்னாட்டுச் சேம நிதிகளின் பலவகை அங்கங்களைப் பயன்படுத்துவதோடன்றி அதிகாரபூர்வமான ஈடு கட்டும் நிதி ஏற்பாடு பின்வரும் வகையிலும் இருக்கலாம். அந் நாட்டின் செலுத்துநிலைப் பற்றுக்குறையைச் சரி செய்வதற்காகவே விசேஷமாகக் கடன்கள் வாங்க ஏற்பாடு செய்யலாம். 1946ஆம் ஆண்டில் கொடுத்த இங்கிலாந்து—அமெரிக்கா கடன் (Anglo-American Loan) அத்தகையதே; ஏற்றுமதி இறக்குமதி பாங்கும் (Export-Import Bank) பன்னாட்டு பாங்கும் கடந்த போருக்குப்பின் ஐரோப்பிய அரசாங்கங்களுக்குக் கொடுத்த கடன்களில் பெரும் பகுதியும், ஐரோப்பாவுக்கு அமெரிக்கா அளித்த உதவியில் பெரும் பகுதியும்கூட அத்தகையவே.

## அயல்நாட்டுச் செலுத்துநிலை எதைக் காட்டுகிறது?

இந்த அத்தியாயத்தின் தொடக்கத்தில் கூறியதுபோலப் பொருளா தார ஆராய்ச்சிக்கு அயல்நாட்டுச் செலுத்துநிலை மிகவும் பயன்படு கிறது. அதைப் பரிசோதிப்பதன்மூலம் ஒரு நாட்டின் பன்னாட்டு நிலையின் திண்மை அல்லது தளர்ச்சியைப்பற்றி அறியலாம். தவிர, அடுத்தடுத்த ஆண்டுகளின் செலுத்துநிலைகளை வரிசையாக எடுத்துப் பார்த்தால் நமக்குப் பல விஷயங்கள் புரியும். முக்கியமான மாறுதல்கள் ஏற்பட்ட ஒரு காலத்தின் தொடக்கத்திலிருந்த செலுத்துநிலைப் பட்டிய லையும், அதன் முடிவில் இருந்த செலுத்துநிலைப் பட்டியலையும் ஒப்பிட்டுப் பார்த்தாலும் அவ்வாறே. அவற்றை ஒப்பிட்டுப் பார்ப்ப தனுல் மாறுதல் எப்படிப்பட்டது, அதன் அளவென்ன என்ற விஷ

யங்கள் மிக விவரமாக நமக்குப் புரியும். மாறுதல் ஏன் ஏற்பட்டது என்பதைச் செலுத்துநிலைப் பட்டியல் நமக்குக் கூறாது. எனினும், அதன் அங்கங்களைக் கூர்ந்து கவனிப்பதன்மூலம் மாறுதலின் காரணங்களைப்பற்றி மேலும் விவரங்களை நாம் சேகரிக்க முடியும். (பட்டியல் 16·8)

## பட்டியல் 16·8

### ஐக்கிய அமெரிக்காவின் அயல்நாட்டுச் செலுத்துநிலை, 1955

| பற்று | | நடப்பு விவகாரங்கள் | வரவு |
|---|---|---|---|
| சரக்கு இறக்குமதிகள் | $ 11,516 | சரக்கு ஏற்றுமதிகள் | $ 14,264 |
| அயல்நாட்டுப் பிரயாணம் | 1,155 | அயல்நாட்டுப் பிரயாணம் | 645 |
| போக்குவரத்து | 1,202 | போக்குவரத்து | 1,336 |
| முதலீட்டு வருமானம் | 512 | முதலீட்டு வருமானம் | 2,512 |
| அரசாங்கம் | 3,190 | அரசாங்கம் | 333 |
| இன்ஷூரன்சும் சில்லறை உருப்படிகளும் | 489 | இன்ஷூரன்சும் சில்லறை உருப்படிகளும் | 825 |
| உப-தொகை | 18,064 | உப-தொகை | 19,915 |
| (நடப்பு விவகாரங்களில் நிகர வரவு நிலுவை) | 1,851 | | |
| நன்கொடைகள் : | | (மூலதன விவகாரங்களைச் சேர்க்குமுன் நிகரப் பற்று நிலுவை) | 470 |
| தனியார் | 456 | | |
| அதிகாரபூர்வமானவை | 1,865 | | |
| **மூலதனமும் செலாவணிப் பொன்னும்** | | | |
| குறுகிய கால மூலதனம் | 537 | குறுகிய கால மூலதனம் | 560 |
| நெடுங்கால மூலதனம் | 918 | நெடுங்கால மூலதனம் | 873 |
| | | செலாவணிப் பொன் | 41 |
| | | தவறுகளும் விட்டுப்போனவையும் | 451 |
| மொத்தம் | $ 21,840 | மொத்தம் | $ 21,840 |

**மூலம் :** International Monetary Fund, *Balance of Payments Yearbook*, February, 1957. மேலே கொடுக்கப்பட்டுள்ளவை தவிர $ 2,134 மிலியன் மதிப்புக்குப் படை உதவித் திட்டங்களின் கீழ்ப் பொருள்களும் பணிகளும் மாற்றப்பட்டன.

1955ஆம் ஆண்டின் அமெரிக்க அயல்நாட்டுச் செலுத்துநிலையைக் கவனிப்போம். பொருள், பணிகளின் ஏற்றுமதிகள் அவற்றின் இறக்குமதிகளைவிட மிகவும் அதிகமாக இருந்தது. நடப்பு விவகாரங்களில் தெரிகிற உபரி $ 1,851 மிலியன். ஆனால், இவ்வுபரி உண்மையல்ல. ஏனெனில், (முக்கியமாகப் படை உதவியாக) பணம் பெறுமல் அயல் நாட்டினருக்கு ஏற்றுமதிகளும் வசதிப் பணிகளும் அளித்ததோடு $ 470 மிலியனுக்கு மேலும் நிகரமாக நன்கொடைகளை அமெரிக்கா தந்திருக்கிறது.

இத் தொகையோடு, நிகர நெடுங்கால மூலதனப் பெயர்ச்சிகளுக்கான தன்னிச்சையான பற்றுகிய $ 45 மிலியனுக்கும் சேர்த்து, அதாவது,மொத்தம் $ 515 மிலியனுக்கு ஈடுகட்டும் நிதி வசதிகளை ஏற்பாடு செய்யவேண்டும். (அமெரிக்காவின் வெளிநாட்டு முதலீடாகிய $ 918 மிலியனிலிருந்து வெளிநாட்டாருக்கு அமெரிக்கக் கடன் பத்திரங்களையும் பிற பத்திரங்களையும் விற்ற $ 873 மிலியனைக் கழித்தால் நிகர நெடுங்கால மூலதனப் பெயர்ச்சியாகிய $ 45 மிலியன் வருகிறது.) இவ்வாறு ஈடுகட்டவேண்டிய தொகையில் சிறியதொரு பகுதியையே கணக்கில் பார்க்கிறோம்: $ 23 மிலியனுக்கு நிகரக் குறுகிய கால மூலதனப் பெயர்ச்சியும், $ 41 மிலியனுக்குப் பொன் ஏற்றுமதியும், எஞ்சிய தொகை முழுவதற்கும், அதாவது, $ 451 மிலியனுக்கு என்ன ஏற்பாடு செய்யப்பட்டது என்று கூறப்படவில்லை. அது ‘தவறுகளும் விட்டுப்போனவையும்’ என்ற குறிப்பில் உள்ளது. அநேகமாகக் குறுகியகால மூலதன உருப்படிகளில் அறிவிக்கப்படாத மாறுதல்களாக அவை இருக்கக்கூடும். ஏனெனில், செலுத்துநிலையின் பிற அங்கங்களிலும் தவறுகளின் கணிசமான பகுதி பரவி இருக்கக்கூடும்; எனினும், அறிவிக்கப்படாத குறுகியகால மூலதனப் பெயர்ச்சியில்தான் தவறுகள் நிறைய ஏற்படக்கூடும்.

அமெரிக்காவின் செலுத்துநிலையில் 1955-ல் நடப்புக் கணக்கிலும் மொத்தமாகவும் பற்றுக்குறை இருந்தபோதிலும் அந்நாட்டின் நிலை, மிக அடக்கத்தோடு கூறினால் சௌகரியமாகவே இருந்தது. முக்கியமாக உள்நாட்டிலும் வெளி நாடுகளிலும் பாங்கு வைப்புகளின் மாறுதல்களின்மூலம், தன் நடப்பு விவகாரங்களின் முழு உபரியையும் நன்கொடையாகக் கொடுக்க முடிந்ததோடு மேலும் அரை பிலியன் டாலருக்கு உதவிகளை அளிக்க அதற்கு நிதி வசதியிருந்தது.

இந்த வசதியான அமெரிக்கச் செலுத்துநிலையோடு ஃபிரான்ஸ் 1947-ல் கொண்டிருந்த செலுத்துநிலையை ஒப்பிட்டுப்பாருங்கள்.

## பட்டியல் 16·9

## ஃபிரான்ஸின் செலுத்துநிலை (பிராங்குப் பிராந்தியம்), 1947

| பற்று | நடப்பு விவகாரங்கள் | | வரவு |
|---|---|---|---|
| சரக்கு இறக்குமதிகள் | $ 2,497 | சரக்கு ஏற்றுமதிகள் | $ 1,093 |
| அயல்நாட்டுப் பிரயாணம் | 51 | அயல்நாட்டுப் பிரயாணம் | 57 |
| போக்குவரவு | 427 | போக்குவரவு | 104 |
| முதலீட்டு வருமானம் | 68 | முதலீட்டு வருமானம் | 148 |
| அரசாங்கம் | 48 | அரசாங்கம் | 2 |
| இன்ஷூரன்சும் சில்லறை உருப்படிகளும் | 159 | இன்ஷூரன்சும் சில்லறை உருப்படிகளும் | 158 |
| உப-தொகை | 3,249 | உப-தொகை | 1,562 |
| | | (நிகரப் பற்று நிலுவை, பொருள்களும் பணிகளும் | 1,687) |
| **மூலதனம், செலாவணிப் பொன் நடமாட்டம்** | | | |
| தனியார் : | | தனியார் : | |
| நெடுங்கால மூலதனம் | 15 | குறுகியகால மூலதனம் | 81 |
| அரசாங்கமும் பாங்குகளும் : | | நெடுங்கால மூலதனம் | 5 |
| நெடுங்கால மூலதனம் | 361 | அரசாங்கமும் பாங்குகளும் : | |
| | | குறுகியகால மூலதனம் | 744 |
| | | நெடுங்கால மூலதனம் | 794 |
| | | செலாவணிப் பொன் | 438 |
| | | தவறுகளும் விட்டுப்போனவையும் | 1 |
| மொத்தம் | $ 3,625 | மொத்தம் | $ 3,625 |

மூலம் : International Monetary Fund, *Balance of Payments Yearbook*, 1938–1946–1947. ஒரு சிறு அளவுக்கு விவரங்கள் இடம் மாற்றியும் தொகுத்தும் இங்குக் கொடுக்கப்பட்டுள்ளன.

அந்தச் சமயத்தில் தன் பொருளாதாரத்தைச் சரியான நிலையில் வைத்திருக்கப் பலவகையான இறக்குமதிகள் மிக அவசியமாகப் ஃபிரான்சுக்குத் தேவைப்பட்டன. அதற்கு மாறாக, இரண்டாவது உலகப் போரினால் விளைந்த அழிவும் சீர்குலைவும் காரணமாக ஏற்றுமதிகளை உற்பத்தி செய்யும் திறமையோ அதனிடம் மிகவும் குறைவான

நிலையில் இருந்தது. ஏற்றுமதிகளின் மதிப்பைப்போல இறக்குமதி களின் மதிப்பு ஏறக்குறைய இரண்டரை மடங்காக இருந்ததிலிருந்து இந்த உண்மையை நாம் அறியலாம். இந்த வித்தியாசமே நடப்புக் கணக்குப் பற்றுக்குறையான $ 1,687 மிலியனின் பெரும் பகுதிக்குக் காரணமாகும்.

ஃபிரான்ஸின் மொத்தப் பற்றுக்குறையின் அளவை அறிய, இத்துடன் தனியார் மற்றும் அரசாங்கத் துறையின் நெடுங்கால மூலதன ஏற்றுமதிகளான $ 376 மிலியனைக் கூட்டி அதனின்று தனியார் மூலதன இறக்குமதிகளான $ 86 மிலியனைக் கழிக்க வேண்டும். அதாவது, நடப்புக் கணக்குப் பற்றுக்குறையோடு நிகர மாக $ 290 மிலியனைக் கூட்டவேண்டும். இவ்வாறு கூட்டினால் மொத்தப் பற்றுக்குறை $ 1,977 மிலியன் ஆகிறது. இப் பற்றுக் குறையைச் சமாளிக்க ஃபிரான்ஸ் பெரும் அளவுக்குக் கடன் வாங்க வேண்டியிருந்தது; பொன்னை ஏற்றுமதி செய்யவேண்டியிருந்தது. 'நெடுங்கால மூலதனம்' என்ற குறிப்பில் உள்ள பெரிய கடன் உருப்படி ($ 794 மிலியன்) முக்கியமாக அமெரிக்க ஏற்றுமதி-இறக்குமதி பாங்கும், சீரமைப்புக்கும் வளர்ச்சிக்குமான பன்னாட்டு பாங்கும், ஃபிரான்ஸின் பற்றுக்குறையைத் தீர்ப்பதற்காக அதற்கு அளித்த கடன்களைக் குறிக்கிறது. அதிகாரபூர்வமான (நிகர) குறுகியகாலக் கடன் தொகையான $ 744 மிலியன், முக்கியமாகப் பன்னாட்டுச் செலாவணி நிதியிலிருந்து ஃபிரான்ஸ் வாங்கிய கடனும் அதன் வெளிநாட்டு நிலுவைகள் குறைந்ததும் சேர்ந்தன.

இந்தப் பாதகமான நிலையோடு 1954-ல் ஃபிரான்ஸின் பன்னாட்டு நிலையை ஒப்பிடுங்கள் (பட்டியல் 16·10). 1947-ல் இருந்ததைவிட இறக்குமதிகள் ஓரளவுக்குத்தான் அதிகரித்துள்ளன. ஆனால், ஏற்றுமதிகள் ஏறத்தாழ இரண்டரை மடங்கு அதிகரித்துள்ளன. ஃபிரான்ஸில் வெளிநாட்டார் பிரயாணம் அபிவிருத்தி அடைந்து நிகர மாக $ 61 மிலியனை அளித்துள்ளது. போக்குவரவுச் செலவுகள் பாதி யாயின; இத் துறையின் வருமானம் சிறிது அதிகரித்துள்ளது. 'இன்ஷ்யூரன்சும் சில்லறை உருப்படிகளும்' முதலீட்டு வருமானத் துக்கான செலுத்தல்களும்தான் பாதகமாக மாறியுள்ளன. தவிர, வெளிநாட்டு அரசாங்கங்கள் ஃபிரான்ஸில் செய்யும் செலவினால், முக்கிய மாக அமெரிக்கா படைத் திட்டங்களுக்காகவும் படைச் சாதனங்களுக் காகவும் செய்யும் செலவினால் ஃபிரான்ஸுக்கு $ 582 மிலியன் கிடைக் கிறது.

சாதகமான இம் மாறுதல்களினால் ஃபிரான்ஸின் பொருள்கள், பணிகள் கணக்கில் முன்னிருந்த பற்றுக்குறையான $ 1,687 மிலியனுக்

## பட்டியல் 16·10. ஃபிரான்ஸின் செலுத்துநிலை (பிராங்குப் பிராந்தியம்), 1954

| பற்று | | நடப்பு விவகாரங்கள் | வரவு |
|---|---|---|---|
| சரக்கு இறக்குமதிகள் | $ 2,724 | சரக்கு ஏற்றுமதிகள் | $ 2,545 |
| அயல்நாட்டுப் பிரயாணம் | 121 | அயல்நாட்டுப் பிரயாணம் | 182 |
| போக்குவரவு | 211 | போக்குவரவு | 137 |
| முதலீட்டு வருமானம் | 146 | முதலீட்டு வருமானம் | 121 |
| அரசாங்கம் | 65 | அரசாங்கம் | 582 |
| இன்ஷுரென்சும் சில்லறை உருப்படிகளும் | 310 | இன்ஷுரென்சும் சில்லறை உருப்படிகளும் | 261 |
| உப-தொகை | 3,577 | உப-தொகை | 3,828 |
| (பொருள்கள், பணிகளில் நிகர வரவு நிலுவை | 251) | | |
| நன்கொடைகள் | 10 | நன் கொடைகள் | 509 |
| நடப்புக் கணக்கின் நிகர நிலுவை | 750) | | |
| | | **மூலதனமும் செலாவணிப் பொன்னும்** | |
| தனியார், குறுகிய கால மூதலனம் | 121 | தனியார் நெடுங்கால மூலதனம் | 55 |
| அதிகார பூர்வமானவையும் பாங்குகளும் : | | | |
| குறுகிய கால மூலதனம் | 581 | | |
| நெடுங்கால மூலதனம் | 136 | | |
| செலாவணிப் பொன் | 6 | தவறுகளும் விட்டுப்போனவையும் | 39 |
| மொத்தம் | $ 4,431 | மொத்தம் | $ 4,431 |

மூலம் : International Monetary Fund, *Balance of Payments Yearbook*, Vol. 6, 1953–54.

குப் பதிலாக 1954-ல் $ 251 மிலியன் உபரியைக் காண்கிறோம். இத்துடன் வந்த நன்கொடைகளான $ 509 மிலியனைக் கூட்டினால் நடப்புக் கணக்கின் மொத்த உபரி $ 750 மிலியன் ஆகிறது. (இந் நன்கொடைகளில் முக்கியமாக அமெரிக்கப் பொருளாதார உதவியும், அதைத் தவிர, ஐரோப்பிய செலுத்துகள் சங்கத்தின் (European

Payments Union) விசேஷ ஒதுக்கீடாகிய $ 89 மிலியனும் சேர்ந்தவை.

இந்த வரவு நிலுவையை ஃபிரான்ஸ் வெளிநாடுகளில் முதலீடு செய்தது; இம் முதலீடு பின்வரும் வகைகளில் செய்யப்பட்டது; அமெரிக்கா, பிரிட்டன், கானடா ஆகிய நாடுகளினின்று பெற்ற நெடுங்காலக் கடன்கள் தீர்க்கப்பட்டன; ஐரோப்பிய செலுத்துகள் சங்கத்தினின்று பெற்ற ஒரு குறுகியகாலக் கடன் தீர்க்கப்பட்டது; வெளிநாட்டு நிலுவைகள் சேர்ந்தன; வெளிநாட்டார் வைத்திருந்த பிராங்கு நிலுவைகள் குறைந்தன. கடன்களில் பெரும்பகுதி அரை பிலியன் டாலர் நன்கொடைகளைக் கொண்டு தீர்க்கப்பட்டபோதும், எல்லாவற்றையும் கருதினால், ஃபிரான்ஸின் செலுத்துநிலை 1954-ல் நல்ல நிலையில் இருந்தது எனலாம்.

## அயல்நாட்டுச் செலுத்துநிலை எதைக் காட்டுவதில்லை?

### கட்டுப்பாடுகளின் விளைவுகள்

ஒரு நாட்டின் செலுத்துநிலையினின்று பல விவரங்களை அறியலாம் என்பதை இதுவரை பார்த்த உதாரணங்கள் காட்டுகின்றன. அதிலிருந்து ஒரு நாட்டின் பன்னாட்டு நடப்பு விவகாரங்களில் செலவுக்கு வரவு ஈடாக இருக்கிறதா, அல்லது பெரிய அளவில் கடன் வாங்கியோ பொன்னை ஏற்றுமதி செய்தோதான் அதன் பொருள், பணி இறக்குமதிகளுக்குச் சரிக்கட்டவேண்டியிருக்கிறதா என்பதை நாம் அறியலாம். ஆனால், தன் இறக்குமதிக்கும் ஏற்றுமதிக்கும் சமநிலை ஏற்படுத்த முடியாமல் ஒரு நாடு கஷ்டப்படுகிறதா என்பதை எல்லாச் சமயத்திலும் அதிலிருந்து கண்டுபிடிக்க முடியாது. உதாரணமாக, இறக்குமதிகள்மீது செயற்கையான கட்டுப்பாடுகள் விதிக்கப்படலாம். அப்போது அந்நாட்டின் செலுத்துநிலையில் நடப்புக் கணக்கில் இறக்குமதிகள் ஏற்றுமதிகளைவிட மிகாமல் இருக்கலாம். அதன் பன்னாட்டுக் கடன் அதிகரிக்காமலிருக்கலாம். இருந்தாலும் வெளியில் திருப்திகரமாகத் தெரியும் இந் நிலையைப் பாதுகாக்க அந்நாடு மிகத் தீவிரமாகத் தன் இறக்குமதிகளைக் கட்டுப்படுத்திக்கொண்டிருக்கலாம். இத்தகைய சூழ்நிலையை நன்கு ஆராய்ந்து புரிந்துகொள்ளச் செலுத்துநிலைக்குப் பின்னால் சென்று அந்நாட்டின் வாணிபக் கொள்கையையும், அது எவ்வாறு அந்நாட்டின் பன்னாட்டு செலுத்தல்களைப் பாதிக்கின்றது என்பதையும் பற்றிய விவரங்களை அறியவேண்டும்.

**விவரங்கள் இல்லாமை**

பலவித ஆராய்ச்சிகளுக்கு, இப்போது வெளியிடப்படும் உருவில், செலுத்துநிலையில் தேவையான விவரங்கள் கொடுக்கப்படுவதில்லை. உதாரணமாக, இறக்குமதிகளும் ஏற்றுமதிகளுமான பொருள் வாணிகத்தின் மொத்தத் தொகை மட்டுமே நமக்குத் தெரிகிறது. பொருள்களின் வகைகள் அல்லது அவை தோன்றுமிடம் அல்லது போகுமிடம் பற்றிய விவரங்கள் அதில் இல்லை. எனினும், அந்த விவரங்களைக் கொண்டு நாம் பல விஷயங்களை அறிந்துகொள்ள முடியும். ஒரு நாட்டின் ஏற்றுமதிப் பொருள்கள் மாறுவது அதன் பொருளாதார அமைப்பில் ஏற்படும் அடிப்படையான மாறுதலைப் பிரதிபலிக்கலாம்; அல்லது அந் நாட்டின் வணிகக் கொள்கை மாறியதால் அவை மாறியிருக்கலாம். இத்தகைய மாறுதல்களைக் கண்டுபிடித்து அவற்றின் காரணங்களை அறியவேண்டியது முக்கியம். ஒரு நாட்டு வாணிபத்தைப் பொருள்வாரியாகப் பிரித்துத் தந்த விவரங்களுக்குப் பல நாடுகள் வெளியிடும் விவரமான வாணிப அட்டவணைகளைப் பார்க்க வேண்டும். IMF-ன் Balance of Payments Yearbook-ல் எல்லா முக்கியமான பிரதேசங்களுக்கும் விவகாரங்களின் விவரத்தைக் கொடுத்துச் செலுத்துநிலைகளின் பிற்சேர்க்கைப் பட்டியல்களை வெளியிடுகிறது. இருப்பினும், ஒரு நாட்டின் வாணிபம் எங்கிருந்து வருகிறது? எந்த இடங்களுக்குப் போகிறது? என்ற முழு விவரங்களும் வேண்டுமாயின் அவ்வந் நாடுகள் வெளியிடும் விவரமான அட்டவணைகளைத்தான் பார்க்கவேண்டும். செலாவணிகளைப் பொன்னுகை மாற்ற முடியாத நிலையில், ஒரு நாடு அமெரிக்காவுக்கு விற்கிறதா, அர்ஜெண்டினாவுக்கா, எகிப்துக்கா என்பது, அதன் நடப்புக் கணக்கில் பற்றுநிலுவையுள்ளதா, வரவு நிலுவையுள்ளதா என்பது அவ்வளவு முக்கியமாக இருக்கக்கூடும். 1931-லிருந்து 1958 முடிவு வரை பெரும்பாலான நாணயங்கள் பொன்னுகை மாற்ற முடியாதவையாகத்தான் இருந்தன.

**பன்னாட்டுக் கடன் நிலை (The Balance of International Indebtedness)**

ஒரு நாட்டின் மொத்தக் கடன் நிலையையும் செலுத்துநிலைப் பட்டியல் காட்டாது. இதுவும் ஒரு முக்கியமான விஷயமாக இருக்கக் கூடும். கடன்நிலை என்பது அந் நாடு வெளிநாடுகளில் பத்திரங்களிலும் சொத்துகளிலும் செய்த மொத்த முதலீடுகளிலிருந்து அந் நாட்டில் அயல்நாட்டினர் செய்துள்ள மொத்த முதலீடுகளைக் கழித்தால் வருவது. ஒரு நாடு தன் வெளிநாட்டு முதலீட்டு வருமானத்தின்மூலம் நிகரமாக எவ்வளவு சம்பாதிக்கிறது என்பதை மதிப்பிடவும், அல்லது போர் மூள்வது போன்ற ஒரு நெருக்கடி நிலைமையில் அது எவ்வளவு

நீர்த்த நிதிகளை வசூலிக்கக்கூடும் என்பதைக் கணக்கிடவும் இவ் விவரம் பயன்படக்கூடும். நமக்குத் தெரிந்த முதலீட்டு வருவாய்த் தொகையோடு இதையும் சேர்த்துக்கொண்டால் அந் நாட்டின் அயல் நாட்டு முதலீடுகளின் சராசரி லாபத்தின் அளவைச் சரியாக அறிந்து கொள்ளலாம். தனியாக ஒரு விசாரணை செய்து வெளிநாட்டு நெடுங்காலச் சொத்து, பொறுப்புகளின் பட்டியல் ஒன்றைத் தயாரித் துத்தான் இவ் விவரத்தை அறிய முடியும். இந்த விவரத்தைச் செலுத்துநிலைப் பட்டியலினின்று அறிய முடியாது. ஏனெனில், அதில் ஒருபுறம் வெளிநாடுகளில் செய்த நிகர விற்பனைமூலம் வந்த மொத்த நாட்டு ஆக்கத்தின் பகுதியும், மறுபுறம் குறுகிய காலம், நெடுங்காலம் இரண்டையும் சேர்ந்த அந் நாட்டின் வெளிநாட்டுச் சொத்து, பொறுப்பு களில் ஏற்படும் மாறுதல்களும்தாம் காட்டப்படுகின்றன.

## பார்வைக்குரிய சில நூல்கள்

Badger, Donald, ‘The Balance of Payments: A Tool of Analysis,’ *IMF Staff Papers*, Vol. II, No. 1 (September, 1951). பன்னாட்டுச் செலாவணி நிதி செலுத்துநிலை விவரங்களைத் தரும் முறைபற்றிய விவரங்களும், ஈடுகட்ட அதிகாரபூர்வமான நிதி ஏற்பாட்டுக் கோட்பாட்டை மாச்லப் (Machlup) தாக்கியிருப்பதற்கு விடையும் இதில் காணலாம்.

‘The Adequacy of Monetary Reserves,’ *IMF Staff Papers*, Vol. III, No. 2 (October, 1953). பன்னாட்டுச் சேம நிதிகளின் பொருள், போதுமான அளவுபற்றிய கோட்பாடு ஆகிய வற்றை விவரிக்கிறது.

International Monetary Fund, *Balance of Payments Manual*. Washington, D. C.: The Fund, 1950. செலுத்து நிலை அட்டவணைகள் தயாரிக்க விவரமான செய்முறைக் குறிப்புகள்.

International Monetary Fund, *Balance of Payments Yearbook* 1938–1946–1947. Washington, D. C.: The Fund, 1949. அங்க நாடுகளின் செலுத்துநிலைப் பட்டியல்களோடு, இந்த ஆண்டறிக்கை இதழில், செலுத்துநிலை விவரங்களை நிதி தரும் முறை யின் அடிப்படைக் கோட்பாடுகளைப்பற்றி விவரமாகக் கூறப்பட்டிருக் கிறது. அதற்குப் பிந்திய கால விவரங்களுக்கு வருடாந்தர அறிக்கை களைப் பார்க்கவும்.

Machlup, Fritz, ‘Three Concepts of the Balance of Payments and the So-Called Dollar Shortage,’ *Economic*

*Journal*, LX (March, 1950). அயல்நாட்டுச் செலுத்தலின் மார்க்கெட் சமநிலை, திட்டச் சமநிலை, கணக்குச் சமநிலை ஆகியவற்றைப் பாகுபடுத்திக் கூறுகிறது. இவற்றின் அடிப்படையில் அதிகாரபூர்வமாக ஈடுகட்டும் நிதி ஏற்பாடுகளைத் திறனாய்வு செய்கிறது.

'Oskaloosa vs. the U.S.,' *Fortune* (April, 1938). செலுத்துநிலைக் கோட்பாட்டை இந்த அயோவா (Iowa) நகரத்தின் வாணிபநிதி உறவுகள் விஷயத்தில் சுவையாகக் கையாளுகிறது.

U.S. Department of Commerce, *Balance of Payments of the United States*, 1949-1951. செலுத்துநிலைக் கணக்கு வைக்கும் முறைகள், எப்படி விவரங்கள் சேகரிக்கப்படுகின்றன, விவரங்கள் எங்கிருந்து கிடைக்கின்றன, வணிகத்துறை வெளியிடுவதில் எப்படி விவரங்கள் தரப்பட்டுள்ளன என்பவைபற்றிய விவரங்களைக் கொண்டது.

# 17. நாணயமாற்று
## (Foreign Exchange)

ஒவ்வொரு நாட்டுக்கும் தனியாக ஒரு பணமும், தனியாக ஒரு பாங்கு அமைப்பும் இருப்பது ஒரு நாட்டின் உள்நாட்டு வாணிபத் துக்கும் பன்னாட்டு வாணிபத்துக்கும் உள்ள ஒரு வேறுபாடாகும். ஒவ்வொரு நாட்டிலும் விலைகள் அந்நாட்டுப் பணத்தில் கணக்கிடப் படுகின்றன ; அதாவது, டாலர்கள் (dollars), பவுன்கள் (pounds), ஃபிராங்குகள் (francs), மார்க்குகள் (marks), லீரே (lire), பீஸோக்கள் (pesos), ரூபாய்கள் (rupees) போன்றவற்றால் கணக்கிடப் படுகின்றன. ஒரு நாட்டில் வசிப்பவருக்குப் பிறநாட்டு மொழிகளில் எவ்வாறு பழக்கம் இருப்பதில்லையோ அதேபோல அந் நாடுகளின் பணத்தைப்பற்றியும் சாதாரணமாகத் தெரிவதில்லை.

ஒரு நாட்டைமட்டும் எடுத்துக்கொண்டால் அதன் பணம் அந் நாட்டுக்குள் தங்குதடையின்றி நடமாடுகிறது. உள்ளூர் பாங்கின் மீது எழுதப்பட்ட செக்குகளைக் கொண்டு நெடுந்தூரத்திலுள்ள இடங்களினின்று பொருள்களை வாங்கமுடிகிறது. இவ்வாறு ஏற்படும் செலுத்துதல் விவகாரங்களில் பெரும்பகுதி, நாட்டின் பல்வேறு பாகங் களில் உள்ள பாங்குகளிடையே ஏற்பட்டுள்ள தொடர்புகளின் உதவியாலோ, நாட்டின் மத்திய பாங்கி தீர்வகமாகப் பணியாற்றுவ தாலோ, ஒன்றுக்கொன்று ஈடாகத் தீர்க்கப்படுகின்றன.

நெடுந்தூரத்துக்குப் பணத்தை அனுப்பவேண்டியதோடு மட்டும் அன்றிச் செலுத்தவேண்டிய தொகையை வேறு பணங்களில் செலுத்த வேண்டியிருப்பதால்தான் நாணயமாற்றுப் பிரச்சினை எழுகிறது. ஏற்றுமதி செய்பவர்கள் தம் பொருள்களை வெளிநாடுகளில் விற்கும் போது அன்னியச் செலாவணி கிடைக்கும். ஆனால், அவர்கள் தாம் கொடுக்கவேண்டிய ஊதியங்களையும் பிறசெலவுகளையும் தம் நாட்டுப் பணத்தில் கொடுக்கவேண்டியிருக்கிறது. எனவே, அந்த அந்நியச் செலாவணியைத் தம் நாட்டுப் பணமாக மாற்றிக்கொள்ள அவர்களுக்கு

ஒரு வழி தேவை. இதே பிரச்சினை இறக்குமதி செய்பவர்களுக்கும் எழுகிறது. அவர்கள் வெளிநாடுகளினின்று வாங்கும் பொருள்களுக்குப் பணம் தரவேண்டியிருக்கிறது; ஆனால், அவர்களிடம் உள்நாட்டுப் பணம்தான் உள்ளது.

## நாணய மாற்று அங்காடி
## (The Foreign Exchange Market)

எந்த நாட்டிலும் இவ்வாறு தேவைப்படும் வசதிகளைத் தருவது நாணயமாற்று அங்காடியாகும். இது விளைபொருள் அங்காடியைப் போன்று ஓர் இடம் அன்று; இங்கு வாங்குபவரும் விற்பவரும் நேருக்கு நேர் சந்திப்பதில்லை. பாங்குகளின் அன்னியத் துறைகளிலோ, தரகர்கள், வர்த்தகர்கள் ஆகியோர்களின் அலுவலகங்களிலோ மிகவும் தனிச்சிறப்பான வேலைகளைப் பார்ப்பவர்கள்தான் இவ் அங்காடி விவகாரங்களில் பங்குகொள்கிறார்கள். அன்றி இவர்கள் ஒருவரோடு ஒருவர் தொலைபேசி (telephone) மூலம் இடைவிடாது தொடர்பு கொண்டுள்ளார்கள். இவர்களிடையே பேச்சுத் தொடர்பு இவ்வளவு எளிதாக அமைந்துள்ளதால் எல்லாச் செலாவணி வணிகர்களும் எந்த ஒரு நாணயத்துக்கும் ஒரே விலை சொல்கின்றனர். இதுவே அது ஓர் ஒருங்கிணைந்த அங்காடி என்பதற்கான தேர்வுச் சான்றாகும்.

இவ் அங்காடியில் வாங்கி விற்கப்படுவன அன்னியச் செலாவணி களே. ஒரு நாட்டுக்கு வரவேண்டிய வெளிநாட்டுப் பணங்கள் அனைத்தும் நாணயமாற்று அங்காடிக்குள் வரும் அளிப்பாகும். இச் செலாவணி அந்நாட்டு ஏற்றுமதியாளர்கள், உள்நாட்டுப் பங்கு, பத்திரங்களை (securities) வெளிநாடுகளில் விற்றுக் கடன் வாங்கு பவர்கள், பலவகைப் பணிகளை (services) விற்பவர்கள், மற்றும் சில சமயம் வாணிபம் செய்பவர்கள் (speculators) ஆகியோரிட மிருந்து வருகிறது. இறக்குமதி செய்பவர்கள், பணிகளையும் வெளி நாட்டுப் பங்குப் பத்திரங்களையும் வாங்குபவர்கள், மேலும் சில சமயம் ஊக வாணிபம் செய்பவர்கள் ஆகியோருக்கு இந்த அந்நியச் செலாவணி தேவைப்படுகிறது. ஒரு பன்னாட்டு விவகாரத்தில் பணம் செலுத்த எந்தக் குறிப்பிட்ட முறை பயன்படுகிறதோ அதைப் பொறுத்து, ஒரு குறிப்பிட்ட நாட்டின் அங்காடியிலோ அன்றி அத்துடன் தொடர்புகொண்டுள்ள வேறொரு வெளிநாட்டு நாணய மாற்று அங்காடியிலுள்ள ஒவ்வொரு நாளும் அன்னியச் செலாவணி வாங்கப்படுவதிலும் விற்கப்படுவதிலும் அந் நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலையின் (balance of payments) இரு பக்கங்களும் சந்திக்கின்றன.

**பல்வகை நாணயமாற்று விலைப்புள்ளிகள்** (Exchange Rate Quotations): [தி வால் ஸ்டிரீட் ஜர்னல் (The Wall Street Journal) பத்திரிகையிலிருந்து எடுக்கப்பட்ட] பின்வரும் பட்டியல் ஒரு நாளில் ஒரே அங்காடியில் ஒரு நாணயத்துக்குப் பல மாற்று விகிதங்கள் குறிப்பிடப்படுகின்றன என்பதைக் காட்டுகிறது. அங்காடி என்றால், அங்கு ஒரு பொருளுக்கு ஒரே ஒருவிலைதான் இருக்கும்

**ஸ்டர்லிங் ((Sterling) நாணயமாற்று விகிதங்கள்**

(புதன்கிழமை, ஜூன் 12, 1963)

| | |
|---|---|
| தந்திகள் (cables) | 2·8008 |
| 30 - நாள் முன்னோக்கி (futures) | 2·7994 |
| 90 - நாள் முன்னோக்கி | 2·7968 |
| ஸ்விச் (switch) அல்லது பத்திரம் (security) | 2·7910 |

என்றும், நாணயமாற்று விகிதம் என்பது ஒரு குறிப்பிட்ட பணத்தின் விலை என்றும் நாம் கொண்டுள்ள கோட்பாட்டுக்கு ஒத்தவாறு இது உள்ளது எனக் கூறுவது அரிது.

ஆனால், இதில் முரண்பாடு ஏதும் இல்லை. இப் பல்வகை நாணய மாற்று விகிதங்களும் ஸ்டர்லிங் நாணயத்தின் டாலர் விலைகள் ஆயினும், இவ் விலைகள் பலவகை ஸ்டர்லிங் செலாவணிகளுக்கு ஆனவை. தந்தி விகிதம் (cable rate) என்பது உடனடியாக லண்டனில் தரப்படும் ஸ்டர்லிங் பணத்தின் விலையாகும்; இதுவே இவ்விலைகளில் மிகவும் அதிகமானது. 30-நாள், 90-நாள் விகிதங்கள் நாள் கழித்துத் தரப் படும் ஸ்டர்லிங் நாணயத்தின் விலையாவன. அடுத்த உயர்ந்த விகிதத்தைவிட ஒவ்வொரு விலை விகிதமும் சிறிது குறைவாக உள்ளது. இவ் வித்தியாசம் முக்கியமாக லண்டன் அங்காடியின் உண்டியல் கழிவு விகிதத்தைப் (discount rate) பிரதிபலிக்கிறது. உதாரணமாக, 30 நாட்களுக்குப் பின்னரே லண்டனில் கிடைக்கக்கூடிய ஸ்டர்லிங் செலாவணியை வாங்கும் எவரும் உடனடியாகப் பணம் வேண்டு மென்றால், யாரிடமாவது கடனைத்தான் பெற்றுக்கொள்ள வேண்டும். அப்படியாயின், அவ்வாறு பணம் தருபவர், அன்றைய விகிதத்தில் கழிவுபோக மீதியைத்தான், தருவர். எனவே, ஸ்டர்லிங் வாங்குபவர் பணம் கிடைக்கும் நாள் தூரப் போகப்போக, அதற்கேற்பக் குறைந்த விலையைத்தான் தருவர்.

ஸ்விச் அல்லது பத்திர ஸ்டர்லிங் விகிதம்தான் மிகக் குறைவானது. பிற விகிதங்கள் 'கட்டுப்பாடற்ற' (free) ஸ்டர்லிங்கின் விலைகள். அதுபோலன்றி ஸ்விச் அல்லது பத்திர ஸ்டர்லிங் விகிதம் மாறு பட்டது, சிலவகைக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டது.

# அயல்நாட்டுக்குப் பணம் செலுத்துவதன் செயல்முறை

## (The Mechanism of Foreign Payments)

நாட்டு எல்லைக்கு அப்பாலும், ஒரு நாணயத்திலிருந்து மற்றொன்றுக்கும் வாங்கும் சக்தியை மாற்றுவதற்குத் தேவைப்படும் அங்கங்கள் இரண்டு: முதலாவது, ஒரு பத்திரம்—உண்டியல் (bill of exchange) அல்லது அதைவிட வேகமான அதன் மறு வடிவம், தந்திவழி மாற்று (the telegraphic transfer); இரண்டாது, ஒரு ஸ்தாபனம்—பாங்கு. பணம் அனுப்பும் நாடு, பணம்பெறும் நாடு இரண்டிலும் ஒரு பாங்கு இதற்குத் தேவை. இவ்விரு அங்கங்களும் அன்னியச் செலாவணி மாற்றுதலை எவ்வாறு செயல்படுத்துகின்றன என்பதை ஓர் எடுத்துக் காட்டின்மூலம் தெளிவாக விளக்கலாம்.

### ஏற்றுமதிக்கான நிதி ஏற்பாடு

**தரிசன உண்டியல்கள்** (Sight Bills): கொலம்பியாவைச் (Colombia) சேர்ந்த ஒரு காப்பிக்கொட்டை ஏற்றுமதியாளன் நியூயார்க் (New york) நகரத்து இறக்குமதியாளன் ஒருவனுக்கு ஒப்புக்கொண்ட ஒரு விலைக்கு 100,000 டாலர் மதிப்புடைய காப்பியைக் கப்பலில் அனுப்புவதாகவும், சரக்கு நியூயார்க்கை அடைந்ததும் அத்தொகை செலுத்தப்படவேண்டும் என்றும் ஓர் ஒப்பந்தத்தை மேற்கொள்வதாக வைத்துக்கொள்வோம். காப்பிக்கொட்டை கப்பலில் ஏற்றப்படுகிறது. கப்பல் கம்பெனியிடமிருந்து ஏற்றுமதியாளன், சரக்குக்கு உரிமைதரும் கப்பல் ரசீதையும், அதன் ஈட்டுறுதிக்கானதும் (insurance) சுங்கச் சாவடியைத் தாண்டத் தேவையானதுமான பிற பத்திரங்களையும் பெறுகிறான். காப்பிக்கொட்டை நியூயார்க் போய்ச் சேர ஆகக்கூடிய சுமார் இரண்டு வாரங்கள்வரை ஏற்றுமதியாளன் காக்க முடியுமானால், அது போய்ச்சேரும் காலத்துக்குச் சற்று முன் வரை பொறுத்திருந்து, அதன்பின் ஒப்பந்தத்தின் ஏற்பாடுகளின்படி, நியூயார்க் இறக்குமதியாளன்மீது ஓர் உண்டியல் வரைவான். இவ்வுண்டியலானது அதைப் 'பெறுவோனிடம்' (payee—நியூயார்க்கைச் சேர்ந்த ஒரு பாங்கு) அதைப் பார்த்தவுடன், அதாவது, அது கொண்டு வந்து காண்பிக்கப்படும்பொழுது, 100,000 டாலரைத் தரும்படி அதன் 'எழுதப்படுவோனுக்கு' (drawee—இறக்குமதியாளன்) அதன் 'எழுதுபவன்' (drawer) இடும் ஓர் உத்தரவாகும். ஏற்றுமதியாளனுக்கு டாலர்கள் அவசியமில்லை. உற்பத்தியாளர்களிடமிருந்து காப்பியை வாங்கவும், தன் பிற செலவுக்காகவும் அவனுக்குப் பீஸோ நாணயங்கள் (pesos) தேவை. எனவே, இந்த உண்டியலை அயல் நாட்டுத்துறையின் உள்ளூர் பாங்கி ஒன்றுக்கு எடுத்துச்சென்று

உடனடியாகப் பணத்தைப் பெறுகிருன்.[1] டாலர் தரிசன உண்டியல் களுக்கான அப்போதைய நாணயமாற்று விகிதத்தின்படி உண்டியலின் மதிப்பை அவன் பீஸோக்களில் பெறுகிருன். தந்திவழி மாற்றுக்கு உள்ள விலையும் இதுவும் ஒன்ருக இருக்கும்; அல்லது கிட்டத்தட்ட ஒன்ருகவே இருக்கும். ஏனெனில், மிக வேகமாக விமானத் தபால் செல்லும் இந்நாட்களில் தரிசன உண்டியலை வாங்கும் பாங்கு மிகக் குறுகிய காலத்துக்குள்ளேயே அந்த வெளிநாட்டுக் கேந்திரத்தில் தன் பணத்தைப் பெற்றுவிடுகிறது. தரிசன உண்டியல் மாற்றுவிகிதம் டாலருக்கு ஏழு பீஸோக்கள் என்று கொண்டால், ஏற்றுமதியாளனுக்குக் கிடைக்கும் தொகை 700,000 பீஸோக்கள் ஆகும். தன்னுடன் 'தொடர்புடையோன்' (correspondent) உறவுகொண்ட நியூயார்க் பாங்கு ஒன்றுக்கு, சரக்கேற்றியது சம்பந்தப்பட்ட கப்பல் ரசீதையும் பிற பத்திரங்களையும் இணைத்து அந்த உண்டியலை அந்தக் கொலம்பிய பாங்கு அனுப்புகிறது. நியூயார்க்கில் உள்ள அந்த பாங்கு 'காரண்டி டிரஸ்டு கம்பெனி' (Guaranty Trust Company) போன்ற அயல் நாட்டுத் துறை கொண்ட பெரிய பாங்குகளில் ஒன்ருக இருக்கும். அது இறக்குமதியாளனிடம் அவ் வுண்டியலைக் காட்டும். அதில் எழுதியுள்ள தொகைக்குத் தன் பாங்குமீது ஒரு செக்கு எழுதித்தந்து கப்பல் ரசீதைப் பெற்று அதைக்கொண்டு துறைமுகத்தில் காப்பிக்கொட்டையை அவன் பெற்றுக்கொள்கிருன்.

இந்த நிதி விவகாரத்தின் விளைவுகளைக் கவனியுங்கள். ஏற்றுமதியாளனுக்குப் பீஸோக்களில் பணம் கிடைத்துவிட்டது. பணமாகவோ, ஏற்றுமதியாளன் பெயரில் உள்ள கணக்கில் வரவு வைத்தோ கொலம்பிய பாங்கு 700,000 பீஸோக்களைச் செலுத்திவிட்டது. இவ்விரண்டு வகையிலும் அந்த பாங்கு புதிதாக ஒரு கடன் அளித்தால் எப்படியோ அப்படியே அந்தத் தொகைக்கு கொலம்பியாவில் பணத்தின் அளிப்பு (supply of money) அதிகமாகியிருக்கிறது. இவ்வாறு தன் சொத்து குறைந்தது, அல்லது தன் பொறுப்பு அதிகமானதற்கு ஈடாக, அதே மதிப்புக்கு நியூயார்க்கில் இப்போது, கொலம்பிய பாங்குக்கு ஒரு வைப்புத் தொகை (deposit) ஏற்பட்டுள்ளது.

**தவணை உண்டியல்கள்** (Time Bills): பாரன்கில்லாவில் (Baranquilla) கப்பலில் காப்பிக்கொட்டை ஏற்றியவுடனே ஏற்றுமதி

1 உண்டியலை ஒப்புக்கொள்வதால் பணம் செலுத்துவதற்கான உத்தரவாதத்தை இறக்குமதியாளன் செய்யாதவரை, அதற்கான முதற்பொறுப்பு உண்டியலை எழுதுபவனுடையது என்பதனுல் இவ் வுண்டியலை வாங்குவதில் பாங்குக்குப் பாதுகாப்பு உண்டு. ஏற்றுமதியாளன் பாங்குக்கு 'உண்டியலை வாங்க உரிமை' (authority to purchase) வழங்குவதன்மூலம் சில சமயம் இறக்குமதியாளனின் பாங்கு முன்னதாகவே உத்தரவாதம் அளிக்கிறது.

யாளனுக்குப் பணம் வேண்டியிருந்தாலோ, அன்றிப் பணம் செலுத்து முன் காப்பியை விற்க நியூயார்க் இறக்குமதியாளனுக்குக் காலத்தவணை அவசியமாக இருந்தாலோ, ஏறக்குறைய ஒரு நீண்ட காலத்துக்குக் கடன்வசதி அளிக்கவேண்டியிருக்கும். சரக்கேற்றிய நாளன்று உண்டியல் வரையப்படுகிறது என்றும், அறுபது நாட்களுக்கு அதன் தொகையை வசூலிக்கலாகாது என்று அதில் எழுதப்பட்டுள்ளது என்றும் கொள்வோம். அப்போது அது 'தரிசன உண்டியல்' ஆகாது; 'தவணை' உண்டியலாகும். முன்போலவே ஏற்றுமதியாளன் அதைத் தன் பாங்குக்கு விற்பான். ஆனால், அதன் விலை தரிசன உண்டியல் விலையைவிடக் குறைவான 60-நாள் உண்டியல்களின் விலையாகும். உதாரணமாக, டாலருக்கு 6·96 பீஸோக்கள் கிடைக்கும். அப்போது ஏற்றுமதியாளனுக்கு மொத்தம் 696,000 பீஸோக்கள் கிடைக்கும்.

இந்த உண்டியலை இப்போது நியூயார்க்கிலுள்ள தன்னுடைய தொடர்புடைய பாங்குக்கு கொலம்பிய பாங்கி அனுப்பும். நியூயார்க் பாங்கி உண்டியலின் 'ஏற்புக்'காக (acceptance) அதை இறக்குமதி யாளனிடம் எடுத்துச் செல்லும். இப்போது அந்த உண்டியல் ஒரு 'வர்த்தக உண்டியல்' (commercial acceptance) ஆகிறது. கொலம்பிய பாங்கி சொல்கிறபடி, நியூயார்க் பாங்கி பணச்சந்தையில் அதைத் தள்ளுபடி போக விற்றுவிடும் அல்லது அதன் தவணைக்காலம் வரை அதை வைத்திருக்கும். முதல் வழியைப் பின்பற்றினால் கொலம்பிய பாங்குக்கு உண்டியலின் மதிப்புக் கழிவு (discount) போக பாக்கித் தொகை, அதாவது, ஏற்றுமதியாளனுக்கு அது கொடுத்த தொகை கிடைக்கும். இவ் விவகாரத்தை நடத்தத் தேவை யான கடன் உதவியைப் பணச்சந்தை அளிக்கிறது. அன்றி, உண்டிய லின் தவணைக்காலம்வரை வைத்திருக்குமாறு கொலம்பிய பாங்கு உத்தரவு இட்டிருந்தால் கடன் தருவது கொலம்பிய பாங்கு ஆகும். அதற்கான கழிவு லாபமும் அதையே சேரும். ஏனெனில், அது உண்டியலின் கழிவு போக மீதத் தொகையைக் கொடுத்து, உண்டியல் செலுத்தப்படும்போது அதன் முழுமதிப்பையும் பெறுகிறது. அறுபது நாட்கள் முடிந்ததும் பணம் செலுத்தச் சொல்லி இறக்குமதியாளனிடம் உண்டியல் காட்டப்படும்.

நியூயார்க்கில் வர்த்தக உண்டியல்களை உடனடியாக விற்க வசதி யில்லை. எனவே, அதற்குப் பதிலாக பாங்கு ஒப்பிய உண்டியல் (banker's acceptance) ஒன்று அநேகமாகப் பயன்படுத்தப்படலாம். அப்படியானால், காப்பியை வாங்கும் அமெரிக்க இறக்குமதியாளன் தன் பாங்கிடம் அது ஒரு கடன் கடிதம் (letter of credit) வழங்கு மாறு ஏற்பாடு செய்வான். குறிப்பிட்ட தொகைக்கு இந்த பாங்கின் மீது, உதாரணமாக சேஸ் மன்ஹாட்டன் பாங்கின் (Chase Manhattan

Bank) மீது ஓர் உண்டியல் எழுதும் உரிமையை கொலம்பிய ஏற்றுமதி யாளனுக்கு இப் பத்திரம் வழங்குகிறது. இந்தக் கடன் கடிதத்தைப் பெற்றதும் அவ்வாறு ஓர் உண்டியல் வரைந்து எப்போதும்போல அவன் அதைக் காசாக்கிக்கொள்ளுவான். அவனது பாங்கி அதைத் தன்னேடு தொடர்புடைய காரண்டி டிரஸ்டு கம்பெனிக்கு அதைத் தபாலில் அனுப்பும். அக் கம்பெனி அதைச் சேஸ் மன்ஹாட்டன் பாங்கி யிடம் ஒப்புதலுக்காகக் காண்பிக்கும். அதன்பின் அவ் வுண்டியலை அது, கொலம்பிய பாங்கு வட்டியைச் சம்பாதிக்க விரும்பினல், உண்டி யலின் தவணைக்காலம்வரை வைத்திருக்கும். இன்றேல் நியூயார்க் பணச்சந்தையில் அதைக் கழிவு போக விற்றுவிடும். அறுபது நாட்களுக்குப் பின் உண்டியலை வைத்திருப்பவர் பணம் பெறுவதற்காக சேஸ் மன்ஹாட்டன் பாங்குக்குக் கொண்டுவருவர். அதற்கான தொகையை இறக்குமதியாளன் சேஸ் மன்ஹாட்டன் பாங்குக்குக் கொடுத்துவிட்டிருப்பான்.

### இறக்குமதிக்கு நிதி ஏற்பாடு

நியூயார்க் பன்னுட்டு நிதி விவகாரங்களுக்கு ஒரு முக்கிய கேந்திர மாகும். நியூயார்க் பாங்குகளுடன் வேறு பல நாடுகளின் பாங்குகள் தொடர்பு கொண்டுள்ளன; பெரும் அளவுக்கு அங்கு டாலர் தொகை களை வைத்திருக்கின்றன. இந்த முக்கிய காரணத்துக்காகவே, எப்படி முந்திய விவகாரத்தில் கொலம்பிய ஏற்றுமதியாளன் செய்தானே அதே போல கொலம்பியாவுக்குள் வரும் இறக்குமதிக்குப் பணம் செலுத்த இறக்குமதியாளன் ஆவன செய்ய முற்படுவான்.

**தரிசன உண்டியல்கள்:** ஓர் அமெரிக்க உற்பத்தியாளனிட மிருந்து 100,000 டாலர் மதிப்புக்கு எந்திரக்கருவிகளை ஒரு கொலம்பிய இறக்குமதியாளன் வாங்குவதாகக் கொள்ளுங்கள். சரக்கு வந்து விட்டது. சரக்கை எடுக்கும்போது இறக்குமதியாளன் பணம் கொடுக்கவேண்டும் என்பது ஏற்பாடு. அவன் தன் பாங்குக்குப் போகிறன். (காப்பி ஏற்றுமதியாளன் உபயோகித்த அதே பாங்குதான் அது என்று கொள்வோம்.) குறிப்பிட்ட தொகையைப் பணம் பெறு பவனுக்குக் (payee) (எந்திரக்கருவிகள் அனுப்பிய அமெரிக்கஏற்றுமதி யாளனுக்குக்) கொடுக்க அதன் 'எழுதப்பெற்றவன்' மீது (அதாவது, காரண்டி டிரஸ்ட் கம்பெனி) வரையப்பட்ட ஒரு தரிசன உண்டியலை வாங்குவான். இவ் வுண்டியலுக்காக இறக்குமதியாளன் பீஸோக்களில் பணமோ, செக்கோ தருவான். உண்டியலை அவன் அமெரிக்க ஏற்றுமதியாளனுக்குத் தபாலில் அனுப்புவான். அதைக் காண்பித்து அவன் காரண்டி டிரஸ்ட் கம்பெனியிடமிருந்து பணம் பெறுவான்.

இவ் விவகாரத்தின் விளைவுகள் எளிதில் புலப்படுகின்றன. பொருள் களைப் பெற்றுக்கொண்டு தன் நாட்டுப் பணத்தை அவற்றுக்காக

இறக்குமதியாளன் செலுத்துகிறான். ஏற்றுமதியாளன் டாலர்களாக அத் தொகையைப் பெறுகிறான். கொலம்பிய பாங்கு நியூயார்க்கில் வைத்துள்ள சொத்துகள் குறைந்துவிட்டன; அதன் பண இருப்பு அதிகமாகிவிட்டது; அல்லது அதன் நடப்பு வைப்புகள் குறைந்து விட்டன. எனவே, கொலம்பியாவில் பணத்தின் அளிப்பு சுருங்கி யிருக்கிறது. ஏனெனில், பணம் புழக்கத்திலிருந்து மறைந்துவிட்டது; அல்லது செக்குகள் வரையக்கூடிய நடப்பு வைப்புகள் (demand deposits) குறைந்துவிட்டன. இறுதியாக, நெடுந்தூரத்துக்கும் ஒரு நாணயத்திலிருந்து மற்றொன்றாகவும் வாங்கும் சக்தி மாற்றப்பட்டு விட்டது. கொலம்பிய பாங்குகள் நியூயார்க்கில் பணம் வைத்திருப்ப தால் இது முடிகிறது. இந்த வைப்புகள் கொலம்பியா ஏற்றுமதி செய்யும்போது அதிகரிக்கின்றன; இறக்குமதி செய்யும்போது குறை கின்றன.

**தவணைச் செலுத்துகைகள் :** பொருள்களைப் பெறும்போது பணம் செலுத்துவது என்ற நிபந்தனையில் இறக்குமதி செய்வதாக நாம் எடுத்துக்கொண்ட உதாரணம் மிகவும் எளியதொரு விவகாரம் ஆகும். பணம் செலுத்துமுன் எந்திரக் கருவிகளை விற்கவென இறக்குமதி யாளன் அறுபது நாள் தவணை கேட்பதாக வைத்துக்கொள்வோம். இதற்கான நிதி வசதிக்குப் பலவகை ஏற்பாடுகள் செய்யலாம். மிக எளிதான ஓர் ஏற்பாடு 'திறந்த கணக்கு' (Open Book Account) முறை ஆகும். அமெரிக்க ஏற்றுமதியாளன் இம் முறையின்படி சரக்கை விற்கிறான்; அதன்படி, இறக்குமதியாளன் ஓர் உண்டியலை வாங்கி அனுப்புவதை எதிர்பார்த்து அறுபது நாட்களோ அதற்கும் அதிக மாகவோ காத்திருக்க ஒப்புக்கொள்கிறான். ஆனால், விற்பவன் வாங்கு பவனை நன்கு அறிந்திருந்து, வாங்குபவனின் நாணயம் மிக உயர்ந்த தாக இருந்தால்தான் இம்முறை பயன்படும்.

இதைவிட அதிகமாகப் பயன்படுத்தப்படுவது டாலர் ஏற்றுமதி உண்டியல் ஒன்றை உபயோகிப்பதாகும். இம் முறையில், தனது பாங்குமூலமாக அதன் நியூயார்க் தொடர்பு ஸ்தாபனமான காரண்டி டிரஸ்ட் கம்பெனியானது அமெரிக்க ஏற்றுமதியாளனுக்கு ஒரு கடன் கடிதம் வழங்குமாறு இறக்குமதியாளன் ஏற்பாடு செய்வான். அதன் படி, அமெரிக்க ஏற்றுமதியாளன் அக் கம்பெனிமீது 100,000 டாலருக்கு ஓர் உண்டியலை வரையமுடியும். அவ் உண்டியலில் அதைக் கொணர் பவருக்கு (bearer)—அதாவது, தவணை முடியும் நாளன்று யார் அதை வைத்திருக்கிறாரோ அவருக்கு—அறுபது நாட்கள் முடிந்ததும் அத் தொகையைத் தருமாறு காரண்டி டிரஸ்ட் கம்பெனிக்கு உத்தரவு இடப் பட்டிருக்கும். எந்திரக்கருவி ஏற்றுமதியாளன் கிளீவ்லண்டு (Cleveland) நகரில் இருப்பதாகக் கொள்வோம். அவன் அந்த உண்டியலைத்

தன் ஊரில் உள்ள பாங்கில் தள்ளுபடி செய்து மாற்றி உடனடியாகப் பணத்தைப் பெறுவான். கிளீவ்லண்டு பாங்கி அதைத் தன்னோடு தொடர்புடைய நியூயார்க் பாங்குக்கு அனுப்பி காரண்டி டிரஸ்டு கம்பெனியின் ஒப்புதலைப் பெறச்செய்யும். அந்த உண்டியல் இப்போது ஒரு பாங்கு ஒப்பிய உண்டியல் ஆயிற்று. அது பணச்சந்தையில் ஒரு வேளை மறுகழிவு செய்யப்பட்டு, அதில் வந்த பணம் கிளீவ்லண்டு பாங்கியின் பெயரில் அதன் நியூயார்க் தொடர்பு பாங்கியில் உள்ள கணக்கில் வைப்பாகச் சேர்க்கப்படலாம். அறுபது நாட்கள் ஆவதற்குச் சற்று முன் கடன் கடிதத்துக்கு ஏற்பாடு செய்தபோது கூறப்பட்ட நிபந்தனைகளின்படி, 100 ஆயிரம் டாலருக்கு காரண்டி டிரஸ்டு கம்பெனியின் பெயருக்கு ஒரு டாலர் தரிசன உண்டியலை கொலம்பிய இறக்குமதியாளன் வாங்குவான். இவ் வுண்டியல் நியூயார்க்குக்குத் தபாலில் அனுப்பப்படும். அதனால் கொலம்பிய பாங்கி காரண்டி டிரஸ்டு கம்பெனியில் வைத்துள்ள அந்தத் தொகைக்கான வைப்பு அக் கம்பெனிக்கு மாறுகிறது. இதைவிட எளிதாக, பணம் தந்திமூலம் மாற்றப்படலாம்.

இந்த விவகாரம், கொலம்பிய இறக்குமதியாளன் நியூயார்க் மீது ஒரு தரிசன உண்டியல் வாங்குவதாக முதலில் கூறப்பட்ட மிக எளிமையான விவகாரத்தோடு ஒப்பிடும்போது சிக்கலானது. ஆனால், இவ்விரு விவகாரங்களின் பொருளாதார விளைவுகளும் ஒன்றே; விவரங்களில் தான் வித்தியாசம்.

## பன்னாட்டு நிதிக் கேந்திரங்களின் பணிகள்

உலகின் ஒவ்வொரு நாடும் பிற பல நாடுகளுடன் ஏதாவதொரு வகையில் பொருளாதார விவகாரங்களை நடத்தி வருகிறது. ஒரு நாட்டில் வசிப்பவர்கள் வேறு பல நாடுகளுடனும் வியாபாரம் செய்கிறார்கள். அவ்வாறு ஒவ்வொரு நாட்டு பாங்குகளும் அத்தகைய ஒவ்வொரு பிற நாட்டிலும் பாங்குகளுடன் ‘தொடர்பு’ உறவு கொள்கின்றன என்று வைத்துக்கொண்டால், இத்தகைய தொடர்பு கொண்ட ஸ்தாபனங்களின் எண்ணிக்கையும், தனித்தனியாக பாங்குகள் வெளிநாடுகளில் வைத்திருக்கும் தொகைகளின் அளவும் மிக மிக அதிகமாக இருக்கும். ஒருசில நிதிக் கேந்திரங்களில்மட்டும் எல்லாப் பன்னாட்டுப் பண விவகாரங்களும் நடப்பதனால் இத்தகைய சிக்கல் தவிர்க்கப்படுகிறது.

இத்தகைய நிதிக் கேந்திரங்களில் இரண்டு மிகவும் முக்கியமானவை; அவை லண்டனும் நியூயார்க்கும். பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகள், மற்றும் ஸ்டர்லிங் பிராந்தியத்தில் (Sterling Area) அடங்கிய அல்லது அத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்ட வேறு பல நாடுகள்

ஆகியவை கடன் வாங்குதல், நிதி விவகாரங்களைத் தீர்த்துக்கொள்ளுதல் ஆகியவற்றுக்கான முக்கியக் கேந்திரமாக லண்டனைப் பயன்படுத்து கின்றன. அந் நாடுகளின் பாங்குகள் லண்டனில் தொகைகளை வைத்துள்ளன. இந்த நிலுவைத் தொகைகள்மீது உண்டியல்கள் வரைந்தும், உண்டியல் தொகைகளை இந் நிலுவைத் தொகைக ளுடன் (balances) சேர்த்தும் உலகின் பிற பகுதிகளுடன் தம் நிதி விவகாரங்களைத் தீர்த்துக்கொள்கின்றன. நாம் முன்னர் பார்த்த கொலம்பியா-ஐக்கிய அமெரிக்க நாடு உதாரணங்களில் உள்ளது போலவே இவ் விவகாரங்கள் தீர்க்கப்படும். டாலர் தொகுதி நாடுகள் (dollar bloc) என்றழைக்கப்படும் நாடுகள் நியூயார்க்கை நிதித் தீர்வகக் கேந்திரமாக அமைத்துக்கொண்டுள்ளன. கரிபியனைச் (Caribbean) சுற்றியுள்ள நாடுகள், கானடா, பிலிப்பீன் குடியரசு (The Philippine Republic), ஜப்பான் ஆகியவை இத் தொகுதி யைச் சேர்ந்தவை.

ஸ்டர்லிங் பிராந்தியமும், டாலர் பிராந்தியமும் ஒன்றுக்கொன்று ஒருவகைத் தொடர்பும் அற்ற நிதிப் பிராந்தியங்கள் அல்ல. பெரும் பாலான நாடுகளின் பாங்குகள் நியூயார்க், லண்டன் ஆகிய இரண்டு இடங்களிலும் நிலுவைத் தொகைகள் வைத்துள்ளன ; தேவைக்குத் தக்கபடி இந்தக் கேந்திரத்தையோ அல்லது மற்றதையோ பயன் படுத்திக்கொள்கின்றன. நியூயார்க், லண்டன் நகரங்களைவிடச் சிறிய அளவில் இதேபோல நிதி விவகாரங்களைத் தீர்ப்பது, நிதி வசதிகள் அளிப்பது ஆகிய பணிகளை வேறு பல நகரங்களும் செய்கின்றன. இவற்றுள் முக்கியமானவை பாரிஸ், பெர்ன் (Berne), ரோம், கொலோன் (Cologne), ஆம்ஸ்டர்டம் (Amsterdam), டோக்கியோ ஆகியவை.

நியூயார்க் போன்ற ஒரு கேந்திரத்தில் நிலுவைத் தொகைகளை பாங்குகள் வைத்துள்ள நாடுகள் அனைத்துக்கும், ஐக்கிய அமெரிக்கா வோடுமட்டுமன்றித் தமக்குள்ளும் டாலர்களில் விவகாரங்களை நடத்திக் கொள்வது மிக எளிதாகும். இவ்வாறு கிரீஸ் நாட்டுக்கு ஏற்றுமதி செய்து அதற்கான பணத்தை பிரேஜில் நாடு டாலர்களில் பெறலாம் ; அதே நாட்டிலிருந்து வரும் இறக்குமதிகளின் விலையை டாலர்களில் செலுத்தலாம். பிரேஜில், கிரீஸ் ஆகிய இரு நாடுகளின் ஏற்றுமதி யாளர்களும் தத்தம் பாங்குகள் நியூயார்க்கில் கொண்டுள்ள தொடர்பு ஸ்தாபனங்கள் வழங்கிய கடன் கடிதங்களின் அடிப்படையில் அந்த நியூயார்க் பாங்குகள்மீது பாங்கு ஒப்பு உண்டியல்களை வரைந்து அவற்றைத் தம் ஊரில் உள்ள பாங்குகளில் கழிவு செய்து மாற்றிக் கொள்ளலாம். அந்த பாங்குகள் அவ் வுண்டியல்கள் நியூயார்க் போய்ச் சேரும்போது அவற்றை மறு கழிவு செய்துகொள்ளும். அவ்வவ் நாட்டின் இறக்குமதியாளர்கள் பணம் செலுத்தும் காலம் வரும்போது,

அவனவனது ஊரில் உள்ள பாங்கிடமிருந்து ஒரு தரிசன உண்டியல் அல்லது தந்திவழி மாற்று ஒன்றை ஒவ்வொருவனும் வாங்குவான். அதன்மூலம் நியூயார்க்கில் பிரேஜில், கிரீஸ் நாட்டவருக்குச் சொந்தமான டாலர்கள், உண்டியல்களுக்கு அவற்றின் தவணைக் காலங்களில் பணம் தரவேண்டிய நியூயார்க் பாங்குகளுக்கு மாற்றப்படுகின்றன. பிரேஜில் ஏற்றுமதியாளனுக்கு குருஜீரோக்களில் (Cruzeiros) பணம் கிடைக்கிறது. கிரேக்க ஏற்றுமதியாளன் டிராக்மாக்களைப் (Drachmas) பெறுகிறான். இறக்குமதியாளர்களும் இவ்வாறே தத்தம் நாணயங்களில் பணத்தைச் செலுத்துகின்றனர். இவ்விரு நாடுகளின் ஏற்றுமதிகள் ஒன்றுக்கு ஒன்று சமமாக இருக்கும் அளவுக்கு அவற்றுக்காகச் செலுத்தவேண்டிய தொகைகள் நியூயார்க்கில் டாலர்களில் தீர்க்கப்படுகின்றன. பிரேஜில்-கிரீஸ் இவ்விரண்டுக்கும் இடையே உள்ள வாணிபத்தைப் பொறுத்தவரை ஒரு குறிப்பிட்ட காலத்தில் எந்த நாட்டின் ஏற்றுமதி அதிகமாக உள்ளதோ அதனுடைய டாலர் நிலுவை அக்காலத்தின் முடிவில் அதிகரிக்கும்; மற்றதன் டாலர் நிலுவை குறையும்.

**ஏன் லண்டனும் நியூயார்க்கும்?**

பல நாடுகளின் வாணிபத்தில் பெரும்பகுதிக்குக் கடன் வசதி, தீர்வக வசதி அளிக்குமாறு இவ்வளவு முக்கியமான கேந்திரங்களாக லண்டனும் நியூயார்க்கும் விளங்குவதற்குக் காரணம் என்ன? இந்நகரங்களில் பெரும் அளவில் தனிச் சிறப்பான பாங்கு வசதிகள் கிடைக்கின்றன. அந் நகரங்களின் பணச் சந்தையினின்று, உண்டியல்களைக் குறைந்த வட்டிக்குக் கழிவு செய்யப் பெரும் அளவில் பணம் கிடைக்கிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் லண்டனில் வெவ்வேறு துறைகளில் விசேஷத் தேர்ச்சி பெற்ற தரகர்களும், வணிகர்களும், பாங்குகளும் தோன்றின என்பதுபற்றி 11ஆம் அத்தியாயத்தில் பார்த்தோம். வணிக உண்டியல்களையும், பாங்குகள் ஒப்பிய உண்டியல்களையும் எந்த அளவுக்கும் கழிவு செய்து கடன்தரத் தேவையான தொகைகளை அளிக்கவும், சேர்த்துத் தரவும் அவர்கள் திறமை பெற்றிருந்தனர். லண்டன் பணச் சந்தையில் முதலீட்டுக்கு வந்த பணத்தொகை பெரும் அளவில் இருந்ததால் உலகில் வேறு எந்த இடத்தையும்விட லண்டனில் உண்டியல் கழிவு விகிதங்கள் குறைவாக இருந்தன. தங்கள் வியாபார நடவடிக்கைகளுக்கான செலவை மேற்கொள்ளவேண்டியுள்ள இறக்குமதியாளர்கள் குறைந்த செலவில் கடன் வசதி கிடைக்கும் லண்டன்மீது உண்டியல்கள் வரையப்படுவதை மேலாகக் கருதியதில் வியப்பொன்றும் இல்லை.

1915-ல் ஃபெடரல் ரிசர்வ் அமைப்பு (Federal Reserve System) ஏற்பட்டு அதன் காரணமாக பாங்குகள் ஒப்பிய உண்டியலுக்கு ஒரு மார்க்கெட் வளர்ந்த பின்னர்தான் நியூயார்க் ஒரு முக்கியமான பன்னாட்டு நிதிக் கேந்திரம் ஆயிற்று. வியாபாரத்திலும், முதலீடு செய்

வதிலும் ஐக்கிய அமெரிக்கா மேன்மேலும் ஈடுபட்டு வருவதாலும், டாலர் நாணயம் ரிசர்வ் பணமாக விளங்குவதாலும், நியூயார்க் தற்காலத்தில் லண்டனுக்குப் போட்டியாக வளர்ந்துள்ளது.

நியூயார்க்கிலும் லண்டனிலும் பெரும்பகுதி விவகாரங்கள் டாலர்களிலும் பவுனிலும்தான் நடக்கின்றன. ஆனால், அதே சமயம் வேறு நாணயங்களும் இங்குப் பயன்படுத்தப்படுகின்றன. உதாரணமாக, ஃபிரான்ஸ், இத்தாலி நாடுகளுடன் நடக்கும் வாணிபத்தில் ஒரு பகுதி பிராங்கு, லீரா நாணயங்களில் நடக்கிறது. பங்குகளின் லாப ஈவுகள், நன்கொடைகள் ஆகியவற்றை அனுப்புவதற்காகப் பல நாடுகளின் நாணயங்களுக்கு எப்போதும் தேவை இருந்துகொண்டே இருக்கும். அந்த நாடுகளிலும் இதே காரணங்களுக்காக டாலர்களுக்குத் தேவை ஏற்படுகிறது. எனவே, பல நாடுகளில், அநேகமாக லண்டனின் பெரிய பாங்குகளின் கிளைகளில் நியூயார்க், லண்டன் நகரத்து பாங்குகள் நிலுவைத் தொகைகளை வைத்திருக்கின்றன. அதனால் எப்போதும் இத் தொகைகளை உபயோகித்து உண்டியல்களையும், தந்திவழி மாற்றுகளையும் வாங்கவும் விற்கவும் அவை தயாராக இருக்கின்றன.

## நாணயமாற்று வீதங்கள்

நாணயமாற்று அங்காடி, அதன் செயல்முறை ஆகியவற்றைப் பற்றிக் கூறும்போது இரு நாணயங்களுக்கிடையே ஆன மாற்று விகிதம் அப்படியே எடுத்துக்கொள்ளப்பட்டது. அது எவ்வாறு நிர்ணயமாகிறது? அது எவ்வாறு ஏறி இறங்குகிறது என்பவற்றை எல்லாம் அங்குக் கருதவில்லை. அவற்றை இப்போது பார்ப்போம்.

### நாணயமாற்று வீதங்களின் முக்கியத்துவம்

ஒரு நாட்டின் பணம் பிறநாடுகளின் பணங்களுக்கு மாற்றப்படும் விகிதம் அப் பணத்தின் வெளி மதிப்பைக் காட்டுகிறது. பொருள்கள், உற்பத்திக் காரணிகள் ஆகியவற்றின் அந் நாட்டு விலைகளுக்கும் உலகின் பிறநாடுகளில் அவற்றின் விலைகளுக்கும் அது ஒரு நேரிடைத் தொடர்பாக இருக்கிறது. அந் நாட்டிலும், வெளியிலும் விலைகள் ஒரு குறிப்பிட்ட அளவில் இருக்கும்போது நாணயமாற்று விகிதங்கள் தாழ்ந்து இருந்தால் (அதாவது, அந் நாட்டுப் பணத்தில் வெளிநாட்டு நாணயங்களின் விலை குறைவாக இருந்தால்), ஏற்றுமதிகள் பாதிக்கப்படும்; இறக்குமதிகள் தூண்டப்படும். அதன் விளைவாக அந் நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் பற்றுக்குறை ஏற்படும். அவ்வாறன்றி நாணயமாற்று வீதங்கள் உயர்வாக இருந்தால் அவை ஏற்றுமதிகளைத் தூண்டிவிட்டு இறக்குமதிகளைக் கட்டுப்படுத்தி செலுத்துநிலையில் உபரியைத் தோற்றுவிக்கும்.

ஒரு நாட்டின் ஏற்றுமதித்திறனை நிர்ணயிப்பதில் நாணயமாற்று வீதங்கள் கொண்டுள்ள முக்கியமான பங்கைப் பின்வரும் எடுத்துக் காட்டால் விளக்கலாம் : ஐக்கிய அமெரிக்கா, பிரிட்டன் ஆகிய இரு நாடுகளிலும் உற்பத்தியாகும் சில பொருள்களை எடுத்துக்கொள்வோம் ; அமெரிக்காவில் உற்பத்தி செய்தால் எந்த அளவுக்கு ஒரு டாலர் செல வாகுமோ அந்த அளவை இப் பொருள்கள் ஒவ்வொன்றுக்கும் அலகாக (unit) எடுத்துக்கொள்வோம். அமெரிக்காவில் ஒவ்வொரு பொருளுக் கும் இவ்வாறு எடுத்துக்கொள்ளப்பட்ட அளவின் உற்பத்திச் செலவு 17·1 பட்டியலின் முதல் பத்தியில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இங்கி லாந்தில் இதே அளவுக்கு அந்தப் பொருள்களை உற்பத்தி செய்ய ஆகக்கூடும் என்று அனுமானிக்கப்பட்ட செலவை ஷில்லிங், பென்னி யில் இரண்டாவது பத்தியில் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஒரு டாலர் உற்பத்திச் செலவு ஆகும் அளவையே அலகாக நாம் எடுத்துக்கொண்ட தனால் எல்லாப் பொருளின் அமெரிக்க விலையும் ஒன்றாக (ஒரு டாலராக) இருக்கும். ஆனால், பிரிட்டனில் விலைகள் மிகவும் மாறுபடும். இம் மாறுதல் குறைந்தபட்சம் மார்கரீனுக்கு 4 ஷில்லிங்கிலிருந்து அதிக பட்சம் டப்பாக்களுக்கு (tin cans) 10 ஷில்லிங் வரை மாறுபடும்.

## பட்டியல் 17·1. விலைகளும் நாணயமாற்று வீதங்களும்

| பொருள் | அமெரிக்காவில் அடக்க விலை டாலரில் | பிரிட்டனில் அடக்கவிலை: ஷில்லிங் பென்னியில் | டாலரில்: £1 = $5 வீதம் | £1 = $4 வீதம் | £1 = $2·80 வீதம் |
|---|---|---|---|---|---|
| | (1) | (2) | (3) | (4) | (5) |
| மார்கரீன் (Margarine) | $ 1 | 4/— | $ 1·00 | $ 0·80 | $ 0·56 |
| கம்பளித்துணி | 1 | 4/3 | 1·06 | 0·85 | 0·60 |
| பருத்தித்துணி | 1 | 4/8 | 1·16 | 0·93 | 0·65 |
| சிகரெட்டுகள் | 1 | 5/— | 1·25 | 1·00 | 0·70 |
| லினோலியம் | 1 | 5/6 | 1·38 | 1·10 | 0·77 |
| காகிதம் | 1 | 6/— | 1·50 | 1·20 | 0 84 |
| கண்ணாடிப் புட்டிகள் | 1 | 7/— | 1·75 | 1·40 | 0·98 |
| ரேடியோக் குழாய்கள் (Radio tubes) | 1 | 8/— | 2·00 | 1·60 | 1·12 |
| வார்ப்பிரும்பு | 1 | 9/— | 2·25 | 1·80 | 1·26 |
| டப்பாக்கள் (Tin cans) | 1 | 10/— | 2·50 | 2·00 | 1·40 |

உற்பத்திக் காரணிகளின் விலைகளிலும், அவை சேர்க்கப்படும் விகிதங்களிலும் உள்ள வேறுபாடுகளையும், எவ்வளவு பெருத்த அளவில் உற்பத்தி நடக்கிறது என்பதையும் பொறுத்து ஒவ்வொரு பொருளுக்கும் அதன் அமெரிக்க விலை, பிரிட்டிஷ் விலை இவ்விரண்டுக்கும் உள்ள வித்தியாசத்தின் அளவு உள்ளது. பிரிட்டனில் உள்ளதைப்போன்று அமெரிக்காவில் சராசரி கூலி அளவு 2½ மடங்கு அதிகமாக உள்ளது. ஆனால், எந்திரப் பொருள்களை உபயோகிப்பதால் ஆகும் செலவு ஒரு சிறு அளவுக்கு அமெரிக்காவில் குறைவாக உள்ளது. எனவே, இப் பட்டியலில் முதலில் கொடுக்கப்பட்ட பொருள்களின் விலை பின்னர்க் கூறப்படும் பொருள்களின் விலைகளோடு ஒப்பிடும்போது குறைவாக உள்ளன. முதலில் கூறப்பட்ட பொருள்கள் பின்னால் கூறப்பட்டவைகளைவிட உழைப்பை அதிகமாகப் பயன்படுத்துபவை. பட்டியலின் இறுதியில் உள்ளவற்றின் உற்பத்தியில் முதற்பொருள்கள் அதிகமாகப் பயனுகின்றன. இவற்றில் பெரிய அளவு உற்பத்தியும் அதனால் செலவுச் சிக்கனமும் ஏற்படும் வாய்ப்பும் உண்டு. இவற்றின் விலைகள் பிறவற்றோடு ஒப்பிடும்போது அமெரிக்காவில் குறைவாக இருக்கும்.

மூன்று வெவ்வேறு நாணயமாற்று விகிதங்களில் இந்த வெவ்வேறு பிரிட்டிஷ் விலைகள் பின்னர் டாலர், செண்டுகளாக மாற்றப்பட்டுள்ளன. £ 1 = $ 5 என்ற நாணயமாற்று விகிதத்தில் பிரிட்டிஷ் உற்பத்தியாளர்கள் அமெரிக்கா அல்லது பிற நாடுகளைச் சேர்ந்தவர்களிடம் கேட்கவேண்டிய விலைகள் மூன்றாவது பத்தியில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. £ 1 = $ 4, £ 1 = $ 2·80 ஆகிய நாணயமாற்று வீதங்களுக்கு ஏற்ற மிகவும் மாறுபட்ட விலைகள் நான்காவது பத்தியிலும் ஐந்தாவது பத்தியிலும் உள்ளன.[2]

போக்குவரத்துச் செலவுகளை மறந்துவிட்டுக் கவனிப்போம். $ 5 அளவுக்கு உயர்ந்த ஒரு மதிப்பு அல்லது நாணயமாற்று வீதம் பவுனுக்கு இருக்குமேயானால் அமெரிக்காவுடன் போட்டியிட்டு இங்கிலாந்தால் பட்டியலில் முதலாக உள்ள மார்கரின் ஒன்றைத்தான் விற்க

[2] பிரிட்டனில் பண அலகுகள்பற்றிப் பரிச்சயம் இல்லாதவர்களுக்காக பவுனுக்கு 20 ஷில்லிங்குகள். ஒரு ஷில்லிங்குக்கு 12 பென்னிகள். ஆக, £ 1 = $ 5 என்ற நாணயமாற்று வீதத்தில், ஒரு ஷில்லிங்கின் மதிப்பு $ 5-ல் 1/20 பாகம், அதாவது, 25 செண்டுகள்; ஒரு பென்னி என்பது 25 செண்டில் 1/12 பங்கு, அல்லது தோராயமாக 2 செண்டு. £ 1 = $ 4 என்ற விகிதத்தில், 1 ஷில்லிங் = 20 செண்டு; 1 பென்னி = 1·67 செண்டு. £ 1 = $ 2·80 என்ற விகிதத்தில், 1 ஷில்லிங் = 14 செண்டு; 1 பென்னி = 1·167 செண்டு.

முடியும்.[3] மீதி எல்லாப் பொருள்கள் விஷயத்திலும் பிரிட்டிஷ் விலைகளைவிடக் குறைவாக அமெரிக்காவில் விற்க முடியும். பிரிட்டிஷ் ஏற்றுமதிகளின் மொத்த அளவும் மதிப்பும் மிகக் குறைவாக இருக்கும். இறக்குமதிகள் தீவிரமாகக் கட்டுப்படுத்தப்படாவிட்டால் அவற்றின் மதிப்பு ஏற்றுமதிகளின் மதிப்பைவிட மிகவும் அதிகமாகிவிடும். தன் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் பிரிட்டன் தீவிரமான சமனறு நிலையை அடையும்.

இதற்கு மாறாக, £ 1 = $ 2·80 என்ற நாணயமாற்று வீதத்தில் அமெரிக்க விலையைவிடக் குறைவான விலைக்கு பிரிட்டன் கடைசி மூன்றைத் தவிர பிற எல்லாப் பொருள்களையும் விற்க முடியும். இதனால் அதன் ஏற்றுமதிகள் அதிகரிக்கும்; இறக்குமதிகள் மிகவும் குறையும். செலுத்துநிலையில் பற்றுக்குறைக்குப் பதிலாக இங்கிலாந்து பெரிய உபரியை அடையக்கூடும். இவ்விரண்டுக்கும் இடையில் உள்ள பவுனுக்கு 4 டாலர் விகிதத்தில் முதல் மூன்று பொருள்களை அமெரிக்க விலையைவிடக் குறைவாக பிரிட்டன் விற்க முடியும். நான்காவது பொருளை அமெரிக்க விலைக்கே விற்றுப் போட்டியிடலாம். ஆனால், அடுத்த ஆறு பொருள்களை அமெரிக்கர்கள் பிரிட்டிஷ் உற்பத்தியாளர்களைவிடக் குறைந்த விலைக்கு விற்க முடியும்.

இந்த எடுத்துக்காட்டிலிருந்து நாணயமாற்று அங்காடியில் நாட்டின் ஒரு நாணயத்துக்குக் கூறப்படும் விலை மிகவும் முக்கியமானதொரு விஷயமாகும் என்பது தெள்ளெனத் தெரிகிறது. உள்ளூர் விலைகள் வெளிநாட்டு விலைகளாகவும், வெளிநாட்டு விலைகளை உள்நாட்டு விலைகளாகவும் மாற்றுவது நாணயமாற்று வீதத்தின் அடிப்படையில்தான். ஆகையால் ஒரு நாட்டின் பன்னாட்டு விவகாரங்களில் நாணயமாற்றுவீதம் ஒரு மையமான இடத்தை வகிக்கிறது. அதனால் எவ்வாறு நாணயமாற்று வீதங்கள் நிர்ணயிக்கப்படுகின்றன? அவை ஏன் மாறுகின்றன என்பவற்றைக் கூர்ந்து கவனிப்பது அவசியமாகிறது. இப் பிரச்சினைகளை அடுத்த அத்தியாயத்தில் ஆராயலாம்.

### சில துறைநுட்ப விவரங்கள் (Technicalities)

அயல்நாட்டு நாணயத்தின் அலகு ஒன்றுக்கு உள்நாட்டு நாணயத்தில் கூறப்படும் விலை என்று நாணயமாற்று விகிதத்துக்குச் சாதாரண

[3] டாலர் அளவில் பவுனின் மதிப்பு அதிகமாக இருந்தால், குறிப்பிட்ட டாலர் மதிப்புகள் கொண்ட பிற நாணயங்களின் அளவிலும் பவுனின் மதிப்பு அதிகமாக இருக்கும். எனவே, பிற நாடுகளுடன் விலைகளை ஒப்பிடுவது அவசியமில்லை. ஒப்பிடும் பொருள்களின் பட்டியல் மாறுபடுமே தவிர விலைகளை ஒப்பிடுவது இதேபோலத்தான் இருக்கும்.

மாக இலக்கணம் கூறப்படுகிறது. உள்நாட்டு நாணயத்தின் ஓர் அலகுக்கு வெளிநாட்டுப் பணத்தில் கூறப்படும் விலை என்று அதை விவரித்தாலும் தகும். ஏனெனில், ஒரு நாட்டுப் பணத்தின் விலை அல்லது மதிப்பை மற்றொன்றை அளவாகக் கொண்டு உரைப்பதே நாணயமாற்று வீதமாதலின் எந்த நாணயத்தில் விலை விகிதத்தில் கூறினாலும் பாதகம் இல்லை. எல்லா நாணயங்களின் மாற்று விகிதங்களையும் ஒரு பவுனுக்கு இவ்வளவு அன்னியச் செலாவணி அலகுகள் என்றே விலைப்புள்ளி கூறுவது தொன்றுதொட்டு பிரிட்டிஷாரின் வழக்கமாக இருந்து வருகிறது. நியூயார்க்கிலும், பிற நிதிக் கேந்திரங்களில் பெரும்பாலானவற்றிலும் இதற்கு நேர் எதிரான முறை வழங்குகிறது. வெளிநாட்டு நாணயங்களின் விலைகள் உள்நாட்டு நாணயத்தின் அளவில் கூறப்படுகின்றன. 1949-லிருந்து பவுனின் நாணய மாற்றுவீதம் $ 2·80-க்குச் சிறிது மேலோ கீழோ இருந்துவந்திருக்கிறது. டாலருக்கும் பிராங்குக்கும் இடையான விகிதம் (ஃபிரெஞ்சு பிராங்குக்கு) 1958-லிருந்து ஏறக்குறைய $ 0·2041 ஆக இருந்து வந்திருக்கிறது.

விலைப்புள்ளி எவ்வாறு தரப்படுகிறது என்பது முக்கியமன்று. எந்த ஒரு குறிப்பிட்ட உதாரணத்திலும் இந்த விகிதம் எவ்வாறு கூறப்பட்டிருக்கிறது? அது எந்த நாட்டின் கண்ணோக்கிலிருந்து கருதப்படுகிறது என்பதை நீங்கள் நன்கு உணர்ந்திருக்க வேண்டும் என்பதுதான் முக்கியம். நாணயமாற்று விகிதத்தின் மாறுதல்களை ஆராயும்போது இது மிகவும் அவசியமாகும். உதாரணமாக, டாலர் பிராங்கு விகிதம் $ 0·2041-லிருந்து $ 0·2032-க்கு விழுந்தது என்றால், பிராங்கின் மதிப்புக் குறைந்ததையும், டாலரின் மதிப்பு உயர்ந்ததையும் அது காட்டுகிறது. பாரிஸில் அதே சமயம் பிராங்கு–டாலர் விகிதம் 4·90 பிராங்கு/$-லிருந்து 4·92-க்கு உயர்வது அதே விளைவுகளைக் காட்டும்.

நாணயங்களுக்கிடையே இவ்வாறு இருமுகமான உறவு இருப்பதால்தான் நாணயமாற்றுப் பிரச்சினைகள் சம்பந்தமாக நிறையக் குழப்பம் ஏற்படுகிறது. இதனால் ஏற்படக்கூடிய சிக்கல்களைக் குறைக்க எப்போதும் (1) எந்த நாணயத்தின் அளவில் நாணயமாற்று விகிதம் கூறப்படுகிறது? உள்நாட்டுப் பணத்திலா? வெளிநாட்டுப் பணத்திலா? (2) எந்த நாட்டைப் பொறுத்து அந்த விகிதமோ அதன் மாற்றமோ கருதப்படுகிறது என்ற விஷயங்களை நிச்சயமாக அறிந்து கொள்ளவும்.

### ஆர்பிட்ரேஜ் (Arbitrage)

நாணயமாற்று அங்காடிகள் கட்டுப்பாடுகள் ஏதும் இல்லாமல் இருந்தாலோ அன்றி மிகச் சிறிய அளவுக்கே கட்டுப்பாடுகள் இருந்

தாலோ, அந்த அங்காடிகளுள் ஒன்றில் இரு நாணயங்களுக்கு இடையே உள்ள மாற்றுவீதம்தான் மற்ற அங்காடியிலும் இருக்கும். உதாரணமாக நியூயார்க்கில் பவுனுக்கு $ 2·80 விலை கூறப்படுகிறது என்றால் லண்டனிலும் அது $ 2·80 ஆகத்தான் இருக்கும். ஏனெனில், வரம்பின்றி டாலர்களையும் பவுன்களையும் வாங்கவும் விற்கவும் நாணய வணிகர்களுக்குச் சுதந்திரம் இருக்கும்போது நியூயார்க்கில் $ 2·80 வீதமும், லண்டனில் $ 2·85 வீதமும் வழங்கினால், அவர்கள் நியூயார்க்கில் குறைந்த விலைக்கு டாலர்களைக் கொடுத்துப் பவுன்களை வாங்கி லண்டனில் அவற்றை டாலர்களுக்கு அதிக விலைக்கு விற்று, வாங்கி விற்ற ஒவ்வொரு பவுனுக்கும் 5 செண்டு லாபம் பெறுவர். இதனால் நியூயார்க்கில் பவுனுக்குத் தேவை அதிகமானதால் அதன் விலை அங்கு உயரும். லண்டனில் அதே சமயம் டாலர்களைக் கோரி அளிக்கப்படும் பவுன்களின் அளவு அதிகம் ஆவதால் அதன் விலை குறையும்; இரண்டு விகிதங்களும் ஒன்றை ஒன்று நெருங்கும். இவற்றுக்குள் வித்தியாசம் இருந்தால் அது மிகச் சிறியதாக, இவ் விவகாரங்களை நடத்த ஆகும் செலவு அளவுக்குத்தான் இருக்கும். இவ் விவகாரங்கள் பெரும் தொகைகளுக்குச் செய்யப்படுவதால் இச் செலவு பவுன் ஒன்றுக்கு மிக மிகக் குறைவாகவே இருக்கும். இத்தகைய நடவடிக்கைகளுக்கு ‘ஆர்பிட்ரேஜ்’ என்று பெயர்.

இரு நாணயங்களில்மட்டும் ஆர்பிட்ரேஜ் நடவடிக்கைகள் நடந்தால் அது இருமுனை ஆர்பிட்ரேஜ் (two-point arbitrage) எனப்படும். ஆனால், ஆர்பிட்ரேஜ் இரு நாணயங்களோடு மட்டும் நிற்பதில்லை. நாணயமாற்றுக் கட்டுப்பாடுகள் இல்லாதபோது மும்முனை (மற்றும் அதற்கும் அதிகமானதுமான) ஆர்பிட்ரேஜ் கூட சகஜமாக நடப்பதுண்டு. உதாரணமாக, டாலர்/ஸ்டர்லிங் விகிதம் $ 2·80 ஆகவும், பிராங்கு/டாலர் விகிதம் டாலருக்கு 4·90 பிராங்கு ஆகவும், பவுனுக்கும் பிராங்குக்குமான எதிரின விகிதம் (cross rate) பவுனுக்கு 13·97 பிராங்க் ஆகவும் இருப்பதாகக் கொள்வோம். ஆர்பிட்ரேஜ் வணிகர்கள் டாலர்களுக்குப் பவுனை வாங்கி, ஒவ்வொரு பவுனையும் லண்டனில் பிராங்காக மாற்றி, இவ்வாறு பெற்ற பிராங்குகள் அனைத்தையும் நியூயார்க்கில் விற்று டாலர்களைப் பெறுவர். $ 2·80 முதலீடு செய்தால், அவர்களுக்கு $ 2·85 கிடைக்கும் (13·97/4·9 = 2·85). கணக்கைச் சுலபமாக்குவதற்காக டாலர்/பவுன் விகிதமும் பிராங்கு/டாலர் விகிதமும் மாறுமல் இருப்பதாகக் கொள்வோம். அப்போது பிராங்கின் பவுன் மதிப்பு, பிராங்கின் டாலர் மதிப்புக்கு ஏற்றவாறு மாறும்வரை ஆர்பிட்ரேஜ் நடவடிக்கைகள் தொடரும். அதாவது, பிராங்கு/பவுன் விகிதம் பவுனுக்கு 13·72 பிராங்குகளாகும் வரை ஆர்பிட்ரேஜ் நடக்கும். லண்டனில் தொடர்ந்து பிராங்குகள் வாங்கப்படுவதனால் பிராங்கின் மதிப்பு உயரும். அதாவது, ஒரு

பவுனுக்குக் கிடைக்கக்கூடிய பிராங்குகளின் எண்ணிக்கை குறையும். ஆர்பிட்ரேஜ் நடவடிக்கைகளின் விளைவாக மூன்று நாணய மார்க்கெட்டுகள் நடைமுறையில் ஒன்றாக இணைகின்றன. எதிரின விகிதங்கள் ஒன்றுக்கு ஒன்று ஒத்துப்போகின்றன. நாணயமாற்று அங்காடிகள்மீது கட்டுப்பாடுகள் இல்லாத அளவுக்கு உலகத்தில் உள்ள எல்லா மர்க்கெட்டுகளும் இவ்வகையான ஆர்பிட்ரேஜ் நடவடிக்கைகளால் ஒன்றாக்கப்படுகின்றன.

அன்னியச் செலாவணியை வாங்குவது, விற்பதன்மீது உறுதியான கட்டுப்பாடுகள் நன்கு செயலாற்றுமாறு விதிக்கப்பட்டால் ஆர்பிட்ரேஜ் நடவடிக்கைகள் நடக்க முடியாது. நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளின்படி ஒரு நாட்டில் வசிப்பவர்கள் தாம் சம்பாதிக்கும் அந்நியச் செலாவணி அனைத்தையும் அதிகாரிகளிடம் கொடுத்துவிட வேண்டும்; ஒருசில அங்கீகரிக்கப்பட்ட காரணங்களுக்காகத்தான் அவர்கள் அன்னியச் செலாவணியை வாங்க முடியும். நாம் எடுத்துக் கொண்ட உதாரணத்தில் ஃபிரான்ஸ் நாடு அத்தகைய கட்டுப்பாடுகளை விதித்திருந்தால், ஆர்பிட்ரேஜ் வணிகர்கள் குறைந்த பிராங்கு/பவுன் வீதத்துக்குப் பவுன்களைக் கொடுத்து பிராங்குகளை வாங்க முடியாது. எனவே, அத்துடன் ஒப்பிட்டால் அதிகமாக உள்ள பிராங்கு/டாலர் வீதத்துக்குப் பிராங்குகளை விற்கும் நடவடிக்கையும் முழுமையாகத் தடைபட்டுப்போகிறது. அப்படியானால் டாலர்/பவுன், டாலர்/பிராங்கு விகிதங்களுக்குப் பொருந்துமாறு பிராங்கு/பவுன் விகிதம் இல்லாமல் போகலாம். நாணயமாற்றுக் கட்டுப்பாடுகள் இருக்கும்போது சாதாரணமாக இத்தகைய 'ஒழுங்கீனமான' (disorderly) எதிரின விகிதங்களும் இருக்கும்.

## முன்னோக்கிய நாணயமாற்று
## (Forward Foreign Exchange)

### நாணயமாற்று விகித மாற்றங்களின் இடர்

எந்த வியாபாரியையும்போன்று, ஏற்றுமதி வாணிபத்தில் ஈடுபட்டுள்ள தனியார்களும் கம்பெனிகளும் தாங்கள் வாங்கும் விலைக்கும், விற்கும் விலைக்கும் உள்ள வித்தியாசத்திலிருந்து தங்கள் லாபத்தைப் பெறுகின்றனர். அவர்கள் உற்பத்தியாளர்களாக இருந்தால் அவர்களுடைய அடக்க விலைக்கு அதிகமாக விற்பதனால் அவர்களுக்கு லாபம் உண்டாகிறது. ஆனால், ஓர் ஏற்றுமதியாளன் தன் வியாபாரத்தை ஓர் அன்னிய நாணயத்தின் அடிப்படையில் நடத்துவதாக இருந்தால் (அதாவது, ஓர் அன்னிய நாணயத்தில் ஏற்றுமதி உண்டியல் வரைவதன் மூலம் தான் ஏற்றிய சரக்குக்குப் பணம்பெற ஏற்பாடு செய்வது

வழக்கம் என்றால்) அவன் சரக்கேற்ற ஒப்பந்தம் செய்துகொண்ட நாளுக்கும், பணம்பெற ஒப்புக்கொண்ட நாளுக்கும் இடையே அந்த அன்னிய நாணயத்தின் மதிப்பு விழுந்தால் அவனது வியாபார லாபம் அடியோடு மறைந்து போகலாம்; அல்லது மோசமான அளவுக்குக் குறைந்து போகலாம். பொன் நாணயத் திட்டம் (gold standard) வழங்கி வந்தபோது நாணயமாற்று விகித மாற்றங் களினால் ஏற்படும் நஷ்ட பயம் மிகவும் குறைவு. ஆனால், மாறும் நாணயமாற்று வீதத் திட்டத்தில் (fluctuating exchange rates) இந்த நஷ்ட பயம் மிக அதிகம். முன்னேக்கிய நாணயமாற்றுக்கு ஓர் அங்காடி இருந்தால் இந்த நஷ்ட பயத்தை வியாபாரி தவிர்த்துத் தனக்கு இயல்பான பணிகளை ஆற்றுவதில் முழு மூச்சுடன் ஈடுபடலாம். அத்தகைய முன்னேக்கிய நாணயமாற்றுச் சந்தையில் பின்னர் ஒரு தேதியில் தன் கைக்கு வரக்கூடிய அன்னியச் செலாவணிக்கு நிலையான ஒரு விலையைப் பெறக்கூடிய உத்தரவாதம் ஏற்றுமதியாள னுக்குக் கிடைக்கிறது.

உதாரணமாக, அமெரிக்காவுக்கு ஒயின் மது ஏற்றுமதி செய்யும் ஒரு ஃபிரெஞ்சுக்காரனை எடுத்துக்கொள்வோம். அமெரிக்காவில் மது வாங்குவோருக்காக இலையுதிர் காலத்தில் ஒயினைக் கப்பலேற்றப் போகிறான் என்பதும், சுமார் எவ்வளவு ஒயின் அனுப்பப்படும் என்பதும் அவனுக்கு வசந்த காலத்தின் பிற்பகுதியிலே தெரிகிறது என்று கொள்வோம். முன்னதாகவே குறிப்பிட்ட ஒரு மாற்று வீதத்தில் ஒரு குறிப்பிட்ட அளவு டாலர்களைத் தொண்ணூறு நாட்களுக்குப் பிறகு வாங்கிக்கொள்வதாகத் தன் பாங்கிடமிருந்து அவன் ஓர் ஒப்பந்தத்தைப் பெற்றுக்கொண்டானானால், அதன்மூலம் பிராங்கு/டாலர் நாணயமாற்று வீதத்தில் மாறுதல்கள் ஏற்படுவதனால் ஏற்படக்கூடிய எந்த நஷ்டத்தையும் அவன் தவிர்த்துவிடுவான். பிராங்கு/டாலர் வீதம் குறைவதால்தான் ஒயின் அனுப்ப ஒப்புக் கொண்ட மொத்த டாலர் தொகைக்குக் கிடைக்கும் பிராங்குப் பணத்தின் அளவு குறையக்கூடிய இடருக்கு மாற்றாக 'எதிர்க்காப்பு' (hedge) செய்ய முன்னேக்கிய நாணயமாற்று வசதி இருப்பதால் அவனால் முடிகிறது. இதனால் ஏற்படக்கூடிய நஷ்டத்தை அந்த பாங்குதான் மேற்கொள்ளும். ஆனால், அந்த நஷ்டத்தைச் சரிக் கட்டவோ அல்லது அதை வேறொருவருக்கு மாற்றிவிடவோ அந்த பாங்குக்கு வழி உண்டு என்பதை நாம் பின்னர் பார்ப்போம்.

அதேபோலத்தான் இறக்குமதியாளனுக்கும்; வெளிநாட்டு ஏற்றுமதியாளர்களிடம் சரக்கை வாங்க ஆர்டர் (order) கொடுத்த வுடன், இன்னும் சில நாட்களில் அதாவது, அறுபது அல்லது தொண்ணூறு நாட்களில் தான் அன்னியச் செலாவணி வாங்கப்

போகிறோம் என்பதை அவன் அறிகிறான். ஒரு குறிப்பிட்ட மாற்று விகிதத்துக்கு அன்னியச் செலாவணியைத் தனக்குத் தேவை வரும் போது தரவேண்டும் என முன்னதாகவே தன் பாங்கிடம் அவன் ஒப்பந்தம் பெற்றுக்கொண்டானானல் நாணயமாற்று வீதம் அதிக மாவதால் தன் இறக்குமதிகளின் அடக்கவிலை உயர்வதைத் தவிர்த்து அதனால் ஏற்படக்கூடிய நஷ்டத்துக்கு எதிர்க்காப்புச் செய்ய முடியும்.

உதாரணமாக, ஓர் அமெரிக்க ஏற்றுமதியாளனிடம் 10,000 டாலர் மதிப்புக்குப் புகையிலையை ஒரு ஃபிரெஞ்சு இறக்குமதியாளன் வாங்க ஆர்டர் கொடுக்கிறான். சரக்கு 90 நாட்களில் அனுப்பப்படவேண்டும். சரக்கு வந்ததும் தரிசன உண்டியல் மூலமாகப் பணம் செலுத்தப்பட வேண்டும். தான் ஆர்டர் கொடுத்தபோது இருந்ததைவிடப் பணம் செலுத்தவேண்டிய நேரத்தில் ஒரு டாலருக்கு ஈடாக அதிகம் பிராங்குகளைத் தரவேண்டியிருக்கலாம் என்று இறக்குமதியாளன் நினைத்தால் தன் பாங்கிடம் 10,000 டாலரை முன்னோக்கி வாங்கும் வாய்ப்பை அவன் வரவேற்பான்.

நாணயமாற்று வீதம் அவர்களுக்குச் சாதகமாக மாறினாலோ ஏற்றுமதியாளன், இறக்குமதியாளன் இருவருமே நஷ்டமடைவதற்குப் பதிலாக லாபமடையக்கூடும். ஏற்றுமதியாளனைப் பொறுத்த வரையில் பிராங்கு/டாலர் வீதம் உயர்ந்தால் அவனுக்கு அதிகமாக பிராங்குகள் கிடைக்கும்; அதனால் சாதாரணமாகப் பெறும் வியாபார லாபத்தைவிட அதிகமாக அவன் லாபமடைவான். அதேபோல பிராங்கு/டாலர் வீதம் விழுந்தால் இறக்குமதியாளனின் லாபம் அதிகரிக்கிறது. நாணயமாற்று வீதம் எவ்வாறு மாறும் என்பது தெரியாதபோது சாதாரண வியாபார நஷ்டத்தோடு மேலும் நஷ்டம் ஏற்படக்கூடிய அபாயம் இருப்பதுதான் இங்கு முக்கியமாக உணர வேண்டிய விஷயமாகும். வெளிநாட்டு வாணிபத்தில் ஈடுபடுபவன் வியாபார நடவடிக்கைகளில்மட்டும் முழுக்கவனமும் செலுத்த விரும்பும்போது இந்த நஷ்ட பயத்தை வேறு யார்மீதாவது சுமத்தி விடுவான். ஆனால், நாணயமாற்று வீதம் எதிர்காலத்தில் மாறுவதைப் பற்றி ஊக வாணிபம் செய்ய (speculate) அவன் விரும்பினால், இவ்வாறு நஷ்ட அபாயத்தை மற்றொருவனிடம் தள்ளிவிடமாட்டான்.

**முன்னோக்கி நாணயமாற்று அங்காடியில் பாங்குகளின் பணி**

இறக்குமதியாளருக்கு முன்னோக்கி அன்னியச் செலாவணி விற்க ஒப்புக்கொள்ளும் பாங்கு அதே சமயம் ஏற்றுமதியாளர்களிடம் முன்னோக்கி அன்னியச் செலாவணி வாங்க ஒப்பந்தம் செய்து கொள்ளும். முன்னோக்கி வாங்கினதும் முன்னோக்கி விற்றதும் ஒரே அளவாக இருக்கும்வரை ஒரு பாங்கு இந்தப் பக்கமும் சாராமல் அந்தப்

பக்கமும் சாராமல் இருக்கும். அதற்கு எந்த நஷ்டமும் ஏற்படக் கூடிய பயம் இல்லை. தன்னுடைய வாங்கும் விகிதம், விற்கும் விகிதம் இரண்டும் அதற்கு முன்னதாகவே தெரியும்; தன் விவகாரங்கள்மீது ஒரு கமிஷன் பாங்குக்குக் கிடைக்கக்கூடிய அளவுக்குதான் இவ் விரண்டும் வித்தியாசப்படும். முன்னோக்கிய ஒப்பந்தங்களின் தவணைக் காலத்தில் உடனடி மாற்றுவீதம் (spot rate) இந்த இரு விகிதங் களைவிட அதிகமா, குறைவா என்பது முக்கியமன்று. ஏனெனில், முன்னோக்கி விற்ற செலாவணியைத் தரத் தேவையான தொகை முன்னோக்கி வாங்கியதிலிருந்து கிடைத்துவிடுகிறது.

ஆனால், எந்த ஒரு சமயத்திலும் முன்னோக்கிய நாணயமாற்று இறக்குமதியாளர்களுக்கும் ஏற்றுமதியாளர்களுக்கும் தேவைப்படும் அளவுகள் ஒன்றாக இருக்கும் என்று எதிர்பார்க்க முடியாது. தான் வாங்கிய முன்னோக்கிய அன்னியச் செலாவணியைவிட அதிகமான அளவுக்கு முன்னோக்கி விற்க ஒரு பாங்கு ஒப்புக்கொண்டிருந்தால், பாங்கின் நிலைக்குப் பூரணப் பாதுகாப்பு இல்லை. நாணயமாற்று வீதத் தின் ஏற்றத் தாழ்விலிருந்து லாபம் சம்பாதிக்க அந்த பாங்கு முயல் கிறது என்று அர்த்தமாகும். சாதாரணமாக பாங்குகள் ஊக வாணிபத் தில் ஈடுபடுவதில்லை. அன்னியச் செலாவணி வர்த்தகத்தில் ஈடு பட்டுள்ளவரை வியாபாரிகளின் சாதாரண நடவடிக்கைகளைக் கவனிப்ப தோடு அவை நிற்கின்றன. (ஏற்றுமதி, இறக்குமதியாளர்களைப் போலவே) பாங்குகளின் லாபம் அவை வாணிபம் செய்யும் பொருளின் வாங்கிய விலை, விற்றவிலை இரண்டுக்கும் உள்ள வித்தியாசத்தையே பொறுத்தது. ஆனால், எதிர்காலத்தை மனத்தில் கொண்டு தன் உடனடி நிலையைச் சரிசெய்துகொள்வதன்மூலம் முன்னோக்கிய நிலையில் பாது காப்பற்ற நிலைமை ஏற்படுவதை ஒரு பாங்கு தடுக்கக்கூடும்.

உதாரணமாக, ஏற்றுமதியாளர்களிடமிருந்து தான் வாங்கியதை விட அதிகமாக இறக்குமதியாளர்களுக்கு 90 நாள் முன்னோக்கிய அன்னியச் செலாவணியை விற்க ஒரு ஃபிரெஞ்சு பாங்கு ஒப்புக் கொண்டுள்ளது என எடுத்துக்கொள்வோம். அந்தத் தவணைக்காலம் முடியும்போது, ஏற்றுமதியாளரின் முன்னோக்கிய ஒப்பந்தங்களி லிருந்து கிடைக்கும் அன்னியச் செலாவணியைவிட அதை டாலர்கள் எனக் கொள்வோம்—அதிகமாக அந்த பாங்கு கொடுக்கவேண்டியிருக் கும். இந் நிலைமையை எதிர்பார்த்து, முன்னோக்கிய ஒப்பந்தங்களைச் செய்யும் சமயத்தில், தனக்குக் கிடைக்கக்கூடிய டாலர் வசதியை அதிகரிப்பதற்காக அங்காடியில் அப்போது கிடைக்கும் 90 நாள் உண்டியல்களை அந்த பாங்கு வாங்கக்கூடும். நியூயார்க்கில் இவற்றின் தவணை முடியும்போது, அதிகமாக உள்ள முன்னோக்கிய விற்பனைக் குத் தேவையான டாலர்கள் இவற்றினின்று கிடைக்கும். இல்லா

விட்டால், ஏற்றுமதியாளர்களிடமிருந்து உடனடி டாலர் மாற்றை, அதாவது, அப்போது கிடைக்கும் தரிசன உண்டியல்களை, அந்த பாங்கு வாங்கலாம். அல்லது டாலர் வசதிகளை அதிகமாகப் பெற்றுள்ள பாங்கி களிடமிருந்து மேலும் தேவைப்படும் டாலர் தொகைகளை அது வாங்கக் கூடும். பின்னால் கூறிய இம் முறைகளைக் கடைப்பிடித்தால் நியூயார்க் கில் அந்த பாங்கு தொண்ணூறு நாட்களுக்கு டாலர்களை வைத்திருக்க வேண்டும். அப்படி 90 நாள் உண்டியல்கள், தரிசன உண்டியல்கள், அல்லது பிற பாங்குகளிடமிருந்து கிடைக்கக்கூடிய செலாவணி ஆகியவை போதுமான அளவு கிடைக்காவிட்டால், மேலும் முன்னோக் கிய ஒப்பந்தங்களை மேற்கொள்ள அந்த பாங்கு மறுத்துவிடலாம். இவை தவிர ஒரே ஒரு மாற்றுவழி இருக்கிறது. ஊகவணிகர்களிட மிருந்து முன்னோக்கிய செலாவணியை அந்த பாங்கு வாங்கலாம். இவர்கள் ஊகவணிகர்கள் (speculators) ஆகையால் அவர்கள் நஷ்டத்தினின்று பாதுகாப்பைப்பற்றிக் கவலைகொள்வதில்லை. ஆனால், இந்த வழியை ஒரு சில நாணயங்கள் விஷயத்தில்தான் பின் பற்ற முடியும். ஊகவாணிபம் செய்வோர் துணிந்து இறங்கும் அளவுக்கு வியாபாரம் பெருகியுள்ள நாணயங்கள் விஷயத்தில்தான் இது இயலும்.

### முன்னோக்கிய நாணயமாற்று அங்காடியும் பன்னாட்டு மூலதனப் பெயர்ச்சிகளும்

பாங்குகள் உடனடி நாணயமாற்றை வாங்கி முன்னோக்கி விற்க ஒப்புக்கொண்ட தவணைக்காலம் வரை வைத்திருக்கும்போது, உள் நாட்டு நாணயத்தை அவை கொடுக்கின்றன. தங்கள் பணத்தை இவ்வாறு முதலீடு செய்யும்போது, கடனளிப்பதன்மூலம் அவை சம்பாதிக்கக்கூடிய வட்டியை அவை இழக்கின்றன. ஆனால், வாங்கப் பட்ட வெளிநாட்டுச் செலாவணியை அந்த வெளிநாட்டுப் பணச் சந்தை யில் கடன் கொடுக்க முடியும். நமது உதாரணங்களில் உடனடி டாலர் களை வாங்க ஃபிரெஞ்சு பாங்குகள் செலவழித்த பிராங்குகள்மீது அவற் றுக்கு வட்டி கிடைக்காது. ஆனால், அவ்வாறு வாங்கிய டாலர்களை நியூயார்க்கில் வட்டிக்கு விட முடியும். இவ்விரு பண அங்காடிகளிலும் உள்ள வட்டி விகிதங்களின் வித்தியாசமானது முன்னோக்கிய நாணய மாற்றுவீதம் உடனடி நாணயமாற்றுவீதத்தைவிட அதிகமாக உள்ளதா, குறைவாக உள்ளதா என்பதற்கு முக்கியமான ஒரு காரண மாகும்.

பாரிஸில் குறுகியகால வட்டி விகிதம் ஒரு சதவிகிதம் என்றும், நியூயார்க்கில் இரண்டு சதவிகிதம் என்றும் எடுத்துக்கொள்வோம். முன்னோக்கு ஒப்பந்தங்கள் செய்யப்படும் சமயத்தில் உடனடி வீதமும், முன்னோக்கு வீதமும் சமமாக (அதாவது, டாலருக்கு 4·90 பிராங்குக

ளாக) இருப்பதாகக் கொள்வோம். அப்படியானால், ஃபிரெஞ்சு இறக்கு மதியாளர்களுக்கு முன்னேக்கிக் கொடுப்பதாக ஒப்புக்கொண்ட தொகை அதிகமாக இருந்தால் அதற்கு வழி செய்வதற்காக டாலர்களை உடனடி யாக வாங்குவதன்மூலம் வருடத்துக்கு ஒரு சதவிகித அளவுக்குத் தொண்ணூறு நாட்களுக்கு அதிகப்படியான வருமானம் கிடைக்கும். அப்போது முன்னேக்கி டாலர்களை விற்பதற்கு பாங்குகள் போட்டி யிடும். உடனடி டாலர்களை வாங்கவும் அவ்வாறே போட்டி எழும். முன்னேக்கிய டாலர்களின் விற்பனையில் உள்ள போட்டியால் டாலரின் முன்னேக்கிய விலை குறைந்து உடனடி விலை அதிகரிக்கும். உடனடி நாணயமாற்று விகிதத்துடன் ஒப்பிட்டால் முன்னேக்கிய நாணய மாற்று விகிதம் குறைவாக இருக்கும். இவ்விரு விலைகளில் ஏற்படும் நேரெதிரான மாறுதல்கள் காரணமாக நியூயார்க்குக்கு அனுப்பப்படும் டாலர்களின் அடக்கவிலை அதிகரித்து அவற்றை ஃபிரான்சுக்குக் கொண்டுவர விற்கும்போது கிடைக்கும் வருவாய் குறைந்து நியூயார்க் கில் கடன் கொடுப்பதால் ஏற்படும் லாபத்தை அழித்துவிடுகின்றன. இறுதியில் பாங்குகளுக்குத் தம் கமிஷன் மட்டுமே மிஞ்சும்.

முன்னேக்கிய செலாவணி அதிகமாக விற்றதற்கு ஏற்பாடு செய்ய (அல்லது அதற்கு எதிர்க்காப்புச் செய்ய) மட்டுமன்றி, பாங்குகள் சுய மாகவே இதில் ஈடுபடுவதாலும் இவ்வாறு உடனடி செலாவணி வாங்கப் பட்டு, அதன் பயனாக ஓர் அங்காடியிலிருந்து மற்றொன்றுக்கு நிதிப் பெயர்ச்சி ஏற்படுகிறது. வெளிநாடுகளில் வட்டி விகிதம் உள்நாட்டில் உள்ளதைவிட அதிகமாக இருக்கும்போது பாங்குகள் வெளிநாடுகளில் கடன் கொடுக்க விரும்புகின்றன. இதை நஷ்ட பயமின்றிச் செய்ய முன்னேக்கிய நாணயமாற்று அங்காடி வழி செய்கிறது.

கடன் கொடுக்கும் ஃபிரெஞ்சுக்காரரைப் பொறுத்தவரை உடனடி யாக டாலர்கள் வாங்கும்போது அதற்கு இணையாக அதே சமயம் முன்னேக்கி டாலர்களை விற்கவேண்டும். இல்லாவிட்டால், ஃபிரான் சுக்கு டாலர்கள் பின் ஒரு தேதியில் திரும்பி வரும்போது பிராங்கு களின் மதிப்பு அதிகமானல் நாணயமாற்றில் நஷ்டம் ஏற்படும். (இவை குறுகிய காலக் கடன்களாதலால் அவை திரும்பித்தான் வரும்.) அதா வது, டாலர்களில் கொடுத்த கடன், அதற்காக எவ்வளவு பிராங்குகள் செலவழிக்கப்பட்டனவோ அதைவிடக் குறைவான அளவு பிராங்கு களை இறுதியில் தருமானல் இவ்வாறு நஷ்டம் ஏற்படும். பொன்னுக மாற்ற முடியாத காகிதப்பணம் வழங்கும் நிலைமையில் இவ்வாறு மதிப்பு உயரக்கூடியது எப்போதும் சாத்தியமே. பொன் நாணயத் திட்டம் வழங்கும்போது உடனடி விகிதம் பொன் இறக்குமதி நிலைக்குக் (gold import point) கீழே குறையாது. இந்த அளவுக்கு அதிகமாக உடனடி நாணயமாற்று விகிதம் வெளிநாட்டுக் கடன் கொடுக்கப்படும்

போது இருக்குமானால் பொன் திட்டத்தின் கீழும் இத்தகைய மதிப் பேற்றம் (appreciation) ஏற்பட முடியும். முன்னோக்கிய நாணய மாற்று வசதிகள் இல்லை என்றால், கடன் கொடுக்கும் நாட்டின் பொன் இறக்குமதி எல்லைக்குச் சமமாக அல்லது அதற்கு மிகவும் அருகில் உடனடி விகிதம் இருந்தாலொழிய, பொன் நாணயத் திட்டச் சூழ் நிலையில் வெளிநாடுகளுக்குக் குறுகியகாலக் கடன்களை அளிப்பது அபாயகரமானதாகும்.

நாணயமாற்று விகிதத்தில் ஏற்படும் மிகச் சிறியதொரு மாற்றம் வட்டி லாபத்தை நஷ்டமாக எவ்வாறு மாற்றக்கூடும் என்பதைப் பின் வரும் எடுத்துக்காட்டால் உணரலாம்.

| | | |
|---|---|---|
| உடனடி ஸ்டர்லிங் \$ 2·81/£ வீதத்தில் வாங்கியது | £ 100,000 | = \$ 281,000 |
| அதிக வட்டி, 90 நாட்களுக்கு 1% வீதம் | 250 | |
| 90 நாட்களுக்குப்பின் \$ 2·80/£ வீதத்தில் ஸ்டர்லிங் விற்றது | £ 100,250 | = \$ 280,700 |
| நஷ்டம் | | \$ 300 |

சமீப காலத்தில் இருப்பதுபோன்று நியூயார்க்கைவிட லண்டனில் குறுகிய காலக் கடன் வட்டி ஒரு சதவிகிதம் அதிகமாக இருக்கிறது என்று கொள்வோம். ஓர் அமெரிக்க பாங்கு பவுனுக்கு \$ 2·81 ஆக உடனடி மாற்றுவீதம் இருக்கும்போது £ 100,000-க்கு 90 நாள் கடன் ஒன்றில் முதலீடு செய்கிறது. கடன் தவணை முடியும்போது உடனடி வீதம் பவுனுக்கு \$ 2·80 ஆக விழுந்துவிட்டது. வட்டி லண்டனில் அதிகமாக இருப்பதனால் நிகர லாபம் சம்பாதிப்பதற்குப் பதிலாக நியூயார்க் பாங்குக்கு 300 டாலருக்கு ஒரு சிறு நஷ்டம் ஏற்படுகிறது.

முதலீடு செய்த தொகைக்கு லண்டனில் கிடைக்கும் அதிக வட்டி கால் சதவிகிதம்தானகையால், அதே சதவிகிதத்துக்கு நாணய மாற்று விகிதம் விழுந்தால் வட்டி வித்தியாசத்தால் உண்டாகும் லாபத்தை அது அப்படியே அழித்துவிடும். முன்னோக்கிய பேரம் செய்ய முடியுமானால் நியூயார்க் பாங்குக்கு ஒரு சிறு கமிஷனாவது கிடைக்கவேண்டும் என்றால் முன்னோக்கிய வீதத்தின் குறைவு கால் சதவிகிதத்துக்குத் தாழ்வாக இருக்கவேண்டும்.

கடன் கொடுக்கும் விவகாரங்கள் நியூயார்க்குக்கு லாபகரமாக இருக் கும்போது, அதே சமயம் லண்டனில் கடன் வாங்கும் விவகாரங்கள் நடந்துகொண்டிருக்கும். லண்டன் பாங்குகள் உடனடி டாலர்களை

விற்றுப் பவுன்களைப் பெற்று அவற்றை லண்டனில் வட்டிக்கு விடும். (1) நியூயார்க்கில் லண்டன் பாங்குகளின் நிலுவைத் தொகைகளினின்றுவது, (2) நியூயார்க் பாங்கிகள்மீது 90 நாள் உண்டியல்கள் வரைவதன்மூலம் நியூயார்க்கில் ஏற்படும் நிலுவைத் தொகைகளினின்றுவது உடனடி டாலர்கள் விற்கப்படும். தொண்ணூறு நாட்கள் முடிந்ததும் கடன் வாங்கிய தொகைகளைத் திருப்பித் தருவது அவசியமாகிறது. இவ் விவகாரத்தில் நாணயமாற்றினால் நஷ்டம் ஏற்படுவதைத் தடுக்க, கடன் வாங்கிய தொகைகளை விற்கும் அதே சமயம் முன்னேக்கிய டாலர் செலாவணியை லண்டன் பாங்குகள் வாங்கவேண்டும். ஆகையால் லண்டனில் டாலர்களுக்கான முன்னேக்கிய விலை உயரும்; உடனடி விகிதம் விழும்; ஆகையால் முன்னேக்கிய டாலர்களின் விலை (உடனடி விலையோடு ஒப்பிட்டால்) உயர்வாகி விடும்.

அன்றி, லண்டனைவிட நியூயார்க்கில் வட்டி விகிதம் அதிகமாக இருந்தால், நியூயார்க் பணச் சந்தையில் வட்டிக்கு விடுவதற்காக பவுன்கள் டாலர்களாக மாற்றப்படும். அமெரிக்க பாங்குகள் தம் லண்டன் நிலுவைத் தொகைகள்மீது ஸ்டர்லிங் உண்டியல்களையும் (தந்திகளையும்) விற்கும்; பவுன்களைக் கடன் வாங்கும். கடன் வாங்குவதற்காக நெடுந்தவணை ஸ்டர்லிங் உண்டியல்களை வரையும். இவை லண்டன் பாங்குகளின் ஒப்புதலைப் பெற்றபின் லண்டன் பணச் சந்தையில் கழிவு செய்யப்படும். நியூயார்க் பாங்குகளின் பெயரில் இவ்வாறு ஏற்பட்டுள்ள ஸ்டர்லிங் நிலுவைத் தொகைகளைக் கொண்டு அந்த பாங்குகள் உடனடி ஸ்டர்லிங் செலாவணியை விற்று அதில் கிடைக்கும் டாலர்களை நியூயார்க்கில் கடனுகக் கொடுக்கும். இக் கடன்களின் தவணை முடியும்போது ஏற்படக்கூடிய நாணயமாற்று நஷ்டத்தைத் தவிர்க்க அதே சமயம் முன்னேக்கிய ஸ்டர்லிங் செலாவணியை அவை வாங்க வேண்டியிருக்கும்.

உடனடி ஸ்டர்லிங் விற்பதில் ஏற்படும் போட்டி உடனடி வீதத்தைத் தாழ்த்தும். முன்னேக்கிய ஸ்டர்லிங்கின் தேவை அதிகமாவதால் முன்னேக்கிய வீதம் உடனடி வீதத்தைவிட உயர்வாக (at a premium) இருக்கும். உடனடிச் செலாவணியை விற்பதற்கான பாங்குகளின் கமிஷனைக் கழித்தபின் முன்னேக்கிய ஸ்டர்லிங் வீதத்துக்கும் உடனடி வீதத்துக்கும் உள்ள வித்தியாசம் நியூயார்க்கில் கிடைக்கும் அதிகபட்ச வருவாய்க்குச் சமம் ஆகும்வரை முன்னேக்கிய ஸ்டர்லிங் வாங்குவதில் போட்டி இருக்கும்.

முன்னேக்கிய வீதத்துக்கும் உடனடி வீதத்துக்கும் உள்ள உறவைப் பொறுத்தவரையில், ஊகவாணிபம் இல்லாமல் இருந்தால்,

எந்த நாட்டில் வட்டி விகிதம் அதிகமாக இருக்கிறதோ அந்த நாட்டின் மீதான முன்னோக்கிய வீதம் உடனடி வீதத்தைவிடத் தாழ்வாக இருக்கும். எந்த நாட்டில் வட்டி விகிதம் குறைவாக இருக்கிறதோ அந்த நாட்டின்மீதான முன்னோக்கிய வீதம் உடனடி வீதத்தைவிட உயர்வாக இருக்கும்.

**ஊகவாணிபம் :** முன்னோக்கிய அன்னியச் செலாவணியை விற்று நாணயமாற்று நஷ்டத்தைத் தவிர்க்க விரும்பும் ஏற்றுமதியாளர்களும், அன்னியச் செலாவணியை முன்னோக்கி வாங்கி அதேபோல நஷ்டத்தைத் தவிர்க்க விரும்பும் இறக்குமதியாளர்களும் கமிஷன் சம்பாதிக்கவும், வட்டி வித்தியாசங்களால் லாபம் பெறவும் இவ் விவகாரங்களில் ஈடுபடும் பாங்குகளும்மட்டுமன்றி முன்னோக்கிய அன்னியச் செலாவணியை வாங்குவதிலும் விற்பதிலும் ஈடுபடும் மற்றொரு முக்கிய வகையினரும் உண்டு; அவர்கள்தாம் ஊக வாணிபம் செய்பவர்கள். நாம் முன்னரே பார்த்தபடி இவர்கள் நஷ்டத்துக்குப் பாதுகாப்பற்ற நிலையை மேற்கொள்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட நாணயத்தின் உடனடி வீதம் எதிர்காலத்தில் விழும் என்று அவர்கள் எதிர்பார்த்தால், அவர்கள் எதிர்பார்க்கும் எதிர்கால உடனடி வீதத்தை விடச் சிறிது உயர்ந்த விகிதத்துக்கு முன்னோக்கி நாணயங்களை விற்க அவர்கள் ஒப்பந்தங்களை மேற்கொள்கின்றனர். 'அன்றி, எதிர்காலத்தில் உடனடி வீதம் உயரும் 'என்று அவர்கள் எதிர்பார்த்தால் அவர்கள் எதிர்பார்க்கும் எதிர்கால உடனடி வீதத்தைவிடச் சிறிது குறைந்த விலைக்கு அன்னியச் செலாவணியை முன்னோக்கி விற்க அவர்கள் ஒப்பந்தம் செய்கின்றனர். உடனடி விகிதத்தின் எதிர்கால நிலையைப் பற்றிச் சூதாடி லாபம் பெறுவது அவர்களது நோக்கமாகும்.

உதாரணமாக, பிராங்கின் விலை உயரும் என்று அதாவது, டாலர்களின் பிராங்கு விலை குறையும் என்று எதிர்பார்க்கிற ஒரு ஃபிரெஞ்சு ஊகவணிகன் முன்னோக்கி டாலர்களை விற்பான். உதாரணமாக, தொண்ணூறு நாட்களுக்குப்பின், முன்னோக்கிய ஒப்பந்தத்தின்படி அவற்றைக் கொடுக்கவேண்டிய நேரம் வரும்போது, ஒப்பந்தத்தில் குறிப்பிட்ட வீதத்துக்குக் குறைவாக உடனடி டாலர்களை அவனால் வாங்க முடியுமானால் அவனுக்கு ஊகவாணிப லாபம் கிடைக்கிறது.

எடுத்துக்காட்டாக, ஒரு குறிப்பிட்ட நாளன்று ஊகவணிகர்கள் பிராங்கைப் பொறுத்தவரை நம்பிக்கை நிரம்பி, அதாவது, பங்கு மார்க்கெட் பரிபாஷையில் 'எருது' மனப்பான்மையோடும் (Bullish), டாலரைப் பொறுத்தவரை நம்பிக்கை இழந்து அதாவது, 'கரடி' மனப்பான்மையோடும் (Bearish) இருக்கிறார்கள் என்று கொள்வோம். அன்று உடனடி வீதம் டாலருக்கு 4·90 பிராங்குகள் என்றும், முன்னோக்கி டாலர் விற்கும் போட்டியினால் முன்னோக்கிய விகிதம் டாலருக்கு

4·88 பிராங்குகள் என நிற்கிறது என்றும் கொள்வோம். ஊகவணிகன் ஒருவன் 100,000 டாலரை முன்னேக்கி விற்கிருன்; அதாவது, தன் நாணயத்தில் 488,000 பிராங்குகளுக்கு ஈடாக, தொண்ணூறு நாட்கள் கழித்து, 100,000 டாலரைக் கொடுப்பதாக அவன் வாக்களிக்கிருன். அப்போது உடனடி விகிதம் டாலருக்கு 4·87 பிராங்குகளானுல், தன் முன்னேக்கிய பேரத்துக்காக டாலர்களை 487,000 பிராங்குகளைக் கொண்டு வாங்கி அவ் விவகாரத்தில் ஆயிரம் பிராங்குகளை லாபமாகப் பெறுவான். ஆனுல், அப்போது உடனடி விகிதம் ஒரு டாலருக்கு 4·88 பிராங்குகளைவிட அதிகமாக இருந்தால் அவனது ஊகவாணிபத்தில் நஷ்டம்தான் ஏற்படும்.

ஊகவாணிப நடவடிக்கைகள் முன்னேக்கிய நாணயமாற்று விகிதத்தை நிர்ணயிக்கின்றன என்றபோது பாரிஸில் டாலர் விலை தாழ்வாக இருக்கிறது என்ருல் அந்த விகிதத்துக்கு முன்னேக்கிய டாலர்களை விற்பதைவிட்டு வாங்குவதற்கு விருப்பமுள்ள ஊகவணிகர்கள் ஒருவருமே இல்லை என்று அர்த்தமில்லை. ஊக பேரமுடைய அங்காடியின் ஒரு முக்கிய குணுதிசயம் அதன் ஊகவணிகர்களிடையே சாதாரணமாக அபிப்பிராய பேதம் இருப்பதாகும். நாம் இப்போது சொன்ன உதாரணத்தில், டாலரைப்பொறுத்து 'எருது' மனப்பான்மை உடையவர்கள் முன்னேக்கிய டாலர்களை வாங்குவாரே தவிர விற்கமாட்டார்கள். அவர்களது முன்னேக்கிய ஒப்பந்தங்களின் தவணை முடியும்போது உடனடி வீதம் டாலருக்கு 4·88 பிராங்குக்குமேல் இருந்தால் அவர்கள் லாபமடைவார்கள். முதலில் சொன்ன நாளில் டாலர்களின் மதிப்பு தாழ்வாக இருப்பது டாலரைப் பொறுத்தவரை பெரும்பான்மையாகக் 'கரடி' மனப்பான்மை இருப்பதையே காட்டுகிறது. ஊகவணிகர் அனைவரும் ஒரே அபிப்பிராயம் கொண்டுள்ளார்கள் என்று இதற்குப் பொருள் அன்று.

பெரும்பான்மையான ஊகவணிகர்கள் டாலரைப் பொறுத்தவரை 'கரடி' மனப்பான்மைக்குப் பதில் 'எருது' மனப்பான்மை கொண்டிருந்தால் முன்னேக்கி வாங்கிய டாலர்கள் முன்னேக்கி விற்ற டாலர்களின் அளவைவிட அதிகமாக இருக்கும். டாலரை முன்னேக்கி வாங்குவதில் ஏற்படும் போட்டி அதன் மதிப்பை உயர்த்தும். விகிதம் டாலருக்கு 4·91 பிராங்காக உயரக்கூடும். பணம் செலுத்தவேண்டிய நாளில் உடனடி வீதம் 4·92 ஆக இருந்தால் 'எருதுகளுக்கு' லாபம்; சிறுபான்மையோரான 'கரடிகளுக்கு' நஷ்டம்.

**உடனடி வீதத்தை ஊகவாணிபம் எப்படிப் பாதிக்கிறது?**

வெளிநாட்டு நாணயங்களின் எதிர்கால மதிப்புப்பற்றி ஊகவணிகர்களின் அபிப்பிராயம் மிகவும் 'கரடித்தனமாக' இருக்கிறது என்ருல்

(அதாவது, தம் நாணயத்தைப்பற்றிய அபிப்பிராயம் 'எருதுத்தனமாக' இருந்தால்) அவர்கள் நிகரமாக முன்னேக்கி அன்னியச் செலாவணியை விற்பார்கள். இதனால் முன்னேக்கிய வீதம் தாழும். அவர்களிட மிருந்து வாங்குபவர்கள் முக்கியமாக பாங்குகளும் நாணயமாற்று வணிகர்களும். இவர்கள் ஊகவணிகர்கள் அல்லர். எனவே, இவர்கள் தாம் வாங்கியதற்குப் பாதுகாப்பாக உடனடி விற்பனையைச் செய் வார்கள். உடனடி விற்பனையின் அளவு அதிகரிப்பதால் உடனடி விகிதம் கீழ்நோக்கி மாறும். இது எதிர்காலத்தில் நாணயமாற்று விகிதத்தின் போக்கைப்பற்றி ஊகவணிகர்கள் கொண்டுள்ள அபிப்பிரா யத்தை நிகழ்காலத்தில் பிரதிபலிக்கிறது. (ஊகவாணிபம் தொடர்ந்து நடப்பதால் முன்னேக்கிய வீதம் தாழ்வாகவேதான் இருக்கும்.)

அன்றி, அன்னிய நாணயங்களைப் பொறுத்தவரை ஊகவணிகர்கள் பெரும்பாலும் 'எருதுத்தனமாக' (அதாவது, தம் நாணயத்தைப் பொறுத்தவரை 'கரடித்தனமாக') இருப்பார்களாயின் அவர்கள் முன்னேக்கி அன்னியச் செலாவணியை வாங்குவார்கள். இதனால் அதன் மாற்று விகிதம் அதிகமாகும். அவர்களுக்கு விற்பவர்கள் தம் நிலைமைக்குப் பாதுகாப்புத் தேடி உடனடி செலாவணியை வாங்க வேண்டியிருக்கும். இதனால் உடனடி விகிதம் மேலே போகிறது. மறுபடியும், எதிர்காலத்தைப்பற்றிய பயமும் நம்பிக்கையும் நிகழ் காலத்தில் பிரதிபலிப்பதைக் காணலாம்.

முன்னேக்கிச் செலாவணி வாங்குவதில் 'எருது' ஊகவணிகர் களுக்குக் கஷ்டமாக இருந்தால் உடனடி விகிதத்தைவிடக் கணிசமான அளவு அதிகமாக முன்னேக்கிய விகிதம் இருக்கும். ஆனால், இவ் வுயர்வு (premium) அதிகமாக அதிகமாக, பாங்குகளுக்கு உடனடிச் செலாவணி வாங்கித் தம் நிதிகளை வெளிநாடுகளுக்கு மாற்றுவது மேன்மேலும் லாபகரமாகிறது. அதே சமயம் அவை முன்னேக்கி அச் செலாவணியை விற்றுத் தம் பணம் நிச்சயமாக லாபத்துடன் திரும்பி வருவதற்கு வழிசெய்துகொள்கின்றன.

உதாரணமாக, பாரிஸில் உடனடி வீதம் டாலருக்கு 4·90 பிராங்குகள் என்றும், முன்னேக்கிய வீதம் 4·93 என்றும் கொள் வோம். வட்டி வித்தியாசம் காரணமாக ஏற்படும் மூலதனப் போக்கு வரவை இங்குச் சேர்க்காமலிருக்க நியூயார்க்கிலும் பாரிஸிலும் ஒரே வட்டி விகிதங்கள்தான் வழங்குகின்றன என்றும் கொள்வோம். 490,000 பிராங்குகள் செலவில் உடனடிச் செலாவணியாக 100,000 டாலரை ஒரு ஃபிரெஞ்சு பாங்கு வாங்கி அதை நியூயார்க்குக்கு மாற்றி அங்கு வட்டிக்குவிட்டு, அதே சமயம் அந்த டாலர்களை ஓர் ஊகவணிக னுக்கு முன்னேக்கி விற்றால், அதன் கடன் திரும்பி வரும்போது அந்த

பாங்குக்கு நிச்சயமாக 493,000 பிராங்குகள் கிடைக்கும். இத்தகைய நாணயமாற்று ஆர்பிட்ரேஜை[4] மேற்கொள்வதன்மூலம், அந்த பாங்குக்கு 3000 பிராங்குகள் லாபம்.

முன்னேக்கிய டாலர்களின் விலை மிகவும் உயர்வாக இருந்தால், அது பிராங்கின் எதிர்காலத்தின்மீது நம்பிக்கையின்மையைக் குறிக்கிறது. முன்னேக்கிய டாலர்களை வாங்க ஊகவணிகர்கள் போட்டியிடுவதனால் இது ஏற்படுகிறது. இத்தகைய எதிர்கால அவநம்பிக்கை முதலில் இந்த உருவத்தில் காணப்படும் மூலதனப் பெயர்ச்சியை லாபகரமாக ஆக்குவதனால் (1) ஊகவணிகர்களின் வாங்கும் விருப்பத்துக்கு ஈடாக முன்னேக்கிய டாலர்களின் அளிப்பு அதிகமாவதற்கும் (2) நிதிகளை வெளிநாட்டுக்கு மாற்ற உடனடிச் செலாவணியை அதிகமாக வாங்குவதற்கும் இது ஊக்கமளிக்கிறது. முன்னேக்கிய செலாவணி மேலும் அளிக்கப்படுவதனால் முன்னேக்கிய விகிதம் உயரும் வேகம் மட்டுப்படுகிறது. உடனடிச் செலாவணிக்குத் தேவை அதிகரிப்பதால் உடனடி வீதம் உயரலாகிறது. இதனால் அந் நாட்டு நாணயத்தின் எதிர்காலத்தின்மீது இருந்த அவநம்பிக்கை நிகழ்காலத்திலும் பிரதிபலிக்கலாகிறது.

தங்கள் கடன்களின் தவணை நாள் வரும்போது, உடனடி விகிதம் தங்கள் முன்னேக்கிய பேரங்களில் குறிப்பிட்ட விகிதத்தைவிட அதிகமாகவோ குறைவாகவோ எப்படி இருப்பினும், நாணயமாற்று ஆர்பிட்ரேஜ் அல்லது இத்தகைய மூலதனப் பெயர்ச்சிகளைத் தூண்டிவிடப் போதுமான அளவுக்குப் பாரிஸில் முன்னேக்கிய டாலரின் விலை உயர்வாக இருந்தால் பாங்குகளுக்கு லாபம் என்பது தெளிவு. ஏனெனில், அவை டாலர்களை ஒரு குறிப்பிட்ட (உடனடி) வீதத்துக்கு வாங்குகின்றன; அதைவிட உயர்ந்த (முன்னேக்கிய) வீதத்துக்கு விற்கின்றன. முன்னதாக ஊகவணிகர்கள் செய்திருந்த முன்னேக்கிய பேரங்களினின்று அவர்கள் டாலர்களைப் பெறும்போது, அந்தப் பேரங்களில் குறிப்பிட்ட வீதத்துக்கு அதிகமாக உடனடி வீதம் இருந்தால்தான், அதேபோன்ற நிலைமையில் ஊகவணிகர்களுக்கு லாபம் கிடைக்கும். அவர்கள் டாலர்களை 4·90 பிராங்கு விலைக்கு வாங்கியதாகக் கொள்வோம். அப்போது அவர்கள் 4·91 அல்லது 4·92 பிராங்குகளுக்கு விற்பதனால் லாபம் அடைகிறார்கள்.

தவிர, கடன் வாங்கும் அங்காடியைவிடக் கடன் கொடுக்கும் அங்காடியில் வட்டி விகிதங்கள் அதிகமாக இருந்தாலும்கூட ஊக

[4] அதாவது, வட்டி வித்தியாசத்துக்காக அன்றி நாணயமாற்று வீதத்திலுள்ள வித்தியாசம் காரணமாக லாபம் சம்பாதிக்க ஒரே சமயம் வெவ்வேறு மார்க்கெட்டுகளில் டாலரை வாங்குவதும் விற்பதும்.

வாணிப நிதிப் பெயர்ச்சி லாபகரமாக இருக்கலாம் என்பதையும் இங்குக் கவனிக்கவேண்டும். வட்டி அதிகமாக உள்ள அங்காடியிலிருந்து வட்டி குறைவாக உள்ளதற்கு நிதிகளை அனுப்புவதனுல் ஏற்படும் நஷ்டத்தைவிட அதிகமாக ஒரு விகிதத்தில் உடனடிச் செலாவணியை வாங்கி அதைவிட அதிகமான வீதத்தில் அதை முன்னேக்கி விற்பதால் (நாணயமாற்று ஆர்பிட்ரேஜ்) ஏற்படும் லாபம் அதிகமாக இருந்தால் இது சாத்தியம் ஆகும்.

## பார்வைக்குரிய சில நூல்கள்

Crump, Norman, *The ABC of the Foreign Exchanges.* London : Macmillan & Co., 1951. பன்னுட்டுச் செலுத்தல்களின் செயல்முறைபற்றி மிக அழகாகவும் எளிமையாகவும் விவரித்துள்ள நூல்.

*Export and Import Procedures.* New York : Morgan Guaranty Trust Co., July, 1962. பலவகை நாணயமாற்று விவகாரங்களைப்பற்றி எளிய முறையில் இந் நூல் விவரிக்கிறது.

Holmes, Alan R., *The New York Foreign Exchange Market.* New York : Federal Reserve Bank of New York, March 1959. இந்தப் பெரும் நாணயமாற்று அங்காடியின் அமைப்பையும் செயல் முறையும்பற்றித் தெளிவாக விவரிக்கிறது.

Southard, Frank A., Jr., *Foreign Exchange Practice and Policy.* New York : McGraw-Hill Book Co., Inc., 1940. அன்னியச் செலாவணி செலுத்தும் செயல்முறையைப்பற்றி மிக அழகாகக் கூறும் நூல்களில் ஒன்ருக இன்னமும் விளங்குகிறது. கடன் நிர்வாகத்தின் பல வகைகளைப்பற்றி நான்காவது அத்தியாயம் மிகவும் விளக்கம் தருகிறது.

# 18. தடையற்ற அங்காடிகளில் நாணயமாற்று வீதங்கள்

## (Foreign Exchange Rates in Free Markets)

அன்னியச் செலாவணியின் தேவையும் அளிப்பும், நாணயமாற்று அங்காடி, ஒரு நாணயத்தின் விலையை மற்றென்றில் கூறுவதே நாணயமாற்று வீதம் என்ற இலக்கணம் ஆகியவைபற்றி நாம் பல முறை கூறியதிலிருந்து, நாணயமாற்று வீதம் நிர்ணயிக்கப்படுவது விலை நிர்ணயப் பிரச்சினை என்பது நன்கு புலப்பட்டிருக்கும். எனவே, சாதாரணமாக நாம் பயன்படுத்தும் தேவையும் அளிப்பும்பற்றிய ஆராய்ச்சி இதற்குப் பொருந்தும்.

**பல நாணயமாற்று வீதங்கள்**

ஆனால் தேவை, அளிப்பு ஆராய்ச்சியைப் பயன்படுத்துவதில் இங்குச் சில வித்தியாசங்கள் உள்ளன. இவற்றுள் ஒன்று பின்வருவது. ஒரு பொருள் அங்காடியில் ஒரு குறிப்பிட்ட தரமுடைய ஒரு பொருளுக்கு ஒரு விலைதான் இருக்கும். ஆனால், நாணயமாற்று அங்காடியில், (உடனடி அல்லது தந்திவழி மாற்றுகள் போன்ற) ஒரு குறிப்பிட்ட வகையான அன்னியச் செலாவணிக்கு ஒரே ஒரு விலைதான் என்பதில்லை. மாறாக, எத்தனை செலாவணிகள் விற்கப்படு கின்றனவோ அத்தனை விலைகள் இருக்கும். இருப்பினும், எப்படி ஒரு நாட்டின் செலுத்துநிலையில் உலகின் பிற பகுதிகளுடன் அது கொண்டுள்ள எல்லா விவகாரங்களும் அடங்கியுள்ளனவோ, அதேபோல அன்னிய நாணயங்களுக்கான எல்லாத் தேவைகளையும் அவற்றின் எல்லா அளிப்புகளையும் நாணயமாற்று அங்காடி ஒன்றுசேர்க்கிறது. ஒரு பொது அங்காடியாக அவை இணைகின்றன.

இந்தப் பல நாணயமாற்று விகிதங்களில் எது தேவை, அளிப்பு ஆகிய இரண்டின் பின்னிய விளைவைப் பிரதிபலிக்கிறது எனலாம்?

உண்மையில், ஒரு தடையற்ற அங்காடியில் இது ஒரு தீவிரமான பிரச்சினையே அன்று. எந்த நாணயத்தின் மாற்று வீதத்தையும் பிற எல்லாவற்றின் வீதத்துக்கும் பிரதியாக எடுத்துக்கொள்ளலாம். ஏனெனில், எல்லாச் செலாவணிகளையும் ஒன்றுக்கொன்று ஏற்றதாக ஆர்பிட்ரேஜ் விவகாரங்கள் கொண்டு வந்து நிறுத்துகின்றன. ஏதாவது ஒன்றின் விலை உயர்ந்தாலோ தாழ்ந்தாலோ, பிற எல்லாச் செலாவணிகளின் விலைகளும் அதே திசையிலும் அதே விகிதத்திலும் மாறித்தான் ஆகும்.

### அயல்நாட்டுச் செலுத்துநிலையும் நாணயமாற்று அங்காடியும்

ஒரு நாட்டின் செலுத்துநிலை, அதன் நாணயமாற்று அங்காடி இவ்விரண்டுக்கும் உள்ள ஒற்றுமை இவ்விரண்டும் அந் நாடு உலகின் பிற பாகங்கள் எல்லாவற்றுடனும் கொண்டுள்ள தொடர்புகள் அனைத்தையும் அடக்கியுள்ளன என்பதோடு நிற்கவில்லை. இவ்விரு கோட்பாடுகளும் ஒரே கூட்டல் தொகையைக் குறிக்கின்றன. அதாவது, பிற எல்லா நாடுகளுடனும் அந் நாடு கொண்டுள்ள பொருளாதார விவகாரங்களின் கூட்டல் தொகையை இவை குறிக்கின்றன. ஆனால், ஒரு வித்தியாசம் உண்டு. ஒரு குறிப்பிட்ட காலத்தில் உண்மையில் நடந்த இத்தகைய எல்லா விவகாரங்களையும் செலுத்துநிலை குறிக்கிறது. அப்போது எந்த நாணயமாற்று வீதமோ வீதங்களோ வழங்கி இருந்தாலும் சரியே. ஏற்கெனவே நடந்துவிட்ட ஒன்றின் விவரத் தொகுதியாகும் அது.

அதற்கு மாருக, நாணயமாற்று அங்காடியில் ஒன்றை ஒன்று சந்திக்கும் தேவையும் அளிப்பும், நாணயமாற்று வீதங்களின் ஒரு வரிசையில் ஒவ்வொரு வீதத்திலும் அந்த நாட்டினுடைய ஒன்றையொன்று பாதிக்காத செலுத்துகை, வருவாய் இரண்டும் எவ்வளவாக இருக்கும் என்பதைக் காட்டுகின்றன. அன்னியச் செலாவணியின் தேவையும் அளிப்பும் நாணயமாற்று வீதத்தை நிர்ணயிக்க ஒன்றை ஒன்று பாதிக்கும் பட்டியல்கள் ஆகும். அத்துடன் உண்மையில் நடக்கும் விவகாரங்களையும் அவை நிர்ணயிக்கின்றன. ஒரு குறிப்பிட்ட செலுத்துநிலை காலத்தில் அதாவது ஓர் ஆண்டில் இந்த மார்க்கெட் சக்திகள் மற்றக் காலத்தோடு ஒப்பிட்டால் மாறவில்லை என்று எடுத்துக்கொண்டால், அப்போது வழங்கும் நாணயமாற்று வீதத்தில் அங்காடியில் உள்ள தேவையும் அளிப்பும் எந்த அளவுக்கு இருக்கின்றனவோ அந்த அளவுக்கு உண்மையில் செலுத்துகைகளும் வருவாய்களும் ஏற்பட்டுள்ளன என்று திருத்தமாகக் கூறலாம்.

மற்ருெரு வித்தியாசத்தையும் இங்குக் குறிப்பிடவேண்டும். ஒரு நாட்டின் செலுத்துநிலை என்பது முழுமையானது; ஒன்றை ஒன்று

பாதிக்காத செலுத்துகைகளையும் வருவாய்களையும் மட்டும் அன்றிப் பற்றுக்குறையை ஈடுசெய்யும் நிதி வசதிகளின் அளவு, அவை எப்படி வருகின்றன ஆகியவற்றையும் அது குறிக்கிறது. நாணய மாற்றின் தேவையும் அளிப்புமோ தன்னிச்சையான (autonomous) விவகாரங்களைமட்டுமே கொண்டன. அதாவது, ஒரு நாணயமாற்று வீதங்களின் ஒரு வரிசையில் ஒவ்வொரு வீதத்திலும் எவ்வளவு பொருள்கள், பணிகள் மற்றும் பத்திரங்கள் இறக்குமதியாகும், அத்தகையவை எவ்வளவு ஏற்றுமதியாகும் என்பவைதான் அவற்றில் அடங்கியுள்ளன. எனவே, நிலையான சூழ்நிலையில், செலுத்து நிலையில் துண்டு விழுந்தால் அதன் அளவு அன்னியச் செலாவணியின் தேவை அப்போது வழங்கும் மாற்று வீதத்தில் அளிப்பைவிட எவ்வளவு அதிகம் என்பதைக் குறிக்கும்; செலுத்து நிலையில் ஏற்படும் உபரி, அப்போதுள்ள மார்க்கெட் வீதத்தில் அன்னியச் செலாவணியின் தேவையைவிட அளிப்பு எவ்வளவு அதிகம் என்பதைக் காட்டும்.

**கலப்புத் தேவையும் அளிப்பும்** (Composite Demand and Supply

பொருள்களின் அங்காடிகளுக்கும் நாணயமாற்று அங்காடி களுக்கும் உள்ள மற்றொரு வித்தியாசத்துக்குக் காரணம் ஒரு பொருளின் தேவையும் அளிப்பும் ஒரே தன்மையுடையனவாக (homogeneous) இருக்கும்போது, நாணயமாற்றின் அதே பட்டியல்கள் கலப்புத் தேவையும் கலப்பு அளிப்புமாக இருப்பதாகும். பருத்தியின் தேவை என்பதை எடுத்துக்கொண்டால் தனித்தன்மையான சில குணங்களையுடைய ஒரு தனிப்பொருளை வாங்குபவர்கள் எவ்வளவு கேட்கிறார்கள் என்பதை அது குறிக்கிறது. அன்னியச் செலாவணியின் தேவை என்பது, சற்று முன் கூறியபடி, வெவ்வேறு தேவைகளின் கலப்பாகும். அதாவது, பலவகைப் பொருள்கள் பணிகளில் பல்வேறு வகை, பலவகைப் பங்கு, பத்திரங்கள் இவை அனைத்துக்குமான கலப்புத் தேவை அது. அன்னியச் செலாவணியின் அளிப்பும் அவ்வாறே ஒரு கலப்பு ஆகும்.

பொருள் அங்காடிகளில் தேவையும் அளிப்பும் குறிப்பதும் நாணய மாற்று அங்காடியில் தேவையும் அளிப்பும் குறிப்பதும் அடிப்படையில் இவ்வளவு மாறுபட்டிருக்கும்போது, அவை வெவ்வேறு விளைவுகளை உண்டாக்காது என்பது என்ன நிச்சயம்? உள்ளபடி நாணயமாற்று வீதங்கள் நிலையற்றிருக்கக்கூடிய அபாயம் இல்லையா? அதாவது, இவ் வீதங்களின் ஏற்றமோ, தாழ்வோ தொடங்கிவிட்டால் நிற்காமல் போய்க்கொண்டே இருக்குமா? பொருள்களின் விலைகளைப் பொறுத்த வரையில் தேவையும் அளிப்பும் கணிசமான அளவுக்கு மாறினால்தான் பொருள்களின் விலைகளில் பெரும் மாறுதல்களைக் காணலாம்.

அப்பொழுதும்கூட அவ்வாறு விளையும் விலை மாறுதல்களுக்குத் தானே ஒரு வரம்பு உண்டாகிறது. விலை உயர்ந்தால் அளிப்பு உயர்ந்து விலை உயர்வு தடைப்படுகிறது ; விலை விழுந்தால் வாங்கப்படும் அளவு அதிகரித்து விலை மேலும் விழுவது தடைப்படுகிறது.

### திடமான அங்காடிகளும் திடமற்ற அங்காடிகளும் (Stable and Unstable Markets)

எந்த விலையில் தேவையும் அளிப்பும் சமமாகி ஒன்றுக்கொன்று தீர்த்துக்கொள்கின்றனவோ, அதைவிட விலை அதிகமானல் தேவையை விட அளிப்பு அதிகமாகவேண்டும் ; அதைவிட விலை குறைந்தால் அளிப்பைவிடத் தேவை அதிகமாகவேண்டும். அத்தகைய அங்காடியைத் திடமான அங்காடி என்கிறோம். பொருள் அங்காடிகளில் இவ்வாறு நடக்கிறது. ஆனல், அங்காடியில் தீரும் விலைக்கு அதிகமான விலைகளில் அளிப்பைவிடத் தேவை அதிகமாக இருந்தால் போகப்போக இந்த வித்தியாசம் அதிகமாகிக்கொண்டேபோகுமாதலின், சமநிலைக்கு மேல் விலை உயர்ந்தால் அது நிரந்தரமாக உயர்ந்து கொண்டே இருக்கும்.

இத்தகைய திடமற்ற சூழ்நிலை நாணயமாற்று அங்காடிகளில் காணப்பெறலாம். நாணயமாற்று வீதங்கள் தறிகெட்டு மிக அதிகமாக ஏறி இறங்கிய காலங்கள் உண்மையில் இருந்திருக்கின்றன. முக்கியமாக முதல் உலகப் போர் முடிந்தவுடன் இவ்வாறு ஏற்பட்டது. அப்போது ஜெர்மனியின் மார்க்கும், ஆஸ்ட்ரியாவின் கிரவுனும், ருஷ்யாவின் ரூபுலும், மார்க்கெட் சக்தியால் கடுமையாகச் சுழற்றியடிக்கப்பட்டு இறுதியில் அநேகமாக அவற்றின் மதிப்பு முழுவதையும் இழந்தன. அன்னியச் செலாவணியின் தேவை, அளிப்பு ஆகியவற்றின் விசேஷமான அமைப்பினுல் மிக அதிகமான ஏற்றத் தாழ்வுகள் நாணயமாற்று வீதத்தில் ஏற்படத்தான் வேண்டுமா அன்றி அசாதாரணமான நிலைமைகளில்தான் இத்தகைய கடுமையான மாற்றங்கள் தோன்றுகின்றனவா என்பதை நாம் நிச்சயிக்க வேண்டும்.

### நாணயமாற்று வீதங்களின் மிக முக்கியமான பங்கு

நாணயமாற்று வீதங்கள் மாறுவதால் இரு நாடுகளின் தராதர விலைகளும் மாறுகின்றன. எனவே, பன்னுட்டு வாணிபத்தில் நாணய மாற்று வீதங்களின் பங்கு மிக முக்கியமானது என்பதை முந்திய அத்தியாயத்தில் பார்த்தோம். அன்னியச் செலாவணிகளின் விலை உயர்ந்தால் ஒரு நாட்டின் இறக்குமதிகளின் விலை உயருகிறது. அந் நாட்டின் ஏற்றுமதிகளின் வெளிநாட்டு விலை குறைய வழி

உண்டாகிறது. இதனுல் இறக்குமதிகள் குறைகின்றன. ஏற்றுமதிகள் ஊக்குவிக்கப்படுகின்றன. எனவே, செலுத்துநிலையில் ஏற்பட்ட பற்ருக்குறையை, குறைவுகளை ஈடுசெய்ய அதிகச் செலவில் நிதி வசதிக்கு ஏற்பாடு செய்யாமலேயே சரிக்கட்ட ஒரு நாட்டின் நாணய மாற்று வீதங்களின் ஏற்றத்தாழ்வுகள் வழி செய்ய முடியும். நாணய மாற்று வீதங்கள் எவ்வாறு நிர்ணயிக்கப்படுகின்றன என்பதைக் கண்டுபிடிக்க இது மற்ருெரு காரணமாகும்.

இந்த விஷயத்தை இந்த அத்தியாயத்தில் பரிசீலிப்போம். இதற்காக செலுத்துநிலையில் பற்ருக்குறைகொண்ட ஒரு நாட்டைப்பற்றி மட்டும் பார்ப்போம். அத்தகைய நாட்டுக்குத்தான் உண்மையில் ஒரு பிரச்சினை என்பது உள்ளது. உபரி செலுத்துநிலை கொண்ட நாட்டுக்கு வெளிநாட்டில் நிலுவைத் தொகைகளும் பொன்னும் சேரு கின்றன ; குறைவை ஈடுகட்ட நிதிவசதிக்கு ஏற்பாடு செய்யும் தொல்லை அதற்கில்லை. எனவே, ஏதாவது ஒருசில விலக்குகளைத் தவிர, நாம் செலாவணி மதிப்பிறக்கத்தின் (exchange depreciation) விளைவுகளை மட்டுமே இங்கு ஆராய்வோம். மதிப்பேற்றத்தின் (appreciation) அல்லது நாணயமாற்று வீதங்களின் தாழ்வின் விளைவுகளை நிர்ணயிக்க வேண்டுமானுல், ஆராய்ச்சி அதன் முடிவுகள் இவ்விரண்டையும் முன்பின்னுகத் திருப்பிப் போட்டால் போதும். செலுத்துநிலைப் பிரச்சினைகளைத் தீர்ப்பதுபற்றிய நம் முடிவுகளை அடுத்த அத்தியாயத்தில் பயன்படுத்தி, இதற்காக நாணயமாற்று வீதங்களை மாற்றுவதால் பொன்திட்டத்தின்கீழ் எவ்வாறு வேருெரு வழி உண்டு என்பதைப் பார்ப்போம். இறுதியில், மூன்ருவதொரு வழி, அதாவது, செலுத்துநிலையில் உள்ள சமனறு நிலையைச் சரிசெய்ய நேரிடைக் கட்டுப்பாடுகள் விதிப்பதுபற்றி ஆராய்வோம்.

நாட்டுக்கு நாடு விலைகளின் தொடர்பை மாற்றும் சக்தியை நாணய மாற்று விகிதங்கள் பெற்றிருக்க வேண்டுமானுல் அவை தடையின்றி மாறக் கூடியவையாக இருக்கவேண்டும் ; அதாவது, அன்னியச் செலாவணியை வாங்குவது, விற்பது ஆகியவைமீது கட்டுப்பாடுகள் இருக்கக்கூடாது. பொன்னைப் போல ஒரு பொது அளவுகோலுடன் நாணயங்கள் பிணைக்கப்பட்டிருந்தால் நாணயமாற்று வீதங்கள் வரம்பின்றி மாறமுடியாது. எனவே, நாணயமாற்று அங்காடிகள்மீது தடைகள் ஏதும் இல்லை என்பதோடு, நாணயங்கள் பிணைப்பற்றவை என்றும் எடுத்துக்கொள்வோம். அதாவது, தானே மேற்கொண்ட ஒரு கொள்கைக்கு ஏற்ப பணத்தின் அளிப்பையும் அதனுல் உள்நாட்டு விலைவாசிகளையும் ஒவ்வொரு நாட்டின் பணத்துறை அதிகாரிகளும் நிர்ணயிக்கிருர்கள்.

**அன்னியச் செலாவணி நிலைமையைப் பற்றாக்குறை பிரதிபலிக்கிறது**

ஒரு நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் தன்னிச்சையான விவகாரங்கள் மட்டுமே அன்னியச் செலாவணியின் தேவை, அளிப்பு ஆகியவற்றில் அடங்கியுள்ளன என்பதை முன்னமே கூறினோம். இது உண்மையானால், அளிப்பும் தேவையும் நிலையாக உள்ள ஒரு கால அலகில், அப்போது வழங்கும் நாணயமாற்று வீதத்தில் அன்னியச் செலாவணியின் தேவை அதன் அளிப்பைவிட எவ்வளவு அதிகமாக இருக்கிறது என்பதைச் செலுத்துநிலையில் உள்ள பற்றாக்குறை காட்டுகிறது. ஏனெனில், தன்னிச்சையான வருவாய்களுக்கும் தன்னிச்சையான செலுத்துகைகளுக்கும் இடையே இருக்கும் வித்தியாசம்தான் பற்றாக்குறை. இந்த வருவாய்களுக்கும் அந்தக் காலத்தில் உண்மையில் கொடுக்கப்படும் அன்னியச் செலாவணியின் அளிப்பும் ஒத்தவை. இந்தச் செலுத்துகைகளுக்கு அன்னியச் செலாவணியின் தேவை ஒத்தது.

இவ்வாறு, ஒரு நாட்டின் செலுத்துநிலையில் பற்றாக்குறை இருக்கும்போது, அன்னியச் செலாவணியின் தேவைக்கோட்டிலும் அளிப்புக்கோட்டிலும் ஒரு புள்ளியை இதனால் கண்டுபிடிக்கலாம். அந்தப் புள்ளி, அப்போது வழங்கும் நாணயமாற்று வீதத்தில் அன்னியச் செலாவணியின் தேவையையும் அளிப்பையும் குறிக்கிறது. அதைவிட உயர்ந்த அல்லது தாழ்ந்த வீதங்கள் இருக்கும்போது அளிப்பும் தேவையும் எப்படி இருக்கும் என்பது பண அதிகாரிகளுக்குத் தெரியாது. அது, அந்தக் கோடுகள் எவ்வளவு செங்குத்தாக இருக்கின்றன என்பதைப் பொறுத்தது. அதாவது, அவற்றின் நெகிழ்ச்சியைப் பொறுத்தது.

**அன்னியச் செலாவணி நெகிழ்ச்சிகள் இங்கு எப்படிப் பொருந்தும் ?**

செலுத்துநிலைப் பற்றாக்குறையை அகற்ற, பணத்தின் மதிப்பைக் குறைக்க, அதாவது, நாணயமாற்று விகிதங்களை அதிகரிக்கப் பண அதிகாரிகள் எண்ணிக்கொண்டிருந்தால், இவ் விஷயத்தில் அன்னியச் செலாவணியின் தேவை, அளிப்பு ஆகியவற்றின் நெகிழ்ச்சிகள் முக்கியமாகக் கவனிக்கவேண்டியவை. இதைப் பின்வரும் உதாரணம் விளக்குகிறது.

ஃபிரான்ஸின் நாணயமாற்று அங்காடியில் கற்பனை செய்த ஒரு நிலைமையை 18·1 எண் கொண்ட படம் காட்டுகிறது. எல்லா நாணய மாற்று வீதங்களுக்கும் பிரதியாக பிராங்கு/டாலர் விகிதம் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. தேவைப்படும் அல்லது அளிக்கப்படும் அன்னியச் செலாவணியின் மொத்தத் தொகை டாலர்களில் தரப்பட்டுள்ளது. கடந்த பல மாதங்களாக அன்னியச் செலாவணியின் தேவையும்

அளிப்பும் ஏறக்குறைய ஒரே நிலையில் இருப்பதாகக் கொள்வோம். இந்தக் காலத்தில் பொருள்கள், பணிகள், நெடுங்காலப் பத்திரங்கள் ஆகியவற்றின் ஏற்றுமதிக்கான தன்னிச்சையான செலுத்துநிலை




அன்னியச் செலாவணியின் அளிப்பும் தேவையும் (மிலியன் டாலர்களில்)
படம் 18·1. தடையற்ற நாணயமாற்று விகிதங்கள்மூலம் இசைவு

வருவாய்கள் மொத்தம் $ 400 மிலியன். அதே சமயத்தில் அதே விஷயங்களின் இறக்குமதிகளுக்காகச் செலுத்துகைகள் $ 700 மிலியன். இதனால் ஏற்பட்ட பற்றுக்குறைக்கு ஈடாகப் பொன் ஏற்றுமதி செய்யப் பட்டது. அல்லது அரசாங்கத்தின் வெளிநாட்டு நிலுவைகள் குறைந் தன. அல்லது அரசாங்கம் வெளிநாட்டில் கடன் வாங்கியது என்று கொள்ளலாம். கட்டுப்பாடுகள் இல்லாவிட்டால் இந்த முறைகள்மூலம் தான் நாணயமாற்று வீதத்தை டாலருக்கு ஐந்து பிராங்குகள் அளவில் நிலையாக வைத்திருக்க முடியும்.

தன்னிச்சையான செலுத்துகைகள், வருவாய்கள், நாணயமாற்றின் நடப்பு வீதம் இவைபற்றி நாம் அறிந்ததிலிருந்து, அன்னியச் செலாவணித் தேவைக்கோட்டில் $M$-ல் ஒரு புள்ளியும் அளிப்புக் கோட்டில் $X$-ல் ஒரு புள்ளியும் நமக்குக் கிடைக்கின்றன. வேறு நாணயமாற்று வீதங்களில் இந்தக் கோடுகள் எப்படி இருக்கும் என்பதைப்பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. ஏனெனில், டாலருக்கு 5 பிராங்குகள் என்ற நடப்பு வீதத்தில்தான் விவகாரங்கள் நடந்து வந்துள்ளன.

அடுத்த சில காலத்துக்கு அடிப்படை நிலைமை மாறாது என்று பண அதிகாரிகள் நம்பினால் அப்போதுள்ளதுபோலப் பற்றுக்குறை தொடர்ந்து வந்துகொண்டே இருக்கும் என்பதை அவர்கள் எதிர் பார்க்கலாம். குறைவை ஈடுகட்ட மேலும் நிதி ஏற்பாடுகள் செய்வதைத் தடுக்க நாணயமாற்று விகிதத்தை அதிகரிக்க விடுவது நல்லதா என்பதை அவர்கள் யோசிக்கிறார்கள். ஆனால், இது எவ்வளவு அதிகம் உயரும்? 20 அல்லது 30 சதவிகித உயர்வு மிதமானது; கடும் பிரச்சினைகள் எதையும் உண்டாக்காது. ஆனால், 50 அல்லது 100 சத விகிதம் மதிப்பிறக்கம் செய்வது தாங்கமுடியாதது.[1]

இந்தப் படத்தில் தேவை, அளிப்புக் கோடுகளின் இரண்டு ஜோடிகள் வரையப்பட்டுள்ளன. இரண்டு சாத்தியமான வழிகள் காண்பிக்கப்பட்டுள்ளன. ஒரு ஜோடி ($D_eD_e'$ மற்றும் $S_eS_e'$), மற்றதோடு ஒப்பிட்டால் நெகிழ்ச்சியுள்ளது. மற்றது ($D_iD_i'$ம் $S_iS_i'$ம்) நெகிழ்வற்றது. முதல் தொகுதிக் கோடுகளைப்போல, நாணயமாற்று வீதம் அதிகமானால் அதற்கேற்றவாறு விரைவில் மாறும்; அதாவது, நெகிழ்ச்சியுள்ள தன்மையைத் தேவையும் அளிப்பும் பெற்றிருந்தால், வெகுவிரைவில் அன்னியச் செலாவணியின் அளிப்பு அதிகரிக்கும், தேவை சுருங்கும். எனவே, மார்க்கெட்டில் டாலருக்கு ஆறு பிராங்கு வீதம் தீர்ந்து நிற்கும். அப்போது டாலர்கள், பிராங்குகளின் அளவில் 20 சதவிகிதம் மதிப் பேற்றம் பெற்றுள்ளது. பிராங்கு $16\frac{2}{3}$ சதவிகிதம் மதிப்பிறக்கம் அடைந்துள்ளது.

அன்றி, இரண்டாவது ஜோடி கோடுகளைப் போல ($D_iD_i'$ம் $S_iS_i'$ம்) தேவையும் அளிப்பும் நெகிழ்வற்று இருந்தால், நாணயமாற்று விகிதம் சமநிலை வருமுன் டாலருக்கு 10 பிராங்குகள் அளவுக்கு உயரவேண்டும். அப்போது டாலரின் மதிப்பு பிராங்குகளில் 100 சதவிகிதம் உயர்ந்து விடும். பிராங்கின் மதிப்பிறக்கம் 50 சதவிகிதம் ஆகும்.

[1] செலாவணி மதிப்பிறக்கத்தினால் தோன்றும் பிரச்சினைகளை ஆராய்வதை 20ஆவது அத்தியாயத்திற்குத் தள்ளிப்போட்டு இந்த அத்தியாயத்தில் அம் மதிப்பிறக்கம் எவ்வளவு அதிகமாக இருக்கவேண்டும் என்பதை எக் காரணிகள் நிர்ணயிக்கின்றன என்பதை மட்டும் பார்ப்போம்.

மதிப்பிறக்கம் செய்ய எண்ணிக்கொண்டிருக்கும் ஒரு நாட்டின் பண அதிகாரிகள் பற்றுக்குறையைப் போக்கவேண்டுமானல் எவ்வளவு தூரம் மதிப்பிறக்கம் செய்யவேண்டும் என்பதைப்பற்றி தோராயமாகவாவது தெரிந்துகொள்ளவேண்டியது முக்கியம். இந்தப் பிரச்சினையை ஆராய்வது இனி நமது அடுத்த நோக்கமாகும்.

## பொருள்களுக்கும் பணிகளுக்குமாக அன்னியச் செலாவணித் தேவை

நாணயமாற்றுக்கான தேவையும் அளிப்பும் வெவ்வேறு பாகங்களைக் கொண்டவை. நாணயமாற்று விகிதம் மாறினல் இப் பாகங்கள் வெவ்வேறு மாதிரியில் பாதிக்கப்படுகின்றன என்பதை இனிப் பார்க்கப் போகிறோம். எனவே, இப் பகுதிகளைத் தனித்தனியாகக் கவனிப்பது அவசியம். பொருள்களையும் பணிகளையும் இப்போது கவனிப்போம். மூலதனப் பெயர்ச்சிகளைப் பின்னர் ஆராயலாம். மேலும், நாம் இவ்வாராய்ச்சியை ஒரு குறுகிய காலத்தின் அடிப்படையில் செய்வோம். குறுகிய காலம் என்றால் தேவை அதிகரிப்பதற்கு ஏற்ப உற்பத்தியை மாற்ற உற்பத்தியாளர்களுக்குத் தேவையான அளவு நீண்ட காலம், ஆனல், உற்பத்தி செய்யும் திறனில் மாற்றம் ஏற்படக்கூடிய அளவுக்கு நீண்டகாலம் அன்று.

### இறக்குமதிகளுக்கான தேவையின் நெகிழ்ச்சி

நம் உதாரணத்தைத் தொடர்ந்து ஃபிரெஞ்சு பிராங்கு நாணயத்தின் மதிப்பிறக்கம் ஏற்பட்டுவிட்டது என்று எடுத்துக்கொள்வோம். டாலர் நாணயத்தின் பிராங்கு விலை அதிகரித்திருக்கிறது. இப்போதைக்கு ஃபிரான்ஸ் இறக்குமதி செய்யும் பொருள்களின் டாலர் விலைகள் மாறவில்லை எனக் கொள்வோம். அப்போது பிராங்குகளில் அவற்றின் விலைகள் நாணயமாற்று வீதம் உயர்ந்த அதே விகிதத்தில் அதிகமாகி இருக்கும். அன்னியச் செலாவணியின் தேவை நெகிழ்ச்சியுள்ளதா, நெகிழ்வற்றதா என்பதை எது நிர்ணயிக்கும்? பற்றுக்குறையை ஒழிக்க மார்க்கெட்டின் இந்தப் பகுதி எவ்வளவுக்கு உதவி செய்கிறது என்பதை எது நிர்ணயிக்கும்? விடை தெளிவாகத் தெரிகிறது. நாம் பொருள்களையும் பணிகளையும் வாங்கத் தேவைப்படும் அன்னியச் செலாவணியைப் (அதாவது, டாலர்களைப்) பற்றி ஆராய்ந்துகொண்டிருக்கிறோம். எனவே, அன்னியச் செலாவணியின் தேவை நெகிழ்ச்சி வெளிநாட்டிலிருந்து வரும் இறக்குமதிகளின் தேவை நெகிழ்ச்சியை அப்படியே பொறுத்திருக்கும்.

ஃபிரான்ஸில் ஒரு சிறிதும் உற்பத்தியாகாத இறக்குமதிப் பொருள்களை எடுத்துக்கொள்வோம். இவற்றைப் பொறுத்தவரை இறக்குமதி

யாகும் வகையைச் சேர்ந்த பொருள்களுக்குப் பொதுவாக உள்ள தேவையும், இறக்குமதிகளின் தேவையும் ஒன்றே. அவற்றின் நெகிழ்ச்சிகளும் ஒன்றே. எனவே, இறக்குமதிகளுக்கான தேவையை அன்னியச் செலாவணிக்கான தேவை அப்படியே பிரதிபலிக்கும். ஒரே ஒரு வித்தியாசம். அன்னியச் செலாவணியின் தேவை நாணயமாற்று விகிதங்களிலும், அன்னியச் செலாவணியின் மொத்தத் தொகைகளிலும் கூறப்படுகின்றது. இறக்குமதிகளின் தேவையோ இறக்குமதி விலை களிலும் தேவைப்படும் பொருள்களின் (அல்லது பணிகளின்) மொத்த அளவுகளில் கூறப்படுகிறது.

## இறக்குமதிகளுடன் போட்டியிடும் பொருள்களின் அளிப்பு

அல்லாமல், இறக்குமதிகளுடன் போட்டியிடும் பொருள்கள் ஃபிரான் ஸில் உற்பத்தியாகின்றன என்று கொள்வோம். அப்போது இறக்குமதி யாகும் பொருள்களைப் போன்றவைகளுக்கு (அல்லது சுருக்கமாக, இறக்குமதி-வகைப்பொருள்கள்) உடைய தேவை, இறக்குமதிகளுக்கான தேவை இவை இரண்டையும் வெவ்வேருகக் கருதவேண்டும். முதலில் கூறிய தேவை ஃபிரான்ஸிலிருந்து வரும் அளிப்புகள் அல்லது வெளி நாட்டு உற்பத்திகள் ஆகியவற்றுக்கானது, அவற்ருல் திருப்தி அடையக் கூடியது. பின்னுல் கூறியது இறக்குமதியான பொருள்களை மட்டுமே நாடுகிறது.

இறக்குமதி-வகைப் பொருள்களின் தேவை, காலணிகள் போன்று ஒரு குறிப்பிட்ட பொருளுக்கு உள்ள பொதுவான தேவை. பிற பொருள்களின் விஷயத்தில் எப்படியோ அப்படியே நுகர்வோரின் விருப்பங்களைப் பொறுத்து அதன் நெகிழ்ச்சி. அதாவது, விலைகளுக்கு ஏற்ப விற்பனை மாறுபாடு அமைகிறது. ஆனுல், பொதுவாகச் செருப்பு களுக்குள்ள தேவையைவிட, செருப்புகளின் இறக்குமதிகளுக்கு உள்ள தேவையின் நெகிழ்ச்சி அதிகமாக இருக்கும். இது ஏனெனில், இறக்குமதியாகும் காலணிகளின் விலை குறைந்தால் (அதிகரித்தால்) அதற்குப் போட்டியாக உற்பத்தி செய்யும் உள்நாட்டு உற்பத்தியாளர் கள் தம் உற்பத்தியை அதிகமாயுள்ள (குறைந்துள்ள) போட்டியின் காரணமாகக் குறைப்பர் (அதிகரிப்பர்). இறக்குமதியாகும் காலணி களின் விலை குறையும்போது அவற்றின் விற்பனை அதிகரிக்கும். இதற்கு இரண்டு காரணங்கள். ஒன்று, சாதாரணமாகவே விலை குறைந்தால் மக்கள் அதிகமாக அப் பொருளை வாங்குவர். மற்றது, அதைவிட அடக்க விலை உயர்ந்த உள்நாட்டுக் காலணிகள் நீக்கப்படுவ தால் விற்பனையில் பெரும்பகுதி இறக்குமதியான காலணிகளாக இருக்கும்.

இந்த விளைவுகள் 18·2 எண்ணுள்ள படத்தில் குறிப்பிடப்பட்டுள் ளன. (ஃபிரான்ஸில்) செருப்புகளைப் போன்ற ஒரு பொருளின் தேவைக்

கோடு ($DD'$). உள்நாட்டு உற்பத்தியாளர்களின் குறுகியகால அளிப்புக் கோடு ($C_h C_h'$). நம் ஆராய்ச்சியை எளிதாக்கப் போக்குவரவுச் செலவுகளை மறந்துவிடுவோம். அப்படியானுல் $P_n$ அல்லது அதற்கு அதிகமான விலையில் உள்நாட்டு உற்பத்தியாளர்கள் மார்க்கெட் முழுவதற்கும் காலணிகளை அளிக்கமுடியும். இறக்குமதிகள் அந்த விலையைவிட அதிகமான செலவுக்குத்தான் அந் நாட்டில் இறங்கமுடியும் என்ருல் அவற்ருல் போட்டியிட முடியாது. வெளிநாட்டில் அடக்கவிலை குறைந்ததாலோ அல்லது பிராங்கு நாணயம் மதிப்பேற்றம் பெற்றதாலோ (அதாவது, டாலரின் பிராங்கு விலை குறைந்ததாலோ) இறக்குமதி விலை




படம் 18·2. இறக்குமதி-வகைப் பொருள்களுக்கும் இறக்குமதிகளுக்கும் தேவை நெகிழ்ச்சி

குறையுமாஞல் இறக்குமதிகள் அந் நாட்டுக்குள் வரத்தொடங்கும். மிக அதிகமான அடக்க விலை கொண்ட உற்பத்திகள் இனி உற்பத்தி ஆக மாட்டா. இறக்குமதி விலை அடுத்தடுத்து விழுந்துகொண்டே இருந்தால் ஃபிரெஞ்சு அளிப்புகளுக்குப் பதிலாக இறக்குமதியான அளிப்புகளின் அளவு அதிகமாகிக்கொண்டே போய் இறுதியில் $P_a$ என்ற விலையில் ஃபிரெஞ்சு அளிப்பு அடியோடு மறைந்துபோகும். இறக்குமதி-வகைப் பொருள்களின் தேவையை $DD'$ குறிக்கிறது. இதற்கு மாருக,

இறக்குமதிகளின் தேவையை, $P_nP_a$ விலை எல்லைக்குள் $D_mD_m'$ என்ற கோடு குறிக்கிறது. $P_a$-க்குக் கீழே மார்க்கெட்டு முழுவதிலும் இறக்குமதியான பொருள்களே வாங்கப்படுகின்றன; எடுத்துக்கொண்ட பொருளின் தேவையும் இறக்குமதிகளின் தேவையும் ஒன்றாகிவிடுகின்றன.

**அன்னியச் செலாவணியின் தேவை நெகிழ்ச்சி**

இறக்குமதிகளுடன் போட்டியிடும் உள்நாட்டு உற்பத்தியிருக்கும் போது ஒரு நாட்டின் இறக்குமதித் தேவை எப்படி வழக்கத்துக்கு மாறாக உள்ளது என்பதை நிரூபித்தோம். இனி அன்னியச் செலாவணியின் தேவைபற்றித் தொடர்ந்து ஆராய்வோம். இறக்குமதிகளின் தேவையைப் போலவேதான் அன்னியச் செலாவணியின் தேவையும். வித்தியாசம் என்னவென்றால், விலைகள் என்ற இடத்தில் நாணயமாற்று வீதங்கள் என்றும், இறக்குமதிகளின் அளவுகள் என்ற இடத்தில் அன்னியச் செலாவணியின் மொத்தத் தொகை என்றும் படிக்க வேண்டும்.

இறக்குமதிகளுக்காக (எனவே, அன்னியச் செலாவணிக்காக) ஒரு நாட்டின் தேவை எவ்வளவு நெகிழ்ச்சியாக இருக்கிறது என்பது பின் வருவனவற்றைப் பொறுத்தது: (1) இறக்குமதி-வகைப் பொருள்களின் தேவை நெகிழ்ச்சி, (2) உள்நாட்டுப் போட்டி உடைய இறக்குமதிகளின் விகிதாசாரம், (3) இறக்குமதிகளின் விலைகள் குறையும்போது (அதிகரிக்கும்போது) எவ்வளவு விரைவில் அத்தகைய உள்நாட்டுப் போட்டி சுருங்குகிறது (விரிவடைகிறது). (அதாவது, இறக்குமதிகளுடன் போட்டியிடும் பொருள்களின் அளிப்பின் நெகிழ்ச்சி.)

எந்த நாட்டில் இறக்குமதிகள் முக்கியமாக ஆடம்பரப் பொருள்களாக உள்ளனவோ, எதன் இறக்குமதிகளுக்கு உள்நாட்டில் பல பதிலிப் பொருள்கள் உள்ளனவோ, விலைகள் மாறும்போது எந் நாட்டில் இறக்குமதிகளோடு போட்டியிடும் உற்பத்தி விரைவில் விரிவடையவும் சுருங்கவும் செய்கிறதோ அந் நாட்டினுடைய இறக்குமதிகளின் தேவை நெகிழ்ச்சியும், எனவே அன்னியச் செலாவணியின் தேவை நெகிழ்ச்சியும் அதிகமாக இருப்பது இயல்பு. அதற்கு மாறாக, அத்தியாவசியமான பொருள்கள் முக்கியமாக இறக்குமதியானால், உள்நாட்டில் உற்பத்தியாகும் பதிலிப் பொருள் குறைவாக இருந்தால், மற்றும், இப் பதிலிப் பொருள்களின் அளிப்பு முந்தைய நாடுகளுடன் ஒப்பிட்டால் மாறுததாக இருந்தால், இந்த நெகிழ்ச்சி குறைவாக இருக்கும்.

**இறக்குமதிகளின் அளிப்பு நெகிழ்ச்சி**

இறக்குமதிப் பொருள்கள் உற்பத்தி ஆகும் நாட்டில் நிலவும் உற்பத்திச் சூழ்நிலையையும், அது ஓரளவுக்கு முக்கியத்துவம் குறைந்த

தாயினும், இங்கு ஆராயவேண்டும். இறக்குமதி செய்யும் நாட்டில் அதன் நாணயம் மதிப்பிறக்கம் பெறும்போது என்ன ஆகிறது என்பதை மட்டும் நன்கு பார்ப்பதற்காக, இறக்குமதிப் பொருள்கள் தோன்றும் நாட்டில் அவற்றின் விலைகள் மாருமல் இருக்கின்றன என்று இதுவரை எடுத்துக்கொண்டிருந்தோம். மாருச் செலவுகள் (constant-costs) நிலையும், அளிப்பின் நெகிழ்ச்சி அளவிலாமல் (infinite) இருந்தது என்பதும் நம் எடுகோளாக இருந்தன. பொருளாதார மந்த காலத்தில் பல உற்பத்திக் காரணிகள் பயன்படாது இருக்கும் போது குறுகிய காலத்துக்கு ஏறக்குறைய இத்தகைய நிலவரம் இருக்கக் கூடும். அப்போதும், தொழிற்சாலை உற்பத்திகள் போன்று தொடர்ச்சி யாக உற்பத்தியாகும் பொருள்களின் விஷயத்தில்தான் இந் நிலவரம் பூரணமாக இருக்கும்.[2] இப்படி இருக்கும்போது, அன்னியச் செலா வணியின் தேவை நெகிழ்ச்சிபற்றி நாம் கூறியதில் மாற்றம் ஏதும் தேவையில்லை.

முழு வேலை நிலை (full employment) அல்லது ஏறக்குறைய முழு வேலை நிலை இருக்கும்போதுகூட, மதிப்பிறக்கத்தின் காரணமாக, வெளிநாட்டுத் தேவை குறைந்துவிட்டால், ஏற்றுமதி செய்யும் இடத்தில் தொழிற்சாலை உற்பத்திகளின் விலை மாருது. தொழிற்சாலை உற்பத்தி களில் மிகவும் நிறைகுறைப் போட்டி (imperfect competition) இருப்பதால்தான் இவ்வாறு விநோதமாக இருக்கிறது. ஆலைகள் முழு உற்பத்தியைச் செய்துகொண்டிருக்கும்போது தேவை அதிகமாக உள்ளதனுல் விலைகளை எவ்வளவு ஏற்ற முடியுமோ அவ்வளவுக்கு உற்பத்தியாளர்கள் விலைகளை உயர்த்துவதில்லை. கூலிகளும் பிற செலவுகளும் அதிகமானுலொழிய அவர்கள் விலைகளை உயர்த்துவதில்லை. ஆர்டர்களைச் சேர்த்து வைத்துக்கொண்டு தத்தம் வாடிக்கைக்காரர் களைக் காக்கவைத்துப் பங்கீடு செய்கிறுர்களே ஒழிய அதற்கு மாருக விலையை உயர்த்திப் பங்கீடு செய்வதில்லை. எனவே, மதிப்பிறக்கம் காரணமாக வெளிநாட்டுத் தேவை குறையுமானுல் இந்த உற்பத்தி யாளர்கள் விலைகளைக் குறைக்கவேண்டிய அவசியம் இல்லை. மாருக, எஞ்சியுள்ள தம் ஆர்டர்களின் பட்டியலை ஓரளவு குறைத்துக்கொள் கிருர்கள். மோசமான மந்தகாலம் அல்லது முழு வேலைக் காலம் ஏற்றுமதி நாட்டில் இருக்கும்போது அங்கு விலைகள் பிற காலத்தோடு ஒப்பிட்டால் மாருமல் இருக்கும் என்று ஒரு நாட்டின் தொழிற்சாலை உற்பத்திகளின் இறக்குமதியைப் பொறுத்தவரை எடுத்துக்கொள்வது தவருகாது. இறக்குமதி செய்யும் நாட்டின் பணம் மதிப்பிறக்கம்

2 வெவ்வேறு தொழில்களில் வெவ்வேறு நிலவரங்கள் வழங்கும். பொதுப் படையாகக் கூறிவிடுவது அபாயகரமானதாகும். ஆனுல், உற்பத்தி மிகக் குறைந்த நிலையில் விலை குறைப்புக்கு எதிர்ப்பு மிகவும் அதிகமாக இருக்கும்.

அடைந்தால், அந்த அளவுக்குத் தொழிற்சாலைப் பொருள் இறக்குமதி களின் விலைகள் அங்கு உயரும்.

விவசாய உற்பத்திகள் விட்டுவிட்டு, விளைச்சல் காலங்களின் முடிவில்தான் கிடைக்கின்றன. இறக்குமதியாளரின் நாணயத்தின் மதிப்பிறக்கம் இப் பொருள்களைப் பொறுத்தவரை வேறு விளைவுகளை உண்டாக்குகிறது. ஒரு பருவத்துக்கும் அடுத்ததற்கும் இடையே இவற்றின் அளிப்பு மாறுவதில்லை. இறக்குமதி நாட்டில் மதிப்பிறக்கம் காரணமாக விற்பனை விழுந்தால், விலைபோகாத சரக்குக் குவிகிறது. விற்பனை குறையாமல் பார்த்துவந்த சரக்கைத் தள்ளிவிடுவதற்காக உற்பத்தி செய்யும் நாட்டில் விலைகளைக் குறைக்க வேண்டும்; மதிப் பிறக்கும் நாட்டில் விலை முன்னிருந்த அதே அளவில் இருக்குமாறு அவற்றின் விலைகளை உற்பத்தி செய்யும் நாட்டில் குறைக்க வேண்டும்.[3]

எனவே, பிராங்கின் மதிப்பு இறங்கினால், இறக்குமதியான புகை யிலையின் விலை உயரும்; ஃபிரெஞ்சு இறக்குமதிகள் குறையும்; உற் பத்தி நாட்டில் (உதாரணமாக, ஐக்கிய அமெரிக்காவில்) சரக்கு இருப்பு சேரும். இதைத் தடுக்க அமெரிக்க உற்பத்தியாளர்கள் அதன் டாலர் விலையை, பிராங்கு/டாலர் நாணயமாற்று வீதம் உயர்ந்ததைச் சரிக் கட்டும் அளவுக்குக் குறைக்கவேண்டி வரும். இதனால், ஃபிரான்ஸில் புகையிலையின் விலை மாறாதிருக்கும். ஃபிரெஞ்சுக்காரர்கள் தொடர்ந்து அதே அளவுக்குப் புகையிலையை வாங்குவார்கள்.

ஆனால், ஃபிரெஞ்சுக்காரர்கள் இந்த இறக்குமதியை அதே விலையில் அதே அளவுக்கு வாங்குவார்களானால், அவர்கள் செலவிடும் மொத்த டாலர் செலாவணியும் அதே அளவுக்கு இருக்கும். இதற்கென்ன பொருள்? விலைகள் மாறினாலும் ஒரு பொருளை வாங்கச் செலவாகும் மொத்தத் தொகை மாறாமல் இருந்தால் தேவை நெகிழ்ச்சியின் அளவு ஒன்று என்கிறோம். எனவே, இந்தச் சந்தர்ப்பத்தில் அன்னியச் செலாவணி தேவை நெகிழ்ச்சியின் மதிப்பு 1 ஆகும். இறக்குமதி களின் தேவை நெகிழ்ச்சி அதிகமோ, குறைவோ, அதன் விளைவுகளை நாம் உணர முடியவில்லை. ஏனெனில், இறக்குமதிகளின் விலை மாறா மல் இருந்ததால் தேவை நெகிழ்ச்சியானது செயலாற்றவில்லை.

இவ்வாறு, ஒரு நாட்டின் இறக்குமதிகளின் அளிப்பைப் பொறுத்த வரை இரண்டு எல்லை நிலைகள் உள்ளன: (1) ஏற்றுமதியாளரின் விலை

[3] விவசாய உற்பத்திகளுக்குத் தடையிலா அங்காடிகள் இருந்தால்தான் இம் முடிவு சரி. பல நாடுகளில் இப்போது உள்ளது போன்று விலை ஆதரவுத் திட்டங்கள் (price support schemes) அமலில் இருந்தால், முந்திய பத்திகளில் விவரிக்கப்பட்டது போன்ற விளைவுகள்தாம் ஏற்படும்.

மாறுவதில்லை; இறக்குமதி செய்யும் நாட்டின் பணத்தில் அவற்றின் விலை நாணயமாற்று விகிதத்தோடு உயருகிறது. (2) இதற்கு எதிரான நிலை; இறக்குமதி செய்யும் நாட்டின் பணத்தில் அவற்றின் விலை மாறுவதில்லை; ஏற்றுமதியாளர் தம் பணத்தில் அவற்றின் விலையைக் குறைக்கிறார்கள். முதல் நிலைமையில், இறக்குமதிகளின் தேவை அன்னியச் செலாவணியின் தேவை இரண்டும் ஒரே நெகிழ்ச்சியைக் கொண்டிருக்கின்றன. இரண்டாவது நிலையில், இறக்குமதிக்கான தேவையின் நெகிழ்ச்சி எதுவாக இருந்தாலும், அன்னியச் செலாவணி யின் தேவை நெகிழ்ச்சி ஒன்று.

இவ்விரண்டு எல்லைநிலைகளுக்கு இடையே உள்ள நிலைமைகளைக் கற்பனை செய்வது எளிதே. இங்கு இறக்குமதி விலைகள் உயரும்; ஆனால், நாணயமாற்று வீதம் உயரும் அதே விகிதாசாரத்தில் அன்று. இறக்குமதிகளின் அளிப்பின் நெகிழ்ச்சி பூஜ்யமும் அல்லாமல், முடிவிலாததும் அல்லாமல் இருந்தால் இந் நிலைமைகள் ஏற்படும். உதாரணமாக, ஃபிரான்ஸில் விற்பனை குறைந்தமையால் அந் நாடு இறக்குமதி செய்யும் பொருள்களை ஆக்குபவர்கள் அவற்றின் உற்பத்தியைக் குறைக்கும்போது ஒவ்வொரு பொருளின் அடக்க விலையும் குறைந்துகொண்டேவருமாயின் இவ்வாறு ஏற்படும். ஆலைப் பொருள்களைப் பொறுத்தவரையில், ஆர்டர்கள் நிறைய சேர்ந்துபோய் உற்பத்திச் சாதனங்கள் முழு அளவுக்குப் பயன்படும் நிலையும் இல்லாமல், உற்பத்திச் சாதனங்கள் மிகவும் குறைவான அளவுக்குப் பயனாகும் நிலையும் இல்லாமல் இருந்தால், இவ்வாறு குறைந்துசெல் செலவு ஏற்படலாம். விவசாயப் பொருள்களைப் பொறுத்தவரை, ஒரு விளைச்சல் பருவத்தைவிட நீண்ட காலங்களில் இவ்வாறு அலகுச் செலவு குறையும்.

### ஒரு நாட்டின் இறக்குமதிகளுக்கு வெளிநாடுகளில் தேவை

ஃபிரான்ஸ்போன்ற ஒரு நாடு இறக்குமதி செய்யும் பொருள்கள் உலகின் பிற பகுதிகளிலும் விற்கப்படுகின்றன என்பதை இதுவரை யில் நாம் பொருட்படுத்தாமலிருந்தோம். ஃபிரெஞ்சு இறக்குமதிகளின் வெளிநாட்டு விலை மாறாமல் இருந்தால், இந்தப் பிற நாடுகளின் தேவை யில் மாறுதல் ஏதும் இராது. அதைப் பொருட்படுத்தவேண்டிய அவசியம் இல்லை. அல்லாமல், ஃபிரான்ஸ் குறைவாக இறக்குமதி செய் வதால் அப் பொருள்களின் விலைகள் குறையுமானால், பிறநாடுகளில் அவற்றை அதிகம் வாங்குவார்கள்; வெளிநாட்டு விலைகள் விழாமல் அது தடுக்கும். இந்தப் பிறநாடுகளின் தேவை நெகிழ்ச்சி எவ்வளவு அதிகமாக உள்ளதோ, அவ்வளவுக்கு அதனால் விலைகள் விழாமல் நிலைத்து நிற்கும்.

## பொருள்கள், பணிகளினின்று அன்னியச் செலாவணியின் அளிப்பு

இனி, நாணயமாற்று அங்காடியின் அளிப்பைப்பற்றி ஆராயலாம். எவ்வாறு பொருள்கள், பணிகள் ஆகியவற்றின் ஏற்றுமதிகளிலிருந்து அன்னியச் செலாவணி அளிப்பு உண்டாகிறது என்பதைக் காண்போம். நாம் ஏற்கெனவே தேவையைப்பற்றி ஆராய்ந்துவிட்டதால் நம் வேலை எளிதாகிவிட்டது. அளிப்பைப்பற்றி நாம் கூறப்போவதற்கும், ஏற்கெனவே விவரித்ததற்கும் வித்தியாசம் அதிகம் இல்லை.

### அன்னியச் செலாவணி அளிப்பும் ஏற்றுமதிகளின் தேவையும்

பல்வேறு நாணயமாற்று வீதங்களில் விற்பனைக்கு வரும் அன்னியச் செலாவணியின் அளவு, அதாவது, அன்னியச் செலாவணியின் அளிப்பு என்பது ஒரு நாட்டின் ஏற்றுமதிகளுக்கு வெளிநாட்டில் உள்ள தேவையை நேர்மாறுகப் பார்ப்பதாகும். ஒரு குறிப்பிட்ட ஏற்றுமதியின் பிராங்கு விலை மாருமல் இருந்தால், பிராங்கு/டாலர், விகிதம் உயர்வதால் அப் பொருளின் வெளிநாட்டு விலை குறைந்து அதன் வெளிநாட்டு விற்பனை அதிகரிக்க வழி ஏற்படுகிறது.

உதாரணமாக, விலை அதிகமில்லாத கையுறைச் சோடி (pair of gloves) ஒன்று, 5 பிராங்கு அடக்க விலை கொண்டது, ஃபிரான்ஸிலிருந்து ஏற்றுமதியாவதாகக் கொள்வோம். டாலருக்கு 5 பிராங்குகள் என்ற மாற்று வீதத்தில் அமெரிக்க அங்காடியில் அது $ 1-க்கு விற்கும். (பிற நாணயங்கள் வழங்கும் அங்காடிகளில் அவற்றுக்கு ஏற்ற விலைகளில் விற்கும்.) டாலருக்கு 6 பிராங்குகள் என்ற வீதத்தில் தன் 5 பிராங்குகளைச் சம்பாதிக்க இறக்குமதியாளன் அதை அமெரிக்காவில் $ 0·833 விலைக்கு விற்ருல் போதும். டாலருக்கு 7·5 பிராங்கு என்ருல், வெளிநாட்டில் விலை மேலும் $ 0·67-க்குக் குறைக்கலாம்; டாலருக்குப் பத்து பிராங்கு என்ற வீதத்தில் விலை $ 0·50-க்குக் குறைக்கலாம்; இவ்வாறே மேலும் கணக்கிடலாம்.

வேறு ஒன்றும் மாறவில்லை என்ருல், வெளிநாட்டுத் தேவையின் நெகிழ்ச்சி எவ்வளவு அதிகமாக உள்ளதோ அவ்வளவு விரைவில் ஏற்றுமதிகளின் அளவும், அத்துடன் அன்னியச் செலாவணியின் அளிப்பும் அதிகரிக்கும். ஒப்பிடுவதற்கு ஒரு குறியளவு வேண்டுமாதலின், முதலில் ஏற்றுமதிகளின் தேவை நெகிழ்ச்சி 1 எனக் கொள்வோம். 18·1 எண்ணுள்ள பட்டியல், உள்நாட்டு விலை மாருது 5 பிராங்குகளாக உள்ள ஓர் ஏற்றுமதிப் பொருளைப் பற்றியது. அதில் பிராங்கு/டாலர் வீதங்கள் 50 பிராங்கு இடைவெளிகளில் காட்டப்பட்டுள்ளன. மூன்ருவது பத்தியில், 5 பிராங்குகளைப் பெற, ஒவ்வொரு நாணயமாற்று வீதத்திலும், அமெரிக்க அங்காடியில் கூறவேண்டிய விலை கொடுக்கப்பட்டிருக்கிறது.

**பட்டியல் 18·1**

**ஏற்றுமதிகளின் தேவையும் அன்னியச் செலாவணியின் அளிப்பும்**

| ஏற்றுமதியின் விலை, பிராங்குகளில் | பிராங்க் - டாலர் நாணயமாற்று வீதம் | ஏற்றுமதியின் விலை, டாலர்களில் (1÷2) | ஏற்றுமதி தேவைப்படும் அளவு (நெகிழ்ச்சி=1) | அன்னியச் செலாவணியின் அளிப்புத் தொகை 3×4 | ஏற்றுமதி தேவைப்படும் அளவு (நெகிழ்ச்சி=2) | அன்னியச் செலாவணியின் அளிப்புத் தொகை (3×6) |
|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) |
| 5 | 10 | $ 0·50 | 2,000 | $ 1,000 | 3,000 | $ 1,500 |
| 5 | 9 | 0·555 | 1,802 | 1,000 | 2,604 | 1,445 |
| 5 | 8 | 0·625 | 1,600 | 1,000 | 2,200 | 1,375 |
| 5 | 7 | 0·714 | 1,401 | 1,000 | 1,802 | 1,287 |
| 5 | 6 | 0·833 | 1,200 | 1,000 | 1,400 | 1,166 |
| 5 | 5 | 1·00 | 1,000 | 1,000 | 1,000 | 1,000 |
| 5 | 4 | 1·25 | 800 | 1,000 | 600 | 750 |
| 5 | 3 | 1·67 | 600 | 1,000 | 200 | 334 |




படம் 18·3.

வெவ்வேறு நெகிழ்ச்சிச் சூழ்நிலைகளில் அன்னியச் செலாவணியின் அளிப்பு. தேவைப்படுவதும் அளிக்கப்படுவதுமான அன்னியச் செலாவணியின் அளவு (மிலியன் டாலர்களில்)

தேவை நெகிழ்ச்சி 1 ஆக இருந்தால், பட்டியலில் உள்ள அமெரிக்க விலை ஒவ்வொன்றிலும் ஏற்றுமதியாகும் மொத்த அளவு நான்காவது பத்தியில் கொடுக்கப்பட்டுள்ளது. அப்படியானால் விலை, விற்கும் எண்ணிக்கை இரண்டின் பெருக்கல் தொகை மாறாமல் இருக்கவேண்டும்.[4] அன்னியச் செலாவணியின் அளிப்பைப் பொறுத்தவரையில் இது எதைக் காட்டுகிறது என்று கவனியுங்கள். நமது ஏற்றுமதிக்காக அமெரிக்காவில் செலவிடப்படும் மொத்தத் தொகை மாறாமல் இருந்தால், அன்னியச் செலாவணியின் அளிப்பும் மாறவில்லை என்று பொருள். அந்த அளிப்பை ஒரு வரைபடத்தில் காண்பித்தால், 18·3 எண் உள்ள படத்தில் இருப்பதுபோல அது ஒரு செங்குத்தான நேர்க் கோடாக ($S_1 S'_1$) இருக்கும். அத்தகைய கோட்டின் நெகிழ்ச்சி பூஜ்யம் ஆகும். எனவே, வெளிநாட்டில் நம் ஏற்றுமதிகளுக்கான தேவை நெகிழ்ச்சி ஒன்று என்றால், அன்னியச் செலாவணியின் அளிப்பின் நெகிழ்ச்சி பூஜ்யம்.

விலைவீழ்ச்சியைவிட அதிக விகிதாசாரத்தில் தேவை அளவு அதிகரித்தால், தேவை நெகிழ்ச்சி ஒன்றைவிட அதிகம் ஆகும். ஆறாவது பத்தியில், ஏற்றுமதிகளின் தேவை நெகிழ்ச்சி அவ்வாறு இருந்தால், அதற்கேற்ற தேவை அளவுகளின் எண்கள் தரப்பட்டுள்ளன. அவ்வாறாயின், விலை விழுந்தால் அப் பொருள்கள்மீது செலவாகும் மொத்தப் பணத்தின் அளவு அதிகரிக்கும். மூன்றாவது பத்தியில் உள்ள விலைகளுக்கும், ஆறாவது பத்தியில் உள்ள தேவை அளவுகளுக்கும் பொருந்துகின்றவாறு அப் பொருளுக்காக அமெரிக்காவில் செலவிடப்படும் மொத்தத் தொகை ஏழாவது பத்தியில் கொடுக்கப்பட்டிருக்கிறது; ஏற்றுமதியினின்று கிடைக்கும் அன்னியச் செலாவணி அளிப்பும் இதுவும் ஒன்றே. வரைபடத்தில் இது (18·3 படத்தில் $S_2 S'_3$ கோடு) நேர்க்கணியச் சாய்வுடைய (positive inclination) அளிப்புக் கோடாகத் தோன்றுகிறது. ஒன்றைவிட அதிகமாக ஏற்றுமதிகளின் தேவை நெகிழ்ச்சி இருந்தால், அதற்குச் சரியாக நேர்க்கணியச் சாய்வுடைய அன்னியச் செலாவணி அளிப்புக் கோடு உள்ளது. இதே போலச் சிந்தித்தால், ஏற்றுமதிகளின் வெளிநாட்டுத் தேவை நெகிழ்ச்சி ஒன்றைவிடக் குறைவாக இருந்தால், அதற்குச் சரியான அன்னியச் செலாவணி அளிப்புக் கோடு எதிர்க்கணியச் சாய்வு கொண்டிருக்கும். (negatively inclined) (18·3 படத்தில் $S_3 S'_3$)[5].

[4] தசாம்சங்களைத் தவிர்த்துள்ள அளவுக்குத் தேவையின் அளவுபற்றிய எண்ணிக்கைகள் தவறு. எனவே, விலையையும் தேவை அளவையும் பெருக்கினால் ஒரே எண் வராது; சிறிது வித்தியாசம் இருக்கும்.

[5] அத்தகைய கோட்டின் எதிர்க்கணியச் சாய்வுக்கு வரம்பு உள்ளது. நாணய மாற்று வீதம் அதிகரிக்கும்போது, மொத்த பிராங்கு வருவாய் (ஒவ்வொரு வீதத்திலும் வரும் அளிப்பையும் நாணயமாற்று வீதத்தையும் பெருக்கிய தொகை)

**ஏற்றுமதியுடன் போட்டியிடும் பொருள்களின் அளிப்பு**

அன்னியச் செலாவணியின் தேவையைப்பற்றி ஆராயும்போது, இறக்குமதிகளின் தேவை நெகிழ்ச்சி மட்டுமன்றி, இறக்குமதியோடு போட்டியிடும் பொருள்களின் அளிப்பு நெகிழ்ச்சியைப்பற்றியும் கவனித்தோம். அதேபோல் அன்னியச் செலாவணியின் அளிப்பைப்பற்றி ஆராயும்போது ஏற்றுமதியாளர்கள் நிச்சயமாக வெளிநாட்டில் சமாளிக்கவேண்டியிருக்கும் போட்டியையும் கருதவேண்டும். அதாவது, ஏற்றுமதிகளோடு போட்டியிடும் பொருள்களின் அளிப்பு நெகிழ்ச்சியையும் நாம் கணக்கில் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

பிராங்கு/டாலர் மாற்று வீதம் அதிகமாகும்போது ஃபிரெஞ்சு ஏற்றுமதிகளின் டாலர் விலை குறையக்கூடும். எனவே, ஃபிரெஞ்சுப் பொருள் விலைகுறைவால் ஏற்படும் போட்டியினால் வெளிநாட்டுப் போட்டியாளர்கள் உற்பத்தியைக் குறைத்து வெளியேறும் அளவுக்கு ஃபிரெஞ்சுப் பொருள்களின் வெளிநாட்டு விற்பனை வேகமாக விரிவடையும். வெளிநாட்டுப் போட்டியாளர்களின் உற்பத்தி குறையும் வேகம்தான் உற்பத்திகளோடு போட்டியிடும் பொருள்களின் அளிப்பின் நெகிழ்ச்சியாகும்.

ஏற்றுமதி நாடு (அதாவது, ஃபிரான்ஸ்) அனுப்பும் பொருள்களுடைய தேவை நெகிழ்ச்சி எவ்வாறு மாறுகிறது என்பதன்மூலம் இதன் விளைவைக் கூறலாம். இந்தத் தேவையும், ஏற்றுமதி செய்யப்படுவன போன்ற பொருள்களின் பொதுத் தேவையும் வெவ்வேறு. அதன் நெகிழ்ச்சியானது, ஏற்றுமதிகளோடு போட்டியிடும் பொருள்களின் அளிப்பு நெகிழ்ச்சியால் திருத்தப்பட்ட, ஏற்றுமதி செய்யப்படுவன போன்ற பொருள்களின் பொருள் தேவை நெகிழ்ச்சியைப் பொறுத்த

---

குறைந்துசெல்லும் அளவுக்கு அவ்வளவு மெதுவாக அது (வலமிருந்து இடம்) உயரமுடியாது. அப்படியானால் ஏற்றுமதிகளின் அளவு அதிகரித்தால், பிராங்குகளில் அவை விற்கும் விலை தொடர்ந்து குறைந்துகொண்டேபோகும் என்றாகும். அவ்வாறு இருக்க முடியாது. ஏனெனில், ஏற்றுமதி அதிகமாவதால் உற்பத்தியை அதிகரிக்கவேண்டும். அப்போது உற்பத்திக் காரணிகளின் தேவை அதிகரிக்கும். குறுகிய ஒரு காலத்தில் அது நிச்சயமாகச் செலவுகளையும் விலைகளையும் உயர்த்தும்.

அன்னியச் செலாவணி அளிப்பு உயரும்போது பிராங்கு-வருவாய் குறைவது சாத்தியமில்லை என்றால், மாறாத பிராங்கு-வருவாயைக் குறிக்கும் கோடுதான் அன்னியச் செலாவணி அளிப்புக் கோட்டின் எதிர்க்கணியச் சாய்வின் வரம்பாகும். அக் கோடோ—1 நெகிழ்ச்சியைக் காட்டுகிறது. எனவே, ஏற்றுமதி செய்யும் நாட்டையும், அதுவும் பொருள்கள், பணிகள் இவற்றின் ஏற்றுமதிகளினின்று வரும் அளிப்பையும் பொறுத்தவரை, நாம் எண்ணிப்பார்க்கக்கூடிய மிகவும் பாதகமான அன்னியச் செலாவணி அளிப்புநிலை அதுதான்.

தாகும். எந்த ஒரு நாடும் (அதுவும் சிறிய நாடாக இருப்பின்) தன் ஏற்றுமதிகள் விஷயத்தில் நிறைய போட்டியைச் சமாளிக்கவேண்டியிருக்கும். எனவே, இந்தத் திருத்தம் கணிசமான அளவுடையதாக இருக்கும். ஏற்றுமதி வகைப் பொருள்களின் தேவை நெகிழ்ச்சி ஒன்றுக்குக் குறைவாக இருந்தாலும், அன்னியச் செலாவணியின் அளிப்புக் கோட்டை எதிர்க்கணியச் சாய்வுடையதாக மாற்றும் அளவுக்கு வெளிநாடுகளில் உற்பத்திகளின் இடத்தை ஏற்றுமதிகள் பிடித்துக்கொள்ளலாம்.[6]

### ஏற்றுமதிப் பொருள்களின் அணி (Range)

இம் முடிவை வலியுறுத்த மற்ெருரு காரணமும் உண்டு. ஒரு குறிப்பிட்ட நாணயமாற்று வீதத்தில் ஏற்கெனவெ ஏற்றுமதியாகும் பொருள்கள் இருக்க, செலாவணி மதிப்பிறக்கம் ஏற்படும்போது, மேலும் பல பொருள்களை ஏற்றுமதி செய்ய முடியும். அத்தகைய பொருள்களின் எண்ணிக்கை நிறைய இருக்கலாம். அதுவும் பெரியதும் பல துறைகளிலும் வளர்ந்ததுமான ஒரு பொருளாதாரத்தில் அவ்வெண்ணிக்கை மிகவும் அதிகமாக இருக்கும். இப்போது ஏற்றுமதியாகும் பொருள்களின் தேவை நெகிழ்ச்சி மிதமாகவே இருக்கலாம் ; ஒன்றைவிட அதிகமில்லாமல் இருக்கலாம். ஆனால், மேலும் பல பொருள்களை ஏற்றுமதி செய்யமுடியும் என்பதைக் கவனித்தால், ஏற்றுமதிகளின் தேவை நெகிழ்ச்சி ஒன்றைவிட அதிகமாக இருக்கும் என்று நிச்சயமாகக் கொள்ளலாம். எனவே, அன்னியச் செலாவணியின் மொத்த அளிப்புக் கோடு நேர்க்கணியச் சாய்வுடையதாகத்தான் இருக்கும்.

### ஏற்றுமதிகளின் அளிப்பு நெகிழ்ச்சி

ஏற்றுமதிகளின் அளவை நிர்ணயிக்கும் வெளிநாட்டுச் சக்திகளைப் பற்றி இதுவரை ஆராய்ந்தோம். இனி, உள்நாட்டுச் சக்திகளைப் பார்ப்போம். ஏற்றுமதிகளின் உற்பத்தியைப் பெருக்குவது எளிதா, கடினமா? ஏற்றுமதியாகும் பொருள்களின் விலைகள் உயரும்போது உள்நாட்டு மக்கள் எவ்வளவு தூரம் தாம் வாங்குவதைக் குறைத்து, ஏற்றுமதிக்காகப் பொருள்களைப் போகவிடுகிறார்கள் என்பன போன்றவற்றை இனிப் பார்ப்போம். இதுவரை நாம் எடுத்துக்கொண்டபடி ஏற்றுமதி

[6] ஒருசில சிறு மாறுதல்களுடன் 18·2 எண்ணுள்ள படத்தையே ஏற்றுமதிகளின் தேவையைக் காட்டச் செய்யலாம். ஏற்றுமதியாகும் பொருள்கள்போன்றவற்றின் தேவையை (export-type goods) $D\,D'$ குறிக்கும்; ஏற்றுமதிகளுடன் போட்டியிடும் பொருள்களின் வெளிநாட்டு உற்பத்தியை $C_h\,C'_h$ குறிக்கும் (அதை வேண்டுமாயின் $C_f\,C'_f$ என்று அழைக்கலாம்); $P_a\,P_n$ விலை எல்லைகளுக்குள் ஃபிரெஞ்சு ஏற்றுமதிகளின் தேவையை ($D_x\,D_x'$ என்று வேறு பெயரிட்ட) $D_m\,D'_m$ குறிக்கும்.

களின் விலைகள் அவை உற்பத்தியாகும் நாட்டில் மாறாமல் உள்ளனவா, அல்லது அவை அதிகரிக்கின்றனவா, அப்படியாயின் எவ்வளவு அதிகரிக்கின்றன என்பதை நிர்ணயிப்பது இந்தச் சக்திகள்தாம்.

முன்போலவே தொழிற்சாலைப் பொருள்களையும் விவசாயப் பொருள்களையும் தனித்தனியாக எடுத்துக்கொள்வோம். தொழிற்சாலைப் பொருள்களைப்பற்றியவரை ஏற்றுமதி செய்யும் நாட்டில் வேலை நிலைமையையும் போட்டியின் திறனையும் முக்கியமாகப் பார்க்க வேண்டும். பல உற்பத்திச் சாதனங்கள் வேலையற்றிருக்கும்போது செலவும் விலையும் அதிகரிக்காமலேயே உற்பத்தியைப் பெருக்கமுடியும். அளிப்பு எல்லையில்லா நெகிழ்ச்சியைப் பெற்றிருக்கிறது; அல்லது ஏறக்குறைய அவ்வாறிருக்கிறது. ஏற்றுமதிப் பொருள்களின் விலைகள் உள்நாட்டு அங்காடியில் மாறாமல் உள்ளன, அல்லது மிகச் சிறிய அளவே அதிகரிக்கின்றன; உள்நாட்டு நாணயத்தின் மதிப்பிறக்கம் எவ்வளவோ அதே விகிதாசாரத்தில்தான் அவற்றின் விலைகள் வெளிநாட்டு அங்காடிகளில் விழும்; அல்லது அதற்கு ஒருசிறிது குறைவாக விழும். வெளிநாட்டின் தேவை நெகிழ்ச்சியை அன்னியச் செலாவணியின் அளிப்பு அப்படியே பிரதிபலிக்கும் அல்லது கிட்டத்தட்டப் பிரதிபலிக்கும்.

முழு வேலை நிலைமையை எடுத்துக்கொண்டால், மதிப்பிறக்கம் காரணமாக ஏற்றுமதிப் பொருள்களின் வெளிநாட்டு விலை விழுவதால் ஏற்றுமதி ஆர்டர்கள் குவியும். ஏற்றுமதிப் பொருள்களை உற்பத்தி செய்பவர்கள் போட்டிச் சூழ்நிலைக்கு ஏற்றவாறு நடந்தால், நாணய மாற்று வீதம் அதிகரித்த விகிதாசாரத்துக்குக் கிட்டத்தட்ட எல்லா நுகர்வோர்களுக்கும் உள்நாட்டு நாணயத்தில் விலையை உயர்த்தி விற்க முயலுவார்கள். நிறைகுறைப் போட்டிச் சூழ்நிலையில் (imperfect competition) உள்நாட்டு விலைகளை மாற்றாமல் வைத்திருப்பதுதான் உற்பத்தியாளர்களுக்கு லாபகரமானது. அதே போல ஏற்றுமதி மார்க்கெட்டுகளிலும் விலைகளை (வெளிநாட்டுப் பணத்தில்) மாற்றாமல் வைத்திருப்பது அவர்களுக்கு லாபகரமானதாகும். மொத்த விற்பனை அப்போது மாறாது. ஆனால், நாணயமாற்று வீதம் அதிகரித்த அதே விகிதாசாரத்தில் வெளிநாட்டு விற்பனை மூலம் கிடைக்கும் உள்நாட்டுச் செலாவணி வருவாய் அதிகரிக்கும். ஆகவே, இரண்டு சூழ்நிலைகளிலும், வெளிநாட்டில் விலைகளும் விற்பனைகளும் மாறாமல் இருக்கும்; மதிப்பிறங்கிய நாட்டின் ஏற்றுமதிகள்மீது வெளிநாட்டார் செலவிடும் மொத்தப் பணத்தின் அளவும் மாறாது. அதனால் அன்னியச் செலாவணியின் அளிப்பு மாறாமல் இருக்கிறது; அதன் நெகிழ்ச்சி பூஜ்யமாகும்.

விலை உயர்வை மட்டுப்படுத்துவதற்கு நிறைய சரக்கு இருப்புகள் குவிந்திருந்தால் ஒழிய, ஓர் ஆண்டைவிடக் குறுகிய காலத்தை எடுத்துக்கொண்டால், விவசாய உற்பத்திகளுக்கும் இம் முடிவு பொருந்தும். ஓர் ஆண்டைவிட நீண்ட காலத்தை எடுத்துக்கொண்டால், விவசாயப் பொருள்களின் அளிப்பு அதிகரிக்கக்கூடும். ஆனால், அடக்கச் செலவு ஓரளவுக்கு அதிகம் ஆகலாம். உற்பத்திச் சாதனங்கள் பெரும் அளவுக்கன்றி, ஓரளவுக்குப் பயன்படாது இருக்கும் நிலையில் ஆலை உற்பத்திகள் விஷயத்திலும் இவ்வாறு ஏற்படும். இடையில் உள்ள சூழ்நிலைகளில் இடையில் உள்ள முடிவுகள் ஏற்படும். ஏற்றுமதி விலைகளின் உயர்வு நாணயமாற்று வீதத்தின் உயர்வைக் காட்டிலும் குறைவாக இருக்குமானால், ஏற்றுமதி விலைகள் சிறிது அதிகரிக்கும்போது வெளிநாட்டில் வாங்குவோர் கொடுக்கும் விலைகள் ஓரளவுக்குக் குறையும். தேவை நெகிழ்ச்சி முழு அளவுக்குச் செயலாற்ற வாய்ப்பில்லை. அன்னியச் செலாவணியின் அளிப்பு நெகிழ்ச்சி (வெளி நாட்டு விலை மாறுமல் இருக்கும்போது) பூஜ்யத்துக்கும் (உள்நாட்டு விலைமாறுமல் இருக்கும்போது) ஏற்றுமதிகளின் தேவை நெகிழ்ச்சிக்குச் சமமான ஓர் எண்ணுக்கும் இடையில் இருக்கும்.

வெளிநாட்டு விற்பனை அதிகம் ஆவதால் விலைகள் உயரத் தொடங்கும்போது, ஏற்றுமதிகளின் உள்நாட்டுத் தேவை ஒரு காப்புச் சாதனமாகப் பணியாற்றுகிறது; விலைகள் உயரும்போது ஏற்றுமதிக்காகப் பொருள்களை விடுவிப்பதன்மூலம் விலை உயர்வை மட்டுப் படுத்துகிறது. இந்த உள்நாட்டுத் தேவைகளின் நெகிழ்ச்சி எவ்வளவு அதிகமாக உள்ளதோ அவ்வளவுக்கு இந்த மட்டுப்படுத்தும் சக்தி அதிகமாக இருக்கும்.

**சுருக்கம்**

அன்னியச் செலாவணியின் தேவையையும் அளிப்பையும் நிர்ணயிக்கும் சக்திகளில் ஒரு செவ்வொழுங்கு (symmetry) இருக்கிறது. இச் செவ்வொழுங்கு அவற்றை நினைவில் வைத்துக்கொள்ள நமக்கு உதவுகிறது. அங்காடியின் இரு பக்கங்கள் ஒவ்வொன்றிலும் நான்கு நெகிழ்ச்சிகள் உள்ளன. அவற்றில் இரண்டு உள்நாட்டில் தோன்றுகின்றன; இரண்டு வெளிநாட்டில் தோன்றுகின்றன.

**அன்னியச் செலாவணியின் தேவை:** இறக்குமதி–வகைப் பொருள்களின் தேவையும், இறக்குமதிகளோடு போட்டியிடும் பொருள்களின் அளிப்பும் அன்னியச் செலாவணியின் தேவையை நிர்ணயிக்கும் உள்நாட்டுச் சக்திகள். அவை ஒன்றை ஒன்று பாதித்து இறக்குமதிகளின் தேவையை நிர்ணயிக்கின்றன. இறக்குமதிகளின்

தேவை நெகிழ்ச்சி இவ்விரண்டு தீர்மானிக்கும் காரணிகளின் (determinants) நெகிழ்ச்சிகளுக்கு நேரிடை விகிதத்தில் மாறும்.

இதில் வரும் வெளிநாட்டு நெகிழ்ச்சிகள் இறக்குமதிகளின் அளிப்பு நெகிச்சியும், இப் பொருள்களுக்கு வெளிநாட்டிலுள்ள தேவை நெகிழ்ச்சியும் ஆகும். மதிப்பிறக்கம் செய்த நாட்டில் இறக்குமதிகள் குறையும்போது இறக்குமதிகளின் வெளிநாட்டு விலை மாருமல் இருக்குமா குறையுமா, அப்படியானல் எவ்வளவு குறையும் என்பன வற்றை இவ்விரண்டுமாகச் சேர்ந்து நிர்ணயிக்கின்றன. இறக்குமதி களின் வெளிநாட்டு விலை மாருமல் இருந்தால், நாணயமாற்று வீதத் துக்கு ஏற்றவாறு இறக்குமதி செய்யும் நாட்டில் விலைமாறும். அப்போது அன்னியச் செலாவணியின் தேவையை இறக்குமதிகளின் தேவை நெகிழ்ச்சி நிர்ணயிக்கும். இறக்குமதிகளின் வெளிநாட்டு விலை போது மான அளவு (நாணயமாற்று வீதம் மாறும் அதே விகிதாசாரத்தில்) குறைந்தால், இறக்குமதி நாட்டில் விலை மாருது. இறக்குமதிகள் மீது செலவிடப்படும் மொத்தத் தொகை மாருது. அன்னியச் செலா வணியின் தேவை நெகிழ்ச்சி ஒன்ருக இருக்கும். இவ்விரண்டுக்கும் இடையில் உள்ள விலைமாற்றங்கள் வெளிநாட்டில் ஏற்பட்டால், இவ்விரண்டுக்கும் இடையில் உள்ள விளைவுகள் ஏற்படும்.

**அன்னியச் செலாவணியின் அளிப்பு:** மதிப்பிறக்கம் ஏற்படும் நாட்டின் ஏற்றுமதிகளின் தேவையிலிருந்து தோன்றுவது அன்னியச் செலாவணியின் அளிப்பு. இந்தத் தேவையோ, ஏற்றுமதிவகைப் பொருள்களுக்கு (அதாவது, நம் நாடு ஏற்றுமதி செய்யும் பொருள் களைப் போன்றவற்றுக்கு) உள்ள தேவையையும், ஏற்றுமதிகளோடு போட்டியிடும் பொருள்களின் அளிப்பையும் பொறுத்தது. இவ் விரண்டும் ஒன்ருேடொன்று செயலாற்றுவதன்மூலம் ஏற்றுமதிகளின் தேவை நிர்ணயிக்கப்படுகிறது. இவ்விரு காரணிகளின் நெகிழ்ச்சி யைப் பொறுத்தது ஏற்றுமதிகளின் தேவை நெகிழ்ச்சி.

ஏற்றுமதிகளின் அளிப்பின் நெகிழ்ச்சியும், இப் பொருள்களுக்கு உள்நாட்டிலுள்ள தேவையின் நெகிழ்ச்சியும் இவ்வாராய்ச்சியில் பங்கு பெறும் இரு உள்நாட்டு நிழ்ச்சிகளாகும். நாணயமாற்று விகிதம் உயரும்போது ஏற்றுமதிகளின் உள்நாட்டு விலை மாருமலிருக்கிறதா, அல்லது உயருகிறதா? அப்படியாயின் எவ்வளவு உயருகிறது என் பதை இவ்விரு நெகிழ்ச்சிகளும் நிர்ணயிக்கின்றன. இந்த விலை மாரும லிருந்தால் நாணயமாற்று வீதத்துடனேயே ஏற்றுமதிகளின் வெளி நாட்டு விலையும் மாறும். நாம் எடுத்துக்கொண்ட நாட்டின் ஏற்றுமதி களின் தேவை நெகிழ்ச்சியை முழுமையாக அன்னியச் செலாவணியின் அளிப்பு பிரதிபலிக்கும். நாணயமாற்று வீதம் மாறும் அதே

விகிதாசாரத்தில் ஏற்றுமதிகளின் உள்நாட்டு விலை அதிகரித்தால் வெளிநாட்டு விலை மாருமல் இருக்கும்; நம் நாட்டின் ஏற்றுமதிகள் மீது மொத்தம் வெளிநாட்டில் செலவிடப்படும் தொகை மாருது; அன்னியச் செலாவணியின் அளிப்பு நெகிழ்ச்சி பூஜ்யமாக இருக்கும். இவ்விரண்டுக்கும் இடையில் விலைகள் மாறிஞல் இவ்விரண்டுக்கும் இடையில் உள்ள விளைவுகள் தோன்றும்.

## அன்னியச் செலாவணிக்கான தேவையும் அதன் அளிப்பும் பின்னிச் செயலாற்றுதல்

பொருள்கள், பணிகள் ஆகியவற்றின் இறக்குமதி ஏற்றுமதிகளைப் பொறுத்தவரையில் அன்னியச் செலாவணியின் தேவை, அளிப்புகளின் நெகிழ்ச்சியை நிர்ணயிக்கும் சக்திகளைப்பற்றி ஆராய்ந்து முடித்தோம். இனி, இந்த அத்தியாயத்தில் முதலில் எழுந்த இரு கேள்விகளுக்கு நம்மால் விடையளிக்க முடியும்: (1) மிதமான ஒரு மதிப்பிறக்கத்திஞல் ஒரு நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் உள்ள பற்ருக்குறையை நீக்கும் அளவுக்கு நாணயமாற்று அங்காடியின் நெகிழ்ச்சிகள் போதுமான அளவு அதிகமாக இருக்குமா, அல்லது மதிப்பிறக்கம் மிக அதிகமாக இருக்கவேண்டுமா?[7] (2) ஏற்றுமதிகளையும் இறக்குமதிகளையும் அடிப்படையாகக்கொண்டுள்ள அளவுக்கு நாணயமாற்று அங்காடி திடமாக (stable) இருக்குமா?

முதல் கேள்வியைப் பொறுத்தவரை, நமது ஆராய்ச்சியிலிருந்து நிலைமை அவ்வளவு மோசமாக இருக்காது என்று முடிவு செய்யலாம். ஒருசில நாடுகள் மிகவும் மோசமான சூழ்நிலைகளின் சேர்க்கையால் அவதியுறலாம். எனினும், பொதுவாக, மிதமான ஒரு மதிப்பிறக்கத்திஞலேயே 'சாதாரணமான' ஒரு பற்ருக்குறையை நீக்கப் போதுமான அளவுக்கு நாணயமாற்று நெகிழ்ச்சிகள் பெரியனவாக இருக்கும்.

### அங்காடியின் தேவைப் பகுதி

1. முதலாவதாக, அன்னியச் செலாவணியின் தேவை நிச்சயமாக எதிர்க்கணியச் சாய்வைப் பெற்றிருக்கும். ஏனெனில், அது இறக்குமதிகளின் தேவையை நேரிடையாகப் பிரதிபலிக்கிறது. இந்தத் தேவை

7 பற்ருக்குறையின் அளவுக்கு ஏற்ப அதைச் சரிசெய்யவேண்டிய மதிப்பிறக்கத்தின் அளவும் இருக்கும் என்பது தெளிவு. மிகப் பெரிய பற்ருக்குறையைத் தீர்க்க மிதமான மதிப்பிறக்கத்தால் இயலாது. அதைவிட மதிப்பிறக்கம் அதிகமாக இருக்க வேண்டும். தீவிரமான இறுதிக் கட்ட நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டிய அளவுக்கு மோசமாக இல்லாத நிலைமைகளுக்கு ஒரு மருந்தாக மதிப்பிறக்கம் பயன்படும் அளவுக்கு அன்னியச் செலாவணி நெகிழ்ச்சிகள் பெரியனவாக உள்ளனவா என்று அப் பிரச்சினையை விவரிப்பது சரி.

பொருள்கள் (மற்றும் பணிகள்) உடைய தேவை. எனவே, விலை விழுந்தால் வாங்குவது அதிகரிக்கும் என்ற சாதாரண விதி இதற்குப் பொருந்தும். அன்னியச் செலாவணியின் தேவை இத்தகையதாயின், பற்றுக்குறையைப் போக்க மதிப்பிறக்கம் எப்போதும் ஓரளவுக்கு வழி செய்யும். ஏனெனில், நாணயமாற்று வீதம் அதிகமாகும்போது அன்னியச் செலாவணியின் தேவை குறைகிறது.

2. பாதகமான சூழ்நிலைகள் சேராமலிருந்தால், இறக்குமதிகளின் தேவை நெகிழ்ச்சி கணிசமாக இருக்கும் என்று எதிர்பார்க்கலாம். இறக்குமதி வகைப் பொருள்களின் தேவை நெகிழ்ச்சியற்று இருந்தால் கூட, உள்நாட்டில் மாற்றுப் பொருள்கள் உற்பத்தியாவதால், இறக்குமதிகளைமட்டும் எடுத்துக்கொண்டால், அவற்றின் தேவை நெகிழ்ச்சி அதைவிட மிக அதிகமாக நிச்சயம் இருக்கும்.

ஆனால், நெகிழ்ச்சி முழுமையாகச் செயற்பட வேண்டுமாயின், ஏற்றுமதி நாட்டில் விலைகள் மாறக்கூடாது. அப்போது நாணயமாற்று வீதம் மாறுவதற்கேற்ப இறக்குமதி விலைகள் மாறும். ஒரு நாட்டின் இறக்குமதிகள் விஷயத்தில், வெளிநாட்டுத் தேவை விலை உயர்வை மட்டுப்படுத்துவதைக் கருத்தில் கொண்டபின், வேலை நிலை எப்படி இருந்தாலும், தொழிற்சாலை உற்பத்திகளின் விலையாவது அதிகம் மாருது என்பதை நம் ஆராய்ச்சி காட்டுகிறது. மதிப்பிறக்கம் ஆகும் நாட்டின் அங்காடி சிறியதாக இருந்தால் இது மேலும் உண்மையாக இருப்பதைக் காணலாம்.

விவசாயப் பொருள்களின் விலைகள் குறுகிய காலத்தில் ஆலைப் பொருள் விலைகளைவிட அதிகம் மாறுகின்றன. ஒரே ஒரு வாடிக்கைக்காரனது தேவையில் சிறிது குறைவு ஏற்படுவதால் ஒரு முக்கிய விளைபொருளின் விலை அதிகம் மாருது. ஒருவேளை அத் தேவை மிகப் பெரியதாக இருந்தால் விலை மாறலாம். ஆனால், விவசாயப் பொருள்களின் தேவை நெகிழ்ச்சி எப்போதும் ஒன்றுக்குக் குறைவாகவே இருக்கும். எனவே, ஒரு நாட்டின் இறக்குமதிகளில் விவசாயப் பொருள்களின் பங்கு அதிகமாக இருந்தால், அதன் இறக்குமதித் தேவையின் சராசரி நெசிழ்ச்சி மிகவும் குறையக்கூடும்.

3. இறக்குமதிகளுக்கான மொத்தத் தேவை என்ருல், எப்போதைக்கும் மாருத ஒரு பட்டியலில் உள்ள சில பொருள்களுக்கான தேவை என்று பொருள் அன்று. நாணயமாற்று வீதம் அதிகமாகி இறக்குமதி விலைகள் உயரும்போது, முன்னர்க் குறைந்த நாணயமாற்று வீதங்களில் வெளிநாட்டுப் போட்டியை எதிர்க்கமுடியாதிருந்த மேலும் பல உள்நாட்டு உற்பத்தியாளர்களுக்கு இப்போது அப் போட்டியை

எதிர்க்க முடிகிறது. ஒன்றன்பின் ஒன்ருக உள்நாட்டுப் போட்டி மேலும் மேலும் இறக்குமதிகளை அங்காடியினின்று வெளியேற்றி விடுகிறது. இதனுல் எந்த ஒரு தனி இறக்குமதிப் பொருளுக்கும் அல்லது மாருத ஓர் இறக்குமதித் தொகுதிக்கும் உள்ளதைவிட எல்லா இறக்குமதிகளுக்குமான தேவை நெகிழ்ச்சி அதிகமாக இருக்கும்.

4. நாம் முதலில் கருதிய குறுகிய காலத்தைவிட நீண்ட காலங்களை எடுத்துக்கொண்டால், காலத்தின் அளவுக்கு ஏற்ப இறக்குமதித் தேவையின் நெகிழ்ச்சியும் நிச்சயமாக அதிகரிக்கும். காலம் நீளநீள இறக்குமதிகளுக்கும் மாற்றுப் பொருள்களின் உற்பத்தி அதிகரிக்கும். ஏனெனில், திட்டங்கள் இட்டு எல்லா உற்பத்திச் சாதனங்களையும் சேர்த்து உற்பத்தியைத் தொடங்க நேரம் தேவை. தவிர, காலம் செல்லச்செல்ல மதிப்பிறக்கம் நிரந்தரமாக இருப்பதைக் கண்டு உற்பத்தியில் ஈடுபட விரும்புபவர்கள் எதிர்காலத்தின்மீது நம்பிக்கை கொண்டு உற்பத்தியில் ஈடுபடத் தீர்மானிக்கிருர்கள்.

இந்தக் காரணங்களினுல், இறக்குமதிகளுக்கான தேவை சாதாரணமாக அதிக நெகிழ்ச்சி பெற்றிருக்கும். அதுவும் இறக்குமதிகளில் பெரும்பகுதி தொழிற்சாலைப் பொருள்களாக இருந்தால், நெகிழ்ச்சி விசேஷமாக அதிகமாக இருக்கும். பொருளாதார நிலை பல துறையிலும் வளர்ந்து, இறக்குமதிகளுடன் போட்டியிடும் உற்பத்தி பல துறைகளிலும் காணப்பட்டால், இந் நெகிழ்ச்சி அதிகமாக இருக்கும். தவிர, காலம் செல்லச் செல்ல இந் நெகிழ்ச்சி அதிகரிக்கும்.

### அங்காடியின் அளிப்புப் பகுதி

ஏற்றுமதிகளின் தேவையைத் திருப்பிப் போட்டால் அன்னியச் செலாவணியின் அளிப்பு ஆகிறது. இருந்தாலும், ஏற்றுமதியின் தேவை நெகிழ்ச்சி ஒன்றைவிட அதிகமாக இருந்தால் ஒழிய—மதிப்பிறக்கம் ஏற்பட்டால்—பற்ருக்குறையை அகற்ற அன்னியச் செலாவணியின் அளிப்பு ஒன்றும் செய்யாது. ஏனெனில், நெகிழ்ச்சி ஒன்ருக இருக்கும்போது, எல்லா நாணயமாற்று வீதங்களிலும், வெளிநாட்டார் செலவிடும் மொத்தத் தொகை மாருமல் இருக்கிறது. இந்தத் தொகைதான் அன்னியச் செலவாணியின் அளிப்பு. இதற்கேற்ற அன்னியச் செலாவணி அளிப்புக் கோடு செங்குத்தாக இருக்கும்; அதாவது, நெகிழ்ச்சி பூஜ்யம். மதிப்பிறக்கம் ஏற்பட்டால், தேவை (தன்னிச்சையான செலுத்தல்கள்) சுருங்கினுலும், அளிப்பு (தன்னிச்சையான வருவாய்கள்) மாருமல் இருக்கிறது.

தேவை விஷயத்தில் செய்ததுபோல அளிப்பையும் கருதிப் பார்த்தால், நிலைமை இவ்வளவு மோசமாக எப்போதும் இருக்காது

என்றும், அவ்வப்போது இதைவிட நல்ல நிலைமையை எதிர்பார்க்கலாம் என்றும் தெரியும்.

1. இறக்குமதிகளின் தேவை நெகிழ்ச்சி அதிகமாக இருக்கும் என்பதற்குக் காரணம் உள்ளது. அது ஒன்றைவிட அதிகமாக இருக்கக்கூடும். பிற நாடுகளனைத்துக்கும் எதிராக வாணிபத்தில் ஈடுபட்ட ஒரு நாடு, தன் ஏற்றுமதிகள் விஷயத்தில் வெளிநாட்டு உற்பத்தியாளர்களுடைய போட்டியைக் கணிசமான அளவுக்கு நிச்சயமாக எதிர்பார்க்கலாம். மதிப்பிறக்கம் காரணமாக நாம் எடுத்துக் கொண்ட நாட்டின் வெளிநாட்டு விலைகள் குறைந்துபோவதால், சில போட்டி அளிப்பாளர்கள் விலக நேரிடும். விற்பனையில் அந் நாட்டின் பங்கு பெரிதாகிறது. ஐக்கிய அமெரிக்காபோன்ற பெரிய நாட்டுக்குக் கூட இது பொருந்தும். அப்படியானால் உலக நுகர்ச்சியில் ஒரு சிறு பங்கையே ஏற்றுமதி செய்யும் சிறிய நாடுகள் விஷயத்தில் இது மேலும் பொருந்தும்.

2. தவிர, நாணயமாற்று வீதம் அதிகரிக்கும்போது (நம் நாட்டின் செலாவணியின் மதிப்பு இறங்கும்போது), உள்நாட்டு உற்பத்திப் பொருள்களில் மேலும் பல ஏற்றுமதிக்கு உகந்தவை ஆகின்றன.

இவ்விரண்டு காரணிகளின் சேர்ந்த விளைவானது பெரும்பாலான நாடுகள் விஷயத்தில் ஏற்றுமதிகளின் தேவை நெகிழ்ச்சியை ஒன்றை விட அதிகமாக்கவேண்டும். இங்கு ஏற்றுமதிகளின் தேவையைப் பற்றிதான் குறிப்பிட்டோம்; நாம் ஏற்றுமதி செய்வது போன்ற பொருள்களுக்கு (ஏற்றுமதி வகைப் பொருள்களுக்கு) வெளிநாட்டில் உள்ள தேவையை அன்று. எனவே, அன்னியச் செலாவணியின் அளிப்புக் கோடு நேர்க்கணியச் சாய்வு பெற்றிருக்கும்.

3. குறுகிய காலத்தைக் கருதாமல் அதைவிட நீண்ட காலத்தை எடுத்துக்கொள்வோம். குறுகிய காலத்தில் உற்பத்திச் சாதனங்களின் அளவு அதிகமாகாது. ஆனால், நீண்ட காலத்தில் இறக்குமதிகள் விஷயத்தில் இருந்தவாறே, அன்னியச் செலாவணியின் அளிப்பு சந்தேகமின்றிக் குறுகிய காலத்தைவிட அதிகமாக உயரும். காலம் நீளும்போது, தேவைக்கேற்ப ஏற்றுமதிகளின் அளிப்பு மாறமுடியும்; ஏற்றுமதியாளர்கள் தம் மார்க்கெட் தொடர்புகளை மேலும் பலப்படுத்திக் கொள்வார்கள்; வெளிநாட்டுப் போட்டியாளர்களும் புதிய போட்டி நிலைமைக்கு ஏற்றவாறு தம் சூழ்நிலையை முழுமையாக மாற்றிக் கொள்வார்கள்.

ஆகையால், ஒரு குறிப்பிட்ட நாட்டின் ஏற்றுமதிகளின் தேவையானது, கணிசமான நெகிழ்ச்சியை (ஒன்றுக்கு மேற்பட்டது) பெற்றிருக்க நல்ல வாய்ப்பு உள்ளது. எனவே, அன்னியச் செலாவணியின் அளிப்புக் கோடு நேர்க்கணியச் சாய்வைப் பெற்றிருக்கும். மதிப்பிறக்கம் ஏற்படும்போது அன்னியச் செலாவணியின் அளிப்பு விரிவடைவதால் செலுத்துநிலைப் பற்றுக்குறை ஓரளவுக்குத் தீரும். ஒரு நாட்டின் ஏற்றுமதிகளில் எவ்வளவுக்கெவ்வளவு தொழிற்சாலைப் பொருள்களின் பங்கு அதிகமாக உள்ளதோ, அவ்வளவுக்கு இந்த நன்மையான விளைவு ஏற்படும் வாய்ப்பு அதிகம். ஏனென்றால், விவசாயப் பொருள்களைவிடத் தொழிற்சாலைப் பொருள்களின் அளிப்பு நெகிழ்ச்சி அதிகம். அதனால் விலை உயர்வுகள் நிறைய ஏற்படாது. ஒரு நாட்டின் ஏற்றுமதிகளிலும் ஏற்றுமதியாகக்கூடியவற்றிலும் பலவகைப் பொருள்கள் கலந்திருந்தால் மேலும் நல்லது. அதேபோல வெளிநாடுகளில் இவற்றுக்குப் போட்டியாகப் பெரும் அளவுக்குப் பொருள்கள் இருந்தால் நல்லது. மாறாக, தன் ஏற்றுமதியில் பெரும் பங்காக ஓரிரண்டு பொருள்களைமட்டும் அனுப்பும் நாட்டுக்கு இந்த நன்மை அதிகமாகக் கிடைக்காது. அதுவும் பிறநாட்டுத் தேவைகளின் பெரும்பகுதியை இந்த நாடுதான் தீர்க்கவேண்டும் என்றால் அது இன்னும் மோசம். காப்பியை பிரேஜில் ஏற்றுமதி செய்வது இதற்கு உதாரணம்.

பொதுவாக, நாம் ஆராய்ந்தவரை பெரும்பாலான நாடுகளுக்கு அன்னியச் செலாவணி நெகிழ்ச்சிகள் கணிசமான அளவுக்கு அதிகமாகவே இருக்கின்றன என்பது தெளிவு. ஆனாலும், இதற்கு மாறான விளைவுகளை உண்டாக்கக்கூடிய சந்தர்ப்பங்கள் பல நாடுகளை விசேஷமாகப் பாதிக்கக்கூடும். எந்த ஒரு குறிப்பிட்ட நிலைமையையும் எடுத்துக்கொண்டால், அதில் ஒவ்வொரு விவரத்தையும் தீர ஆராய்ந்த பின்னரே நம் முடிவைச் சரியாகச் சொல்லமுடியும்.

**அங்காடியின் திடநிலை**

பொருள்கள், பணிகள் ஆகியவற்றின் ஏற்றுமதி இறக்குமதியைப் பொறுத்தவரையில் நாணயமாற்று அங்காடி திடமாக இருக்குமா என்ற நம் இரண்டாவது கேள்விக்கு விடை இப்போது தெளிவாகிறது. ஒரு நாட்டின் அன்னியச் செலாவணியின் அளிப்புக் கோடு எதிர்க் கணியச் சாய்வுடையதாக இருக்கவேண்டுமாயின், அந் நாட்டின் ஏற்றுமதிகளுக்கான தேவை குறிப்பிடத்தக்க அளவுக்கு நெகிழ்ச்சியற்றதாக இருக்க வேண்டும். இறக்குமதிகளைப் பொறுத்தவரை, அவை மிகவும் அத்தியாவசியமான பண்டங்களாக இருந்து மாற்றுப் பொருள்களின் போட்டி அவற்றுக்கு நிறைய இல்லாமல் இருந்தால் தவிர, அளிப்புக் கோட்டைவிடச் செங்குத்தாகத் தேவைக்கோடு

இருக்க வாய்ப்பில்லை. அப்படி இருக்குமானால், அவை வெட்டுமிடத்துக்குமேலே தேவைக்கோடு அளிப்புக் கோட்டுக்குமேல் அதற்கு வலப்புறமாக இருக்கும். அத்தகைய மிகவும் பாதகமான சூழ்நிலை ஏற்பட்டாலொழிய நாணயமாற்று அங்காடி திடமாக இருக்கும்.[8]

## மூலதனப் பெயர்ச்சிகளும் நாணயமாற்றுகளும்

ஒரு நாட்டின் செலுத்துநிலையிலும், அதன் நாணயமாற்று அங்காடியிலும் பொருள்கள், பணிகள் ஆகியவற்றின் வாங்குதல், விற்றல் பற்றிய விவகாரங்களோடு, மூலதனத்தை நாடுவிட்டு நாடு மாற்ற விரும்புவதனின்று எழும் விவகாரங்களும் மொத்த அளவைப் பொறுத்தவரை முக்கியமானதாக இருக்கலாம். இவற்றால் ஏற்படும் அன்னியச் செலாவணி அளிப்பும் தேவையும் நாணயமாற்று வீதங்கள் மாறும்போது வேறு விதமாக மாறுபடுவதால், இவற்றைத் தனியாக ஆராய்வது அவசியம்.

மூலதனப் பெயர்ச்சிகளைப் பலவகைகளாகப் பிரிக்கலாம். முதலீட்டுக்காக, அதாவது, வட்டி அல்லது லாப ஈவுகள் (dividends) சம்பாதிப்பதற்காகப் போவது; ஊகவாணிப நோக்கினால் உந்தப்பட்டவை, அதாவது, முதலீட்டின் மூலதன மதிப்பு உயர்வதால் லாபமடையும் குறிக்கோள் உடையது; இவ்விரண்டையும் பிரித்துப் பார்ப்பது நம் ஆராய்ச்சிக்கு முக்கியம். பயம் காரணமாக பத்திரமான இடத்தை நாடி மூலதனம் செல்வது ஒரு விசேஷ வகை. சாதாரணமாக, குறுகிய கால முதலீடு, நெடுங்கால முதலீடு என்றும் பிரிக்கலாம்; ஆனால், அது இரண்டாம்பட்சமாகத்தான் முக்கியமானது.

[8] ஏற்றுமதி இறக்குமதிகளின் தேவை நெகிழ்ச்சிகளின் அளவில் இவ்விரு கோடுகளின் விசேஷ உறவைக் கூறலாம். இறக்குமதித் தேவை நெகிழ்ச்சி, ஏற்றுமதித் தேவை நெகிழ்ச்சி இரண்டின் கூட்டல் தொகை 1-க்குக் குறைவாக இருந்தால், அங்காடி திடமற்று இருக்கும் ($n_m + n_x < 1$). [இதை மார்ஷல்-லெர்னர் நிலைமை (Marshall-Lerner Condition) என்பார்கள். உதாரணத்துக்கு, Abba P. Lerner, 'The Economics of Control', 377–379 பக்கங்களில் பார்க்கவும்.]

முதலில் ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் சமம் என்று இத் தேற்றம் கொள்கிறது. ஒரு நாட்டின் செலுத்துநிலைப் பற்றுக்குறை ஏற்பட்டால் இருப்பது போல, ஏற்றுமதிகளைவிட இறக்குமதிகள் அதிகம் என்று தொடங்கினால், அந்த மாறுநிலை மதிப்பு (critical value) 1 அன்று; ஆனால், 1ஐவிடக் குறைவு. ஏற்றுமதி இறக்குமதிகளின் அளிப்பு நெகிழ்ச்சி அளவில்லாதது என்றும் இத் தேற்றம் எடுத்துக்கொள்கிறது. $n_m$, $n_x$ (தேவை நெகிழ்ச்சிகள்) இரண்டும் சிறியவாக இருந்தால், அதைவிடக் குறைவான அளிப்பு நெகிழ்ச்சிகளின் மதிப்புகள் மேலும் சார்பானவையாக (favourable) இருக்கும்.

**முதலீட்டுக்காக மாற்றப்படுவது**

நல்ல லாபத்தை நாடி மூலதனம் ஒரு நாட்டைவிட்டு மற்றென்றுக்கு மாற்றப்படலாம். அம் மூலதனத்தைக் கொண்டு, பங்குகள் (stock), கடன் பத்திரங்கள் (bonds) அல்லது ஜட சொத்துகள் (real assets) போன்ற நெடுங்கால முதலீடுகளும், உண்டியல்கள், நோட்டுகள், ஏற்புகள் (acceptances) போன்ற குறுகியகால முதலீடுகளும் வாங்கப்படுகின்றன. ஒரு நாட்டைப் பொறுத்தவரையில் மூலதனப் பெயர்ச்சி எந்தத் திசையிலும் ஏற்படலாம் என்பது தெளிவு; அதனுல் அன்னியச் செலாவணியின் தேவையும் ஏற்படலாம், அளிப்பும் ஏற்படலாம்.

ஐக்கிய அமெரிக்கா போன்ற ஒரு குறிப்பிட்ட நாட்டில் வசிப்பவர்கள் மற்ற நாடுகளில் பங்குகள், கடன் பத்திரங்கள், இவைபோன்ற சொத்துகள் ஆகியவற்றில் முதலீடு செய்வதை முதலில் கவனிப்போம். இந்தச் சொத்துகளை விற்கும் அயல்நாட்டவருக்கு அமெரிக்காவிலிருந்து பணம் மாற்றப்படவேண்டும்; ஸ்டர்லிங் பவுன்களைப் போன்ற அன்னியச் செலாவணிகளுக்கு ஒரு தேவையை நாணயமாற்று அங்காடியில் இந்த முதலீடு ஏற்படுத்துகிறது. இந்தத் தேவை எவ்வாறு கேட்கப்படுகிறது? எந்த நாட்டில் வழங்கப்படுகின்றனவோ அல்லது எந்த நாட்டில் உள்ளனவோ அதன் செலாவணியில்தான் கம்பெனிப் பங்குகள், ஜட சொத்துகள், குறுகியகாலப் பத்திரங்கள் ஆகியவற்றின் விலைகள் எப்போதும் சொல்லப்படுகின்றன. அவற்றிலிருந்து கிடைக்கும் வருவாயும் அதே நாணயத்தில்தான் தரப்படும். கடன் பத்திரங்கள் மட்டும், வட்டியும் முதலும் வழங்கும் நாட்டின் பணத்திலோ அல்லது வேறு நாடு, சாதாரணமாக, முக்கியமாக அவற்றை 'வாங்கும் நாட்டின் பணத்திலோ குறிப்பிட்டு வழங்கப்படலாம்.

கடன் பத்திரங்களின் (bonds) வட்டியும் முதலும், வழங்கும் நாட்டின் செலாவணியில் குறிப்பிடப்படுகின்றன என்று கொள்வோம். அது ஸ்டர்லிங் ஆக இருக்கட்டும். டாலர்/ஸ்டர்லிங் மாற்று வீதம் தாழ்ந்தால் அமெரிக்காவில் அதை வாங்குபவருக்கு அக் கடன் பத்திரத்தின் விலை குறையும். அதைமட்டும் பார்த்தால், மேலும் அவற்றை வாங்க அது தூண்டும். ஆனுல், ஸ்டர்லிங்கின் விலை குறைந்து அக் குறைந்த விலை நெடுநாட்களுக்கு இருக்குமானுல், அந்த முதலீட்டின் வருவாயை டாலர்களில் கணக்கிட்டால், அதுவும் அதே அளவுக்குக் குறையும். வாங்கும் விலை குறைந்ததன் விளைவை இது ரத்து செய்துவிடுகிறது.[9] வெளிநாட்டு முதலீடு, உள்நாட்டு முதலீடு இவ்விரண்டில்

[9] தாழ்ந்த நாணயமாற்று வீதம் தற்காலிகமானதுதான் என்று எதிர்பார்க்கப்பட்டால், ஊகவாணிபக் குறிக்கோள் முக்கியமானதாகும்; எல்லா ஸ்டர்லிங் சொத்துகளும் ஊகவணிகர்கள் வாங்கத் தக்கவாறு கவர்ச்சி பெறுகின்றன.

எது கவர்ச்சிகரமானது என்பதைப் பொறுத்துதான் வெளி நாடுகளில் நிதி முதலீடு நடக்கிறதே தவிர நாணயமாற்று வீதத்தைப் பொறுத்து அல்ல. மூலதனத்தை வெளிநாட்டுக்கு மாற்றுவதற்காக, முதலீட்டுப் பிரச்சினைகளைமட்டும் பொறுத்து ஒரு மாருத அளவு ஸ்டர்லிங்குக்குத் தேவை இருக்கும். ஸ்டர்லிங் நாணயத்தின் முதலீட்டுத் தேவை செங்குத்தான ஒரு நேர்க்கோடாக இருக்கும் (நெகிழ்ச்சி பூஜ்யம்); பொருள்களுக்கும் பணிகளுக்குமான தேவையோடு சேர்த்தால் அன்னியச் செலாவணியின் மொத்தத் தேவைக்கோடு முந்திய கோட்டின் வலப்புறம் அதனின்று ஒரு நிலையான தூரத்தில் இருக்கும்.

அல்லாமல், சில சமயம் நடப்பதுபோல, கடன் பத்திரங்களில் முதலும் வட்டியும் வாங்கும் நாட்டுச் செலாவணியில் குறிப்பிடப்பட்டுள்ளன என்று கொள்வோம் (டாலர் கடன் பத்திரங்கள்). இங்கு முதலிலிருந்தே நாணயமாற்று வீதம் ஒரு பொருட்டன்று. பலவகை வெளிநாட்டு முதலீடுகளின் கவர்ச்சியைப் பொறுத்து ஒரு குறிப்பிட்ட காலத்தில் எவ்வளவு முதலீடு செய்ய விரும்புகிருர்களோ அத் தொகையை அமெரிக்க முதலீட்டாளர்கள் நிர்ணயிப்பார்கள். நாணய மாற்று வீதம் எதுவாக இருப்பினும் இத் தொகையை டாலர்களில் கொடுத்து ஸ்டர்லிங்கை அவர்கள் வாங்குவார்கள். (ஸ்டர்லிங் மிகக் கடுமையாக மதிப்பிறக்கம் அடைந்தால் பத்திரங்களை வழங்கியவர்கள் கடனுக்கு வட்டி கட்டவும் அதைத் திருப்பித் தரவும் முடியுமா என்பது பற்றிய பயம் எழக்கூடும். அதனுல், முதலீடு செய்யப்படும் தொகை குறையலாம். ஸ்டர்லிங் செலாவணியில் பத்திரங்கள் வழங்கப்பட்டாலும் இவ்வாறுதான் நேரும்.)

இங்கு அன்னியச் செலாவணிக்காகச் செலவாகும் மொத்த டாலர்களின் அளவு மாருமல் இருக்கிறது. முதலீட்டுக்கான அன்னியச் செலாவணியின் தேவை நெகிழ்ச்சி, ஒன்று. ஸ்டர்லிங்குக்கான மொத்த தேவை, பொருள், பணி விவகாரத் தேவைக் கோட்டுக்கு வலப்புறமாக, போகப்போக அதிகமாகிக்கொண்டே போகும் தூரத்தில், இருக்கும்.

முதலீட்டுக்காக அயல்நாட்டவருக்கு அமெரிக்கப் பத்திரங்களையோ சொத்துகளையோ விற்பதால் அன்னியச் செலாவணியின் அளிப்பு ஏற்படுகிறது. எந்த நாட்டில் வழங்கப்படுகின்றனவோ அதன் பணத்திலேயே விலை கூறப்படும் பங்குகள், ஜட சொத்துகள், குறுகியகாலப் பத்திரங்கள் இவற்ருேடு டாலர்களில் முதலும் வட்டியும் குறிப்பிடப்படும் கடன் பத்திரங்களையும் சேர்த்துக் கவனிப்போம். பொருள்களையும் பணிகளையும் போலவே, அமெரிக்கச் சொத்துகளை வெளிநாடுகளில் விற்பதால் ஏற்படும் அன்னியச் செலாவணி அளிப்பு

அவற்றின் வெளிநாட்டுத் தேவையைப் பொறுத்தது. டாலரின் மதிப்பு உயர்ந்தாலும் தாழ்ந்தாலும், முதலும் வருவாயும் அதே திசையில் அதே அளவுக்கு மாறுதலின் வெளிநாட்டுத் தேவையை முதலீடுபற்றிய கருத்துகள்மட்டுமே தீர்மானிக்கின்றன. நாணயமாற்று வீதம் எதுவாக இருந்தாலும், அவ்வாறு தீர்மானிக்கப்பட்ட ஒரு மாறுத அளவு டாலர்களை வெளிநாட்டார் கேட்பார்கள். இதையே அமெரிக்கா வில் அன்னியச் செலாவணியின் அளிப்பாக மாற்றிக் கூறினுல், டாலர்–ஸ்டர்லிங் வீதம் அதிகரித்தால், ஒரு குறிப்பிட்ட அளவு டாலர் தொகை பெற முன்னைவிடக் குறைந்த அளவு ஸ்டர்லிங் உண்டியல்களை வரைந் தால் போதுமாக இருக்கும்; டாலர்–ஸ்டர்லிங் வீதம் குறைந்தால், அது குறைவதற்கு எதிரிடை விகிதாசாரத்தில் ஸ்டர்லிங்கில் வரைய வேண்டிய தொகை இருக்கும். (பவுனுக்கு 5 டாலர் என்ருல் ஒரு மிலியன் டாலர் பெற £ 200,000 போதும்; பவுனுக்கு 2 டாலராஞல், £ 500,000 வேண்டுமாயிருக்கும்.) இது எதிர்க்கணிய நெகிழ்ச்சி 1 ஆக உள்ள அன்னியச் செலாவணியின் அளிப்பாகும். பொருள்கள், பணிகள் இவைபற்றிய விவகாரங்களினின்று வரும் அளிப்போடு இதைக் கூட்டிக்கொள்ளவேண்டும்.

முதலும் வட்டியும் ஸ்டர்லிங்கில் தருமாறு கடன் பத்திரங்களை அமெரிக்கா வழங்குமானுல், வெளிநாட்டில் முதலீடு செய்யப்படும் ஸ்டர்லிங்கின் அளவு, முதலீடுபற்றிய கருத்துகளால் நிர்ணயிக்கப்படு கிறது. ஒரு குறிப்பிட்ட தொகைக்கு ஸ்டர்லிங்கின் அளிப்பாகும் இது. பொருள் விவகாரங்களின் அளிப்போடு இதைச் சேர்த்தால் மொத்த அன்னியச் செலாவணியின் அளிப்புத் தொகை கிடைக்கிறது.

இதுவரை ஆராய்ந்ததுபோலவே அன்னியச் செலாவணியின் அளிப்பையும் தேவையையும் உண்டாக்கக்கூடிய எல்லா வகையான நன்கொடைகளையும், நஷ்டஈட்டுத் தொகைகள் (reparations) போன்ற ஒருமுகச் செலுத்தல்களையும் இந்த இடத்தில் சேர்த்துக்கொள்ளலாம். நன்கொடைகள், வருவாய் சம்பாதிப்பதற்காகச் செய்யப்படுவன அல்ல. ஆனுல், முதலீட்டுக்காக அனுப்பப்படும் மூலதனத்தைப்போல, அவை நாணயமாற்று வீதத்தைப் பொறுத்திராமல் வேறு காரணங்களைப் பொறுத்திருக்கின்றன.

### மூலதன ஓட்டம் (Capital Flight)

அரசியல் அல்லது பொருளாதார அபாயம் நிறைய உள்ள சமயங் களில் பாதுகாப்பான இடத்தை நாடி வெளி நாடுகளுக்குத் தம் நிதிகளை மூலதனத்தை உடையவர்கள் மாற்ற விரும்பலாம். மாற்றிய பிறகு உடனேயோ, பின்னரோ அவர்கள் அதை வருவாய் தரும் சொத்து களில்தான் முதலீடு செய்வார்கள். இருப்பினும், முதலில் மூலதனம்

வருவாயை எதிர்பார்த்துப் பெயரவில்லை. அதன் பெயர்ச்சிக்கு பயமே மூல காரணம். பத்திரமான இடத்தை அதன் சொந்தக்காரர்கள் நாடினார்கள். இரண்டாவது உலகப் போருக்கு முன்னிருந்த குழப்ப மான சூழ்நிலையில் ஐரோப்பாவிலிருந்து பெரும் அளவுக்கு இக் காரணத்தினால் மூலதனம் வெளிநாடுகளுக்குச் சென்றது. அமெரிக்கா வுக்கு மட்டும் 1935-க்கும் 1939-க்கும் இடையில் இவ்வாறு வந்த தொகை $ 5 பிலியனைவிட (**billions**) அதிகமாக இருக்கும் என மதிப் பிடப்பட்டிருக்கிறது.

தம் செல்வத்தை வெளிநாடுகளுக்கு பயத்தால் தூண்டப்பட்டு மக்கள் அனுப்பும்போது, அவர்கள் எந்தச் செலாவணியாக அதை மாற்றுகிறார்களோ அது எந்த விலைக்கு விற்றால் என்ன? ஏற்றுமதி செய்யும் இடங்களில் அன்னியச் செலாவணியின் தேவை நெகிழ்ச்சி பூஜ்யத்தை நெருங்கும்; மூலதனத்தைப் பெறும் நாட்டில் அதற்கு இணையான அளிப்பின் எதிர்க்கணிய நெகழ்ச்சி 1 ஆக இருக்கும்.

**ஊகவாணிப மூலதனப் பெயர்ச்சிகள்**

வருவாய் சம்பாதிக்கும் நோக்கத்தோடு அன்றி முதலீட்டின் மதிப்பு உயருவதன்மூலம் லாபமடைவதற்காக மூலதனம் நாடுவிட்டு நாடு போவதை எடுத்துக்கொள்வோம். இவை சுழல் துப்பாக்கிக் குண்டுகளைப்போலக் குறிப்பிட்ட சில நெடுங்காலச் சொத்துகளை நோக்கிச் செல்லலாம். அல்லது ஒரு வேட்டைத் துப்பாக்கியிலிருந்து சிதறிச் செல்லும் குண்டுகளைப்போலப் பொதுவாக அயல்நாட்டுச் சொத்துகளை நோக்கிச் செல்லலாம். ஒரு கம்பெனியின் பங்கைப் போல ஒரு குறிப்பிட்ட நெடுங்கால அயல்நாட்டுச் சொத்தின் மதிப் பேற்றத்துக்காக அதை வாங்குவதானால், நாணயமாற்று வீதம் மாறாது; அல்லது மதிப்பேற்றம் உண்டாகும் என்ற நிச்சயம் இருந்தால்தான் அதை ஒருவன் வாங்குவான். அல்லாமல் செலாவணி மதிப்பிறக்கம் ஏற்பட்டால் சொத்தின் மதிப்பேற்றத்தால் வரும் லாபத்தை அது அழித்துவிடும்.

உதாரணத்துக்கு, பங்கு £ 100 வீதம் ஒரு குறிப்பிட்ட பிரிட்டிஷ் பங்குத்தொகுப்பை ஓர் அமெரிக்க முதலீட்டாளன் வாங்குவதாக எடுத்துக்கொள்வோம். அதன் மதிப்பு அடுத்த ஆண்டில் 10 சத விகிதம் என அவன் எதிர்பார்க்கிறான். அவன் வாங்கும்போது நாணய விகிதம் $ 2·80/£ ஆனால், அவன் ஒரு பங்குக்கு $ 280 செலுத்தியிருப் பான். அந்த ஆண்டின் முடிவில், எதிர்பார்த்தபடியே, பங்கின் விலை £ 110 ஆக உயர்ந்துவிட்டது. ஆனால், இப்போது பவுனின் மதிப்பு $ 2·50-க்கு இறங்கிவிட்டிருந்தால் அந்தப் பங்கை விற்றால் $ 275 தான்

கிடைக்கும். அதாவது, பங்குக்கு $ 5 நஷ்டம். இத்தகைய குறிப்பிட்ட வெளிநாட்டுச் சொத்துகளின் மதிப்பேற்றம் ஏற்படும் என்பதை எதிர்பார்த்து எந்தத் தொகைக்கு அவற்றை வாங்குவது சரியோ அத் தொகைக்கு, நாணயமாற்று வீதம் மாறினும் அதிகமாகுமேயொழியக் குறையாது என்று எடுத்துக்கொண்டால், எல்லா மாற்று வீதங்களிலும் மாருத ஒரு குறிப்பிட்ட அளவுக்கு அன்னியச் செலாவணிக்குத் தேவை இருக்கும். இதேபோல உள்நாட்டுக்கு வரும் மூலதனப் பெயர்ச்சிக்காக ஒரு குறிப்பிட்ட மாருத அளவு டாலர்களுக்கு வெளிநாடுகளில் தேவை இருக்குமாதலின், இந்த வெளிநாட்டுத் தேவையைப் பிரதிபலிக்கும் அன்னியச் செலாவணி அளிப்பின் எதிர்க்கணிய நெகிழ்ச்சி 1 ஆக இருக்கும்.

பன்னாட்டு ஊகவாணிபம் பொதுவாகச் சில குறிப்பிட்ட அயல் நாட்டுச் சொத்துகளை வாங்குவதைக் குறிக்கோளாகக் கொள்வதில்லை. ஏதாவதொரு நாட்டின் செலாவணி இருப்புகளைப் பெறுவதே அதன் நோக்கம். இது முன்கூறிய வேட்டைத் துப்பாக்கி விவகாரம். ஊக வணிகர்களின் முன்னுணர்வுகள் நிகரமாகச் சரியாக இருந்தால், இத்தகைய ஊகவணிகம் அங்காடியில் திடநிலையை ஏற்படுத்தும். எதிர்காலப் போக்கை அவர்கள் தவருக மதிப்பிடுவார்களானுல் ஊக வாணிபம் 'நெறிகோணி' (perverse) இருக்கும். இது அங்காடியின் திடநிலையை அழிக்கும்.

ஒரு குறிப்பிட்ட செலாவணியில் விலையில் ஏற்படும் வீழ்ச்சி தற்காலிகமாகவும் தற்செயலானதாகவும் இருப்பின் சாதாரணமாக ஊகவாணிபத்தின் விளைவு அங்காடியை திடப்படுத்துவதாகவே இருக்கும். மதிப்பிறக்கத்துக்குக் காரணமான சக்திகள் எதிர்ப்புறம் திரும்புவதை எதிர்பார்த்து ஊகவணிகர்களின் முன் உணர்வு நிகரமாக 'எருதுத்தனமாக' இருக்கும். இந்தப் பகுதியிலிருந்து வரும் தேவை நாணயமாற்று வீதத்துக்கு ஆதரவு தந்து சகநிலைக்கு அது விரைவில் திரும்ப வழி செய்யும்.

அல்லாமல் நாணயமாற்று வீதத்தை பாதிக்கும் சக்திகள் தாற்காலிகமாக இல்லாமல் அதைவிட நிரந்தரமானவை என்று கொள் வோம். பிரிட்டனை எடுத்துக்கொண்டால் அதன் ஏற்றுமதிகளுக்கான தேவைகள் குறைந்துபோயிருக்கலாம்; அல்லது அதன் ஏற்றுமதி களின் அடக்கச் செலவு உயர்ந்து அயல்நாட்டு அங்காடிகளைப் போட்டி யாளர்களுக்கு அது இழந்திருக்கலாம். பிரிட்டனின் செலுத்துநிலையில் பற்றுக்குறை ஏற்படுகிறது. இப்போது பவுனின் மதிப்பிறக்கம் தவிர்க்கமுடியாததாகத் தோன்றுகிறது. அவ்வாறு ஏற்படும் மதிப் பிறக்கம் ஓரிரு ஆண்டுகள் போன்ற நெடுங்காலத்தைவிட ஒரு சில

மாதங்களை எடுத்துக்கொண்டால் அதிகமாக இருக்கும். ஓரிரு ஆண்டு களில் ஏற்றுமதிகளைப் பெருக்கலாம்; இறக்குமதிகளுக்குப் பதிலாக மேலும் மாற்றுப் பொருள்களைப் பயன்படுத்தலாம்; வாங்குபவர்கள் புதிய விலைத் தொடர்புகளை முற்றும் உணர்ந்துகொள்ள முடியும். முதலில் நாணயமாற்று வீதம் $ 2·80 என்றால், பற்றாக்குறையை நீக்க, குறுகிய காலத்தில் பவுனின் மதிப்பு $ 2·20-க்கு இறங்கவேண்டி யிருக்கும். ஆனால், சூழ்நிலை சரியாவதற்கு நேரம் தந்தால் நெடுங் *காலத்தில் $ 2·50 என்ற மாற்று வீதத்தில் சமநிலை ஏற்படலாம்.*

ஊகவாணிபம் இல்லாவிட்டால் மாற்று வீதம் முதலில் $ 2·20-க்கு விழும். பின்னர் மெதுவாகச் சீரடையும்; ஆனால், அங்காடிக்குள் ஊக வணிகர்கள் புகுந்தால் அவர்கள் ஸ்டர்லிங்கை உடனடியாகவும் முன்னோக்கியும் விற்கத் தொடங்குவார்கள். இது மதிப்பிறக்கத்தைத் துரிதப்படுத்தும். ஆனால், வீதம் $ 2·50-க்குக் குறைவாக இறங்கும் போது, அந்த அளவுக்கு அது திரும்பும் என்பதை எதிர்பார்த்து, உடனடி மாற்றை விற்பதை நிறுத்தி அவர்கள் வாங்கத் தொடங்கு வார்கள். $ 2·20/£-ஐவிடக் கணிசமான அளவு உயர்ந்த வீதங்களில் முன்னோக்கி விற்கத் தொடங்குவார்கள். இவ்விரு செயல்களும் ஸ்டர்லிங்கின் மதிப்பை உயர்த்தும் ஆதலின் மாற்றுவீதம் பவுனுக்கு $ 2·35 அல்லது $ 2·40-க்குக் கீழே போகாது. எனவே, சரியான முன்னுணர்வோடு ஊகவணிகர்கள் செயலாற்றினால் அதனால் அங்காடி திடநிலைபெறும். எதிர்கால மாற்றங்களை ஊகவணிகர்கள் சரியாக எதிர்பார்க்காவிட்டால் நெறிகோணிய ஊகவாணிபம் ஏற்பட்டு அங்காடி யின் திடநிலையைப் பாதிக்கும். முதலில் ஸ்டர்லிங் மதிப்பு இறங்கு வதை மட்டும் உணர்ந்து, அது பின்னர் சீரடையக்கூடியதை அவர்கள் எதிர்பாராமல் போனால், மிக அதிகமான அளவுக்கு எதிர்காலத்தில் நம்பிக்கை இழந்து செயல்படுவர். தம் கையில் உள்ள உடனடி ஸ்டர்லிங் அனைத்தையும் ஒரேயடியாக விற்பர்; மிகவும் தாழ்ந்த விகிதங்களில் முன்னோக்கி விற்க ஆரம்பிப்பார்கள். சாதாரணமாக மதிப்பிறக்கம் ஏற்படுத்தும் சக்திகளோடு இந்த ஊகவாணிபத்தின் அழுத்தமும் சேர்ந்துகொண்டால் பவுனின் மதிப்பு $ 2·00-க்கும், அதற்கும் குறைவாகவும்கூடத் தாழக்கூடும். இந்த உதாரணத்தில் ஊகவாணிபத்தால் திடநிலை கெடுகிறது.

முதலில் மிகவும் நம்பிக்கையிழந்திருப்பதற்கு பதிலாக, ஊக வணிகர்கள் அதற்கெதிரான தவறையும் செய்யக்கூடும். எதிர்காலப் போக்கில் அநீதமான நம்பிக்கைகொண்டு முதலில் இருந்த மதிப்புக்கு அதிகம் மாறுமல் பவுனுக்கு அவர்கள் ஆதரவளிக்கலாம். பின்னர்த் தம் தவற்றை உணர்ந்து தம் ஆதரவை நீக்கி அதற்கு எதிர்கோடிக்குத் தாவுவார்கள். இதனல் பவுனுக்கு $ 2·20 என்ற குறுகியகாலச்

'சமநிலை'யைவிடக் (equilibrium) கீழே நாணயமாற்று வீதம் தாழ்கிறது.

நெறிகோணிய திடநிலையை பாதிக்கும் ஊகவாணிபம் இவ்விரு வகையாகவும் இருக்கமுடியும். ஆனால், அவ்வாறு ஊகவாணிபம் இருக்குமா என்பது விவாதத்துக்குரிய பிரச்சினை. ஊகவணிகர்கள் தொடர்ந்து வாணிபம் செய்யவேண்டுமானால் லாபம் சம்பாதிக்க வேண்டும் ; இப்போது கூறியதுபோன்ற தவறுகளை அவர்கள் அடிக்கடி செய்தால் அல்லது பெரும் அளவில் செய்தால் அவர்கள் திவாலாகி விடுவார்கள். நாணயமாற்று வீதங்கள் மாறக்கூடிய நிலையையே நாம் இப்போது பெரும்பாலும் ஆராய்கிறோம். அந்தச் சூழ்நிலையில் தம் அனுபவத்தினால் ஊகவணிகர்கள் நிறைய அறிவுபெற்று, ஒரு நாட்டின் நாணயத்தின் மதிப்பை பாதிக்கும் சக்திகளைத் திறம்பட மதிப்பிடுவார்கள் என்பதை நிச்சயமாக எதிர்பார்க்கலாம். பங்கு மார்க்கெட்டிலும் பொருள் அங்காடிகளிலும் ஈடுபட்டுள்ள தேர்ந்த வணிகர்கள், இத்தகைய விசேஷத் திறனைப் பெற்றுத் தம் தொழிலை லாபகரமாக நடத்தும்போது நாணயமாற்று ஊகவணிகர்களும் ஏன் அவ்வாறு இருக்கக்கூடாது? அவர்களும் நல்ல திறமையைப் பெற்று விட்டால் அவர்கள் தீர ஆராய்ந்து செயலாற்றுவார்கள். அவர்களது விவகாரங்களால் நாணயமாற்று வீதங்கள் திடமடையலாகும்.

## பார்வைக்குரிய சில நூல்கள்

Friedman, Milton, 'The Case for Flexible Exchange Rates.' *Essays in Positive Economics* என்ற நூலில், பக்கங்கள் 157-203. Chicago : University of Chicago Press, 1953. பலவகைப் பன்னாட்டுச் செலுத்துகை முறைகளை ஒப்பிடுகிறது ; ஊகவாணிபம்பற்றி அழகாக விவரிக்கிறது.

Haberler, Gottfried, 'The Market for Foreign Exchange and the Stability of the Balance of Payments,' *Kyklos*, III (1949). அன்னியச் செலாவணியின் தேவை, அளிப்புக் கோடுகளை எப்படிப் பெறுவது, அவற்றின் நெகிழ்ச்சிபற்றிய காரண காரியக் கருத்துகள், பற்றுக்குறைக்கும் அவற்றுக்கும் உள்ள தொடர்புகள் ஆகியவற்றை விவரிக்கிறது.

Machlup, Fritz, 'The Theory of Foreign Exchanges,' *Readings in the Theory of International Trade* என்ற நூலின் 5ஆவது அத்தியாயம். Philadelphia : The Blakiston Co., 1949. நாணயமாற்றுக் கோட்பாட்டைத் தெளிவாக விளக்குவது.

——, 'Elasticity Pessimism in International Trade,' *Economia Internazionale*, III (February, 1950). பன்னாட்டு வாணிபத்தில் தேவை நெகிழ்ச்சிகளின் அளவில் பிரதிபலிக்கும் எதிர்கால நம்பிக்கையின்மையை வன்மையாகக் கண்டிக்கிறது.

Meade, J. E., *The Balance of Payments*. New York: Oxford University Press, 1951. 16ஆவது அத்தியாயம் இங்குக் கொடுத்துள்ளதைவிட விரிவாக ஊகவாணிபம்பற்றி விவரிக்கிறது.

Metzler, L. A., 'The Theory of International Trade.' *A Survey of Contemporary Economics*, ed. Howard S. Ellis. Philadelphina : The Blakiston Co., 1948. என்ற நூலின் 6ஆவது அத்தியாயம். மாறும் நாணயமாற்று வீதங்களைப் பற்றி முக்கியமாகத் திடநிலைமைபற்றி III பிரிவு கூறுகிறது.

Sohmen, Egon, *Flexible Exchange Rates: Theory and Controversy*. Chicago: The University of Chicago Press, 1961. நாணயமாற்று அங்காடியில் திடநிலை தேவை என்பதன் திண்ணிய வாதங்களுக்கு முதல் அத்தியாயத்தைப் பார்க்கவும். ஊகவாணிபம்பற்றி 3ஆம் அத்தியாயத்தில் நன்கு விவரித்துள்ளது. 4ஆம் அத்தியாயத்தில் முன்னோக்கிய நாணய மாற்று அங்காடிகளைப்பற்றிப் பார்க்கவும்.

# 19. செலுத்துநிலையில் சமநிலைக் கேடுகளும் அவற்றின் திருத்தமும்

## (Disequilibria in the Balance of Payments and their Adjustment)

### பலவகையான சமநிலைகள்

ஒரு செலுத்துநிலை எப்போதும் சமநிலையில்தான் இருக்கவேண்டும். பற்றுகளும் வரவுகளும் எப்போதும் சமமாக இருக்கவேண்டும் என்பது வியாபாரக் கணக்குமுறை விதி. அதன்படி செலுத்துநிலையில் சமநிலையிருக்கவேண்டும். எந்தச் சூழ்நிலையிலும் இவ்விதக் கணக்குச் சமநிலை எளிதில் ஏற்படும்—ஏற்படவேண்டும். ஏற்றுமதிகள் உயர்ந்தாலும் குறைந்தாலும், மூலதனம் நாட்டுக்கு உள்ளே ஓடி வந்தாலும் வெளியே ஓடிப்போனாலும், விலைகள் மாறினாலும் மாறாமலிருந்தாலும் இச் சமநிலை ஏற்படும். எனவே, எந்த நாடும் தன் செலுத்துநிலை சமநிலையில் உள்ளதா இல்லையா என்று கவலைப்பட வேண்டியதில்லை. அச் சமநிலை தவிர்க்க முடியாதது.

ஆனால், எப்படி இச் சமநிலை உண்டாகிறது என்பதைப்பற்றி ஒரு நாடு அக்கறை கொள்ளத்தான் வேண்டும். எளிதில் கஷ்டமின்றிச் சமநிலை ஏற்படலாம்; அப்படியாயின் கவலைக்கு இடமில்லை. மாறாக, மிகவும் கஷ்டமான சூழ்நிலையில்தான் அச் சமநிலை ஏற்படக்கூடும். அக் கஷ்டத்தைத் தீர்க்க பலமான மாற்று வழிகளைக் கையாளவேண்டியிருக்கும்.

#### ஓர் உவமை

ஒரு தனிநபரின் செலுத்துநிலையை எடுத்துக்கொள்ளுங்கள். ஒவ்வொருவனுக்கும் உலகின் மற்றவர்களைப்பொறுத்து ஒரு செலுத்து

நிலை இருக்கிறது; அவனது மொத்த வருவாய்களும் மொத்தச் செலவுகளும் அதில் அடங்கியுள்ளன. அவனது வருவாய் அவனது செலவுக்குச் சமமாக இருக்கும்வரை அவன் திடநிலையில் இருக்கிறான். அத் திடநிலை தொடர்ந்து இருக்கக்கூடும்; அவனது செலுத்துநிலை சமநிலையில் உள்ளது. ஆனால், அவன், தான் சம்பாதிப்பதைவிட அதிகமாகச் செலவு செய்ய ஆரம்பிக்கட்டும்; அப்போது அவன் தன் சேமிப்புகளைச் செலவழிக்கவேண்டும் அல்லது கடன் வாங்கவேண்டும்; உடனேயோ சற்றுப் பின்னரோ கடன் கொடுத்தவர்கள் அவனுக்கு மேலும் கடன் கொடுக்க மறுப்பார்கள். அப்போது அவன் தன் நிலையை அடியோடு திருத்திக்கொள்ளவேண்டும்; தன் சம்பாதிக்கும் சக்தியையாவது உயர்த்திக்கொள்ளவேண்டும் அல்லது தன் வருமானத்துக்கு ஏற்றவாறு செலவையாவது குறைத்துக்கொள்ள வேண்டும்.

ஒரு நாட்டின் நிலையும் அதுதான்; தன் பன்னாட்டு வருவாய்க்குள் தன் பன்னாட்டுச் செலவுகளை அஃது அடக்கும்வரை ஒரு கவலையும் இல்லை. அதன் செலுத்துநிலைக் கணக்கு இருபுறமும் சமமாக இருப்பதோடு அதன் செலுத்துநிலை உண்மையாகவே சமநிலையில் இருக்கிறது. ஆனால், வெளிநாட்டார் இந் நாட்டில் செலவு செய்வதைவிட அதிகமாக இந் நாட்டார் வெளிநாடுகளில் செலவிடத் தொடங்கட்டும். அப்போது அதனால் ஏற்படும் பற்றுக்குறையைத் தீர்க்க அதன் பன்னாட்டுச் சேமநிதிகள் குறையலாகும். சமநிலைக் கேடு தொடர்ந்து இருக்கலாகாது; சேமநிதிகள் முழுவதும் தீர்ந்துவிடுமுன் அவை வடிவதைத் தடுக்க வேண்டும். எவ்வகையிலாவது அக் கேட்டைத் திருத்தவேண்டும்.[1]

முன்கூறியதைக் கலைச் சொற்களைப் பயன்படுத்தி மீண்டும் கூறுவோம். ஒரு நாட்டின் தன்னிச்சையான வருவாய்கள் அதன் தன்னிச்சையான செலுத்தல்களுக்குச் சமமாக இருக்கும்வரை அந் நாட்டின் சேமநிதிகளின் அளவு மாறாது. பன்னாட்டுக் கணக்கின் இரண்டு பக்கங்களிலும் உள்ள தன்னிச்சையான விவகாரங்கள் எல்லாம் அவற்றுக்காகவே மேற்கொள்ளப்பட்ட விவகாரங்கள். பொருள், பணி

[1] ஒரு நாட்டின் நடப்புப் பன்னாட்டு வருவாய்கள், நடப்புச் செலுத்தல்களைவிட அதிகமானால், அதன் செலுத்துநிலையில் உபரி ஏற்பட்டு, பொன்னும் அன்னியச் செலாவணியும் உள்ளே வரும். உடனடியான நிலையைப்பொறுத்தவரை அந்த நாட்டுக்குச் சாதகமான நிலை அது. ஆனால், செலுத்துநிலை சமநிலையில் உள்ளது என்பது அதன் பொருளன்று. இந் நிலையையும் திருத்தவேண்டும். ஒரு நாட்டின் செலுத்துநிலையில் உபரியிருப்பின் அத்துடன் வாணிபம் செய்யும் கூட்டாளிகளின் செலுத்துநிலை பற்றுக்குறையோடு இருக்குமாதலின், அக் காரணத்துக்காகவாவது திருத்தம் தேவை. பிற நாடுகளுடன் ஒப்பிட்டால் உபரியுள்ள நாட்டின் உருவம் இங்கு முக்கியமானது. பற்றுக்குறையுடைய நாடுகளுக்குத்தான் உண்மையில் கஷ்டம் உண்டு. அவற்றின் பிரச்சினைகளை இங்கு ஆராய்வோம்.

களின் ஏற்றுமதி இறக்குமதியோடு, மூலதனம் உள்ளும் வெளியும் போவதும் இவற்றுள் அடங்கியவை.

**செலுத்துநிலைச் சமநிலை**

ஒரு நாடு தன் பண்ணாட்டுச் சேமநிதிகளினின்று' தொகைகளை எடுப்பது அதன் செலுத்துநிலை சமநிலையில் இல்லை என்பதைக் காட்டுகிறது என்றும், அதன் துணைத் தேற்றமாக அந் நாட்டின் சேமநிதிகள் மாறாமல் இருந்தால், அதன் செலுத்துநிலை சமநிலையில் இருக்கிறது என்றும் கூறினோமே தவிர, இக் கோட்பாடுகளைத் தெளி வாக்கும் வாயிலாக நாம் ஏதும் கூறவில்லை. அஃதாவது, சமநிலைக்கு ஒரு முக்கியமான அடையாளம் பண்ணாட்டுச் சேமநிதிகள் மாறாதது என் றோம். ஆனால், அஃது என்ன கோட்பாடு என்பதை விளக்கவில்லை. அதை இப்போது பார்ப்போம்.

தன்னிச்சையான வருவாய்கள், செலுத்தல்களின் சமன்பாடு ஒரு முறை ஏற்பட்டபின், தொடர்ந்து இருக்கவேண்டுமாயின், அதற்கு என்ன நிபந்தனை? செலுத்துநிலைச் சமநிலை மாறாதிருக்கவேண்டிய நிபந்தனைகளை இக் கேள்வியின் விடை கூறும்.

ஒரு நாட்டின் பொருள்கள், பணிகளின் ஏற்றுமதிகளை முதலில் எடுத்துக்கொள்வோம். அவற்றின் அளவைத் தீர்மானிக்கும் சக்திகள் ஒன்றோடொன்று மாறாத தொடர்போடு இருப்பின், ஏற்றுமதிகள் மாறாமல் இருக்கும். சுருக்கமாகக் கூறின், ஏற்றுமதிகளின் அளிப்பு, மாறாத விலைகளில், அவற்றுக்கான தேவைக்குத் தக்கவாறு அமைந்து இருக்கும் என்பது இதன் பொருள். அதேபோல, இறக்குமதிகளின் அளிப்பை நிர்ணயிக்கும் சக்திகள், நுகர்வோரின் சக்திக்குத் தக்க வாறு அமைந்திருப்பின் இறக்குமதிகள் மாறாது இருக்கும். ஒன்றுக் கொன்று தொடர்புடைய இச் சக்திகள் அனைத்தும் நிலையாக ஒன்றுக் கொன்று தக்கவாறு அமைந்திருப்பின் இறக்குமதிகளோ ஏற்றுமதி களோ அதிகரிக்கமாட்டா. சாதனங்களும் ஒரு தொழிலைவிட்டு மற் றொன்றுக்கு இடம் பெயரமாட்டா.

வளர்ச்சி அற்ற உலகில் (static world) பொருள்கள், பணிகளின் ஏற்றுமதி இறக்குமதிகளைமட்டும்தான் நாம் பார்க்கவேண்டும். அத் தகைய உலகில் சேமிப்போ முதலீடோ இராது; எனவே, மூலதனப் பெயர்ச்சிகள் இராது. ஆனால், நிஜ உலகில் வளர்ச்சி உண்டு; மக்கள்தொகை அதிகமாகிறது, மக்கள் சேமிக்கிறார்கள், சமூகத்தின் மூலதனச் சாதனங்களை அதிகரிப்பதில் இச் சேமிப்புகள் முதலீடு செய்யப்படுகின்றன. மூலதனச் சேர்க்கை அதிவேகமாக ஏற்பட்டு அதன் லாப வீதம் குறைவாக உள்ள நாடுகளிலிருந்து, தராதரமாக

மூலதனம் குறைவாகவும் (முதலீட்டு நஷ்ட பயத்தைக் கணக்கில் சேர்த்தும்) அதன் சம்பாதிக்கும் சக்தி அதிகமாகவும் உள்ள பிராந்தியங்களுக்கு மூலதனம் இடம் பெயரும். மூலதனம் பெறும் லாபம் நாட்டுக்கு நாடு வித்தியாசப்படும் வரை, லாபம் அதிகமாகப் பெற வேண்டும் என்று முதலீட்டாளர்கள் கொள்ளும் ஆசையும், முதலீட்டு வாய்ப்புகளை அறியாமை, சட்டங்கள், பழக்க வழக்கங்களில் மாறுபாடு, வெளிநாட்டு முதலீடுகளைப் பரிபாலிப்பதன் கஷ்டம், தெரியாத இடங்களுக்குப் போக இயற்கையாக உள்ள பயம் ஆகியவற்ருல் மூலதனப் போக்குக்கு ஏற்படும் தடையும், எதைவிட எது அதிகமோ அதைப் பொறுத்து மூலதன இடப் பெயர்ச்சி அமையும்.

வளர்ச்சி இருக்கும்போது ஏற்றுமதி இறக்குமதிகளிலும், மூலதன இடப் பெயர்ச்சிகளிலும் மாறுதல்கள் இருக்கும். காரணிகளின் விலைகள், உற்பத்தியின் அளவு, சாதனங்களின் பங்கீடு, மூலதன ஓட்டத்தின் வேகம் ஆகியவற்றில் மாறுதல்கள் செய்வதன்மூலம் ஒரு நாட்டின் செலுத்துநிலையில் சிறிய திருத்தங்களைத் தொடர்ந்து செய்து அதைத் திடநிலையில் வைத்திருக்கமுடியும்.

ஆனால், நாம் இருக்கும் உலகு இவ்வளவு ஒழுங்காகவும் இடர்கள் இன்றியும் செயலாற்றுவதில்லை. மாறுதல்கள் சில சமயங்களில் மெதுவாகவும் படிப்படியாகவும் ஏற்படுகின்றன ; பல சமயங்களில் கட்டு மீறியும் எதிர்பாராமலும் ஏற்படுகின்றன. அத்தகைய மாறுதல்களால் ஒரு நாட்டின் ஏற்றுமதிகளும் இறக்குமதிகளுமோ, அது கடன் கொடுப்பதும் வாங்குவதுமோ பாதிக்கப்படும்போது, அதன் செலுத்துநிலையின் சமநிலை கெடுகிறது ; பற்ருக்குறையோ அல்லது உபரியோ ஏற்படுகிறது. பற்ருக்குறை நாட்டுக்கு, திருத்தம் மிக அவசியமாகிறது ; அத் திருத்தத்தைக் கூடியவிரைவில் செய்யவேண்டியிருக்கிறது. தன் செலுத்துநிலையில் சமநிலைக் கேடு ஏற்படும்போது அதைத் திருத்த ஒரு நாடு கையாளக்கூடிய இரு மாற்று வழிகளை இவ்வத்தியாயத்தில் பின்னர் பார்ப்போம். எத்தகைய சமநிலைக் கேடுகள் ஏற்படக்கூடும் என்பதை இப்போது பார்க்கலாம்.

## செலுத்துநிலையின் சமநிலைக் கேடுகள்

செலுத்துநிலைச் சமநிலைபற்றி இதுவரை ஆராய்ந்ததிலிருந்து ஓரளவு சுருக்கமாகக் கூறினுல், ஒரு நாட்டின் ஏற்றுமதிகள் மூன்று விஷயங்களைப்பொறுத்திருக்கின்றன 'என்று கூறலாம்: (1) இந்த நாட்டின் ஏற்றுமதிகள் உள்பட, எண்ணிப் பார்க்கக்கூடிய உருப்படிகள் எல்லாவற்றையும் வாங்குவதற்காக வெளிநாட்டாரிடம் உள்ள வாங்கும்

சக்தியின் மொத்த அளவு ; (2) அவர்களது விருப்பங்களைப்பொறுத்து வெளிநாட்டாருக்குத் தேவைப்படும் குறிப்பிட்ட பொருள்கள் மற்றும் பணிகளின் வகைகள் ; (3) நாம் எடுத்துக்கொண்ட நாட்டின் ஏற்று மதிகள் அவற்றின் மாற்றுப் பொருள்கள் போன்றவை கிடைக்கக் கூடிய விலைகள். அதேபோல ஒரு நாட்டின் இறக்குமதிகளும் மூன்று விஷயங்களைப் பொறுத்தன : (1) அந் நாட்டில் குடியிருப்போர் கையி லுள்ள மொத்த வாங்கும் சக்தி; (2) அவர்களுடைய குறிப்பிட்ட விருப்பங்கள் ; (3) இறக்குமதிகள், அவற்றோடு போட்டியிடக்கூடிய உள்நாட்டு மாற்றுப் பொருள்கள் ஆகியவற்றின் விலைகள்.

மொத்தமாகப் பார்த்தால், உள்நாட்டிலோ வெளிநாட்டிலோ வரு மானத்தின் அளவில் மாறுதல் ஏற்பட்டால், ஏதாவதோர் இடத்தில் மொத்தச் செலவுகள் மாறுவதால், இறக்குமதிகள் ஏற்றுமதிகள் பாதிக் கப்படுகின்றன. தேவை அல்லது அளிப்புச் சூழ்நிலை, உள்நாட்டிலோ வெளிநாட்டிலோ எவ்வாறு மாறினாலும், குறிப்பிட்ட இறக்குமதிகள் அல்லது ஏற்றுமதிகளின் அளவு பாதிக்கப்படும். இவற்றின்மூலம் அவற்றின் மொத்த மதிப்பும் பாதிக்கப்படும். முக்கியமாக மூலதனத் தின் லாபத்தில் நாட்டுக்கு நாடு இருக்கும் மாறுதல்களைப்பொறுத்து தான் நெடுங்கால மூலதன இடப் பெயர்ச்சிகள் ஏற்படுகின்றன. சில நாடுகளில் முதலீடு செய்வதற்குப் புது வாய்ப்புகள் ஏற்படும்போது, அங்கு மற்ற நாடுகளைவிட மூலதனம் பெறும் லாபவீதம் அதிகரிக் கிறது. புது முதலீட்டு வாய்ப்புகள் ஏற்படுவதைவிட வேகமாக மூல தனம் சேரும் நாடுகளில் மூலதனம் பெறும் லாபவீதம் பிறநாடுகளுடன் ஒப்பிட்டால் குறைவாக இருக்கலாம், அல்லது அந்நாட்டிலேயே மேலும் குறையலாம். இத்தகைய மாறுதல்களினால் மூலதனம் ஓடும் திசையும் வேகமும் மாறும்.

எனவே, ஒரு நாட்டின் செலுத்துநிலையின் சமநிலை கெடுவதற்கு ஒரு முக்கியக் காரணத்தை வருமான மாறுதல்களில் காணலாம். பிற காரணங்களை 'அமைப்பு மாறுதல்கள்' என்று பிரிக்கலாம். இங்குப் 'பொருளாதார அமைப்பு' (economic structure) என்பதற்கு, ஒரு நாட்டின் பொருளாதாரத்தின் பாகங்கள் எவ்வாறு ஒன்று சேர்க்கப் பட்டுள்ளன, அவை வெளி உலகோடு எவ்வாறு தொடர்புகொண்டிருக் கின்றன என்று விளக்கம் கூறலாம். எனவே, அமைப்பு மாறுதல் என்பது நாட்டுப் பொருளாதாரத்தின் ஏதாவதொரு குறிப்பிட்ட பிரிவில் ஏற்படும் மாறுதலைக் குறிக்கும். செலுத்துநிலையின் ஏதாவது ஓர் அங்கத்தை அல்லது சில அங்கங்களைத்தான் அது பொதுவாக பாதிக்கும். இதற்கு மாறாக, வருமான மாறுதல்கள் இறக்குமதிகளின் ஒவ்வோர் உருப்படியையும் சம அளவுக்குப் பாதிக்காவிட்டாலும், ஏற்றுமதிகளையும் இறக்குமதிகளையும் முழுமையாக பாதிக்கின்றன.

### குறுகியகாலச் சமநிலைக் கேடுகள்

சமநிலைக் கேட்டின் சில காரணங்களை மற்றவற்றைவிட முக்கிய மற்றவை என்று நீக்கி நம் ஆராய்ச்சியை எளியதாக்கலாம். சமநிலைக் கேடு எத்தனை நாள் இருக்கிறது என்பதைப்பொறுத்துச் சமநிலைகளைப் பாகுபாடுசெய்து தொடங்கலாம். அவற்றில் சில குறுகிய காலத்தவை; சில மாதங்கள் அல்லது ஒரு வருஷம்போலச் சில இருக்கும். இவை வெறும் பருவகாலச் சமநிலைக் கேடுகளே. விவசாயப் பொருள்களை ஏற்றுமதி செய்யும் நாடுகள் இவ்வகைச் சமநிலைக் கேட்டினால் சாதாரண மாக வருந்துவதுண்டு.

உதாரணமாக, நவம்பருக்கும் மார்ச்சுக்கும் இடையே ஆஸ்தி ரேலியாவிலிருந்து வரும் உரோமம் அங்காடியில் நிரம்பி வழியும். இந்தக் காலத்தில் ஆஸ்திரேலியாவின் ஏற்றுமதிகள் அதன் இறக்கு மதிகளைவிடப் பெருமளவுக்கு அதிகமாகி அந் நாட்டுக்கு வெளிநாட்டு நிலுவைகள் வேகமாகச் சேரும். அதற்கடுத்த மாதங்களில் இறக்கு மதிகள் ஏற்றுமதிகளைவிட அதிகமாகி வெளிநாட்டு நிலுவைகள் குறையத்தொடங்கும். இஃது ஆண்டுதோறும் நடக்கிறது. எனவே, இதனால் ஒரு பிரச்சினையும் இல்லை. ஏப்ரல் முதல் அக்டோபர் வரை ஏற்படும் பற்றுக்குறையைச் சமாளிக்கச் சிறந்த வழி பன்னாட்டுச் சேமநிதிகளைப் பயன்படுத்திக்கொள்வதுதான். ஏனெனில், நிச்சயமாக அவை மீண்டும் பழையநிலைக்கு உயரப்போகின்றன.

ஆனால், விளைச்சல் தவறி, அதனால் ஏற்றுமதி குறைந்தாலோ இறக்குமதி அதிகமானாலோ அது தீவிரமான பிரச்சினையாகும். ஆனால், அதுவும் சாதாரணமாக ஒரு தற்காலிகமான பிரச்சினையே. விரைவில் நிலைமை சகஜமாகக்கூடும். இத்தகைய அசாதாரணமான குறுகியகால நெருக்கடிகள் ஏற்படும்போது ஒரு தனிமனிதனைப் போல ஒரு நாடும் தன் சேமநிதியைப் பயன்படுத்திக்கொள்வது நியாயமே.

இத்தகைய நிகழ்ச்சிகளை நாம் பொருட்படுத்தவேண்டியதில்லை. மேலும் சிலகாலத்துக்குத் தொடர்ந்து இருந்துவந்து அல்லது தொடர்ந்து இருக்கக்கூடியதுபோல இருந்து, ஒரு நாட்டின் பன்னாட்டுச் சேமநிதிகளை அடியோடு வடிக்கக்கூடிய அல்லது கவலைப்படும் அளவுக்குக் குறைக்கக்கூடிய சூழ்நிலைகளை மட்டும் எடுத்துக் கொள்வோம்.

### பண வருமானத்தில் மாறுதல்கள்

செலுத்துநிலைக் கஷ்டங்களுக்குப் பண வருமானத்தில் ஏற்படும் மாறுதல்கள் காரணமாக இருப்பதைப்பற்றி முதலில் பார்ப்போம். வருமான மாறுதல்களை இரு வகைகளாகப் பிரிக்கவேண்டும்; ஒன்று

அல்லது அதற்கு மேற்பட்ட நாடுகளில் தன்னிச்சையாக ஏற்படுபவை; வாணிபச்சுழலின் பன்னாட்டுப் பரவுதல் காரணமாக ஒன்றுக்கொன்று இணைந்த வருமான மாறுதல்கள்.

ஒரு நாட்டில் வருமானத்தில் ஏற்படும் தன்னிச்சையான மாறுதல் பணவீக்க மாறுதலாகவோ பணச் சுருக்க மாறுதலாகவோ இருக்கலாம். பணவீக்க மாறுதல்களைத்தான் நாம் இங்குக் கவனிக்கவேண்டும். ஏனெனில், நாட்டுவருமானம் குறைந்தால் (பணச் சுருக்கம்) இறக்கு மதிகள் குறையும்; செலுத்துநிலையில் உபரி ஏற்படும்.

நடப்புவிலைகளில் பொருள்களுக்கும் பணிகளுக்கும் உள்ள மொத்தத் தேவை, மொத்த உள்நாட்டு உற்பத்தியுடன் நெடுங்கால மூலதன உள்வரவு ஏதாகினும் இருக்குமாயின் அதையும் சேர்த்ததை விட அதிகமாக இருந்தால் பணவீக்கநிலை இருக்கிறது. சாதாரணமாக, அரசாங்கமோ பாங்குகளோ புதிதாக உற்பத்திசெய்த பணம் நிரம்பி வழி வதையும் பணவீக்கநிலையோடு காணலாம். பணவீக்கநிலையை ஏற்பட வழிசெய்வதும் அதுதான். உள்ள சேமிப்புகளிலிருந்து பணத்தை எடுத்துச் செலவுகளை அதிகமாக்கினாலும் பணவீக்கம் ஏற்படும். பணவீக்கம் இருக்கும்போது விலைவாசிகள் உயருகின்றன. பணவீக்கம் இருப்பதற்கு இவ்வுயர்வே சான்று. இறுதியில், தராதர விலைகளின் அமைப்பிலே சில மாறுதல்கள் ஏற்படுகின்றன. பணவீக்கம் கொஞ்சமாக இருந்தாலோ, விலைக் கட்டுப்பாடுகள் அதிகமாக விலை ஏறுவதைத் தடுத்தாலோ, தராதர விலைமாறுதல்கள் ஏற்படாமல் போகலாம்.

எந்தப் பணவீக்கமும் செலுத்துநிலையில் பற்றுக்குறையைத் தோற்றுவிக்கிறது. ஏனெனில், செலவுகள் அதிகமாகும்போது ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் பாதிக்கப்படுகின்றன. இவ்வாறு விளையும் பற்றுக்குறை எவ்வளவு கவலைக்கிடமானது என்பது அந்நாடு பன்னாட்டு வாணிபத்தில் எந்த அளவுக்கு ஈடுபட்டிருக்கிறது என்பதைப் பெருமளவில் பொறுத்திருக்கிறது. ஐக்கிய அமெரிக்காவைப்போல அந்த நாடு பிறவற்றோடு ஒப்பிடும்போது தன் தேவைகளில் பெரும் பாலானவற்றைத் தானே பூர்த்திசெய்துகொண்டால், அதிகமாகும் தேவைகள் பெரும்பாலும் உள்நாட்டு உற்பத்திகளையே நாடும். மாறாக, பிரிட்டன், பெல்ஜியம் அல்லது நார்வே போன்ற நாடுகளை எடுத்துக்கொள்வோம். அவற்றின் நாட்டுவருமானத்தில் அவற்றின் ஏற்றுமதி, இறக்குமதிகளின் விகிதாசாரம் பெரிது. இந் நாடுகளின் விஷயத்தில் தேவை அதிகமாகும்போது உடனடியாக அதன் விளைவு பன்னாட்டு வாணிபத்தில் தெரியும்; அவை விரைவில் கவலைக்கிடமான செலுத்துநிலைப் பற்றுக்குறையை அடையும்.

பணவீக்கம் மோசமாக இருக்கும்போது, செலவு அதிகரிப்பதால் நேரிடையாக ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் பாதிக்கப்படுவதோடு, அதனால் உள்நாட்டு விலைகள் உயருவதன்மூலம் மறைமுகமாக ஏற்படும் விளைவையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். உள்நாட்டுப் பொருள்களின் விலைகள்தான் முதலில் உயரும், அதிகமாக உயரும். வாழ்க்கைச் செலவு அதிகமாவதால் அதிகக் கூலியைத் தொழிலாளர்கள் கேட்பார்கள். கூலி உயரும்போது ஏற்றுமதிகளின் அடக்கச்செலவு அதிகமாகும். ஏனெனில், கூலிமட்டுமன்றி, உள்நாட்டில் உற்பத்தியான கச்சாப் பொருள்கள் ஏற்றுமதிகளின் பிற பாகங்கள் ஆகியவற்றின் விலையும் ஏறிவிட்டது. ஏற்றுமதியாளர்கள் தம் வெளிநாட்டு விற்பனை குறையக் காண்பர். அவர்கள் உற்பத்தியைக் குறைக்கவேண்டியும் நேரலாம். இது நடக்கும் சமயத்தில், உள்நாட்டுப் பொருள்களுக்கு விரும்பத்தக்க ஒரு மாற்றுப்பொருளாக இறக்குமதிகள் மேலும் மேலும் ஆகும்.

பணவீக்கம் கொஞ்சமாயிருப்பினும் அதிகமாயிருப்பினும், பண வீக்கம் ஏற்பட்டுச் செலவு அதிகரிப்பதன் உடனடியான காரணங்கள் மிகப் பல. அதற்கு ஒரு போர் காரணமாக இருக்கலாம். போரின் விளைவாக, படைச் சாதனங்களுக்காகவும் படைவீரர்களுக்காகவும் பெருந்தொகைகள் செலவாகின்றன. இரண்டாவது உலகப் போருக்குப் பின் ஐரோப்பாவில் ஏற்பட்டதுபோல, நாட்டின் வசதிகளுக்கு அப்பாற்பட்ட அளவுக்கு நுகர்வு, முதலீடு இரண்டையும் வைத்திருக்க அரசாங்கம் முயற்சி செய்வதனுல் பணவீக்கம் ஏற்படக்கூடும். வளர்ச்சி குறைவாக உள்ள பல நாடுகளில் ஏற்படுவதுபோல உள்நாட்டுச் சேமிப்பு மற்றும் சாதாரணமாக அங்கு மூலதனம் உள்ளேவரும் அளவு ஆகியவற்றைவிட அதிகமான வீதத்தில் முதலீடு செய்ய ஒரு நாடு முயலும்போது பணவீக்கம் நேரலாம். அல்லது பாங்குச் செலாவணியை அதிகரிக்கவேண்டும் என்று நுகர்வோரும் உற்பத்தியாளரும் செய்யும் கோரிக்கைகளை எதிர்க்க முடியாத அல்லது விருப்பமில்லாத ஒரு தளர்ந்த சக்தியற்ற மத்திய பாங்கின் விளைவாகக்கூடப் பணவீக்கம் ஏற்படக்கூடும். காரணம் எதுவாயினும் விளைவு ஒன்றே. கிடைக்கும் உற்பத்தியை மீறிய தேவை, அதிகரிக்கும் இறக்குமதிகள், குறைந்து வரும் ஏற்றுமதிகள், தொடர்ந்து இருக்கும் செலுத்துநிலைப் பற்றுக்குறை.

**வணிகச் சுழலும் செலுத்துநிலையும்:** இதுவரை பார்த்த உதாரணங்களில் எல்லாம், பிற இடங்களில் எது ஏற்பட்டாலும் அதற்குச் சம்பந்தமில்லாமல் ஒரு நாட்டின் பண வருமானம்மட்டும் உயருவதால் அந்நாட்டின் செலுத்துநிலையில் சமநிலைக் கேடு ஏற்பட்டது. ஒரு பொதுக்காரணத்தின் விளைவாக, எல்லா நாடுகளிலும் வருமானங்கள் ஒன்றுக உயர்ந்தாலும் அல்லது தாழ்ந்தாலும்கூட,

நாட்டுவருமானங்களின் இம் மாற்றங்கள் அனைத்தும் ஒரேசமயத்தில் ஏற்படாமல் இருந்தால், இதுபோன்ற பிரச்சினைகள் எழக்கூடும். எல்லா நாடுகளும் வணிகச் சுழலின் சுபிட்ச பகுதியில் ஒன்றாகப் புகுந்தால், எந்த நாட்டின் இறக்குமதிகள் அதிகரித்தாலும், (பிறவற்றின் இறக்குமதிகளான) அதன் ஏற்றுமதிகளும் கூடவே உயரும். அதுபோலத்தான் பொருளாதார மந்தத்தின்போதும் ஏற்படும். ஒவ்வொரு நாட்டின் இறக்குமதிகளும் ஏற்றுமதிகளும் கூடவே மாறும். ஆனால், உண்மையில் நாடுகளனைத்திலும் மாறுதல்கள் ஒரேசமயத்தில் ஏற்படுவதில்லை. சாதாரணமாக ஒரு பொருளாதார மந்தம் முதலில் ஒரு நாட்டில் காலூன்றுகிறது. பின்னர் 15ஆவது அத்தியாயத்தில் காட்டியவாறு வெளிநாடுகளுக்குப் பரவுகிறது.

உலகில் உள்ள ஏறக்குறைய நூறு நாடுகள் அனைத்தும் ஒரே அளவு பொருளாதார முக்கியத்துவம் பெற்றவையாக இருப்பின் இதனால் கவலை ஏதும் இல்லை.[2] ஏனெனில், உலகப் பொருளாதாரத்தில் சுமார் 1 சதவிகித எடை உள்ள ஒரு பிரிவின் வருமானம் குறைந்தால் (அல்லது அதிகரித்தால்) அதன் விளைவு மிக மெல்லியதாகப் பரவக்கூடுமாதலின் பிற பிரிவுகளைப் பாதிக்காது. ஆனால், சில நாடுகள் மிகப் பெரிய அளவில் முக்கியமானவையாக இருக்கும்போது, ஏற்படும் நிலைமை மிகவும் மாறுபட்டிருக்கும்.

இன்று இருக்கும் ராட்சச அளவுக்கு அமெரிக்காவின் பொருளாதாரம் பெருத்த பின்னர் இது மிகவும் உண்மையாகிவிட்டது. கம்யூனிச நாடுகளல்லாத சுதந்திர உலகத்தில் (free world), பொருளாதார அளவில், அமெரிக்கா சுமார் 40 சதவிகிதத்துக்குச் சமானம் என்று பல மதிப்பீடுகள் கூறுகின்றன. எனவே, 1929-க்கும் 1932-க்கும் இடையில், நமது (அமெரிக்காவின்) நாட்டு வருமானம் பாதியாகவும், நமது இறக்குமதிகளும் வெளிநாட்டு முதலீடுகளும் அதைவிட அதிகமாகவும் குறைந்தபோது, நமது வணிகக் கூட்டாளிகள் மிகப்பெரிய செலுத்துநிலைப் பற்றுக்குறைகளைப் பெற்றது அதிசயமில்லை. அவர்களுடைய வருமானம், வேலைநிலை, உற்பத்தி இவற்றின் அளவெல்லாம், மோசமாக இருந்த நமது வருமானம், வேலைநிலை, உற்பத்தி ஆகியவற்றின் தாழ்ச்சியினால் கீழே இழுக்கப்பட்டன. அதனோடு, அவர்களின் வருமானச் சுருக்கம், நம்முடைய வருமானச் சுருக்கத்தைவிடப் பின்தங்கியிருந்ததால்,

2 பன்னாட்டு வாணிபம்பற்றிய பல ஆராய்ச்சிகளின் அடிப்படை, நாடுகள் ஒரே முக்கியத்துவம் வாய்ந்தவை என்ற எடுகோள். இதைப் பயன்படுத்துவதில், முக்கியமாக நடைமுறைப் பிரச்சினைகளுக்குக் கருதுகோள் ஆராய்ச்சிகளைப் பயன்படுத்துவதில், மிகவும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்.

அவர்களது இறக்குமதிகள் ஏற்றுமதிகளைவிட மெதுவாகவும் குறைவாகவும் விழுந்ததால் ஏற்பட்ட மோசமான செலுத்துநிலைப் பிரச்சினையும் சேர்ந்துகொண்டது.

நாடுகளின் இறக்குமதி நாட்டங்களில் உள்ள வித்தியாசங்கள் ஒரு நாட்டின் செலுத்துநிலையில் வணிகச் சுழலினால் ஏற்படும் சமநிலைக் கேட்டை மேலும் மோசமாக்கலாம் அல்லது குறைக்கலாம். அதன் வணிகக் கூட்டாளிகளுடைய சராசரி இறக்குமதி நாட்டத்தைவிட ஒரு நாட்டின் இறுதிநிலை இறக்குமதி நாட்டம் குறைவாக இருந்தால் சமநிலைக் கேடு மேலும் மோசமாகும். ஏனெனில், அப்போது, வருமானம் பின்தங்குதல் (income lag) ஏதாவது இருப்பின் அதன் விளைவைக் கருதாமல் இருப்போமாயின், மந்தத்தின்போது அதன் ஏற்றுமதிகள் சுருங்குவதைவிட அதன் இறக்குமதிகள் குறைவாகவே சுருங்கும்; சுபிட்சத்தின்போது அவை ஏற்றுமதிகளைவிடக் குறைந்த விகிதத்தில் அதிகரிக்கும். ஆனால், இந்த விஷயத்தின் அடிப்படையில் பொது முடிவுகள் செய்வது சரியன்று. ஏனெனில், வணிகச் சுழலின் வெவ்வேறு பகுதிகளில் இறக்குமதி நாட்டத்தின் மாறுதல்கள் நிறைய இருக்கக் கூடும் என்று தெரியுமே தவிர, அது எப்படி மாறும் என்பதுபற்றி நமக்கு அதிகம் தெரியாது.

### அமைப்பு மாற்றங்கள் (Structural Changes)

ஓர் அமைப்பு மாற்றம் உள்நாட்டிலோ வெளிநாட்டிலோ ஏற்படலாம்; தேவைப் பக்கத்திலோ, அளிப்புப் பக்கத்திலோ ஏற்படலாம். உதாரணமாக, ஓர் இயற்கை வசதியின் அளவு குறைந்துபோவதால் ஒரு தொழிலின் அடக்கச் செலவு உயரும்போதோ, ஒரு புதுக் கண்டுபிடிப்பு அல்லது செய்முறைகளில் ஓர் அபிவிருத்தி காரணமாக அடக்க விலை குறையுமாறு உற்பத்தி நடந்தாலோ, அல்லது ஒரு புதுப்பொருள் உற்பத்தியானாலோ உள்நாட்டு அளிப்பு நிலவரத்தில் மாறுதல் உண்டாகிறது. முதலில் கூறியதற்குப் பின்வரும் எடுத்துக்காட்டைக் கூறலாம். பிரிட்டனில் படிப்படியாக நல்ல நிலக்கரிப் படிவங்கள் எல்லாம் தீர்ந்துபோனதால் கரி வெட்டும் முறைகள் அபிவிருத்தி அடைந்திருந்தும் அடக்கவிலை அதிகரித்துவிட்டது. சுரங்கங்களுக்குத் தேவையான அளவு தொழிலாளர்களைப் பெறுவதும் கடினமாக உள்ளது. இவற்றின் காரணமாக நிகரமாக நிலக்கரியை ஏற்றுமதி செய்துவந்த நாடு இப்போது அதை இறக்குமதி செய்து வருகிறது. புது உற்பத்திகளும் புது உற்பத்தி முறைகளும் பெருகிவருகின்றன. இவற்றுக்குச் சில உதாரணங்களைக் கூறினால் போதும். நைலான், டெக்ரான் போன்ற செயற்கைத் துணிப் பொருள்கள் வந்துள்ளன. அவை, முக்கியமாகப் பட்டின் உலக விற்பனையைப் பாதித்துவிட்டன. இவை தவிர, செயற்கை நைட்ரேட்டுகள், செயற்கை ரப்பர், ரேடியோ

குழாய்களுக்குப் (tubes) பதிலாக டிரான்ஸிஸ்டர்கள் ஆகியவற்றையும் கூறலாம். புதுச் செயல்முறைகளில், முக்கியமாக, பருத்தி அறுவடை எந்திரங்கள், பொருள்களை எடுக்க, வைக்க, கையாளப் பயன்படும் எந்திரங்கள், மோட்டார் வண்டிப் பொறிகளைச் செய்வதில் பயன்படும் 'தன்னியக்க முறைகள்' (automation) ஆகியவற்றைக் கூறலாம்.

மக்களின் விருப்பங்கள் ஒரு குறிப்பிட்ட உள்நாட்டுத் தொழிலை ஆதரித்தோ அதற்கெதிராகவோ மாறினால், உள்நாட்டுத் தேவையில் மாறுதல் ஏற்படுகிறது. இதன் விளைவாக இறக்குமதிகள் சுருங்கலாம் அல்லது பெருகலாம். வாழ்கைத்தரம் உயர்ந்துவிட்டதால் அமெரிக்கா விலும் பிற மேற்கத்திய நாடுகளிலும் மக்களின் உணவுப் பழக்கத்தில், தானியங்கள் குறைந்து, மாமிசமும் பால்பண்ணைப் பொருள்களும் அதிக இடம் பெற்றுள்ளதை இங்குக் கூறலாம்.

கரிக்குப் பதிலாக எண்ணெயை எரிபொருளாகப் பெருங்கடலோடும் கப்பல்களின் பொறிகள் பயன்படுத்துவதால் உலகத் தேவையில் மாறுதல் ஏற்பட்டு அதன் விளைவாக பிரிட்டனுடைய கரி ஏற்றுமதிகள் குறைந்துவிட்டன. நைலான் உற்பத்தி அமெரிக்காவில் ஏற்பட்டு அதன் உபயோகம் பரவ ஆரம்பித்ததும் அந் நாடு பட்டின் இறக்குமதியைக் குறைத்துவிட்டது; இதன் எதிர்ப்பக்கம் பார்த்தால், ஜப்பானின் ஏற்றுமதிகள் குறைந்துவிட்டன.

இவ்வாறு, உள்நாட்டிலோ வெளிநாட்டிலோ தோன்றி, தேவை அல்லது அளிப்பு நிலவரத்தில் ஏற்படும் மாறுதல் எதுவும் பிற நாடு களுடன் ஒரு நாட்டின் பொருளாதார அமைப்பு கொண்டுள்ள உற வையும் அதனால் அதன் செலுத்துநிலையையும் பாதிக்கிறது. இவ்வாறு பல மாறுதல்கள் ஒருங்கே ஏற்பட்டால், மொத்தமாக அதன் ஏற்றுமதி, இறக்குமதிகளின் தராதர விலைகள் பாதிக்கப்படலாம். அப்போது அந் நாட்டின் வாணிப மாற்று வீதம் (terms of trade) மாறுகிறது. ஒரு நாட்டின் இறக்குமதிகள், முக்கியமாகக் கச்சாப் பொருள்களும் உணவுப் பொருள்களும் என்றும், அதன் ஏற்றுமதிகள் முக்கியமாகத் தொழிற்சாலைப் பொருள்கள் என்றும் கொள்வோம். உலகத்தின் மக்கள்தொகையும் தொழிற்சாலை உற்பத்தியும் வேகமாகப் பெருகினால், ஏற்கெனவே தாதுப்பொருள்களின் அளிப்புக் குறைவாக இருப்பதாலும் நிலத்தை மேலும் ஆழப் பயிரிடவேண்டுமாதலின், அந் நாட்டின் இறக்குமதிகளின் விலை ஏற்றுமதிகளின் விலைகளோடு ஒப்பிட்டால் அதிகரிக்கக்கூடும். இதனால், அந் நாட்டின் வாணிப மாற்று வீதம் மோசமாகிறது. முன் வாங்கிய அதே அளவு கச்சாப்பொருள்களையும் உணவையும் இறக்குமதி செய்வதற்கு ஈடாக முன்னைவிட அதிகமான அளவு தொழிற்சாலைப் பொருள்களை ஏற்றுமதி செய்யவேண்டும்.

இதனால், நிலைமை மோசமானதால் அதைத் திருத்தவேண்டிய பிரச்சினை எழுகிறது.

தேவை, அளிப்பு உறவுகள் மாறியதைப் பொறுத்த அமைப்பு மாறுதலைத் தவிர, பன்னாட்டு மூலதன இடப் பெயர்ச்சி வீதத்தின் மாறுதல்களையும் இங்குக் கவனிக்கவேண்டும். இப்போது வெளியிலிருந்து மூலதனத்தை இறக்குமதி செய்யாத அல்லது மிகச் சிறிய அளவே இறக்குமதி செய்யும் ஒரு நாட்டில் முக்கியமான இயற்கை வசதிகள் புதிதாகக் கண்டுபிடிக்கப்படுவதாகக் கொள்வோம். முதலீட்டினால் அங்குக் கிடைக்கக்கூடிய லாப வீதம் உயருகிறது. மூலதனம் அந்த நாட்டுக்குள் வரத் தொடங்குகிறது. இதற்கு வெனிசுவேலா நல்ல உதாரணம். முதலில் எண்ணெய் கிடைத்தது; அதன் விளைவாக, 1920-க்குப் பின் தொடர்ந்து உலகின் பெரிய எண்ணெய்க் கம்பெனிகள் அந்நாட்டில் பெரிய அளவுக்கு முதலீடு செய்து வருகின்றன. பின்னர், சமீபத்தில் அங்கு நிறைய நல்ல இரும்புக்கனி இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. இதனால், பெதில்ஹெம் (Bethlehem), அமெரிக்க எஃகு (U.S. Steel) கம்பெனிகள் அங்குப் பெரிய முதலீடுகளைச் செய்துள்ளன. ஒரு நாட்டின் மக்கள்தொகையும் செல்வ நிலையும் படிப்படியாக வளரும் போது அங்கு விற்பனை பெருகி, அதன் வசதிகளை நன்கு பயன்படுத்த வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. வெளிநாட்டார் அங்கு முதலீடு செய்ய மிகவும் முன்வருவார்கள். அயல்நாட்டு முதலீடு உட்புகுவதற்கு இயற்கை வசதிகள் புதிதாகக் கண்டுபிடிக்கப்படுவதைவிட மேலும் முக்கியமான காரணமாக இது இருக்கலாம். பத்தொன்பதாம் நூற்றுண்டில் அமெரிக்காவை நாடி இக் காரணத்தினால் அயல்நாட்டு மூலதனம் வந்தது. கானடாவிலும் முதல் உலகப் போருக்கு முந்தியும் இரண்டாவது உலகப் போருக்குப் பிறகும் இவ்வாறே நேர்ந்தது. சமீப காலத்தில் ஐரோப்பியப் பொதுச் சந்தை நாடுகளில் அன்னிய முதலீடு செய்யப்பட்டதும் இவ்வாறே.

ஏற்கெனவே அமைந்திருந்த அளவைவிட அதிகமான புதிய அளவுக்குப் பன்னாட்டு மூலதனம் ஒரு நாட்டுக்குள் வருவது அதிகரித்தால் அதனால் அந் நாட்டின் செலுத்துநிலை நேரிடையாகப் பாதிக்கப்படுகிறது. பத்திரங்களின் ஏற்றுமதி அதிகரிக்கிறது. அது திடீரெனவும் அதிகரிக்கக்கூடும். இதனால் ஏற்படும் பன்னாட்டு உபரிக்கு ஏற்றவாறு அந் நாடு தன் நிலையைத் திருத்திக்கொள்ளவேண்டும். முதலீடு செய்யும் அல்லது கடன் தரும் நாடு அல்லது நாடுகளில், பத்திரங்கள் இறக்குமதி செய்வதால் ஏற்படும் பற்றுக்குறைக்கு ஏற்றவாறு திருத்தம் செய்யவேண்டும்.

இரண்டாவது உலகப் போரின்போது, வெளி நாடுகளில் தனக்கு லாபம் தந்துகொண்டிருந்த சொத்துகளை பிரிட்டன் இழந்தது.

அதன் பின்னர் பிரிட்டன் வெளி நாடுகளிலிருந்து நிறையக் கடன் வாங்கியது. கடன் வாங்கியவன்—கடன் கொடுத்தவன் உறவு திரும்புவதால் ஏற்படும் அமைப்பு மாறுதலுக்கு ஒரு தனிப்பட்ட உதாரணம் இது. சில காலத்துக்கு பிரிட்டனுடைய பன்னாட்டு முதலீட்டு வருவாய் மிகவும் குறைந்தது. பாக்கி நின்ற கடன்களை—முக்கியமாகத் 'தடைப்பட்ட ஸ்டர்லிங் நிலுவைகளை' (blocked sterling balances)—திருப்பித் தரவேண்டிய அவசியம் ஏற்பட்டது. இவ்விரு காரணங்களால், பிற காரணங்களால் ஏற்கெனவே கவலைக்கிடமாக இருந்த செலுத்துநிலைப் பிரச்சினை, மேலும் மோசமாகியது.

இறுதியாக, அமைப்புச் சமநிலைக் கேட்டில் புதிர் போன்ற ஒரு வகையை இங்குக் கவனிக்கவேண்டும். இதைக் கிண்டில்பெர்கர் (Kindleberger) 'காரணி அளவில் அமைப்புச் சமநிலைக் கேடு' (structural disequilibrium at factor level) என்று அழைக்கிறார்.[3] காரணிகளின் விலைகளுக்கும் அவற்றின் தராதர அளிப்புகளுக்கும் உள்ள தொடர்பு சரியாக இல்லாத நிலையில் இத்தகைய சமநிலைக் கேடு உண்டாகிறது. உலகப் போருக்குப் பின் இத்தாலியின் நிலையைக் கிண்டில்பெர்கர் எடுத்துக்காட்டுகிறார். அங்கு, பிற மேற்கு ஐரோப்பிய நாடுகளுடன் ஒப்பிடும்போது கூலிகள் குறைவுதான். ஆனால், இத்தாலியின் உழைப்பாளர் தொகையோடு ஒப்பிட்டால் கூலிகள் அதிகமாக இருந்தது. அங்கு இருந்த மூலதனத்தின் தொகையோடு ஒப்பிட்டால் வட்டி விகிதங்கள் குறைவாக இருப்பதுபோலத் தோன்றின. எனவே, மிக அதிகமான அளவுக்கு உற்பத்தியில் மூலதனப் பொருள்களை அதிகமாக உபயோகிக்கும் முறைகள் கையாளப்பட்டன; மிகக் குறைவான அளவுக்குத் தொழிலாளர்களை அதிகமாக உபயோகிக்கும் முறைகள் கையாளப்பட்டன. இதன் விளைவாக மூலதனம் எப்போதும் தேவைக்குக் குறைவாகவே இருந்தது; அதேசமயம் வேலையின்மை எப்போதும் நிறைய இருந்தது. காரணிகளைப் பெற்றுள்ள அளவுக்குச் சரியாக அவற்றின் விலைகளோ அவற்றின் விலைகளுக்குத் தக்கவாறு அவற்றின் அளவோ திருத்தி அமைக்கப்படாத வரை, தொழிலாளிகளை மேலும் அதிகமாகப் பயன்படுத்தச் செய்த முயற்சி எதுவும் வருமானத்தையும் இறக்குமதிகளையும் உயர்த்திச் செலுத்துநிலையில் தெளிவான சமநிலைக் கேட்டை நிச்சயமாக உண்டாக்கும். அதுவரையில், இச் சமநிலைக் கேடு வேலையின்மைப்

[3] C. P. Kindleberger, *International Economics*, 2nd ed. Published 1958 by Richard D. Irwin, Inc., Homewood, Ill. ஒரு பொருளாதாரத்தின் வளர்ந்த பகுதி, வளராத பகுதி இரண்டுக்குமிடையே காரணி விலைகள் மிகவும் மாறுபட்டிருக்கும் 'இரட்டைப் பொருளாதார' (dual economy) பிரச்சினையைப்பற்றி முக்கியமாக, விவரமான விளக்கத்துக்கு 461–69 பக்கங்களைப் பார்க்கவும்.

பிரச்சினையாக மாறி மறைந்து மாறு வேடத்தில் இருந்தது. மிகச் சமீப காலத்தில், இத்தாலியில், உழைப்பாளிகளின் உற்பத்தித்திறனை நிறைய அதிகரிப்பதன்மூலம் சமநிலைக் கேட்டின் இவ் வடிப்படைக் காரணம்பற்றிய பிரச்சினைக்கு ஓரளவுக்காவது முடிவு காணப் பட்டுள்ளது (25·3, 25·4 பட்டியல்களைப் பார்க்க). ஐரோப்பாவில் தேவை நிலவரம் நன்கு உயர்ந்து இருந்ததும் இதற்கு உதவியது.

## செலுத்துநிலைச் சமநிலைக் கேட்டின் திருத்தம்

நவீன காலம் தோன்றியதிலிருந்து பொருளாதார அமைப்பில் இடைவிடாத மாறுதல் ஒரு முக்கிய குணதிசயமாக இருந்து வருகிறது. மேற்கு ஐரோப்பாவையும் ஐரோப்பியர்கள் குடியேறிய நாடுகளையு மாவது பொறுத்தவரை இது உண்மையாகும். இன்னும் சமீப காலத் தில் உலகில் இதுவரை தேங்கி, வளர்ச்சியற்றிருந்த பகுதிகள் எல்லா வற்றிலும் ஓர் அடிப்படை மாற்றம் ஏற்பட்டுள்ளது. அவற்றின் பழங் கால அமைப்புகள் மறைந்து இதுவரையில்லாத ஒரு வளர்ச்சி வேகம் அந் நாடுகளில் தோன்றியுள்ளது. அந்த இடைவிடாத மாறுதல்கள் நாம் இதுவரை ஆராய்ந்து வந்த வகைகளையே சேர்ந்தவை—வரு மானங்களில் மாறுதல், பொருளாதார அமைப்புகளில் மாறுதல். வருமான மாறுதல் பணவீக்க வகை மாறுதலாகவோ, வணிகச் சுழல் மாறுதலாகவோ இருக்கலாம்.

வருமானத்திலோ அமைப்பிலோ ஒரு குறிப்பிட்ட மாறுதல் ஏற்படு வதற்கு என்ன காரணமாக இருந்தாலும் (வாணிபத்தாலும் காரணி களின் இடப் பெயர்ச்சியாலும் பிற நாடுகளுடன் இணைக்கப்பட்ட) ஒரு 'திறந்த பொருளாதாரத்தில்' அம் மாறுதல் பன்னாட்டு வருவாய்களை யும் செலுத்தல்களையும் நிச்சயமாகப் பாதிக்கும். சில நாடுகளில் செலுத்துநிலை உபரியை அது உண்டாக்கும், சிலவற்றில் பற்றுக்குறை யைத் தோற்றுவிக்கும்.

அத்தகைய சமநிலைக் கேடு தொடர்ந்து இருக்குமானால், அதுவும் அது பற்றுக்குறையாக இருந்தால் அதை எவ்வாறாயினும் தடுக்க வேண்டும். ஏதாவதொரு வழியைக் கடைப்பிடித்துப் பற்றுக்குறையினால் பன்னாட்டுச் சேமநிதிகள் நஷ்டமாவதைத் தடுக்கவேண்டும். ஆனால், எந்த வழியைக் கடைப்பிடிப்பது? மிகவும் குறைவான பிரச்சினைகள் எழக்கூடிய மாற்று வழிகள் உண்டா? உண்டெனில், அவை எவை? இந்தக் கேள்விகளுக்கு இனி விடையளிப்போம்.

பொருள் அங்காடிகளின் இயக்கத்திலிருந்து ஒரு குறிப்பு நமக்குக் கிடைக்கிறது. இவ்வங்காடிகளில் சமநிலை கெடுகிறது என்று கொள் வோம். தேவை அதிகமானதால் இச் சமநிலைக் கேடு ஏற்பட்டிருக்க

லாம். அப்போது விலை இயக்கத்தின்மூலம் ஒரு புதுச் சமநிலை ஏற்படுகிறது. பொருள்களின் விலைகள், காரணிகளின் விலைகள், அவற்றை ஒன்றாக இணைக்கும் நாணயமாற்று வீதங்கள் ஆகியவற்றின்மூலம் பல் வேறு நாடுகளின் பொருளாதாரங்கள் ஒன்றோடொன்று தொடர்புடையனவாக உள்ளன என்பதை நாம் அறிவோம். பொருள் அங்காடியில் சமநிலைக் கேடு திருந்துவது போன்ற செயல்முறை செலுத்துநிலைக் கேடு திருந்தவும் பயன்படக்கூடும் அல்லவா? அதாவது, தேவை அல்லது அளிப்பில் ஏற்படும் மாறுதல் குறிப்பிட்ட விலைகள்மீது ஏற்படுத்தும் விளைவுகள்மூலம் மீண்டும் சமநிலை ஏற்படக்கூடும்.

நாட்டு வருமானத்தைப்பற்றி நாம் ஆராய்ந்ததில் வேறு 'இயற்கையான' தானே ஏற்படும் திருத்தங்களைப் பார்த்தோம். அவ்வாராய்ச்சியில், ஏற்றுமதிகள் அதிகமானால் அதன் விளைவாக, வருமானம் பெருகி அதற்கு இணையாக, ஆனால், சிறிது குறைவாக இறக்குமதிகள் அதிகரிக்கும் என்பதைப் பார்த்தோம். இத்தகைய பிரச்சினைகளை ஆராய நம்மிடம் இப்போது போதுமான ஆய்வுச் சாதனங்கள் உள்ளன. அவற்றைச் சரியாக உபயோகிக்கவேண்டியது இப்போது நம் வேலையாகும்.

தன் செலாவணி பிற நாடுகளின் செலாவணிகளோடு கொண்டுள்ள உறவு எப்படியிருக்கவேண்டும் என்பதை ஒவ்வொரு நாடும் சுதந்திரமாக முடிவு செய்துகொள்ளலாம். ஒரு நாடு தன் செலாவணி முறையைப் பிறநாட்டுச் செலாவணி முறைகளுக்குச் சம்பந்தமில்லாமல் அமைத்துக்கொள்ளலாம். தன்னுடைய பணக் கொள்கைமூலம் தன் பணத்தின் உள்நாட்டு மதிப்பு, அதாவது, வாங்கும் சக்தியை அது நிர்ணயித்துக்கொள்ளலாம். அதே சமயம் நாணயமாற்று அங்காடிகளில் தேவையும் அளிப்பும் தடையின்றிப் பின்னிச் செயல்படுவதன் மூலம் தன் செலாவணியின் வெளிநாட்டு மதிப்பு நிர்ணயமாவதை அனுமதிக்கலாம். நாணயமாற்று வீதங்கள் விஷயத்தில் அந் நாடு குறுக்கிடுவதில்லை. அவ் வீதங்கள் தடையின்றி ஏறி இறங்கலாம்.

அல்லது, ஒரு நாடு மற்றவற்றுடன் சேர்ந்து வெவ்வேறு நாடுகளின் செலாவணிகளுக்கிடையே ஒரு நிலையான தொடர்பை ஏற்படுத்திக்கொள்ளலாம். ஒவ்வொரு செலாவணியின் மதிப்பையும் பொன்போன்ற ஒரு பொது அளவையின் கணக்கில் கூறுவதன்மூலம் இது செய்யப்படுகிறது. ஒவ்வொரு நாடும் தன் செலாவணியில் பொன்னுக்கு விலை குறித்து, அவ் விலைக்கு அதை வரம்பின்றி வாங்கவும் விற்கவும் செய்யுமானால், அப்போது வெவ்வேறு பொன் திட்ட நாணயங்களுக்கிடையான மாற்று வீதங்கள் அவ்வந்த இரு நாணயங்களின் தராதரப் பொன் மதிப்புக்கு இணையான அளவில் மாறாமல் நிற்கும்.

ஆனால், அத்தகைய பன்னாட்டு முறையைக் கடைப்பிடிப்பதால் பணச் சுதந்திரத்தை ஒவ்வொரு நாடும் இழக்கிறது என்பதை இனிக் காண்போம்.

இறுதியாக, இரண்டு வழிகளிலும் உள்ள நன்மைகளையும் அனுபவிக்கவேண்டுமென்று ஒரு நாடு முயற்சி செய்யலாம். பணக் கொள்கைச் சுதந்திரம், மாறுத நாணயமாற்று வீதம் ஆகிய இரு நன்மைகளையும் பெற அந்நாடு முயற்சிக்கலாம். அன்னியச் செலா வணியின் தேவைமீதும் அளிப்பின்மீதும் நேரிடையாகக் கட்டுப் பாடுகளைக் கையாண்டு இதைச் செய்யக்கூடும்.

இந்த வெவ்வேறு முறைகள் ஒவ்வொன்றிலும் செலுத்துநிலைச் சீர்கேடு எவ்வாறு திருத்தப்படுகிறது என்பதை இனிப் பார்ப்போம். திருத்தச் செயல்முறை எவ்வாறு நடக்கிறது என்பதோடு ஒப்பிட்டால் அதன் காரணம் எதுவாக இருக்கும் என்பது அவ்வளவு முக்கியமில்லை. ஒரு குறிப்பிட்ட சமநிலைக் கேட்டுக்குக் குறிப்பிட்ட திருத்தமுறை சரியானதா அல்லவா என்பதைப் பின்னர் பார்ப்போம்.

## ஒன்றை ஒன்று சார்ந்த செலாவணிகள் : பொன் திட்டம் சிறந்த உதாரணம்

பொன்னைப் போன்ற ஒரு பொதுவான மதிப்பு அளவையோடு ஒவ்வொரு செலாவணியின் மதிப்பும் தொடர்புடையதாக இருப்பதாலோ அல்லது அச் செலாவணிக்கு பலமான அதிகாரபூர்வமான ஆதரவு இருப்பதாலோ நாணயமாற்று விகிதங்கள் மாறுமல் இருப்பதாகக் கொள்வோம். அப்போது அப் பல்வேறு நாடுகளின் செலாவணி முறைகளும் ஒன்றை ஒன்று சார்ந்தவை (interdependent) எனலாம். மாறுத நாணயமாற்று வீதமுறை எப்படிச் செயல்படுகிறது என்பதைக் கவனித்தால் இப் பின்னல் சார்பு எத்தகையது, அது ஏன் வேண்டும் என்பவை உடனே புரியும். இதற்காக நிலையான நாணய மாற்றுவீத முறை அல்லது ஒன்றை ஒன்று சார்ந்த செலாவணி முறையின் முக்கிய உதாரணமாகப் பொன் திட்டத்தை எடுத்துக் கொள்வோம்.

அது மிக நன்ருகச் செயலாற்றி வந்ததாகக் கருதப்படும் காலத்தில், அதாவது 1914-க்கு முன் சுமார் ஐம்பது ஆண்டுகளில் பொன் திட்டம் எப்படி நடந்தது என்பதைப் பார்ப்போம். பொன் திட்டத்தைக் கடைப்பிடித்த ஒவ்வொரு நாடும் ஒரு பொன் நாணயத்தைத் தன் பண அலகாகக் கொண்டது: அதன் எடையை அந் நாட்டுச் சட்டம் நிர்ண யித்தது. உதாரணமாக, பிரிட்டனின் பிரமாண நாணயமாகப்

(standard money unit) பொன் சவரன் (sovereign) அல்லது பவுன் விளங்கியது. அந் நாணயம் 113·0016 தானிய (grains) எடைக்குத் தூய பொன்னைக் கொண்டிருந்தது. அமெரிக்க டாலரோ 23·22 தானிய எடைப் பொன்னைக் கொண்டிருந்தது. இரண்டு நாணயங்களும் பொன்னுடன் இணைக்கப்பட்டிருந்ததனால் இவ் விரண்டுக்கும் இடையே ஓர் அடிப்படை நாணயமாற்று வீதம் இருந்தது. அது அவ்விரண்டின் தராதரப் பொன் அளவைக் குறிக் கிறது. அதற்குத் 'தங்கசாலைச் சமன்' வீதம் (mint par of exchange) என்று பெயர். அது ஒரு பவுனுக்கு $ 4·87 (மேலும் துல்லியமாகச் சொன்னால் $ 4·86656) ஆகும்.

மொத்தப் பண அளிப்பில் பொன் நாணயங்கள் ஒரு பகுதியே. அவற்றைவிட அதிகமான காகிதப் பணம், பாங்கு வைப்புகள் ஆகிய வற்றுடன் தங்க நாணயங்களும் புழங்கின. ஆனால், ஒரு பொன் திட்ட நாட்டின் இறுதிச் சேமநிதி பொன்னே. (பிரிட்டன், ஃபிரான்ஸ், ஜெர்மனி போன்ற) சில நாடுகளில் இப் பொன்னை மத்திய பாங்கு வைத்திருந்தது. (அமெரிக்கா போன்ற) சில நாடுகளில் இப் பொன்னை வணிக பாங்குகள் வைத்திருந்தன. பன்னாட்டு விவகாரங்களைச் சௌகரியமாக நடத்துவதற்காகப் பெரும்பாலான நாடுகளின் பாங்குகள் லண்டனில் ஸ்டர்லிங் நிலுவைகளை வைத்திருந்தன. செலுத்து நிலையில் ஏற்பட்ட சிறு மாறுதல்களுக்கு ஏற்ப இந்த நிலுவைகள் ஓரளவுக்குக் கூடவும் குறையவும் செய்தன. ஆனால், பெரிய சமநிலைக் கேடு ஏதும் ஏற்பட்டால் அதன் கூடவே பொன்னின் இடப்பெயர்ச்சியும் ஏற்படும்.

பொன் திட்டத்தின்கீழ் நாணயமாற்று வீதங்கள் மாறக்கூடிய வீச்சு (range) மிகக் குறுகலானது. அவ் வீச்சின் இரு எல்லைகளையும் பொன்னைக் கப்பலில் அனுப்பும் செலவு நிர்ணயிக்கிறது. நியூயார்க் குக்கும் லண்டனுக்கும் இடையே இரு திசையிலும் பொன்னை அனுப்பும் செலவு ஒரு ஸ்டர்லிங் பவுனுக்கு ஏறக்குறைய 3 சென்டுகள். எனவே, டாலர்/பவுன் வீதம் மாறக்கூடிய உயர்வரம்பு, 'பொன் ஏற்றுமதி எல்லை' (gold export point) ஆகிய $ 4·90/£ ; கீழ் வரம்பு 'பொன் இறக்குமதி எல்லை'யாகிய $ 4·84/£.

பொன் திட்டம் இயங்கிய செயல்முறையைக் காண ஓர் உதாரணத்தைக் கற்பனை செய்வோம். அமெரிக்கா தன் பன்னாட்டு விவகாரங்கள் அனைத்தையும் ஸ்டர்லிங் பவுன்களில் நடத்துவதாகக் கொள்வோம். நாணயமாற்று வீதம் பவுனுக்கு $ 4·87 ஆகவும், அதன் தன்னிச்சையான வருவாய்களும் தன்னிச்சையான செலவுகளும் £ 10 மிலியன் அளவில் சமமாக இருக்க, அதன் செலுத்துநிலை சமநிலையில் உள்ளது என்றும் கொள்வோம். அன்னியச் செலாவணியின் தேவையும்

அளிப்பும் 19·1 படத்தில் உள்ள $D_f$, $S_f$ கோடுகளால் காட்டப் படுகின்றன.[4]

இப்போது அமெரிக்காவின் ஏற்றுமதிகள் குறைவதாகக் கொள் வோம் (வெளிநாடுகளில் சுங்கவரிகள் உயர்த்தியதாலோ, அமெரிக்க ஏற்றுமதி மார்க்கெட்டுகளில் போட்டி மேலும் பலத்ததாலோ, வெளி நாடுகளில் வாணிபப் பின்னிறக்கம் (recession) ஏற்பட்டதாலோ




படம் 19·1. பொன்திட்டத்தின்கீழ் நாணயமாற்று வீதங்கள்

இவ்வாறு ஏற்பட்டிருக்கலாம்). அன்னியச் செலாவணியின் அளிப்பு இடப்புறம் நகர்ந்து, புதிய நிலையான $S_{f1}$-ஐ அடைகிறது. நாணய மாற்று வீதம் பொன் ஏற்றுமதி எல்லையான $ 4·90/£-க்கு உயருகிறது. ஏற்றுமதிகள் குறைந்ததனுல் இப்போது £ 7 மிலியனுக்குத் தான் அன்னியச் செலாவணி அளிப்பு உள்ளது. அன்னியச் செலா வணியின் தேவையின்நிலை மாறவில்லை. ஆனுல், சிறிது உயர்ந்த நாணயமாற்று வீதத்தில், அன்னியச் செலாவணி வாங்குவது சற்றுக்

[4] தங்கசாலைச் சமனுக்கு அருகில் உள்ள பட அளவைப் பெரிதாகக் காட்டு வதற்காக டாலர்/ஸ்டர்லிங் நாணயமாற்று வீதத்தைக் காட்டும் செங்குத்து அச்சு உடைக்கப்பட்டு இருக்கிறது.

குறையும்; £ 9·7 மிலியனுக்குக் குறையும். அமெரிக்கச் செலுத்து நிலையில் £ 2·7 மிலியன் பற்றுக்குறை உள்ளது.

பற்றுக்குறைக்குப் பணம் தர, சுமார் £ 2·7 மிலியன் மதிப்புடைய பொன் நாட்டைவிட்டு வெளியேறுகிறது. சாதாரணமாக வைத்துள்ள குறைந்தபட்ச சௌகரிய அளவைவிட நியூயார்க் பாங்குகளின் ஸ்டர்லிங் வைப்புகள் அதிகமாக இருந்தால் இந்த வெளியேற்றம் சற்றுக் குறையலாம். தம் ஸ்டர்லிங் வைப்புகள் எவ்வளவுக்குக் குறைய அந்த பாங்குகள் அனுமதிக்கின்றனவோ அவ்வளவுக்கு அவை ஸ்டர்லிங் உண்டியல்களை வரைந்து விற்கக்கூடும்.

ஒரு நாட்டின் செலுத்துநிலையில் பாதகமான மாறுதலினுல் பண நிலையில் ஏற்படும் விளைவை நாம் இப்போது தெளிவாகப் பார்க்கலாம். அமெரிக்க ஏற்றுமதிகள் குறைந்த பின், ஏற்றுமதியாளர்களும் வெளி நாட்டார் பணம் தரவேண்டிய மற்றவர்களும் அமெரிக்க பாங்குகளிடம் £ 7 மிலியனுக்கு உண்டியல்களைக் கொண்டுவருவர். பாங்குகள் அவற்றைக் கழிவுசெய்து பணம் தருவதால் உள்நாட்டில் பணத்தின் அளிப்பு $ 34·3 மிலியனுக்கு (4·90 × 7) அதிகமாகிறது. அதேசமயம் அவர்கள் இறக்குமதியாளர்களுக்கும் வெளிநாட்டாருக்குப் பணம் செலுத்தவேண்டியவர்களுக்கும் உண்டியல்களை $ 47·53 மிலியனுக்கு (4·90 × 9·5) விற்கின்றனர். இதனுல், அந்த அளவுக்குப் பணத்தின் அளிப்புக் குறைகிறது. எனவே, அமெரிக்காவின் பண அளிப்பு $ 13·23 மிலியனுக்கு நிகரமாகக் குறைகிறது. பண அளிப்பு இவ்வளவுக்குக் குறைவதற்கு இணையாக அதே அளவுக்குப் பொன்னை (£ 2·7 மிலியன்) அந் நாடு இழக்கிறது. ஸ்டர்லிங் நிலுவைகள் குறைவதால் இப் பொன் நஷ்டம் சிறிது குறையக்கூடும். தன்னிச்சையான செலுத்தல்களான £ 9.7 மிலியனுக்கும் தன்னிச்சையான வருவாய்களான £ 7 மிலிய னுக்கும் உள்ள வித்தியாசத்தைச் சரிக்கட்டுவதற்குத் தேவையான ஈடு செய்யும் நிதி ஏற்பாடு இதுவே.

இவ்வாறு அமெரிக்கச் செலுத்துநிலையில் மாறுதல்கள் ஏற்படும் போது அதேசமயம் அந் நாட்டின் பன்னுட்டுச் சேமநிதி நிலைமையில் மட்டுமன்றி உள்நாட்டுப் பண அளிப்பு நிலைமையிலும் ஒரு மாறுதல் ஏற்படுகிறது. பொன் திட்டத்தில் பங்கு கொண்டவர்களுடைய செலா வணிகளையெல்லாம் பொன் திட்டம் ஒன்றுடொன்று இணைக்கிறது. செலாவணிகள் ஒன்றையொன்று சார்ந்திருக்கும் நிலையை அது ஏற் படுத்துகிறது. இவ் விளைவு நேராமல் தடுக்கமுடியும். அதைப் பின்னர் பார்க்கலாம். ஆனுல், அதேசமயம் பொன் திட்டத்தின் திருத்தச் செயல்முறை நன்கு நடப்பதையும் நாம் தடுத்துவிடுவோம். அத் திருத்தச் செயல்முறைபற்றி இனிக் கவனிப்போம்.

**திருத்தம்: விலை விளைவு**

1914-க்கு முன், வேலை நிலைமையையும் விலைகளையும் நிலைப்படுத்தத் தம் சக்திகளை உபயோகிப்பதில் மத்திய பாங்குகள் அக்கறை காட்டவில்லை. மாறாக, நாட்டின் சேமநிதிகளைப் பாதுகாக்கவும், அதன்மூலம் செலாவணியைப் பொன்னாக மாற்றுவதில் கஷ்டம் ஏற்படாது பார்த்துக் கொள்ளவுமே உண்டியல் கழிவுக் கொள்கையை அவை பயன்படுத்தின. பற்றாக்குறை ஏற்பட்டுப் பொன் வெளியே போகுமானால், மத்திய பாங்குகள் உடனே தம் கழிவு வீதங்களை உயர்த்தும்.[5] இதனால் பல விளைவுகள் சங்கிலித் தொடர்போல நடக்கும். இதை பிரிட்டிஷ் பாராளுமன்றக் குழு ஒன்று, முதல் உலகப் போர் முடியும் தறுவாயில் பின்வருமாறு அழகாகக் கூறியது:

> ......பாங்கின் கழிவு வீதத்தை உயர்த்துவதும் அது அங்காடியில் நன்கு பலன் தருவதற்கு எடுத்துக்கொண்ட முயற்சிகளும் பொதுவாக வட்டி விகிதங்களைத் தவறாமல் உயர்த்தி பாங்குக் கடன்களைக் குறைத்தன. புது நிறுவனங்கள் அமைப்பது தள்ளிப் போடப்பட்டது. கட்டுமானப் பொருள்களுக்கும் பிற மூலதனப் பொருள்களுக்கும் தேவை குறைந்தது. வேலைகள் அதனால் குறைந்தன; நுகரக்கூடிய பொருள்களின் தேவை இதன் விளைவாகக் குறைந்தது. அநேகமாகப் பணத்தைக் கடன் வாங்கிச் சரக்கு இருப்புகளை வைத்திருப்பவர்கள், கடனை மீண்டும் வாங்குவதில் கஷ்டமில்லாவிடினும் வட்டி அதிகம் தரவேண்டியிருப்பதாலும், விலைகள் விழக்கூடும் என்ற பயம் காரணமாகவும் ஏற்கெனவே நலிந்த அங்காடியில் மேலும் பொருள்களை விற்க முயல்கின்றனர். எனவே, உள்நாட்டு அங்காடியில் பொதுவாக விலைகள் தாழ்கின்றன. இதனால் இறக்குமதி தடைப்பட்டு ஏற்றுமதி தூண்டப்படுகிறது. இக் கஷ்டத்தின் மூல காரணமாக இருந்த பாதகமான வாணிக நிலை சரியாகிறது.[6]

இக் கூற்றிலும், பொன் திட்டத்தின் திருத்தச் செயல் முறையைப் பற்றிய இதுபோன்ற வேறு விளக்கங்களிலும் விலை மாறுதல்களின் பங்கு முக்கியமாக விவரிக்கப்பட்டிருக்கிறது. பழைய விலை—பொன்—

[5] 1915-ல் ஃபெடரல் ரிசர்வ் முறை அமைக்கப்படு முன் அமெரிக்காவின் பெரிய வணிக பாங்குகள் அந் நாட்டின் பொன் சேமிப்புகளில் பெரும்பகுதியை வைத்திருந்தன. சேமநிதிகளில் மாறுதல் ஏற்பட்டபோது பிற நாடுகளில் மத்திய பாங்குகள் எப்படி நடந்தனவோ அதேபோல இவையும் நடந்துகொண்டன.

[6] *Interim Report of the Committee on Currency and Foreign Exchanges after the War* (Cunliffe Committee); *British Banking Statutes and Reports*, 1832–1928, Vol. II (T. E. Gregory பதிப்பித்தது) இதில் மீண்டும் அச்சிடப்பட்டது. பக்கங்கள் 336–37. Copyright 1929 by the Oxford University Press, New York.

ஓட்டம் இயக்கத்தைவிட அதிகமாக இதில் வேறொன்றும் கூறப்பட வில்லை. பற்றுக்குறை ஏற்பட்டால் நாடு பொன்னை இழக்கிறது; அதன் மத்திய பாங்கு, கழிவு வீதங்களை உயர்த்தி பாங்குச் செலாவணியை இறுக்குகிறது; பொருள் சரக்கு இருப்புகள் காசாக்கப்பட்டுக் குறை கின்றன; ஆர்டர்கள் குறைகின்றன; விலைகள் விழுகின்றன; ஏற்று மதிகள் தூண்டப்படுகின்றன; இறக்குமதிகள் தாழ்கின்றன. பற்றுக் குறை மறைகிறது.

உண்மையில், திருத்தப் பணியைச் செய்யவேண்டிய அளவுக்கு விலை மாறுதல்கள் போதிய அளவு ஏற்பட்டதாகத் தெரியவில்லை.[7] நாட்டு வருமானத்தின் காரணிகளைப்பற்றிய ஆராய்ச்சியை கீன்ஸ் (Keynes) செய்த பிறகு, கன்லிஃப் குழு அறிக்கையில் (Cunliffe Commitee Report) கூறப்பட்ட (ஆனால் கவர்ச்சிகரமாகக் காட்டப் பட்ட) விஷயங்கள்மீது கவனம் செலுத்தப்பட்டது. பொன் திட்ட இயக்கம் வேறு விதமாக விளக்கப்பட்டது. இதில் வருமான மாறுதல் களுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பொன் திட்டம் எப்படி வேலை செய்திருக்கும் என்பதன் பரிசீலனையில் இவ் விளக்கத்தைச் சேர்த்துக்கொள்வோம்.

**திருத்தம் : வருமான விளைவு (The Income Effect)**

செலுத்துநிலையில் பாதகமான சமநிலைக் கேட்டினால் செலாவணி அளிப்புக் குறைவதால் ஏற்படும் விளைவுகளை இங்கே பார்ப்போம். அதன் அழுத்தத்தை எங்கே உணரலாம்? ஏற்றுமதித் தொழில்களில் உணரலாம்; அவை வெளி நாடுகளில் இப்போது குறைவாகப் பொருள் களை விற்கின்றன. நாம் எடுத்துக்கொண்ட உதாரணத்தில், ஏற்றுமதி களினால் ஏற்படும் மொத்த வருவாய், உள்நாட்டுப் பண அளவில், $ 48·7 மிலியனிலிருந்து $ 34·3 மிலியனுக்குக் குறைந்துவிட்டது. அதாவது $ 14·4 மிலியன் விழுந்துவிட்டது. ஏற்றுமதிகள் குறைந்த அளவுக்கு வருமானமும் குறைந்திருக்கிறது.

ஆனால், வருமானக் குறைவு அத்துடன் நிற்கவில்லை. பெருக்கியை யும் இங்குக் கணக்கில் சேர்த்துக்கொள்ளவேண்டும். வெளி நாட்டு எதிர் விளைவுகளை அனுமதித்து, பெருக்கியின் மதிப்பு:

$$\frac{1}{s_a + m_a + m_b \cdot \frac{s}{s_b}}$$

[7] உதாரணமாக, செலுத்துநிலைச் சமநிலைக் கேட்டுக்கு ஏற்ப 'வியக்கத்தக்க வாறு துல்லியமாகவும் வேகமாகவும்' சரக்குப் போக்குவரத்து மாறியதையும், ஏற்படவேண்டிய விலை மாற்றங்கள் ஏற்படாததையும், 'வியக்கத்தக்கவாறு மிகச் சிறிய அளவு'க்குப் பொன் மாற்றப்பட்டதையும்பற்றி புரொபசர் டாசிக் (Taussig) தம் கருத்துகளைத் தெரிவித்திருக்கிறார். F. W. Taussig, *International Trade*, பக்கங்கள் 239, 261, பதிப்பு 1927, Macmillan, New York.

இதில் கீழே குறித்த *a* அமெரிக்காவைக் குறிக்கிறது; *b* உலகின் பிற பகுதிகளனைத்தையும் குறிக்கிறது. பின்வரும் மதிப்புகளை வைத்துக் கொள்வோம்: $s_a=0{\cdot}2$, $s_b=0{\cdot}2$, $m_a=0{\cdot}15$, $m_b=0{\cdot}25$, பெருக்கியின் மதிப்பு $\frac{10}{6}$ அதாவது 1·67. ஏற்றுமதி குறைந்தால் இறுதியில் வருமானம் குறையக்கூடியது 1·67 மடங்கு; அதாவது $ 24 மிலியன். ஏற்றுமதியில் குறைவு தொடர்ந்து சில காலம் இருக்குமாயின், பற்றுக் குறை இருக்கும் வரை வருமானம் இந்த அளவுக்குத் தாழ்ந்து நிற்கும்.

ஆனால், வருமானம் குறையும்போது பற்றுக்குறை மாறாமல் அப்படியே இராது. இறுதிநிலை இறக்குமதி நாட்டம் 0·15 ஆனால் 24 மிலியன் டாலருக்கு வருமானம் குறைந்தால் 3·6 மிலியன் டாலர் மதிப்புள்ள இறக்குமதிகள் குறையும்.[8] பெருக்கியும் இறக்குமதி நாட்டமும் செயலாற்றிய பிறகு நாணயமாற்று அங்காடியில் ஒரு புது நிலைமை தோன்றுகிறது. இறக்குமதிகளின் ஸ்டர்லிங் மதிப்பு ஏறக் குறைய £ 0·73 மிலியன் அளவு விழுந்திருக்கிறது. (இறக்குமதி குறைந்ததின் டாலர் மதிப்பான $ 3·6 மிலியனை, நாணயமாற்று வீதமான $ 4·90ஆல் வகுத்தால் இத் தொகை வரும்). படத்தில் இதை நாணயமாற்றுக்கான தேவைக் கோட்டை இடப்பக்கம் தள்ளி, பவுனுக்கு $ 4·90 வீதத்தில் £ 8·77 மிலியன் மதிப்புக்கு இறக்குமதி களுக்குத் தேவை ஏற்படுகிறது எனக் காட்டலாம் ($D_{f1}$) (18·1 படத் தைப் பார்க்க). ஏற்றுமதிகள் மாறாமல் இருந்தால், செலுத்துநிலைப் பற்றுக்குறை அதற்குச் சரியாகக் குறைகிறது. அதாவது £ 2·7 மிலியனிலிருந்து £ 1·77 மிலியனாகும்.

விலை மாறுதல்களின் விளைவுகள் ஏதாவது இருப்பின், அவை வருமான மாறுதல்கள் செய்யும் திருத்த விளைவோடு சேர்ந்துகொள் கின்றன. விலை மாறுதல்கள் ஏற்படும் அளவுக்கு, ஏற்றுமதிக்கும் இறக்குமதிக்கும் உள்ள தேவை நெகிழ்ச்சியைப்பொறுத்து, நாணய மாற்றுத் தேவைக்கோடு மேலும் சற்று இடப்புறம் நகரும்; அளிப்புக் கோடு சிறிது வலப்புறம் நகரும்.

### தூண்டப்பட்ட குறுகியகால மூலதன இடப் பெயர்ச்சிகள்

பொன் திட்டத்தைப் போல நிலையான நாணயமாற்று வீதங்கள் வழங்கும் நிலையில், ஒரு நாட்டின் பன்னாட்டு வருவாய்களிலும் செலுத் தல்களிலும் சிறு மாறுதல்கள் ஏற்பட்டாலும் சேமநிதிகளின் அளவில் பெரிய மாறுதல்கள் ஏற்படக்கூடும். பொன்னின் இடப் பெயர்ச்சியை ஈடு செய்யும் குறுகியகால மூலதன இடப் பெயர்ச்சிகள் இருப்பதால்

[8] இதற்குச் சில காலம் ஆகும். ஒரு சிறிய எச்சத்தைத் தவிர, பெருக்கியின் விளைவுகள் $1\frac{1}{2}$ அல்லது 2 ஆண்டுகளில் தீர்ந்துவிடுகின்றன.

தான் பொன்னின் இடப் பெயர்ச்சிகள் எதிர்பார்த்ததைவிடக் குறைவாக இருந்தன என்பது பல பொருளாதார அறிஞர்களுடைய எண்ணம்.

பொன் திட்டத்தின் ஒப்புக்கொண்ட கோட்பாடுகளின்படி, ஒரு நாட்டின் சேமிப்பு நிதிகளிலிருந்து பொன் வெளியே போகும்போது மத்திய பாங்கு அதற்குப் பாதுகாப்பாகக் கழிவு வீதத்தை உயர்த்த வேண்டும். பொன்னைப் பெறும் நாடு அல்லது நாடுகளில் வட்டி வீதங்களை பாங்குகள் குறைக்கும். இதனால் நாட்டுக்கு நாடு குறுகியகால வட்டி வீதங்கள் மாறுபடுகின்றன. ஒரு குறிப்பிட்ட குறைந்தபட்ச அளவைவிட (சுமார் $\frac{1}{2}$ சதவிகிதத்தைவிட) இவ் வித்தியாசம் அதிகமாக இருந்தால் வட்டி வீதங்கள் அதிகமாக உள்ள நாட்டின் பாங்குகளுக்கு வெளிநாடுகளில் பணம் கடன் வாங்குவது லாபகரமாகும். நம் உதார ணத்தில், அமெரிக்க பாங்குகள் முன்னரே செய்துகொண்ட ஏற்பாட்டின் படி லண்டனில் உள்ள தம் தொடர்பு பாங்குகளின்மீது பாங்கு உண்டி யல்களை ஸ்டர்லிங் பணத்தில் வரையும். இவற்றை லண்டன் பணச் சந்தையில் கழிவு செய்வதன்மூலம் ஸ்டர்லிங் வைப்புகள் அவற்றுக்குக் கிடைக்கின்றன. அப்போது, அவை இவ் வைப்புகளின்மீது உண்டி யல்கள் வரைந்து அமெரிக்க இறக்குமதியாளர்களுக்கு அவற்றை விற்று டாலர்களைப் பெற்று அந்த டாலர்களை நியூயார்க் பணச் சந்தையில் அப்போது வழங்கும் அதிகமான வட்டிக்குக் கடன் கொடுக்க முடியும்.

இப்படிச் செய்ததனால் நியூயார்க் பாங்குகளின் குறுகிய காலப் பொறுப்புகள் (ஸ்டர்லிங் பாங்கு உண்டியல்கள்), பொன்னின் வெளிப் போக்குக்கு பதிலாக ஏற்பட்டன. நாட்டின் சேமநிதிகளைச் செலுத்து நிலைச் சமன்கேடு பாதிக்கும் அளவு மட்டுப்பட்டது. பாங்குச் செலா வணியைக் குறைக்கக் கையாண்ட உபாயங்களும் அவ்வளவு தீவிரமாக இருக்கவேண்டியதில்லை. அதிகத் தேவையைச் சமாளிக்க அன்னியச் செலாவணியைக் கடன் வாங்கும் வாய்ப்புமட்டும் இல்லாதிருந்தால் சேமநிதி நஷ்டம் மேலும் அதிகமாகியிருக்கும். சேமநிதிகள் செலா வணியைப் பொன்னாக மாற்றும் நிலைக்கு மிக அவசியமானவை. எனவே, அவற்றைப் பாதுகாப்பதற்காக பாங்குக் கடன்களைக் குறைத்து, தொழில் நடவடிக்கையைச் சுருக்கி, விலைகளை மட்டுப் படுத்துவதில் மிக அதிகமான நம்பிக்கை வைக்கவேண்டும். திருத்தத் தின் இந்த நெடுங்கால இயக்கத்தின்மீது உடனடியாக ஒரு பெரும் சுமையை வைப்பதைவிட, இவ் வியக்கத்தின் விளைவுகள் பலன் தர அதற்கு மேலும் சற்று அவகாசம் தரலாம்.

**உண்மையும் கற்பனையும்**

பத்தொன்பதாம் நூற்றாண்டில் பொன் திட்டம் சாதாரணமாகக் கருதப்படுமாறு செயலாற்றவில்லை என்பதற்குச் சான்றுகள் குவிந்து

உள்ளன.[9] பொன் திட்டத்தின் இதுவரை ஒப்புக்கொள்ளப்பட்ட கோட்பாட்டின்படி சமநிலை செய்யும் பணியை விலை மாறுதலும் வருமான மாறுதலும் முக்கியமாகச் செய்ததாகக் கூறப்படுவது சரியில்லை போலத் தோன்றுகிறது.

பொன்னின் போக்கும் விலை மாறுதல்களும் வியக்கத்தக்கவாறு சிறியவையாக இருந்தன என்பதை முன்னரே குறிப்பிட்டோம். ஆனால், உண்மையில் நேர்ந்த பொன்னின் இடப் பெயர்ச்சிகள் விஷயத்திலும்கூட, செலாவணி நிர்வாகத்தினர் 'அந்த ஆட்டத்தின் விதிகளாக' (rules of the game) கருதப்பட்டவற்றைப் பலமுறை பின்பற்றத் தவறிவிட்டனர். இவ் விதிகள் பின்வருமாறு : பொன் வெளியே போகும்போது கடன் செலாவணியைக் குறைக்கவேண்டும் ; பொன் உள்ளே வரும்போது கடன் செலாவணியை அதிகரிக்கவேண்டும். அதற்கு மாருக மத்திய பாங்குகள் பல சமயங்களில் பொன்னின் நஷ்டத்தைத் தடுக்கப் 'பயனற்றதாக்கும்' (neutralization) கொள்கையைக் கடைப்பிடித்தனர்,

மத்திய பாங்கில் வணிக பாங்குகள் வைத்திருந்த சேமநிதி வைப்புகளைப் பொன்னின் வெளிப்போக்குக் குறைத்தபோது, மத்திய பாங்கு பகிரங்க மார்க்கெட்டில் பத்திரங்களை வாங்கி அக் குறைவை ஈடு செய்தது. அதேபோல, வணிக பாங்குகளின் சேமநிதி வைப்புகள் அதிகரித்தால், பத்திரங்களை விற்பதன் மூலம் அதை ஈடு செய்தனர். வணிக பாங்குகளின் சேமநிதி அளவு மாருததால் வட்டி வீதங்களும் மாருமல் இருந்தன. பொன் திட்டக் கோட்பாட்டின்படி திருத்தத்துக்கு மிக முக்கியமான பணத்தின் சுருக்கமோ, பெருக்கமோ ஏற்படுவது

[9] இம் முடிவுக்கு வர முக்கியமான காரணமாக இருந்த ஆராய்ச்சிகள் பின்வருமாறு: W. Edwards Beach, *British International Gold Movements and Banking Policy*, 1881–1913 (Harvard University Press, Cambridge, 1935); Arthur I. Bloomfield, *Monetary Policy Under the International Gold Standard*, 1880–1914 (Federal Reserve Bank of New York, 1959); W. Adams Brown, *The International Gold Standard Reinterpreted*, 1914–1934 (National Bureau of Economic Research, New York, 1940); Oscar Morgenstern, *International Financial Transactions and Business Cycles* (Princeton University Press, Princeton, N.J., 1959); R. S. Sayers, *Bank of England Operations*, 1890–1914 (P. S. King & Son, Ltd., London, 1936); John A Stovel, *Canada in the World Economy* (Harvard University Press, Cambridge, 1959); C. H. Walker, "The Working of the Prewar Gold Standard," *Review of Economic Studies*, Vol. I (1934); P. B. Whale, "The Working of the Prewar Gold Standard," *Economica*, Vol. IV *ns* (1937); H. D. White, *The French International Accounts*, 1880-1913 (Harvard University Press, Cambridge, 1933).

அனுமதிக்கப்படவில்லை.[10] இருந்தபோதிலும் பன்னாட்டுச் செலுத்தல் களில் பற்றுக்குறைகளோ உபரிகளோ எல்லையின்றி இருக்கவில்லை. எப்படியோ அவை விரையில் ஒழிக்கப்பட்டுச் சமநிலை பாதுகாக்கப் பட்டு, மீண்டும் ஏற்பட்டது.

## ஒரு மாற்று விளக்கம்

திருத்தங்கள் சிக்கலின்றி ஏற்பட்டதற்கு மற்ற எதையும்விட நெடுங்கால மூலதன இடப் பெயர்ச்சிகளே முக்கியமான காரணம். பழைய பொன் திட்டக் கோட்பாட்டின்படி இவை சமநிலைக்குக் கேடு விளைவித்ததாகவும் அதற்கு ஒரு திருத்தச் செயல்முறையை மேற் கொள்ளவேண்டி யிருந்தது என்றும் கூறப்பட்டது. இது தவறு. உண்மையில் திருத்தச் செயல்முறையில் இந்த மூலதன இடப் பெயர்ச்சிகள்தான் முக்கியமான பங்கு பெற்றதாகத் தோன்றுகிறது. பொன்னின் இடப் பெயர்ச்சிக்கு பதிலாக இவை ஏற்பட்டு, தேவைப் பட்ட நாணயமாற்றை இவை அளித்தன; இதனால் திருத்தம் மெது வாகப் படிப்படியாக ஏற்பட அவை அவகாசம் அளித்தன; சிலசமயம் இறுதிச் சீரமைப்பில் முக்கியமான பங்கையும் இவை பெற்றன. இனி இவற்றை விளக்குவோம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உலகப் பொருளா தார நிலையின் ஒரு முக்கியமான அம்சம் வளர்ச்சி பெற்ற நாடுகளின் பொருளாதாரங்கள் நெருக்கமாக இணைந்திருந்ததுதான். நிதித் துறையில்தான் இந்த ஒருமைப்பாடு மிகவும் குறிப்பிடத்தக்கதாக இருந்தது. நிதித்துறையில் லண்டன் நகரம் தனிப்பெரும் தலைமை வகித்தது; உலகெங்குமுள்ள பாங்குகளுடன் பிரிட்டிஷ் பாங்குகள் தொடர்பு உறவைக் கொண்டிருந்தன. நியூயார்க், பாரிஸ், ரோம் நகரங்களிலும், பிற கேந்திரங்களிலும் இருந்த மூலதன அங்காடிகள்

[10] பதினொரு மத்திய பாங்குகளில் ஐந்தைப் பொறுத்தவரை 'கழிவு வீதங் களும் சேமநிதி வீதங்களும் எதிரெதிர்த் திசைகளில் மாறும் பண்பு இருக்க வில்லை' (மேலே குறிப்பிட்ட நூலில் பக்கம் 31) என்று ப்ளூம்ஃபீல்டு (Bloom-field) கண்டார். தவிர (பக்கம் 50), எல்லாப் பதினொரு பாங்குகளுக்கும், பன் னாட்டுச் சொத்துகளிலும், உள்நாட்டுச் சொத்துகளிலும் மாறுதல்களின் பெரும் பான்மையானவை எதிர்த்திசையில் இருந்தனவே அன்றி ஒரே திசையில் ஏற்படுவதில்லை (பார்த்த மாறுதல்களில் 60 சத விகிதம்). அதாவது, ஒரு மத்திய பாங்கின் பன்னாட்டுச் சொத்துகள் (உதாரணமாக, பொன்னும் வெளிநாட்டு நிலுவைகளும்) குறையும்போது, அதன் உள்நாட்டுச் சொத்துகள் (அவை வைத் திருக்கும் அரசாங்கப் பத்திரங்கள்) அதிகமாகும். இது மத்திய பாங்கின் ஈடு செய்யும் விவகாரங்களைக் காட்டுகிறது. ஆனால், அதற்கு மாறாகப் பொன் திட்டக் கோட்பாடு கூறுகிறது. அதாவது, ஒரு மத்திய பாங்கின் பன்னாட்டுச் சொத்து களும் சேமநிதிகளும் குறையும்போது அது பத்திரங்களை விற்று (அதனால் தன் உள்நாட்டுச் சொத்துகளைக் குறைத்து) கடன் செலாவணியைக் குறைக்க வேண்டும்.

லண்டனுடன் நெருங்கிய தொடர்புகொண்டிருந்தன ; மூலதன நடமாட்டத்தின்மீது ஒரு தடையுமில்லை. இலாபம் பெறும் வாய்ப்புகள் மாறினல் உடனே அதற்கேற்ப மூலதன இடப் பெயர்ச்சி ஏற்பட்டது. உலக மூலதன அங்காடி என்று சொல்லக்கூடிய ஓர் அமைப்பு இருந்தது ; அது லண்டனை மையமாகக் கொண்டிருந்தது. தவிர, செலாவணியைக் குறிப்பிட்ட விகிதத்தில் 'மாற்ற எப்போதும் முடியும் என்ற நம்பிக்கை இந்த நெருக்கமான நிதித்துறை உறவுகளுக்கு ஆதரவளித்து அவற்றை மேலும் பலப்படுத்தின.

இத்தகைய அமைப்புகள் இருந்தமையால், வணிக பாங்குகளும், பிற நிதி ஸ்தாபனங்களும், பத்திர வணிகர்களும், தனி முதலீட்டாளர்களும் பன்னாட்டுப் பத்திரங்களைப் பெருமளவில் சாதாரணமாக வைத்திருந்தனர் ; முக்கியமாக, புகழ்பெற்ற பிரிட்டிஷ் கம்பெனிகள், பிரிட்டிஷ் அரசாங்கம் ஆகியவை வெளியிட்ட பத்திரங்களை அவர்கள் வைத்திருந்தனர்.[11] ஒரு நாட்டின் செலுத்துநிலையில் ஏதாவதோர் உலைவினல் பற்றுக்குறை ஏற்பட்டால் அதன் பாங்குகள் இந்தப் பன்னாட்டுச் சொத்துகளைக் காசாக்க முடியும். அவை பலமுறை அவ்வாறு காசாக்கவும் செய்தன. இப் பத்திரங்களை விற்றதனுல் பெறும் ஸ்டர்லிங், பற்றுக்குறையைச் சரிக்கட்ட உதவியது ; சேமநிதிகளை உபயோகிக்கவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. முதலிலேயே சேம நிதிகள் நஷ்டமாகி அதேசமயம் கழிவு வீதங்களும் உயர்ந்திருந்தன என்ருல், இப் பத்திரங்களை விற்பது மேலும் அதிகமாகும். ஏனெனில், பற்றுக்குறை நாட்டில் முதலீடு செய்வது இப்போது பிறநாடுகளைவிட இலாபகரமாக உள்ளது. வட்டி வீதங்களில் போதுமான வித்தியாசம் ஒரு முறை ஏற்பட்டுவிட்டால், நெடுங்காலச் சொத்துகளின் இவ் இடப் பெயர்ச்சியோடு குறுகியகால மூலதன இடப் பெயர்ச்சியும் நிச்சயமாகச் சேர்ந்துகொள்ளும்.

இவ்வாறு பன்னாட்டுச் சேமநிதி இடப் பெயர்ச்சிகளுக்கு பதிலாக பற்றுக்குறையை ஈடுசெய்ய மூலதன இடப் பெயர்ச்சிகள் ஏற்பட்டன ; இதனுல், கடன்களைக் கட்டுப்படுத்துவதற்கான அவசியம் குறைந்தது. அடிப்படைத் திருத்தங்கள் ஏற்பட மேலும் அவகாசம் கிடைத்தது. சில சமயங்களில், ஏற்பட்ட உலைவு மிகச் சிறிய அளவில் இருக்கும்.

[11] வணிக பாங்குகளிடம் இத்தகைய பத்திரங்கள் எவ்வளவு அதிகமாக இருந்தன என்பது சான்றில்லாமையால் தெரியவில்லை. நிதிக் கேந்திரங்களின் பிற உறுப்பினர்கள் இத்தகைய சொத்துகளை நிறைய வைத்திருந்தனர் என்று தெரிகிறது. பன்னாட்டுப் பத்திர விவகாரங்களும் நிறைய நடந்ததாகத் தெரிகிறது. இங்குக் கூறப்பட்டது நாமாகக் கொண்டதுதான். ஆனல், இது ஓரளவுக்குத்தான் அப்படி. ஏனெனில், நிதித் துறையின் சில உறுப்பினர்கள் பலமுறை பத்திரங்களை ரொக்கமாக்கியது உண்டு.

அப்போது அதற்கு ஈடான மற்றுமோர் உலைவு ஏற்பட்டு மேலும் திருத்தத்தை அனுவசியமாகச் செய்யக்கூடும். உலைவு மிகவும் அதிகமாக இருந்தால், கடன்கள், விலைகள், வருமானங்கள்மீது சாதாரண அளவுக்குத் தொடர்ந்து அழுத்தத்தைப் பிரயோகித்தால் சில காலத்தில் படிப்படியாகச் சமநிலைக் கேடு சரியாகிவிடும். உலைவின் ஒரு முக்கிய மான காரணமாக இருக்கக்கூடியது நாட்டுக்கு நாடு வெவ்வேறு கடன் கொள்கைகளைக் கடைப்பிடிப்பது. பொன் நிதிகளைப் பாதுகாப்பது, செலாவணியைப் பொன்னுக மாற்றுவதைத் தவருமல் செய்வது ஆகிய வற்றையே இறுதிக் குறிக்கோளாகக் கருத்தில் கொண்டு மத்திய பாங்குகள் செயலாற்றி வந்தவரை, இந்தக் காரணத்தினுல் உலைவு ஏற்பட முடியாது என்பது உண்மையே.[12] ஏனெனில், இதற்காகச் செய்யப்பட்ட கடன் செலாவணிக் கொள்கை சீராக்குமே தவிர, சீர்குலைக்காது.

இறுதியாக, மூலதன இடப் பெயர்ச்சிகள் சீர்திருத்தம் ஏற்பட அவகாசம் அளிப்பதோடு மட்டுமன்றி, முக்கியமான பலவகை உலைவு கள் விஷயத்தில் திருத்தம் செய்வதில் முக்கிய பங்கைத் தாமே ஏற்றன. இந்த உலைவுகளுக்கு உதாரணமாக நாடுகளின் வளர்ச்சி வீதங்களில் வித்தியாசத்தையும் வணிகச் சூழல் ஏற்படும் காலம் நாட்டுக்கு நாடு வித்தியாசப்படுவதையும் கூறலாம். உதாரணமாக, 1900-க்கும் 1913-க்கும் இடையே கனடாவில் வேகமான பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டது; முதலீடும் வருமானமும் வேகமாக அதிகரித்தன. இதனுல், இறக்குமதிகள் நிறைய உயர்ந்தன. இதனுல், பொன் வெளியே போவதற்கு பதிலாக, முதலீட்டு வாய்ப்புகள் கவர்ச்சிகரமாக இருப்ப தைக் கண்டு பிரிட்டிஷ் முதலீட்டுக்காரரும் அமெரிக்கர்களும் கனடா வின் சுரங்கங்களிலும் இருப்புப் பாதைகளிலும் தொழிற்சாலைகளிலும் மூலதனத்தைக் கொண்டுவந்து குவித்தனர். இம் மூலதன இடப் பெயர்ச்சி இல்லாவிட்டால் தேவைப்படக்கூடிய திருத்தமானது, அது இருப்பதனுல் தேவையில்லாமல் போயிற்று. கனடாவின் வளரும் இறக்குமதிகளுக்கு வேண்டிய நிதி ஏற்பாட்டை வெளிநாட்டு மூலதன நிதிகள் இடைவிடாது வந்து செய்தன. கனடா சிறிதளவு பொன்னையும் இறக்குமதி செய்தது. கடன் செலாவணியை அதிக மாக்குவதற்கு ஆதரவாக அது இறக்குமதி செய்யப்பட்டது.[13]

12 பொன்னின் இடப் பெயர்ச்சிகளுக்கும் கழிவுவீத மாறுதல்களுக்கும் இருந்த தொடர்பு முன்னர் எண்ணப்பட்டதைவிடக் குறைந்த நெருக்கத்தையே உடையதாக இருப்பினும், மத்திய பாங்குகள் சேமநிதிகளை மிக ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொண்டன என்றும், செலாவணி மாற்றுரிமைக்கு ஆபத்து வருவதுபோலிருந்தால் உடனே அதைத் தடுக்கமுற்பட்டன என்றும் ப்ளும்ஃபீல்டு (Bloomfield) சுட்டிக் காட்டுகிருர். (அதே நூல், பக்கம் 32.)

13 கனடாவின் இந்த அனுபவம், ஜான் ஸ்டவலின் (John Stovel) Canada in the World Economy என்ற ஆராய்ச்சியை அடிப்படையாகக் கொண்டது. முக்கியமாகப் பதினுருவது அத்தியாயத்தைப் பார்க்கவும்.

மூலதனம் பெரும் அளவுக்கு இடப் பெயர்ச்சி ஆனதோடு, 1914-க்குப் பின் தொழிலாளர்களின் பன்னாட்டு இடப் பெயர்ச்சியும் மேலும் அதிகமாயிற்று. வெளிநாட்டார் வந்து குடியேறுவதன்மீது தடைகள் குறைவாக இருந்தன. உண்மையில், உலகின் வளரும் பகுதிகள் வெளிநாட்டுக் குடியேற்றக்காரரை வரவேற்றன. அவர்களின் இடப் பெயர்ச்சி வளரும் பிராந்தியங்களின் முன்னேற்றத்துக்குக் காரணமாக இருந்தன. இதனால், மூலதனம் அங்கெல்லாம் போகவும் அது தன் திருத்தச் செயலைச் செய்யவும் வழியுண்டாயிற்று. பிறவற்றுடன் ஒப்பிடும்போது சுருக்கத்தால் பாதிக்கப்பட்ட நாடுகளிலிருந்து தொழிலாளர்கள் புலம் பெயர்ந்ததால் வேலையின்மை குறைந்தது; தொழிலாளியின் உற்பத்தித் திறன் உயர்ந்தது; இறக்குமதிகளின் தேவை குறைந்தது; இதனால் உள்நாட்டிலும் வெளிநாட்டோடும் சமநிலை ஏற்பட வழியுண்டாயிற்று.

### 1914-க்குப் பின் பொன் திட்டம்

முதல் உலகப் போருக்குப் பின் இரண்டு சுருக்கமான காலங்களில் தான் விரிவான பொன் திட்டம் இருந்தது; 1925–31-லும், 1958-க்குப் பின்னும், இவ்விரு காலங்களிலும் 1914-க்கு முன் பொன் திட்டம் வழ வழப்பாகச் செயலாற்றுவதற்குக் காரணமாக இருக்க அம்சங்கள் எதுவும் இருக்கவில்லை. நிதி அங்காடிகள் அவ்வளவு நெருங்கிய தொடர்பைக் கொண்டிருக்கவில்லை. லண்டனைவிட நியூயார்க் பெரிய நிதிக்கேந்திரம் ஆகிவிட்டது. பாரிஸ், ரோம், பேஸில் (Basle), ஃபிராங்க்ஃபர்ட் (Frankfurt), டோக்கியோ ஆகியவை முன்னைவிடப் பன்னாட்டு நிதித்துறையில் முக்கியமானவையாகவும் சுதந்திரமான பங்கு கொண்டவையாகவும் இருக்கின்றன. 1914-க்குப் பின் தொடர்ந்து மூலதன இடப் பெயர்ச்சிகள்மீது அரசாங்கக் கட்டுப்பாடு இருந்து வருகிறது. அவற்றின் அளவு பெரிதும் குறைந்துவிட்டாலும் அவை இன்னமும் இருக்கின்றன. மூலதனப் போக்குக்கு அதிகாரபூர்வமற்ற தடைகளும் ஏற்பட்டுள்ளன. ஆனால், அவை படிப்படியாக நீக்கப்பட்டு வருகின்றன. குறித்தல் வசதிகள் (marking facilities) போதாதது. அறியாமை, மேற்பார்வை நிறுவனங்களின் கட்டுப்பாடுகள், உள் நாட்டையே ஆதரிக்கவேண்டுமென்ற மனப்பான்மை ஆகியவை இத் தடைகள். பெரும் அளவுக்குப் பன்னாட்டு முதலீடுகள் நேரிடை முதலீடுகள் ஆகும். எதில் முதலீடு செய்யப்படுகிறதோ அதன்மீது நிர்வாக உரிமையை அம் முதலீடு தருகிறது. அவற்றுக்காகமட்டும் வைக்கப்பட்டிருக்கும் பத்திரங்களான போர்ட்ஃபோலியோ (portfolio) முதலீடுகளின் அளவு குறைவே.

தொழிலாளர்களின் பன்னாட்டு இடப்பெயர்ச்சி, குடியேற்றக் கட்டுப்பாடுகள் தீவிரமாக்கப்பட்டதால் குறைந்துவிட்டது. நாணயமாற்று

வீதங்களும் முன்போல நிலையாக இருப்பதில்லை. 1914-க்குப் பின் ஐம்பது ஆண்டுகளில் வீதங்கள் மிகவும் மாறிய பல காலங்களும் நாணய மதிப்பைக் குறைத்த உதாரணங்கள் பலவும் இருந்தன.

1914-க்குமுன் பொன் திட்டம் மென்மையான முறையில் செயலாற்றத் தேவையான நிபந்தனைகள் இல்லாமையால், பழைய பொன் திட்டக் கோட்பாடு எவ்வாறு அது செயலாற்றியதாகக் கூறியதோ அதேமாதிரி கடுமையான முறையில்தான், அது அனுமதிக்கப்பட்டால், அது செயலாற்ற முடியும். பழைய பொன் திட்டக் கோட்பாடு பொன் திட்டம் 1914-க்குப் பின் செயலாற்றியதற்குத்தான் நல்ல விளக்கமே தவிர, அது கூறுவதுபோல 1914-க்கு முன்னிருந்த பொன் திட்டத்தின் செயலாற்றத்துக்கு விளக்கமாகாது.

இருபதாம் நூற்றாண்டின் சூழ்நிலையில் இச்செயல்முறை ஏற்றது தானா என்பதுபற்றி பலத்த சந்தேகங்கள் ஏற்பட்டன. ஏனெனில், இருபதாம் நூற்றாண்டின் சூழ்நிலையில் முதலில் விலைகளை மாறாது வைப்பது நாடுகளின் முக்கியக் குறிக்கோளாயிற்று. பின்னர் முழு வேலைநிலை குறிக்கோளாயிற்று. சமீப காலத்தில் திருப்திகரமான பொருளாதார வளர்ச்சி நாட்டுக் கொள்கையின் குறிக்கோளாயிற்று. பற்றுக்குறையைப் பணச் சுருக்கத்தாலும் உபரியைப் பண வீக்கத்தாலும் திருத்தும் ஒரு பன்னாட்டுத் திருத்தச் செயல்முறை இக் குறிக்கோள்கள் எதனுடனும் ஒத்துப் போகாது.

இதன் விளைவாக மீண்டும் ஏற்பட்ட பொன் திட்டத்தின் செயல்முறையில் சட்டென அடிக்கடி குறுக்கீடுகள் ஏற்பட்டன. பன்னாட்டுச் சேமநிதிகள் நஷ்டமாகும்போது கடன் செலாவணியைக் குறைக்கும் கொள்கையைக் கடைப்பிடிப்பதைவிட இந்த நஷ்டத்தைப் பயனற்றதாக்குவதற்கு முன்னைவிட அதிகமான அளவுக்கு மத்திய பாங்குகள் முயன்றன. உபரிநாட்டில் விலைவாசிகளை நிலையாக வைத்திருக்கும் குறிக்கோள் காரணமாகப் பொன் உள்ளே வந்தால் அதைச் செயலற்றதாக்க வேண்டியிருக்கிறது. சேமநிதி நஷ்டத்தையும் லாபத்தையும் ஈடுசெய்துவிடுவதால், திருத்தச் செயல்முறை தடைப்படுகிறது. அதனுடன், செலுத்துநிலைப் பற்றுக்குறையுள்ள நாடு மேலும் ஒருபடி சென்று முழு வேலைநிலைக் குறிக்கோளை முன்னிட்டுக் கடன் செலாவணியையும் அரசாங்கச் செலவுகளையும் அதிகமாக்கினால் திருத்தச் செயல்முறை அடியோடு எதிர்க்கப்பட்டுப் பன்னாட்டுச் செலுத்தல்களின் பற்றுக்குறை இடைவிடாமல் இருக்க வழி செய்கிறது.[14]

[14] 1958–62-ல் அமெரிக்கா இத் திசையில் எச்சரிக்கையோடு செய்த சில முயற்சிகள்தான் தொடர்ந்து பெரிய செலுத்துநிலைப் பற்றுக்குறை இருப்பதற்கு ஒரு காரணமாக இருக்கக்கூடும் என்று தோன்றுகிறது.

## முடிவு

ஒரு திறமையான பன்னாட்டுத் திருத்த இயக்கத்தைப் பொன் திட்டம் அளிக்கமுடியும் என்பதில் ஐயம் இல்லை. 1914-க்கு முன்னிருந்தது போலச் சூழ்நிலை சாதகமாக இருப்பின் இவ்வியக்கம் முழுவழுப்பாக—விலைகள், வருமானங்கள், வேலைகள் ஆகியவற்றை அதிகம் உலைக்காமல்—செயலாற்ற முடியும். (விலைகளும் கூலிகளும் நிறைய மாறக் கூடியவையாக இருப்பினும் இவ்வியக்கம் வழுவழுப்பாகச் செயலாற்ற முடியும். ஆனால், அவை அவ்வாறு இல்லை.) இவ்வாறு சாதகமான சூழ்நிலை இல்லாவிடினும் பன்னாட்டுப் பற்றுக்குறைகளையும் உபரிகளையும் அது நீக்கமுடியும்; ஆனால், அதற்குள் வருமானங்களும் விலைகளும் நிறைய மாறும். அதுவும், செலுத்துநிலைத் தேவைகள், நாட்டுப் பண, நிதிக் கொள்கைகளைவிட முக்கியமாகக் கருதப்பட்டால்தான், பொன் திட்ட இயக்கம் சமநிலைக் கேட்டைச் சரி செய்யும். அப்படி இல்லாவிட்டால் உள்ள சமநிலைக் கேடு தொடர்ந்து இருக்குமேயன்றி நீக்கப்படாது.

பொன் திட்டத்தின்மீது தொடர்ந்து உள்ள பற்றுறுதி மேலை நாடுகளுக்கு இடைவிடாது ஓர் இருதலைக்கொள்ளிப் பிரச்சினையாக இருக்கிறது. நாடுகள் ஒன்றேடொன்று சார்ந்து, பண, நிதிக் கொள்கைகளைக் கடைப்பிடித்ததால்தான் செயலாற்றக்கூடிய ஒரு பன்னாட்டுச் செலாவணி முறையை அவை தேர்ந்தெடுத்துள்ளன. அதே சமயம் இக் கொள்கைகளை அவ்வந்நாட்டின் விருப்பப்படி கடைப்பிடிக்கச் சுதந்திரம் வேண்டும் என்றும் வற்புறுத்துகின்றன. அப்படியானால், இந்தக் கேள்வி எழுகிறது. முழு வேலைநிலை, பொருளாதார வளர்ச்சி, விலைவாசி மாருநிலை போன்ற முக்கியமான குறிக்கோள்களைக் கடைப்பிடிப்பதற்கு ஒத்த பன்னாட்டுச் செலாவணி முறை எது உள்ளது? இதற்கான மாற்று வழிகள் சிலவற்றை நாம் பார்ப்போம். சென்ற போருக்குப் பின் ஒரு நடுநிலையான தீர்வு காண என்ன முயற்சி செய்யப்பட்டது என்பதையும் ஆராய்வோம். பின்னர் (27ஆம் அத்தியாயத்தில்) பன்னாட்டுச் செலாவணிமுறைச் சீர்திருத்தம்பற்றி இப்போது வழங்கும் முக்கியமான யோசனைகளைப் பார்ப்போம்.

## பொன் திட்டத்தின்கீழ் மூலதன மாற்றுகைகள்

பொருளாதார நூல்களில் பன்னாட்டு மூலதனமாற்றுகைகள் முக்கியமாகக் கவனிக்கப்பட்டுள்ளதால், நம் வழியை மாற்றி இவற்றைப் பற்றிச் சிறிது பார்ப்போம்.

**கோட்பாட்டில் :** பழைய பொன் திட்டத் திறனாய்வின்படி, பிற உலைவு வகைகள் செய்வதுபோலத்தான் ஒரு நாட்டின் செலுத்து நிலையைப் பன்னாட்டு மூலதன மாற்றுகை பாதிக்கிறது. திடீரென

நிறைய வெளிநாட்டுக்குக் கடன்கள் கொடுக்கப்பட்டாலோ, ஒரு கப்பமோ, நஷ்ட ஈட்டுச் செலுத்தலோ கட்டப்பட்டாலோ, ஒரு நாடு செய்யவேண்டிய செலுத்தல்கள், அதன் இறக்குமதிகள் அதிகமானால் ஏற்படுவதுபோலவே அதிகரிக்கின்றன. இப் புதுச் செலுத்தல் களுக்கான பணம் எங்கிருந்து வந்தது என்பதைப் பொறுத்தவைதான் இம் மூலதன இடப் பெயர்ச்சி தொடங்கியபின் ஏற்படும் விளைவுகள்.

இதற்கான பணம் உள்நாட்டு முதலீட்டுக்குப் போயிருக்கக்கூடிய சேமிப்புகளினின்று கிடைக்கிறது என்று வைத்துக்கொள்வோம். உள்நாட்டு முதலீடு இதனால் குறைந்ததால் அதைப்போலச் சில மடங்கு வருமானம் சுருங்கும். வெளிநாட்டுக் கடன் காரணமாக வெளிநாட்டு முதலீடு அதிகமானதால் அங்கு அதைப்போலச் சில மடங்கு வருமானம் உயரும். கடன் தரும் நாட்டின் இறக்குமதிகள் குறையும். அதன் ஏற்றுமதிகள் அதிகமாகும். கடனில் பெரும்பகுதி பொருள்களாக அனுப்பப்படுகிறது. வருமான மாறுதல்களோடு ஏற்படும் விலை மாறு தல்களும் அதே விளைவை உண்டாக்குகின்றன. முதலில் ஏற்பட்ட சேமநிதி நஷ்டத்தினால் கடன் செலாவணி சுருங்கினால், முதலீடு குறைந்ததால் ஆரம்பித்துவைக்கப்பட்ட வருமானம், விலைகளில் ஏற் படும் முதல் வீழ்ச்சியோடு, இரண்டாவது முறை வருமானத்திலும் விலைகளிலும் ஒரு வீழ்ச்சி ஏற்படுகிறது. கடன் முழுவதும், இறக்கு மதிகளைவிட ஏற்றுமதிகள் அதிகமாகிய வித்தியாசத்தின் உருவத்தில் மாற்றப்படக்கூடும். அதாவது, ஏற்றுமதிகள் உபரியாக உள்ளதனால் கிடைத்த அன்னியச் செலாவணியை வெளிநாட்டுப் பத்திரங்களை வாங்குபவர்கள் வாங்கி, கடன் வாங்கும் நாட்டில் அவற்றை விற்பவர் களிடம் அளிப்பார்கள்.

**நடைமுறையில் :** இதற்குமுன் கூறியதில் அனுமானித்ததுபோல நெடுங்காலப் பன்னாட்டு மூலதன இடப் பெயர்ச்சிகள் சாதாரணமாகச் செலுத்துநிலை உலைவுக்குக் காரணமானவை அல்ல. அதற்கு மாறாக, செலுத்துநிலையின் உலைவின் விளைவு அவை. செலுத்துநிலையில் உபரி யுள்ள ஒரு நாட்டில் பொன்னும் அன்னியச் செலாவணியும் ஆன அதன் சேமநிதிகள் உயரும். உபரி என்றால், அந் நாட்டின் உள்நாட்டு முத லீட்டைவிட அதன் சேமிப்புகள் அதிகம் என்று ஆகிறது ; இந்த வித்தி யாசம் பொன்னிலும் வெளிநாட்டு நிறுவைகளிலும் முதலீடு செய்யப்படு கிறது. இம் முதலீடு அதிகமானால் அந் நாட்டு பாங்குகளின் நீர்மை (liquidity) (அதாவது ரொக்கத்தின் இருப்பு) அதிகமாகிறது. இதனால் குறுகியகால வட்டி விகிதங்கள் குறையும். முதலீடு செய்வோர் தம்மிடம் உபரியாக உள்ள பணத்தை வெளிநாடுகளில் குறுகியகாலச் சொத்து களை வாங்குவதில் செலவழித்தால் அவர்களுடைய வருமானம் அதிக மாகும். செலுத்துநிலை உபரி தொடர்ந்து இருந்தால், அந் நாட்டில்

நெடுங்காலப் பத்திரங்களின் லாப வீதமும் குறையும். எனவே, முதலீடு செய்வோர் தம் நிதிகளுக்கு வேறு முதலீடுகளை வெளி நாடுகளில் நாடுவர். ஒரு செலுத்துநிலை உபரியில் உள்நாட்டு முத லீட்டைவிட அதிகமான சேமிப்பின் முதலீடாகத் தொடங்கியது படிப் படியாக வெளிநாட்டு நெடுங்கால முதலீடாக மாறிவிட்டது. (23ஆம் அத்தியாயம் ' உலகப் போருக்குமுன் பொன் திட்டத்தின் அம்சங்கள் ' பகுதியைப் பார்க்க.)

வணிகச் சுழலின் மீட்சிப் பகுதியில் (recovery phase), ஒரு நாட்டின் பொருளாதார நிலை சீராவது பிற நாடுகள் சீராகும் காலத் துக்குச் சற்றுக் கழித்து ஏற்படும்போது, அந் நாட்டின் செலுத்துநிலை உபரி ஏற்படும் அதேசமயத்தில் வெளிநாடுகளில் நெடுங்கால முதலீடு செய்வது இலாபகரமாக இருக்கக்கூடிய நிலையும் இருக்கக்கூடும். ஏனெனில், மந்தத்தினின்று மீட்சி ஏற்படுவதில் பின்தங்கல் (lag) இருக்கிறது என்றால், பிற நாடுகளில் பொருளாதார விரிவின் (expansion) வேகம் அதிகம் என்று பொருள் ; இதன் விளைவாகப் பின்தங்கிய நாட்டுக்குச் செலுத்துநிலை உபரியோடு வெளிநாட்டில் முதலீட்டு வாய்ப்புகள் மேலும் நல்லவையாக அமைகின்றன.

உண்மையில், உள்நாட்டு முதலீட்டைப் போலவே, வெளிநாட்டு முதலீடும் சுழலைப்போன்ற அமைப்பில் ஏறியும் தாழ்ந்தும் வருகிறது என்பதைக் கடந்தகாலப் புள்ளிவிவரங்கள் கூறுகின்றன. இம் முதலீடு, மீட்சிக் காலத்தில் அதிகமாகத் தொடங்குகிறது ; வளமைக் காலத்தில் (prosperity) அது உச்சநிலையை அடைகிறது ; பின் னிறக்கக் காலத்திலும் (recession) மந்தத்திலும் பெரும் அளவு குறைந்து ஒரேயடியாக நின்றும் விடுகிறது. உள்நாட்டு முதலீடும் வெளிநாட்டு முதலீடும் ஒன்றாக வளருகின்றன. உள்நாட்டு முதலீட் டின் வளர்ச்சியை பாதிக்கும் போட்டியாளன் அல்லன் வெளிநாட்டு முதலீடு ; அது உள்நாட்டு முதலீட்டின் தோழன். பொன் திட்டத்தின் கீழ் ஏற்படும் மூலதன மாற்றுகைபற்றிய பழைய ஆராய்ச்சி கூறுவது போல, கடன் அளிக்கும் நாடு வேலையின்மையாலும் மந்தத்தினாலும் வருந்த வேண்டியதில்லை. கடன் வாங்கும் நாட்டில் ஏற்படுவது போலவே தொழில் நடவடிக்கைகள் மேலும் இந் நாட்டிலும் பெருகக் கூடும்.

மூலதனம் பெறும் நாட்டில் பொருளாதார விரிவின் வேகம் மூல தனம் தரும் நாட்டின் விரிவைவிட அதிகமாக இருக்கிறது என்று மட்டும் எடுத்துக்கொண்டால் முதலீடு செய்யும் நாட்டின் செலுத்து நிலையில் முதலில் ஏற்பட்ட உபரி விரைவில் மேலும் அதிகரிக்கக்கூடும். இதனால், நிகர வெளிநாட்டு முதலீட்டின் அளவு அதிகரிக்கும். கடன்

வாங்குபவரின் கையில் அதிகமாகியுள்ள தொகையிலிருந்து மூலதனப் பொருள் இறக்குமதிகளைச் செய்யலாம். அல்லது ஜட சொத்துகள் மீது முதலீடு செய்யலாம். அப்படியாயின் வருமானமும் அதனுடன் இறக்குமதிகளும் அதிகமாகும். இவ்விரண்டில் எப்படி ஏற்பட்டாலும் கடன் அளிக்கும் அதாவது முதலீடு செய்யும் நாட்டின் ஏற்றுமதிகள் உயரும். அதன் செலுத்துநிலை உபரி அதிகரிக்கும். அதனால், அதன் நிகர மூலதன மாற்றுகை அதிகரிக்கும்.

சமீப காலத்தில் மேலும்மேலும் நடப்பதுபோல நெடுங்காலப் பன்னாட்டுக் கடன்கள் முன்னேற்றமடைந்த பணக்கார நாடுகளிட மிருந்து, அவற்றைவிட வளர்ச்சி குறைந்த ஏழை நாடுகளுக்குத் தரப் படுகின்றன. அப்படியானால் எந்த மாற்றுகை இயக்கமும் தேவைப் படவில்லை. வளர்ச்சி குன்றிய நாடுகள் தம் பொருளாதார முன்னேற்றத் திட்டங்களுக்காக மூலதனப் பொருள்களுக்கும் பிற அத்தியாவசியமான இறக்குமதிகளுக்கும் மிகவும் ஏங்குகின்றன. அந்தப் பெரிய இறக்கு மதிப் பசியின் காரணமாக கடன்கள் கிடைத்தவுடன் அவற்றைச் செலவிட்டுவிடுகின்றன.[15] உண்மையில் இப்போதுள்ள முக்கியமான அபாயம் என்னவென்றால், தம் உள்நாட்டுச் சேமிப்பு, வெளிநாட்டு உதவி, கடன்கள் இவற்றையெல்லாம்விட அதிகமான தொகைகளைத் தம் வளர்ச்சிக்காக அவை முதலீடு செய்யுமானால், உள்நாட்டில் பண வீக்கமும் செலுத்துநிலைப் பற்றுக்குறைகளும் அதன் விளைவாக ஏற் படக்கூடும். கடன் கொடுக்கும் நாட்டுக்குச் சேமநிதிகளின் நஷ்டம் ஏற்படாது; அதற்கு மாறாகக் கடன் வாங்கும் நாட்டுக்கு அவ்வாறு ஏற்படக்கூடியதுதான் மேலும் சாத்தியமாகும்.

கடன் கொடுக்கும் நாடு, வாங்கும் நாடு இரண்டிலும் ஒரே சமயத் தில் பொருளாதார விரிவு ஏற்படுவதாலோ அல்லது கடன் வாங்கும் நாட்டின் செலவு செய்யும் பழக்கத்தாலோ பன்னாட்டுக் கடன்கள் கொடுப்பது தளர்ச்சி அடையவில்லையானால், கோட்பாட்டில் விவரித்த மாற்றுகைச் செயல்முறை தேவையாக இருக்கும். சில சமயம் 1920-ல் ஜெர்மானிய நஷ்டஈட்டுச் செலுத்துகைகள் விஷயத்தில் ஆனதுபோல

[15]கடன் வாங்கும் நாடு அதன் கடன் தொகையை எங்குவேண்டுமாயினும் செலவழிக்க முடியுமானால், [அதாவது அக் கடன் 'பிணைப்பதற்காக' (untied) இருந்தால்] கடன் வாங்கிய நாட்டுக்கு இறக்குமதிகளை அளிக்கும் பிற நாடுகளின் கையில் கடன் கொடுத்த நாடு அளித்த தொகைகள் போய்ச் சேரலாம். இவ்வாறு வந்த பணத்தில் ஒரு பகுதியை இந் நாடுகள் கடன் கொடுத்த நாட்டிலிருந்து இறக்கு மதிகளை வாங்காமல் (அந் நாட்டில் நிலுவைகளாகவோ பொன்னாகவோ) தாமே வைத் திருக்க முடிவு செய்தால், அந்த அளவுக்குக் கடன் கொடுத்த நாடு தான் எண்ணிய தொகைக்கு நிகரப் பன்னாட்டு மூலதன மாற்றுகை செய்வதில் தவறிவிட்டது எனலாம்.

இச் செயல்முறையைத் துவக்கி வைப்பது கடினமாக இருக்கலாம் (23ஆவது அத்தியாயத்தைப் பார்க்க). அல்லது, 1958-க்குப் பின் அமெரிக்காவில் ஏற்பட்டதுபோல, ஏற்கெனவே உள்ள செலுத்துநிலைச் சுமையை மூலதன ஏற்றுமதி மேலும் அதிகமாக்கலாம். அல்லது மூலதன வெளிப்போக்கு, அந் நாட்டின் செலுத்துநிலையால் தாங்கக் கூடிய அளவைவிட அதிகமாக இருக்கலாம்; அதனால், நாணயமாற்றுக் கட்டுப்பாடுகள் புகுத்தப்படலாம். ஆனால், மாற்றுகைச் செயல்முறை இயங்க அனுமதிக்கப்பட்டால், பழைய கோட்பாடு விவரித்தவாறு பெருமளவில் பன்னாட்டு மூலதன மாற்றுகை ஏற்படக்கூடும்.

(பார்வைக்குரிய நூல்களின் பட்டியல், 20ஆவது அத்தியாயத்தின் முடிவில் காண்க.)

# 20. செலுத்துநிலைத் திருத்தம்: மேலும் சில முறைகள்

## தன்னியலான செலாவணிகளும் தடையின்றி மாறக்கூடிய நாணயமாற்று வீதங்களும் உள்ள சூழ்நிலையில் திருத்தம்

**தன்னியலான செலாவணி (Independent Currency) என்றால் என்ன?**

நாணயமாற்று வீதங்கள் மாறுதலையாக இருக்கும்போது ஒரு நாட்டின் செலுத்துநிலைக்கு உலைவுகள் ஏற்பட்டால் அவற்றின் விளைவாக ஈடுகட்டும் நிதி ஏற்பாடுகள் செய்யவேண்டும் என்பதைப் பார்த்தோம். ஒரு பற்றுக்குறைக்கு ஈடாக எவ்விதமாயினும் பணம் செலுத்த வேண்டும்; சாதாரணமாக அந் நாட்டின் பன்னாட்டுச் சேமநிதிகளைக் குறைப்பதன்மூலம் இது செய்யப்படுகிறது; பொன் வெளியே போகிறது அல்லது வேறு ஏதாவது ஒருவகை ஈடுகட்டும் நிதி ஏற்பாடு செய்யப்படுகிறது. அதை ஈடு செய்யுமாறு மூலதனம் நாட்டுக்குள் வராமலும் செலாவணி நிர்வாகத்தினர் வேண்டுமென்றே நடவடிக்கைகள் எடுக்காமலும் இருந்தால், ஏற்றுமதியாளர்கள் விற்கும் அன்னியச் செலாவணியைவிட இறக்குமதியாளர்கள் வாங்கும் அன்னியச் செலாவணி எவ்வளவு அதிகமாக இருக்கிறதோ அவ்வளவுக்குப் பணத்தின் அளிப்புக் குறைகிறது.

ஆனால், நாணயமாற்று வீதங்கள் தடையின்றி மாறிக்கொண்டிருக்க, அவற்றை ஒருநிலைப்படுத்தச் செலாவணி அதிகாரிகள் ஒரு முயற்சியும் எடுக்காமலிருந்தால், செலாவணிகள் தன்னியலானவை. ஒரு நாட்டின் செலுத்துநிலையில் உலைவுகள் ஏற்பட்டால் அவை பணத்தின் அளிப்பை நேரிடையாக பாதிப்பதில்லை. இதை ஓர் எடுத்துக்காட்டால் விளக்கலாம்.

ஜெர்மனியை நம் உதாரண நாடாகக் கொள்வோம். ஜெர்மனிக்கும் உலகின் பிற பாகங்களுக்கும் இடையே உள்ள நாணயமாற்று விவகாரங்களை மார்க்கு / டாலர் நாணயமாற்று வீதம் குறிக்கட்டும். இவ் விவகாரங்களில் மூலதன இடப் பெயர்ச்சியைச் சேர்க்கவேண்டும். அவற்றுள் பொருள்கள், பணிகளின் வியாபாரம்மட்டுமே அடங்கியுள்ளது. ஒரு சமநிலை இடத்தினின்று தொடங்குவோம். நாணய மாற்றின் தேவையும் அளிப்பும் ($D_m$, $S_x$ ஆக) 20·1 எண்ணுள்ள படத்தில் காட்டப்பட்டுள்ளன. பன்னாட்டு வருவாய்களும் செலுத்தல்களும் டாலருக்கு 4 மார்க்குகள் வீதத்தில் சமநிலையில் உள்ளன. இவ் விகிதத்தில், டாலர் கணக்கில் சொன்னாலும் சரி, மார்க்குகளில் சொன்னாலும் சரி, ஏற்றுமதிகளின் மதிப்பு இறக்குமதிகளின் மதிப்புக்குச் சமம். (ஒவ்வொன்றின் டாலர் மதிப்பும் $ 100 மிலியன்; மார்க்கு மதிப்பு 4×100 அதாவது 400 மிலியன் மார்க்குகள்.)

நாம் இதற்கு முன் எடுத்த உதாரணத்தில் உள்ளதுபோல ஏதோ ஒரு காரணத்தால் அந் நாட்டின் ஏற்றுமதிகள் குறைந்துவிடுவதாகக் கொள்வோம். அன்னியச் செலவாணியின் அளிப்பு இடப்பக்கம் நகர்ந்து, புதிய $S_{x1}$ கோடாகிறது. வேறு எதுவும் ஏற்படவில்லையானால், ஏற்றுமதிகளின் மதிப்பு (டாலர்களில்) $ 80 மிலியனுக்குக் குறையும். இறக்குமதிகள் $ 100 மிலியனில் மாறாமல் இருக்கும். செலுத்துநிலையில் $ 20 மிலியனுக்கு இடைவெளி அதாவது பற்றுக்குறை தோன்றிவிடும்.

### மதிப்பிறக்கத்தின் (Depreciation)மூலம் திருத்தம்

நாணயமாற்று வீதம் மாறுவதற்குத் தடங்கல் ஒன்றும் இல்லை. எனவே, அது 5 மார்க்குகள்/$ ஆக உயரும். இந்த வீதத்தில் தேவைப் பட்டியலும் புது அளிப்புப் பட்டியலும் சமநிலையில் இருக்கும். இந்தப் புது வீதத்தில், இறக்குமதிகளின் உள்நாட்டு விலை முந்தி இருந்ததை விட இப்போது அதிகம். எனவே, டாலர்களை வாங்குவோர் சிலர் அங்காடியிலிருந்து விலகுகிறார்கள்—தேவைக் கோட்டில் *a*-யிலிருந்து c-க்குத் தேவை நகருகிறது. அதேபோல, வெளிநாட்டினருக்கு ஜெர்மனியின் ஏற்றுமதிகள் இப்போது முன்னைவிட மலிவாகின்றன. எனவே, ஏற்றுமதிகளின் நிலை ஓரளவுக்கு அபிவிருத்தி அடையும்; புது அளிப்புக் கோட்டில் *b*-யிலிருந்து *c*-க்கு நகருவதுமூலம் இது காட்டப்படுகிறது. 5 மார்க்குகள்/$ நாணயமாற்று வீதத்தில் ($90 மிலியன் அளவில்) ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் சமமாக இருக்கின்றன. செலுத்துநிலையில் ஏற்படக்கூடிய பற்றுக்குறை இப்போது ஏற்படாமல் தடுக்கப்படுகிறது. செலுத்துநிலையின் உலைவைத் திருத்தும் வேலை முழுவதையும், நாணயமாற்று வீதத்தில் ஏற்படும் மாறுதல், அதாவது செலாவணி மதிப்பிறக்கம் செய்துவிடுகிறது. 18ஆவது அத்தியாயத்தில்




படம் 20·1. மாறும் நாணயமாற்று வீதங்களோடு திருத்தம் : நெகிழ்ச்சியற்ற தேவை.

பார்த்ததுபோலச் செலாவணி மதிப்பிறக்கம் எந்த அளவுக்கு ஏற்படு கிறது என்பது அன்னியச் செலாவணியின் தேவை, அளிப்பு ஆகிய வற்றின் நெகிழ்ச்சிகளைப் பொறுத்திருக்கும்.

மதிப்பிறக்கம் ஏற்பட்டு டாலருக்கு 5 மார்க்கு என்ற வீதத்தில் நாணயமாற்றை ஜெர்மனி வாங்கும் அளவும் விற்கும் அளவும் சமமாக இருக்கும்போது ஜெர்மனியின் பண அளவில் மாறுதல் ஏதும் ஏற்படாது. முதலில் இருந்த டாலருக்கு 4 மார்க்கு வீதத்தில், வணிக பாங்குகளுக்கு ஏற்றுமதியாளர்கள் தம் உண்டியல்களை விற்றதன் மூலம் பணத்தின் அளிப்பு $4 \times 100 = 400$ மிலியன் மார்க்குகள் அதிகமாயின. அதேசமயத்தில், உண்டியல்களை வாங்குவதன்மூலம் இறக்குமதியாளர்கள் அதே அளவு பணத்தைப் புழக்கத்திலிருந்து எடுத்துவிட்டனர். புது நாணயமாற்று வீதமும் புதுச் சமநிலையில்

ஏற்பட்டதும், மீண்டும் உள்நாட்டுப் பணத்தின் உற்பத்தி அதன் அழிவுக்குச் சமமாகிறது. ஆனால், அவற்றின் மொத்த அளவு முந்தி இருந்ததைவிட அதிகம் (5 × 90 மி. = 450 மி.).

ஜெர்மனியின் மொத்தத் தேவையிலும் மாறுதல் ஏதும் இராது. எனவே, அதன் நாட்டு வருமானத்திலும் உற்பத்தியிலுங்கூட மாறுதல் ஏதும் இராது. ஏற்றுமதிகளின் மொத்த மதிப்பை மார்க்குகளில் அளந்தால் முன்னிருந்ததைவிட 50 மிலியன் மார்க்குகள் அது அதிகமாயிருக்கிறது. தேவை குறைந்தபோதிலும், ஏற்றுமதிகள் அதிகமாகியுள்ளன. இதற்குக் காரணம் டாலரின் மதிப்பு 25 சதவீதம் உயர்ந்துள்ளதாகும். ஜெர்மானிய ஏற்றுமதிகளின் உற்பத்தி, மாறாத உற்பத்திச் செலவுச் சூழ்நிலையில் (conditions of constant cost) செய்யப்படுகின்றன என்று கொண்டால், ஜெர்மனியில் அவற்றின் விலைகள் மாறமாட்டா. ஆனால், வெளிநாட்டில் அவ் விலைகளை 20 சதவீதம் வெட்டலாம். வெளி நாட்டினர் இதற்கேற்பத் தாம் வாங்குவதை அதிகப்படுத்துவார்கள். முன் எண்ணியிருந்ததுபோலவே $80 மிலியனோடு நிறுத்திக்கொள்ளாமல், விலை குறைவினால் தூண்டப்பட்டு $ மிலியனைச் செலவழிக்கின்றனர். ஆனால், டாலருக்கு 5 மார்க்கு வீதத்தில் இதனால் ஜெர்மனிக்கு 450 மிலியன் மார்க்குகள்தான் கிடைக்கும். அதாவது, தேவையின் முதல் குறைவுக்கு முந்தி இருந்ததை விட 50 மிலியன் மார்க்குகள் அதிகமாகக் கிடைக்கும். ஏற்றுமதிகளின் விலைகள் மாறாமல் இருந்து, ஏற்றுமதிகளின் பரிமாணமும், ஏற்றுமதித் தொழில்களில் வேலைகளும், அத் தொழில்கள் செலவழித்த வருமானமும் யாவும் அதிகமாகின்றன. மதிப்பிறக்கம் காரணமாக ஏற்றுமதித் துறையில் 50 மிலியன் மார்க்குகளுக்குக் கூடுதலான உற்பத்தி ($dX$) ஏற்பட்டிருக்கிறது. இது பெருக்கியின்மூலமாக வருமானத்தை மேலும் அதிகமாக்கும்.[1]

ஆனால், மதிப்பிறக்கம் காரணமாக ஏற்றுமதித் துறையில் உண்டாக்கப்பட்ட நாட்டு வருமானம் அதிகரித்துள்ள அதேசமயத்தில், இறக்குமதிகள்மீது அந் நாட்டின் செலவும் அதே அளவுக்கு அதிகரித்திருக்கிறது. ஏற்றுமதிகள் 50 மிலியனுக்கு அதிகரிக்கும் அதே

[1] ஜெர்மனியில் ஏற்றுமதிகளின் உற்பத்திச் செலவு அதிகரிக்கும் சூழ்நிலை இருப்பதாகக் கொள்வோம். (அதாவது அளிப்பு நெகிழ்ச்சி அனந்தத்துக்குக் குறைவு). விலை வெட்டு இதைவிடக் குறைவாக இருக்கவேண்டும். வாங்குவதும் முன்போல அவ்வளவு அதிகரிக்காது. ஜெர்மானிய அளிப்பு நெகிழ்ச்சி = 0 என்ற வரம்பில், ஜெர்மானிய விலைகள் குறைக்கப்படும்; வெளிநாட்டு விலைகள் மாறாதிருக்கும். ஜெர்மானிய ஏற்றுமதிகளின்மீது வெளிநாட்டுச் செலவும் மாறாதிருக்கும். பொதுவாக, (வெளிநாட்டில் தேவை நெகிழ்ச்சி மாறவில்லை என்றால்) வெளிநாட்டில் ஏற்படவேண்டிய விலை வெட்டும், அதனால் விற்பனை அதிகரிக்கத் தூண்டுதலும் ஏற்றுமதிகளின் அளிப்பு நெகிழ்ச்சிக்கு நேரிடை விகிதத்தில் மாறும்.

சமயத்தில் உள்நாட்டுப் பொருள்கள், பணிகள்மீது செலவிடப்படுவது ($C$, $I$ அல்லது $G$) அதே தொகைக்குக் குறைகிறது. உள்நாட்டுத் துறையில் ஓர் உற்பத்திக் குறைவு ($-dC$, என்று கூறுவோம்) ஏற்பட்டு ஏற்றுமதித் துறையில் உண்டான கூடுதல் $dX$-ஐ ஈடு செய்கிறது.[2] இறக்குமதிகளின்மீது அதிகமாகச் செலவிடப்படுவதில் ஓரளவாகவோ அல்லது முழுமையாகவோ சேமிப்புக்கு பதிலாக இருந்தால்தான் பண வருமானம் அல்லது உண்மை வருமானம் அல்லது வேலைகளில் நிகர உயர்வு இருக்கும். மதிப்பிறக்கத்தினால் வருமானத்தில் அல்லது ஆக்கத்தில் மாறுதல் எதுவும் ஏற்படவேண்டிய அவசியமில்லை. (அதுவும், இரு துறைகளில் அளிப்பு நெகிழ்ச்சி சமமாக இருந்தால் மாறுதல் ஏதும் ஏற்படாது.) எனினும், மதிப்பிறக்கத்தின் வாணிப மாற்றுவீத விளைவினால் உண்மை வருமானம் குறையக்கூடும் என் பதைக் குறிப்பிடவேண்டும். எளிய ஓர் உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். இறக்குமதிகள், ஏற்றுமதிகள் இரண்டின் அளிப்பு நெகிழ்ச்சியும் அனந்தமானால், ஏற்றுமதிகளின் உள்நாட்டு விலை மாறாது; ஆனால், அதேசமயம் இறக்குமதிகளின் உள்நாட்டு விலை நாணயமாற்று வீதம் மாறும். அதே வீதாசாரத்தில் அதிகரிக்கும். இதனால், வாணிப மாற்று வீதம் (terms of trade) ஜெர்மனிக்குப் பாதகமாக மாறுகிறது. ஒரு குறைந்துள்ள அளவு இறக்குமதியை வாங்க முன்னைவிட அதிக அளவு ஏற்றுமதிகளை அனுப்பவேண்டி யுள்ளது. எனவே, மொத்த உற்பத்தியில் மாறுதல் இல்லாவிடினும், நுகர்வோரின் திருப்தி என்ற பொருளில் உண்மை வருமானத்தில் குறைவு ஏற்பட்டுள்ளது. பொதுவாக, இறக்குமதிகளின் அளிப்பு நெகிழ்ச்சி ஏற்றுமதிகளின் அளிப்பு நெகிழ்ச்சியைவிடக் குறைவாக இருந்தாலொழிய, ஒரு நாட்டில் ஏற்றுமதி விலைகளைவிட அதிகமாக இறக்குமதி விலைகள் உயரும்; வாணிப மாற்று வீதம் அதற்குப் பாதக மாக மாறும்.

20·2 படத்தில் உள்ளதுபோல அந்நியச் செலாவணியின் தேவை நெகிழ்ச்சி முன் கூறியதைவிட அதிக நெகிழ்ச்சியுடையதாகக் கொள் வோம். முன்னர் ஆன அதே அளவு மதிப்பிறக்கம் செய்ய (டாலருக்கு 5 மார்க்கு ஆக்க) அளிப்புக்கோடு முன் ஏற்பட்டதைவிட அதிகமாக நகரவேண்டியிருக்கும். இதைப் படத்தில் காட்டியிருக்கிறது. ஏற்றுமதி களின் வெளிநாட்டு மதிப்பு $ 100 மிலியனிலிருந்து $ 60 மிலியனுக்கக் குறைகிறது; அவற்றின் உள்நாட்டு மதிப்பு 400 மிலியன் மார்க்கி லிருந்து 300 மிலியன் மார்க்காகக் குறைகிறது. உலைவு ஏற்படுவதற்கு

2 இரு துறைகளிலும் உள்ள தேவை நெகிழ்ச்சிகளைப் பொறுத்து உண்மையில் ஏற்படும் விளைவின் அளவு இருக்கும். இந் நெகிழ்ச்சிகள் சமமாக இருப்பின், ஆக்கம், வேலைகள், மதிப்பு இம் மூன்றின் அளவிலும் ஏற்றுமதித் துறையில் ஏற்பட்ட விரிவை உள்நாட்டுத்துறையில் ஏற்பட்ட சுருக்கம் ஈடு செய்துவிடும்.

முன் இருந்ததைவிட ஏற்றுமதி உற்பத்தியின் மதிப்பு இப்போது 100 மார்க்குகள் குறைவு; ஏற்றுமதி விலைகள் மாறாமல் இருந்தால், ஏற்று




டாலர்களின் அளவு (மிலியன்களில்)
படம் 20:2. மாறும் நாணயமாற்று வீதங்களோடு திருத்தம்: நெகிழ்ச்சியுள்ள தேவை.

மதித்துறையில் உற்பத்தியும் வேலைகளும்கூடக் குறையும். அதை மட்டுமே எடுத்துக்கொண்டாலும் ஏற்றுமதி உற்பத்தியில் ஏற்பட்ட இக் குறைவு ($-dX$) காரணமாக வருமானம் மேலும் சுருங்கலாம்.[3]

இறக்குமதிகளின் தேவை நெகிழ்ச்சியுடையது என்று நாம் வைத்துக்கொண்டிருக்கிறோம். எனவே, அவற்றின் மொத்த மதிப்பும் அவற்றின்மீதான செலவும் அதேபோல 100 மிலியன் மார்க்குகள்

[3] தேவை நெகிழ்ச்சி அதிகமான சமயத்தில் $S_x$ கோட்டை 5 மார்க்குகள்/$ விகிதத்துக்கும் நாணயமாற்று உயரப் போதுமான அளவுக்கு நகர்த்தாமல், 20·1 படத்தில் செய்த அதே அளவுக்கு அக் கோட்டை நகர்த்தினாலும் அதேபோன்ற விளைவுதான் உண்டாகும். நாணயமாற்று வீதம் அதிகரித்திருக்கும். ஆனால், அது சுமார் 4·5 மார்க்/$ வரைதான் உயர்ந்திருக்கும். ஜெர்மானிய ஏற்றுமதிகள்மீது வெளிநாட்டுச் செலவு சுமார் $ 80 மிலியன் அதிகமாகியிருக்கும். இதன் விளைவாக ஜெர்மானிய ஏற்றுமதியாளர்களுக்கு $4·5 \times 80 = 360$ மிலியன் மார்க்குகள்தான் அவர்கள் செலாவணியில் கிடைக்கும். இப்போதும் ஏற்றுமதி விற்பனைகள் நாம் தொடங்கிய 400 மிலியனைவிடக் குறைவாகவே உள்ளன.

குறையும். முன்னர் இறக்குமதிகள்மீது செலவிட்ட தொகையில் ஒரு பகுதியைச் சேமிப்பது என்று நுகர்வோர் முடிவு செய்தால் ஒழிய, இத் தொகை உள்நாட்டு மாற்றுப்பொருள்களை வாங்கச் செலவிடப்படும். எனவே, உள்நாட்டுத்துறையில் உற்பத்தியும் வேலை வாய்ப்புகளும் உயரும். இக் கூடுதல் நுகர்வுச் செலவினால் (அதை $dC$ என்போம்) ஏற்றுமதித் தொழில்களில் ஏற்பட்ட தாழ்ச்சி ஈடுசெய்யப்படுகிறது. இதற்குமுன் கூறிய உதாரணத்தில் உள்ளதுபோலவே, வருமானம், உற்பத்தி, வேலைகள் ஆகியவை மாறாமல் இருக்கும்.

முன்போலவே ஏற்றுமதிகளின் விலைகள் உயர்ந்ததைவிட அதிகமாக இறக்குமதிகளின் விலைகள் உயர்ந்துவிட்டதனால் வாணிபமாற்று வீதம் ஜெர்மனிக்குப் பாதகமாக இருக்கிறது. ஏற்றுமதிகளின் ஓர் அலகுக்கு ஈடாகக் கிடைக்கும் இறக்குமதிகளின் அளவு சிறுத்துவிட்டது. மொத்த வருமானம் மாறாதிருந்தபோதிலும் அதனின்று கிடைக்கும் திருப்தி குறைகிறது.

நாம் பார்த்த இரு சூழ்நிலைகளும் ஒரு விஷயத்தில் சர்வ சமமாக இருக்கின்றன. மொத்தத் தேவைமீதும், அதனால் உற்பத்தியான நாட்டு வருமானத்தின்மீதும் நாணயமாற்று மதிப்பிறக்கம்மூலம் செலுத்துநிலைச் சீர்கேடு திருந்துவதனால் எந்தவிதமான விளைவும் ஏற்படவேண்டும் என்பதில்லை. இவ்விரு சூழ்நிலைக்கும் உள்ள வித்தியாசம் பின்வருமாறு: நாணயமாற்றின் தேவை நெகிழ்ச்சியற்று இருக்கும்போது, ஏற்றுமதி உற்பத்தி விரிவடைகிறது; அதேசமயம் இறக்குமதிகள்மீது செலவுகள் செய்யப்படுவதால் உள்நாட்டுப் பொருள்களின் உற்பத்தி குறைகிறது: ஆனால், அதற்கு மாறாக, நாணய மாற்றின் தேவை நெகிழ்ச்சி உடையதாக இருக்கும்போது, ஏற்றுமதிகளின் மதிப்பு, பரிமாணம் இரண்டும் சுருங்குகின்றன; அதேசமயம் இறக்குமதிகளின் மதிப்புக் குறைவதால், இறக்குமதிகளின் மாற்றுப் பொருள்கள்மீதான செலவுகள் அதிகரித்து அத் துறையில் உற்பத்தி பெருகும். 18ஆவது அத்தியாயத்தில் நாம் ஆய்ந்து பார்த்ததிலிருந்து இந்த முடிவைத்தான் எதிர்பார்க்கலாம். இறக்குமதிகளின் தேவை நெகிழ்ச்சியானது (எனவே, அன்னியச் செலாவணியின் தேவை நெகிழ்ச்சியானது) இறக்குமதி வகைப் பொருள்களின் தேவை நெகிழ்ச்சியைமட்டும் பொறுத்ததன்று. இறக்குமதிகளுக்கு இப்போதுள்ள மாற்றுப் பொருள்களும் இனி அவ்வாறு ஆகக்கூடியவையும் இருப்பதையும் அவற்றின் அளிப்பு நெகிழ்ச்சியையும்கூட அது பொறுத்திருக்கிறது (படம் - 18·2-ஐப் பார்க்க). ஆகையால், அன்னியச் செலாவணியின் தேவை நெகிழ்ச்சியற்றது என்றால், அத்தகைய மாற்றுப் பொருள்கள் இல்லை என்பது பொருள். தேவை நெகிழ்ச்சியுடையது என்றால் இறக்குமதிக்கு மாற்றுப்பொருள்களைப் பயன்படுத்து

வதற்கு நிறைய வாய்ப்புகள் உள்ளன என்றும் அவற்றின் அளிப்பு நெகிழ்ச்சியுடையது என்றும் கொள்ளலாம்.

மேலும் ஒரு விஷயத்தை இங்குக் கவனிக்கவேண்டும்: ஒரு செலுத்துநிலைச் சமநிலைக் கேடு ஏற்பட்டால் அதைத் திருத்த முதலில் செய்யவேண்டிய மதிப்பிறக்கத்தின் அளவு, சிறிது காலம் கழிந்தபின் செய்யவேண்டிய அளவைவிட அதிகமாக இருக்கும். நெகிழ்ச்சிகளைப் பற்றி நாம் முன்னர் பார்த்தபடி ஏற்றுமதியாளருக்கு உற்பத்தியைப் பெருக்கி அங்காடி உறவுகளை அதிகரித்துக்கொள்வதற்குச் சிறிது காலம் தேவைப்படுகிறது; அதேபோல இறக்குமதிகளுக்குள்ள மாற்றுப் பொருள்களை நுகர்வோர் கண்டுபிடிக்கவும் உற்பத்தியாளர்கள் தம் விற்பனை வசதிகளை அபிவிருத்தி செய்து அவற்றின் உற்பத்தியைப் பெருக்கவும் சில நாட்கள் பிடிக்கின்றன. ஒரு குறிப்பிட்ட சமநிலைக் கேடு ஏற்பட்டுச் சில காலம்—ஓர் ஆண்டு அல்லது இரு ஆண்டுகள்—கழித்து, அன்னியச் செலாவணிக் கோடுகளின் அமைப்பை நிர்ணயிக்கும் நெகிழ்ச்சிகள் அதிகமாகும் என்று எதிர்பார்க்கலாம். அதனால், அக் கோடுகளின் நெகிழ்ச்சி உயர்ந்து அவற்றின் செங்குத்துக் குறைகிறது. முதலில் சமநிலைக் கேட்டின் விளைவினால் குறைந்த அளவுக்கும் கீழே நாணயமாற்று விகிதம் விழ இது காரணமாகிறது.

### மதிப்பிறக்கத்தின் உள்நாட்டு விளைவுகள்

விலைத்தொடர்புகளில் தவிர்க்கமுடியாத மாறுதல்களினால் ஏற்படும் சில மறைமுகமான விளைவுகளை இங்குக் கவனிக்கவேண்டும். நாணய மாற்றுக் கோடுகளின் வரையறுக்கக்கூடிய நெகிழ்ச்சி மதிப்புகளைக் கண்டு பிடிப்பதற்கு இறக்குமதிகளின் உள்நாட்டுத் தேவை, ஏற்றுமதிகளின் வெளிநாட்டுத் தேவை ஆகியவற்றின்மீது இறக்குமதி விலைகளும் [ஏற்றுமதிகளின் (உள்நாட்டு) விலைகளும்கூட] ஏற்படுத்திய நேரிடை விளைவை ஏற்கெனவே கணக்கில் சேர்த்துக்கொண்டுவிட்டோம். ஆனால், ஏற்றுமதிகளின் உற்பத்தியில் இறக்குமதியான கச்சாப்பொருள்களை உபயோகித்திருந்தால், ஏற்றுமதிகளின் அடக்கச்செலவு உயரும். தவிர, வாழ்க்கைச் செலவில் இறக்குமதிகள் முக்கியமான ஒரு பகுதியாக இருந்தால் நிச்சயமாகக் கூலி உயர்வு கேட்கப்படும். அதை அளித்தால் ஏற்றுமதிகளின் அடக்கச் செலவுகள் மேலும் உயரும். கூலிகள் உயர்ந்தால், இறக்குமதிகள்மீது செய்யப்படும் செலவுகள் நிச்சயமாக அதிகரிக்கும்.

ஏற்றுமதிகளின் அளிப்புச் சூழ்நிலை மோசமானதைக் காட்ட நாணயமாற்றின் அளிப்புக் கோடு ($S_{x1}$) படத்தில் காட்டிய நிலையைவிட ஓரளவு உயர்த்தப்படவேண்டும். இறக்குமதிகள் அதிகமானதால், தேவைக் கோட்டையும் ($D_m$) அதேபோல உயர்த்தவேண்டும். முதலில்

காட்டியதைவிட மார்க்கின் மதிப்பிறக்கம் சிறிது அதிகமாக இருக்கும். ஆனால், விலைமாறுதல்கள் கூலி–விலை ஏறும் சுழலைக் கிளப்பிவிட்டாலொழிய, நாணயமாற்று அங்காடியும் செலுத்துநிலையும் அதைவிடச் சிறிது அதிகமான நாணயமாற்று வீதத்தில் சமநிலை அடையும்.

**பணத்துறையில் அடக்கத்தின் தேவை (Need for Monetary Restraint)**

பணவீக்கம் ஏற்படும்போலிருந்தால் அதற்கு ஈடுசெய்ய ஒரு பண அடக்கக் கொள்கை தேவை என்பது தெளிவு. கடன் செலாவணியின் அளிப்பை அதிகமாக்காமல் வைத்திருந்தால் முதலாளிகளால் கூலி உயர்வுகளைக் கொடுக்கமுடியாது. அவர்கள் அவற்றைத் தர மறுப்பார்கள். அதனால், வேலை நிறுத்தங்களும் ஏற்படக்கூடும். மேலும், வருமானத்தில் எவ்விதக் குறைவு உண்டானாலும் இறக்குமதிகளின் தேவை அதன் காரணமாக விழும். எனவே, ஏற்றுமதிகளை உற்பத்தி செய்வதில் பயனாகும் இறக்குமதிகளின் விலைகள் அதிகரித்ததனால் செலுத்துநிலையில் ஏற்பட்ட பாதகமான விளைவைக்கூட ஓரளவுக்குக் கடன் செலாவணியைச் சுருக்கி, வருமானத்தைக் குறைப்பதன்மூலம் ஈடுசெய்ய முடியும்.

செலாவணி மதிப்பிறக்கத்தின் மறைமுகமான விலை விளைவுகள் பாதகமாக ஏற்படும்போது அவற்றைச் சரிசெய்ய பணத்தைக் கட்டுப்படுத்தும் கொள்கை தேவையா என்பது, ஏற்றுமதி விலைகள் எவ்வளவு உயர்ந்துள்ளன என்பதைப் பொறுத்தது. பொருளாதார மந்தச் சூழ்நிலையில் ஏற்றுமதி விலை உயர்வு மதிப்பிறக்க அளவில் 5 அல்லது 6 சதவிகிதம்தான் இருக்கிறது என்று பன்னாட்டுச் செலாவணி நிதியின் அலுவலர்கள் செய்த ஓர் ஆராய்ச்சியினின்று[4] தெரிகிறது. மதிப்பிறக்கம் 20 சதவிகிதமானால், ஏற்றுமதிகளின் விலைகள் மிகக் குறைவாகவே உயரும்—அவ்வுயர்வு 1 சதவீதம்தான் இருக்கும்; 50 சதவீத மதிப்பிறக்கத்துக்கு அது $2\frac{1}{2}$-யிலிருந்து 3 சதவீதம்தான் இருக்கும். ஆனால், பொருளாதார வளமைக் காலத்திலோ ஏற்றுமதி விலைகளின் உயர்வு மந்தக் காலத்து உயர்வைவிட மிக அதிகமாகத் தோன்றுகிறது; மதிப்பிறக்கத்தில் அது 30 சதவீதம் அல்லது அதற்கும் அதிகமாக இருக்கும். அப்படியானால், மதிப்பிறக்கம்

[4] J. J. Polak and T. C. Chang, 'Effect of Exchange Depreciation on a Country's Export Price Level,' *Staff Papers*, Vol. I-No. 1 (1950–51), International Monetary Fund, Washington, D. C, ஐப் பார்க்கவும். இவ்வாராய்ச்சியின் முடிவுகள் வளமை நிலையைப் பொறுத்தவரை தீர்மானமாக இல்லை. இதற்குக் காரணம், ஓரளவுக்கு, அவர்கள் ஆராய்ந்த உதாரணங்களின் எண்ணிக்கை சிறிதே. மேலும், முக்கிய உதாரணத்தில் விலை உயர்த்தும் பிற சக்திகளும் கலந்துள்ளன.

20 சதவீதமானால் ஏற்றுமதி விலை உயர்வு 6 சதவீதமாக இருக்கும்; மதிப்பிறக்கம் 50 சதவீதமானால் ஏற்றுமதி விலைகள் 15 சதவீதம் உயரும்.

பொருளாதாரம் மந்தப்பட்டிருக்கும்போது மதிப்பிறக்கம் உண்டானால் மிகச் சொற்ப அபாயம்தான் ஏற்படும். ஆனால், வளமைக் காலத்திலோ, அதுவும் மதிப்பிறக்கம் கணிசமான அளவு ஏற்பட்டாலோ அது ஒரு பேரபாயம் ஆகும். செலுத்துநிலையில் ஏற்படும் பாதகமான மாறுதலைத் திருத்துவதற்கு மதிப்பிறக்கம் ஓர் உபாயமாகக் கையாளப்பட்டு, அதுவும் அது ஒரு பொருளாதார வளமைக் காலத்தில் ஏற்பட்டால், பண அடக்கக் கொள்கை தேவையே தவிர, அந்தக் காலத்தில்தான் அதனால் பொருளாதாரத்துக்கு மிகக் குறைவான தீங்கு விளையும். அத்தகைய நேரத்தில் மதிப்பிறக்கத்தின் அளவும் கூடுமானவரையில் குறைவாக இருக்கவேண்டும் என்பதும் தெளிவு.

**மாறக்கூடிய நாணயமாற்று வீதங்களோடு மூலதன மாற்றுகை**

பொன் திட்டம்பற்றிய ஆராய்ச்சியில் மூலதன மாற்றுகைபற்றிப் பார்த்தோம். அதேபோல இங்கும், அதாவது மாறக்கூடிய நாணய மாற்று வீதச் சூழ்நிலையில் மூலதன மாற்றுகை எவ்வாறு ஏற்படுகிறது என்பதைப் பார்ப்போம். ஜெர்மனி போன்ற ஒரு நாடு வெளிநாடுகளுக்குக் கடன் கொடுக்க ஆரம்பிக்கிறது என்று கொள்வோம். இந்த வெளிநாட்டுக் கடன்கள் தரப்படும்போது உள்நாட்டு முதலீடுகள் குறைகின்றன என்று வைத்துக்கொண்டு தொடங்குவோம்.

20·3 எண்ணுள்ள படத்தில் இருப்பதுபோலச் செலுத்துநிலையிலும் நாணயமாற்று அங்காடியிலும் ஒரு சமநிலை இடத்திலிருந்து தொடங்கலாம். நடப்பு விவகாரங்களினின்று நாணயமாற்றுக்கு ஏற்படும் தேவையும் ($D_m$) அதன் அளிப்பும் ($S_x$) டாலருக்கு 4 மார்க்கு வீதத்தில் ஒன்றுக்கொன்று சமமாக உள்ளன. இப்போது, குறிப்பிட்ட ஒரு செலுத்துநிலைக் காலத்தில் அதாவது ஓர் ஆண்டில், ஜெர்மானிய முதலீட்டுக்காரர்கள் $ 40 மிலியனுக்குப் பத்திரங்களை வாங்க முன் வருகிறார்கள். இப் பத்திரங்களுக்காகப் பணம் தருவதற்கு அன்னியச் செலாவணிக்கு ஏற்படும் தேவை, பொருள்கள், பணிகளின் சாதாரணத் தேவையோடு சேர்ந்து தேவைக் கோட்டை $D_m$-லிருந்து $D_{m+i}$-க்கு நகர்த்துகிறது.

நாணயமாற்று வீதம் இப்போது 5 மார்க்குகள்/$ ஆக உயருகிறது. ஏற்றுமதிகளிலிருந்து கிடைக்கும் அன்னியச் செலாவணியின் அளிப்பு $ 100 மிலியனிலிருந்து $ 120 மிலியனுக்கு விரிவடைகிறது. அளிப்புக் கோட்டில் $a$-யிலிருந்து $b$-க்கு ஓர் இடப் பெயர்ச்சியை இது குறிக்கிறது.

உள்நாட்டுச் செலாவணியில் இறக்குமதிகளின் விலை உயருகிறது; இறக்குமதிக்கான நாணயமாற்றுத் தேவை $ 100 மிலியனிலிருந்து $ 80 மிலியனுக்குச் சுருங்குகிறது. தேவையைவிட அன்னியச் செலாவணியின் அளிப்பு அதிகமாக உள்ள தொகையினின்று வெளிநாடு




படம் 20·3. மாறும் நாணயமாற்று வீதங்களில் மூலதன மாற்றுகை.

களுக்கு ஜெர்மானிய முதலீட்டை மாற்றுவதற்குத் தேவையான $ 40 மிலியன் கிடைக்கிறது.

வருமானத்தையும் வேலை நிலைமையையும் எடுத்துக்கொள்வோம். வெளிநாட்டு முதலீடு செய்வதற்காக உள்நாட்டு முதலீடு 200 மிலியன் மார்க்குகள் (= $ 40 மிலியன்) குறைந்ததனால் வருமானமும் வேலைகளும் குறையலாகும். வருமானத்தை மந்தமாக்கும் இச் சக்தியை மதிப்பிறக்கத்தினால் ஏற்படும் ஏற்றுமதி உயர்வு ஈடுசெய்யும். ஓர் எளிமையான உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். ஜெர்மானிய ஏற்றுமதிகளின் உள்நாட்டு விலை மாறாமல் இருப்பதாகக் கொள்வோம். அவற்றின் மதிப்பில் உயர்வு (200 மிலியன் மார்க்குகள், அதாவது, $4 \times 100$-லிருந்து $5 \times 120$) ஏற்படும்போது, கூடவே அதே அளவுக்கு அவற்றின் பரிமாணத்திலும் ஏற்றுமதித்தொழில் வேலைகளிலும் உயர்வு ஏற்படுகிறது. ஏற்றுமதிகளினின்று வருமானத்தில் ஏற்படும் உயர்வு ($dX$) அப்போது முதலீட்டுப் பக்கத்தில் ஏற்படும் குறைவைச் ($-dI$)

சரியாக ஈடுசெய்யும். ஏற்றுமதித்துறையில் முழு வேலைநிலையிருந்த தால் ஏற்றுமதி விலைகள் அதிகரிக்கின்றன என்று கொள்வோம். அப் போது சில நாட்களுக்காவது மொத்த வேலைகள் குறையும். ஆனால், அத்துறையில் லாபம் முன்பிருந்ததைவிட அதிகமாக இருக்கும். எனவே, உற்பத்தித்திறனை அதிகரிப்பதற்காக முதலீடு செய்வது தூண்டப்படுகிறது. முதலீட்டுப் பொருள் உற்பத்தியில் வேலையற்றுப் போன தொழிலாளர்களில் சிலருக்காவது இதனால் மீண்டும் வேலை கிடைக்கும். ஏற்றுமதித்திறன் வளரும்போது, ஏற்றுமதி உற்பத்தியில் மேலும் தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்த முடியும்.[5]

உள்நாட்டு முதலீட்டுக்கான பணத்தைக்கொண்டு வெளிநாட்டு முதலீடு செய்யப்படவில்லை என்றும் அதற்கான பணம் வேலையற்றுக் கிடந்த பணத்தொகைகள் அல்லது அதிகரித்த கடன்களினின்று கிடைத்தது என்றும் கொள்வோம். அப்போது ஏற்றுமதி உயர்வுக்கு எதிரிணையாக எதுவும் இராது. பொருளாதாரத்தில் போதுமான அளவு தளர்ச்சி இருந்தால், பெருக்கியின் விகிதாசாரத்தில் வருமானம் உயரும். முழு வேலைநிலைச் சூழ்நிலையில், வருமானத்தைத் தோற்று விக்கும் சக்திகள், விலைவாசி உயர்வில் வீணாகிப்போகும்.

பொன் திட்டத்தின் இயக்கத்தை ஆராய்ந்தபோது, மூலதன மாற்றுகை ஏற்படும் சமயத்தில் கடன்வாங்கும் நாட்டில் விரிவுண்டாக் கும் சக்திகள் இயங்கிக்கொண்டிருந்தால் அம் மாற்றுகை ஏற்படுவதற்கு அது மிகவும் உதவும் என்பதைப் பார்த்தோம். நாணயமாற்று வீதம் மாறும் நிலையிலும் இது உண்மையே. கடன்வாங்கும் நாட்டில் பொரு ளாதார விரிவு ஏற்பட்டால் அதன் நாணயத்தின் மதிப்பு இறங்கலாகும். கடன் கொடுக்கும் நாட்டுச் செலாவணியின் மதிப்பு உயரும். அப் போது, கடன் கொடுக்கும் நாட்டிலிருந்து மூலதன மாற்றுகை ஏற்பட மதிப்பிறக்கம் தேவைப்பட்டாலும், அதிகமாகத் தேவைப்படாது; கடன் வாங்கும் நாட்டில் விரிவாக்கும் சக்திகளின் தராதர வலிமையையும் மூலதன இடப் பெயர்ச்சியின் அளவையும் அது பொறுத்திருக்கும்.

## சமநிலை நாணயமாற்று வீதம்

நாணயமாற்று வீதங்கள் தடையின்றி மாறக்கூடிய நிலையில், செலுத்துநிலை உலைவு எப்படிச் சீராகிறது என்பதை நாம் ஆராய்ந்ததி

[5] ஏற்றுமதி அங்காடிகளில் முன்னர் போட்டியிட முடியாத தொழில்களெல்லாம் நாணயமாற்று மதிப்பிறக்கத்திற்குப் பிறகு போட்டியிடமுடியும். உற்பத்தித்திறன் குறைவாக இருப்பதால் முதலில் இதைச் செய்வது முடியாமல் இருக்கலாம். அதனால் பழைய ஏற்றுமதித் தொழில்களில் ஏற்படுவதுபோலவே விலைகள் உயரும். ஆனால், சில காலத்துக்குப் பிறகு உற்பத்தித்திறன் அதிகரிப்பதால் பழைய அளவுக்கு விலைகள் விழுந்து மேலும் ஏற்றுமதிகள் அதிகரிக்க வழியுண்டாகும்.

லிருந்து, நாணயமாற்று வீதம் உயருவதால் தன்னிச்சையான செலுத்தல்களுக்கும் வருவாய்களுக்கும் இடையே மீண்டும் ஏற்படுகிறது என்று தெரிகிறது. செலுத்துநிலையில் ஒரு புதுச் சமநிலையை இந்தப் புது வீதம் ஏற்படுத்துவதால் இதைச் சமநிலை வீதம் என்றழைப்பது தகும். தன்னிச்சையான பன்னாட்டு வருவாய்களும் செலுத்தல்களும் சமமாக இருக்கும்போது உள்ள நாணயமாற்று வீதம் எதுவாக இருந்தாலும் அதைச் சமநிலை நாணயமாற்று வீதம் என்று கொள்வதா ?

**அச் சொல்லின் பொருள்**

மேலெழுந்தவாரியாகப் பார்த்தால், ஒரு நாட்டின் நாணயமாற்று அங்காடியின் விவகாரங்களைச் சரியாகத் தீர்த்து, அதனால், அதன் தன்னிச்சையான பன்னாட்டுக் கொடுக்கல் வாங்கல்களைச் சமமாக்கிச் செலுத்துநிலையில் சமநிலையை மீண்டும் ஏற்படுத்தும் விகிதம் என்று சமநிலை வீதத்துக்கு விளக்கம் தரலாம். இந்த முடிவு ஏற்பட, ஒரு நாட்டின் காரணிகளுடைய விலைகள், பொருள்களின் விலைகள், அதன் வருமானம், அதன் தேவைகள் ஆகியவற்றுக்கும் உலகின் பிற நாடுகளின் விலைகள், வருமானம், தேவைகள் ஆகியவற்றுக்கும் இடையே ஒரு சமநிலைத் தொடர்பு அவசியம். எனவே, ஆழ்ந்து பார்த்தால், இத்தகைய சமநிலையை ஏற்படுத்துவதுதான் சமநிலை நாணயமாற்று வீதம் என்று இலக்கணம் கூறலாம்.

இவ்வடிப்படைக் காரணிகள் மாறாமலிருக்கும்வரை ஒரு சமநிலை நாணயமாற்று வீதம் மாறாது நிற்கும். உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட நாட்டில் காரணி விலைகள் மாறினால் பொருள் விலைகள் மாறும் ; வருமானத்தின் பங்கீடும் மாறும். பொருள்களின் விலைகள் மாறி ஒரு புது வருமானப் பங்கீடும் ஏற்பட்டால், உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் செலவிடப்படும் தொகை பாதிக்கப்படும் ; அன்னியச் செலாவணியின் தேவையிலும் அளிப்பிலும் மாறுதல்கள் ஏற்படும் ; செலுத்துநிலையில் சமநிலை ஏற்படவேண்டுமாயின் நாணயமாற்று வீதம் மாறவேண்டும். உண்மை வருமானமோ, பண வருமானமோ உலகில் எப் பகுதியில் மாறினாலும் இதுபோன்ற விளைவுகள் ஏற்படும்.

**ஒரு நாணயமாற்று வீதம் எப்போது சமநிலை வீதம் ஆகிறது ?**

நாம் இலக்கணம் கூறியதுபோல ஒரு சமநிலை நாணயமாற்று வீதம் ஏற்பட்டுள்ளது என்று நாம் எவ்வாறு சொல்வது ? செலுத்துநிலையில் பற்றுக்குறை (அல்லது) உபரி இல்லாதிருந்தால் போதுமா ? இச் சமநிலை ஒவ்வொருநாளும் ஏற்படவேண்டுமா ? ஒவ்வொரு மாதமுமா ? ஒவ்வோர் ஆண்டுமா ? எந்தக் காலத்தை எடுத்துக் கொள்ளவேண்டும் ?

**காலத்தின் அளவு :** கடைசிக் கேள்வியை முதலில் எடுத்துக் கொள்வோம். ஒரு சமநிலை நாணயமாற்று வீதம் எந்தக் கால அளவைக் குறிக்கவேண்டும்? தேவையில் மாறுதல்கள் தொடர்ந்து ஏற்பட்டுக்கொண்டே யிருக்கின்றன; விலை மாறுதல்கள் அடிக்கடி ஏற்படுகின்றன; நாட்டு வருமானங்களோ மாதத்துக்கு மாதம் ஓரளவு மாறுபடுகின்றன.

தருக்க நியாயப்படி (Logic) பார்த்தால் தடையிலா நாணயமாற்று அங்காடியில் சமநிலை நாணயமாற்று வீதம் தினம்தோறும் மாற வேண்டும். ஆனால், எந்த நாடும் இத்தகைய உறுதியற்ற நிலையை ஒப்புக்கொள்ளாது. தற்செயலான அல்லது பருவகால உலைவுகளுக்கு, திடநிலை உண்டாக்கும் ஊகவாணிபம் எதிரிணையாகச் செயலாற்ற விட்டால், பணத்துறையினர் அதற்காக நாட்டின் பன்னாட்டுச் சேம நிதிகளைப் பயன்படுத்துவர். அப்படியானால், தடையிலாது மாறும் நாணயமாற்று வீதங்களோடு முழுப் பணத்துறைச் சுதந்திரத்தை எந்த நாடும் ஒப்புக்கொள்ளாது என்பது இதன் பொருள்.

ஓர் ஆண்டுக் காலத்தை எடுத்துக்கொண்டால், பருவகால உலைவு களையும் தற்செயலான உலைவுகளையும் கருத்தில் கொள்ளவேண்டிய தில்லை. இக் காரணத்தினால் சமநிலை நாணயமாற்று வீதம் குறிக்கும் குறைந்தபட்ச கால அளவு ஓர் ஆண்டு என்று கொள்வோம். அப்போது இந்தக் காலத்தின்போது ஒரு குறிப்பிட்ட வீதம் பன்னாட்டுச் சமநிலையைப் பாதுகாக்கவேண்டும். குறுகியகால மாறுதல்களுக்கு ஏற்றவாறு சேமநிதிகள் இக்காலத்தின்போது ஏறித் தாழும். ஆனால், நாணயமாற்று வீதம் சரியான அளவுடையதாக இருந்தால் ஒரு நாட்டின் பன்னாட்டுச் சேமநிலைகளில் நிகரமாற்றம் நிறைய இருக்கக் கூடாது. ஓர் ஆண்டைவிட அதிகமான கால அளவுகளை எடுத்துக் கொண்டால், விலைகள், வருமானங்கள், தேவைகள் ஆகியவை மாறு வதற்கேற்ப சமநிலை வீதம் மாறும்.[6]

[6] சமநிலை வீதம் குறிப்பதற்கு ஏற்று, கால அளவு ஐந்திலிருந்து பத்து ஆண்டுகள் வரை இருக்கலாம் என்று நர்க்ஸ் (Nurkse) யோசனை கூறுகிறார். ஒரு முழு வணிகச் சுழல் அதில் அடங்குமாறு அதன் அளவு நீண்டு இருக்க வேண்டும். பெரும் வணிகச் சுழல் ஊசல் இருக்கும்போது அவ்வளவு நெடுங் காலத்துக்கு நாணயமாற்று வீதத்தை நிலையாக வைத்திருக்கவேண்டுமாயின் பன்னாட்டுச் சேமநிதிகளைப் பெரும் அளவுக்குப் பயன்படுத்தவேண்டும். பெரும் பாலான நாடுகள் அந்த அளவுக்குப் பன்னாட்டு நிதிகளைப் பயன்படுத்த முடியாது. Ragnar Nurkse, 'Conditions of International Monetary Equilibrium,' *Essays in International Finance*, No. 4, Spring, 1945 (International Finance Section, Princeton University); reprinted in *Readings in the Theory of International Trade*; கட்டுரையைப் பார்க்க.

**தடைகள் :** சமநிலை நாணயமாற்று வீதம் ஒன்று ஏற்படுவதால் ஒரு பற்றுக்குறையை எப்படி ஒழிக்க முடியுமோ அதேபோல வாணிபம் அல்லது செலுத்தல்களின்மீது தடைகள் விதித்தும் பற்றுக்குறையைத் திறம்பட நீக்கமுடியும். நாணயமாற்று வீதத்தில் (அல்லது உள்நாட்டு விலைகளிலும் வருமானங்களிலும்) தகுதியான ஒரு மாற்றம் செய்வதற்கு இத் தடைகள் ஒரு மாற்று வழியாகும். எனவே, ஒரு நாட்டின் செலுத்துநிலையில் பற்றுக்குறை இல்லை என்பதுமட்டும் அதன் நாணமாற்று வீதம் சமநிலையில் உள்ளது என்பதற்குச் சான்றாகாது. பற்றுக்குறைக்கு முன் அவை இருந்த நிலைக்குத் தடைகளை உயர்த்தினேமானால், மீண்டும் ஒரு பற்றுக்குறை தோன்றினால் கட்டுப்படுத்தப்பட்ட விகிதம் சமநிலை விகிதம் அன்று என்பது தெளிவு.

**வேலையின்மை :** இறுதியாக, பற்றுக்குறையை ஒழிக்கப் பணச் சுருக்கம் ஒரு நல்ல வழி என்பதை நாம் அறிவோம். வேலையின்மை பெரும் அளவில் இருந்து நாட்டு வருமானம் மிகக் குறைவாக இருந்தால் ஒரு பொருளாதாரம் தன் வெளிநாட்டுச் செலுத்தல்களில் சமநிலை ஏற்படுத்திக்கொள்ளலாம்; ஆனால், முழு வேலைநிலைச் சூழ்நிலையில், செலுத்துநிலைச் சமநிலையைப் பாதுகாக்கத் தன் செலாவணியை அது மதிப்பிறக்கம் செய்யவேண்டும். எனவே, வெவ்வேறு வேலை நிலைமைகளில் வெவ்வேறு நாணயமாற்று வீதங்களில்தான் செலுத்துநிலைச் சமநிலை ஏற்படும்.

இதைக் கருத்தில்கொண்டு பின்வரும் கேள்விக்கு விடையளிப்போம். பல நாணயமாற்று வீதங்களில் எதைச் சமநிலை வீதம் என்பது? முழு வேலைநிலையில் செலுத்துநிலைச் சமநிலையை ஏற்படுத்தும் அந்த ஒரு வீதத்தைத்தானா? இன்று முழு வேலைநிலை அல்லது கிட்டத்தட்ட அந்த நிலை உலகெங்கிலும் உள்ள நாடுகளின் குறிக்கோளாக இருப்பதால், விடை 'ஆம்' என்றுதான் இருக்கவேண்டும். எந்த நாட்டின் (தன்னிச்சையான) செலுத்தல்கள் வேலையின்மை மிக அதிகமாக இருப்பதால்தான் சமநிலையடைகிறதோ அதன் நாணய மாற்றுவீதம் இருக்கவேண்டியதைவிட அதிகமாக உள்ளது எனலாம்.

> 1925–1930 ஆண்டுகளில் பிரிட்டனுடைய நிலையை இதற்கு ஒரு நல்ல உதாரணமாகக் கொள்ளலாம். பிரிட்டனின் செலுத்துநிலையில் சமநிலைக் கேடு இருந்ததற்கு ஓர் அடையாளமும் இல்லை. இருந்தபோதிலும் பவுனின் மதிப்பு அதிகமாகக் கருதப்பட்டது சரியே. அந்த ஆண்டுகளில் பிரிட்டனின் பொன் நிதிகளில் நிகரமாற்றம் ஏதும் ஏற்படவில்லை...... சமநிலை வீதத்துக்கு நாம் கூறிய இலக்கணத்தைச் சொல்லளவில் பார்த்தால் பவுனின் மதிப்பு அதிகம் என்று கூற

முடியாது. ஆனால், வெளிநாடுகளில் இருந்ததைவிட பிரிட்டனில் பொருளாதாரச் சூழ்நிலையை மந்தநிலையில் வைத்துத் தான் பிரிட்டிஷ் செலுத்து நிலையைச் சமநிலையில் வைத்திருக்க முடிந்தது.[7]

**முடிவு :** முடிவாகக் கூறின் ஒரு நாணயமாற்று வீதம் சமநிலை வீதம் ஆகவேண்டுமாயின் அதற்கு மூன்று நிபந்தனைகள் : (1) அது குறிக்கும் காலம் குறைந்தபட்சமாக ஓர் ஆண்டு; அந்தக் கால அளவின்போது பன்னாட்டுச் சேமநிதிகளில் பெரிய மாறுதல் ஏதும் இருக்கக்கூடாது. (2) வாணிபத்தின்மீது புதுத் தடைகளை விதிக்காமலும் பழைய தடைகளைத் தீவிரப்படுத்தாமலும் செலுத்துநிலைச் சமநிலை ஏற்படவேண்டும். (3) சமநிலை ஏற்படுவதற்கு, வேலையின்மை நிறைய அளவுக்கு இருக்கவேண்டிய அவசியமில்லை.

### வாங்கும் சக்திச் சமநிலை (Purchasing Power Par)

எளிதில் கிடைக்கும் புள்ளி விவரங்களைக்கொண்டு அளக்க முடியுமான சமநிலை நாணயமாற்று விகிதம்பற்றிய கோட்பாடு ஒன்றை உருவாக்க உலகப் போருக்குப் பின் ஒரு முயற்சி செய்யப்பட்டது. இதற்கு 'வாங்கும் சக்திச் சமநிலைக் கோட்பாடு' என்று பெயர். இரு செலாவணிகளின் வாங்கும் சக்தியைச் சமமாக்கும் வீதமே சமநிலை விகிதம் என்றும், உண்மையில் வழங்கும் வீதம் தடையேதும் இல்லாவிடில் கிட்டத்தட்ட இந்த விகிதத்தில் இருக்கும் என்றும் அக் கோட்பாடு கூறுகிறது.

செலுத்துநிலைச் சமநிலை நிலவிய ஓர் ஆண்டை மூல ஆண்டாகக் (base year) கொண்டு அத்துடன் ஒப்பிட்டால், மற்றொரு குறிப்பிட்ட ஆண்டில் அமெரிக்காவில் விலைகள் மும்மடங்கு ஆகின்றன என்றும் பிரிட்டனில் 50 சதவிகிதம்தான் விலைகள் அதிகரிக்கின்றன என்றும் கொள்வோம். அப்படியாயின் டாலருக்கும் பவுனுக்கும் இடையான சமநிலை நாணயமாற்று வீதம் பழைய வீதத்தைப்போல இருமடங்கு இருக்கும். மூல ஆண்டில் மாற்றுவீதம் பவுனுக்கு 4 டாலர் என்றால் பின்னர் கூறிய ஆண்டில் வாங்கும் சக்தி வீதம் பின்வருமாறு இருக்கும் :

$$\$\,4 \times \frac{300}{150} = \$\,8$$

கடுமையாக அக் கோட்பாட்டுக்குப் பொருள் கூறுவதாயின், பன்னாட்டு விவகாரங்களைத் தீர்மானிக்கும் ஒரே காரணி, பொருள்களின் தராதர விலைகளே என்று அது ஒப்புக்கொள்கிறது எனலாம்.

[7] அதே கட்டுரை, பக்கங்கள் 6–7.

ஆனால், இது உண்மையன்று என்பதை நாம் அறிவோம். பொருள்களின் விலைகளைத் தவிர வேறு பல காரணிகள் செலுத்துநிலைச் சமநிலைக் கேட்டை ஏற்படுத்துவதை நாம் பார்த்திருக்கிறோம். உதாரணமாக, மூலதன இடப் பெயர்ச்சியின் வேகம், பணிகளுக்கான செலுத்துகைகள், உண்மை வருமானத்தின் அளவு ஆகியவற்றில் ஏற்படும் மாறுதல்களைக் கூறலாம்.

இருப்பினும், விலை மாறுதல்கள் நிறைய ஏற்பட்ட காலங்களில் சமநிலை வீதத்தின் அளவை ஏறக்குறைய கண்டுபிடிக்க வாங்கும் சக்திச் சமநிலை வேறெதையும்விட அதிகமாகப் பயன்படக்கூடும். இதைவிடத் துல்லியமாகச் சமநிலை வீதத்தை மதிப்பிடவேண்டுமாயின், அதேசமயத்தில் மக்களது விருப்பங்களிலும், உற்பத்தி முறைகளிலும், மூலதன இடப் பெயர்ச்சிகளிலும், உண்மை வருமானத்திலும் ஏற்படும் மாறுதல்களைக் கணக்கில் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

## மதிப்பிறக்கமும் பணச்சுருக்கமும் ஏன் கூடாது

இதுவரை ஆராய்ந்ததிலிருந்து செலுத்துநிலைச் சமநிலைக் கேட்டைத் திருத்த இரண்டு வெவ்வேறு வழிகளில் ஒன்றைக் கடைப்பிடிக்கலாம் என்றறிந்தோம்.

ஒரு நாட்டின் செலாவணி முழுமையாகத் தன்னிச்சையாக இருந்து, ஒரு பற்றுக்குறை ஏற்பட்டால் வெளிநாட்டு நிலுவைகளை உபயோகித்து அதற்குப் பணம் ஏற்பாடு செய்ய அந் நாடு முயலாமல் இருந்து, நாணயமாற்று வீதங்கள் அங்காடிச் சக்திகளால்மட்டும் நிர்ணயிக்கப்படும் சூழ்நிலையில் (திடநிலையை உலைக்கும் ஊக வாணிபம் இல்லாவிட்டால்), செலுத்துநிலை நாணயமாற்று வீதம் உயருவதால் திருத்தப்படும். நாட்டு வருமானத்தில் முக்கியமான மாறுதல் ஏதும் ஏற்படத் தேவையில்லை.

ஒன்றையொன்று சார்ந்த செலாவணிகள் அதற்கு நேர் எதிர்க் கோடியில் உள்ளவை. இங்கு முதலில் ஏற்படும் பற்றுக்குறை முழுவதற்கும் வெளிநாட்டு நிலுவைகள் அல்லது பொன் சேமநிதிகள் இழப்பதன்மூலம் ஒரு நிதி ஏற்பாடு செய்யப்படுகிறது ; நாணயமாற்று வீதம் ஏறி இறங்குவதில்லை, அது மாறாமல் வைத்திருக்கப்படுகிறது. காலம் செல்லச்செல்ல, வருமானத்தில் தூண்டப்பட்ட குறைவின் விளைவாக இறக்குமதிகள் குறைவதாலும், அதோடு ஏற்படும் விலை வீழ்ச்சியின் பயனாக இறக்குமதி ஏற்றுமதிகளில் மாறுதல்கள் ஏற்படுவதாலும் பற்றுக்குறை நீக்கப்படுகிறது. கடன் செலாவணி பல மடங்கு சுருங்குவதும், மத்திய பாங்கு வேண்டுமென்றே கடன் செலாவணிகள்மீது தடை விதிப்பதும்கூடச் சேர்ந்துகொண்டால் பற்றுக்குறையைத் தீர்க்கும் இயக்கம் மேலும் பலப்படுகிறது.

இவ்விரு திருத்த முறைகளுக்கும் பலமான எதிர்ப்புத் தோன்றி யுள்ளது. நாணயமாற்று வீதங்களை மாற்றுவதைமட்டும் கையாளு வதனால் நடைமுறையில் அவை இடைவிடாது மாறிக்கொண்டிருக்கும் என்பது மதிப்பிறக்கத்துக்கு எதிரான வாதம். ஒரு சமநிலை வீதத்தி லிருந்து மற்றொன்றுக்கு, ஒரே ஒருமுறை, ஒழுங்காக, மாற்றுவது என்பது நடக்க முடியாதது என்று கருதப்படுகிறது. அது கோட்பாட் டளவில்தான் உண்மை. அது பல உண்மையற்ற எடுகோள்களை அடிப் படையாகக் கொண்டது. ஏனெனில், இன்றைய உலகில் தேவை நிலவரமும் அளிப்பு நிலவரமும் இடைவிடாது மாறிக்கொண்டிருக் கின்றன. இவ்வாறு இடைவிடாது மாறும் பிரத்யட்ச சூழ்நிலையில் நாணயமாற்று வீதங்களும் இடைவிடாது மாறும்; வியாபாரத்தில் நஷ்ட பயங்கள் அதிகரிக்கும்; வியாபாரம் செய்பவர்களை தண்டிக்கிற மாதிரி நிலை ஏற்படும். நன்கு அமைந்த முன்னேக்கிய நாணயமாற்று அங்காடிகள் எதிர்காப்பு ஒப்பந்தங்கள் செய்ய வசதிகள் அளிப்பதன் மூலம் இந் நஷ்ட பயத்தைப் பெரிதும் குறைக்கக்கூடும். இருந்த போதிலும் அவை எல்லா வாணிபத்துக்கும் நன்மை பயக்காது, நஷ்ட பயம் முழுவதையும் நீக்காது என்று சுட்டிக்காட்டப்படுகிறது. இது ஓரளவுக்கு உண்மையே. தவிர, நாணயமாற்று வீதங்கள் மாறிக் கொண்டே இருக்கும் நிலையில் ஊகவாணிபம் நிச்சயமாகத் தோன்றும். ஒரு செலாவணி திணறிக்கொண்டிருக்கும்போது மதிப்பிறக்கத்துக்கு ஒரு வரம்பு எதிர்பார்க்க முடியாமலிருந்தால் ஊகவாணிபம் திடநிலை அகற்றும் சக்தியாக இருக்கும். இறுதியாக மற்றொரு குறை; செலாவணி மதிப்பிறக்கத்தினால் உள்நாட்டு விலைவாசிகள் உயர்ந்து பணவீக்க ஏற்றச்சுழல் ஏற்படக்கூடிய பயமும் உள்ளது. இக் காரணங்களால் எந்த நாடும் நெடுங்காலத்துக்கு முழுவதும் தன்னிச்சையாக மாறும் நாணயமாற்று வீதங்களை ஏற்றுக்கொள்ளவில்லை. இதற்கு முக்கிய மான ஒரு விதிவிலக்கு 1950-லிருந்து 1952 வரை கனடா நாடு ஆகும்.

பொன் திட்ட உதாரணத்தில் காணும் வருமானமும்-விலையும்-முறைத் திருத்தத்துக்கு அதைவிட பலமான எதிர்ப்பு உள்ளது. இந்தத் திருத்தமுறைசெயல்படும்போது, ஒரு செலுத்துநிலைச் சமநிலைக் கேட்டை, அதாவது புறச் சமநிலைக் கேட்டை நீக்கி அதற்கு பதிலாக ஓர் அகச் சமநிலைக் கேட்டை அது உண்டாக்குகிறது; வருமானச் சுருக்கம், வேலையின்மை, உற்பத்திக் குறைவு ஆகிய விளைவுகள் உள் நாட்டில் ஏற்படுகின்றன. வியாதியைவிட மருந்து கொடுமையாக இருக்கிறது என்று இதன் எதிர்ப்பாளர் கூறுகின்றனர்.

அன்னியச் செலாவணி அல்லது பொன் சேமநிதிகள் குறைவதால் ஏற்படும் பணச்சுருக்க விளைவுகளுக்கு எதிராக 1920-க்கு அடுத்த பத்தாண்டுகளில் பல மத்திய பாங்குகள் இவற்றின் இடப் பெயர்ச்சி

களைப் பயனற்றதாக்கும் கொள்கையைக் கடைப்பிடித்தன. ஒரு செலுத்துநிலைப் பற்றுக்குறையின் காரணமாக வைப்புகள் சுருங்கி பாங்குச் சேமநிதிகள் நஷ்டமானால், அதற்கு ஈடுசெய்யுமாறு மத்திய பாங்கு பகிரங்க அங்காடியில் பத்திரங்களை வாங்கும். இதனால் பாங்குச் சேமநிதிகள் மீண்டும் பழையநிலை அடையும். கடன்களின் அடித்தள மாவது பாதிக்கப்படாமல் தப்புகிறது. அதேபோலப் பொன், நாட்டுக் குள் வந்தால் அதன் விளைவுக்கு எதிரிணையாகப் பகிரங்க அங்காடியில் பத்திரங்கள் விற்கப்பட்டன. இம் முறையினால் ஒரு நாட்டின் பணத் தின் அளவும் ஓரளவுக்கு அதன் நாட்டு வருமானமும், செலுத்துநிலையி னின்று ஏற்படும் விளைவுகளால் பாதிக்கப்படாமல் பாதுகாக்கப்பட்டன.

## ஒரு நடுநிலையான தீர்வு : கட்டுக்கடங்கிய மதிப்பிறக்கமும் நாணயத்தின் மதிப்பைக் குறைப்பதும் (Devaluation)

1930-க்குப் பின் பத்து ஆண்டுகளில் இவ்விரு வகைத் திருத்த முறைகளையும் கலந்து செயலாற்றக்கூடிய ஒரு கலவை முறையாக்கிப் பன்னாட்டுத் திருத்தப் பிரச்சினைக்கு ஒரு நடுநிலையான தீர்வு காண முயற்சிகள் செய்யப்பட்டன.

### கட்டுக்கடங்கிய மதிப்பிறக்கம் (Controlled Depreciation)

அத்தகைய முயற்சிகளில் ஒன்று, நாணயமாற்றுவீத மாறுதல்களை முக்கியமான அடிப்படையாகக் கொண்டது. இம் மாறுதல்கள் குறிப் பிட்ட வரம்புகளுக்குள் வைத்திருக்கப்படுகின்றன. அல்லது ஏற்படும் மதிப்பிறக்கம் படிப்படியாகவும் கட்டுக்கடங்கியும் ஏற்படுமாறு பார்த்துக்கொள்ளப்படுகிறது. இக் குறிக்கோளை அடைய ஒரு சாதனம் வேண்டுமல்லவா. அதற்காகப் பெரும்பாலான நாடுகள் ஒரு நிதியை அமைத்தன. நாணயமாற்று வீதத்தைத் திடநிலைப்படுத்துவதே இந் நிதியின் குறிக்கோள்.[8] இந்த நாணயமாற்றுச் சமன்காப்பு நிதிகள் (Exchange Stabilization Funds) நாணயமாற்று வீதங்கள் விழும் போது அன்னியச் செலாவணியை வாங்கின ; வீதங்கள் உயரும்போது அன்னியச் செலாவணியை விற்றன ; இவ்வாறு நாணயமாற்று வீதங் களில் பருவகால மாறுதல்களையும், ஊகவாணிப மாறுதல்களையும் கடுமையாக இராமல் செய்தன. நாணயமாற்று வீதங்கள் இதைவிட அடிப்படையான காரணங்களான, பொருள்கள், பணிகள், நெடுங்கால மூலதன மாற்றுகைகள் ஆகியவற்றுக்கான அன்னியச் செலாவணித்

[8] உதாரணமாக, பெல்ஜியம், கனடா, ஃபிரான்ஸ், நெதர்லாந்து, ஸ்விட்ஜர் லாந்து, பிரிட்டன், ஐக்கிய அமெரிக்கா ஆகியவை.

தேவையையும் அளிப்பையும் பொறுத்து மாறக்கூடும் அல்லவா? அத்தகைய மாறுதல்களேயும் இதேபோல அந் நிதிகள் மட்டுப் படுத்தின; சில சமயம் அவற்றை ஈடும் செய்தன. மேலும், தமது செயல்முறையின்மூலம் உள்நாட்டுப் பண அளிப்பை மாறுதல் அடை யாமல் பெரும் அளவுக்கு இப் பல்வேறு நிதிகள் பாதுகாத்தன.

உதாரணமாக, செலுத்துநிலையில் அழுத்தம் ஏற்பட்டுப் பவுனின் மதிப்பு இறங்கத் தொடங்கும்போது பிரிட்டிஷ் நாணயமாற்றுச் சமன் காப்புநிதி பவுனுக்கு ஆதரவு தந்தது. இதற்காகத் தன் வசமிருந்த பொன்னை விற்று அன்னியச் செலாவணியை வாங்கியது. நடப்பு விகிதத்தில் அன்னியச் செலாவணிக்கு அதன் அளிப்பைவிட அதிகமாக ஏற்பட்ட தேவையைத் தீர்க்க அன்னியச் செலாவணியை அளித்தது. இறக்குமதியாளர்களிடமிருந்தும் ஊகவணிகர்களிடமிருந்தும் பவுன் களைப் பெற்றது.

இப் பவுன்களை அது புழக்கத்தில் விடாமல் தானே வைத்திருந்தால் இதன் விளைவாகப் பணச்சுருக்கம் ஏற்படும். ஆனால், சாதாரணமாக இப் பவுன்களைப் பண அங்காடியில் அந் நிதி அளித்துக் குறுகியகாலக் கருவூல உண்டியல்களை வாங்கிற்று. இதனால் உள்நாட்டுப் பணஅளிப்பு மாறுதிருந்தது; பணத்தை வைத்திருப்பவர்களில்தான் மாறுதல் ஏற்பட்டது.[9] பணக்கொள்கையின் குறிக்கோள்களுக்கு ஒத்த அள வுக்குத்தான் பண அளிப்பிலும், நாட்டு வருமானத்திலும் மாறுதல்கள் அனுமதிக்கப்பட்டன.

1932 ஜூனிலிருந்து 1940-ன் முதல் சில மாதங்கள் வரை பிரிட்டன் இம் முறையைமட்டுமே கையாண்டது. அதற்குப் பிறகு இம் முறை யோடு நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளையும் சேர்த்து உபயோகித்தது. உலகப்போருக்கு முன் இந் நிதிகளின் அனுபவத்தின் முதல் ஆண்டின் முடிவிலிருந்து பார்த்தால் மிக முக்கியமான டாலர், ஸ்டர்லிங் வீதத்தின் மாறுதல்கள் 10 சதவிகிதத்துக்கு அதிகம் மிகாமல் கட்டுப்படுத்தி வைக்கப்பட்டன. ஃபிரான்ஸின் நிதியின் அனுபவமும் அத்தகையதே. ஆனால், அங்கு அதன் கால அளவுதான் குறைவு. 1933 நவம்பருக்கும் 1936 செப்டெம்பருக்கும் இடையே ஃபிராங்கு/டாலர் விகிதமும் ஏறக் குறைய அதே வீச்சுக்குள்தான் மாற்றிற்று.

### நாணய மதிப்பைக் குறைப்பது (Devaluation)

மாருத நாணயமாற்று வீதங்களுக்கும் தடையின்றி மாறும் வீதங் களுக்கும் இடையே இரண்டாவது நடுநிலையான ஏற்பாடு ஒன்று

[9] இதில் ஒரு திருத்தம் என்னவென்ருல் நாணயமாற்றுச் சமன்காப்பு நிதிகள் பொதுமக்களோடும் பாங்குகள் அல்லாத நிறுவனங்களோடும் விவகாரங்களை வைத்துக்கொள்ளாமல் பாங்குகளுடன்மட்டுமே அவற்றை நடத்தின.

உள்ளது. அது படிப்படியாக உருவாகி இரண்டாம் உலகப்போருக்குப் பின், பன்னாட்டுச் செலாவணி நிதியின் சாசனத்தில் அதிகாரபூர்வமாக இடம் பெறுவதன்மூலம் முக்கியத்துவம் அடைந்துள்ளது. அதன் இப் போதுள்ள அதிகமான அளவிலிருந்து சமநிலை மீண்டும் ஏற்படுத்தக் கூடும் என்று எதிர்பார்க்கப்படும் குறைவான அளவுக்கு அங்காடிச் சக்திகளால் அழுத்தப்படும் செலாவணியின் மதிப்பைக் குறைப்பதே அந்த ஏற்பாடாகும். மதிப்பிறக்கம் என்பது படிப்படியாகவும் ஒரு கட்டுக்கடங்கியும் ஒரு செலாவணியின் மதிப்பு கீழே இறங்குவது; அது குறிப்பாக இந்த அளவுதான் இறங்கும் என்று சொல்ல முடியாதது. நாணய மதிப்பைக் குறைத்தலோ ஒரேயடியாக ஒரு குறிப்பிட்ட அளவுக்கு செலாவணியின் மதிப்பைக் கீழே இறக்குவதாகும்.

செலாவணி மதிப்பிறக்கத்தின்போது (நாணயமாற்று வீதம் அதிகரிக்கும்போது) ஏற்றுமதிகள் தூண்டப்பட்டு இறக்குமதிகள் குறையும் அல்லவா. அதே வழியில்தான் நாணய மதிப்பின் குறைப்பும் செலுத்துநிலைச் சமநிலைக் கேட்டைச் சரி செய்யச் செயலாற்றுகிறது. நிலையான நாணயமாற்று வீதங்கள் உள்ள சூழ்நிலையில் திருத்தம் ஏற்படும்போது வருமானச் சுருக்கம் ஏற்படுகிறது. இம் முறையில் அது தவிர்க்கப்படுகிறது. மிக மோசமான சமநிலைக் கேடு ஏற்பட்டால் தான் செலாவணியின் மதிப்புக் குறைக்கப்படும். எனவே, நாணய மாற்று வீதங்கள் அடிக்கடி மாற்றப்படுவதில்லை என்றுதான் அனுமானிக்க வேண்டும். ஆகையால், மாறும் விகிதங்கள் உள்ள சூழ்நிலையில் ஏற்படும் சுலபமான திருத்தச் செயல்முறையின் நன்மைகளோடு நெடுங்காலங்களுக்கு நாணயமாற்று வீதங்களைத் திடநிலையில் வைத்திருப்பதனால் ஏற்படும் நன்மைகளையும் நாணய மதிப்பைக் குறைக்கும் முறை கொண்டிருக்கிறது.

தடையின்றி வீதங்கள் எளிதில் மாறும்நிலையில் இருந்ததுபோலவே, செலாவணியின் மதிப்பைக் குறைப்பதனால் ஏற்படும் விளைவு, முதலில் நாணயமாற்றின் தேவை, அளிப்பு ஆகியவற்றின் நெகிழ்ச்சியைப் பொறுத்திருக்கிறது. ஏதாவது சில விசேஷ காரணங்களுக்காக இந் நெகிழ்ச்சிகள் மிகவும் குறைவாக இருந்தால், செலாவணி மதிப்பைப் குறைப்பதனால் சமநிலை மீண்டும் ஏற்படாமல்போகும்; அல்லது மிக அதிகமான அளவுக்குச் செலாவணி மதிப்பைக் குறைத்தால்தான் சமநிலை மீண்டும் ஏற்படும். நாம் முன்னரே கூறியபடி எந்த ஒரு நாட்டுக்கும் இந்த நெகிழ்ச்சிகளின் அளவு கணிசமாக இருக்கும் என்று எதிர் பார்க்கலாம். அதுவும், புதுவிலைத் தொடர்புகளின் முழு விளைவுகளும் ஏற்படப் போதுமான அவகாசம் கொடுத்தால் இந் நெகிழ்ச்சிகளின் அளவு நிறையத்தான் இருக்கும்.

**செலாவணி மதிப்பைக் குறைப்பதால் வருமான விளைவுகள்**

நாணயமாற்று வீதங்கள் தடையின்றி மாறும்போது மதிப்பிறக்கம் ஏற்படாமல் உள்நாட்டுத்துறையில் ஏற்படும் சுருக்கத்தை உதாரணமாக ஏற்றுமதித்துறையில் ஏற்படும் விரிவு முழுமையாகவோ ஓரளவுக்கோ ஈடுசெய்யும்; அதனால், மொத்த நாட்டு வருமானம் அதிகமாகப் பாதிக்கப்படாது என்று பார்த்தோம்.

ஆனால், ஒரு நாடு தன் செலாவணியின் மதிப்பைக் குறைத்தால் சாதாரணமாக அதன் விளைவு இதனின்று வேறுபட்டிருக்கும். சில காலத்துக்குத் தொடர்ந்து இருந்து வந்து, ஏற்கெனவே இருக்கும் செலுத்துநிலைப் பற்றுக்குறையைத் திருத்துவதற்காகச் செலாவணி மதிப்பைக் குறைப்பது என்ற முடிவு செய்யப்படுகிறது. அதாவது, திருத்தச் செயல் தொடங்கும்போது இறக்குமதிகள், ஏற்றுமதிகளைவிட அதிகமாக இருக்கின்றன. செலாவணி மதிப்பைக் குறைத்ததால் இறக்குமதிகளும் ஏற்றுமதிகளும் சமமாகின்றன. இது ஏற்பட வேண்டுமாயின், இரண்டின் உள்நாட்டு மதிப்பும் அதிகரிக்கவேண்டும்; ஏற்றுமதிகளின் உள்நாட்டு மதிப்பு இறக்குமதிகளின் உள்நாட்டு மதிப்பைவிட அதிகமாக உயரவேண்டும். எனவே, வருமானத்தில் ஒரு நிகர உயர்வு நிச்சயம் ஏற்படும்.

$$Y = C + I + G + (X - M)$$

என்ற நாட்டு வருமானச் சமன்பாட்டின்படி கூறினால், (செலாவணி மதிப்பைக் குறைக்கு முன்) $X$-ஐவிட $M$ பெரியதாக உள்ள நிலையில் நாம் தொடங்குகிறோம்; $(X - M)$ நிகரமாக நாட்டு வருமானத்தில் சேர்ப்பது ஓர் எதிர்கணியத் தொகை. செலாவணி மதிப்பைக் குறைப்பதால் உள்நாட்டுப் பணத்தில் $M$-ன் மதிப்பு உயருகிறது. $X$-ன் மதிப்பு அதைவிட அதிகமாக உயர்ந்தால் தான் அது $M$-க்குச் சமமாகும். ஆனால், மாறும் நாணயமாற்று வீதங்கள் விஷயத்தில் தொடங்கும்போது $X$-ம் $M$-ம் சமமாக இருக்கின்றன; மதிப்பிறக்கம் ஏற்பட்ட பின்னும் அவை சமமாக இருக்கின்றன. வேறுவிதமாகச் சொன்னால், செலாவணி மதிப்பைக் குறைக்கும்போது, பொருளாதாரத்தில் வேறு துறைகளில் குறையும் வருமானத்தால் ஈடு செய்யப்படாது ஒரு வருமான உயர்வு ஏற்படுகிறது. ஏற்றுமதிகளின் மொத்த மதிப்பு அதிகமாகும்போது ஏற்றுமதி விலைகள் மாறாமல் இருந்தால் (அல்லது நாணயமாற்று வீதத்தைவிடக் குறைந்த விகிதாசாரத்தில் உயர்ந்தால்) பண வருமானத்தில் மட்டுமன்றி உண்மை வருமானத்திலும் ஓர் உயர்வு ஏற்படும் என்பதை இங்குச் சேர்த்துக் கொள்ளலாம்.

செலாவணி மதிப்பைக் குறைக்கும் முறை செலுத்துநிலையைத் திருத்தும் வழியாக எவ்வளவுக்குப் பயன்தருகிறது என்பதைக் காணச்

செலாவணி மதிப்பைக் குறைப்பதால் ஏற்படும் இந்த வருமான விளைவைக் கருதவேண்டும். ஏனெனில், வருமானம் உயரும்போது, இறக்குமதிகள் உயரும். பற்றுக்குறை மீண்டும் ஏற்படும். செலாவணி மதிப்பைக் குறைப்பதால் ஏற்படும் விலை விளைவுகளையும் நெகிழ்ச்சி விளைவுகளையும் மூழ்கடிக்கக்கூடும் அளவுக்கு, வருமானத்திலும் இறக்குமதியிலும் உயர்வு ஏற்படக்கூடும். முடிவில் பற்றுக்குறை ஏறக்குறைய முன்னிருந்த அளவிலேயே இருக்கும்.

வருமானத்தில் தூண்டப்பட்ட மாறுதல்களின் 'நேர்மாறுதல் விளைவு' (reversal effect) எவ்வளவு அதிகமாக இருக்கும் என்பது முதலாவதாக, வருமான உயர்வையும் அதனுல் பெருக்கியையும், இரண்டாவதாக, இறுதிநிலை இறக்குமதி நாட்டத்தையும் பொறுத்திருக் கும். இறுதிநிலைச் சேமிப்பு நாட்டம், இறுதிநிலை இறக்குமதி நாட்டம் இரண்டையும் பயன்படுத்திக் கூறப்படும் ஒரு 'நேர்மாறுதல் குணகத் தால்' (reversal coefficient) இவ் விளைவு அழகாகக் கூறப்பட்டிருக் கிறது.[10] செலாவணி மதிப்பைக் குறைக்கு முன்னர் பொருளாதாரம் முழு வேலைநிலையில் இல்லை என்ருல், s-க்கும் $m$-க்கும் சாதாரணமாக இருக்கக்கூடிய மதிப்புகள் இருக்குமாயின் வருமானத்தை நேர்மாருக் கும் விளைவு, விலை விளைவை ஒரு வரம்புக்குள்தான் ஈடுசெய்யும். ஆனுல், பொருளாதாரத்தில் முழு வேலைநிலையிருந்தால் பண வருமானம் தான் உயரும்; உண்மை வருமானம் உயராது; உள்நாட்டு விலைகள் உயரும்; செலவுகள் இறக்குமதி ஏற்றுமதிகளை நோக்கிப் பாயும்; $m$-ன் மதிப்பு மிகவும் உயரும். பணவீக்கச் சூழ்நிலையில் இறுதி

[10] S. Alexander, 'Effects of a Devaluation: A Simplified Synthesis of Elasticities and Absorption Approaches,' *American Economic Review*, Vol. XLIX (March, 1959). செலாவணி மதிப்பைக் குறைப்பதனுலான விலை விளைவுகளின் பயனுகச் செலுத்துநிலையில் முதலில் ஏற்பட்ட அபிவிருத்தி $E_f$ ஆனுல், நேர்மாருதல் விளைவை இவ்வாறு கூறலாம்.

$$\frac{1}{1+\frac{m_1}{s_1}+\frac{m_2}{s_2}}$$

இங்கு s-க்கும் $m$-க்கும் பழைய அர்த்தமே. '1' என்று எழுத்தின்கீழ் கொடுத் திருப்பது மதிப்பைக் குறைக்கும் நாட்டையும், '2' என்பது பிற எல்லா நாடுகளையும் குறிக்கின்றன. செலுத்துநிலையில் நிகர அபிவிருத்தி அப்போது பின்வருமாறு இருக்கும்:

$$\frac{E_f}{1+\frac{m_1}{s_1}+\frac{m_2}{s_2}}$$

அலெக்ஸாண்டரின் ஆராய்ச்சி, செலுத்துநிலை சமநிலையில் இருப்பதாகக் கொண்டு தொடங்குவதால், பற்றுக்குறை நிலையிலிருந்து தொடங்கினுல் இம் முடிவைச் சிறிது திருத்தவேண்டியிருக்கும்.

நிலைச் சேமிப்பு நாட்டம் மிகக் குறைவாக இருக்கும். அது எதிர்க் கணிய எண்ணாகவும் இருக்கலாம். பெருக்கி, சிறியதாக இருந்தால் கூட, வருமான உயர்வு முழுதும் அல்லது அதில் பெரும்பகுதி இறக்கு மதிகள்மீதும் ஏற்றுமதி செய்யக்கூடியவைமீதும் செலவிடப்படும். செலாவணி மதிப்பைக் குறைப்பதனால் செலுத்துநிலைமீது ஏறக்கூடிய சாதகமான எந்தப் பயனும் வருமான விளைவினால் பெரும்பாலும் மறைந்துவிடும்.

எனவே, பொருளாதாரத்தில் முழு வேலைநிலை இருக்கும்போது செலாவணி மதிப்பைக் குறைப்பதனால் செலுத்துநிலைச் சமநிலைக் கேடு திருத்துவது என்பது அரிது. இதைப் பொருட்படுத்தாமல், இத்தகைய சமயத்தில் ஒரு நாடு தன் செலுத்துநிலைச் சீர்கேட்டைப் போக்கத் தன் செலாவணியின் மதிப்பைக் குறைக்குமாயின், அதேசமயம் மிகத் தீவிரமாக உள்நாட்டில் பணச்சுருக்கக் கொள்கையைத் தவறாமல் கடைப்பிடிக்கவேண்டும். அத்தகைய கொள்கை இல்லாவிட்டால் ஏற்கெனவே மோசமாகவுள்ள வெளிநாட்டுச் செலுத்துநிலையோடு உள் நாட்டில் பணவீக்கமும் சேர்ந்துகொள்ளும்.

### ஊகவாணிபமும் செலாவணி மதிப்பைக் குறைப்பதும்

அரசாங்கம் செலாவணி மதிப்பைக் குறைக்கும் கொள்கையைக் கடைப்பிடிக்கிறது என்றால், அதை அடிக்கடி செய்யாது என்று பொருள். எனவே, அடிக்கடி மாறாமல் நெடுங்காலத்துக்கு ஒரு நாட்டின் செலாவணி ஒரு நிலையான நாணயமாற்று வீதத்தில் முளையறைந்து (pegged) வைக்கப்பட்டிருக்கும். சாதாரணமாக, நிலையான வீதங்களை வைத்திருந்து எப்போதாவது மதிப்பை மாற்றும் கலப்பு முறைக்குத் 'தக்கவாறு முளை மாற்றம்' (adjustable peg) முறை என்று பெயர். பிற நடுநிலைத் தீர்வுகளைப் போலவே இதற்கும் சில குறைகள் உள்ளன. முளை அளவில் ஒரு மாறுதல் விரைவில் ஏற்படக்கூடிய நிலையில் ஊக வணிகர்களுக்கு நிச்சயமான ஒரு லாபத்துக்கு, தக்கவாறு முளைமாற்றும் முறை உறுதி அளிக்கிறது. இதுவே இம் முறையின் பெருங்குறை ஆகும்.

முளையடிக்கப்பட்ட வீதத்தில் செலாவணி தொடர்ந்து வைக்கப் பட்டிருக்கும் என்று நிச்சயமாக ஊகவணிகர்கள் நம்பும்வரை அவர்கள் அச் செலாவணியை ஆதரிக்கத் தயாராக இருப்பர். செலாவணி மதிப்பு இருக்கவேண்டியதைவிட அதிகமாக இராமல் நாட்டின் செலுத்துநிலை பெரும்பாலும் சமநிலையில் இருந்தால் இவ்வாறு நடக்கும். அப்போது, செலாவணி பொன்னோடு பிணைக்கப்பட்டிருப்பதாலோ, அதிகாரபூர்வ மாக பலத்த ஆதரவு அதற்கு இருப்பதாலோ, நாணயமாற்றுவீத மாறு தல்களுக்கு உச்ச வரம்பு ஒன்று ஏற்பட்டிருந்தால், பின்னர் குறைந்த

விலையில் அன்னியச் செலாவணியை மீண்டும் வாங்கலாம் என்ற நிச்சய மான நம்பிக்கையில், அன்னியச் செலாவணியின் தேவை வலிவாக இருக்கும்போது ஊகவணிகர்கள் அச் செலாவணிகளை விற்று லாப மடையக்கூடும்.

ஆனால், இருக்கவேண்டிய அளவைவிட அதிகமாக அச் செலாவணி யின் மதிப்பு இருந்து, செலுத்துநிலையில் கடுமையான அழுத்தங்கள் காணப்பட்டால், அதிக மதிப்பில் முளையடித்த அளவுக்கு எதிராக ஊக வணிகர்களின் செலாவணி விவகாரங்கள் நடக்கும். (அரசாங்க ஆதரவு தொடர்ந்து இருக்கும் வரை) அந்த நிலையான வீதத்தில் அன்னியச் செலாவணிகளை வரம்பின்றி அவர்கள் வாங்குவர். ஏனெனில், நிச்சய மாக நாணயத்தின் மதிப்புக் குறையவேண்டும்; அப்போது இச் செலாவணிகளை அதிக விலைக்கு விற்கலாம் என்று அவர்கள் எதிர் பார்க்கிறார்கள். இத்தகைய ஊகவாணிபம் செலுத்துநிலை அழுத்தங் களை மேலும் மோசமாக்கி நாட்டின் சேமநிதிகள் விரைவில் தீர்ந்து போக வழி செய்யும். இத்தகைய ஊகவாணிபம் கோணலாகவோ, சாதாரணமாக எதிர்பார்ப்பதற்கு மாறாகவோ நடந்து திடநிலையை அழிக்கிறது என்று கூறமுடியாவிட்டாலும், இதனால் நாட்டின் நலன் கெடுகிறது. ஊகவணிகர்கள் லாபமடைவது ஒன்றுதான் இதனால் விளையும் பயன்.

அனாவசியமாகச் சேமநிதிகள் நஷ்டமடைவதையும் ஊகவணிகர்கள் எதிர்பாராத பெரு லாபமடைவதையும் தடுக்க, அது அவசியம் என்று தெரிந்த உடனே நாணயத்தின் மதிப்புக் குறைக்கப்பட வேண்டும். எந்தச் சமயத்தில் அதைச் செய்வது என்பது ஒரு நாட்டின் பண நிர்வாகத் துறையினருக்கு ஒரு கடினமான பிரச்சினை யாகும். இதனால்தான் செலாவணியின் மதிப்பைக் குறைப்பதற்கு முன்னர் எப்போதும் அவ்வாறு செய்யப்போவதில்லை என்று அதிகார பூர்வமாக வன்மையான மறுப்புகள் வெளியிடப்படுகின்றன.

### முடிவு

தேவையற்ற ஊகவாணிபத்தைத் தூண்டிவிடக்கூடிய அபாயம் இருந்தபோதிலும் ஒரு தனிநாட்டின் செலுத்துநிலைக் கேடுகளுக்குச் செலாவணி மதிப்பைக் குறைப்பது ஒரு நல்ல மருந்தாகும். அதுவும் செலாவணியின் மதிப்பு இருக்கவேண்டியதைவிட அதிகமாக முதலில் வைக்கப்பட்டதால்தான் இக் கேடுகள் ஏற்பட்டன என்றால் இது முக்கியமாகப் பொருந்தும்.

செலாவணியின் மதிப்பைக் குறைக்கும்போது ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். முழு வேலைநிலைச் சூழ்நிலையில், கூடவே பணக்

கொள்கை, நிதிக் கொள்கைமூலம் சுருக்கத்தைத் தோற்றுவித்தாலொழிய, செலாவணி மதிப்புக் குறைப்புப் பலன் தராது. அதை உபயோகப்படுத்துவதற்குச் சாதகமாகப் பொருளாதாரத்தில் ஏதாவதொரு தளர்ச்சி இருந்தாலும்கூட, நிச்சயமாக அதன் விளைவாக ஏற்படக்கூடிய வருமான உயர்வையும் விலை உயர்வையும் தடுக்கப் பண அடக்கக் கட்டுப்பாடுகள் தேவை. செலாவணி மதிப்பைக் குறைப்பது பிற நாடுகளின் வணிகத்தை பாதிக்கிறது. எனவே—முக்கியமாகப் பல நாடுகள் செலுத்துநிலைப் பிரச்சினைகளால் வருந்திக் கொண்டிருந்தால்—போட்டி போட்டுக்கொண்டு பிற நாடுகளும் தம் நாணயங்களின் மதிப்பைக் குறைக்கும் அபாயமும் இருக்கிறது. இவ்வாறு நேரக்கூடும் ஆதலின் இவ் விஷயத்தில் பன்னாட்டு ஆலோசனைக்கும் பன்னாட்டு இணக்கத்துக்கும் ஓர் ஏற்பாடு செய்ய வேண்டும். பன்னாட்டுச் செலாவணி நிதியின் அமைப்பைப்பற்றிக் கூறும்போது (26ஆவது அத்தியாயத்தில்) இதை விவரமாகப் பார்க்கலாம்.

## பார்வைக்குரிய சில நூல்கள்

Alexander, Sidney S., 'Effects of Devaluation on a Trade Balance,' *IMF Staff Papers*, Vol. V. (April, 1952). செலாவணி மதிப்புக் குறைப்பின் சாதகமான விளைவு, உள்நாட்டில் (உண்மைச் செலவு) பொருள்கள் வாங்கப்படுவது குறைந்து, ஏற்றுமதிக்குப் பொருள்கள் விடுவிக்கப்படுவதே என்பதை முக்கியமாகக் கூறும் வருமான ஆராய்ச்சியை இதில் காணலாம்.

———, 'Effects of a Devaluation: A Simplified Synthesis of Elasticities and Absorption Approaches,' *American Economic Review*, XLIX (March, 1959). நேர்மாறுதல் காரணியைப் புகுத்திச் செலாவணி விளைவு, வருமான விளைவு இரண்டுக்கும் இடையான வேறுபாட்டை அகற்றுகிறது.

Bloomfield, Arthur I., *Monetary Policy Under the International Gold Standard*, 1880—1914. New York: Federal Reserve Bank of New York, 1959. புதுச் சான்றுகளின் அடிப்படையில் பொன் திட்டத்தின் இயக்கத்துக்கு ஒரு புது விளக்கத்தைத் தருகிறது.

Kindleberger, Charles P., *International Economics*, 3rd ed. Homewood, Ill.: Richard D. Irwin, Inc., 1963. வணிகச்சுழல், நெடுங்கால, அமைப்புச் சமநிலைக் கேடுகளைப்பற்றி மேலும் விவரமாகக் கூறி அவற்றின் திருத்த முறைகளை விளக்குகிறது.

Lary, Hal B., *The United States in the World Economy.* Washington, D. C.: Government Printing Office, 1943. இரு உலகப்போருக்கு இடையே அமெரிக்காவின் செலுத்துநிலையை மிக நன்றாக விவரிக்கும் நூல்களில் ஒன்றாக இன்னும் விளங்குகிறது.

League of Nations, *International Currency Experience* (1944). இரு உலகப்போருக்கிடையே இருந்த பன்னாட்டு நிதித் தொடர்புகள் பற்றிய அனுபவங்களைக் கூறுகிறது. நம் ஆராய்ச்சிக்கான விஷயங்களை முக்கியமாக 4, 5 அத்தியாயங்களில் காணலாம்.

Meade, James E., *The Balance of Payments.* New York: Oxford University Press, 1951. பல விஷயங்களைக் கூறும் நூல். உள்நாட்டுச் சமநிலை, வெளிநாட்டுச் சமநிலை இரண்டையும் பெறும் வழிகளை முக்கியமாக ஆராய்கிறது.

Whale, P. B., 'The Working of the Prewar Gold Standard,' *Economica*, IV (1937). 1914-க்கு முன் பொன் திட்டம் இருந்த நிலையை மிக நன்றாக விளக்குகிறது.

# 21. நாணயமாற்றுக் கட்டுப்பாடு
## (Exchange Control)

### மாற்றுரிமையும் திருத்தமும்

மாறுகின்ற நாணயமாற்று வீதங்கள், பொன் திட்டம் ஆகிய முக்கியமான இருவகைத் திருத்த முறைகளைப் பார்த்தோம். அங்காடிச் சக்திகளின் இயக்கத்தில் நேரிடையான குறுக்கீடு ஏதும் இல்லாதது, அவ்விரு முறைகளுக்கும் பொதுவான ஓர் அம்சமாகும். விலை மிகக் குறைவான இடத்தில் பொருள்களை வாங்கலாம். விலை அதிகமான இடத்தில் அல்லது பொருள்கள் மிகவும் தேவைப்படும் இடத்தில் அவற்றை விற்கலாம். மேலும், பன்னாட்டுச் செலுத்தல்களை எந்தச் செலாவணியிலும் செய்யலாம், எந்த அளவுக்கும் செய்யலாம், எந்தக் காரணத்துக்கும் செய்யலாம். மாறும் நாணயமாற்று வீதங்களால் திருத்தம் ஏற்பட்டாலும் சரி, மாருத வீதங்களோடு பணச் சுருக்கத்தினால் திருத்தம் ஏற்பட்டாலும் சரி, (அல்லது இவ்விரண்டின் ஒரு கலவையினால் ஏற்பட்டாலும் சரி) செலாவணிகள் முழு அளவுக்கு மாற்றுரிமை பெற்றுள்ளன. அன்னியச் செலாவணியை விற்றுத் தன் நாட்டுப் பணத்தின் மதிப்புக்கு அரசாங்கம் ஆதரவு தருவதுபோன்று ஏதாவது குறுக்கீடு ஏற்பட்டாலும் அது மறைமுகமான குறுக்கீடாகும். அதனால், அங்காடிச் சக்திகளின் விளைவுகள் பாதிக்கப்படுமேயன்றி, அச் சக்திகள் பாதிக்கப்படுவதில்லை. அவை சாதாரணமாகத் தடையின்றி இயங்கலாம்.

செலுத்துநிலைப் பிரச்சினைகளுக்கு எஞ்சியுள்ள மாற்று மருந்து நாணயமாற்றுக் கட்டுப்பாடாகும். முன்கூறிய இரண்டுக்கும் இதற்கும் அடிப்படையான ஒரு வேறுபாடு உண்டு. அங்காடிச் சக்திகளை இது பொருட்படுத்துவதில்லை. அவற்றின் இடத்தை அரசாங்க அதிகாரிகள் தம் விருப்பப்படி செய்யும் முடிவுகள் பிடித்துக்கொள்கின்றன. பன்னாட்டு விலை ஒப்பீடுகளால்மட்டும் இறக்குமதிகளும் பிற பன்னாட்டுச் செலுத்தல்களும் நிர்ணயிக்கப்படுவதில்லை. நாட்டுக்கு

எது அவசியம் என்று கருதப்படுகின்றனவோ, அவற்றுலும் நிர்ணயிக்கப்படுகின்றன. அரசாங்கக் குறுக்கீடு மறைமுகமாக இராமல் நேரிடையாக இருக்கிறது. ஆனல், பன்னாட்டுச் செலுத்தல்கள்மீது ஒரு கட்டுப்பாட்டுத் தொகுதியை விதிப்பதுதான் நாணயமாற்றுக் கட்டுப்பாட்டின் முக்கியப் பணியாதலின், மாற்றுரிமையும் கைவிடப் படுகிறது.

## நாணயமாற்றுக் கட்டுப்பாட்டின் முக்கிய அம்சங்கள்

பூரணமான நாணயமாற்றுக் கட்டுப்பாட்டு முறையில் அன்னியச் செலாவணி அங்காடிமீது அரசாங்கத்தின் முழு ஆதிக்கம் ஏற்படுகிறது. ஏற்றுமதிகளிலிருந்தும் பிற காரணங்களாலும் பெறும் வருவாய்கள் அனைத்தையும் கட்டுப்பாட்டு அதிகாரிகளிடம் கொடுத்துவிடவேண்டும். ஏமாற்றுவதைத் தவிர்ப்பதற்காக ஏற்றுமதி அனுமதிச் சீட்டுகளைக் காண்பித்தால்தான் சுங்க அதிகாரிகள் பொருள்களைக் கப்பலில் ஏற்ற அனுமதிப்பர். கட்டுப்பாட்டு அதிகாரிகளுக்கு அன்னியச் செலாவணி கொடுக்கப்படுவதற்கு அச் சீட்டுகள் உறுதி கூறுகின்றன. கிடைத்துள்ள அன்னியச் செலாவணியின் அளிப்பு, அதற்காகப் போட்டியிட்டு வாங்க முன் வருவோருக்கு அவரவர் தேவை நாட்டுக்கு எவ்வளவு முக்கியம் என்று ஒப்பிட்டுப் பங்கீடு செய்யப்படுகிறது. பல சமயங்களில் மூலதன ஏற்றுமதிகள் தடை செய்யப்படுகின்றன. வட்டி செலுத்துவதும் கடன்களைத் தீர்ப்பதும் மிகவும் கட்டுப்படுத்தப்படும். இறக்குமதிகளுக்குள், முக்கிய உணவுப் பொருள்கள், பெட்ரோலிய உற்பத்திகள், ஆலைகளின் கச்சாப் பொருள்கள் ஆகியவற்றுக்கு அதிகமாகவும், போகப் பொருள்களுக்கும் அத்தியாவசியமல்லாதவற்றுக்கும் குறைவாகவும் அன்னியச் செலாவணி பங்கிடப்படும்.

நாணயமாற்றுக் கட்டுப்பாட்டு முறைகள் யாவும் இவ்வளவு கடுமையாக இருப்பதில்லை. செலுத்துநிலை அழுத்தம் அதிகமாக இல்லை என்றும், அதன் முக்கியக் காரணம் மூலதன ஏற்றுமதியே என்றும் கொள்வோம். அப்போது கட்டுப்பாடுகள் கடுமையாக இராது. அன்னியச் செலாவணிக்கான விண்ணப்பங்களைப் பொதுவாக மேற்பார்வை செய்யப்படும்; சிலவகைத் தேவைகள்மட்டும் விதிமுறைப் படியன்றிப் பொதுவாகக் கட்டுப்படுத்தப்படலாம். உதாரணமாக, 1931-ல் பொன் திட்டத்தை பிரிட்டன் கைவிட்டபோது, மூலதன ஏற்றுமதிகள் தடை செய்யப்பட்டன. ஆனல், அரசாங்கக் கட்டுப்பாட்டு அமைப்பு ஏதும் நிறுவப்படவில்லை. தடையை வணிக பாங்குகளே அமல் செய்யுமாறு விடப்பட்டது.

இத்தகைய இளகிய கட்டுப்பாட்டு வகைகள் சாதாரணமாக நீண்ட காலத்துக்கு வைத்திருக்கப்படுவதில்லை. எந்தக் கஷ்டங்களுக்காக

அவை கொண்டுவரப்பட்டனவோ அக் கஷ்டங்கள் தீர்ந்ததும் அக் கட்டுப்பாடுகள் எடுபட்டுவிடும். செலுத்துநிலை அழுத்தம் தொடர்ந்து இருந்தாலோ, முக்கியமாக அது பலமாக இருந்தாலோ, இளகிய கட்டுப் பாடுகளுக்குப் பதிலாக எல்லாவற்றையும் பாதிக்குமாறு கடுமையான கட்டுப்பாடுகள் அமலுக்கு வரும்.

## நாணயமாற்றுக் கட்டுப்பாடு ஏன்?

செலுத்துநிலையில் பற்றுக்குறை ஏற்பட்ட ஒரு நாடு, மாறும் நாணயமாற்று வீதங்கள் அல்லது பணச் சுருக்கம் மூலம் செயல்படும் தானே இயங்கும் செயல்முறைகளையோ அல்லது அவை இரண்டும் கலந்த ஒன்றையோ பற்றுக்குறையைத் திருத்த ஏன் கையாளக் கூடாது? அதற்கு மாறாக, அந் நாடு செலாவணியின் மாற்றுரிமை, அங் காடியைத் தாமே சரியாக்கும் சக்திகள்மீது நம்பிக்கை வைத்தல் ஆகிய இரண்டையும் கைவிட்டு, அதிகாரிகள் தாம் விரும்பியதுபோல முடிவு களைச் செய்து அவற்றை அமல் செய்யும், எளிதில் செயலாற்றமுடியாத ஓர் அமைப்பை ஏற்படுத்துவானேன்? நாணயமாற்றுக் கட்டுப்பாடு களை எல்லா நாடுகளும் பெரிதும் விரும்புவதற்கு பலமான காரணங் கள் இருக்கவேண்டும். இரண்டாவது உலகப்போருக்குப் பின் பல ஆண்டுகளுக்கு அநேகமாக உலகம் முழுவதிலும் ஏதாவதோர் உருவில் இக் கட்டுப்பாடுகள் இருந்திருக்கின்றன. அப் போருக்கு முன்னும் பல ஐரோப்பிய நாடுகளும் பெரும்பாலான இலத்தீன் அமெரிக்க நாடு களும் அவற்றைக் கையாண்டன.

### தன்னிச்சையான முறைகளின் குறைகள்

இக் கேள்விகளின் விடைகளைத் தானே இயங்கும் திருத்த முறை களின் குறைகளில் காணலாம். அவற்றில் சில உண்மையாகவே உள்ளன; சில கற்பனை குறைகளாக இருக்கலாம். மேலும், சில குறிப்பிட்ட வகைச் சீர்கேடுகள் ஏற்பட்டால் நிலைமையைச் சமாளிக்கப் பிறமுறைகளைவிட நாணயமாற்றுக் கட்டுப்பாட்டுக்குத் திறன் அதிகம்.

நிலையான நாணயமாற்று வீதமுறைக்கு முக்கிய எடுத்துக்காட்டான பொன் திட்டத்தின்கீழ், பற்றுக்குறை நாட்டில் வருமானமும் வேலை களும் தாழ்ந்து, பண அளிப்புச் சுருங்கி விலைகளும் இறங்கினால்தான் நிலைமை சீராகும் என்பதைப் பார்த்தோம். இந்த ஒழுங்குமுறை மிகக் கடுமையானது. சீர்கேடும் அதற்கான திருத்தமும் கடுமையாக இல் லாமல் இருந்தாலொழிய, இவ்வொழுங்கு முறைப்படி நடக்கப் பெரும் துணிச்சல் தேவை. வெகுண்டு எழும் பொதுஜன அபிப்பிராயத்தைப் பொருட்படுத்தாமல் இருக்கக்கூடிய திறமைவேண்டும். எந்த ஜன நாயக அரசாங்கமும் இப்படி இருக்கமுடியாது.

மாறும் நாணயமாற்று வீதங்களை எடுத்துக்கொண்டால், பற்றுக் குறை நாட்டின் பொருளாதாரத்தை உலைவுபடுத்தாமல், உள்நாட்டு விலைகளுக்கும் வெளிநாட்டு விலைகளுக்கும் மீண்டும் ஒரு சமநிலை ஏற் படுத்தி அது பற்றுக்குறைப் பிரச்சினையைத் தீர்க்கிறது. ஆனால், மாறும் வீதங்களின் விளைவாக ஏற்படக்கூடிய மூலதன இடப் பெயர்ச்சிகள் திட நிலையைக் கலைக்கலாம் என்றும் இதனால் கடுமையான மதிப்பிறக்கம் ஏற்படக்கூடும் என்று பலர் பயப்படுகிறார்கள். ஊகவாணிபம் இல்லாவிட்டால்கூட, விதிவிலக்காக மிகக் குறைவான நெகிழ்ச்சியுடைய அன்னியச் செலாவணி அளிப்பும் தேவையும் கொண்ட ஒரு நாட்டைப் பொறுத்தவரை மதிப்பிறக்கம் மிக அதிகமாக இருக்கவேண்டும். இறுதியாக, மதிப்பிறக்கத்தைப் பின்பற்றிப் பணவீக்கம் ஏற்பட்டு அதைப்பற்றிய கசப்பான நினைவுகளைச் சில நாடுகள் இன்னமும் கொண்டிருக்கின்றன. மதிப்பிறக்கம்தான் பணவீக்கத்துக்குக் காரணம் என்று அவை தவறாக எண்ணுகின்றன. அந் நாடுகள், நாணய மதிப்பைக் குறைப்பதையும் அல்லது மாறக்கூடிய ஆனால் கட்டுப் படுத்திய நாணயமாற்று வீத முறையையும்கூடத் திருத்தத்துக்குப் பயன்படுத்துவதை வெறுக்கின்றன.

### மூலதன ஏற்றுமதிகளைத் தடுக்க நாணயமாற்றுக் கட்டுப்பாடு

இவ்வாறு, வேறு மாற்று வழிகளுக்கு ஏற்பட்டுள்ள நியாயமான எதிர்ப்புகளும் அறிவுக்குப் பொருந்தாத எதிர்ப்புகளும்தான் நாணய மாற்றுக் கட்டுப்பாட்டை நாடுகள் ஏற்றுக்கொள்வதற்கு முக்கியக் காரணங்களாகும். இவை தவிர, நாணயமாற்றுக் கட்டுப்பாட்டால் ஒரு நிச்சயமான நன்மை உண்டு. மூலதன இடப் பெயர்ச்சிகளைச் சமாளிப் பதில் இதற்கு ஈடில்லை. 1930-க்குப் பின் பத்தாண்டுகளில் இவ் விசேஷ நன்மையின் காரணமாகப் பல நாணயமாற்றுக் கட்டுப்பாட்டுத் திட் டங்கள் மேற்கொள்ளப்பட்டன. இப் பலவற்றுள் முக்கியமானவை ஜெர்மனி, டென்மார்க், மற்றும், அர்ஜெண்டினா நாடுகள் மேற் கொண்டவை.

அன்னியச் செலாவணி அங்காடிமீது அரசாங்கம் வலிவுள்ள சர்வா தீனத்தைப் பெறுமானால், மூலதன மாற்றுகைகளுக்கு அன்னியச் செலாவணியைத் தர மறுப்பதன்மூலம் மூலதன இடப் பெயர்ச்சிகளை ஒழித்துவிடலாம். மூலதனத்தை ஏற்றுமதி செய்யவேண்டுமென்ற ஆர்வம் அதிகமாக இருக்குமானால் அடிப்படை முறையான பங்கீட் டோடுகூட வேறு செயல்முறைகளையும் மேற்கொள்ளவேண்டியிருக்கும். கிடைக்கும் அன்னியச் செலாவணி அனைத்தையும் கட்டுப்பாட்டு அதிகாரிகளிடம் சமர்ப்பித்துவிடவேண்டும் என்ற விதியை ஏமாற்ற ஏற்றுமதிகளின் விலைப்பட்டியலைக் குறைத்தும் இறக்குமதிகளின் விலைப்பட்டியலை அதிகரித்தும் போடலாம். உண்மையில் $10 ஆயிரம்

பெறுமான ஏற்றுமதி ஒன்றுக்கு வெளிநாட்டு இறக்குமதியாளனுக்கு கொடுக்கும் விலைச்சீட்டில் $ 8 ஆயிரம் என்று எழுதப்படும். இவ்விரண்டுக்கும் உள்ள வித்தியாசத்தை ஏற்றுமதியாளனுடைய பெயரில் ஒரு வெளிநாட்டு பாங்குக் கணக்கில் கட்டிவிடவேண்டியது என்பது இருவருக்கும் இடையே ஒப்பந்தம். அல்லது, ஏற்கெனவே ஒப்பந்தம் செய்துகொண்டபடி வெளிநாட்டு ஏற்றுமதியாளன் உள்நாட்டு இறக்குமதியாளனுக்கு உள்ள விலையைவிட அதிகமான விலையைக் குறிப்பது; விலைப் பட்டியலைக் காண்பித்து இறக்குமதியாளன் அன்னியச் செலாவணியை வாங்கி ஏற்றுமதியாளனுக்குச் செலுத்துகிறன். அவன் அந்த வித்தியாசத்தை இறக்குமதியாளனின் பாங்குக் கணக்கில் கட்டிவிடுகிறன். மூலதனத்தை இம்முறைகளில் ஏற்றுமதி செய்வதைத் தடுக்கப் பொருள் நிபுணர்கள் அங்காடிகளை இடைவிடாது ஆராய்ந்து சேகரித்துத் தரும் விவரங்களின் அடிப்படையில் விலைப்பட்டியல்களைச் சோதிக்கவேண்டும்.

மாறும் நாணயமாற்று வீதங்கள் மூலதன ஏற்றுமதிகளைத் திறம்படத் தடுக்க முடியுமா? மதிப்பிறக்கம் ஏற்பட்டால் அன்னியச் செலாவணிகளை வாங்கும் செலவு அதிகரித்தபோதிலும் பாதுகாப்பான இடத்தை நோக்கி மூலதனம் செல்வதை இது தடுக்காது. ஒருவனது மூலதனத்தின் உயிருக்கு அபாயம் வரும்போது விலையை யார் பொருட்படுத்துவார்கள்?

அதற்கு மாருக, மாருத நாணயமாற்று வீதங்கள் உள்ள சூழ்நிலையில், பற்ருக்குறை நாட்டில் தராதர வட்டி வீதங்கள் உயர்ந்தால்தான் மூலதன ஏற்றுமதி தடைப்படும். இவ்வாறு வட்டி உயர்ந்தால், அந்நாட்டின் செலுத்துநிலைப் பிரச்சினை மிக மோசமாக இல்லாதிருந்து நாணயமாற்றுவீதம் அதே நிலையில் இருக்கும் என்ற நிச்சயமான நம்பிக்கை (அதாவது, பொன் திட்டம்) இருந்தால், எதிர்ப்புறத்திலிருந்து மூலதனம் உள்ளே வந்து சமநிலையையும் திடநிலையையும் உண்டாக்கும். ஆனுல், செலுத்துநிலைமீது அழுத்தங்கள் மிக வலியவையாக இருந்தால், கழிவு வீதங்கள் உயரும்போது நிச்சயமற்ற சூழ்நிலை ஏற்பட்டு எதைத் தடுக்க முயற்சி செய்யப்பட்டதோ அதே தூண்டப்படும். ஏற்கெனவே பயம் காரணமாக மூலதனம் ஓடிக்கொண்டிருந்தால், வட்டி விகிதங்கள் பெரும் அளவில் வித்தியாசப்பட்டாலும் அதனுல் பலன் அதிகம் இராது.

மாறும் நாணயமாற்று வீதங்கள், உயர்ந்த கழிவு வீதங்கள்மூலம் தடை இவ்விரண்டையும்விட, மூலதன ஓட்டத்தைத் தடுக்க, நாணயமாற்றுக் கட்டுப்பாடு மேம்பட்டது என்பதில் ஐயமில்லை.

பொதுவாக, நாணயமாற்றுக் கட்டுப்பாடு செலுத்துநிலைச் சீர்கேட்டைப் பின்வருமாறு தாக்குகிறது. அடிப்படைத் தொல்லையை அது அடக்குவதில்லை ; ஓர் அடிப்படைத் தொல்லையின் அறிகுறியாகிய பற்றுக்குறையை அது அடக்குகிறது. உதாரணமாக, மூலதன ஓட்டத்தினால் பற்றுக்குறை ஏற்படுகிறது எனக் கொள்வோம் ; பற்றுக்குறையை அடக்கிவிட்டால் மூல காரணம் சரியாகிவிடவில்லை ; அம் மூல காரணம் அரசியலிலோ பொருளாதாரத்திலோ குழம்பியநிலை, போர் பயம் அல்லது நாணயமதிப்புக் குறைப்பு ஏற்படும் என்று எதிர்பார்ப்பதாக இருக்கலாம். பிற சூழ்நிலைகளிலும் மூலகாரணங்களைச் சீர்செய்ய நாணயமாற்றுக் கட்டுப்பாட்டால் முடியாது.

இருந்தபோதிலும், சில நாடுகளுக்கு இதைத் தவிர வேறு வழியில்லாத நிலை இருக்கலாம். 'முக்கியமாகப் பணச் சுருக்கம் ஏற்படும்போது நிலையான நாணயமாற்று வீதத்துக்கு ஆதரவளிக்கப் போதுமான சேமநிதிகள் இல்லாமல் இருந்தாலும், நாணயமாற்றின் தேவை, அளிப்பு ஆகியவற்றின் அடிப்படைக் காரணிகள் சொல்லமுடியாதபடி பாதகமாக இருந்தாலும் நாணயமாற்றுக் கட்டுப்பாடுதான் அந் நாட்டுக்கு ஒரே வழி. அந்தச் சூழ்நிலைகளில், ஒரு தற்காலிகமான உபாயமாக அதை மேற்கொள்ளலாம். அதனால் கிடைக்கும் அவகாசத்தில் சமநிலைக் கேட்டைச் சீர்செய்யப் பிற உபாயங்களை மேற்கொள்ளலாம்.

## தடைகளின் அவசியம்

நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை ஒருமுறை விதித்துவிட்டால், அதுவும் செலுத்துநிலைப் பற்றுக்குறை மோசமாக இருக்கும் நிலையில், ஒன்றன் பின் ஒன்றாகத் தடைகள் அதிகமாகிக்கொண்டேவரும். முன்னைவிட அதிகமாக வாணிபம் இருமுக வாணிபமாக இருக்க வேண்டிய நிர்ப்பந்தம் உண்டாகும் ; மேலும் பலநாடுகள் கட்டுப்பாடுகளை விதிக்கும் ; செலவாணிகளின் மாற்றுரிமை மேலும் கட்டுப்படுத்தப்படும். இதற்கு மாற்று ஏதும் செய்யப்படவில்லையாயின் இவ் விளைவுகள் தொடர்ந்து ஏற்பட்டு உலகம் முழுவதிலும் நாணயமாற்றுக் கட்டுப்பாடு ஏற்படும் ; உலக அங்காடி பல துண்டுகளாகப் பிரியும் ; ஒவ்வொரு துண்டும் பிறவற்றினின்று பிரிந்துநிற்கும் ; உலக வாணிபம் தராதர விலைகளைப்பொறுத்து நடைபெறாது ; அளிப்புகள் கிடைப்பதைப்பொறுத்துப் பொருள்கள் வாங்கவும் விற்கவும்படும் ; உலகவாணிபம் மிகக் குறைவான அளவுக்குச் சுருங்கும்.

### பாதுகாப்பு (Insulation), அடக்கத்தை (Restraint) நீக்குகிறது

நாணயமாற்றுக் கட்டுப்பாடு ஒரு பொருளாதாரத்தை வெளிச் சக்திகளிலிருந்து மூடிப் பாதுகாக்கிறது. தடைகளின் இவ் வளர்ச்சிக்கு

இதுதான் காரணம். கட்டுப்பாடுகள் விதிக்கக் காரணமாக இருந்த வெளிநாட்டுப் பற்றுக்குறை நீங்கிவிட்டது; செலுத்துநிலை சீராகி யுள்ளது; சேமநிதி நஷ்டங்கள் ஏற்பட்டால் அவற்றைத்தடுத்து நிறுத்த முடியும். செலுத்துநிலையைப் பாதிக்கக்கூடிய உள்நாட்டுக் கொள்கைகள் விஷயத்தில் எந்தவழியையும் பின்பற்ற அந் நாட்டுக்குச் சுதந்திரம் கிடைத்துவிட்டது.

எந்த நாடும் புதிதாகக் கிடைத்த சுதந்திரத்தை விரைவிலேயே பயன்படுத்த முயலும். சாதாரணமாக, பணம், கடன் செலாவணி ஆகியவற்றின் அளிப்பை அதிகரிக்குமாறு இது பயன்படுத்தப்படும். பணக்கொள்கையிலும் நிதிக்கொள்கையிலும் கட்டுப்பாடாக நடப்பது கஷ்டம். அதைப் பொதுமக்கள் விரும்புவதில்லை. அதற்கு மாருக, முழு வேலைநிலை, பொருளாதார வளர்ச்சி, போருக்குப் பின் சீரமைப்பு, வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது போன்ற பல கவர்ச்சிகரமான நாட்டுக் குறிக்கோள்கள் இருக்கின்றன. அவற்றைப் பின்பற்றுவது விரும்பப்படுகிறது. அதன் விளைவாகப் பணம் பெருகுவதைத் தவிர்க்க முடியாது. இந்த வசீகரமான பாதையில் சிலநாடுகள் மெதுவாகத் தயங்கிச் செல்லும், சில வேகமாகச் செல்லும்.

**மிகைமதிப்பீடு (Overvaluation)**

ஒன்று அல்லது பல நாடுகளில் நாணயமாற்றுக் கட்டுப்பாடு விதிக்கக் காரணமான, முதலில் ஏற்பட்ட சீர்கேடு, மூலதன ஓட்டத்திஞல் விளைந்தது என்று கொள்வோம். நடப்புக் கணக்குகள்—அதாவது பொருள், பணி உருப்படிகள்—அப்போது சமநிலையில் இருந்தன. அதாவது, அப்போது இருந்த நாணயமாற்றுவீதத்தில் பல்வேறு நாடுகளில் அடக்கச்செலவுகளும் விலைகளும் வருமானங்களும் சமநிலையில் இருந்தன. அப்படி இருந்தாலும், செலவை எளிதாக்கும் பணக்கொள்கைகளும் அரசாங்க நிதிக்கொள்கைகளும் பின்பற்றப் பட்டால், பாதுகாக்கப்பட்ட நாடுகளில் விலைகளும் வருமானங்களும் உயரும். ஏற்றுமதிகளின் விலைகள் வெளிநாடுகளில் மிகையாக இருக்கின்றன; ஏற்றுமதிகள் குறையும்; இறக்குமதிகளின் விலைகள் உள்நாட்டில் குறைவாக இருக்கின்றன; இறக்குமதிகள் அதிகமாகும். மக்களின் பண வருமானங்கள் அதிகரித்துவிட்டதஞல் இறக்குமதிகள் மேலும் உயரும். கட்டுப்படுத்தப்பட்ட விகிதங்களில் செலாவணிகள் மிகைமதிப்புடையவையாகிவிட்டன. இறக்குமதிகள்மீது கட்டுப்பாடுகள் இப்போது அவசியமாகின்றன.

(இறக்குமதிகளோடு போட்டியிடும் பொருள்களின் வகைகளும் அளவுகளும் இப்போது பன்னாட்டு விலை ஒப்பீடுகளால் நிர்ணயிக்கப் படாமல் அதிகாரிகளின் முடிவுகளிஞல் தீர்மானிக்கப்படுகின்றன.)

அவற்றை உற்பத்தி செய்பவர்கள் அடக்கச் செலவின்மீது ஆழ்ந்த கவனம் செலுத்தவேண்டிய தூண்டுதல் இப்போது குறைவு. ஏனெனில் வெளிநாட்டுப் போட்டியின் பயம் நீங்கிவிட்டது. மேலும், பண வருமானங்கள் உயருவதால், தேவை அழுத்தம் அதிகமாகி அவற்றின் விலைகள் மேலும் உயரும். தவிர, இறக்குமதிக் கட்டுப்பாடுகள் தாமே நேரிடையாக விலைகளை உயர்த்தும்; இறக்குமதிகளின் அளிப்பின் அளவு வரையறுக்கப்படுவதால், அவற்றின் விலை உயருகிறது. பணச் சுருக்கமுறைகளைக் கையாண்டு அதை ஈடுசெய்தாலொழிய, செலாவணியின் மிகைமதிப்பீடு மேலும் அதிகமாகிறது.

### வாணிபம் இருமுகவழியில் செல்வது

இந் நிலையில் உள்ள நாடு பெரும்பாலும் வேறுவழியின்றித் தன் ஏற்றுமதிகளுக்குப் புதுப் போக்கிடங்களையும் தன் இறக்குமதிகளுக்குப் புதுத் தோற்றுவாய்களையும் தேடவேண்டியிருக்கிறது. பழைய அங்காடிகள், மாற்றுரிமையுள்ள செலாவணியுடைய நாடுகளில் அவை உள்ள அளவுக்கு மேலும் மேலும் சுருங்கிவிடுகின்றன. அதன் செலாவணியின் மிகைமதிப்பின் காரணமாக, அதன் ஏற்றுமதிகளின் விலை மிகையாகவுள்ளது. அதன் இறக்குமதிகள் மலிவாகவும் கவர்ச்சிகரமாகவும் இருப்பினும், போதுமான அளவுக்கு இல்லை. வேறு சில நாடுகளும் நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளைக் கடைப் பிடித்தால் அவையும் அதே நிலையில்தான் இருக்கும். அத்தகைய இரண்டு அல்லது அதற்கதிகமான நாடுகள் ஒன்றுசேர்வது இயற்கையல்லவா? இவை அனைத்துக்கும் இறக்குமதி ஏற்றுமதி இரண்டையும் பெருக்குவதில் பொது அக்கறை இருக்கிறது; செய்யவேண்டியது ஒன்றுதான். மாற்றுரிமையுள்ள கிடைத்தற்கரிய செலாவணிகளில் செலுத்தல்களைச் செய்வதை அனுவசியமாக்க ஓர் உபாயத்தைக் கடைப்பிடிக்கவேண்டும்.

இம் மாதிரி கஷ்டங்களையும் அக்கறைகளையும் பொதுவாகக் கொண்டிருக்கும் சூழ்நிலையிலிருந்து பலவகையான இருமுக வாணிப ஒப்பந்தங்கள் தோன்றியுள்ளன. ஏற்றுமதிகளுக்காக ஒன்று மற்றொன்றின் மாற்றுரிமையற்ற செலாவணிகளை ஏற்றுக்கொண்டு அதை உபயோகித்து இறக்குமதிகளை வாங்குவதாக ஒப்புக்கொள்வது தான் இந்த ஒப்பந்தங்களின் சாரம் (இத்தகைய ஒப்பந்தங்கள் சிலவற்றை விவரமாக விரைவில் ஆராய்வோம்).

ஒரே ஒரு நாடுமட்டும் கட்டுப்பாடுகளைப் பிரயோகித்தால், அதன் செலாவணியின் உபயோகம் தடுக்கப்படுவதால் அது மாற்றுரிமையற்றதாகிறது. ஆனால், இம் மாற்றுரிமையில் பாரபட்சம் இல்லை; வேறு எந்தச் செலாவணியை வாங்குவதற்கும் சமமான தடைகள் விதிக்கப்

படுகின்றன. ஆனால், நாணயமாற்றுக் கட்டுப்பாடுகள் பரவி, அதன் தவிர்க்கமுடியாத துணையாகிய இருமுக வாணிப ஒப்பந்தங்கள் தோன்றிவிட்டதும், தடைகள் விரைவில் பேதம்காட்டுமாறு அமையும். தன் இருமுக வாணிபக் கூட்டாளியின் நாணயத்துக்கு விண்ணப்பங்கள் வந்தால் அவற்றை அரசாங்கம் உடனே அனுமதிக்கும். ஏனெனில், அச் செலாவணி நிலுவைகளை எளிதில் பெறமுடியும். ஆனால், சுதந்திரமான மாற்றுரிமையுள்ள செலவாணிகளுக்கு வரும் விண்ணப்பங்கள் தீர்மானமாகக் கட்டுப்படுத்தப்படும். உலகம் 'கடின' (hard) செலாவணிப் பிராந்தியமாகவும் 'எளிய' (soft) செலாவணிப் பிராந்தியமாகவும் பிரிகிறது. ஒன்றில், முழு மாற்றுரிமையுள்ள செலாவணிகள் உள்ளன. மற்றதில், செலாவணிகள் பலவித அளவுகளில் பேதங்களுக்குட்பட்டு மாற்றுரிமை பெற்றுள்ளன.

உலகம் இவ்வாறு பிரிந்திருப்பதால் நாணயமாற்றுக் கட்டுப்பாடுகள் மேலும் பரவுகின்றன; ஏனெனில், செலாவணி மாற்றுரிமையை இன்னமும் காப்பாற்றிவரும் நாட்டின் செலுத்துநிலே மொத்தத்தில் சமநிலையில் இருப்பினும், எளிய செலாவணிப் பிராந்தியத்துடன் உபரியையும், கடின செலாவணிப் பிராந்தியத்துடன் பற்றுக்குறையையும் அது பெற்றிருக்கும். அந்தப் பற்றுக்குறையைத் தவிர்க்க மதிப்பிறக்கம் அல்லது பணச் சுருக்கம் ஒரு தக்க வழியாகும்; ஆனால், இவ் விரண்டு வழிகளிலும் மாற்றுரிமை அற்ற செலாவணிகளில் உள்ள உபரியை மேலும் அதிகரிக்கும். அந்த நாடு எளிய செலாவணி நாடுகளினின்று தன் இறக்குமதிகளை அதிகரித்து ஏற்றுமதிகளைக் குறைக்கவேண்டும்; கடின செலாவணி நாடுகளினின்று இறக்குமதியைச் சுருக்கி ஏற்றுமதியைப் பெருக்கவேண்டும்; இதைச் செய்யக் கட்டாயமாக நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை அது விதிக்கத்தான் வேண்டும்.

## இருமுக வாணிப ஏற்பாடுகள்
## (Bilateral Trading Arrangements)

**தனியார் பண்டமாற்று** (Private Compensation)

தனியார் கம்பெனிகள் செய்த பண்டமாற்று விவகாரங்கள் முதன் முதலில் ஏற்பட்ட இருமுக வாணிபத்துக்கு ஓர் உதாரணமாகும். 1930-க்குப் பின் பத்து ஆண்டுகளில் இது நிறைய நடந்தது. அதன் பின்னர் இத்தகைய விவசாரங்களில் பெரும்பாலானவற்றுக்கு பதிலாக விதிப்படியான ஒப்பந்தங்கள்செய்து வாணிபம் நடந்தாலும் இத்தகைய பண்டமாற்று விவகாரங்கள் போருக்குப் பின்னும் நடந்தன. உதாரணமாக 1930-33 அடுத்த நான்கைந்து ஆண்டுகளில்

பிரேஜிலுக்கு ஒன்பது மிலியன் மார்க்குகள் மதிப்புக்கும் கரி அனுப்பி அதற்கு ஈடாக அதே மதிப்புக்குக் காப்பியைப் பெற ஜெர்மானிய கரி உற்பத்தியாளர்கள் ஏற்பாடு செய்தனர். இதேபோல ஜெர்மானிய உரத்துக்கும் எகிப்தின் பருத்திக்கும் பண்டமாற்று நடந்தது.

இதைவிடச் சிக்கலான சில ஏற்பாடுகள் இருந்தன. இவற்றால், தனக்குப் பழக்கமில்லாத இறக்குமதிப் பணியை ஏற்றுமதியாளன் செய்யவேண்டிய நிர்ப்பந்தம் நீங்கிற்று. இம் முறையில் ஒவ்வொரு நாட்டிலும் ஓர் ஏற்றுமதி, இறக்குமதிக் கம்பெனி இருந்தது: எந்தப் பொருள்களை ஏற்றுமதி செய்வது, எந்த அளவில் எந்த மதிப்பில் என்பனபற்றி ஒப்பந்தம் செய்யப்பட்டது. பொருள்கள் வந்து சேர்ந் தாலும் ஒவ்வொருநாட்டு இறக்குமதியாளனும் ஏற்றுமதியாளர்களுக்கு இறக்குமதி செய்யும் நாட்டின் செலாவணியில் கொடுக்கவேண்டிய தைச் செலுத்தினர். விவகாரம் முடிந்தது.

இவ்வகை ஏற்பாடுகளில் அன்னியச் செலாவணியைப் பங்கீடு செய்ய விண்ணப்பிக்கவேண்டிய அவசியம் இல்லை என்றாலும் இவற்றுக்கு நாணயமாற்றுக் கட்டுப்பாட்டு அதிகாரிகளின் ஒப்புதல் தேவை. ஏற்றுமதிகளுக்கும் இறக்குமதிகளுக்கும் அனுமதிச் சீட்டு கள் வேண்டும் என்பதுமட்டும் அல்ல; கஷ்டங்கள் இருந்தபோதிலும், சுதந்திரமான, கிடைத்தற்கரிய செலாவணிகளுக்கு விற்கக்கூடிய ஏற்றுமதிகள் அவ்வங்காடிகளிலிருந்து அனுவசியமாக வேறு அங்காடி களுக்கு அனுப்பப்படுவதைத் தடுக்கவேண்டியது அதிகாரிகளின் கடமையும் ஆகும். எனவே, இத்தகைய விவகாரங்களில் ஈடுபட்டுள்ள கம்பெனிகள் தம் ஏற்றுமதிகள் 'அதிகப்பட்சமானவை' (additional) அதாவது விசேஷ ஏற்பாடு இல்லாமல் விற்கமுடியாதவை என்று பொதுவாகக் காட்டவேண்டும். எனவே, வாணிபத்தில் கூட்டாளியாக உள்ள ஒவ்வொரு நாட்டிலும் பிறவற்றைவிட முக்கியத்துவம் குறைந்த வியாபார வரம்பில் உள்ள உருப்படிகள்தான் முக்கியமாக இத்தகைய வாணிபத்தில் இடம் பெறும்.

இத்தகைய தன்யார் பண்டமாற்று வியாபாரங்களில் ஒவ்வொரு விவகாரத்திலும் ஏற்றுமதியாகும் தனிப்பொருள்களும் இறக்குமதி யாவனவும் ஒரே மதிப்பைக் கொண்டிருக்கவேண்டும். எனவே, இத்தகைய விவகாரத்தில் ஈடுபட்டு ஏற்றுமதி செய்ய விடும்புபவன், எந்தப் பொருளை இறக்குமதி செய்தால் நாணயமாற்றுக் கட்டுப்பாடு அதிகாரிகளும், அந் நாட்டில் அதை வாங்குபவர்களும் ஆக இருவரும் ஒப்புக்கொள்வார்கள் என்பதைக் கண்டுபிடிக்கவேண்டும். அதே நாட்டைச் சேர்ந்த இறக்குமதியாளர்களில் ஒருவனை இவ்விவகாரத்தில் கூட்டுச் சேர்த்துக்கொள்ளலாம். ஆனால், அதற்கும் இவ்விரு நபர்களும்

ஒருவரை ஒருவர் கண்டுபிடிக்க வேண்டியிருக்கிறது. இத் தொல்லை களைத் தவிர்க்க ஜெர்மனியிலும் பிற நாடுகளிலும் போருக்கு முன் விசேஷத் தேர்ச்சிவாய்ந்த தரகர்கள் தோன்றினர். எந்த வியாபாரம் இரு நாடுகளுக்கும் நல்லது, விதிகளுக்கு உட்பட்டது, எந்த வணிகர்கள் இதில் அக்கறை கொண்டுள்ளார்கள் என்பதைக் கண்டுபிடித்து அவர் களை இணைத்துவைப்பதே அவர்களின் பணி.

### தீர்வு ஒப்பந்தங்கள் (Clearing Agreements)

நாணயமாற்றுத் தீர்வுமுறை ஏற்பட்ட பிறகு இப் பிரச்சினை களுக்குத் திருப்திகரமான ஒரு முடிவு ஏற்பட்டது. வாணிப ஒப்பந்தங் கள் ஒன்றுக்கொன்று ஈடுசெய்வதை விரிவாக்கிப் பொதுப்படையாக்கி வசதி செய்தது இம் முறை. இதன்படி ஒவ்வொரு நாடும், சாதாரண மாகத் தன் மத்திய பாகங்களில் ஒரு கணக்கை நிறுவ ஒப்புக் கொள்கிறது; இறக்குமதிகளுக்கும் ஏற்றுமதிகளுக்குமான எல்லாச் செலுத்தல்களும் கணக்கின் மூலம் தீர்க்கப்படும்.[1]

1962-ல் அர்ஜெண்டினாவும் இத்தாலியும் இத்தகைய ஒப்பந்தம் ஒன்றை ஐந்து ஆண்டுகளுக்கு மேற்கொண்டன. இத்தாலியிலிருந்து அர்ஜெண்டினாவுக்கு வரும் எல்லா இறக்குமதிகளுக்கும் அர்ஜெண் டினாவின் தீர்வுக் கணக்கில் இறக்குமதியாளர்கள் பீஸோக்களைச் (pesos) செலுத்தினர். அதேபோல அர்ஜெண்டினாவிலிருந்து இறக்குமதி செய்த இத்தாலியர்கள் இத்தாலியத் தீர்வுக் கணக்கில் லீரா நாணயங் களைச் (lire) செலுத்தினர். அவ்வந்நாட்டு ஏற்றுமதியாளருக்கு, இறக்குமதியாளர்கள் கட்டிய தொகையிலிருந்து அவ்வந்நாட்டுச் செலாவணி தரப்பட்டது.

இத்தகைய ஏற்பாட்டில், இறக்குமதி அனுமதிச் சீட்டுகளுக்கு விண்ணப்பிக்கத் தேவையில்லை; ஏற்றுமதி, இறக்குமதிகளின் விலைகளை மிகைமதிப்பு, குறைமதிப்பு இல்லாமல் உள்ளதா என்று சரிபார்க்கத் தேவையில்லை; அரசாங்கச் சிவப்பு நாடாத் தொல்லை இதனால் பெரும் அளவுக்குக் குறைகிறது. ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் ஒரே மதிப்புடையனவாக இருக்கும்வரை, தீர்வு பூர்ணமாகச் செய்யப் படுகிறது; கணக்கில் நிலுவை இருக்கும் பிரச்சினை இல்லை.

அவ்வாறு இரண்டும் துல்லியமாகச் சமமாக இருக்கும் என்பது எதிர்பார்க்க முடியாது. வித்தியாசம் ஏற்பட்டால் அதற்கு என்ன ஏற்பாடு செய்வது? இதற்குப் பொதுவாக, ஒரு குறிப்பிட்ட தொகைக்கு

[1] சில தீர்வு ஒப்பந்தங்கள், சிலவகைப் பொருள்களுக்குமட்டுமே பொருந்தும். பிற பொருள்களின் வாணிபம் வழக்கம்போல நடந்தது.

'ஊசல்' கடன் ('swing' credit) ஏற்படுத்தப்படுகிறது. உதாரணமாக, இத்தாலி—அர்ஜென்டினு ஒப்பந்தத்தில் ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் $ 100 மில்லியன் வரை எத்திசையிலும் வித்தியாசப் படலாம். அதற்கு அதிகமான வித்தியாசம் இருந்தால் அதைப் பொன் அல்லது டாலர்களில் தீர்க்கவேண்டும். மற்ருெரு முறை, தீர்வு ஒப்பந்தத்திலேயே குறிப்பிட்டிருக்கும்: தீர்வு விவகாரங்களுக்குப் பொருந்தும் நாணயமாற்று வீதத்தை மாற்றிவிடும் முறை அது. இவ் வீதம் அந் நாடுகளின் விருப்பப்படி நிர்ணயிக்கப்பட்டதுதான்; எனவே, ஒரு செலாவணி மிகை மதிப்புடையதாக இருக்கக்கூடும்; அதனுல், வாணிபச் சமநிலைக் கேடு ஏற்பட்டிருக்கலாம். போருக்குமுன், ஜெர்மனியின் பேரத் திறன் (bargaining power) பால்கன் (balkans) நாடுகளுடையதைவிட அதிகமாக இருந்தது. அதை வேண்டுமென்றே உபயோகித்து, மார்க்குக்கு, பால்கன் நாடுகளின் செலாவணிகளோடு ஒப்பிட்டால் மிகை மதிப்புடைய வீதமொன்றை ஜெர்மனி அந் நாடுகளை ஒப்புக்கொள்ளச் செய்தது. இதனுல், ஜெர்மனியின் வாணிப மாற்றுவீதம் அதற்குச் சாதகமாக இருந்தது. மார்க்கு நிலுவைகள் நிறைய சேர்ந்தன. பொதுவாக, தேவையற்ற பொருள்களை ஏற்றுமதி செய்தாவது அந் நிலுவைகளைத் தீர்க்க ஜெர்மனி தயாராக இருந்தது. எனவே, பால்கன் நாடுகள் பெரும் அளவுக்கு ஆஸ்பிரினையும் ஹார்மோனிகா வாத்தியத்தையும் இறக்குமதி செய்தன.

இருபுறமும் வாணிபம் வித்தியாசப்படுவதற்கு ஓர் 'ஊசல்' வரம்பு இல்லாமல் இருந்தால், பயன்படுத்தமுடியாத பெரிய நிலுவைகள் ஒரு நாட்டிடம் சேருவதுமட்டுமன்றி அதனுல் பணத்துறையில் கடுமையான விளைவுகள் இரு நாடுகளிலும் ஏற்படவும் கூடும். ஏற்றுமதிகளை விட இறக்குமதிகள் அதிகமாக உள்ள நாட்டில் தீர்வுக்கணக்கில் நிகரமாக உள்நாட்டுச் செலாவணி அதிகமாகச் செலுத்தப்படும். இதனுல், புழக்கத்திலிருந்து பணம் எடுக்கப்படுகிறது. எந்தச் சமயத்திலும் இறக்குமதிகள் ஏற்றுமதிகளை மிஞ்சும்போது ஏற்படுவது போன்று, இதனுல் பணச் சுருக்கம் ஏற்படுகிறது. ஏற்றுமதிகள் இறக்குமதிகளை மிஞ்சிய நாட்டிலோ, இறக்குமதியாளர்கள் கணக்கில் செலுத்திய தொகை ஏற்றுமதியாளருக்குக் கொடுக்கப் போதாது. அவர்களுக்குப் பணம் கொடுக்க மத்திய பாங்கு கடன்தர முற்படுமாளுல், உடனே அந்த அளவுக்குப் பணத்தின் அளவு அதிகரிக்கும்; இறுதியில் மத்திய பாங்கினின்று வந்த இந்தப் பணம் வணிக பாங்குகளில் கட்டப்படுமாளுல், சேமநிதி விதிகளின்படி அதிகமாகக் கூடிய முழு அளவுக்குப் பணத்தின் அளிப்பு உயரும். இக் கடனை மத்திய பாங்கு தராவிட்டால், தத்தம் முறை வரும்வரை ஏற்றுமதியாளர்கள் தம் தொகைகளைப் பெற்றுக்கொள்ளக் காத்திருக்கவேண்டும். இதனுல், ஏற்றுமதி செய்ய வேண்டுமென்ற அவர்களது உற்சாகம் பாதிக்கப்படுகிறது.

**செலுத்தல்கள் ஒப்பந்தங்கள்** (Payments Agreements)

தீர்வு ஒப்பந்தத்தைவிட அதிகமான விவகாரங்களுக்குப் பயனுகக் கூடிய மற்றொரு வகை இருமுக ஏற்பாடு செலுத்தல்கள் ஒப்பந்த மாகும்: கோட்பாட்டளவிலோ, செயல்முறையிலோ இதற்கும் தீர்வு ஒப்பந்தத்துக்கும் வித்தியாசம் இல்லை. தீர்வு வசதிகளை மேலும் சில வகைச் செலுத்தல்களுக்கும் இது விஸ்தரிக்கிறது. இவற்றுள் முக்கிய மானவை பாக்கி நிற்கும் கடன்கள். கடனுக்கு வட்டி தருவது உட்பட பலவகை வசதிப் பணி விவகாரங்களும் சாதாரணமாக இதில் சேர்க்கப் படும்.

கட்டுப்பாடுகள் விதிக்கப்படுமுன் ஓர் இருமுக ஒப்பந்தத்தின் விளைவாகவோ, அல்லது ஏற்றுமதியாளர்கள் அவசரப்பட்டு நிறைய விற்றதாலோ, நாணயமாற்றுக் கட்டுப்பாடுகள் உள்ள நாடுகளில் நிறைய தொகைகளைச் சேர்த்து வைத்திருக்கிற நாடுகள், இச் சொத்துகள் பயன்படுத்த முடியாமல் உறைந்திருக்கக் காணு கின்றன. இவ்வுறவை நீக்குவது செலுத்தல்கள் ஒப்பந்தத்தின் குறிக் கோளாகும். அதன்படி, கடன்கொடுத்த நாட்டின் தீர்வுக் கணக்கில் இறக்குமதிகளுக்காகச் செலுத்தப்படும் தொகைகளில் ஒரு குறிப்பிட்ட சதவிகிதம் ஏற்கெனவே சேர்ந்திருக்கிற கடனைத் தீர்க்க ஒதுக்கி வைக்கப்படும். கடன் கொடுத்துள்ள நாடு கடன் வாங்கிய நாட்டி லிருந்து வரும் இறக்குமதிகளை எவ்விதமாகவும் கட்டுப்படுத்தத் தேவையில்லை. ஏனெனில், ஏற்றுமதிகளைவிட இறக்குமதிகள் அதிக மானுல்தான் பழைய கடன் தீரும். மாறுக, கடனாளி நாடு கடன் கொடுத்துள்ள நாட்டினின்று வரும் இறக்குமதிகளைப் போதுமான அளவுக்குக் குறைத்தால்தான், அதன் ஏற்றுமதிகளின் மதிப்பில் ஒப்புக்கொண்ட விகிதாசாரத்தைக் கடன் தீர்ப்பதற்காகப் பயன்படுத்த முடியும்.

இரண்டாவது உலகப் பேருக்குப் பின் பெரும்பாலான இருமுக ஒப்பந்தங்கள் பரவலான இவ்வகையைச் சேர்ந்தவையே. இவற்றுள், கடன் தீர்ப்பதுமட்டுமன்றி, கப்பல் கட்டணங்கள், வட்டி, உல்லாசப் பிரயாணம், மற்றும் பிற வசதிப் பணிகள் அனைத்தும் அடங்கியுள்ளன. படிப்படியாக உலக வாணிபத் தடைகள் நீங்கியபோது, இருநாடு களுக்குமட்டும் இடையே இருந்த ஒப்பந்தங்களுக்குப் பதிலாகப் பல்முகத் தீர்வைப் (multilateral clearing) பெரும் அளவுக்குச் செய்யும் ஒப்பந்தங்கள் ஏற்படலாயின. இதற்கு உதாரணம் ஐரோப்பியச் செலுத்தல்கள் சங்கம் (European Payments Union) (26 ஆம் அத்தியாயத்தைப் பார்க்க).

## ஒழுங்கற்ற எதிரின வீதங்கள்
## (Disorderly Cross Rates)

நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளின் விளைவாக வாணிபம் இருமுகப் பாதையில் செல்வதோடன்றி, நாணயமாற்று வீதங்களின் ஒழுங்கான தொடர்பு கலைந்து அதற்குப் பதிலாக ஒழுங்கற்ற வீதங்கள் ஏற்படுகின்றன.

செலாவணிகள் மாற்றுரிமை பெற்றிருக்கும்வரை, வெவ்வேறு நாணயங்களுக்கு இடையே ஒன்றோடொன்று தொடர்பு உடைய மாற்று விகிதங்கள் ஒன்றுக்கு ஒன்று முரண்பாடின்றி இருக்கவேண்டும். உதாரணமாக டாலர்–பவுன் விகிதம், ஃபிராங்கு–டாலர் விகிதம் இரண்டுக்கும் ஒத்தவாறு ஃபிராங்குக்கும் பவுனுக்கும் உள்ள எதிரின விகிதம் இருக்கவேண்டும். அப்படி இல்லாமலிருந்தால் ஆர்பிட்ரேஜ் ஊக வணிகர்களின் நடவடிக்கையால் நிலைமை திருந்திவிடும்.[2] ஆர்பிட்ரேஜ் என்பது வெவ்வேறு அங்காடிகளில் ஒரே சமயம் அன்னியச் செலாவணியை வாங்குவதும் விற்பதும் ஆகும். நாணயமாற்றுக் கட்டுப்பாடு விதிக்கப்பட்டு, மாற்றுரிமை இல்லாமற் போன பின் நாணயமாற்று ஆர்பிட்ரேஜ் நடக்கமுடியாது. எந்தச் செலாவணியின் மாற்று விகிதமும் கட்டுப்பாட்டு அதிகாரிகளால் எதேச்சையாக நிர்ணயிக்கப்படுகிறது; இறக்குமதி ஏற்றுமதி அளவுகளைக் கட்டுப்படுத்துவதால் அவ் விகிதம் அந் நிலையில் வைத்திருக்கப்படுகிறது. ஆகவே, ஒரு நாடு இவ் விகிதங்களை ஒன்றுக்கு ஒன்று முரணாக இருக்கக்கூடாது என்று பார்த்து நிர்ணயித்தாலொழிய, அவை ஒழுங்கற்று ஒன்றுக்கொன்று முரண்பட்டுதான் இருக்கும். ஒரு நாட்டோடு பற்றுக்குறையும், மற்றொன்றோடு உபரியும் கொண்ட ஒரு நாட்டின் விஷயத்தில் இது முக்கியமாக உண்மையாக இருக்கும். ஏனெனில், முதலில் சொன்ன நாட்டுக்கு எதிராகத் தன் செலாவணியை மதிப்பிறக்கம் செய்து பின்னர் கூறியதற்கு எதிராக மதிப்பேற்றம் செய்யவேண்டும் என்று அது முயலும்.

இரண்டாவது உலகப்போர் முடிந்த உடன் இருந்த காலத்தினின்று ஓர் உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். டாலர்/பவுன் விகிதம் \$ 2·80; ஃபிரெஞ்சு ஃபிராங்குகளில் டாலர், பவுன் செலாவணிகளின் மதிப்புகள் இதற்கு ஒத்தவாறு முறையே 350 ஃபிராங்குகள்/\$, 980 ஃபிராங்குகள்/£ ஆக இருந்தன. ஃபிரான்ஸின் செலுத்துநிலை அமெரிக்காவுடன் பற்றுக்குறையாகவும் பிரிட்டனுடன் உபரியாகவும் இருந்தது. எனவே, ஃபிரெஞ்சு நாணயமாற்றுக் கட்டுப்பாட்டு அதிகாரிகள் டாலரின் ஃபிராங்கு விலையை 400 ஃபிராங்கு ஆக்கி, ஃபிராங்கை

[2] பதினேழாவது அத்தியாயத்தைப் பார்க்கவும்.

மதிப்பிறக்கம் செய்கிறார்கள்; பவுனுக்கு 960 ஃபிராங்காக அதை மதிப் பேற்றம் செய்கிறார்கள்; அப்போது டாலர்/பவுன் எதிரின வீதம் $ 2·40/£ (960/400 = 2·40). உண்மையில் வழங்கிய எதிரின விகிதமான $ 2·80 உடன் ஒப்பிட்டால் இது முரண்பாடானது.

இம் முரண்பாட்டின் காரணமாக அமெரிக்கர்கள் (அல்லது பிற நாட்டவர்கள்) பவுன் ஸ்டர்லிங்கை மலிவாக வாங்க வாய்ப்பு உண்டா கிறது. டாலருக்கு 400 ஃபிராங்குகள் வீதத்தில், $ 2·40 கொடுத்து 960 ஃபிராங்குகள் வாங்கி அவற்றை விற்று £ 1 பெறலாம்—இதை நியூயார்க்கில் ஸ்டர்லிங்கின் விலையோடு ஒப்பிட்டால் 40 சென்ட் லாபம். இவ்வாறு கிடைத்த ஸ்டர்லிங்கை ஃபிரான்ஸுக்குப் பொருள்கள் அனுப்ப மட்டுமே உபயோகிக்க பிரிட்டனின் நாணயமாற்றுக் கட்டுப்பாட்டு அதிகாரிகள் அனுமதித்தனர். ஆனாலும், இப் பொருள்களை ஃபிரான்ஸி லிருந்து மீண்டும் அமெரிக்காவுக்குக் கப்பலேற்றலாம்; அல்லது ஒரு பிரிட்டிஷ் துறைமுகத்தைவிட்டு வெளியே வந்ததும் அவற்றின் போகு மிடத்தை மாற்றிக்கொள்ளமுடியும்.

இதுபோன்ற நிலைமைகள் பல இரண்டாவது உலகப் போருக்குப் பின் அடிக்கடி ஏற்பட்டன. இதன் அடிப்படையில், முரண்பாடான எதிரின விகிதங்களுக்குக் காரணமான ஒத்துப்போகாத நாணய மாற்று வீதங்களை நிர்ணயிப்பதற்கு அதிகாரபூர்வமான எதிர்ப்புகள் தோன்றின.

## பல நாணயமாற்று வீதங்கள்
## (Multiple Exchange Rates)

நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளைப்பற்றி ஆராய்ந்தபோது மிகை மதிப்புடைய நாணயமாற்று வீதம் காரணமாக ஏற்றுமதிகள் மந்தப் படுகின்றன என்றும் இறக்குமதிகளைத் தீவிரமாகக் கட்டுப்படுத்த வேண்டிய அவசியம் ஏற்படுகிறது என்றும் அடிக்கடி கூறினோம். வியாபாரம் சுருக்கப்படும் இந் நிலையிலிருந்து விடுதலைபெற 1930-க்குப் பின்னர் பத்தாண்டுகளில் ஜெர்மனி இருமுக ஏற்பாடுகளைத் தொடங்கி அவற்றை 'ஓர் உயர்ந்த நிலைக்கு வளர்த்த பின் அவை உலகெங்கிலும் பரவின.

அதே குறிக்கோளுடைய மற்றோர் உபாயம் பல நாணயமாற்று வீதங்களை வைத்திருப்பது. இதுவும் 1930-க்குப் பின் நான்கைந்து ஆண்டுகளில் ஜெர்மனியில்தான் தோன்றியது. அதுவரை மூடியிருந்த அங்காடிகளை இது திறந்ததாலும் இதைத் தவிர சில நற்பயன்களை அளித்ததாலும் இம் முறை காலப்போக்கில் வேகமாகப் பரவியது. முக்கியமாக இலத்தீன் அமெரிக்க நாடுகள் இதைப் பயன்படுத்தின. போருக்கு அடுத்த சில ஆண்டுகளில் சுமார் இருபதுக்கு மேற்பட்ட

நாடுகள் ஏதாவது ஓர் உருவில் ‘பல நாணயமாற்று வீதத்’ திட்டத்தை மேற்கொண்டன.

### இரு விகித முறைகள்

கால அளவில் முதலில் தோன்றியதாக இராவிட்டாலும் இது எல்லாவற்றிலும் எளிய பல நாணயமாற்று வீத முறையாகும். இதன்படி இரண்டு நாணயமாற்று வீதங்கள் பயன்படுகின்றன. ஒன்று (மிகை மதிப்புடையது) அதிகாரபூர்வமானது; அனுமதிக்கப்பட்ட விவகாரங்களுக்குமட்டும் பயன்படுவது. மற்றது, பிற எல்லா விவகாரங்களுக்குமான கட்டுப்படுத்தப்படாத வீதம். அளிப்பைப் பொறுத்தவரையில், மிகை மதிப்பான விகிதத்தில்கூட விற்பனையாகக் கூடிய ஏற்றுமதிகளுக்காகமட்டும் சாதாரணமாக அதிகாரபூர்வமான வீதம் பயன்படும். இவ் வேற்றுமதிகளுக்கு உதாரணமாக பிரேஜிலின் காப்பியையும், சிலியின் செம்பையும் கூறலாம். இவற்றின் அளிப்பு விஷயத்தில் அந் நாடுகளில் நிலைமை மிகவும் சக்தி வாய்ந்தது. அவை ஏறக்குறைய சர்வாதீனப் பொருள்களாக உள்ளன. இத்தகைய ஏற்றுமதிகளினின்று கிடைக்கும் அன்னியச் செலாவணி முழுவதுமோ அதில் ஒரு பகுதியோ அதிகாரபூர்வமான விகிதத்தில் அதிகாரிகளிடம் கொடுத்துவிடவேண்டும். உதாரணமாக தாய்லாந்து உலகப் போருக்குப் பின் கையாண்ட நாணயமாற்றுக் கட்டுப்பாட்டு முறைப்படி அரிசி விற்றதனுல் வந்ததில் 100 சதவிகிதம் அரசாங்கத்திடம் கொடுத்துவிடவேண்டும்; ரப்பர் விற்றதில் 20 சதவிகிதம் கொடுத்துவிடவேண்டும்; வெள்ளீயம் விற்றதில் கொடுக்கவேண்டிய பங்களவு, அடுத்தடுத்து, 50, 40, 20 சதவிகிதமாக இருந்தது.

தேவையைப் பொறுத்தவரையில், மிக அத்தியாவசியமான இறக்குமதிகளுக்குமட்டுமே அதிகாரபூர்வமான வீதத்தில் பணம் செலுத்த அனுமதிக்கப்பட்டது. இத்தகைய பொருள்களின் எண்ணிக்கையை மிகவும் சுருக்கி, இறக்குமதி விலை, சாதாரணமாக இறக்குமதியாளன் பெறும் லாபம் இரண்டும் சேர்த்து விற்றுல் தேவை முழுவதும் திருப்திப்படும் அளவுக்குப் போதுமான அன்னியச் செலாவணி அளிக்கப்பட்டால், இப் பொருள்களின் விலைகள் உயராமல் பார்த்துக்கொள்ளலாம். அன்றி, அளிக்கப்பட்ட அன்னியச் செலாவணி போதாமல் இருந்தால், பொருள்களின் பற்றுக்குறை ஏற்பட்டு, விலைகள் ஏருமல் தடுக்க விலைக் கட்டுப்பாடுகளைக் கூடவே புகுத்தவேண்டும். இல்லாவிட்டால், போதாத அளிப்புகளைப் பங்கீடு செய்யப் போதுமான அளவு, விலைகளை இறக்குமதியாளர்கள் உயர்த்தி, எதிர்பாராத இலாபம் பெறுவர்.

அதிகாரபூர்வமான விகிதத்தில் நடக்க அனுமதிக்கப்படாத விவகாரங்களெல்லாம் சுதந்திரமான விகிதத்தில் நடக்கின்றன.

ஊக்கப்படவேண்டிய ஏற்றுமதிகள், அத்தியாவசியமற்றவை, போகப் பொருள்கள் ஆகியவற்றின் இறக்குமதிகள், அநேகமாக எல்லாப் புலனுகா (invisible) வாணிப விவகாரங்கள், மற்றும் மூலதன ஏற்று மதி இறக்குமதிகள் ஆகியவை இவற்றைச் சேர்ந்தவை. இவ் விகிதம் உண்மையாகவே சுதந்திரமாக மாறக்கூடியதாக இருப்பின், இப் பல் வேறு தேவைகளும் அளிப்புகளும் இடும் போட்டியில் இவை அனைத்தையும் தீர்க்கும் ஒரு வீதம் ஏற்படும். ஏழைகளுக்கும் நடுத்தர வகுப்பினருக்கும் தேவையான ஏறக்குறைய அவசியமான பண்டங்களை விட்டு விலையுயர்ந்த போகப் பொருள்கள் இறக்குமதியாகும் அளவுக்கு இப் போட்டியினுல் இவ்வீதம் மேலே போகக்கூடும் என்பதை இங்குக் குறிப்பிடவேண்டும். சில வளர்ச்சிகுறைந்த நாடுகளில் வருமானப் பங்கீட்டில் ஏற்றத்தாழ்வு அதிகமாக உள்ளது; வருமானத்தில் பெரும் பகுதி பணக்காரர்கள் வசம் உள்ளது. அத்தகைய நாடுகளில் விசேஷ மாக இவ்வாறு நேரக்கூடும்.

சுதந்திரமான வீதம் கடுமையாக ஏறி இறங்கினுல் அங்காடியில் வாங்குபவராகவோ விற்பவராகவோ நுழைந்து அதைத் திடநிலைப் படுத்த அரசாங்கம் முயலலாம். இதன் அவசியம் ஏற்படா திருக்கவோ, மிகையாகக் கருதப்படும் அளவுக்கு மதிப்பிறக்கம் ஏற் படாது தடுக்கவோ சுதந்திர வீதத்தில் அனுமதிக்கப்படும் விவகாரங் களுக்கு அரசாங்கம் வரம்பு குறிக்கலாம். அப்படியாயின், நிச்சயமாக ஒரு 'கள்ள'ச் சந்தை ('black' market) ஏற்படும். பிற அங்காடி களில் அனுமதிக்கப்படாத விவகாரங்கள் இதில் நடக்கும். இவற்றைக் கண்டுபிடிப்பது கஷ்டம். எனவே, உல்லாசப் பிரயாணிகளின் செலவுகள், இலாபங்களை அனுப்புவது, மூலதன மாற்றுகைகள் ஆகிய புலனுகா உருப்படிகளில்தான் இத்தகைய விவகாரங்கள் சாதாரணமாக நடக்கும்.

**நிலையான பல வீதங்கள்** (Fixed Multiple Rates)

போருக்கு முன் இத் துறையில் செய்யப்பட்ட பல சோதனைகளி லிருந்து சிக்கலான பல நாணயமாற்று வீதங்கள் வைத்திருக்கும் முறைகள் தோன்றின. அந்தச் சமயத்தில், நாணயமாற்றுக் கட்டுப் பாடுகளிலும் இறக்குமதி லைசென்சு முறையும் ஆதரவு தர ஒரு மிகை மதிப்புடைய அதிகாரபூர்வமான வீதம் நாட்டு வாணிபத்தைச் சுருக்கிய வேதனையிலிருந்து மீளவேண்டுமெனப் பல நாடுகள் வழிபார்த்துக் கொண்டிருந்தன. ஒரேயடியாகத் தம் செலாவணிகளின் மதிப்பைக் குறைக்க அவற்றுக்கு விருப்பமில்லை. எனவே, துண்டுதுண்டாக அதைச் செய்ய முயன்றன. இதற்காகப் பலவகை விவகாரங்களில் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு வீதம் ஏற்படுத்தப்பட்டது. போட்டியில் மிக உயர்ந்தநிலையிலுள்ள ஏற்றுமதிகளுக்கு, அல்லது அவற்றில் ஒரு

பகுதிக்கு, மற்றும் பொருளாதாரத்துக்கு அதிமுக்கியமான பொருள் களின் இறக்குமதிக்குப் பொதுவாக அவ் வீதங்களில் மிகக் குறை வானது பொருந்தும். அதற்கடுத்து அதிகமாக உள்ள பல வீதங்களில், எந்த ஏற்றுமதிக்கு நிறைய தூண்டுதல் தேவையோ அதற்கு அதிகமான வீதமும், அதேபோல எது முக்கியக் குறைவான இறக்கு மதியோ அதற்கு அதிகமான வீதமும் பொருந்துமாறு அவை அமைக்கப்பட்டன. எல்லாவற்றிலும் மிக உயர்ந்த வீதம் சாதாரண மாக மூலதன மாற்றுகைகள் உட்படப் புலனுகா விவகாரங்களுக்குப் பொருந்தியது.

### பல நாணயமாற்று வீதங்களின் விளைவுகள்

ஓர் ஒப்பீட்டுக்கு அடிப்படையாக, ஒரு குறிப்பிட்ட நாடு உபயோகிக்கும் பல நாணயமாற்று வீதங்களின் சராசரியை எடுத்துக் கொள்ளுங்கள். அந்தச் சராசரிக்குக் கீழேயுள்ள வீதங்கள் அச் செலாவணிக்கு மிகை மதிப்பளிக்கின்றன. அவை ஏற்றுமதிகள்மீது ஒரு வரி விதிப்பது அல்லது இறக்குமதிகளுக்கு ஒரு பண உதவி தருவது போன்ற விளைவை ஏற்படுத்தும். சராசரியைவிட அதிகமான வீதங்கள், அதற்கு மாருக, செலாவணியைக் குறைமதிப்பிடுகின்றன. அவற்றை ஏற்றுமதிக்குச் செய்யும் பண உதவிக்கும், இறக்குமதிகள் மீது விதிக்கப்படும் வரிக்கும் ஒப்பிடலாம்.[3]

மிகை மதிப்பீடு (அதாவது குறைவான நாணயமாற்று வீதங்கள்) காரணமாக, ஏற்றுமதித் துறையிலும், இறக்குமதியோடு போட்டி யிடும் துறையிலும் மிகவும் திறன்வாய்ந்த உற்பத்திச் சாதனங்களை உபயோகிப்பது தடைப்படுகிறது. ஏற்றுமதிகளைப் பொறுத்தவரை—பன்னாட்டுச் சிறப்பு (advantage) மிகவும் அதிகமாக உடைய சாதனங்களைப் பெற்ற—மிகச் சக்திவாய்ந்த உற்பத்தியாளர்கள் மட்டுமே இந்தக் குறைந்த வீதங்களில் தம் பொருள்களை விற்கமுடியும். இந்தக் குறைந்த வீதங்களால் இறக்குமதிக்கு ஒரு மானியம் கிடைப்ப தால் சராசரி வீதத்தில் இறக்குமதிகளோடு எளிதில் போட்டியிடக்கூடிய மாற்றுப் பொருள்களை உள்நாட்டில் உற்பத்திசெய்வது தடைப்

[3] சுதந்திரமான நாணயமாற்றுவீத முறையில், பல வீதங்களின் சராசரிதான் சமநிலை வீதம் என்று எடுத்துக்கொண்டாலொழிய இங்கு ஒரு சிக்கல் ஏற்படும். சிலசமயம் பல வீதங்களில் மிக அதிகமானது சமநிலை வீதமாகத் தோன்றி யிருக்கிறது. அப்படியாயின், அதைவிடக் குறைந்த எல்லா விகிதங்களும் இறக்குமதி களுக்குப் பல அளவுகளில் மானியம் அளித்து, ஏற்றுமதிகளுக்குப் பல அளவுகளில் வரிவிதிக்கும். நாம் அறிந்ததை வைத்துக்கொண்டு பல வீதங்களில் எங்குச் சம நிலை வீதம் உள்ளது என்று முடிவு கூறுவது இயலாது. குறிப்பிட்ட பிரத்யட்சமான ஒரு சூழ்நிலையில்கூட அதை மதிப்பிடுவது கடினம். எனவே, சராசரி வீதத்தை வசதியாகவும் நம் ஆராய்ச்சிக்கு இப்போதைக்குப் போதுமானதாகவும் ஓர் அளவையாக வைத்துக்கொள்கிறேம்.

படுகிறது.[4] அதற்கு மாருக, குறைமதிப்பீடு (சராசரியை விட உயர்ந்த வீதம்) திறன்குறைந்த சாதனங்களை உபயோகிப்பதை அதிகமாக்கு கிறது. ஏனெனில், ஏற்றுமதி வரம்பில் உள்ள பொருள்களுக்கு ஒரு மானியத்தை அது அளிக்கின்றது ; இறக்குமதிகளோடு போட்டியிடும் திறன்குறைந்த தொழில்களை இக் குறைமதிப்பீடு பாதுகாக்கிறது.

இந்தப் பாதுகாப்பு, மற்றும் மானிய விளைவு (subsidy effect) களோடு ஒரு (அரசாங்க) வருவாய் விளைவும் (revenue effect) ஏற் படுகிறது. இந்தக் குறைந்த விகிதங்களில் இறக்குமதியாளருக்கு விற்கும் அன்னியச் செலாவணியைவிட, அவ் வீதங்களில் அச் செலா வணியின் அளிப்பு அதிகமாக இருந்தால் இந்த வருவாய் விளைவு ஏற்படுகிறது. ஏனெனில், அப்போது குறைந்த விலைக்கு வாங்கிய உபரி அன்னியச் செலாவணியை அதிகவிலைக்கு விற்று அரசாங்கம் இலாபமடையமுடியும். இவ்வாறு, அரசாங்கம் வருவாய் பெறவேண்டும் என்பதற்காக எந்தக் குறிப்பிட்டவகை விவகாரத்துக்கும் வாங்கும் வீதத்துக்கும் விற்கும் வீதத்துக்கும் கணிசமான வித்தியாசத்தை ஏற்படுத்தும் உபாயமும் பல நாடுகளில் கையாளப்பட்டது.

## பல நாணயமாற்று வீத முறையின் மதிப்பீடு

### நிர்வாகத்துறையில் எளிமை

பல நாணயமாற்று வீத முறையானது, ஒருபகுதி செலாவணி மதிப்பைக் குறைப்பதற்குச் சமம். எனவே, ஒரே ஒரு மிகைமதிப் புடைய வீதத்தை வைத்திருந்தால் உள்ளதைவிட இம் முறையில் அன்னியச் செலாவணி நிறைய கிடைக்கும். மிகக் குறைவான, மிகைமதிப்புடைய வீதத்தில் இறக்குமதி செய்ய அனுமதிக்கப்படாத பொருள்களை இப்போது பெறமுடியும். ஆனால், அதற்கான வீதமும் அவற்றின் விலைகளும் அதிகமாக இருக்கும். இதன் பயனாக அன்னியச் செலாவணியை அளவுக் கட்டுப்பாட்டினால் பங்கிடுவது போய், விலைமூலம் பங்கீடு உண்டாகிறது. இறக்குமதி, ஏற்றுமதி களின் அளவுகளைக் கட்டுப்படுத்த ஏற்படுத்திய சிக்கலான நிர்வாக அமைப்பு முழுவதையும் இப்போது எடுத்துவிடலாம்.

[4] மானிய வீதங்களில் அத்தியாவசியமான உணவுப்பொருள் இறக்குமதிகளைச் சேர்த்ததனால் சிலி நாட்டின் விவசாயம் பெரிதும் பாதிக்கப்பட்டது. 1930-ஐ அடுத்த பத்தாண்டுகளில் விவசாயப் பொருள்களை நிகரமாக ஏற்றுமதி செய்த நாடு 1945-க்குப் பின் நிகரமாக இறக்குமதி செய்ய ஆரம்பித்துவிட்டது. இம் மாறுதலுக்குச் சிலியில் உற்பத்திக்கு ஏற்ற சூழ்நிலையற்ற விவசாயப் பொருள்களுக்கு அந் நாட்டில் தேவை அதிகரித்தது ஒரு காரணம். இருந்தபோதிலும் கோதுமை, மாமிசம் ஆகிய பொருள்களின் இறக்குமதி அதிகரித்ததனால் நிலைமை மேலும் மோசமாயிற்று. இப் பொருள்களுக்குக் குறைவான ஏற்றுமதி இறக்குமதி நாணய மாற்று வீதங்கள் விதிக்கப்பட்டதால் இவற்றின் உள்நாட்டு உற்பத்தியில் இலாபமில்லாமல் போயிற்று.

விலைமூலம் பங்கீடு செய்வதைப் புகுத்திய பின் நிர்வாகத் துறையினர் மேற்கொள்ளவேண்டிய முடிவுகள் குறைகின்றன. எந்த அளவுக்கு ஒவ்வொரு பொருளையும் இறக்குமதி செய்யலாம், அதை எங்கிருந்து செய்யவேண்டும், எந்த இறக்குமதியாளன் அதைச் செய்ய வேண்டும் என்பதையெல்லாம் இனித் தீர்மானிக்கத் தேவையில்லை. இதற்கான விவரமான விதிமுறைகளை அமல் செய்துகொண்டிருந்த பல அலுவலக ஊழியர்களைக் குறைக்கலாம்; அரசாங்க பட்ஜெட் செலவில் நிறைய மிச்சம் உண்டாகும்.

கட்டுப்பாட்டு அமைப்பு நன்ருக நடப்பது நிர்வாகம் செய்பவர்களின் யோக்கியத்தையும் திறமையையும் பொறுத்தது. எனவே, உயர்ந்த சிவில் பணித்துறை (civil service) இல்லாத நாட்டுக்கு அளவுத் தடைகளை நீக்குவது விசேஷமான நன்மை பயக்கும். திறமையின்மையிருப்பின் நிர்வாக முடிவுகளில் தவறுகள் ஏற்படுகின்றன. சூழ்நிலை மிகவும் சாதகமாயிருந்தாலே இது மோசமாகும். மேலும், இலஞ்ச ஊழல் இருந்தால் இலஞ்சம் கொடுப்பவர்களும் வேண்டியவர்களும்தான் ஏற்றுமதிகளையும் இறக்குமதிகளையும் செய்ய அனுமதிக்கப்படுவர்.

### சிக்கலும் நிச்சயமற்ற நிலைமையும்

நாணயமாற்றுக் கட்டுப்பாடுமட்டும் செய்து செலாவணி மதிப்பைக் குறைக்காமல் இருக்கும் முறையோடு ஒப்பிட்டால் பல நாணயமாற்று வீத முறையினுல் மேற்கூறிய நற்பயன்கள் ஏற்படக் கூடும் எனினும் அம் முறையில் சில குறைகளும் உண்டு. அது வாணிப நிலைமையில் மேலும் ஒரு சிக்கலைப் புகுத்துகிறது; தவிர, வீதங்களையோ, அவற்றில் ஒவ்வொன்றிலும் அனுமதிக்கப்படும் விவகாரங்களையோ அரசாங்கம் அடிக்கடி மாற்றினுல் மேலும் நிச்சயமற்ற நிலை வாணிபத்தில் ஏற்படுகிறது. மேலும், ஒழுங்கீனமான எதிரின வீதங்களைத் தடுக்க அரசாங்கம் ஏதாவது உறுதியாகச் செய்தாலொழிய அவையும் தோன்றக் கூடும்.

### சாதனங்களைத் திறம்படப் பயன்படுத்த முடியாது

பல வீதங்களைக் கொண்ட நாடு இறக்குமதிகளை மேலும் எளிதாகச் செய்யும்; விரும்பிய ஏற்றுமதிகளைச் செய்ய மேலும் ஊக்கமுண்டாகிறது; எனவே, அந் நாட்டுக்கு இது நன்மையே. ஆனுல், அதற்கு எதிராக, இம் முறையில் உள்ள வரிகள், மானியங்கள் விளைவு காரணமாக உற்பத்திச் சாதனங்கள் திறம்பட முழுமையாகப் பயன்படுத்தப் படுவது தடுக்கப்படுகிறது. இதன் விளைவு மோசமாக இருக்கக்கூடும்;[5]

[5] உதாரணமாக, சில உணவுப் பொருள்களை தண்டனை வீதத்தில் இறக்குமதி செய்ததால் இரண்டாவது உலகப் போருக்குப் பின் சிலி (Chile) நாட்டின் விவசாயம் மட்டுமன்றி, பெரு (Peru), ஈக்வடார் (Ecuador) நாடுகளின் விவசாயத் தொழில்

மேலும், பலவித மானியங்களும் வரிகளும் நெடுங்காலத்தில் எத் தொழில்கள் திறம்பட நடக்கும் என்பதைப் பொறுத்து நிர்ணயிக்கப்பட வேண்டுமேயன்றி, செலுத்துநிலையைப் பொறுத்தன்று.

**போட்டியாளர்கள்மீது பேதமான விளைவுகள்**

பல நாணயமாற்று வீதத்தினால் பிற நாடுகள் எப்படிப் பாதிக்கப் படுகின்றன என்பதைப் பார்ப்போம். மிக முக்கியமாக, ஏற்றுமதி களுக்கு மானிய வீதம் நிர்ணயிக்கப்படும்போது, அது சில ஏற்றுமதி களுக்குமட்டுமே பொருந்தும். எனவே, சில போட்டி நாடுகளை மட்டுமே அது பாதிக்கும். இது அநியாயமான போட்டியாகக் கருதப் படுவது சரியே. இவ் வீதங்களில் மேலும் மாறுதல்கள் செய்தால், இப் பட்சபாதம் மேலும் மோசமாகும். இதற்கு மாறாக, ஒரே அளவுக்கு, எல்லா வாணிபத்தையும் பாதிக்குமாறு செலாவணியை மதிப்பிறக்கம் செய்தால், 'மதிப்பிறக்கம் செய்யும் நாட்டின் பொருளாதாரம் எவ்வ ளவு பரவலாக வளர்ந்துள்ளதோ அவ்வளவு பரவலாகப்'[6] போட்டி யாளர்கள் பாதிக்கப்படுவார்கள்.

## நாணயமாற்றுக் கட்டுப்பாடு—ஒரு மதிப்புரை

பாதகமான செலுத்துநிலையினின்று ஒரு நாட்டைப் பாதுகாக்கும் முறையாக நாணயமாற்றுக் கட்டுப்பாடு எப்படிச் செயலாற்றுகிறது என்று மீண்டும் பார்த்தோமானால், உடனடியாகப் பாதிக்கப்பட்ட பொருளாதாரத்தில் அதன் விளைவுகள் கவலைக்கிடமாக இருப்பதைக் காண்கிறோம். கடந்த போருக்கு முன்னும் பின்னும் இருந்ததுபோல இம் முறை உலகெங்கும் பரவினால், உலகப் பொருளாதாரம் முழுமை யாகச் சீர்குலைகிறது.

வெளிச் சக்திகளிலிருந்து அது பாதுகாப்பளிப்பதனால், நாணய மாற்றுக் கட்டுப்பாட்டைக் கடைப்பிடிக்கும் நாடு பணவீக்கத்தை ஏற்படுத்தக்கூடிய கொள்கைகளை மேற்கொள்வதற்குத் தடையேதும் இல்லை. இதனால் சமநிலையிலுள்ள நாணயமாற்று வீதம் மிகை மதிப் புடையதாக மாறுகிறது. அல்லது ஏற்கெனவே மிகை மதிப்புள்ளது

களும் (சந்தேகமற வேறு நாடுகளின் விவசாயமும்கூட) மிகவும் சுருங்கின. பெரு நாடு பல வீதங்களை ஏற்படுத்துமுன் உள்நாட்டு மாமிச உற்பத்தி உள்நாட்டு நுகர் வுக்குப் போதுமானதாக இருந்தது; (குறைவான) அதிகாரபூர்வமான வீதத்தில் மாமிச இறக்குமதி அனுமதிக்கப்பட்டபின் மொத்த நுகர்வில் பாதிக்கும் கீழே உள் நாட்டு உற்பத்தி குறைந்தது. கோதுமை மாவின் விஷயத்தில் ஈக்வடாரின் அனுபவ மும் இத்தகையதே. E. M. Bernstein, 'Some Economic Aspects of Multiple Exchange Rates', *International Monetary Fund Staff Papers*, Vol. I, No. 2 (September, 1950), பக்கம் 230.

[6] முன் கூறிய அதே கட்டுரை, பக்கம் 234.

மேலும் மிகை மதிப்புடையதாகிறது. இவ்வாறன கொள்கைகளைக் கடைப்பிடிக்க நாடுகள் மிகவும் தூண்டப்படுகின்றன. ஏனெனில், உலக நன்மைக் குறிக்கோள்களைவிட ஒரு நாட்டின் தனிக் குறிக்கோள் களைக் கடைப்பிடிப்பதற்கு அரசியல் ஆதரவு அதிகம்.

நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளும் மிகை மதிப்பீடும் பல நாடு களுக்குப் பரவும்போது, வாணிபம் வேறுவழியின்றிப் படிப்படியாக இருமுக வழிகளில் செல்கிறது. ஏனெனில், மிகை விலையுடைய ஏற்று மதிகளை நிச்சயமாக விற்பதற்கும் கிடைத்தற்கரிய இறக்குமதிகளைப் போதுமான அளவு பெறுவதற்கும் இந்த உபாயம் தேவையாகிறது. மிகை மதிப்புடைய செலாவணிகளைக் கொண்ட நாடுகள், சுதந்திரமான, ஆனால், கிடைத்தற்கரிய அன்னியச் செலாவணியைப் பயன்படுத்த விரும்பாமல், மாற்றுரிமையற்ற தமது செலாவணியையே கொடுத்து இறக்குமதிகளை வாங்க ஆவலாக உள்ளன. எனவே, கட்டுப்படுத்தப் பட்ட செலாவணிகளின் மாற்றுரிமை குறைவதோடன்றி, பேதங்காட்டு மாறும் அமைகிறது. இளகிய செலாவணிகள் தாராளமாக அளிக்கப் படுகின்றன ; கடின செலாவணிப் பங்கீடு கடுமையாகக் கட்டுப்படுத் தப்படுகிறது.

இருமுக வாணிபம் பரவியதும் உண்மையான பன்னாட்டு வாணிப முறை அழிகிறது ; கட்டுப்பாடுள்ள பிராந்தியங்கள், அவை இல்லாதவை ஆகிய இரண்டுக்கும் வாணிப மாற்று இலாபம் (gains from trade) மிகவும் குறைகிறது. எங்குப் பொருள்கள் திறம்படவும் மலிவாகவும் உற்பத்தி ஆகின்றனவோ அங்கிருந்து வேண்டுமளவு இனி வாங்க முடியாது. எங்குத் தேவை அதிகமோ, எங்கு அதனால் விலைகள் அதிகமோ, அங்குப் பொருள்களை வேண்டுமளவு விற்கவும் முடியாது. எப்போதும் விற்கும் திறமையைப் பொறுத்ததுதான் வாங்கும் திறமை. மிகை மதிப்புடைய செலாவணிகளில் விலையிட்ட ஏற்றுமதிகள் கட்டுப் பாடற்ற அங்காடிகள் அதிகம் விற்காது ; எனவே, தடைகளால் வேலி யமைத்துக்கொண்டுள்ள பிற நாடுகளுடைய இதேபோல மிகை விலை யுடைய ஏற்றுமதிகளுக்கு மாற்றாக அதிக விகிதத்தில் ஏற்றுமதிகளைச் செய்யவேண்டியிருக்கும்.

வாணிபத்தில் பெரும் பகுதி, தராதர அடக்கச் செலவுகளைப் பொறுத்து நடப்பதில்லை ; ஆனால், கிடைக்கும் செலாவணியைப் பொறுத்து அமைகிறது ; எனவே, உலக உற்பத்திச் சாதனங்களின் பங்கீடு மேலும்மேலும் சிக்கனத்துக்கு வழி செய்யாதவாறு இருக்கும். ஏற்றுமதித் தொழில்கள் தோன்றுகின்றன, விரிவடைகின்றன ; காரணம், அவை திறமையோடு நடப்பதால் அல்ல ; ஆனால், அவற்றின் விற்பனைக்குப் பாதுகாப்பு இருப்பதால் இறக்குமதிகளின் அளவு கட்டுப் படுவதால் அடக்கச் செலவு மிகுந்த மாற்றுப்பொருள்களுக்கு நல்ல பாதுகாப்புக் கிடைக்கிறது.

வாணிபமாற்று இலாபம் குறைவதோடன்றிப் பெரிய நிர்வாகத் துறையை வைத்திருக்க நேரிடையாகச் செலவு ஏற்படுகிறது; அத் தவறுகள் திறமையற்ற, இலஞ்சம் வாங்கும் நிர்வாக ஊழியர்களது செயல்களினால் பன்மடங்கு பெருகுவதாலும் மறைமுகமாகச் செலவுகள் அதிகமாகின்றன.

இக் குறைகளில் சிலவற்றைப் பல நாணயமாற்று வீதங்களைப் பயன்படுத்துவதனால் குறைக்க முடியும். ஆனால், செலாவணி மதிப்பைக் குறைப்பதில் ஒரு பகுதியைத்தான் பலவீத முறை செய்கிறது. இதனாலோ, நிச்சயமற்ற நிலைமைகளும் வேறு கோணல்களும்கூட ஏற்படுகின்றன.

செலுத்துநிலை சீர்குலைந்த நாடு, மதிப்பிறக்கம், பணச் சுருக்கம், நாணயமாற்றுக் கட்டுப்பாடுகள் இவற்றுக்குள் ஓர் உபாயத்தைத் தேர்ந்தெடுக்கும் கட்டாயம் இருந்தால், ஒவ்வொன்றின் நன்மை தீமைகளைத் தீர ஆராயவேண்டும். அடிப்படைப் பிரச்சினையை நாணயமாற்றுக் கட்டுப்பாடு தீர்ப்பதில்லை. பற்றுக்குறையைமட்டும் அது சமாளிக்குமே தவிர, அதன் காரணங்களை யல்ல. மாறாக, அவற்றை மேலும் மோசமாக்கிச் சமநிலைக் கேட்டை மேலும் ஆழ்ந்ததாகச் செய்துவிடும்.

தடைகள் மிதமாக இருக்கவேண்டும்; வேறு அடிப்படையான திருத்தங்கள் செய்யப்படும்வரை தற்காலிகமாக இருக்கவேண்டும்; இல்லாவிட்டால் நாணயமாற்றுக் கட்டுப்பாட்டினால் நஷ்டம் அதிகம்; அது விரும்பின பலனையும் தராது.

## பார்வைக்குரிய சில நூல்கள்

Bernstein, E. M., 'Some Economic Aspects of Multiple Exchange Rates,' *IMF Staff Papers*, Vol. I, No. 2 (1950). பல நாணயமாற்று வீதங்களின் விளைவுகளைக் கோட்பாட்டளவில் சுருக்கமாக விவரிக்கிறது.

Bloomfield, Arthur I., *Speculative and Flight Movements of Capital in Postwar International Finance*. Princeton, N. J.: Princeton University Press, 1954. பல விவரங்களைத் தருவதோடு, நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளைத் தவிர்க்கும் முறைகளையும் மூலதன ஓட்டத்தைத் தடுக்கும் முறைகளையும் இந் நூல் கூறுகிறது.

Chalmers, Henry, *World Trade Policies*. Berkeley, Calif.: University of California Press, 1953. அப்போது

வெளிவந்த கட்டுரைகளைத் தொகுத்துப் பன்னாட்டு வாணிபக் கொள்கைத் துறையில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைத் தொடர்ச்சியாகக் கூறுகிறது.

de Looper, Johan H. C., 'Current Usage of Payments Agreements and Trade Agreements,' *IMF Staff Papers*, Vol. IV, No. 3 (August, 1955). வாணிப ஒப்பந்தங்கள், செலுத்தல் ஒப்பந்தங்கள் ஆகியவற்றின் முக்கிய அம்சங்கள், விளைவுகள், பிரச்சினைகளை விவரமாக ஆராய்கிறது.

Ellis, Howard S., *Exchange Control in Central Europe.* Cambridge, Mass.: Harvard University Press, 1941. 1930-க்கு அடுத்த பத்தாண்டுகளில் கட்டுப்பாடு முறைகளின் நடைமுறையை ஆராய்கிறது.

League of Nations, *International Currency Experience* (1944). ஏழாவது அத்தியாயம் நாணயமாற்றுக் கட்டுப்பாட்டைப் பற்றியது.

Meade, James E., *The Balance of Payments.* New York: Oxford University Press, 1951. நிதி, வாணிபத் துறைகளில் நேரிடையான கட்டுப்பாடுகளைப்பற்றி ஐந்தாவது பாகத்தில் நன்றாகக் கூறப்பட்டுள்ளது.

Mikesell, Raymond F., *Foreign Exchange in the Postwar World.* New York: Twentieth Century Fund, 1954. உலகப் போருக்குப் பின் வழங்கிய கட்டுப்படுத்தப்பட்ட வாணிப, செலுத்தல் முறையைப் பொதுவாக மிக நன்றாக விவரித்துப் பல உதாரண விவரங்களைத் தருகிறது.

## 22. சிறந்த வழியைத் தேர்ந்தெடுப்பது
### (Choosing the Best Way Out)

ஒரு நாடு தன் செலுத்துநிலையில் தீவிரமான சமநிலைக் கேடு ஏற்பட்டால் அதைத் தீர்க்க மூன்று வெவ்வேறு வழிகளில் ஒன்றைப் பின்பற்றலாம் என்று கடந்த இரு அத்தியாயங்களில் பார்த்தோம். அவ்வழிகள் பின்வருமாறு: (1) அந் நாடு, நாணயமாற்று வீதங்களைத் தடையின்றி ஏறியிறங்க அனுமதிக்கலாம். இதனுல் ஏற்றுமதிகள், இறக்குமதிகள், உள்நாட்டுப் பொருள்கள் ஆகியவற்றின் விலைகளின் தொடர்பு மாறுவதனுல் பற்றுக்குறையை நீக்க அது முயலலாம். (2) அந் நாடு, நாணயமாற்று வீதங்களைத் திடநிலையில் வைத்திருக்கலாம்; பற்றுக்குறைக்குக் காரணமான ஏற்றுமதிகளின் தாழ்வும் இறக்குமதிகளின் உயர்வும், வருமானத்தையும் உள்நாட்டு விலைகளையும் குறைப்பதை அனுமதிக்கலாம். இம் மாறுதல்களால் சமநிலை மீண்டும் ஏற்படவில்லையாயின் பணத்தின் அளிப்பைக் குறைத்து அம் மாறுதல்களுக்கு வலிவூட்டலாம். பணத்தின் அளிப்பை வேண்டுமென்றே மத்திய பாங்கு அதிகாரிகள் குறைக்கலாம்; அல்லது, பாங்கு அமைப்புத் தன் வைப்புகளின் ஒரு பகுதியைச் சேமநிதியாக வைத்திருப்பதால், சேமநிதி நஷ்டம் காரணமாகப் பணத்தின் அளிப்புக் குறையலாம். (3) அல்லது நாணயமாற்று அங்காடியின்மீது கட்டுப்பாடுகளை விதிக்கலாம். கட்டுப்பாட்டு அதிகாரிகளுக்குக் கிடைக்கும் அன்னியச் செலாவணியின் மொத்த அளவுக்குமட்டும் இறக்குமதிகளுக்காக அதைப் பங்கிட்டுத் தரலாம்.

இம் மாற்று வழிகளில் ஒன்றைக் கடைப்பிடித்தால் மற்றவைகளைக் கடைப்பிடிக்கக் கூடாது என்பதில்லை. அவற்றைப் பலவகையாகக் கலந்து பயன்படுத்தலாம். நாணயமாற்று வீத மாறுதல்களையும் உள்நாட்டுப் பணச் சுருக்கத்தையும் பலவித அளவுகளில் கலந்து பயன்படுத்தித் திருத்தம் செய்வதற்காக, மாறும் செலாவணி வீதங்களையும் நாணய மதிப்பைக் குறைப்பதையும் உபயோகிப்பதை நாம் ஏற்கெனவே பார்த்தோம். நாணயமாற்றுக் கட்டுப்பாடு இருந்தால், சிறிது

சிறிதாகவோ ஒரேயடியாகவோ ஓரளவுக்கு நாணய மதிப்பைக் குறைக்கக்கூடாது என்பதில்லை. தவிர, இந்தத் திருத்த இயக்கங்களோடு சேர்ந்து செயலாற்றத் தகுந்த உள்நாட்டுப் பொருளாதாரக் கொள்கைகளையும் கடைப்பிடிக்கலாம் என்பதை நாம் பார்க்கப் போகிறோம்.

## எதைத் தேர்ந்தெடுப்பது?

செலுத்துநிலைப் பிரச்சினை ஒன்றை உடைய ஒரு நாடு பல மாற்றுவழிகளில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கலாம். எதைத் தேர்ந்தெடுப்பது? எதைப்பொறுத்து ஒரு வழியைத் தேர்ந்தெடுக்க வேண்டும்? சமநிலைக் கேட்டின் காரணத்தை எண்ணிப் பார்த்து அதைப்பொறுத்து வழியைத் தேர்ந்தெடுக்க வேண்டுமா, அல்லது, அக் காரணத்துக்கும் தேர்ந்தெடுக்கும் வழிக்கும் சம்பந்தம் ஒன்றும் இல்லையா? இந்தக் கேள்விகளை இனி நாம் ஆராய்வோம்.

எந்த வழி குறைந்த செலவில் மிகுந்த விளைவைத் தருகிறதோ அதைத்தான் பொருளாதாரத் துறையில் கடைப்பிடிக்க வேண்டும். இது எந்தப் பொருளாதாரக் கொள்கைக்கும் பொருந்தும். குறிப்பிட்ட நம் உதாரணத்தைப் பொறுத்தவரையில், அவ் வழி நாட்டுப் பொருளாதாரத்தை அதிகமாகக் கலக்காமல், செலுத்துநிலைப் பற்றுக்குறையை நீக்கவேண்டும். செலுத்துநிலைச் சமநிலைக் கேடு என்கிற வியாதியை குணப்படுத்துவதற்கு மருந்து கொடுப்பதில் நம் வெற்றி, அவ் வியாதியின் காரணத்தைப் பெரும் அளவுக்குப் பொறுத்திருக்கும்.

இதுவரை நாம் செய்த ஆராய்ச்சியில் பலவகைத் திருத்தங்களின் செயல்முறையை மட்டும்தான் பார்த்தோம்; முதலில் சமநிலைக் குலைவு ஏன் ஏற்பட்டது என்பதை நாம் முக்கியமாகக் கருதவில்லை. இந்தக் கருத்தை இப்போது மாற்றிக்கொள்ளவேண்டும். உள்நாட்டுப் பணவீக்கத்தினால் ஏற்பட்டாலும், ஒரு நாட்டின் ஏற்றுமதிகளுக்குக் கடுமையான போட்டி ஏற்பட்டதால் உண்டானாலும், எப்படி ஏற்பட்டாலும் பற்றுக்குறை, பற்றுக்குறைதான். ஆனால், சுலபமாகச் சமநிலையை மீண்டும் ஏற்படச் செய்யவேண்டுமானால் ஒவ்வொரு சூழ்நிலைக்கும் தக்க மருத்துவம் செய்யவேண்டும்.

## என்ன வியாதி?

ஒவ்வொரு முக்கியமான வகைச் சீர்கேட்டுக்கும் அதற்கு ஏற்ற மருந்தை நாம் எழுதிக்கொடுக்க இப்போது முற்படலாம். ஆனால், மருத்துவத்தில் முதலில் என்ன வியாதி என்று கண்டுபிடிக்க வேண்டும். செலுத்துநிலைச் சமநிலைக் கேட்டின் முக்கியக் காரணங்களை நாம் ஏற்கெனவே விவரித்திருக்கிறோம் என்பது உண்மையே. அவற்றை

வருமான மாற்றங்களின் விளைவு, அமைப்பு மாற்றங்களின் விளைவு என இரண்டாகப் பிரித்தோம். ஆனால், நடைமுறையில் ஒரு கேடு எந்த வகையைச் சேர்ந்தது என்று எவ்வாறு கண்டுபிடிப்பது?

கொள்கைகளைத் தீர்மானிக்கும் அதிகாரிதான் எந்த முறைகளை மேற்கொள்ளவேண்டும் என்பதை நிர்ணயிக்கவேண்டும். அவர் பார்க்கும் பொருளாதாரம் சிக்கல் நிறைந்து இயங்கிக்கொண்டிருக்கிறது. பெரும்பாலான நாடுகளில் செலுத்துநிலைப் புள்ளிவிவரங்கள் தயாராகக் கிடைக்கின்றன. செலுத்துநிலையில் உள்ள பற்றுக்குறை அப் புள்ளிவிவரங்களில் பளிச்செனத் தெளிவாகத் தெரிகிறது. ஆனால், அதன் பின்னால் என்ன இருக்கிறது? அஃது எதனால் ஏற்பட்டது? பழைய பணவீக்கத்தினால் விலைகளில் உள்ள தாரதம்மியத்தாலா? அவரது நாட்டின் முக்கிய ஏற்றுமதித் தொழில்களில் செலவுகள் அதிகரித்ததாலா? வெளிநாடுகளில் ஏற்பட்ட தொழில்நுட்ப மாறுதல்களாலா? முக்கியமான ஏற்றுமதி அங்காடி ஒன்றில் மந்தம் ஏற்பட்டதாலா? அல்லது, இவற்றை எல்லாம்விட உண்மையாக இருக்கக்கூடியதான, இவையும் பிற காரணங்களும் கலந்த ஒரு சூழ்நிலையினாலா? அந்த அரசாங்க அதிகாரி ஒரு முக்கியமான முடிவைச் செய்யவிருக்கிறார். இந்தக் கேள்விக்குத் தன்னால் இயன்ற அளவு சிறந்த முறையில் விடை கண்டுபிடிக்க வேண்டும். விடை தெளிவாகத் தானே கண்ணுக்குப் புலப்படுமாறு இல்லை. அவரும், அவரது அலுவலக ஊழியர்களும் பல புள்ளிவிவரங்களை ஆராய்ந்து தேடிக் கண்டுபிடிக்க வேண்டும் அவ் விடையை. வருமானம், வேலை நிலை, விலைகள், பாங்குச் செலாவணி, ஆலை உற்பத்தி, விவசாய உற்பத்தி, சரக்கு இருப்புகள், கட்டட வேலை, ஏற்றுமதிகள், இறக்குமதிகள், மூலதனப் போக்குவரத்துகள் போன்ற பல பொருளாதார நிகழ்ச்சிகளுடைய புள்ளிவிவரங்களை அவர்கள் ஆழ்ந்து ஆராயவேண்டும். இங்குதான் வியாதியைக் கண்டுபிடிக்கும் உண்மையான ஒரு பிரச்சினை இருக்கிறது. எந்த அடையாளங்களைத் தேடவேண்டும், அவற்றை எங்கே காணவேண்டும் என்பதைத் தெரிந்து வைத்திருந்தால்தான் என்ன வியாதியென்று கண்டுபிடிக்க முடியும். இந்தப் பிரச்சினைகளைத் தீர்க்கச் சில குறிப்புகளைக் கொடுக்கலாம்.

### வருமான மாறுதல்கள்

செலுத்துநிலைச் சீர்கேட்டைத் தோற்றுவிக்கக்கூடிய காரணங்களில் மூர்க்கமான (rampant) பணவீக்கத்தைதான் மிக எளிதாக அடையாளம் கண்டுகொள்ள முடியும். விலைவாசிகள் உயருவதிலும், செலாவணியும் பாங்குப் பணமும் விரிவடைவதிலும், அரசாங்க வரவு செலவுக் கணக்கில் துண்டு விழுவதிலும் அதைக் கண்கூடாகப் பார்க்கலாம்; மிகையான முழு வேலைநிலையிலும், தொழிலாளர் மற்றும் கச்சாப்

பொருள்களின் அளிப்பில் பற்றுக்குறையிலும் அதைத் தெளிவாகக் காணலாம். 1932-க்கும் 1959-க்கும் இடையே சிலி நாடு இருந்த நிலை இதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. அதன் செலுத்துநிலை உண்மையில் பற்றுக்குறையில் இருந்தது அல்லது பற்றுக்குறை ஏற்படும் போலிருந்தது. அதைத் தடுக்க வன்மையான நாணயமாற்றுக் கட்டுப்பாடு இருந்தது. பற்றுக்குறையை மட்டுப்படுத்த அவ்வப்போது சிறிது சிறிதாகச் செலாவணியின் மதிப்புக் குறைக்கப்பட்டது. இந்தக் காலத்தின்போது, குறைந்தபட்சம் ஆண்டுக்கு ஆறு சதவிகிதமும் அதிகப் பட்சமாக ஆண்டுக்கு 70 சதவிகிதமும் செலாவணியும் பாங்கு வைப்புகளும் விரிவடைந்தன. பண அளவு உயரும் அளவுக்கு ஏறக்குறைய விலைகளும் கூடவே அதிகரித்தன. விலை உயர்வுகள் சராசரி ஆண்டுக்கு 25 சதவிகிதமாக இருந்தன. சிலியின் செலுத்துநிலைப் பிரச்சினைக்குப் பிற காரணங்கள் இருந்தபோதும், அதற்கு மிக முக்கியமான காரணம் பணவீக்கமே.

மிதமான (mild) பணவீக்கத்தை அவ்வளவு எளிதில் கண்டு பிடிக்கமுடியாது.. முரண்பாடு காரணமான வேலையின்மை (frictional unemployment) நிச்சயமாகச் சாதாரணமாக இருக்கவேண்டியதை விடக் குறைவாக இருக்கும். அதாவது வேலைகள் முழுநிலைக்கு மிகையாக இருக்கும். நடப்பு விலைகளில் உற்பத்தியினின்று கிடைக்கும் அளிப்பைவிட மொத்தத் தேவை அதிகமாக இருக்கும். ஆனால், நெகிழ்ச்சியற்ற நிலைகளைச் சரி செய்யுமளவுக்கு விலைகளின் அழுத்தம் வலிமையற்று இருக்கலாம், அல்லது விலைகளை ஏறவிடாமல் கட்டுப் பாடுகள் தடுத்துக்கொண்டிருக்கலாம். பாங்குக் கடன் விரிவு மிகக் குறைவாக இருக்கும். அதிகமான தேவைக்குவேண்டிய பணம் பழைய பணச் சேமிப்புகளினின்று வரும். இந் நிலை இரண்டாவது உலகப்போர் முடிந்தவுடன் அமெரிக்காவில் காணப்பட்டது.

> இருந்தபோதிலும், முழு வேலைநிலையிருக்கும்போது செலுத்துநிலையில் பற்றுக்குறை இருந்தால் பணவீக்கம் இருக்கிறது என்பதற்கு அது தெளிவான அடையாளமாகும். தன் சொந்த உற்பத்தி, சாதாரணமாக உள்ளேவரும் மூலதனம் இவற்றைவிட அதிகமாக ஒரு நாட்டில் முதலீடும் நுகர்வும் இருந்து, வேலையின்மையை அது ஈடு செய்யாவிட்டால், செலுத்துநிலைப் பற்றுக்குறையின் அளவுக்கு மொத்தத் தேவை மிகையாக இருக்கிறது என்று பொருள்.[1]

[1] E. M. Bernstein, 'Strategic Factors in Balance of Payments Adjustment,' *International Monetary Fund Staff Papers*, Vol. V, No. 2 (August, 1956), p. 158. டாக்டர் பெர்ன்ஸ்டீனின் ஆராய்ச்சிக்கு இவ்வத்தியாயத்தில் பெரும்பகுதிக்கு நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன்.

இதற்கு முன்னிருந்த, பணவீக்கம் இல்லாத காலங்களோடு ஒப்பிட்டால், மிதமான பணவீக்கம் இருக்கும்போது, வருமானம் அதிகமாக இருப்பதைவிட முதலீடு அதிகமாக இருக்கும். அதேபோல எல்லா இறக்குமதிகளும் அதிகமாகவும், பொதுவாக ஏற்றுமதிகள் குறைவாகவும் இருக்கும். கச்சாப் பொருள்களும் தொழிலாளர்களும் தேவையான அளவு இல்லை என்ற விவரங்களும் இதை உறுதிப் படுத்தும் சான்ருக இருக்கும்.

பணவீக்கம் அப்போது இல்லாமல், இதற்கு முன்னர் இருந்த பணவீக்கத்தின் விளைவாக ஏற்பட்ட விலை—அடக்கச்செலவு வித்தியா சங்கள் காரணமாகவும் செலுத்துநிலைப் பற்ருக்குறை ஏற்படலாம். பணவீக்கம் மோசமாக இருந்து, சில காலத்துக்குத் தொடர்ந்து இருக்குமானல், ஒரு நாட்டின் அடக்கச் செலவுகளும் விலைகளும் பிற நாடுகளின் அடக்கச் செலவு, விலைகளைவிட மிக அதிகமாக உயர்வது நிச்சயம். முக்கியமாக, உள்நாட்டுப் பொருள்களின் விலைகள் விசேஷ மாக உயர்ந்திருக்கும். ஏனெனில், அயல்நாட்டு உற்பத்தியாளர்க ளோடு ஏற்படும் போட்டியால் அது தடுக்கப்படுவதில்லை. இதை அறிய, உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் சமீபத்தில் விலைகளும் கூலி களும் மாறிய போக்கை ஒப்பிடவேண்டியது அவசியம். நாட்டு வரு மானத்தின் அளவோடு ஒப்பிட்டால், இறக்குமதிகள் அதிகமாகவும் ஏற்றுமதிகள் குறைவாகவும் இருந்தால், பற்ருக்குறை விலை—அடக்கச் செலவு வித்தியாசத்திஞல் (price-cost disparity) ஏற்படுகிறது என்று கண்டு கொள்ளலாம். ஏற்றுமதித் தொழில்களிலும் இறக்குமதி களோடு போட்டியிடும் தொழில்களிலும் விலை அதிகமாயுள்ள குறை யினல் வேலையின்மை நிறைய இருக்கும்.

வணிகச் சுழலின் முதல் படிகளில், ஏற்றுமதிகள் திடீரெனக் குறையும்; ஆனல், இறக்குமதிகளும், வருமானமும், வேலைநிலையும் ஏற்றுமதிகளோடு ஒப்பிட்டால் மாருதிருக்கும். இப்படியிருந்தால் செலுத்துநிலைச் சமநிலைக் கேடு வணிகச் சுழலின் விளைவு என்று கூறலாம். பொருளாதார மந்தம் முதலில் தோன்றிய நாடு அல்லது நாடுகளின் புள்ளிவிவரங்களைப் பார்த்தால் வருமானமும் இறக்குமதி களும் குறைவது தெரியும். மந்தம் பரவும்போது, பற்ருக்குறை நாடு களிலும் வேலையின்மை அதிகரிக்கும், வருமானம் குறையும்.

### அமைப்பு மாறுதல்கள்

செலுத்துநிலைச் சமநிலைக் கேட்டை விளைவிக்கும் அமைப்பு மாறு தல்கள் பலவகைப்பட்டன. தேவை அல்லது அளிப்பு நிலவரம் மாறு வதால் ஏற்படுவன, குறிப்பிட்ட சில ஏற்றுமதி இறக்குமதிகளைத்தான் பாதிக்கும் பொதுக் குணம் உடையன. எனவே, அதை ஆராய்பவர் முதலில் வியாபாரம்பற்றிய விளக்கமான புள்ளிவிவரங்களைத்தான்

பார்க்கவேண்டும். குறிப்பிட்ட சில ஏற்றுமதிகள் குறைந்தால், வெளி நாட்டுத் தேவையில் ஏற்பட்ட மாறுதல் அதற்குக் காரணமாக இருக்கும். இம் மாறுதல் உள்நாட்டு ஏற்றுமதியாளர்களின் போட்டி நிலையை மோசமாக்கி யிருக்கலாம், அல்லது, வெளிநாட்டுப் போட்டியாளர்களுடைய நிலையை அபிவிருத்தி செய்திருக்கலாம். வெளிநாடுகளில் இறக்குமதித் தடைகள் அதிகரித்தனவா, நுகர்வோர் விருப்பங்கள் மாறிவிட்டனவா, அல்லது வெளிநாட்டுப் போட்டியாளர்கள் அடக்கச் செலவைக் குறைக்கும் புதுச் செயல்முறைகளைக் கையாளுகின்றனரா, அவர்களது உற்பத்திப் பொருள் அபிவிருத்தி அடைந்துள்ளதா, அல்லது முழுதும் புதியதான பொருள்களை அவர்கள் செய்கின்றனரா என்பதையெல்லாம் விசாரித்துக் கண்டுபிடிக்க வேண்டும். ஏற்றுமதிகள் அநேகமாக மாறுமல் சில இறக்குமதிகள்மட்டும் மிகவும் அதிகமாகி உள்ளன என்று எடுத்துக்கொள்வோம். உள்நாட்டில் நுகர்வோர் விருப்பங்கள் மாறியுள்ளனவா, இறக்குமதிகளை அளிப்பவர்களது உற்பத்தித் திறன் அதிகரித்து அடக்கச் செலவுகள் குறைந்துள்ளனவா, புதுமாதிரி இறக்குமதிப் பொருள்கள் செய்யப்படுகின்றனவா என்பவற்றை விசாரித்தறிய வேண்டும்.

இக் கேள்விகளுக்கு எடுத்துக்காட்டாக, 1955-ல் ஜனாதிபதி ஐஸன்ஹோவர் கேட்டுக்கொண்டபடி, காப்புவரிக் கமிஷன் (Tariff Commission) செய்த ஆராய்ச்சியைக் குறிப்பிடலாம். புகைக் குழாய்த் (briar pipe) தொழிலின் விற்பனை விழுந்தது. அத் தொழிலும் (காப்புவரிக் கமிஷன் முதலில் வெளியிட்ட ஓர் அறிக்கையும்) வெளிநாட்டுப் போட்டி அதிகரித்ததுதான் இதற்குக் காரணம் என்றன. ஜனாதிபதி கேட்டுக்கொண்டபடி செய்யப்பட்ட ஆராய்ச்சியின் விளைவாக அத் தொழிலின் கஷ்டத்துக்குப் புகைபிடிப்பவர்களின் வழக்கங்கள் மாறியதுதான் காரணமேயன்றி, இறக்குமதிகளின் போட்டியல்ல என்பது கண்டுபிடிக்கப்பட்டது. புகைக் குழாய்மூலம் புகைபிடித்தவர்கள், ஒவ்வொருவராகச் சிகரெட் பிடிக்கத் தொடங்கிவிட்டார்கள். அதேபோல ஒட்டுக் கம்பளத்தொப்பித் (felt-hat) தொழிலின் கஷ்டத்துக்குக் காரணமான வில்லன் யார் என்று ஆராய்ந்ததில், அது வெளிநாட்டு உற்பத்தியாளன் அல்ல, அமெரிக்க ஆண்மகன்தான் என்று தெரிந்தது; அவன் தொப்பியணியாமல் வெறுந்தலையோடு போகத் தொடங்கிவிட்டான்.

செலுத்துநிலைப் பற்றுக்குறையைத் தோற்றுவிக்கக்கூடிய மற்றொரு வகை அமைப்பு மாறுதல், கடன் கொடுத்தவன்—கடன் வாங்கியவன் உறவு மாறுவது. திடீரென நெடுங்காலக் கடன் கொடுப்பது அதிகமாகலாம்; திடீரென நெடுங்காலக் கடன் வாங்குவது குறையலாம்; மூலதன ஓட்டங்கள் ஏற்படலாம்; வெளிநாட்டில் வருமானம் தரும் சொத்துகள் நஷ்டமாகலாம். செலுத்துநிலைப் புள்ளிவிவரங்களைச் சிறந்த முறையில் சேகரிக்கும் நாட்டைப்பொறுத்தவரை மூலதன

இடப் பெயர்ச்சிபற்றிய விவரங்களிலிருந்து இம் மாறுதல்களை அறிய லாம். கடைசியில் சொன்ன சொத்து நஷ்டத்தை, பழைய வெளிநாட்டு முதலீடுகளினின்று வரும் வருமானம் குறைவதிலிருந்து கண்டுபிடிக்க லாம். இவ் விவரங்கள் கிடைக்கவில்லையானால் வெளிநாடுகளில் வியா பாரம் செய்யும் வணிக பாங்குகளை விசாரித்தால் நம் சந்தேகம் தெளியச் சிலச் சான்றுகள் கிடைக்கும்.

## என்ன மருந்து தருவது?

மருத்துவத்தில் வியாதியின் அடையாளங்களுக்கு வைத்தியம் செய்வதால் அவற்றை உண்டாக்கும் வியாதியை நீக்குவது அரிது. அதேபோலத்தான் பொருளாதாரத்திலும், செலுத்துநிலைப் பற்றுக்குறை என்பது ஓர் அடிப்படை நோயின் அடையாளம்தான். நேரிடைக் கட்டுப்பாடுகள்மூலம் பற்றுக்குறையை அடக்கி வைக்கலாம். ஆனால், அதன் காரணங்களைத் திருத்த முயற்சி செய்யாவிட்டால், கட்டுப்பாடு களை எடுத்ததும் பற்றுக்குறை மீண்டும் தோன்றும். நல்ல பலன் தர வேண்டுமானால் அந்தக் குறிப்பிட்ட வியாதிக்கு ஏற்ற மருந்தைக் கொடுக்கவேண்டும்.

**பணவீக்கம்**

கடுமையான அல்லது மிதமான பணவீக்கத்தினால் ஏற்பட்ட பற்றுக்குறையைப்பொறுத்து இக் கூற்றின் உண்மையை நன்கு அறிய லாம். பணவீக்கம் தடுக்கப்படாமல் அப்படியே இருக்க நாணயமாற்று வீதங்கள் உயர அனுமதிப்பது அல்லது செலாவணியின் மதிப்பைக் குறைப்பதனால் பலன் ஏதும் ஏற்படாது அல்லது அது மேலும் நிலைமை யும் மோசமாக்கும். தொடர்ந்து தேவை மிகையாக இருப்பதனால் பற்றுக்குறை மீண்டும் தோன்றும். அதைத் திருத்த நாணயமாற்று வீதம் மேலும் உயர்ந்துகொண்டே இருக்கவேண்டும் அல்லது மேலும் மேலும் செலாவணி மதிப்பைக் குறைக்கவேண்டும். தவிர, இந்த இரு வகை மதிப்பிறக்கமும் ஏற்றுமதிகளைத் தூண்டி இறக்குமதிகளைத் தடுத்துப் பணவீக்க நிலையை மேலும் மோசமாக்கும்.

இதற்குச் சரியான மருந்து பணச் சுருக்கமே. மிகையான தேவையை ஒழிக்கும் அளவுக்காவது பணச் சுருக்கம் செய்யவேண்டும். நாணயமாற்று வீதங்களை மாற்றக்கூடாது; வருமானத்தின்மீது பற்றுக்குறையினால் விளையும் அழுத்தம் தன் வேலையைச் செய்ய அனு மதிக்கவேண்டும். பணவீக்கம் மிதமாக இருந்து விலைகள் அதிகமாக உயரவில்லையானால், பணச் சுருக்கம் செய்யத் தேவையில்லை; அவசிய மாக இருப்பினும், சிறிது செய்தால் போதும். ஆனால், பணவீக்கம் கடுமையாக இருந்து விலைகள் குறிப்பிடத்தக்க அளவு உயர்ந்தால் பணச் சுருக்கம் வெற்றிபெறப் பெரும் அளவுக்கு வருமானமும் விலைகளும் குறையவேண்டியிருக்கும்.

இருபதாம் நூற்றுண்டின் மத்தியில் உள்ள சமுதாயச் சூழ்நிலையில் பணச் சுருக்கத்துக்கு நிச்சயமாகக் கடுமையான அரசியல் எதிர்ப்பு இருக்கும். எனவே, பணவீக்கத்தைக் குறைப்பது (அதாவது 'வீக்க நீக்கம்' (disinflation) தான் இந்த அற்புதமான மருந்தை உபயோகிக்கக்கூடிய வரம்பு. சரியான விலைத் தொடர்புகளை மீண்டும் நிலைநாட்டவேண்டுமாயின் இப்போது நாணய மதிப்பைக் குறைப்பது ஏற்றது. அதேசமயம் மீண்டும் பணவீக்கம் தோன்ருமலிருக்கக் கடன் செலாவணிமீது ' போதுமான கட்டுப்பாடுகளை விதிக்கவேண்டும். இதற்குமுன் இருந்த பணவீக்கத்திஞல் இப்போது இருக்கும் விலை—அடக்கச் செலவு வித்தியாசத்திற்கும் நாணயமதிப்புக் குறைப்பதும் கடன் அடக்கமும் ஏற்ற மருந்துகளாகும்.

### வணிகச் சுழலால் சமநிலைக் கேடு

செலுத்துநிலையில் வணிகச் சுழலால் பற்ருக்குறை ஏற்பட்டால் அதைச் சமாளிப்பது பணவீக்கத்திஞல் ஏற்பட்டதைச் சரிசெய்வதை விட மேலும் கடினமானது. இந்தப் பற்ருக்குறை வெளிநாட்டில் தோன்றிய மந்தத்திஞல் ஏற்றுமதிகள் குறைந்ததன் விளைவு. பொன் திட்டத்தில், இறக்குமதிகள் குறைந்து சேமநிதிகள் நஷ்டமாஞல் வருமானமும் விலைகளும் சுருங்கும். இறுதியில் செலுத்துநிலைச் சமநிலைக் கேடு சரியாகும்; ஆஞல், அதேசமயம் உள்நாட்டில் கடுமையான மந்தநிலை ஏற்படும்.

செலாவணி மதிப்பைக் குறைப்பதால் இவ்வளவு நஷ்டம் ஏற்படாது. ஆஞல், உலகமெங்கணும் வருமானங்கள் குறைந்துள்ளன, தேவை நெகிழ்ச்சி குறைந்துள்ளது. முக்கியமாக, நுகர்வைத் தள்ளிப் போடக்கூடிய பொருள்களுக்கு நெகிழ்ச்சி குறைந்துள்ளது. எனவே, நெகிழ்ச்சியற்ற, குறைந்துவரும் தேவையிருக்கும்போது, பெரிய அளவில் செய்தால் ஒழிய செலாவணி மதிப்புக் குறைத்தலிஞல் ஏற்றுமதிகள் தூண்டுப்படுவதும் இறக்குமதிகள் நிறைய சுருங்குவதும் அரிது. மேலும், நாணயமதிப்புக் குறைப்பதால் இறக்குமதிகள் சுருங்கிஞல், அந்த அளவுக்குப் பிற நாடுகளில் மந்தநிலை மேலும் மோசமாகும். நிச்சயமாக அந் நாடுகளும் பதிலுக்குப் பதில் செலாவணி மதிப்பைக் குறைக்கும்.

நாம் முன்னரே கூறியபடி, இந் நிலைக்கு நல்ல மருந்து எல்லா நாடுகளும் ஒன்று சேர்ந்து, பொருளாதாரத்தை விரிவடையச் செய்யும் பணக் கொள்கைகளையும் அரசாங்க நிதிக் கொள்கைகளையும் கடைப்பிடிப்பதுதான். இதை முக்கியமாகப் பொருளாதாரத் துறையில் மிகவும் முக்கியமாக உள்ள நாடுகள் செய்யவேண்டும். ஒப்பந்தத்திஞலோ, அல்லது தற்செயலாகவோ, பெரிய நாடுகளில் ஒரே சமயம் வருமானமும் வேலைகளும் மீண்டும் வளர்ந்தால், அவற்றின் இறக்கு

மதிகள் பெருகும். அதனால், பொருளாதார விரிவு உலகெங்கிலும் ஊக்குவிக்கப்படும். பொருளாதார விரிவுத் திட்டத்தைத் தொடர்ந்து, பிற நாடுகளில் வருமானமும் இறக்குமதிகளும் உயரும்போது, இப் பெரிய நாடுகளில் ஒவ்வொன்றின் ஏற்றுமதிகளும் உயரும். இந் நாடுகளில் ஏற்றுமதிகளைவிட இறக்குமதிகள் அதிகமாக இருப்பினும் இவை பெரும் வணிக நாடுகளானதால் இவற்றின் சேமநிதிகள் பிறவற்றின் சேமநிதிகளைவிட அதிகமாக இருக்கும். பொருளாதார விரிவுத் திட்டத்துக்கு ஆதரவாக இவற்றை உபயோகித்துக் கொள்ளலாம். மீட்சி பரவும்போது செலுத்துநிலைப் பற்றுக்குறை படிப்படியாக நீங்கிச் சமநிலை மீண்டும் ஏற்படும்.

வேலையின்மையைத் தடுப்பது அரசியல் முக்கியத்துவம் வாய்ந்தது. எனவே, பன்னாட்டு இணக்கம் இல்லாமலேகூட மந்தநிலை தோன்றும் போது அதை எதிர்த்துத் தீவிரமான பணக் கொள்கையையும் அரசாங்க நிதிக் கொள்கையையும் நாடுகள் கடைப்பிடிக்கும் என்று எதிர்பார்ப்பது தவறாகாது. மந்தங்கள் அடியோடு எதிர்காலத்தில் ஒழிக்கப்படும் என்று எதிர்பார்ப்பது ஓர் இனிய கனவாக இருக்கலாம். ஆனால், மந்தத்தின் கால அளவையும் கடுமையையும் பெரும் அளவுக்கு மிதமாக்கலாம். உள்நாட்டில் விரிவுக் கொள்கைகளைக் கடைப்பிடித்துத் தம் சேமநிதிகளையும் பயன்படுத்திப் பெரிய நாடுகள் தாங்கக்கூடிய அளவுக்குக் குறைந்த செலவில் மந்தநிலையைச் சமாளிக்க முடியும்.

இந்த எண்ணம் நிறைவேறாவிட்டால், பெரிய நாடுகளில் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்டவை பன்னாட்டுச் சேமநிதிகளைப் பெற்றிரா விட்டால், பணச் சுருக்கம் அல்லது நாணய மதிப்பைக் குறைப்பது இரண்டும் ஒரு பலனும் தராது. வெளிநாடுகளில் மந்தநிலையிருக்க ஏற்றுமதிகளும் வருமானமும் குறைந்து வரும் ஒரு நாட்டுக்குத் தக்க மருந்து இப்போதும் உள்நாட்டில் பொருளாதார விரிவை ஏற்படுத்துவதுதான்; ஆனால், பற்றுக்குறையை அடக்கி, சேமநிதி தீர்ந்து போவதைத் தவிர்க்க, கூடவே நாணயமாற்றையும் வாணிபத்தையும் கட்டுப்படுத்தவேண்டும். எந்த நாட்டில் மந்தம் முதலில் துவங்கியதோ அதனின்று வரும் இறக்குமதிகளுக்கு எதிராகப் பேதங் காட்டிக் கட்டுப்பாடுகள் விதித்தால் மேலும் நல்லது. அப்போது மந்தம் பரவுவது மிகவும் குறையும். மேலும், இப் பாரபட்சத்தின் அழுத்தமானது வியாதி தோன்றிய இடத்தில் மந்தத்தைக் கடுமையாக்கி, அங்குப் பொருளாதார விரிவுக் கொள்கையைக் கடைப்பிடிக்குமாறு அந் நாட்டைக் கட்டாயப்படுத்தும்.

### அமைப்பு மாற்றத்தால் சீர்கேடு

குறிப்பிட்ட ஒரு தேவை அல்லது அளிப்பு நிலவரத்தில் மாற்றம் ஏற்பட்டால், ஒரே ஒரு ஏற்றுமதி அல்லது இறக்குமதி அல்லது ஒருசில

ஏற்றுமதிகள் அல்லது இறக்குமதிகள்தான் பாதிக்கப்படும். ஏற்றுமதிப் பொருள்களின் உற்பத்தியில் ஒரு சிறப்பை, பாதிக்கப்பட்ட நாடு இழந்துவிட்டிருக்கிறது அல்லது இறக்குமதியோடு போட்டியிடும் தொழில் ஒன்றின் குறை அதிகரித்துள்ளது; அதன் விளைவாகச் செலுத்துநிலையில் பற்றுக்குறை ஏற்பட்டுள்ளது. இந்தச் சூழ்நிலைக்கு பொதுவான பணச் சுருக்கம் ஏற்றதன்று; ஏற்றுமதி இறக்குமதிகள் அனைத்தின் தராதர விலைகளில் எல்லாம் மாறுதல் செய்தாலும் நன்மை விளையாது. ஒரு புது ஏற்றுமதியை உற்பத்தி செய்வதற்கு, அல்லது புதிதாக இறக்குமதிகளுக்கு மாற்றுப் பொருளை உற்பத்தி செய்வதற்கு உற்பத்திச் சாதனங்களைப் பயன்படுத்துவதுதான் இதற்கு ஏற்ற மருந்து.

அந் நாடு சில பொருள்களைமட்டும் சிறப்பாக உற்பத்தி செய்கிறதா அல்லது அதன் உற்பத்தி பரவலாக உள்ளதா என்பது இங்கு முக்கியம். அதன் உற்பத்தி ஏற்கெனவே நன்கு பரவலாயிருந்தால், பற்றுக் குறைக்கு எளிமையான தீர்வு பின்வருமாறு: மிதமாக ஒரு முறை செலாவணி மதிப்புக் குறைத்தல்மூலம் ஏற்றுமதிகளுக்கும் இறக்குமதி களின் மாற்றுப் பொருள்களுக்கும் நேரிடையாக ஊக்கமளிக்கலாம்; அதேசமயம் பணவீக்கத்தைத் தடுக்கக் கடன் அடக்கக் கொள்கையைக் கையாளலாம். சில பொருளாதாரங்கள் ஓரிரு பொருள்களின் ஏற்று மதியையே மிகவும் நம்பி இருக்கின்றன. உதாரணமாக, சிலி (Chile) நாட்டின் முக்கிய ஏற்றுமதிகள் செம்பும் நைட்ரேட்டுகளுமே; மலேயா ரப்பரையும் வெள்ளீயத்தையுமே மிகவும் நம்பியுள்ளது; இலங்கை, தேயிலையையும் தேங்காய்களையுமே முக்கியமாக ஏற்றுமதி செய்கிறது. புதுப் பொருள்கள் வெளிநாடுகளில் உற்பத்தியாவதாலோ வேறு போட்டியாளர் இந் நாட்டைவிடத் திறம்பட விற்பதாலோ இதுபோன்ற நாடுகளின் ஏற்றுமதிகள் விழுந்தால் செலாவணி மதிப்பைக் குறைப்ப தனுல் பலன் அதிகமாக இராது. இறக்குமதிகளுக்கு மாற்றுப்பொருள் கள் அதிகம் இல்லையென்ருல் இது மேலும் உண்மையாகிறது. ஏற்று மதித் துறையிலோ, இறக்குமதியோடு போட்டியிடுவதிலோ அபிவிருத்தி செய்விக்கக்கூடிய உள்நாட்டுத் தொழில் ஏதும் இல்லை. செலாவணி மதிப்பைக் குறைப்பதனுல் ஏற்படும் பளு முழுவதையும் இறக்குமதியை நுகர்வோர் தாங்கிக்கொள்ளவேண்டியிருக்கிறது.

இந்த நிலையிலுள்ள நாடு மிதமுள்ள உற்பத்தித் திறன் மிக்க துறைகளில் வேலையற்றுள்ள தன் சாதனங்களை மாற்றி ஒதுக்க வேண்டியது உடனடியாக அவசியமாகிறது. பொருளாதார வளர்ச்சிக் கான எல்லாச் செயல்முறைகளையும் பயன்படுத்தவேண்டும். அரசாங்கம், நிதி உதவியும் தொழில்நுட்ப உதவியும் தந்து நன்கு நடக்கக்கூடிய தொழில்களை ஆதரிக்கவேண்டும்; அவற்றுக்கு உதவப் பன்ருட்டு நிறுவனங்களைக் கேட்டுக்கொள்ளவேண்டும்; தீர ஆராய்ந்து

சிற்றிளந் தொழில்களுக்கு (infant-industry) பாதுகாப்பளிக்க வேண்டும்; வளர்ச்சி ஆரம்பித்ததும் ஓரளவுக்குச் செலாவணியின் மதிப்பைக் குறைக்கலாம்; உள்நாட்டில் மாறுதல்கள் ஏற்படும்போது நாட்டின் சேமநிதிகள் நஷ்டமடையாமல் நாணயமாற்றுக் கட்டுப்பாடு களையும் விதிக்கவேண்டியிருக்கலாம்.

## முடிவு

ஒரு நாட்டின் பிரச்சினைகளைச் சரியாகக் கண்டுபிடித்து அதற்கு ஏற்ற தீர்வைத் தேர்ந்தெடுப்பதில் பொருளாதாரப் பகுத்தாய்வு எவ்வளவு முக்கியம் என்பதை இந்த அத்தியாயம் தெளிவாக்கியிருக்கும். இவ்வாறு, பொருளாதாரக் கோட்பாடு ஒரு பெரும் பணியைச் செய்கிறது. கஷ்டங்களுக்கு என்ன காரணம் என்று தனியாகப் பிரித்துக் கண்டுபிடிக்கவும், அவற்றைத் தீர்க்க எந்தெந்தக் கொள்கை களைக் கடைப்பிடிக்க முடியும் என்பதை நிர்ணயிக்கவும், அவற்றில் எது மிகவும் ஏற்றது என்பதை மதிப்பிடவும் அக் கருவி தேவை. பகுத் தாய்வு செய்யாமல் வெறும் விவரங்களைமட்டும் எடுத்துக்கொண்டால் அவற்றை வைத்து ஒன்றும் செய்யமுடியாது; அவற்றுக்குப் பொருளே இல்லை; ஆனால், அவற்றைப் பகுத்தாய்வோமானால், அவை ஓர் ஒழுங்கான எளிதில் உபயோகிக்கக்கூடிய முக்கியமான அமைப்பு ஆகின்றன.

## பார்வைக்குரிய சில நூல்கள்

Bernstein, E. M., ‘Strategic Factors in Balance of Payments Adjustment,’ *IMF Staff Papers*, Vol. V, No. 8 (Ausust, 1956). செலுத்துநிலைப் பிரச்சினைகளுக்குப் பொருளா தாரப் பகுத்தாய்வைப் பயன்படுத்துவதற்கு மிக நல்ல உதாரணம் இது.

Haberler, Gottfried, ‘Some Factors Affecting the Future of International Trade and International Economic Policy,’ S. E. Harris பதிப்பித்த *Economic Reconstruction* என்ற நூல். New York: McGraw-Hill Book Co., 1945. *Readings in the Theory of International Trade*-ல் மீண்டும் அச்சிடப்பட்டது.

Kindleberger, Charles P., *International Economics*, 3rd ed. Homewood, Ill.: Richard D. Irwin, Inc., 1963. 29ஆவது அத்தியாயம், ‘சமநிலை அடையும் வழிகள்’ பற்றியது, பல்வேறு மார்க்கங்களை ஒப்பிடுகிறது; அவற்றின் பலனுக்கு, போட்டியும், சாதனங்களின் இடப்பெயர்ச்சித் திறனும், உயர்ந்த வருமான நெகிழ்ச்சியும் உதவுவதைச் சுட்டிக் காட்டுகிறது.

League of Nations, *International Currency Experience* (1944). 9ஆவது அத்தியாயம் இரு உலகப்போருக்கு இடையில் ஏற்பட்ட அனுபவங்களைக்கொண்டு பல திருத்தமுறைகளை மதிப்பிடுகிறது.

Meade, James E., *The Balance of Payments*. New York: Oxford University Press, 1951. வெவ்வேறு திருத்த முறைகளை ஒப்பிடுவதை IX, X, XV, XXIV அத்தியாயங்களில் காணலாம்.

Polak, J. J., 'Exchange Depreciation and International Monetary Stability,' *Review of Economics and Statistics*, XXIX (August, 1947). வருமான, விலை சீர்கேடு மிகவும் சிறந்ததென்றும் அமைப்புச் சீர்கேட்டுக்குச் சிறிதும் ஏற்றதல்ல என்றும் செலாவணி மதிப்பைக் குறைப்பதைப்பற்றிக் கூறுகிறது.

மடல் V

# பன்னாட்டுப் பொருளாதாரத்தின் சரிவு

## 23. உலகப் பொருளாதார அமைப்பில் தளர்ச்சி
## (Structural Weakening of the World Economy)

### 1913ஆம் ஆண்டின் உலகப் பொருளாதாரம்

நெப்போலியனுடன் நடந்த போர்களுக்கும் 1914–18-ல் நடந்த போருக்கும் இடையில் இருந்த நூறு ஆண்டுகளில் ஓர் உண்மையான உலகப் பொருளாதாரம் தோன்றியது. அதன் அங்க நாடுகளில் பெரும்பகுதி, நன்கு வளர்ச்சிபெற்ற ஒரு வாணிப, நிதி அமைப்பின் மூலம் ஒன்ருேடொன்று நெருக்கமாக இணைந்திருந்தன. ஒன்றையொன்று சார்ந்த அங்காடிகள் கொண்ட சிக்கலான இவ்வமைப்பின் செயல்முறைக்குத் தேவையான எண்ணற்ற வசதிகள் லண்டன் நகரத்தை மையமாகக் கொண்டிருந்தன. ஆனால், கிளை அலுவலகங்கள், தொடர்பு நிறுவனங்கள், ஒப்பந்தக் கூட்டு அமைப்புகள்மூலம் உலகமெங்கும் அவற்றின் பயன் பரவியது. விசேஷத் தேர்ச்சிபெற்ற ஏற்றுமதி இறக்குமதிக் கம்பெனிகள், சரக்குத் தரகர்கள், வணிக பாங்குகள், முதலீட்டு பாங்குகள், உண்டியல் ஒப்பும் நிறுவனங்களும் கழிவகங்களும், இன்ஷுரன்சு கம்பெனிகள், கப்பல் கம்பெனிகள், உலகமெங்கணும் செல்லும் தந்தித் தொடர்பு அமைப்பு ஆகியவை இவ்வசதிகளில் அடங்கியவை.

ஒவ்வொரு நாடும் தான் பெற்றுள்ள உற்பத்திக் காரணிகளைப் பொறுத்து விசேஷமாகச் சில பொருள்களைமட்டுமே உற்பத்தி செய்தது. ஓரளவுக்கு வாணிபத்தையும் இத்தகைய சிறப்புத் தேர்ச்சி

யையும் காப்பு வரிகள் தடை செய்தபோதிலும், அவை அடிக்கடி மாற்றப்படாமையாலும் அவற்றில் மிகச் சிலவே கடுமையாக இருந்த தாலும் அவற்றின் விளைவு கவலைப்படும்படியாக இல்லை. இவ்வாறு சிறப்பாகச் செய்யப்பட்ட உற்பத்தி வகைகளில் ஒவ்வொன்றும் ஒரு சில புவியியல் பிரிவுகளில்மட்டுமே செய்யப்பட்டதால் பலமுக வாணிபம் நடக்கவேண்டியிருந்தது. ஒவ்வொரு செலாவணியும் உலகெங்கும் மாற்றுரிமை பெற்றிருப்பது பலமுக வாணிபச் செயல்முறைக்கு மிகவும் அவசியம். முக்கியமான நாடுகளும் பிறவற்றுள் பெரும்பான்மையும் பொன் திட்டத்தைப் பின்பற்றியதால் அதிருஷ்டவசமாக இம் மாற்றுரிமை இருந்தது.

இவ்வுலகப் பொருளாதாரம் மாறுதல் அற்று இருக்கவில்லை; மாறுதல்கள் வேகமாக ஏற்பட்டன. தொழில் நுட்பத்தில் முன்னேற்றம் வேகமாக ஏற்பட்டது. புது உற்பத்தி முறைகளும் முழுமையும் புதியவையான உற்பத்திகளும் தோன்றின. தொழிலாளர்கள் நிறைய புலம் பெயர்ந்தனர்; மூலதனம் பெரும் அளவில் நாடுவிட்டு நாடு சென்றது; இதனால், நாட்டுக்கு நாடு தராதரக் காரணிப் பேறுகள் (factor endowments) மாறிக்கொண்டே வந்தன. இப் பேறுகள்தான் பன்னாட்டு வாணிபத்தின் அடிப்படை. காரணிகளின் இடப்பெயர்ச்சி களும் ஒரே மாதிரியில்லை. அவை சிலசமயம் அதிகமாக இருந்தன, சில சமயம் குறைவாக இருந்தன, சில சமயம் முன்னறிவிப்பின்றித் திசை மாறின. சிற்சில சமயம் நாடுகளின் வணிகக் கொள்கைகள் மாறியதால் வாணிபத்தின் போக்குத் தடைபட்டதும் திசை மாறியதும் உண்டு.

இந் நிகழ்ச்சிகளினால் பல உலைவுகள் ஏற்பட்டன. அவற்றில் சில கடுமையாக இருந்தன. சில மிதமாக இருந்தன. அவற்றுக்கேற்ப ஒவ்வொரு நாட்டின் செலுத்துநிலையும் எவ்வாறாயினும் திருத்திக் கொள்ளவேண்டியிருந்தது. பொன் திட்டத்தின் தானே இயங்கும் செயல் முறையால் அத் திருத்தம் ஏற்பட்டது. இச் செயல்முறை சுலபமாக நடந்ததற்கு நிதி நிறுவனங்களின் அமைப்புச் சாதகமாக இருந்ததே காரணமாகும். முக்கியமாக லண்டனும் பிற நிதிக்கேந்திரங்களும் மிக நெருங்கிய தொடர்பைக் கொண்டிருந்தன. அதன் செயல்முறையின் மூலம் அடிக்கடி ஏற்பட்ட பல மாறுதல்களைக் குறிப்பிடத்தக்கவாறு உலைவும் கஷ்டமும் இல்லாமல் தாங்கிக்கொள்ள முடிந்தது.

## சிதைவுச் சக்திகள்
## (Forces of Disintegration)

பொருளாதார நிறுவனங்கள், அங்காடிச் சக்திகள், கொள்கைகளில் இசைவு ஆகியவற்றின் இனிமையான இணைப்பு 1914-க்குப் பின் சிதறிப் போயிற்று. பிரிட்டனின் இராஜதந்திரம் ஒரு நூற்றாண்டுக் காலம்

கண்ணும் கருத்துமாய் வளர்த்துவந்த ஐரோப்பாவின் வல்லரசுச் சமநிலை (balance of power) ஜெர்மனியின் ஆதிக்க வெறியினால் திடீரென அழிந்துவிட்டது. நான்கு ஆண்டுகள் கடுமையான போர் நடந்தது; நாடுகளின் மக்கள் முழுவதும் போரில் ஈடுபட்டனர்; சொல்லொணாத அழிவும் உயிர் நஷ்டமும் ஏற்பட்டன.

இவ்வளவு சிதைவும் தகர்வும் ஏற்பட்டும், சில ஆண்டுகளுக்குள் ஐரோப்பாவின் மோசமான காயங்களும் ஆறிவிட்டன. உற்பத்தி உலகப்போருக்கு முன் இருந்த நிலைக்கு மீண்டும் உயர்ந்தது; ஒரு சில ஆண்டுகள் சற்றுத் தடங்கல் ஏற்பட்டு அதன்பிறகு நிலையான உயர்வு தொடங்கியது. கடந்த காலத்தின்மீது இருந்த ஆழ்ந்த வெறுப்புணர்ச்சியின் காரணமாகப் பன்னாட்டு அமைப்பைத் திருத்தி யமைக்க மனதார முயற்சி செய்யப்பட்டது. பொன் திட்டம் மீண்டும் நிறுவப்பட்டது; வாணிபத்தின்மீது போர்க்காலத்தில் விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகள் கைவிடப்பட்டன; வாணிபத் தொடர்புகள் மீண்டும் ஏற்படுத்தப்பட்டன; பன்னாட்டுப் பூசல்களைத் தவிர்க்கவும் பொதுப் பிரச்சினைகளுக்கு அனைவரும் ஒப்புக்கொண்ட தீர்வு காணவும் ஒரு புது அமைப்பு—சர்வதேச சங்கம் (League of Nations) ஏற்படுத்தப்பட்டது.

இம் முயற்சிகளில் வெற்றி கிட்டிவிட்டதுபோலச் சில காலத்துக்குத் தோன்றியது. 1920-ஐ அடுத்த பத்தாண்டுகளின் மத்தியிலும் பின் பகுதியிலும் பொருளாதாரங்கள் செழித்திருந்தன; உற்பத்தியும் வாணிபமும் நிலையாக முன்னேறின; வாழ்க்கைத்தரங்கள் அபிவிருத்தி அடைந்தன. ஆனால், இவை அனைத்துக்கும் அடிப்படையான பன்னாட்டு அமைப்புப் பல வழிகளில் பெரிதும் தளர்ச்சி அடைந்துவிட்டிருந்தது. அத் தளர்ச்சி அந்தக் காலத்தில் புலப்படவில்லை. ஆனாலும் அக் காரணங்கள் உலகப் பொருளாதாரத்தின் நெகிழ்ச்சியை நீக்கின; மேலும் மாறுதல்கள் ஏற்பட்டால் சுலபமாகத் திருந்தக்கூடிய தன்மை போய்விட்டது. மேலும், இதுவரை பார்த்திராத அளவு பெரிய உலைவுகள் வரிசையாக இப் பன்னாட்டு அமைப்பைத் தாக்கின. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் இருபதாவதின் முதல் சில ஆண்டுகளிலும் இருந்த உலகப் பொருளாதார அமைப்போடு ஒப்பிட்டால், முதல் உலகப் போருக்குப் பின் ஏற்பட்ட அமைப்புப் பல துண்டுகளின் இணைப்பேயன்றி ஒரே அமைப்பன்று; அதன் வலிமையும் குறைவு. இத் தகைய அமைப்பை இவ்வுலைவுகள் இரண்டாவது உலகப்போர் ஆகிய பெரும் எழுச்சி ஏற்படுவதற்கு முன்னரே அழித்துவிட்டன.

உலகப் போர்களுக்கிடையே வழங்கிவந்த பன்னாட்டுப் பொருளாதாரத்தின் தளர்ச்சிக்குக் காரணங்களை இந்த அத்தியாயம் விவரிக்கிறது; அமைப்பு மாறுதல்களுக்கும் பிறவற்றுக்கும் எப்படியாவது திருத்தம் செய்யவேண்டியிருந்ததையும் அதைச் செய்ய முடியாததால் இந்த உலகப் பொருளாதார அமைப்புச் சரிந்ததையும் காட்டுகிறது.

## தளர்ச்சியடைந்த ஒரு பன்னாட்டு அமைப்பு

### முதல் உலகப் போருக்குப் பின் பணத்துறையில் மாறுதல்கள்

போரில் ஈடுபட்ட நாடுகளில் பெரும்பான்மையும் பல நடுநிலைமை நாடுகளும் போரினால் ஏற்பட்ட கஷ்டங்களால் பொன் திட்டத்தைக் கைவிட்டன. பொன் திட்டத்திலிருந்து நாடுகள் விலகிய தன்மையும் அளவும் நாட்டுக்கு நாடு மாறுபட்டிருந்தது. எனினும், போரின் போதும், அதன் பிறகு சில ஆண்டுகளிலும் பொன்னின் தடையற்ற இடப்பெயர்ச்சிகள் நின்றுபோயின. இவ்வாறு வெவ்வேறு நாடுகளின் விலை அமைப்புகளுக்கிடையே இருந்த நெருங்கிய தொடர்பு அறுந்து போயிற்று. ஒவ்வொரு நாட்டிலும் விலைகள் தன்னிச்சையாக மாற முடிந்தது. வெவ்வேறு நாடுகளில் பணவீக்கம் வெவ்வேறு அளவுக்கு ஏற்பட்டது. ஒரு நாட்டின் செலுத்துநிலை இருந்த நிலைமையும் அந் நாடு கடைப்பிடித்த அரசாங்க நிதிக் கொள்கையையும் பொறுத்துப் பணவீக்கத்தின் அளவுகள் மாறுபட்டன. ஜெர்மனி, ரஷ்யா, ஆஸ்திரியா - ஹங்கேரி நாடுகளில் அது மிகவும் கடுமையாக இருந்தது. இந் நாடுகளில் போருக்குப் பின் சில ஆண்டுகளுக்குள்ளேயே செலாவணிகள் மதிப்பே இல்லாமல் போய், அவற்றுக்குப் பதிலாகப் புதுப் பணம் வழங்கப்பட்டது. ஃபிரான்ஸில் மொத்த விற்பனை விலைகள் 1913-ல் இருந்த அளவைப்போல் எட்டு மடங்குக்குமேல் உயர்ந்தன; இத்தாலியில் ஏழு மடங்கு ஆயின. பிரிட்டனில்கூட உலகப் போருக்குப் பின் விலைகள் உயர்ந்து 330-ஐ எட்டின; அமெரிக்காவில் 272-ஐ எட்டின.

போருக்குப் பின், இந்தக் குழப்பநிலையில் ஓர் ஒழுங்கை நிலை நாட்டுவது முக்கியமானதொரு தேவை ஆயிற்று. செலாவணியின் மதிப்பு அடியோடு அழிந்துபோன நாடுகளைத் தவிரப் பிற நாடுகளில், நெடுங்காலமாகப் பொன் திட்டத்தோடு முன்னர் இணைந்திருந்தமை யால் அதை மீண்டும் கொண்டுவரவேண்டும் என்ற விருப்பம் அதிக மாகத் தோன்றியது. போரின்போதும் அதன் பின்னரும் பொன் திட் டத்தைக் கைவிட்டது தாற்காலிகமானதாகவே பொதுவாகக் கருதப் பட்டது.

பொன்னை மீண்டும் செலாவணிகளின் அடித்தளமாகக் கொள்வ தானால் ஒவ்வொரு செலாவணியும் எவ்வளவு பொன்னைக் கொண்டிருக்க வேண்டும், எனவே அவற்றின் மாற்று வீதங்கள் எந்த அளவில் இருக்க வேண்டும் என்ற கேள்வி உடனே எழுந்தது. அமெரிக்கா, உலகப் போரின்போது, பொன் ஏற்றுமதிக்கு அனுமதிச் சீட்டுகள் தேவை என்ற ஒரே ஒரு மாறுதலைத்தான் தன் பொன் திட்ட இணைப்பில் செய் திருந்தது. 1919-ல் இந்த நிபந்தனையை நீக்கிவிட்டு மீண்டும் பொன் திட்டத்தைப் பழைய சமன் வீதத்திலேயே மேற்கொண்டது. அத

னிடம் நிறைய பொன் சேமநிதிகள் இருந்தன. எனவே, அது அவ்வாறு செய்ய முடிந்தது. ஜெர்மனியும் ஆஸ்திரியாவும் மதிப்பற்றுப்போன தம் பழைய செலாவணிகளை எறிந்துவிட்டுப் புதுச் செலாவணிகளை வழங்கின; ஜெர்மனியின் ரீஷ்மார்க் (Reichsmark), போருக்கு முன் பொன்னுடைய டாலர் மதிப்பின்படி, இப்போது 23 8 சென்டுகளுக்குச் சமம் ஆயிற்று. ஆஸ்திரிய .ஷில்லிங்கின் (schilling) மதிப்பு முன்னைவிட அதிகமாக, 14 சென்டுகள் (cents) மதிப்பைப் பெற்றது. இரு நாடுகளிலும் பணத்தின் அளிப்பைக் கடுமையாகக் கட்டுப்படுத்திப் புதுச் செலாவணிகள் தம்முடைய வெளிநாட்டு மதிப்பினின்று அதாவது பொன் மதிப்பினின்று பிறழாதிருக்குமாறு பார்த்துக்கொள்ளப்பட்டது; செலுத்துநிலையில் பாதகமான மாறுதல்களைச் சாமாளிக்கச் சேமநிதிகளுக்காகப் பன்னாட்டுக் கடன்கள் வாங்கப்பட்டன. மிக மோசமாக மதிப்பிறங்கிவிட்ட தம் பழைய செலாவணிகளையே வைத்துக் கொண்டு பல நாடுகள் வாழவேண்டியிருந்தன. போருக்குமுன் இதைவிட அதிகமாக இருந்த அவற்றின் பொன் மதிப்பை மீண்டும் ஏற்படுத்துவதாக இருந்தால், அவற்றின் செலாவணிகள் மிகவும் மிகை மதிப்பிட்ட நாணயமாற்று வீதங்களைப் பெற்றிருக்கும். உள்நாட்டு உற்பத்திச் செலவுகளையும் விலைகளையும் குறைத்து ஏற்றுமதி–இறக்குமதிச் சமநிலையை ஏற்படுத்தக் கடுமையான பணச் சுருக்கம் செய்ய வேண்டியிருக்கும். அதனால், பெருங்கேடு விளையக்கூடும். இந் நாடுகளுக்கு ஒரே ஒரு மாற்றுவழிதான் இருந்தது; தம் செலாவணிகளின் பொன் மதிப்பைக் குறைத்து இப்போது இருக்கும் இறங்கிப்போன அவற்றின் உள்நாட்டு மதிப்புக்குச் சமமாக வெளிநாட்டு மதிப்பைக் கொண்டுவருவது. சில நாடுகள் இவ்விரண்டு நிலைகளுக்கும் இடையில் இருந்தன. இவற்றுள் முக்கியமானது பிரிட்டன். அவற்றின் விலைகளும் உற்பத்திச் செலவுகளும் 1913-ஆம் ஆண்டோடு ஒப்பிட்டால் அதிகமாக இருந்தன; ஆனால், அமெரிக்காவில் இருந்ததைவிட மிக அதிகமாக இல்லை; எனவே, விலை வித்தியாசத்தை மிதமான பணச் சுருக்கத்தினால் நீக்கி விடலாம்.

### பொன் திட்டத்தின் மீட்சி

போருக்கு முன் பொன் திட்டத்தின் மையமாக விளங்கிய பிரிட்டன் பொன் திட்ட மீட்சியை படிப்படியாகச் செய்தது. ஆனால், அதன் போக்கு முன்னரே தீர்மானிக்கப்பட்டது. (1918-ல்) கன்லிஃப் குழு (Cunliffe Committee) வெளியிட்ட அறிக்கையை அடிப்படையாகக் கொண்டது பிரிட்டனின் முடிவு. இவ்வறிக்கை, பிரிட்டனில் பொன் திட்டம் அப்போதும் இருந்து வருவதாகவும், அதன் தொடர்ச்சி மிக அவசியம் என்றும், அதைத் 'தாமதமின்றி' மீட்கவேண்டும் என்றும் கூறியது.

ஆனால், அக் குழுவின் யோசனைகளை பிரிட்டன் நிதானமாகவும் ஒரு பரிசோதனையாகக் கருதியும்தான் பின்பற்றியது. படிப்படியாக நாணய மாற்றுக் கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டன; எச்சரிக்கையான பணச் சுருக்கக் கொள்கையை இங்கிலாந்து பாங்கு கடைப்பிடித்தது; பிரிட்டிஷ் விலைகள் அமெரிக்க விலைகளை மிகவும் நெருங்கின. இதன் விளைவாக, 1920-ன் முதல் மாதங்களில் இருந்த $ 3·18 ஆகிய குறைந்த வீதத்திலிருந்து இரண்டு ஆண்டுகளுக்குப் பின் $ 4·36 ஆக டாலர்/ஸ்டர்லிங் மாற்று வீதம் உயர்ந்தது. பிரிட்டனில் முதலீடு செய்யப்பட்ட வெளிநாட்டுக் கடன்களின்மீது தடை விதித்ததும், அமெரிக்கா $ 300 மிலியனுக்குக் கடன்கள் அளித்ததும், பவுனுக்குப் போதுமான ஆதரவு அளித்ததால் 1925-ல் பாராளுமன்றம் போருக்கு முன்னிருந்த $ 4·866 வீதத்தில் பவுனின் பொன் மதிப்பை மீண்டும் ஏற்படுத்தியது.

இந்தச் சமயத்தில் பிரிட்டனில் மொத்த விற்பனை விலைகளின் குறியீட்டு எண் 159 ஆக இருந்தது; அமெரிக்காவில் 155 ஆக (1913 = 100) இருந்தது. எனவே, இவ்விரண்டுக்கும் அதிக வித்தியாசம் இல்லை. ஆனால், பன்னாட்டு வாணிபத்தில் பங்கு கொண்ட பொருள்களின் விலைகளுக்கு மொத்த விற்பனை விலைக் குறியீட்டு எண்ணில் அதிக எடை (weight) தரப்பட்டுள்ளது. (இவை வெளிநாட்டுப் போட்டியைச் சமாளிக்கவேண்டியிருப்பதால் நாட்டுக்கு நாடு அதிகமாக வித்தியாசப்படுவதில்லை.) எனவே, பிரிட்டனில் உற்பத்திச் செலவுகள் அமெரிக்காவோடு ஒப்பிட்டால் அதிகமாக இருந்ததைப் போதிய அளவு இக் குறியீட்டு எண் காண்பிக்கவில்லை. பழைய வீதத்தை மீண்டும் ஏற்படுத்தியதனால் பவுன் குறைந்தபட்சம் 10 சதவிகிதம் மிகை மதிப்படைந்தது என்று பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டது. இவ் வீதம், பிரிட்டிஷ் தீவுகளின் பொருளாதாரத்தை அடுத்த ஏழு ஆண்டுகளுக்குத் தொடர்ச்சியாகப் பணச் சுருக்க அழுத்தத்தால் வருந்தச் செய்தது. விலைகளும் அடக்கச் செலவுகளும் நெகிழ்ச்சியற்றிருந்ததால் அவை நிறைய குறையவில்லை. அதற்கு மாறாக, பிரிட்டனில் இடைவிடாது வேலையின்மை தாண்டவமாடியது. 1920-லிருந்து பத்து ஆண்டுகளுக்கு வேலையற்றவர்களின் எண்ணிக்கை ஒரு மிலியனுக்குக் குறையவேயில்லை.

1925-க்கும் 1928-க்கும் இடையே நாற்பதுக்கு மேற்பட்ட நாடுகள் மீண்டும் பொன் திட்டத்தை மேற்கொண்டன. அவற்றில் சில தம் செலாவணிகளின் பொன் மதிப்பைப் போருக்குமுன் இருந்த நிலையில் வைத்தன. பிற, ஒரு குறைந்த மதிப்பில் வைத்தன. ஸ்விட்சர்லந்தும் ஹாலந்தும் முதலில் கூறியவாறு செய்தன. அதற்கு மாறாக, ஃபிரான்சும் இத்தாலியும் தம் செலாவணிகளின் பொன் அளவை முறையே சுமார் ஐந்தில் நான்கு பங்காகவும் முக்காலாகவும் குறைத்தன. இந் நாடுகளில் போருக்குப் பின் பணச் சுருக்கம் ஏற்பட்டும் விலைகள் 1913

நிலையைவிட மிக அதிகமாக இருந்தன. 1928-ன் முடிவில் பொன்னை அடித்தளமாகக்கொண்ட பரவலான பன்னாட்டுச் செலாவணி அமைப்பு ஒன்று மீண்டும் நிறுவப்பட்டது.

**நம்பிக்கைகளும் எதிர்பார்த்ததும்**

பல நாடுகளைக் கொண்ட பன்னாட்டுப் பொன் திட்டம் ஒன்று மீண்டும் அமைக்கப்பட்டதும், சீரமைப்பின் மிக முக்கியமான அம்சம் நிறைவேறிவிட்டதாகக் கருதப்பட்டது. ஏனெனில், போருக்குமுன் பொன் திட்டம்தான் திடநிலைக்கும் ஒருமைப்பாட்டுக்கும் அடிப்படையாக இருந்தது. திடமான பன்னாட்டுச் சமநிலை இனி மீண்டும் ஏற்பட்டுவிடும் என எதிர்பார்க்கலாம் எனக் கருதப்பட்டது. அச் சமநிலையில் தாற்காலிகமான விளைவுகள் ஏற்படலாம். அன்றி, அவற்றில் மேலும் ஆழ்ந்த, தொடர்ந்து சிலகாலத்துக்கு இருக்கக்கூடிய மாற்றங்கள் ஏற்பட்டாலும், அவற்றின் அளவு அதிகமிராது ; அவை படிப்படியாகத் தான் ஏற்படும் ; எனவே, அவற்றைப் பழைய, தெரிந்த உபாயங்களால் சீராக்கிவிடலாம். பழக்கமில்லாத பிரச்சினைகளைத் தீர்க்கவேண்டிய தொல்லையை வெறுத்த அரசியல்வாதிகள் தானே இயங்கும் பொன் திட்டச் செயல்முறை மீண்டும் ஏற்பட்டதனுல் பெரும் நிம்மதி அடைந்ததில் வியப்பொன்றும் இல்லை. நிலைமையைத் தீர ஆலோசித்துக் கஷ்டமான முடிவுகளைச் செய்யவேண்டிய பொறுப்பை இவ்வியக்கம் அவர்களிடமிருந்து மேற்கொள்ளும் என்று நம்பப்பட்டது.

உண்மையில் ஏற்பட்டது என்னவென்றுல், அவர்களது நம்பிக்கையில் பெரும்பகுதி பொய்த்துவிட்டது. யாவரும் நன்கு அறிந்த, திறமையாகச் செயல்படும் ஓர் எந்திரத்தை மீண்டும் அமைத்துள்ளதாக அவர்கள் எண்ணினர். ஆனுல், இந்த எந்திரத்தின் சில பாகங்கள் அவர்களுடைய ஆதிக்கத்தில் இல்லை. அவை மாறிவிட்டன. அதன் இயக்கத்தை இம் மாறுதல் கடுமையாக பாதித்துவிட்டது. இதை அவர்கள் அறியவில்லை. அந்த எந்திரத்தின் வேலைச்சுமை மிகவும் அதிகமாகிவிட்டதை அவர்கள் எதிர்பார்க்கவில்லை.

**பொன் திட்டத்தின் உருவத்தில் மாறுதல்கள்**

1925–28-ல் நிறுவப்பட்ட பொன் திட்டம், 1914-ல் இருந்ததைவிட ஓரளவு மாறுபட்டிருந்தது. பொன்னின் பற்ருக்குறை ஏற்படுமோ என்ற அச்சத்தால் அதைத் தவிர்க்கப் பொன் நாணயங்கள் தயாரிப்பது பொதுவாக நிறுத்தப்பட்டது. அமெரிக்காவில்மட்டும் அது தொடர்ந்து நடந்தது. பொன் திட்ட நாடுகளில் நிலுவைகளாக இருந்த சொத்துகளை ஒருநாட்டின் மத்திய பாங்கின் சேமநிதியாகக் கருத அனுமதிக்கப்பட்டது. பொன் கட்டித் திட்டம் (gold bullion system) என்றும் பொன் மாற்றுத் திட்டம் (gold exchange system) என்றும் அழைக்கப்பட்ட இம் மாறுதல்கள் பிறவற்ருேடு ஒப்பிட்டால் முக்கிய

மானவை அல்ல. முதலில் கூறியமுறையில், செலாவணிகள் பொன் நாணயங்களாக மாற்றும் உரிமை பெறுமல் ஒரு குறிப்பிட்ட விலையில் பொன் கட்டிகளாக மாற்றும் உரிமை பெற்றன; பொன் கட்டிகளைச் செலாவணியாகவும் அக் குறிப்பிட்ட விலையில் மாற்றலாம்; பொன் மாற்றுத் திட்டத்தின்கீழ், உள்நாட்டுச் செலாவணிகளைப் பொன் திட்ட நாடுகளின் செலாவணிகளாக மாற்றிக்கொள்ளலாம். பொன் ஏற்றுமதி இறக்குமதிகள் தடையின்றி அனுமதிக்கப்பட்டன.

முக்கியமான மாறுதல், பொன் திட்ட முறையின் அடிப்படையான, உயிர்நாடியான குணங்களில் ஏற்பட்டதுதானே தவிர, அதன் வெளி உருவத்தில் ஏற்பட்டது அன்று. பன்னாட்டு விவகாரங்கள் லண்டனை மையமாகக் கொண்டிருந்ததும் பன்னாட்டு நடத்தைக்கான நெடுங்கால மாக இருந்துவரும் விதிகளைத் தவருமல் கடைப்பிடித்ததும்தான் பொன் திட்டம் போருக்குமுன் வெற்றிகரமாக நடந்ததற்குக் காரணங் கள். இந்த அடிப்படைக் காரணங்கள் இப்போது மறைந்து போயின.

**போருக்குமுன் பொன் திட்டத்தின் அம்சங்கள்**

போருக்குமுன், பொன் திட்டத்தின் இயக்கம் லண்டனை மையமாகக் கொண்டிருந்தது. பன்னாட்டு விவகாரங்களின் பெரும்பகுதியைத் தீர்ப்பது எளிதாக இருந்தது; அநேகமாக எல்லா நாடுகளுடைய பாங்குகளும் வைத்திருந்த ஸ்டர்லிங் நிலுவைகளை அதிகமாக்கியோ குறைத்தோ விவகாரங்கள் தீர்க்கப்பட்டன. உலக மத்திய பாங்காகவும் லண்டன் அங்காடி பணியாற்றியது. பிறநாடுகள் பாதகமான செலுத்து நிலையால் வருந்தியபோது, லண்டன் அங்காடி அவற்றுக்குக் குறுகிய காலக் கடன்களைக் கொடுத்தது. அந் நாடுகளின் பொன் சேமநிதிகள் குறைந்துபோனபோது இக் கடன்கள் அவற்றுக்குத் துணைசெய்தன. பிரிட்டன் பொன்னை இழந்தபோது லண்டன் அங்காடி உலகம் முழுவதி லிருந்தும் கடனை வாங்கியது. இத்தகைய குறுகியகால மூலதன இடப் பெயர்ச்சியோடுகூடவே பாக்கி நிற்கும் நெடுங்காலப் பத்திரங்களின் சொத்துரிமையில் மாற்றங்களும் ஏற்பட்டன. பொன்னின் போக்கு வரத்துக்குப் பதிலாக ஓரளவுக்கு மூலதன இடப்பெயர்ச்சி ஏற்பட்டதும் கூடவே ஏற்படும் கடன் சுருக்கம் அல்லது பெருக்கம் மட்டுப்பட்டது. பிரச்சினைக்குக் காரணமான உலைவு சிறிது காலமே இருந்தால் நல்லதே; அன்றி, அடிப்படையில் திருத்தம் தேவைப்பட்டால், லண்டன் கடன் வாங்குவதோ, கொடுப்பதோ, திருத்தத்தைத் தடுக்காமல் அடிப்படைச் சக்திகள் மீண்டும் சமநிலையைத் தோற்றுவிக்கத் தேவைப்படும் அவகாசத்தை அளிக்கின்றன.

இறுதியாக, வெளிநாட்டு நெடுங்கால முதலீடுகள் முக்கியமாக லண்டனிலிருந்து நெடுங்காலமாக வந்திருக்கின்றன. இந்தக் கடின மான தொழிலில் தம் அனுபவம் காரணமாக, லண்டன் பாங்கினரின்

தேர்ச்சியும் நுண்ணறிவும் மிகச் சிறந்த நிலையில் இருந்தன. தவிர, லண்டன் நகரத்து முதலீட்டு அங்காடி, பன்னாட்டுச் சக்திகளுக்கு ஏற்ப உடனே மாறும் தன்மையைப் பெற்றிருந்தது. ஏற்றுமதிகள் இறக்குமதிகளைவிட அதிகமாக இருந்ததால் வெளிநாட்டு நிலுவைகள் பிரிட்டிஷ்காரர்களுக்குச் சொந்தமாயின. பொன் நாட்டுக்குள் வந்தது; பணச் சந்தையில் அழுத்தம் குறைந்தது. இப்போது அதிகமாகக் கிடைக்கும் நிலுவைகளில் ஒரு பகுதி குறுகியகால வெளிநாட்டுக் கடன்களாக மாறலாம். ஆனால், அத்தகைய கடன்களை அதிக அளவுக்குக் கொடுக்கச் செய்ய முடியாது; செலுத்துநிலை உபரி தொடர்ந்து இருந்துவந்தால் இக் கடன்கள் நின்று விடும்; பொன்னின் இடப்பெயர்ச்சி மீண்டும் ஏற்படும்; பணச் சந்தையின் அழுத்தம் மேலும் குறையும். கடன் சூழ்நிலை தொடர்ந்து சுலபமாக இருந்தால் இப்போது நெடுங்காலத்துக்கு வெளிநாடுகளில் கடன் தருவது தூண்டப்படும். பொன்னுக்குப் பதிலாக வெளிநாட்டுப் பத்திரங்கள் நாட்டுக்குள் வருகின்றன. தொடர்ந்து வெளிநாட்டார்வசம் வாங்கும் சக்தி இருப்பதால் தொடர்ந்து பெரும் அளவுக்கு ஏற்றுமதிகள் செய்யமுடியும். திருத்தம் ஏற்படுவதில் பன்னாட்டு மூதலீடு முக்கியப் பங்கு பெறுகிறது. அது எளிதாக நடைபெறப் பெரிதும் வசதி செய்கிறது.[1]

**முக்கியமான மாறுதல்: பிரிந்த பொறுப்பு**

போரின்போதும் பின்னரும் ஏற்பட்ட நிகழ்ச்சிகளால் பொன் திட்டத்தின் இந்த முக்கிய அம்சங்கள் அடியோடு மாறின. ஃபெடரல் ரிசர்வ் அமைப்பு அமெரிக்காவின் மத்திய பாங்கு அமைப்பாக 1915-ல் நிறுவப்பட்டது. இதுவரை தறிகெட்டிருந்த பண அங்காடிகளை அது திடநிலைப்படுத்தியது. அதேசமயம் அமெரிக்காவில் இவ்வமைப்பின் காரணமாக ஓர் உண்டியல் அங்காடியும் தோன்றி வளர்ந்து, விரைவில் லண்டனோடு போட்டியிடலாயிற்று. போரின்போதும் பின்னரும் போருக்குத் தேவையான பொருள்களை அமெரிக்கா முக்கியமாக அனுப்பியதால் இவ்வங்காடிக்கு ஆதரவு ஏற்பட்டது. நியூயார்க்கில் நிறைய டாலர் நிலுவைகளை வைத்திருப்பது பிற நாடுகளுக்கு மேலும் மேலும் அவசியமாயிற்று. இந்த நிலுவைகள் 1914-ல் மிகக் குறைவாக இருந்தன. ஆனால், 1926-லேயே ஏறக்குறைய $ 1·5 பிலியனை உயர்ந்துவிட்டன. மேலும், அயல்நாட்டுப் பத்திரங்களை வாங்கி

[1] இதற்கு ஆதரவாக நேரிடையான சான்றும் உள்ளது. 'ஆசிரியர் லண்டனில் கண்ட பேட்டிகளில், முதலீட்டு பாங்குக்காரர்கள் போருக்குமுன் தாங்கள் செலுத்துநிலை எவ்வாறிருக்கிறது என்பதுபற்றி அக்கறை கொண்டதில்லை என்றும், முதலீட்டைத் தேடிப் பணம் அலைந்துகொண்டிருந்ததால் வெளிநாட்டுக் கடன்கள் வழங்க அதுவே நல்ல சமயம் என்று அவர்கள் நினைத்ததாகவும் மீண்டும் மீண்டும் கூறினர்.' Willam Adams Brown, Jr., *The International Gold Standard Reinterpreted*, பக்கம் 55. Copyright 1940 by the National Bureau of Economic Research, New York.

விற்பதன்மீது நியூயார்க் பங்கு மார்க்கெட் எப்போதும் தடைகளை விதித்ததில்லை. ஆனால், விட்டுவிட்டுப் பலமுறை பிரிட்டன் வெளி நாட்டுக் கடன்கள்மீது தடைகளை விதித்திருக்கிறது. இதன் காரண மாகவும், நியூயார்க்கில் நெடுங்காலக் கடன்கள் எளிதாகக் கிடைத்த தாலும், மேலும் அங்கு வைப்புகள் அதிகரித்தன; பத்திரங்களில் வியாபாரம் பெரும் அளவுக்கு அதிகரித்தது.

ஒருவர் செய்வதைவிட இருவர் சேர்ந்தால் எந்த வேலையையும் எளிதில் செய்யலாம். ஆனால், இரு தீர்வுக் கேந்திரங்கள் ஒன்றைவிடச் சிறந்தவை அல்ல. ஏனெனில், ஒரு தீர்வுக்கேந்திரத்தின் திறமை, விவ காரங்கள் அதே கேந்திரத்தை மையமாகக்கொண்டுள்ள வீதத்தில் அதிகரிக்கும். ஒன்றுக்கு மேற்பட்ட கேந்திரங்கள் இருந்தால், ஒன்றில் விவகாரங்கள் தீர்ந்த பின்னர், இரு கேந்திரங்களுக்கு இடையில் உள்ள விவகாரங்களைத் தீர்க்கவேண்டும். இதற்காக மேலும் நிறைய வெளிநாட்டு நிலுவைகளை வைத்திருக்கவேண்டும்; மேலும் உழைப்பைச் செலவழிக்கவேண்டும்.

ஆனால், ஒன்றுக்கொன்று முரணாக நடக்காமல், ஒன்றோடொன்று இசைவாக நடக்குமானால், இரு நிதிக் கேந்திரங்கள் இருந்தால் பன்னாட்டுப் பொருளாதாரம் பலமடையக்கூடும். நியூயார்க் ஒரு புதுக் கேந்திரமாக வளர்ந்தபின் குறுகியகாலத்துக்கும் நெடுங்காலத்துக்கும் நிதி வசதி அதிகரித்ததனால் நன்மையே. அதுவும் லண்டனால் செய்ய முடிந்த வெளிநாட்டு முதலீட்டின் அளவு குறைந்ததும் இது பெரும் நன்மை ஆயிற்று. ஆனால், குறை என்னவென்றால், நியூயார்க் பாங்கி யினருக்கு அனுபவம் போதாது; செலுத்துநிலை மாறுதல்களைவிட, உள் நாட்டுச் சக்திகளும், ஊகவாணிபச் சக்திகளும் நியூயார்க் அங்காடியை அதிகம் பாதித்தன. ஒரு கண்டத்தைப்போல அகன்றிருப்பதும், உற் பத்தியில் பிற நாடுகளைவிட அதிகமாகச் சுயதேவைகளைப் பூர்த்திசெய்து கொள்வதும், தன் மொத்த உற்பத்தியில் தன் அயல்நாட்டு வாணிபம் மிகச் சிறிய அளவே உள்ளதும் ஆன ஒரு நாட்டின் நிதிக் கேந்திரம், பன்னாட்டுக் கணக்குகளில் ஏற்படும் உபரி அல்லது பற்றுக்குறையினால் நிறைய பாதிக்கப்படாமல் இருப்பதை எதிர்பார்க்கலாம். வியாபாரத் தில் ஏற்பட்ட மாறுதல்களைவிட ஊகவாணிபம் பங்கு மார்க்கெட் கடன் வீதத்தை நியூயார்க்கில் அதிகமாகப் பாதித்தது. நியூயார்க்கில் இந்த வட்டி வீதம் (அழைப்புக் கடன் வீதம்) (call loan rate) கொண்டிருந்த ஆதிக்கத்தை யாரும் எதிர்பார்க்கவில்லை.

அத்தகைய பண அங்காடியில், சுறுசுறுப்பான ஊகவாணிபம் அழைப்புக் கடன் வீதத்தை உயர்த்தினால், உண்டியல் வீதம் உட்பட வணிக வட்டி வீதங்களும் உயரும். ஏனெனில், நிதிகளுக்கான போட்டி எல்லாத் துறைகளிலும் பரவுகிறது. அதே சமயத்தில் அமெரிக்கச்

செலுத்துநிலையில் ஓர் உபரி இருப்பதாகக் கொள்வோம். (அப்படியானால் பிறநாடுகளின் செலுத்துநிலைகளில் பற்றுக்குறைகள் இருக்கும்.) அப்போது நியூயார்க் குறுகியகாலப் பன்னாட்டுக் கடன்களைக் கொடுத்தால் உலகத் தேவைக்கு ஏற்றதாக இருக்கும். இருந்தபோதிலும் இதற்கு எதிர்த் திசையில், பங்கு மார்க்கெட் கடன்களின் அதிக வட்டியால் ஈர்க்கப்பட்டு நிதிகள் அமெரிக்காவை நாடி வந்துகொண்டிருக்கும். இதேபோன்ற சூழ்நிலைகளின் சேர்க்கைதான் 1920 தொடங்கிய பத்து ஆண்டுகளில் ஏற்பட்டது. பங்கு மார்க்கெட் பூரிப்பு (boom) காரணமாகக் குறுகியகாலப் பன்னாட்டுக் கடன்களைத் தரும் பணியை நியூயார்க் செய்ய முடியவில்லை.

இந்த முரண்பாடு இருந்தபோதிலும், அமெரிக்கா நிறைய அளவு நெடுங்காலப்பன்னாட்டுக் கடன்களைக் கொடுக்கத்தான் செய்தது. ஆனால், (1922-க்கும் 1928-க்கும் இடையே மொத்தம் சுமார் $ 5 பிலியனாக இருந்த) இந்தக் கடன்கள் அமெரிக்கச் செலுத்துநிலை இருந்த நிலைமையோடு நெருங்கிய தொடர்புகொண்டில்லாமல் நாட்டுக்குள் இருந்த பணவீக்கச் சக்திகளோடு நெருங்கிய உறவுகொண்டிருந்தன. மேலும், நியூயார்க் பாங்குகளின் அனுபவமின்மையினால் சில கெடுதியான விளைவுகள் ஏற்பட்டன. பாங்கு நிர்வாகிகள் உடனடியாக பாங்குகளுக்கு வரும் கமிஷன் இலாபத்தையே கவனித்தனரேயன்றி, கொடுத்த கடன்கள் நிச்சயமாகத் திரும்பி வருமா என்பதைச் சரியாகப் பார்க்கவில்லை. எனவே, பல கடன்களைச் சந்தேகப்படக்கூடியவர்கள் வாங்கினர்; பல கடன்கள் உற்பத்தி யல்லாது வேறு காரணங்களுக்கு வாங்கப்பட்டன. பன்னாட்டு முதலீடுகளுக்கு நிதி ஏற்பாடுகளும் அவ்வப்போது விட்டுவிட்டுச் செய்யப்பட்டதேயன்றித் தொடர்ந்து செய்யப்படவில்லை.

இதைவிட முக்கியமாக, போருக்கு முன் பொன் திட்டம் சங்கடமின்றி நடப்பதற்கு மிகவும் காரணமாக இருந்த நெடுங்காலப் பத்திரங்களின் விரைவான மாற்றுகைகள், உலக மூலதன அங்காடிகளின் நெருங்கிய இணைப்பு மறைந்ததால் நின்றுபோயின. போருக்குப் பின் பொன் திட்டம் நடப்பதற்கு, முன்னைவிட மிக அதிகமாகக் கடன் செலாவணியைச் சுருக்கவும் பெருக்கவும் வேண்டியிருந்தது.

### குறிக்கோள்களில் மாறுதல்கள்

போருக்கு முன், முக்கியமான நாடுகளின் பணக் கொள்கையின் இறுதிக் குறிக்கோள் அந் நாட்டுச் செலாவணியின் மாற்றுரிமையைப் பாதுகாப்பதே ஆகும். ஒரு நாட்டின் சேமநிதிகளின் நிலைமையைப் பொறுத்து பண அதிகாரிகள் ஆவன செய்தனர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் இருந்த சாதகமான சூழ்நிலையில் பணத்துறை அதிகாரிகள் தம் அதிகாரங்களைத் தீவிரமாகப் பிரயோகிக்கவேண்டிய

அவசியம் அதிகமாக ஏற்படவில்லை. ஆனாலும், இந்தக் குறிப்பைப் பொறுத்துத் தேவையானபோது அவர்கள் செயலாற்றத் தவரவில்லை.

போருக்குப் பின், இதெல்லாம் மாறிவிட்டது. ஒவ்வொரு நாடும் தன் பணத்தின் அளவைத் தன்னிச்சையாக நிர்ணயிக்க நிச்சயித்தது; அதன் சேமநிதி எவ்வாறு இருந்தது என்பது அவ்வளவு முக்கியமாகக் கருதப்படவில்லை. பொன் நாட்டுக்குள் வந்தால், மத்திய பாங்கு பத்திரங்களை அங்காடியில் விற்றுவந்த பொன்னைப் பயனற்றதாக்கி விட்டது; வெளி நாடுகளினின்று வணிக பாங்குகளின் சேமநிதிகளுள் சேர்ந்த தொகைகளை உள்நாடுகளில் எடுக்கப்பட்ட தொகைகள் ஈடு செய்துவிட்டன. பொன்னின் வெளிப் போக்கினால் நஷ்டமான சேம நிதிகளுக்குப் பதிலாக அதேபோல மத்திய பாங்கு பகிரங்க அங்காடியில் பத்திரங்கள் வாங்கியதால் வந்த பணம் ஈடு செய்தது. இவ்வாறு 1920-க்கும் 1924-க்கும் இடையே ஃபெடரல் ரிசர்வ் அதிகாரிகள் இவ்வாண்டுகளில் பெரும் அளவில் வந்த பொன்னின் பெரும்பகுதியை ஈடு செய்துவிட்டனர். இதற்குப் பின்வரும் காரணங்களை அவர்கள் காட்டினர். (1) கடன் நிலைமையை நல்ல நிலையில் வைக்கவேண்டியது அவசியம் (உள்நாட்டுத் திடநிலை). (2) அவசியம் ஏற்பட்டால் பின்னர் ஏற்றுமதி செய்ய இந்தப் பொன் கிடைக்குமாறு நிச்சயமான ஏற்பாடு செய்ய வேண்டும்.[2] இங்கிலாந்து பாங்குகூட 1925-க்குப் பிறகு பொன்னின் போக்குவரத்துக்கு நேர்மாறாகத் தன் பத்திரங்களின் இருப்பை மாற்றிப் பொன்னைப் பயனற்றதாக்கும் கொள்கையை ஒழுங்காகக் கடைப்பிடித்தது. இக் கொள்கையின் நிகர விளைவாகப் பணச் சுருக்கம் ஏற்பட்டது. எல்லாச் சூழ்நிலைகளையும், முக்கியமாக இவ்விரு நாடுகளின் உள்நாட்டு நிலவரத்தையும் பார்த்தால், இந்தகைய கொள்கை புத்திசாலித்தனமாக இருந்திருக்கலாமாயினும் பழைய பொன் திட்ட வழக்கத்துக்கு இது நேர்மாறாக இருந்தது.

ஒரு பன்னாட்டுச் செலாவணி முறையின் தானே இயங்கும் செயல் முறையின்மீது நம்பிக்கை வைக்காமல் நாட்டுக் குறிக்கோள்களை முக்கியமாகக் கருதினதற்குப் பல அடிப்படைக் காரணங்கள் உண்டு. அவற்றுள் ஒன்று, உள்நாட்டுப் பொருளாதாரத் திடநிலைமீது நாளுக்கு நாள் அதிகமான அக்கறை. இதற்குக் காரணம் தொழில் வளர்ச்சியும் நகரங்களில் மக்கள் குடிபோவதும் அதிகமானதாகும். இதனால், மக்களுக்கு வேலையின்மை அபாயம் மேலும் மேலும் அதிகமாயிற்று. பொருளாதார அறிவு வளர்ந்ததும் ஒரு காரணம். போர்க் காலத்

[2] பொன் திட்டத்தை விட்டு விலகிய நாடுகளிலிருந்து அப் பொன் வந்தது. அந் நாடுகளின் வாணிபம் இன்னும் சீர்குலைந்து கிடந்தது. எனவே, அதன் இடப்பெயர்ச்சி அசாதாரணமாகக் கருதப்பட்டது. பொன்னைப் பயனற்றதாக்கும் கொள்கைபற்றிய அதிகாரபூர்வமான விளக்கத்துக்கு Tenth Annual Report of the Federal Reserve Board (1923), பக்கங்கள் 20–22-ஐப் பார்க்கவும்.

திலும் அதற்குப் பின்னரும் பணத்துறையில் ஏற்பட்ட உலைவுகளைப் பார்த்துப் பொருளாதார வல்லுநர்கள் இந் நிகழ்ச்சிகளை ஆழ்ந்து ஆராய்ந்தனர்; இவ்வாராய்ச்சிகளின் விளைவாகச் சூழ்நிலையை மேலும் நன்ருகப் புரிந்துகொள்ள முடிந்தது. நிலைமைகளைக் கட்டுப்படுத்த மேலும் அதிகாரங்கள் பிரயோகிக்கப்பட்டன. முக்கியமாக விலைவாசி களைத் திடநிலைப்படுத்தவும் அதன்மூலம் பொருளாதார நடவடிக்கை களைத் திடநிலைப்படுத்தவும் மத்திய பாங்கு முயற்சி செய்யவேண்டும் என்ற கொள்கைக்கு பலத்த ஆதரவு இருந்தது. இத் திட்டங்களை மேலும் பலன் தருமாறு செய்யத் தேவையான உபாயங்கள் விரைவாக ஏற்படுத்தப்பட்டன. முன்னர் ஒருசில நாடுகளில்மட்டும் இருந்த மத்திய பாங்குகள், இப்போது ஐரோப்பா முழுவதிலும், பல இலத்தீன் அமெரிக்க நாடுகளிலும், ஆஸ்திரேலியாவிலும், தென் ஆஃப்பிரிக்கா விலும் தோன்றின.

**அபிப்பிராயச் சூழ்நிலையில் மாறுதல்**

பண விவகாரங்களில் நாடுகள் தன்னிச்சையாக நடக்கத் தொடங்கியது ஓர் அகலமான நீரோட்டத்திலே ஒரு சிறிய சுழலைப் போன்றது. முக்கியமாக முதல் உலகப் போருக்குப் பின், ஆனுல், அதற்கும் முன்பே தொடங்கி, பொருளாதார வாழ்க்கையில் அரசாங்கம் குறுக்கிடுவது சந்தேகமின்றி அதிகமாகிக்கொண்டு வந்திருக்கிறது. தலையிடா வாணிபக் கொள்கையின் துரதிருஷ்டவசமான விளைவுகளுக்கு எதிராகத் தவிர்க்க முடியாதபடி ஏற்பட்டது இது.

பொருளாதாரச் சுதந்திரம் காரணமாகக் குறிப்பிடத்தக்க முறை யில் உற்பத்தித் திறன் பெருகியது; வாழ்க்கைத் தரங்கள் உயர்ந்தன. தொழில் வணிகர்கள் முழுமூச்சுடன் ஈடுபட்டு மூலதனத்தைச் சேர்த்தனர்; புதுத் தொழில்களைத் தொடங்கினர்; புதுத் தொழில் முறை களைப் பயன்படுத்தினர்; எதிர்பாராத வேகத்தில் உற்பத்தியைப் பெருக்கினர். ஆனுல், அதேசமயம் வலிமையும் அறிவும் மிக்கவன் அவை இரண்டும் அற்றவனை வருத்திப் பலனடைய இச் சுதந்திரம் வழி செய்தது. இதன் விளைவாகத் தொழிலாளரின் உழைப்பு நேரம் மிகவும் அதிகமாக இருந்தது; குழந்தைகள் வேலை செய்வது அதிகமாக இருந்தது; வேலைச் சூழ்நிலை அபாயகரமாக இருந்தது; வேலை விஷயத்தில் நிச்சயமற்ற நிலை இருந்தது; மோசமான சேரிகளில் தொழிலாளர் வசித்தனர். முதன்முதலில் தடையிலா வாணிபத்தை ஆதரித்தவர்கள் இந்த விளைவுகளை எதிர்பார்க்கவில்லை. பொருளாதார நடவடிக்கைகளில் பங்கு கொள்வோர் அனைவரும் சமமான நிலையில் இருந்ததாக அவர்கள் கொண்டனர். பேரம் செய்யும் திறனிலும், தம் அக்கறைகளை உணர்ந்திருப்பதிலும், நல்ல பொருளுக்கும் கெட்ட தற்கும் உள்ள வித்தியாசத்தை அறியும் திறமையிலும், இதைத் தவிர, வேறு வேலைக்கான வாய்ப்புகளிலும், வேலை செய்யும் இடத்தைப்

பொறுத்தும், இருப்பிடத்தைப் பொறுத்தும் அனைவரும் சமம் என்பது அவர்களது எடுகோள். ஆனால், இவ்வாறு இருக்கவேண்டிய சமநிலை அடியோடு இல்லாமல் போயிற்று; தனியார் நலனும் சமூக நலனும் ஒன்றுசேரத் தவறிவிட்டன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் மத்தியில் வழங்கியதும் அடிக்கடி கூறப்படுவதுமான இக் கேலிக்கூற்று இந்தச் சூழ்நிலையை மிக அழகாக எடுத்துரைக்கிறது. "'ஒவ்வொருவனும் தனக்காக, கடவுள் நம் அனைவருக்குமாக' என்று சொல்லிக் கொண்டே கோழிக் குஞ்சுகள் இடையில் ஆடியது யானை."[3]

தனியார் நலன் கொள்கையின் (individualism) அடிப்படையில் பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டபோது, அதனால் சமூகத்துக்கு எதிராக ஏற்பட்ட விளைவுகள் மக்களிடையே பலவகை உணர்ச்சிகளை ஏற்படுத்தின. பிரிட்டன் நாட்டு டோரி கட்சியைச் சேர்ந்த மக்கள்நலவாதிகளைப் (Tory humanitarians) போன்ற யோசனையும் கருணையும் மிக்க மக்கள், குழந்தைகளிடம் வேலை வாங்குதல், நீண்ட வேலை நேரம் ஆகிய குறிப்பிட்ட குறைகளுக்குத் தனித்தனியாகச் சீர்திருத்தங்களைக் கொண்டுவந்தனர். வேறு சிலர், தனியார் நலன் கோட்பாட்டை அடியோடு தவறு எனக் கூறினர்; சமூகத்தின் தேவைகள் நன்கு பூர்த்தி செய்யக்கூடிய புதியதொரு கோட்பாட்டைத் தயாரிக்க முற்பட்டனர். இங்கிலாந்தில் ராபர்ட் ஓவனும் (Robert Owen), ஃபிரான்சில் செயின்ட் சைமன் (Saint Simon), ஃபூரியர் (Fourier) போன்ற உட்டோபிய சோஷலிஸ்டுகளும் (Utopian socialists), சார்லஸ் கிங்ஸ்லி (Charles Kingsley) போன்ற கிறித்துவ சோஷலிஸ்டுகளும், எல்லாரையும்விட முக்கியமாக, மார்க்ஸ் (Marx), ஏஞ்சல்ஸ் (Engels) ஆகியோரும் அவர்களைப் பின்பற்றுவோரும் இத் தொகுதியைச் சேர்ந்தவர்கள்.

தொழில்கள் வளர வளர, நகரங்களும் வளர்ந்தன. நகர்வாழ் தொழிலாள வர்க்கமும் பெருகியது. எனவே, வேலையின்மை, தொழில் விபத்துகள், பேரத் திறனில் பலமின்மை, சேரி வாழ்க்கை ஆகிய அபாயங்களுக்கு ஆளான மக்களின் எண்ணிக்கையும் நாளுக்கு நாள் பெருகியது. இக் குறைகளைச் சீர்திருத்துவதற்கும், புதுப் பொது உடைமைக் கொள்கைகளுக்கும் மக்களது பெருவாரியான ஆதரவு கிடைக்கக் காரணம் உண்டாயிற்று. சீர்திருத்தங்களைச் செய்து அரசியல் கட்சிகள் தம் ஆதரவைப் பெருக்கிக்கொண்டன. திறமையோடு பேரம்பேச முடியுமாறு உழைப்பாளிகளைத் தொழிலாளர் சங்கங்கள் இணைத்தன; உழைப்பாளிகளின் அரசியல் அக்கறைகளை

3 இதைச் சார்லஸ் (Charles Dickens) கூறியதாக டபிள்யூ. ஜெத்ரோ பிரவுன் (W. Jethro Brown) சொல்கிறார். *The Underlying Principles of Modern Legislation*. New York: E. P. Dutton & Co., 1915.

நிறைவேற்றப் புது.சோஷலிச, தொழிற்கட்சிகள் தோன்றின. பொது வசதித் தொழில்களைக் (public utilities) கட்டுப்படுத்தவும், குழந்தைகள் உழைப்பதைச் சட்டவிரோதமாக்கவும், வேலைச் சூழ்நிலையைச் சீராக்கவும், நுகர்வோருக்குப் பாதுகாப்பு அளிக்கவும் சட்டங்கள் இயற்றப்பட்டன. சில ஆண்டுகள் கழித்துப் பலவகைச் சமூக ஈட்டுறுதித் (social insurance) திட்டங்கள் தோன்றின. அவை : உழைப்பாளிகளுக்கு நஷ்ட ஈடு (workmen's compensation), முதுமை இன்ஷூரன்சு, வேலையின்மை இன்ஷூரன்சு, மற்றும் இறுதியாக ஆரோக்கிய இன்ஸூரன்சு ஆகியவை. சேரி ஒழிப்பு, பொது மக்களுக்கு வீடு கட்டுதல், நாம் முன்னர் அறிந்த, மத்திய பாங்குகளைக் கடன் செலாவணியை நன்கு கட்டுப்படுத்துவதற்காக அமைத்தல் ஆகியவையும் சமூகச் சட்டங்கள் என்ற தலைப்பில் சேர்த்துக் கொள்ளலாம்.

இந்தப் புதிய சட்டங்களில் இரண்டு அம்சங்கள் எல்லாவற்றுக்கும் பொதுவாக இருந்தன. நவீன தொழில், சமுதாயத்தில் வாழும் சூழ்நிலையை அபிவிருத்தி செய்வது அவற்றின் நோக்கம்; இதை அடைவதற்காக, பொருளாதார இயக்கத்தில் அரசாங்கம் முன்னைவிட அதிகமாகக் குறுக்கிடவேண்டியிருந்தது. மாறிய சமுதாயச் சூழ்நிலையும் அச் சூழ்நிலையின் விளைவுகளும் நாட்டு அரசாங்கத்தின் அதிகாரங்களை மேன்மேலும் உபயோகிக்க உறுதியான அடிப்படை ஆயின.

### பொருளாதார நாட்டுப்பற்று (Economic Nationalism)

பொருளாதாரப் போட்டியினால் நாட்டுப்பற்று ஒவ்வொரு நாட்டிலும் அதிகமாயிற்று. இதன் விளைவாக ஒவ்வொரு நாடும் பிறவற்றோடு சாராமல் தனியாக நடவடிக்கைகள் எடுப்பது மேலும் அதிகமாயிற்று. எப்படி இந்த நாட்டு மனப்பான்மை சுமார் 1870-க்குப் பின் காப்புவரிகளை உயர்த்துவதற்கும் காலனிகள் அதிகமானதற்கும் காரணமாக இருந்தது என்பதை முன்னரே பார்த்தோம். முதல் உலகப் போருக்குப் பின் வேறு காரணங்களும் இந்த நாட்டுப் பற்றை பலப்படுத்தின. இயற்கையான காரணம், போரின் விளைவாக ஏற்பட்ட மனத் தாங்கல்கள். செயற்கையான காரணம், போலந்து, பால்டிக் நாடுகள், ஆஸ்திரியா-ஹங்கேரி பேரரசின் வழிவந்த நாடுகள் ஆகியவற்றை ஏற்படுத்தியது. மேலும், போரின்போது, அதில் கலந்துகொண்ட நாடுகள், ஈடுபடாத நாடுகள் இரண்டிலும் போரினால் வருவது நின்றுபோன பொருள்களை உற்பத்தி செய்யப் புதுத் தொழில்கள் ஏற்பட்டன ; அல்லது பழைய தொழில்கள் விரிவடைந்தன. போர் முடிந்ததும், நாட்டுப் பாதுகாப்பு, சுய அக்கறை போன்ற குறிக்கோள்கள் காரணமாக, இந் நாடுகளைவிடச் சிக்கனமாக உற்பத்தி

செய்த பழைய நாடுகளிடமிருந்து, இத் தொழில்கள் பாதுகாக்கப் பட்டன.

உதாரணமாக, தடையிலா வாணிபத்தை ஆதரித்த பிரிட்டன் போர்க் காலத்தில் சில போகப்பொருள்கள்மீது விதிக்கப்பட்ட இறக்குமதி வரிகளை எடுக்காமல் வைத்திருந்ததோடு, போர்ப் படைகளுக்கு அவசியமான பல உருப்படிகள்மீது 'ஆதாரத்தொழில்' (Key Industries); இறக்குமதி வரிகளை ($33\frac{1}{3}$ சதவீதமும், 50 சதவீதமும்) புதிதாக விதித்தது. 1913ஆம் ஆண்டின் அண்டர்வுட் இறக்குமதி வரித் திட்டத்தின்படி (Underwood Tariff) குறைவான வரிகளை விதிக்கும் கொள்கையைக் கைவிட்டு, 1922-ல் புதிதாக உயர்ந்த அளவில் வரிகளை அமெரிக்கா விதிக்கலாயிற்று. ஜப்பான், இந்தியா, ஆஸ்திரேலியா, இலத்தீன் அமெரிக்கா போன்றவற்றில் நான்கு ஆண்டுகள் ஐரோப்பியப் போட்டி பலவகைத் தொழில்களில் இல்லாமற் போகவே உள்நாட்டுத் தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டன. போர் நின்று வாணிபம் மீண்டும் தொடங்கியதும் இந்தப் போர்க் குழந்தைகளில் சில இயற்கை மரணம் எய்தின. ஆனால் பல, பாதுகாப்புக்கு அடம்பிடித்து அதைப் பெற்றன.

பொருளாதாரத்துறையில் நாட்டுப்பற்றின் காரணமாக வாணிபத் தடைகள் உயர்ந்ததோடன்றி, தொழிலாளர்கள் நாடுவிட்டு நாடு புலம் பெயர்தலையும் அது தடுத்தது. புலம்பெயர்வோர் தடைக்குப் பிறகும் பெரும்பாலும் அமெரிக்காவையே நாடி வந்தனர் எனினும், அமெரிக்கா குடிவருவோரின் எண்ணிக்கையைத் தீவிரமாகக் குறைத்தது. 1924-ல் அவர்கள் வரும் நாடுகளின் அடிப்படையில் குடியேறுவோரின் எண்ணிக்கைகளுக்கு அமெரிக்கா உச்ச வரம்பு அளவுகளை நிர்ணயித்தது. இவ் வரம்புகள் வட ஐரோப்பாவுக்குச் சாதகமாக இருந்தன. மக்கள்தொகை அழுத்தம் அதிகமாக உள்ள தென் ஐரோப்பா, கீழை நாடுகள் ஆகியவற்றின் வரம்புகள் குறைவாக இருந்தன. அமெரிக்காவில் 1901–10-ல் ஆண்டுக்குச் சராசரி 8,80,000 பேர்கள் குடிபுகுந்தனர். இத் தொகை 1920-ல் தொடங்கிய பத்தாண்டுகளில் ஆண்டுக்குச் சராசரி 4,11,000 ஆயிற்று.

கடந்த சில பக்கங்களில் நாம் சுட்டிக்காட்டிய மாறுதல்கள் அனைத்தும்—அதாவது, இரண்டாவதான, அனுபவம் குறைந்த உலக நிதிக்கேந்திரமாக நியூயார்க் தோன்றியது ; ஒவ்வொரு நாடும் தனித் தனிப் பணக் கொள்கையைக் கடைப்பிடித்தது ; பொருளாதார விவகாரங்களில் அரசாங்கத்தின் பங்கு அதிகரித்தது ; பொருளாதார நாட்டுப் பற்று ஏற்பட்டது; ஆகியவை அனைத்தும்—நுண்ணிய அமைப்பான பன்னாட்டுப் பொருளாதார அமைப்பைத் தளரச்செய்து அதன் நெகிழ்ச்சியைப் போக்கித் திருத்தவேண்டிய மாறுதல்களுக்கு

ஏற்ப அவை மாறுவதைத் தடுத்தன. இந்த இயக்கம் செய்யவேண்டியிருந்த பணி எப்படி அதிகமாக இருந்தது என்பதை ஆராய்வது நமது அடுத்த வேலையாகும்.

## அமைப்பு மாறுதலின் சுமை

### போர்க் கடன்களும் நஷ்ட ஈடும்

ஃபிரான்ஸ்—பிரஷ்யா போருக்குப் பின் இருந்த வரையிலாவது, உலகப் போருக்கு முன் நடந்த மூலதன இடப்பெயர்ச்சிகள் தனி முதலீட்டுக்காரர்களின் எண்ணப்படி நடந்தன. முக்கியமாக இலாபம் அதிகமாகக் கிடைக்கும் வாய்ப்புகளை நாடி மூலதனம் இடம் பெயர்ந்தது. இம் மூலதன நடமாட்டம் ஆண்டுக்கு ஆண்டு அளவில் மாறியது; காலப்போக்கில் அதன் திசையும் மாறியது; ஆனால், இம் மாறுதல்கள் எப்போதும் கட்டு மீறி வன்மையாக இருந்ததில்லை. கடன் கொடுக்கும் ஒரு நாட்டையும், அதனிடமிருந்து கடன் வாங்கும் ஒரு நாட்டையும் எடுத்துக்கொண்டாலும்கூட, பொதுவாகக் கடன்களின் ஓட்டம் மெதுவாக ஆரம்பிக்கும், படிப்படியாக ஓர் உச்சநிலைக்கு வரும், பின்னர் குறையும்; மூலதன ஓட்டத்துக்கு ஏற்றவாறு மாற செலுத்துநிலைக்கு அவகாசம் தரும்; அல்லது அதைத் திருத்துவதற்குத் தானே ஒரு காரணமாக இருக்கும்.

1918-க்குப் பின் இருந்த நிலை முற்றிலும் மாறானது. ஏனெனில், அப்போது கனமான பன்னாட்டுக் கடன் சுமையைப் போர் விட்டுச் சென்றது. கொடுக்கவேண்டிய நாடு முக்கியமாக ஜெர்மனி. (1921-ல்) அது தரவேண்டிய நஷ்ட ஈட்டுப் பணம் $ 33 பிலியன். இதில் பெரும் பகுதி பிரிட்டனுக்கும் ஃபிரான்சுக்கும் தரவேண்டியிருந்தது. இத்தாலி, ஃபிரான்சு, பெல்ஜியம் நாடுகள் ஒன்றுக்கொன்றும், பிரிட்டனுக்கும் கடன்பட்டிருந்தன. இவ்வெல்லா நாடுகளும் வேறு பலவும் அமெரிக்காவுக்குக் கடன்பட்டிருந்தன. அமெரிக்காவுக்குத் தரவேண்டிய இந்தத் தொகை, போர் ஓய்வு ஒப்பந்தம் கையெழுத்தானபோது, $ 7 பிலியனை விட அதிகம் இருந்தது.

இந்தச் செலுத்தல் தொடர்கள் தம் வழியிலே சீராகப் போக வேண்டுமானால் அதற்கு இரண்டு விஷயங்கள் அவசியமாக இருந்தன. ஆண்டுதோறும் ஜெர்மானிய மக்களிடமிருந்து பெரும் அளவில் மார்க்குகளை வசூலிக்கவேண்டியிருந்தது; இத் தொகைகளைத் தொடர்ந்து வேறு செலாவணிகளாக, அதுவும், பெரும் பகுதியை டாலர்களாக மாற்றவேண்டியிருந்தது.

இவ்விரு பிரச்சினைகளில் முதலாவது, வரியைத் தாங்கும் சக்தியைப்பற்றியது—அது அந்த நாட்டின் உள்நாட்டுப் பிரச்சினை.

இதைப் பொறுத்தவரையில், இந்த நஷ்ட ஈட்டை ஜெர்மனி தரக் கூடிய சக்தி, அதன் அதிகப்பட்ச வரி தாங்கும் சக்திக்கும் அதன் அரசாங்கத்தின் குறைந்தபட்சத் தேவைகளுக்கும் உள்ள வித்தியாசத் துக்குச் சமமாகும். 1925-க்குப் பின் நான்கைந்து ஆண்டுகளில், ஜெர்மானிய நாட்டு வருமானத்தில் அதன் வரிகள் 25 சதவிகிதமும், அதன் நஷ்ட ஈட்டுக் கடமைகள் இவ் வரிகளில் 10 சதவிகிதமும் இருந்தன. அதாவது, தரவேண்டிய நஷ்ட ஈடு நாட்டு வருமானத்தில் 2·5 சதவீதம். இத் தொகை ஒரு பளுவான சுமைதான்; இருந்தாலும் சமாளிக்க முடியாத ஒன்று என்று தோன்றவில்லை.

மாற்றுகைப் பிரச்சினை இதைவிடச் சிக்கலானது, கடினமானது. இத் தொகைகளை ஜெர்மனியில் வசூலித்த பிறகு நஷ்ட ஈடு பெறு வோருக்கு இவற்றை அனுப்பவேண்டும். ஒரு குறுகிய காலம், அல்லது சிறு தொகைகளுக்கு அல்லாமல், பிற காலங்களையும் பெருந் தொகை களையும் எடுத்துக்கொண்டால், அத்தகைய பன்னாட்டு மாற்றுகை களைப் பொருள்களையும் பணிகளையும் அனுப்புவதன்மூலம் தான் செய்யமுடியும். மீண்டும் ஏற்படுத்தப்பட்ட பொன் திட்டத்தின்கீழ், மாற்றவேண்டிய வருடாந்திர நஷ்ட ஈட்டுத்தொகை அளவுக்கு ஜெர்மனி யின் ஏற்றுமதிகள் இறக்குமதிகளைவிட அதிகமாக இருக்குமாறு, ஜெர்மனியில் வருமானங்களையும் விலைகளையும் தாழ்த்தி, நஷ்ட ஈடு பெறும் நாடுகளில் வருமானத்தையும் விலைகளையும் உயர்த்திவிட ஏற்பாடுகளைத் துவக்கவேண்டும்.

ஓரளவுக்கு, ஜெர்மன் மக்களிடமிருந்து மேலும் வரிகளை வசூலித்தது இவ்வியக்கத்துக்கு உதவியது. வரிகளினால் நுகர்வுச் செலவுகள் குறைந்தன; அதனால், பொருள்களும் அவற்றின் உற்பத் திக் காரணிகளும் ஏற்றுமதி செய்யத் தயாராயின; அதேசமயம் ஓரளவு இறக்குமதிகளும் குறைந்தன. ஆனால், இத்தோடு பணம் பெற வேண்டிய நாடுகளில் வருமானமும் செலவுகளும் விரிவடைய வேண்டும். ஒரு கணிசமான அளவுக்குப் பணத்தை ஜெர்மனி அனுப்ப முடிந்திருந்தால் இந்த விரிவு அங்குத் துவங்கியிருக்கும். உள்நாட்டு வருமானத்திலிருந்து சீரமைப்புக்காகச் செலவிடப் பட்டதோடு இத் தொகைகளையும் அவற்றைப் பெற்ற அரசாங்கங்கள் அப்போது செலவழித்திருக்குமானால் வருமானங்கள் அந் நாடுகளில் உயர்ந்திருக்கும்; இறக்குமதிகளும் அதிகரித்திருக்கும். இதனால் நேரிடையாகவும் மறைமுகமாகவும் ஜெர்மானிய ஏற்றுமதிகள் அதிகரித் திருக்கும்.

முதன் முதலில் வாங்கும் சக்தியை அந்நாடுகளுக்கு மாற்றத் தேவையான பொன் அல்லது அன்னியச் செலாவணிச் சேமநிதிகளைப் போதுமான அளவு ஜெர்மனி வைத்திராததுதான் இதற்குத் தடையாக

இருந்தது. மேலும், பன்னாட்டுச் சேமநிதிகள் பெரும் அளவுக்கு நஷ்டமடையாதவாறு டாஸ் திட்டம் (Dawes Plan) ஜெர்மனியைப் பாதுகாத்தது. தன் ஏற்றுமதிகளை மேலும் கவர்ச்சிகரமாக்குவதற்காகப் புதிதாக திடநிலை அடைந்த மார்க்கு நாணயத்தின் மதிப்பைக் குறைப்பதையும் அது தடுத்தது. எனவே, பணத்தை மாற்றும் இயக்கம் செயல்படுவதற்கு அடிப்படையாக அவசியமானது எதுவும் இல்லாமல் போயிற்று.[4]

1920-ல் தொடங்கிய பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்குக் கடனைத் திருப்பித் தரவேண்டிய நாடுகள், அதை வாங்கிக்கொள்ளவேண்டிய நாடுகள் ஆக இரு சாராரையும் போர்க்கடன், மற்றும் நஷ்ட ஈட்டுப் பிரச்சினை தொடர்ந்து கஷ்டப்படுத்தியது. பிரிட்டனுக்கு அதன் நேச நாடுகள் தரவேண்டியதில் சுமார் பாதித் தொகைதான் பிரிட்டன் அமெரிக்காவுக்குக் கொடுக்கவேண்டியிருந்தது. இருப்பினும் 1919-ல் சமாதான மகாநாட்டில் எல்லாப் போர்க் கடன்களையும் ரத்து செய்யவேண்டும் என பிரிட்டன் கோரியது; ஆனால், அதில் வெற்றிபெறவில்லை. மூன்று ஆண்டுகள் கழித்துதான், அமெரிக்காவுக்குத் தரவேண்டிய அளவுக்குத் தனக்குப் பணம் தரவேண்டியவர்கள் கொடுக்கவேண்டிய கடன்களைக் குறைக்க பிரிட்டன் முன் வந்தது. ஆனால், இந்த உடன்படிக்கை முயற்சிகளை அமெரிக்கா பிடிவாதமாக எதிர்த்தது; நேச நாடுகளிடையே உள்ள போர்க் கடன்களுக்கும் ஜெர்மனியின் நஷ்ட ஈட்டுக்கும் சம்பந்தம் ஒன்றும் இல்லை என்று அமெரிக்கா இடைவிடாது கூறியது. அமெரிக்காவின் நடத்தையைச் சுருக்கமாக ஜனாதிபதி கூலிஜ் (President Coolidge) அவர்களின் பின்வரும் புகழ்பெற்ற கூற்று விவரிக்கிறது: 'அவர்கள் அந்தப் பணத்தைக் கடனாகப் பெற்றார்கள், இல்லையா?'' (They hired the money, didn't they?)

[4] ஜெர்மானிய மாற்றுகைப் பிரச்சினையைப்பற்றிய பூரண ஆராய்ச்சியை 1929-ல் வெளியான கீன்ஸ் (Keynes), ஓலின் (Ohlin) விவாதத்தில் காணலாம். ஜெர்மனியின் அடக்கச் செலவுகள் குறைந்து அதன் ஏற்றுமதிகள் மேலும் தாங்கத்தக்கவை ஆகவேண்டிய அவசியத்தை கீன்ஸ் வலியுறுத்தினார்; திருத்த இயக்கத்தின் பழமையான அம்சங்கள் இவை. மாறாக வாங்கும் சக்தியை முதலில் மாற்றுவதனால் பன்னாட்டுத் தேவைகளில் ஏற்படும் விளைவைப்பற்றி ஓலின் வலியுறுத்தினார். ஆனால் இறுதியில், கீன்ஸ் சுட்டிக்காட்டியபடி வாங்கும் சக்தியை மாற்றும் வழி இருக்கவில்லை. 'ஜெர்மனி பெரும் அளவில் பொன்னை ஏற்றுமதி செய்ய முடிந்திருந்தால், அல்லது வெளிநாட்டு மத்திய பாங்குகள் தம் சேமநிதிகளாகப் பொன்னுக்குப் பதில் ஜெர்மனியில் இருக்கும் வெளிநாட்டு நிலுவைகளை ஏற்றுக்கொண்டிருந்தால், நிலைமை வேறுவிதமாக இருக்கும்.' (J. M. Keynes, 'Mr. Keynes's Views on the Transfer Problem: III, a Reply,' *Economic Journal*, XXXIX (1929), பக்கங்கள் 404–8.) இவ்விரு மூலக் கட்டுரைகளும் *Readings in the Theory of International Trade*-ல் மீண்டும் அச்சிடப்பட்டுள்ளன; ஆனால், பின் தொடர்ந்த விவாதம் அதில் இல்லை.

ஜெர்மன் நஷ்டஈட்டைத் தீர்க்க ஓர் ஏற்பாட்டை டாஸ் திட்டம் செய்து சுமார் மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர்தான், அதாவது 1927-க்குப் பின்தான், கொடுக்கவேண்டிய தொகைகளையும் செலுத்த வேண்டிய முறைகளையும்பற்றி இதில் சம்பந்தப்பட்ட எல்லா நாடுகளும் ஒரு முடிவான ஒப்பந்தத்துக்கு வந்தன.[5] முதல் தொகைகள் பெரும் அளவுக்குக் குறைக்கப்பட்டன ; செலுத்தல்கள் 62 ஆண்டுகளில் அத் தொகையைப் பிரித்துச் சிறிது சிறிதாக ஆண்டுதோறும் செலுத்துவது என்று ஏற்பாடாயிற்று. முன்னர் இருந்த குழப்பமும் மனத்தாங்கல் களும் போய் ஓரளவுக்கு நஷ்ட ஈடுபற்றிய விஷயங்கள் நிச்சயமாயின. இருந்தபோதிலும், முன்னர் போரில் ஈடுபட்டிருந்த ஐரோப்பிய நாடு களின் செலுத்தல் சுமை இன்னமும் இருந்தது; உற்பத்தி செய்யப் பயனுகக்கூடிய சொத்துகளுக்காக வாங்கிய கடன் சுமை அல்ல இது ; ஆனுல், வெறும் சத்தற்ற கடன்.

**பன்னுட்டு முதலீடு**

போருக்குப் பின் பன்னுட்டு முதலீடுகள் மீண்டும் ஏற்பட்டன. அந்தப் பத்தாண்டுகள் முடியும் தருவாயில் அமெரிக்கா, இங்கிலாந்து, ஃபிரான்சு மூன்று நாடுகளும் ஒவ்வொன்றும் நிறைய தொகைகளை வெளிநாடுகளில் முதலீடு செய்திருந்தது. 1919-க்கும் 1929-க்கும் இடையில் அமெரிக்கா வெளிநாடுகளில் முதலிட்ட தொகை சுமார் $ 7 பிலியன் ; ஃபிரான்சு இட்டது $ 600 மிலியன் ; பிரிட்டனுடைய வெளி நாட்டு முதலீடுகள் கால்பாகத்துக்குக் குறைந்திருந்தவை, மீண்டும் போருக்கு முன் இருந்த பழைய அளவான சுமார் $ 19 பிலியனை எட்டின.

பல நாடுகளுக்கு அவசியமாக இருந்த அன்னியச் செலாவணியை 1920–29-ல் கொடுக்கப்பட்ட பன்னுட்டுக் கடன்கள் அளித்தபோதும், வருமானத்துக்கும் அவற்றுக்கும் இருந்த விகிதாசாரம் போருக்கு முன் இருந்த அளவில் இல்லை ; இக் கடன்கள் அப்போதிருந்த அளவுக்கு உற்பத்திக்காக வாங்கப்பட்டவையும் அல்ல. முக்கியமாக இருப்புப் பாதைகள், பொது வசதித் தொழில்கள், பிறவற்ருேடு ஒப்பிட்டால் வளர்ச்சி பெருத பிராந்தியங்களின் உற்பத்தியைப் பெருக்க மூலதனப் பொருள்கள் ஆகியவற்றுக்காக முக்கியமாக வாங்கப்படுவதற்கு பதிலாக, இக் கடன்களின் பெரும்பகுதி ஐரோப்பாவின் நாட்டு அரசாங்கங்களுக்கும், நகராட்சி மன்றங்களுக்கும், முக்கியமாக ஜெர்மனியால் வாங்கப்பட்டது. அங்கு இக் கடன்களைக் கட்டடங் களுக்கும் பிற பொதுக் கட்டுமான வேலைகளுக்கும் பயன்படுத்தினர்.

[5] ரஷ்யாவுக்கும் அது பணம் தரவேண்டிய முக்கிய நாடுகளுக்கும் இடையே எவ்வித ஒப்பந்தமும் செய்யப்படவில்லை. சோவியத் அரசாங்கம் ஃசார் அரசாங்கம் (Czarist Government) வாங்கிய கடன்களைப் பொறுப்பு ஏற்க மறுத்துவிட்டது.

இவையும் உபயோகமானவைதான். எனினும், இவை உற்பத்தியைப் பெருக்குவதற்கு அதிகமாக உதவவில்லை. முதலீடுகளால் கடன்களின் வட்டியைத் தரத் தேவையான அன்னியச் செலாவணியைச் சம்பாதிப்ப தற்காக விற்கக்கூடிய உற்பத்தி ஏதும் உண்டாகவில்லை. தவிர, முக்கியமாக 1925-க்குப் பிறகு, இந்த நெடுங்கால முதலீடுகளோடு பெரும் அளவுக்குக் குறுகியகாலக் கடன்களும் சேர்ந்துகொண்டன. இக் குறுகியகாலக் கடன்களில் பெரும்பகுதி உண்மையில் நெடுங்காலத் திட்டங்களுக்காகப் பயன்படுத்தப்பட்டன. இக் குறுகியகாலக் கடன் களால் பொருளாதாரத்தின் திடநிலை குன்றியது; கடன்களைத் தவணைக் காலத்தில் திருப்பித் தர முடியாமற் போகக்கூடிய அபாயம் இதில் அதிகமாக இருந்தது.

ஒரே ஒரு முக்கியமான விஷயத்தில், 1920-29 காலத்துப் பன்னாட்டுக் கடன்கள், உண்மையில் இல்லாத திடநிலையும் வலிமையும் இருப்பதுபோன்ற ஒரு பொய்த்தோற்றத்தை ஏற்படுத்தின. சில நாடுகள் புதுக்கடன்களை வாங்கி அவற்றைக்கொண்டு பழைய கடன் களின் வட்டியைக் கட்டின. இதுபோலச் செய்துதான் ஜெர்மனி தான் செலுத்தவேண்டிய செலுத்தல்களைச் செலுத்த முடிந்தது. நஷ்ட ஈட்டுக் காக அந் நாடு எவ்வளவு கொடுத்ததோ அதைப்போல ஏறக்குறைய மூன்று மடங்கை வெளிநாடுகளில் அது கடன் வாங்கியது. அமெரிக்கா வுக்குத் தங்கள் போர்க் கடன்களை ஐரோப்பிய அரசாங்கங்கள் செலுத்திய தும் இவ்வாறுதான்.

### தொழில், வாணிப அமைப்பில் மாறுதல்

பல்வேறு நாடுகளின் தராதரத் தொழில் வலிமையில் உலகப் போருக்குப் பின் ஏற்பட்ட மாற்றத்தினுல் பன்னாட்டுப் பொருளாதாரத் தில் திருத்தம் செய்யவேண்டிய சுமை ஒன்று மேலும் ஏற்பட்டதோடு, அதே மாற்றம் பன்னாட்டுப் பொருளாதாரம் அச் சுமையைத் தாங்க முடியாதவாறும் செய்தது. போரும் அதன்பின் ஏற்பட்ட பொருளா தாரச் சீர்குலைவும் இவற்றுக்குச் சில காரணங்கள். மற்றொரு காரணம் பொருளாதார வளர்ச்சியின் நீண்டகாலப் போக்கில் இருந்த வித்தி யாசங்கள்.

போரில் பங்குகொண்ட ஐரோப்பிய நாடுகளின் தொழில்கள், போரின் விளைவாக ஏற்பட்ட தீர்க்க முடியாத தேவைகளைத் தீர்க்க முயன்று, அமைதிகாலப் பொருள்களை விட்டுப் போர்க்கருவிகளையும், போருக்கு வேண்டிய பொருள்களையும் தயாரிக்கவேண்டியதாயிற்று. எனவே, ஏற்றுமதிகள் குறைந்தன. பிரிட்டனின் ஏற்றுமதி, போருக்கு முன் இருந்ததில் சுமார் பாதி ஆயிற்று. இந்த அளவில் ஏற்றுமதி செய்வதுகூடக் கடினமாகவும் நிச்சயமற்றும் இருந்தது. ஏனெனில், ஜெர்மனியின் நீர்மூழ்கிக் கப்பல்கள், தடையின்றிப் போரிட்டு வியா

பாரம் நடப்பதில் இடைவிடாது குறுக்கிட்டுக்கொண்டிருந்தன. போர் முடிந்த பிறகு நின்றுபோன பழைய வாணிப உறவுகளைப் புதுப் பித்தலில் இருந்த கஷ்டங்களும், பணவீக்கத்தாலும் கப்பல்களை இழந்ததாலும் வாணிபத்தின்மீது ஏற்பட்ட தடங்கல்களோடு சேர்ந்து கொண்டன.

இந்த எட்டு அல்லது அதற்கதிகமான ஆண்டுகளில், ஐரோப்பாவி லிருந்து இனிக் கிடைக்கவே கிடைக்காத, அல்லது விட்டு விட்டு எப்போதாவது நிச்சயமில்லாமல் கிடைக்கக்கூடிய பொருள்களைப் பல நாடுகள் தாமே செய்யத்தொடங்கின. இந்த அபிவிருத்திபற்றி முன்னரே நாம் குறிப்பிட்டோம். இது மிகவும் பரவலாக இருந்தது. இதற்கு மாற்றாக வேண்டுமாயின், நடுநிலை நாடுகளிடம், முக்கியமாகப் போர் நடக்கும் பிராந்தியங்களுக்கு வெளியில் உள்ளவற்றிடம் பொருள்களுக்கு ஆர்டர் கொடுக்கலாம். இத்தகைய விற்பனைகள்மூலம் விசேஷமாக ஜப்பான் நன்மை அடைந்தது. 1913-க்கும் 1921–25-க்கும் இடையே ஜப்பானின் தொழிற்சாலைப் பொருள் உற்பத்தி இருமடங்கு ஆயிற்று. இது ஐரோப்பிய நாடுகளுக்கு முழுமையாக நஷ்டம் அல்ல. ஏனெனில், அவற்றுடைய வாடிக்கைக்காரர்கள் பொருளாதார வளர்ச்சி பெற்றால் அந் நாடுகளில் வருமானம் பெருகும்; அவை மேலும் முன்னை விட அதிகமாக இறக்குமதி செய்யும் சக்தியைப் பெறுகின்றன. ஆனால், அந் நாடுகளுக்கு விற்கும் வாய்ப்பை ஐரோப்பிய நாடுகள் பயன் படுத்திக்கொள்ளவேண்டுமாயின் எந்தெந்தப் புதுப்பொருள்களுக்குத் தேவை அதிகமாகிக்கொண்டிருக்கிறதோ அவற்றை வேகமாக அளிக்க அந் நாடுகள் தம்மைத் தயார் செய்துகொள்ளவேண்டும்.

### பிரிட்டன்மீது அழுத்தம்

வெளிநாடுகளில் தொழில்கள் வளர்ந்ததன் விளைவாக பிரிட்டன் கடுமையாக பாதிக்கப்பட்டது. தூரக்கிழக்கு நாடுகளில் ஜப்பானும் இந்தியாவும் உற்பத்திசெய்த பருத்தித் துணிகள் பிரிட்டிஷ் துணி விற்பனையைக் குறைத்துக்கொண்டே வந்தன. 1913-ல் இருந்த அளவில் 10 சதவிகிதமாக இந்த விற்பனை 1937-ல் இருந்தது. பருத்தியைப்போலவே கம்பளி நெசவுத் தொழிலும், வெளிநாடுகளில் பாதுகாப்பளிக்கப்பட்ட அவ்வந்நாட்டுத் தொழில்களின் போட்டியாலும் அதைவிடச் சிறிது குறைந்த அளவுக்கு வளர்ந்து வந்த ஜப்பானின் போட்டியாலும் பெரு நஷ்டமடைந்தது. பிரிட்டனின் கம்பளி நெசவு களின் ஏற்றுமதி 1913-ல் இருந்த 219 மிலியன் சதுர கஜத்திலிருந்து 1929-ல் 156 மிலியன் சதுர கஜமாகக் குறைந்தது. இதே காலத்தில் கரி ஏற்றுமதிகள் ஏறக்குறைய 20 சதவிகிதம் குறைந்தன. ஏற்கெனவே, எரிபொருளை ஜாக்கிரதையாகப் பயன்படுத்தியதாலும், பெட்ரோலியமும் நீர்வழி மின்சாரமும் பயன்படுத்தப்பட்டதாலும், தேவை குறைந்திருந்த சமயத்தில் புதிதாக ரஷ்யா, சைனு, இந்தியா,

தென் ஆஃப்பிரிக்கா ஆகிய நாடுகளில் வெட்டப்பட்ட சுரங்கங்களின் போட்டி பிரிட்டனின் கரித்தொழிலை மேலும் பாதித்தது. இரும்பு எஃகுத்தொழில் எப்படியோ தன் பழைய நிலையைக் காப்பாற்றி வந்தது; அதைச் செய்வதற்காக மேலும்மேலும் பூர்த்திசெய்த பொருள்களை உற்பத்தி செய்வதில் அது ஈடுபட்டது. இப் பொருள் உற்பத்தியில்தான் அதன் உற்பத்திக்குறை குறைவாக இருந்தது. ஜெர்மனியிலும் அமெரிக்காவிலும் ஏற்பட்ட பெரிய புதிய ஆலைகளின் போட்டியால் பிரிட்டன் முன்போலத் தேனிரும்பை ஏற்றுமதி செய்ய முடியவில்லை.[6]

நெடுங்காலமாக ஏற்றுமதி செய்துவந்த ஆதாரப்பொருள்களின் தேவை குறைந்து, புதுப் போட்டியாளர்களுக்குப் பல அங்காடிகளை இழந்துவிட்ட நிலையில் தன் உற்பத்திச் சாதனங்களைப் பயன் படுத்துவதில் ஒரு பெரிய மாற்றத்தை பிரிட்டன் செய்யவேண்டி யிருந்தது. ஒரு மிகை மதிப்புடைய செலாவணியாலும், இதன் விளைவாகக் கடன் செலாவணியைக் கட்டுப்படுத்தும் கொள்கையைக் கடைப்பிடித்ததாலும் பாதிக்கப்பட்டபோதும் இப் பணியை பிரிட்டன் குறிப்பிடத்தக்க வெற்றியோடு செய்தது. போருக்கு முன் இருந்ததை விட 1930-ல் பருத்தி, கம்பளி நெசவுகள், கரி ஆகியவற்றின் உற்பத்தி குறைவாக இருந்தபோதிலும், மோட்டார் கார்கள், மோட்டார் சைக்கிள்கள், மின்சார எந்திரங்களும் சாதனங்களும், இரசாயனப் பொருள்கள் ஆகிய தொழில்கள் மிக வேகமாக வளர்ந்தன. நிலக்கரி, துணி ஏற்றுமதிக்குப் பதிலாக இவையும் பிற பொருள்களும் ஏற்றுமதி ஆயின. இதன் விளைவாக 1929-ல் பிரிட்டனுடைய ஏற்றுமதிகளின் மதிப்பு 1913-ல் இருந்ததைவிட 15 சதவிகிதம் அதிகமாயிற்று.

அப்படி இருந்தும் பிரிட்டனது ஏற்றுமதிகளும் அதைவிடச் சிறிது குறைந்த அளவில் ஐரோப்பிய நாடுகளின் ஏற்றுமதிகளும், பிற நாடுகளோடு ஒப்பிட்டால், தராதர அளவில் குறைந்தன. பிரிட்ட னுடைய ஏற்றுமதிகள் 15% அதிகரித்தது பிற நாடுகளது ஏற்றுமதி களோடு ஒப்பிட்டால் குறைவுதான்; அதேபோலத்தான் பெல்ஜியத்தின் 22 சதவிகிதமும். ஜெர்மனி ஓரளவுக்குப் பரவாயில்லை. அதன் ஏற்று மதிகள் 33 சதவிகிதம் உயர்ந்தன. ஃபிரான்ஸின் ஏற்றுமதிகள் 50 சத விகிதம் அதிகரித்து உலக ஏற்றுமதிகளில் அதன் விகிதாசாரம் மாறுமல் பார்த்துக்கொண்டது. ஐரோப்பாவைப்போலன்றி, கனடா வும் ஜப்பானும் அமெரிக்காவும் வெகுவேகமாக முன்னேறின. 1913-க்கும் 1929-க்கும் இடையே கனடாவின் ஏற்றுமதிகள் மூன்றரை

[6] இந்தப் பத்தியில் உள்ள விவரங்கள் பின்வரும் நூலினின்று எடுக்கப்பட்டன: Alfred E. Kahn, *Great Britain and the World Economy*, அத்தியாயம் VI, Copyright 1946 by the Columbia University Press, New York.

மடங்கு ஆயின. ஜப்பானுடைய ஏற்றுமதிகள் மூன்று மடங்காயின; அமெரிக்காவுடையது இரு மடங்காயிற்று. கண்டங்கள்வாரியாக உலக ஏற்றுமதிகளின் பங்கீட்டைச் சதவிகிதத்தில் கூறினல் அதில் பின்வரும் மாற்றம் ஏற்பட்டது:

| 1913-ல் | | 1929-ல் | |
|---|---|---|---|
| வட அமெரிக்கா | 15·8 | வட அமெரிக்கா | 19·5 |
| ஐரோப்பா | 50·9 | ஐரோப்பா | 47·4 |
| ஆசியா | 12·5 | ஆசியா | 14·9 |
| பிற நாடுகள் | 20·8 | பிற நாடுகள் | 18·2 |

தொடர்ந்து ஐரோப்பாவே உலகின் ஏற்றுமதிகளில் முதலிடம் வகித்தாலும், அதன் பங்கு குறைந்தது. மேலும், 1920–29-ல் ஏற்பட்ட மாறுதல்கள் அத்துடன் நிற்காமல் மேலும் தொடர்ந்தன. இதை நாம் பார்க்கப்போகிறோம்.

### அமெரிக்காவின் ஆதிக்கம் அதிகமாவது

உலகில் ஏற்பட்டுக்கொண்டிருந்த தொழில்துறை மாறுதல்களில் முக்கியமானதும் கவனிக்கத்தக்கதுமான அம்சம், அமெரிக்காவின் முக்கியத்துவம் அதிகரித்துக்கொண்டே வந்ததாகும். 1870–1913 காலத்தில் உற்பத்தித் துறையில் அமெரிக்கா பிரிட்டனை மீறியது. உலகத்தின் தொழிற்சாலை உற்பத்திகளில் அதன் பங்கு 23-லிருந்து சுமார் 36 சதவிகிதத்துக்கு இந்தக் காலக்கூற்றில் உயர்ந்தபோது, பிரிட்டனின் பங்கு சுமார் 32-லிருந்து 14 சதவிகிதமாகக் குறைந்தது. (ஜெர்மனியின் பங்கு 13-க்குச் சற்று அதிகமாக இருந்தது, உயர்ந்து 16-க்குச் சற்றுக் குறைவாக மாறியது). ஓர் இளம் நாட்டின் வேகமான பொருளாதார வளர்ச்சியை இக் குறிப்பிடத்தக்க மாறுதல் பிரதிபலிக்கிறது; இவ் வளர்ச்சிக்குப் பின்வரும் காரணங்களைக் கூறலாம்: இயற்கையாக மக்கள்தொகை நிலையாக அதிகரித்ததோடு பெரும் அளவில் வெளிநாடுகளிலிருந்து மக்கள் அமெரிக்காவில் வந்து குடியேறினர். மூலதனச் சேர்க்கையும் முதலீடும் வேகமாக நடந்தன. மக்களின் தொகையும் வருமானமும் அதிகமாக இருந்தால் தொழிற்சாலைப் பொருள்களை உள்நாட்டில் உற்பத்திசெய்யும் வாய்ப்புகள் மேலும்மேலும் அதிகமாகின்றன; இவ் வாய்ப்புகள் முழுமையாக உபயோகிக்கப்பட்டன.

1920 தொடங்கிய பத்து ஆண்டுகளில் மொத்த மக்கள்தொகை, மக்கள் குடியேறி வந்ததாலும் இயற்கையான பெருக்கத்தாலும் 106 மிலியனிலிருந்து 123 மிலியனுக உயர்ந்தபோதிலும், இம் மக்கள்

தொகைப் பெருக்கம் அந்தப் பத்து ஆண்டுகளுக்குமுன் வளர்ச்சிக்குக் காரணமாக இருந்த அளவுக்கு அந்தப் பத்து ஆண்டுகளில் காரணமாக இல்லை. முதலீடுதான் பொருளாதார விரிவின் விசையார்ந்த காரணம். இது மிகமிக உயர்ந்த அளவில் தொடர்ந்து இருந்தது. 1919-லிருந்து 1929 வரை மொத்த நாட்டு ஆக்கத்தில் சராசரி 20 சதவிகிதமாக மொத்த மூலதனச் சேர்க்கை இருந்தது. தொழில்நுட்ப வளர்ச்சியும் முன்னேறியது. அதை முக்கியமாக, புதுப் பொருள்களிலும் பழைய வற்றில் ஏற்பட்ட அபிவிருத்திகளிலும் பார்க்க முடிந்தது. எனவே, அதே சமயத்தில் தொழிற்சாலை உற்பத்தி 51 சதவீதம் உயர்ந்ததில் ஆச்சரியமில்லை. • இந்தக் காலத்தில்தான் மோட்டார் வண்டித் தொழில் முழு வளர்ச்சி பெற்றது. அதன் காரணமாகப் பெட்ரோலியம் எடுப் பதும், சுத்திகரிப்பும், டயர் (tire) உற்பத்தியும் வளர்ந்தன. இதே காலத்தில் மின்சார சாதனங்களின் உற்பத்தியும் அவற்றை இயக்கும் மின்சாரச் சக்தியின் உற்பத்தியும்கூட இருமடங்குக்குமேலாயின. வேறு எந்த நாட்டிலும் இந்த வேகத்தில் தொழில்வளர்ச்சி நடக்க வில்லை. இதற்கு அடுத்தபடியாகத் தொழில்வளர்ச்சி வேகம் இருந்த நாடுகள் கனடாவும், ஜப்பானும், தென் ஆஃப்பிரிக்காவும். இவை ஒவ் வொன்றும் அமெரிக்காவைவிட மிகச் சிறிய தொழில் அமைப்பை அடிப் படையாகக்கொண்டு வளரத் தொடங்கின.

இதன் காரணமாக, ஆலை உற்பத்திப் போட்டியில் பிற நாடுகளை விட அமெரிக்கா மேலும் முன்னறியது. 1926-29-ல் மொத்த உலக உற்பத்தியில் அமெரிக்கா 42·2 சதவிகிதம் உற்பத்தி செய்தது; ஜெர்மனி 11·6 சதவிகிதம் செய்தது; பிரிட்டன் 9·4 சதவிகிதம்தான். பிற மதிப்பீடுகளும் இதே கதையைத் தான் சொல்லுகின்றன. ஒன்பது முக்கியமான கச்சாப் பொருள்களையும் உணவுப் பெருள்களையும் உப யோகித்த பதினைந்து மிக முக்கியமான வணிக நாடுகளில் அமெரிக்கா வின் பங்கு 39 சதவீதம். தன்னுடைய போட்டி நாடுகள் உள்பட இருபத்து மூன்று நாடுகளின் நாட்டு வருமானத்துக்கு அமெரிக்காவின் நாட்டு வருமானம் சமம். இதுமட்டுமன்றி, 1920-ல் தொடங்கிய பத் தாண்டுகளில் அமெரிக்கா ஏற்றுமதிகளிலும் முதலீடு செய்வதிலும் உலகத்தில் முதலிடம் வகித்தது. இவற்றைக் கவனித்தால் அமெரிக்கா பெற்றிருந்த முதன்மையான இடம் குறிப்பாகத் தெரியும்.

இதன் பொருள் என்ன? தொழிற்சாலை உற்பத்தியிலும் கடன் கொடுப்பதிலும் உலகில் முதலிடத்தை அமெரிக்கா வகித்தது. உலகின் இருபெரும் வணிக நாடுகளில் அமெரிக்கா ஒன்று. எனவே, அமெரிக்கா வின் பொருளாதார உடல்நிலையும் பொருளாதாரக் கொள்கைகளும், அந் நாட்டுக்குப் பொருள் அளிப்பவர்களுக்கும், அந் நாட்டிலிருந்து பொருள் வாங்குவோருக்கும், அந் நாட்டுக்குக் கடன்பட்டவருக்கும் மிகமிக முக்கியமாக இருந்தன.

அமெரிக்க அங்காடியில் சுலபமாக விற்கக்கூடிய நிலைமையும், அமெரிக்க வருமானமும், வேலை நிலையும் திடநிலையில் இருப்பதும், அமெரிக்கக் கடன்கள் ஒரே சீராக வருவதும் முக்கியம்மட்டுமல்ல; அத்தியாவசியமாக இருந்தன. அமெரிக்க இறக்குமதி வரிகளில் திடீரென ஒரு மாறுதல் ஏற்பட்டாலோ, அமெரிக்கா கடன் கொடுப்பதில் ஏறுமாறாக இருந்தாலோ, அந் நாட்டின் தொழிலும் வணிகமும் திடநிலையற்று இருந்தாலோ உலகெங்கும் பொருளாதார வாழ்க்கை சீர்குலையும். திடீரென அமெரிக்கா பெற்ற இத் தலைமையிடம் அதன்மீது பெரும் பொறுப்பைச் சுமத்தியது. துரதிருஷ்டவசமாக, இப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள அமெரிக்கா தயாராக இல்லை.

**விவசாயத்தில் மிகை உற்பத்தி**

பல புது நாடுகளில் ஏற்பட்ட தொழில் வளர்ச்சி காரணமாக உலகப் பொருளாதாரத்தில் சமநிலையற்ற நிலைமை ஏற்பட்டதென்றால், அதைவிட அதிகமாக விவசாய உற்பத்தி வளர்ந்ததனால் திடநிலை கெட்டது. 1914-ம் ஆண்டின் போர், பல கச்சாப் பொருள்களுக்கும், சில உணவுப் பொருள்களுக்கும் தேவையை மிகவும் அதிகமாக்கியது. அதே போர் காரணமாக, முக்கியமாகக் கோதுமையையும் சர்க்கரையையும் அதிகமாக அளித்துவந்த நாடுகள் உற்பத்தியிலிருந்து நீக்கப்பட்டன. அல்லது உலக அங்காடிகளுடன் அவற்றின் தொடர்பு அறுந்தது. எனவே, அருகிலுள்ள பிராந்தியங்களில் உற்பத்தி உயரலாயிற்று. அமைதி மீண்டும் ஏற்பட்டதும், பழைய உற்பத்திப் பிராந்தியங்களிலிருந்து அளிப்புகள் படிப்படியாக மீண்டும் வரத் தொடங்கின. ஆனால், புதிதாக உற்பத்தியைத் தொடங்கிய நாடுகள் போட்டியினின்று விலகவில்லை. எனவே, சரக்கு இருப்புகள் சேர்ந்தன; விலைகள் இறங்குமுகம் ஆயின; விவசாயிகள் குறைப்பட்டனர்.

ரப்பர், கோதுமை, சர்க்கரை, காப்பி ஆகியவற்றை உற்பத்தி செய்யும் நாடுகள் இந் நிலைமையைச் சமாளிக்கப் பலவிதமான கட்டுப்பாட்டுத் திட்டங்களை நிறுவின. இத் திட்டங்களின் அமைப்புகள் மாறுபட்டபோதிலும் இவை அனைத்திலும் பொதுவாக ஒரு குறை இருந்தது. மொத்த உற்பத்தியாளர்களின் ஒரு பகுதியைத்தான் கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்த முடிந்தது; ஆனால், சாதாரணமாக அவர்களின் பங்கு பெரும்பான்மையானதாக இருந்தது. கட்டுப்படுத்தப்பட்ட பிராந்தியங்களுக்கு வெளியே உற்பத்தியைப் பெருக்குவது இலாபகரமாக இருந்ததனால் ஒவ்வொரு திட்டமும் சரிந்தது. உதாரணமாக, ரப்பர் கட்டுப்பாடு மலேயாவுக்குப் பொருந்தியது; ஆனால், டச்சுக் கிழக்கிந்தியத் தீவுகளில் மேலும் ரப்பர் மரங்கள் பயிரிடப்பட்டமையால், இந்தக் கட்டுப்பாடு பயனற்றுப் போயிற்று. காப்பிக் கட்டுப்பாடு பிரேஜிலைக் கட்டுப்படுத்தியது; ஆனால்,

கொலம்பியா, வெனிஸுவேலா, மற்றும் வேறு பிராந்தியங்களில் உற்பத்தி வேகமாகப் பெருகியது. கரும்புச் சர்க்கரை உற்பத்தியாளர்கள் கட்டுப்பாட்டைக் கொண்டுவந்தனர். ஆனால், காப்பு வரிகளும், பண உதவிகளும் ஆதரிக்க, பீட் கிழங்குச் சர்க்கரை உற்பத்தி தொடர்ந்து பெருகியது.

இவ்வாறு, சுமார் 1929-ல் முக்கியமான விவசாயப் பொருள்களிலும், மரம், செம்பு, நைட்ரேட்டுகள் போன்ற சில கச்சாப் பொருள்களிலும் மிகை உற்பத்தி ஏற்பட்டதன் காரணமாக உலகப் பொருளாதாரத்தின் திடநிலை அகன்று, சீராக்கப் பல ஆண்டுகள் பிடிக்கக்கூடிய ஒரு சம நிலைக் கேடு அதன் அமைப்பிலே ஏற்பட்டது.

**உலக நிலைமை : 1929**

1919–29 ஆகிய பத்தாண்டுகளில் ஏற்பட்ட மாற்றங்களை மீண்டும் பார்ப்போமானால், முக்கியமாக ஏற்பட்ட நன்மை, முதல் உலகப் போரின் சீர்குலைவுக்குப் பின்னர், செயலாற்றக்கூடிய பன்னாட்டு அமைப்பு ஒன்று மீண்டும் நிறுவப்பட்டதாகும். முன்னர் இருந்ததோடு ஒப்பிட்டால் உலகின் பணச் செலுத்தல் ஏற்பாடுகளின் திறன் சிறிது குறைவாக இருந்தாலும், அவை இன்னமும் உண்மையில் பன்னாட்டு ஏற்பாடுகளாக இருந்தன. அநேகமாக எல்லாச் செலாவணிகளும் ஒன்றோடொன்று திடமான விகிதங்களில் மாற்றக்கூடியவையாக இருந்தன. எனவே, ஒரு திறந்த, பலமுக வாணிப அமைப்புத் தொடர்ந்து நடைபெறுவது சாத்தியமாயிற்று. உலகப் போருக்குமுன் இருந்ததைவிட இறக்குமதி வரிகள் அதிகமாகத்தான் இருந்தன ; அந்த அளவுக்குப் பன்னாட்டு சிறப்புத் தேர்ச்சிக்கான வாய்ப்புகளை முழு அளவுக்குப் பயன்படுத்த முடியவில்லைதான். எனினும் வாணிபம் பெரிய அளவில் நடந்தது ; வளர்ந்துகொண்டே இருந்தது ; அன்றி, ஒருசில சிறு விதிவிலக்குகளை விட்டுவிட்டால், குறிப்பாக அடக்குமுறைக் கருவிகளான நேரிடையாக அளவு வரம்பு குறிக்கும் கட்டுப்பாடுகளால் வாணிபம் பாதிக்கப்படவில்லை. மிகவும் தேவைப்பட்ட அன்னியச் செலாவணியைப் பெரும் அளவுக்கு மீண்டும் பன்னாட்டுக் கடன்கள் அளிக்கலாயின.

இருந்தபோதிலும் மிகவும் கஷ்டத்துடன் மீண்டும் அமைத்த பன்னாட்டுப் பொருளாதாரத்தைப் பல தொல்லைகள் பாதித்தன. புதிய பொன் திட்டம் பழையதைவிடத் திறங் குறைவாக இருந்தது. பொன்னுகச் செலாவணியை மாற்றும் குறிக்கோள் கைவிடப்பட்டது. அதற்குப் பதிலாக நாட்டு நலனைப் பொறுத்தவரையில் இசைந்தவையும் பன்னாட்டு நலனைப் பொறுத்தவரையில் நல்லவைதானா என்பது சந்தேகமானவையுமான வழக்கங்களை நாடுகள் கடைப்பிடித்தன. பொருளாதாரத்தில் அரசாங்கத்தின் பங்கு அதிகமானதும், பொருளாதார நாட்டுப் பற்று அதிகரித்ததும் நாடுகள் மேலும் பணச்

சுதந்திரத்தை நாடியதற்குக் காரணமாக இருந்தன. இதே சக்திகள், வேலைகள், வரி விதிப்பு, வாணிபம், மக்கள் குடிபுகுவது போன்ற விஷயங்களிலும் நாடுகள் தம் சுய நன்மைக்கு ஏற்றவாறு நடந்ததற்குக் காரணமாயின. நஷ்ட ஈடாகவும் போர்க் கடனாகவும் இருந்த சத்தற்ற பெரிய சுமையைச் சமாளிக்க எவ்வாருயினும் பணத்தைச் சேகரிக்க வேண்டியிருந்தது. அதைச் செலுத்துநிலைகளுக்கு ஏற்றதாகச் செய்ய வேண்டியிருந்தது. அப்போதைக்கு இருந்த பிரச்சினைக்கு ஒரு தாற்காலிகமான தீர்வாக இப் பெரும் பன்னாட்டுக் கடன்கள் இருந்த போதிலும், இக் கடன்களுக்கு வட்டி செலுத்தவும் திருப்பித் தரவும் வேண்டிய திறமையைக் கடன்பட்டவர்கள் பெற அவை ஒன்றும் செய்ய வில்லை. தொழில்கள் அமைத்த இடங்களில் ஏற்பட்ட பெரும் மாற்றங்களின் விளைவாகப் பழைய நாடுகள் முழுமூச்சுடன் தம் உற்பத்தித் திறனைச் சீராக்கவேண்டியிருந்தது ; இந்தத் திருத்தம் தொடங்கிவிட்ட போதும் அது மிகவும் மெதுவாக ஏற்பட்டது. அமெரிக்காவின் பொருளாதார ஆதிக்கத்தின் வளர்ச்சியால் அதற்குத் தலைமை இடம் கிடைத்தது. அதன் ஒதுங்கி இருக்கும் (isolationist) வழக்கத்தினால் இத் தலைமை இடத்தைச் சரியாக மேற்கொள்ள அமெரிக்காவினால் முடிய வில்லை. தொழில் அமைப்பில் ஏற்பட்ட மாறுதல்களோடு விவசாயத்தின் முக்கியத் துறைகளில் ஏற்பட்ட மோசமான சமநிலைக் கேடுகளும் சேர்ந்துகொண்டன.

அவகாசம் இருந்திருந்தால், தளர்ச்சி அடைந்திருப்பினும் பன்னாட்டு அமைப்புத் தேவையான திருத்தங்களைச் செய்துகொண்டிருக்கக்கூடும். சில பிரச்சினைகளை நல்லறிவுடைய பேச்சு வார்த்தைகளால் தீர்த்திருக்கலாம். ஆனால், இதற்கு உலகத்தில் தேவை போதுமான அளவு அதிகமாக இருந்திருக்கவேண்டும். இலாபம் குறைந்த துறைகளினின்று இலாபம் அதிகமான உற்பத்தித் துறைகளுக்கு உழைப்பாளிகளும் மூலதனமும் மாறுவதனால் படிப்படியாகச் சிறிது சிறிதாகச் சாதாரணமாக ஏற்படும் மாற்றங்களால் தேவையான திருத்தம் ஏற்பட்டிருக்கக்கூடும்.

இவ்வாறு பிரச்சினைகள் படிப்படியாகத் தீர்வது நடக்க முடியாதவாறு சரித்திரத்திலேயே இதுவரை கண்டிராதபடி மோசமான பொருளாதார மந்தம் ஒன்று தோன்றித் தடுத்துவிட்டது. மிக இலாபகரமான தொழில்கள்கூட இலாபமற்றுப் போயின. மிகையாக வளர்ந்துவிட்ட தொழில்களில் உபரியாக மிகுந்துபோன சாதனங்களுக்குப் போக இடமில்லை ; வேலைகளை அதிகரிக்கும் புது முயற்சிகளைத் துவக்க ஊக்கமில்லை ; தொடர்ந்து ஏற்பட்ட அனுபவம் காரணமாகக் கடனளிப்பது அதிகரிப்பதற்கு வாய்ப்பு இல்லை.

(பார்வைக்குரிய சில நூல்களின் பட்டியலுக்கு 24ஆம் அத்தியாயத்தின் முடிவில் பார்க்கவும்).

# 24. இணைப்பைச் சிதைத்த சக்திகள்

## (Forces of Disintegration)

1929-லிருந்து பழைய கஷ்டங்களோடு புதிய கஷ்டங்கள் வேறு தோன்றின. அவற்றின் சுமையைத் தாளமுடியாமல் உறுதியற்ற நிலையில் நின்றுகொண்டிருந்த பன்னாட்டுப் பொருளாதாரம் சரிந்தது.

## 1930 தொடங்கிய ஆண்டுகளின் பெரும் மந்தம்

### அது தோன்றியதும் பரவியதும்

அமெரிக்கா பொருளாதார உலகில் எவ்வளவு முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளது என்பதை 1930 தொடங்கிய ஆண்டுகளின் பெரிய மந்தம் தெளிவாகக் காட்டுகிறது. உலகின் பிற நாடுகளில் பொருளாதார நடவடிக்கைகளின் அளவை அமெரிக்கப் பொருளாதாரச் சூழ்நிலை மிகவும் பாதிக்கிறது என்பதற்கும் இம் மந்தம் ஒரு சான்றாகும். 1929-ல் இருந்த செழுமையையும் எதிர்காலம்பற்றிய நன்னம்பிக்கையையும் 1932-ல் வேலையின்மையாகவும் நம்பிக்கையின்மையாகவும் மாற்றிய முக்கியச் சக்திகள் அமெரிக்காவில்தான் தோன்றின என்பதில் ஐயம் இல்லை; இங்குப் பொருளாதார நடவடிக்கைகளிலும் தேவையிலும் ஏற்பட்ட வீழ்ச்சி எல்லாத் திசைகளிலும் பரவி உலகம் முழுவதையும் அணைத்தது.

1927-ன் பின்பகுதிக்கும் 1929-ம் ஆண்டின் மத்திக்கும் இடையில் வெவ்வேறு சமயங்களில் ஐந்தாறு வளர்ச்சி குன்றிய நாடுகளிலும் (ஜெர்மனியிலும்) பொருளாதார நடவடிக்கைகளின் அளவு கீழ் நோக்கிச் சென்றது உண்மையே. எனினும், அவை அனைத்துடைய மொத்தப் பளுவையும் சேர்த்தாலும் உலக முழுவதிலும் சீர்குலைவைத் தூண்டிவிடும் அளவுக்கு அவற்றின் சக்தி அதிகமாக இல்லை. அமெரிக்காவில் 1929 ஜூலையில் தொழில் உற்பத்தி குறையத் தொடங்கி, அக்டோபரில் பங்கு மார்க்கெட் வீழ்ச்சி ஏற்பட்டு, அத்துடன் மிகை நம்பிக்கை என்னும் பலூன் வெடித்த பிறகுதான், நிலைமை

கெட்டு, வேகமாகப் பரவி மேலும்மேலும் மோசமாகி உலகம் முழு வதையும் பாதித்தது.

1922-லிருந்து அமெரிக்காவில் வருமான வேலைகளும் உற்பத்தியும் உயர்ந்த அளவில் இருந்ததுதான் உலகின் பெரும்பாலான நாடுகளில் பொதுவாகச் செழுமையான நிலை இருப்பதற்கு முக்கியமான ஆதரவாக இருந்தது. இதுவரை ஏற்பட்டிராத அளவுக்கு முதலீடு பெருகியது தான் இந்த எட்டாண்டுக்காலச் செழுமையைத் தோற்றுவித்துக் காப் பாற்றி வந்தது. எந்த நவீன பொருளாதார அமைப்பிலும் விசையாக விளங்கும் காரணி முதலீடு. அது அமெரிக்காவில் எதிர்பாராத அளவு உயர்ந்தது. மோட்டார்வண்டித் தொழில், மின்சாரத்தைப் பயன் படுத்துதல் இவற்றோடு தொடர்புகொண்ட தொழில்கள் வேகமாக வளர்ந்ததால் முக்கியமாக ஊக்குவிக்கப்பட்டுத் தொடர்ந்து பெரும் அளவில் ஏற்பட்ட இந்த முதலீட்டைத் தவிர, அமெரிக்கா இக்காலத்தில் சரித்திரத்திலேயே கண்டிராத அளவு கட்டடத் தொழில் வளர்ச்சியையும் பெற்றிருந்தது.

இந்த நல்ல காலம் திடீரென முடிவானேன்? மந்தநிலை முதலில் தோன்ற முக்கியக் காரணமாக இருந்தவை எவை என்பதற்குச் சுருக்க மாக விடையளித்தால் அது மிகைச் சுருக்கமாகித் தவறான எண்ணத் தைத் தோற்றுவிக்கலாமாயினும், மந்தநிலையின் முக்கியக் காரணம் எவை என்பதில் சந்தேகம் இல்லை. அதன் காரணம் இதுதான்: பிற பொருளாதார நடவடிக்கைகள் இயங்க முதலில் முதலீடு தேவை; இம் முதலீடு முக்கியமான துறைகளில் எல்லாம் மேலும் இடமில்லாதவாறு செறிந்துவிட்டது. 1929-ல் மோட்டார்வண்டித் தொழிலின் கார் உற்பத்தித் திறன் அதன் விற்கக்கூடிய திறமையைவிட மிக அதிகமாக இருந்தது. அதேபோல டயர் தொழிலும் மிகையாக முதலிடப்பட் டிருந்தது. நீடித்து உழைக்கக்கூடிய சில நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய்யும் வேறு பல தொழில்களும் இதே நிலையில் இருந்தன; 1929-ன் முதல் பகுதியில் அவற்றின் விற்பனை வேகம் குறையலாயிற்று. மேலும், இப் பொருள்களை யெல்லாம் உற்பத்தி செய்ய எந்திரங்களிலும் ஆலைகளிலும் முதலீடு செய்ய வேண்டிய அவசியம் அப்போது இல்லை. உள்ள உற்பத்தித் திறனுக்கு ஈடாகத் தேவை உயரும்வரை அதன் அவசியம் ஏற்படாது.

1928-ன் தொடக்கத்திலிருந்தே வீடு கட்டுவது பெரும் அளவில் குறையலாயிற்று. கட்டடத் தொழிலின் பூரிப்பினால் வீடுகளும் தனி அறைகள் உள்ள கட்டடங்களும் பெருமளவில் அதிகமாயின; சில காலத்திற்கு அவற்றின் தேவை அதிகமானாலும்கூட அவற்றின் அளிப்புப் போதும் என்பது தெரிந்தது.

முக்கியமாக, பங்கு மார்க்கெட் சரிவினால் தொழில் வணிகரின் நம்பிக்கைக்கு ஏற்பட்ட அதிர்ச்சிக்குப் பிறகு, பொருளாதார நடவடிக்கை வெகு வேகமாகச் சுருங்கலாயிற்று. மூன்று அவலமான ஆண்டுகளுக்கு, எப்போதாவது சில நாட்கள் நின்றது போக, ஒரேயடியாக முதலீடும், தொழிலுற்பத்தியும், வேலைகளும், நாட்டு வருமானமும் விழுந்தன. தொழில் நடவடிக்கைகளுக்கு ஆதாரமான முதலீடு அநேகமாக நின்றுவிட்டது. உண்மை அளவில், நாட்டின் மொத்த ஆக்கம் மூன்றில் ஒரு பங்கு ஆயிற்று; நடப்பு விலை அளவில், ஏறக்குறைய பாதி ஆயிற்று. தொழிற்சாலை உற்பத்தி 1929 அளவில் பாதிக்குக் கீழே போயிற்று. நீண்டகாலம் பயன்படக்கூடிய பொருள்களின் உற்பத்தி கால் பங்குக்கும் கீழே போயிற்று. இதில் தொழிற்சாலைப் பொருள்களும் நுகர்வு நெடுங்காலம் தள்ளிப்போடக் கூடிய மோட்டார் வண்டிகள் போன்ற நுகர்வுப் பொருள்களும் அடங்கின.

இப் பெரிய அமெரிக்கப் பொருளாதாரத்தின் சரிவு விரைவாகவும் கடுமையாகவும் பிற நாடுகளைப் பாதித்தது. அமெரிக்க வருமானங்கள் குறைந்தபோது, அவர்கள் இறக்குமதிகள்மீது செலவழிப்பதும் குறைந்தது. உண்மையில், 24·1 படம் காட்டுவதுபோல, இறக்குமதிகளின் அளவு வருமானம் மாறிய அதே அளவுக்குக் குறைந்தது. படம் காட்டும் காலம் முழுமைக்கும், பொருள் இறக்குமதிகளுக்கும் தொழிற்சாலை உற்பத்திக்கும் நெருங்கிய தொடர்பு இருந்தது. இது இயற்கையே. ஏனெனில், அமெரிக்க 'இறக்குமதிகளில் மூன்றில் இரண்டு பங்குத் தொழில்களில் பயனுள மூலப்பொருள்களும் பாதி தயாரானவையுமே ஆகும்.

வெளிநாடுகளை நோக்கிச் சென்ற வாங்கும் சக்தியின் அளவில் கூறினால் இறக்குமதிகள்மீது அமெரிக்கா செலவழித்த தொகை 1929-ல் $ 4·4 பிலியனிலிருந்து 1932-ல் $ 1·3 பிலியனாகக் குறைந்தது. அமெரிக்காவுடன் வாணிபம் செய்த நாடுகளின் ஏற்றுமதித் தொழில்களின் நடவடிக்கைகள் இதனால் குறைந்தன. நாம் நன்கறிந்த பெருக்கி இயக்கத்தினால் அங்கு வருமானங்களும் வேலைகளின் அளவும் குறையும். இது மட்டுமன்று. வசதிப் பணிகளுக்கான விவகாரங்களில் அமெரிக்கா செலுத்திய தொகைகளும் ஏறக்குறைய பாதி ஆயிற்று. 1929-ல் $ 2 பிலியனுக்குச் சற்றுக் குறைவாக இருந்த இது 1932-ல் $ 1 பிலியனாகக் குறைந்தது. அதைவிட முக்கியமாக, அமெரிக்காவின் நெடுங்காலக் கடன் அளிப்பு அடியோடு நின்றதுமட்டுமன்றி, அமெரிக்கா மூலதனத்தை முக்கியமாக, திருப்பி அனுப்பப்படும் அமெரிக்க நிலுவைகள் இறக்குமதி செய்ய ஆரம்பித்தது. 1927–1929-ல் சராசரியாக அமெரிக்கா $ 978 மிலியனுக்கு நெடுங்காலக் கடன்களை வெளிநாடுகளில் கொடுத்தது. 1932-ல் வெளிநாடுகளினின்று $ 251 மிலியனுக்கு அமெரிக்காவுக்குள் பணம் வந்தது.




படம் 24·1.

1925–39-ல் அமெரிக்காவின் தொழிற்சாலை உற்பத்தியும் இறக்குமதிகளும் [Hal B. Lary and associates, *The United States in the World Economy*, Economic Series No. 23, U. S. Department of Commerce, Washington D. C., 1943, பக்கம் 8-லிருந்து எடுத்தது.]

இவை எல்லாவற்றையும் சேர்த்துப் பார்த்தால் அமெரிக்கர்கள் வெளிநாட்டில் செலவழித்த அல்லது முதலீடு செய்த தொகை.

> 1927-லிருந்து 1929 வரை சுமார் $ 7,40,00,00,000 அளவிலிருந்து 1932, 1933-ல் வெறும் $ 2,40,00,00,000 ஆக விழுந்தது. அஃதாவது மூன்று ஆண்டுகளில் 68 சதவிகிதம் குறைந்தது.[1]

இதுவே பிற நாடுகளின் பொருளாதாரங்களுக்குப் பேரதிர்ச்சியைக் கொடுத்தது. விவசாய உற்பத்தியைப் பெரிதும் நம்பிய நாடுகள் ஏற்கெனவே பட்டுக்கொண்டிருந்த தொல்லைகளோடு இதையும் சேர்த்தால் (பாதுகாப்பளித்து, திட்டமிட்டு நடத்தப்பட்ட ரஷ்யப் பொருளாதாரம் நீங்கலாக) உலகம் முழுவதையும் அமெரிக்காவோடு கீழே தள்ள இவை போதுமானதாக இருந்தன.

[1] Hal B. Lary and associates, *The United States in the World Economy*, பக்கம் 173, Economic Series No. 23, U.S. Department of Commerce, Washington, D. C., 1943. மேற்கூறிய விவரங்களும் இச் சிறந்த ஆராய்ச்சியிலிருந்துதான் எடுக்கப்பட்டன.

**ஸ்மூட்-ஹாலி இறக்குமதி வரிகள் (The Smoot-Hawley Tariff), 1930**

அமெரிக்க நாட்டு வருமானத்தின் திடீர் வீழ்ச்சியினால் உலக வாணிபத்தின்மீது ஏற்பட்ட மந்த விளைவோடு, 1930 ஜூனில் அமெரிக்க இறக்குமதி வரிகள் நிறைய ஏற்றப்பட்டதன் விளைவும் சேர்ந்துகொண்டது.

சில காலமாக அமெரிக்கக் காங்கிரஸில் இறக்குமதி வரிகளை உயர்த்துவதுபற்றி விவாதம் நடந்துவந்திருந்தது. விவசாயத்துக்கு உதவி அளிக்கும் வழியாக அது முதலில் பேசப்பட்டது. 1920-ல் பொதுவாகச் செழுமைநிலை யிருந்தபோது விலைகள் குறைந்தமையால் விவசாயத்தின் பல துறைகள் அச் செழுமையில் பங்கு பெறவில்லை. தொழில்கள் பாதுகாக்கப்பட்டன. அவை செழுமையாக இருந்தன; எனவே, விவசாயத்தில் செழுமைநிலை உண்டாக்க அதற்கும் பாதுகாப்பு அளிக்கவேண்டும் என்பதுபோலப் பொதுவாக வாதம் செய்யப்பட்டது. உண்மையில், ஒரு தொழிலில் ஏற்படும் செழுமை, அதில் முதலீடு உயர்ந்த நிலையில் இருப்பதையும் அதனால் அதில் உற்பத்தி உயர்ந்த அளவில் இருப்பதையும் பொறுத்ததே தவிர, எந்தவிதப் பாதுகாப்பை யும் பொறுத்ததன்று. இதுவன்றி, எந்த விவசாய உற்பத்திகளுக்குப் பாதுகாப்புக் கேட்கப்பட்டதோ அவற்றில் பல (கோதுமை, பருத்தி, புகையிலை, பன்றிக் கொழுப்பு (lard) ஏற்றுமதிப் பொருள்கள் என்பதை யும் இவற்றை இறக்குமதி வரிகள் பாதுகாக்க முடியாது என்பதையும் இந்த எளிய வாதம் கவனிக்கவில்லை.

விவசாயப் பொருள்களுக்குமட்டும் இறக்குமதி வரிகள் உயர்த்தப் படும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், அது அத்தோடு நிற்பது அசாத்தியமாயிற்று. தொழிற்சாலைப் பிராந்தியங்களிலிருந்து வந்த செனட், காங்கிரஸ் உறுப்பினர்கள் தம் வாக்குகளை வணிகம் செய்தும், ஒருவருக்கொருவர் உதவிக் கொள்வது என்று நிச்சயித்துச் செயலாற்றி யும் சட்டங்களில் மாறுதல் செய்ய இயலுமாதலின் தத்தம் தொகுதியைச் சேர்ந்த சக்தி வாய்ந்தவர்கள் அக்கறை கொண்ட பொருள் களில் இறக்குமதி வரிகளை உயர்த்திக்கொண்டனர். எனவே, ஒருசில பொருள்களுக்கு வரி உயர்த்தத் தொடங்கி, 25,000 பொருள்களைக் கருத ஆரம்பித்தனர்; இறுதியில் பலவகை விவசாயப் பொருள்களும் தொழிற்சாலைப் பொருள்களுமாகச் சேர்ந்து 800 வரி வீதங்கள் உயர்த்தப்பட்டன.

ஏற்கெனவே உயர்வாக இருந்த இறக்குமதி வரிகளை அனாவசிய மாக மேலும் உயர்த்தியதனால் தீய விளைவுகளே ஏற்பட்டன. பல நாடுகள் அதை எதிர்த்தன. சுமார் ஒரு டஜன் நாடுகள் உடனே தம்

இறக்குமதிகள்மீது, குறிப்பாக அமெரிக்காவுக்கு முக்கியமான பொருள் களின்மீது, வரிகளை உயர்த்தின.

ஸ்மூட்-ஹாலி வரிகள் எவ்வளவுக்கு அமெரிக்க இறக்குமதிகளைக் குறைத்தன என்பதை நிச்சயமாகக் கூறுவது கடினம். ஆனால், அவற்றின் விளைவே கணிசமாக இருந்தது என்பதில் சந்தேகமில்லை. 1927-லிருந்து சர்வதேச சங்கம் இறக்குமதி வரி உயர்வுகளை நிறுத்த வேண்டுமெனப் பாடுபட்ட முயற்சிகளை இவை முற்றிலும் பயனற்ற தாக்கிவிட்டன. மாறாக, இறக்குமதி வரிகள் உலகெங்கிலும் உயரக் காரணமாக இருந்தன. இஃது ஒரு மோசமான விளைவாகும்.

**மந்தம் பரவாமல் ஏன் பாதுகாப்பளிக்கக்கூடாது?**

அமெரிக்காவின் இறக்குமதிகளும் அதன் வெளிநாட்டுக் கடன் அளிப்பும் சுருங்கியதும் பல்வேறு நாடுகளில் ஒவ்வொன்றிலும் உற்பத்தியும் வேலை வாய்ப்புகளும் குறைந்தன. பெருக்கியின் செயல் முறை காரணமாக அவற்றின் வருமானங்களும் இறக்குமதிகளும் நிறைய குறைந்தன. மந்தம் போகப்போக அகலமாகிக்கொண்டே பரவியது. முதலில் அவர்களது ஏற்றுமதிகள் குறைந்ததற்கும் அதனால் தூண்டப்பட்டு அவர்கள் இறக்குமதிகள் குறைந்ததற்கும் கால வித்தியாசம் இருந்ததால், இந் நாடுகளின் செலுத்துநிலை பாதக மாக மாறிப் பெரும் அளவில் பொன்னின் வெளிப்போக்கு உண்டா யிற்று. ஏற்றுமதிகள் குறைந்ததால் முதலில் ஏற்பட்ட வருமானச் சுருக்கத்தோடு, சேமநிதிகள் குறைந்ததால் ஏற்பட்ட இரண்டாவது சுருக்கமும் சேர்ந்துகொண்டது.

எல்லாம் நடந்த பின் நமக்கு இப்போது ஏற்பட்டுள்ள அறிவைக் கொண்டு இந்த நாடுகள் உடனே நாணயமாற்றுக் கட்டுப்பாட்டைக் கொண்டு வந்து, அத்துடன், மந்தம் தோன்றிய நாட்டினின்று வரும் இறக்குமதிகளுக்கு எதிராக பேதம் காட்டுமாறு கட்டுப்பாடுகளை இந் நாடுகள் செய்யவேண்டும் என்று இப்போது நாம் யோசனை கூறலாம். இந்தப் புறச் செயல்களோடு உள்நாட்டில் வருமானத்தையும் வேலை களையும் குறையாமல் காக்க அரசாங்கச் செலவுகளை அதிகப்படுத்தி இருக்கவேண்டும். அமெரிக்கா அது போன்று பொருளாதாரத்தை விரிவடையச் செய்யும் கொள்கைகளைக் கடைப்பிடித்தால் பிற நாடுகள் தம் இறக்குமதிக் கட்டுப்பாடுகளை அகற்றி யிருக்கலாம்.

இத்தகைய செயல்களை அப்போது ஏன் செய்திருக்க முடியாது என்பதற்குப் பல காரணங்கள் கூறலாம். இந் நடவடிக்கைகளை மேற் கொள்ள, இக் கொள்கைகளைப் பல நாடுகளும் ஒப்புக்கொண்டால்தான் முடியும். இது போன்று ஓர் ஒப்பந்தம் நிறைவேறுவது மிகக் கடினம். மேலும், தடையிலா வாணிபக் கொள்கைக்கு இன்னமும் பலத்த ஆதரவு

இருந்தது. அரசாங்கம் ஈடுபடக்கூடிய பொருளாதார நடவடிக்கை களின் பட்டியல் விரிவடைந்திருப்பினும், உற்பத்தி, வேலைகள் ஆகிய வற்றின் மொத்த அளவுக்கு இன்னமும் எந்த அரசாங்கமும் பொறுப்பு ஏற்கவில்லை. அதிகபட்சமாக, மத்திய பாங்குக் கொள்கைமூலமாக பூரிப்புகளை அடக்கவும், மந்தங்களை மிதப்படுத்தவும் வேண்டுமாயின் அரசாங்கம் முயலலாம் என்று கருதப்பட்டது. இதற்குச் சான்றாகப் பின்வரும் உண்மைகளைக் கூறலாம் : 1929–33 ஆண்டுகளில் இருந்த அளவு மோசமாக மனித வரலாற்றில் எந்த மந்தமும் இருந்ததில்லை ; 1920 தொடங்கிய பத்து ஆண்டுகளில் பணக் கொள்கைகள் வெற்றிகர மாகப் பயன்படுத்தப்பட்டன ; போருக்குப் பின் 1920–21-ல் ஏற்பட்ட பொருளாதார மந்தத்திலிருந்து வெகு விரைவில் மீட்சி ஏற்பட்டது.

இறுதியாக, வணிகச் சுழலின் முக்கியமான காரணங்கள் என்ன, அதை எப்படி அடக்குவது என்பனபற்றிப் பொருளாதார நிபுணர் களிடம்கூட, ஒருமுகமான அபிப்பிராயம் ஏற்படவில்லை. 1930-ல் தொடங்கி ஏற்பட்ட பெரிய மந்தம்தான் இப் பிரச்சினையைக் கட்டாய மாக ஆராயவைத்து, வேலைகளையும் வருமானத்தையும்பற்றிய நவீன கோட்பாட்டையும், சுழலுக்கு எதிராக அரசாங்க நிதிக்கொள்கையைப் பயன்படுத்தவேண்டும் என்ற அதன் அழுத்தமான யோசனையையும் தோற்றுவித்தது.

**மாறுபட்ட எதிர்ச்செயல்கள்**

எல்லா நாடுகளும் சேர்ந்து மந்தம் பரவாமல் தடுத்து அதன் விளைவுகளுக்கு மாற்றுச் செய்யாமல், ஒவ்வொரு நாடும் தன் சக்திக்கு ஏற்றவாறு நாளுக்குநாள் அதிகமாகும் தன் கஷ்டங்களைத் தானே சமாளிக்குமாறு விடப்பட்டது. பொன் திட்டத்தை விடாமல், பண வீக்கச் சக்திகள் தம் பிடியை இறுக்குமாறுவிட்டு, அதேசமயம் ஒருவேளை இறக்குமதி வரிகளை உயர்த்தி இறக்குமதிகளைக் குறைப்பது ஒரு மாற்று வழி. பொன் திட்டத்தைக் கைவிட்டு, செலாவணியின் மதிப்பை இறங்க விடுவது மற்றொரு வழி. இறக்குமதிகளின் அளவுகளைக் கட்டுப் படுத்தியோ நேராக நாணயமாற்றுகளைக் கட்டுப்படுத்தியோ செலுத்து நிலையை நேரிடையாகக் கட்டுப்படுத்துவது மூன்றாவது வழி.

ஒரு நாடு எந்த வழியைப் பின்பற்றியது என்பது, அதன் நிதி வலிமை, அது எவ்வளவுதூரம் வெளிநாட்டுக் கடன்களை நம்பி யுள்ளதோ அந் நிலை, பொன் திட்டத்தோடு அது எந்த அளவுக்கு இணைந்திருக்கிறதோ அந்த அளவு ஆகிய மூன்றையும் பொறுத்து மாறியது. மேற்கு ஐரோப்பிய நாடுகள் ஒன்றுவிடாமல் நிலையான நாணய மாற்றுவீதங்களோடு பணச் சுருக்கத்தைத் தேர்ந்தெடுத்தன. அவற்றின் செலுத்துநிலை சீரழிந்து, பொன் சேமநிதிகள் சுருங்கி,

பொருளாதார நடவடிக்கைகளின் அளவு குறைந்தது.[2] தமது ஏற்றுமதி விலைகள் மிகவும் குறைந்ததோடு, வெளிநாடுகளிலிருந்து கடன்கள் வருவது குறைந்ததால், மிகவும் பாதிக்கப்பட்ட மூலப்பொருள் உற்பத்தி செய்யும் சில நாடுகளுக்கு இந்த வழியைப் பின்பற்றுவது அடியோடு முடியவில்லை. எனவே, 1929 ஆண்டு முடியுமுன்னரே, அர்ஜென்டினா, பிரேஜில், பராகுவே, உருகுவே நாடுகள் அனைத்தும் தம் செலாவணிகளை மதிப்பிறக்கம் செய்தன. 1930-ல் ஆஸ்திரேலியா, நியூஜிலந்து, பொலீவியா, வெனிஸுவேலா நாடுகள் இவற்றைப் பின்பற்றின. துருக்கியும், ஈரானும் மட்டும் நாணயமாற்றுக் கட்டுப் பாடுகளை விதித்தன.

1931-ன் வசந்தகாலத்தில், திருத்தத்துக்கு ஒரு கஷ்டமான முறையாக இருப்பினும் பணச் சுருக்கம் தன் பணியைச் சரியாகச் செய்வதுபோலத் தோன்றிற்று. மேற்கு ஐரோப்பாவிலும் அமெரிக்கா விலும் பொன் திட்டம் அப்படியே இருந்தது. முதலில் அதைச் செய்த ஒன்பது நாடுகளைத் தவிர, வேறு எதுவும் நாணயமாற்று மதிப்பிறக் கத்தைச் செய்யவில்லை. புதிதாக எந் நாடும் நாணயமாற்றுக் கட்டுப் பாடுகளைப் புகுத்தவில்லை. தொடுவானத்தில் மேலும் நம்பிக்கையூட்டும் அறிகுறிகள் தென்பட்டன. 1931-ன் முதற்சில மாதங்களில் ஜெர்மனி யிலும் அமெரிக்காவிலும் தொழில் உற்பத்தி சிறிது அதிகரித்தது. ஜெர்மனியில்கூட வட்டி வீதங்கள் குறைவாக இருந்தன. எல்லா முக்கியக் கேந்திரங்களிலும் கடன்கள் சுலபமாகக் கிடைத்தன. மீட்சி சூடுபிடிக்கக்கூடும் என்ற வாய்ப்புச் சிறிது இருந்தது.

### 1931-ல் பன்னாட்டு நிதி நெருக்கடி

1931 வசந்தத்தில் தயக்கத்தோடு தளிர்விடத்தொடங்கிய நம்பிக் கையைப் பன்னாட்டு நிதித்துறையில் ஏற்பட்ட ஒரு பீதி சிதற அடித்து விட்டது. அஃது எந்தப் பெரிய நிதிக் கேந்திரத்திலும் தொடங்கவில்லை; சிறிய ஆஸ்திரியாவில் ஆரம்பித்தது. வியன்னாவின் (Vienna) மிகப் பெரிய வணிக பாங்கான, கிரெடிட்-ஆன்ஸ்டால்டின் (Credit-Anstalt) சொத்துகளை மீண்டும் மதிப்பிட்டபோது, அது திவாலானது போன்ற நிலைக்கு அவற்றின் மதிப்புக் குறைந்துவிட்டது தெரிந்தது. இதைக் கண்டுபிடித்ததும் உடனே வெளிநாட்டிலிருந்துவந்த குறுகியகாலத்

[2] எல்லா நாடுகளுடைய நிலைக்கும் மாறாக, ஃபிரான்ஸ் 1928-லிருந்து 1932 வரை தன் பொன் சேமிப்புகளை இடைவிடாமல் நிறைய சேர்த்துக்கொண்டுவந்தது. தன் வெளிநாட்டு நிலுவைகளைத் திருப்பி வாங்கிக்கொள்வது, ஃபிரெஞ்சுக்காரர்களின் பத்திர இருப்புகளைக் காசாக்குவது, பத்திரமான இடத்தை நாடிய வெளிநாட்டுக் குறுகியகால மூலதனத்தை ஃபிரான்சுக்கு ஈர்ப்பது ஆகிய வழிகளால் முக்கியமாக இது சாத்தியமாயிற்று. ஜெர்மனியின் இறக்குமதிகள், அதன் ஏற்றுமதிகளைவிட வேகமாகக் குறைந்தன. எனவே, அதன் நடப்புப் பன்னாட்டுக் கணக்கில் உபரி ஏற்பட்டு நஷ்ட ஈடுகளைத் தொடர்ந்து செய்யவும் வெளிநாட்டாரின் கடனுக்கு வட்டி செலுத்தவும் வழி உண்டாயிற்று.

தொகைகள் திருப்பி எடுத்துச்செல்லப்பட்டன. உடனே கடன் கொடுத்தவர்களோடு 'அதேநிலை' (standstill) ஒப்பந்தம் ஒன்று செய்யப்பட்டது; பின்னர் பணத்தை ஆஸ்திரியாவிலிருந்து திருப்பி எடுத்துச் செல்வதன்மீது தடைகள் விதிக்கப்பட்டன. இதன் பலனுக ஆஸ்திரியாவினின்று தொகைகள் வெளியேறுவது நின்றது; ஆனுல், அது எழுப்பிவிட்ட மனக்கவலையை அது போக்கவில்லை.

கவலைப்பட்டுக்கொண்டிருந்த கடன் அளித்தவர்கள் இனி ஜெர் மனியிலிருந்து தம் தொகைகளைத் திருப்பிப்பெற ஆரம்பித்தனர். ஜெர் மனி அப்போது 5 பிலியன் மார்க்குகளுக்கு (ஒரு பிலியன் டாலருக்கு அதிகமாக) குறுகியகாலக் கடன்பட்டிருந்தது. (23 ஆவது அத்தியாயத் தைப் பார்க்கவும்—பத்தி, பன்னுட்டு முதலீடு) ஜனுதிப்தி ஹூவெரின் முயற்சியால் நஷ்ட ஈட்டுச் செலுத்தல்களுக்கு ஓராண்டுக் கடன் தவணை நீடிப்பு (moratorium) அளிக்கப்பட்டதனுல் பணம் திரும்பிப்போனது சிறிது குறைந்தபோதும் அஃது அடியோடு நிற்கவில்லை. ஜூலையின் தொடக்கத்தில் ஒரு முக்கியமான ஜெர்மன் பாங்கு ஒன்று முழுகியதும், நிதிகளைத் திருப்பிவாங்குவது அதிகமாயிற்று. ஜூலை முடிவில் ஏறக்குறைய மூன்று பிலியன் மார்க்குகள் பெறுமான குறுகியகால நிலுவைகள் வெளிநாடுகளுக்கு மாற்றப்பட்டன. ரீஷ்பாங்கின் (Reichsbank) பொன், மற்றும் அன்னியச் செலாவணிச் சேமநிதிகள் அடியோடு தீர்ந்துபோவதைத் தடுக்க, அரசாங்கம் வரிசையாகச் சட்டங்களை இயற்றி நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளைக் கொண்டு வந்தது. அந்த ஆண்டின் இறுதிக்குள், கிழக்கு ஐரோப்பாவிலும் வட ஐரோப்பாவிலும் வேறு பதினெரு நாடுகளிலும் இதேவழி பின் பற்றப்பட்டன.

செலாவணி மதிப்பிறக்கம் கடுமையான பணவீக்கத்தைத் தோற்று விக்கும் என்று மக்கள் நம்பப் பழகிக்கொண்டிருந்ததனுல்தான் ஜெர்மனி நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளைத் தேர்ந்தெடுத்தது. மேலும், மூலதன ஓட்டத்தைத் தடுக்க நாணயமாற்றுக் கட்டுப்பாடு சிறந்த ஓர் உபாயமாகும். பழைய உபாயமாகிய கழிவு வீதத்தை உயர்த்துவது பலன் தராது என்பது நிச்சயமாகத் தெரிந்துவிட்டது. ஏனெனில், ரீஷ்பாங்கு அதை 15 சதவிகிதத்துக்கு உயர்த்தியும் அதனுல் சிறிது பலனும் கிட்டவில்லை.

### பிரிட்டன் பொன்னைக் கைவிடுகிறது

இப்போது இங்கிலாந்திலிருந்து மூலதனம் திரும்பிப் போக ஆரம்பித்தது. பிரிட்டிஷ் பாங்குகள் ஜெர்மனியிலும் பிற மத்திய ஐரோப்பிய நாடுகளிலும் நிறைய கடன்களைக் கொடுத்திருந்தன என்று தெரிந்தது. இக் கடன்கள் இப்போது இறுக்கமாக உறைந்து விட்டன. அதற்கு எதிராக, லண்டனில் £ 560 மிலியனை வெளிநாட்டார்

முதலீடு செய்திருந்தனர். இதனால், பிரிட்டனின் நிலை நிச்சயமற்று இருந்தது. அத்தோடு பெரிய அரசாங்க நிதிப் பற்றுக்குறை ஏற்படக் கூடும் என்ற பயமும், பிரிட்டனின் செலுத்துநிலை விடாமல் மோசமாகிக் கொண்டு வந்த பிரச்சினையும் சேர்ந்துகொண்டன.

அயல்நாட்டார் திருப்பிப் பெற்ற தொகை வேகமாக உயர்ந்தது. ஃபிரான்ஸ் பாங்கும் (Bank of France) ஃபெடரல் ரிசர்வ் அமைப்பும் £ 130 மிலியன் கடனாக அளித்தன. இருந்தும் இத் தொகைக்கும் அதிக மாகவே பிரிட்டன் செலுத்தவேண்டியதாயிற்று. மேலும், கடன் கிடைக் காமல் போகவே செப்டெம்பர் 21 ஆம் நாள் பிரிட்டிஷ் பாராளுமன்றம், பொன்னை விற்கவேண்டும் என்ற இங்கிலாந்து பாங்கின் பொறுப்பை நிறுத்தி வைத்தது.

நெருக்கடியின்போது பாங்கு வீதம் 4½ சதவீதத்துக்குத்தான் உயர்த்தப்பட்டது. 8 அல்லது 10 சதவீதத்துக்கு அதை உயர்த்தியிருந் தால் லண்டனிலிருந்து நிதி வெளியே போனதைத் தடுத்திருக்கலாம் என்று இதைத் திறனாய்ந்தவர்கள் கூறினர். ஆனால், இந்த வாதம் வெறும் அபத்தம். ஒருவனது மூலதனத்தில் 30, 40 சதவீதம் நஷ்ட மாகக்கூடிய நிலையில் 10 சதவீதம் வட்டி வருவது எம் மாத்திரம்? 1931-ல் இருந்த சூழ்நிலையில் 10 சதவீத பாங்கு வீதம் தளர்ச்சிக்கு அறிகுறியாகக் கருதப்பட்டிருக்குமே அன்றி, 'பொன்னை மீட்க' பழைய காலத்து உபாயம் ஒன்றைப் பயன்படுத்துவதாகக் கருதப் படாது.

பொன்னைக் கைவிட்டதும், நாட்டின் செலுத்துநிலையின் தளர்ந்த நிலைமையைப் பிரதிபலிக்குமாறு ஸ்டர்லிங் நாணயமாற்று வீதங்களின் மீதிருந்த தடைகள் நீக்கப்பட்டன. படிப்படியாகப் பவுன் மதிப்புக் குறைந்து, டிசம்பரில் பழைய வீதத்தில் 30 சதவீதம் குறைவாக இருந்தது. ஐந்துமாத காலத்துக்குள் அது மீண்டும் உயர்ந்தது. 1932 ஜூனில் நாணயமாற்றுச் சமன்காப்புக் கணக்கு நிறுவப்பட்டதும், தடையின்றி மாறும் நாணயமாற்று வீதங்களுக்குப் பதிலாக, நெகிழ்ச்சி யுடைய நாணயமாற்று வீத முறை தொடங்கப்பட்டது. இந்தக் கணக்கு, அதாவது சமன்காப்பு நிதி, இங்கிலாந்து பாங்கிடமிருந்து சில அயல் நாட்டுச் சொத்துகளையும் £ 150 மிலியன் மதிப்புள்ள கருவூல உண்டி யல்களையும் (1933-ல் மேலும் £ 200 மிலியன் இஃது அதிகரித்தது) பெற்றது. இதை அங்காடியில் பவுன்களுக்கு விற்று அப் பவுன்களைக் கொண்டு பொன்னையோ அன்னியச் செலாவணியையோ அது வாங்கியது. மாற்றி மாற்றி அன்னியச் செலாவணிகளை வாங்கியும் விற்றும் பவுனின் மதிப்பில் ஏற்படும் மாறுதல்களைக் குறிப்பிட்ட வரம்பு களுக்குள் அது நிறுத்தி வைத்தது. ஆனால் இவ் வரம்பு, ஏற்கெனவே இந் நிதி சேர்த்துவைத்துள்ள பொன், அன்னியச் செலாவணி ஆகிய வற்றின் அளவைப் பொறுத்தது.

### செலாவணிக் கூட்டணிகளின் தோற்றம்

பல நாடுகளுக்கு பிரிட்டன் பிரதம அங்காடியாகவும் லண்டன் அவர்களுடைய சேமநிதி வைத்திருக்கும் இடமாகவும் இருந்தது. எனவே, தம் செலாவணிகளுக்குப் பாதகமாகப் பவுனின் மதிப்பு இறங்கினால் அவற்றுக்கு நஷ்டமுண்டாகும். எனவே, பிரிட்டன் பொன்னைக் கைவிட்டபோது இந் நாடுகளும் அதைப் பின்பற்றின. அவையும் பொன் திட்டத்தை விட்டு விலகித் தம் செலாவணிகளைப் பவுனோடு நெருக்கமாகப் பிணைத்துக்கொண்டன; தொடர்ந்து தம் பன்னுட்டுச் சேமநிதிகளின் பெரும்பகுதியை ஸ்டர்லிங் சொத்துக்களாக வைத்திருந்தன. ஒழுங்குமுறையோடு அமைக்கப்பட்ட ஸ்டர்லிங் பிராந்தியத்தின் (sterling area) தொடக்கத்தை இங்குக் காணலாம்.[3] அங்கத்தினர்களின் முக்கியச் சேமநிதிக் கேந்திரமாக இருந்த லண்டன், போர் மூளும் வரை அவற்றின் செலாவணிகள் பொதுவாகத் தடையின்றி மாற்றுரிமை பெற்றிருந்தபோதிலும், அவற்றின் விவகாரங்களில் பெரும்பான்மையைத் தீர்த்தும் வைத்தது. அதிகாரபூர்வமாக ஸ்டர்லிங்கை வாங்கியும் விற்றும் ஒவ்வொரு நாடும் தன் செலாவணியின் பவுன் மதிப்பை மாறுமல் வைத்திருந்தது; அதே சமயம் பவுனின் மதிப்பை டாலரிலும், பிற பொன் செலாவணிகளிலும் அதிகம் மாறுமல் பிரிட்டிஷ் நாணயமாற்றுச் சமன்காப்பு நிதி பார்த்துக்கொண்டது. பிரிட்டிஷ் நிதி அமைச்சகம், விதிமுறைப்படி இல்லாவிடினும் மிகத் திறமையுடன் வெளிநாட்டுக் கடன்களைக் கட்டுப்படுத்தி, ஸ்டர்லிங் பிராந்திய உறுப்பு நாடுகளுக்குமட்டும் மூலதன ஏற்றுமதி நடக்குமாறு பார்த்துக்கொண்டதனுல் பவுனின் மதிப்புத் திடநிலையில் நின்றது.

ஸ்டர்லிங்கின் மதிப்பு இறங்கி, ஸ்டர்லிங் பிராந்தியம் தோன்றிய பின்னர், பொன் திட்டத்தை விடாமல் பிடித்துக்கொண்டிருந்த நாடுகள் ஐந்தே ஐந்துதான். அவை: அமெரிக்கா, ஃபிரான்ஸ், ஸ்விட்சர்லாந்து, பெல்ஜியம், நெதர்லாந்து ஆகியவை.

பிற நாடுகளில் பெரும்பாலானவை ஏதாவது ஒருவகையில் நாணயமாற்றுக் கட்டுப்பாட்டைக் கடைப்பிடித்தன. அவ்வாறு செய்ததும் அவர்களது செலாவணிகள் உடனே தம் மாற்றுரிமையை இழந்தன. நாணயமாற்றுப் பிராந்தியத்திலிருந்த ஐரோப்பிய நாடுகள் தம் செலாவணிகளின் மதிப்புகளைப் பழைய பொன் மதிப்பிலேயே வைத்திருந்தன. ஆனுல், முக்கியமாகத் தென் அமெரிக்காவில் இருந்த,

[3] பின்னர் அங்கத்தினராகச் சேர்ந்த நாடுகளோடு, போருக்குமுன் ஸ்டர்லிங் பிராந்தியத்தில் கனடா தவிர, எல்லா பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளும், பால்டிக் நாடுகளும், எகிப்து, அயர் (Eire), ஈராக், பாலஸ்தீனம், போர்ச்சுகல், ஸ்காண்டிநேவிய நாடுகள், தாய்லாந்து ஆகியவை இருந்தன.

பிற நாடுகள் தம் செலாவணி மதிப்பை மிகவும் இறங்கவிட்டன; பின்னர் அப் புது விகிதங்களை அப்படியே அல்லது ஒன்றுக்கொன்றுள்ள வீதம் மாருமல் நிலையாக வைத்திருந்தன.

**உலக வாணிப முறையின் சிதைவு**

மிகப் பல நாடுகளில் நாணயமாற்றுக் கட்டுப்பாடும் மாற்றுரிமை நீக்கமும் ஏற்பட்ட பின் வாணிபம் இருமுகப் பாதையில் செல்ல ஆரம்பித்ததை 21ஆவது அத்தியாயத்தில் சுட்டிக் காட்டினேம். ஸ்டர்லிங் பிராந்திய நாடுகளும் அதற்கு வெளியில் உள்ள சில நாடுகளும் (முக்கியமாக ஜப்பான்) மதிப்பிறக்கம் செய்தது இப் போக்கை மேலும் பலப்படுத்தியது. தம் செலாவணிகளுக்குப் பெயருக்குக் கொடுக்கப்பட்ட பொன் மதிப்பைக் காப்பாற்றவேண்டி நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளைக் கடைப்பிடித்த நாடுகளின் விஷயத்தில் இது முக்கியமாக நடந்தது. ஏனெனில், இந் நாடுகளில் உள்நாட்டில் பணத்துறையில் என்ன மாறுதல்கள் ஏற்பட்டிருப்பினும், பிற செலாவணிகள் மதிப்பிறக்கம் அடைந்ததனுல் அவற்றேடு ஒப்பிட்டால் இச் செலாவணிகள் மிகை மதிப்புடையவையாக இருந்தன. இவற்றின் ஏற்றுமதிகள் மந்தப்பட்டன, இறக்குமதிகள் தூண்டப்பட்டன. எனவே, கட்டுப்பாடுகளை மேலும் இறுக்கவேண்டியதாயிற்று. ஏற்றுமதிகளுக்கு மாற்று அங்காடிகளும் இறக்குமதிகளைப் பெற வேறு இடங்களும் தேடவேண்டியிருந்தது. இதற்கு இருமுக வாணிப ஒப்பந்தங்கள் உதவின.

பொன் கூட்டணியைச் சேர்ந்த நாடுகளும் இதேபோல பாதிக்கப்பட்டன. அவற்றின் செலுத்துநிலை மோசமாவது அதிகமாகவே, வரிகளை உயர்த்தியும் இறக்குமதி அளவுக்கு வரம்புகளிட்டும் இறக்குமதி உயர்வை அவை தடுக்க முயற்சித்தன. முக்கியமாக, ஃபிரான்ஸ் நாடு இறக்குமதிக் கோட்டாக்களை (quotas) அதிகமாகப் பயன்படுத்தியது. கோட்டாக்கள் என்பவை, ஒரு நாட்டிற்குள் பலவகைப் பொருள்கள் இறக்குமதியாகும் அளவுக்கு ஒரு வரம்பு குறிப்பிடும் வாணிபத் தடை முறையாகும்.

பிரிட்டன்கூட, மதிப்பிறக்கத்தினுல் உலக விலைகள் வீழ்ந்ததனுல் ஏற்பட்ட தொல்லையிலிருந்து ஓரளவு விடுதலை கிடைத்தும்கூட, காப்பு முறையைப் பின்பற்றியது. போரின்போதும், அது முடிந்த உடனேயும், முதலில் விதித்த வரிகள் நிறைய இல்லை. 1931-லும் 1932-லும், கட்சிக்கூட்டு அரசாங்கத்தில் ஆதிக்கம் அதிகமாகப் பெற்றிருந்த கன்சர்வேடிவ் கட்சி, பல பொருள்கள்மீது இறக்குமதி வரிகளை விதித்தது. மந்தம் தொடங்கிய நாளிலிருந்தே இக் கட்சி, காப்புக் கொள்கையைப் பலமாக ஆதரித்து வந்திருந்தது. வரிகள் பலவகைத் தொழிற்சாலை உற்பத்திகளின் இறக்குமதி மதிப்பில் 20 சதவிகிதமாக இருந்தன. பல போகப்பொருள்கள்மீது 30 சதவிகித வரியும், சில

'ஆதார'த் தொழில்களின் உற்பத்திகள்மீது $33\frac{1}{3}$ சதவிகித வரியும் விதிக்கப்பட்டன.

நீண்ட நாட்களாக, பேரரசு நாடுகளைப் பேரரசுச் சலுகை (Imperial Preference) அமைப்பு ஒன்றால் மேலும் உறுதியாகப் பிணைக்க வேண்டும் என்று கன்சர்வேடிவ் கட்சி எண்ணி வந்திருக்கிறது. புதிய வரிகள் காமன்வெல்த் நாடுகளினின்று செய்யப்படும் இறக்குமதிகளுக்குப் பொருந்தவில்லை. அதனால், ஒருவருக்கொருவர் சலுகைகள் தரப் பேரம்பேச ஓர் அடிப்படை இதனால் ஏற்பட்டது. எனவே, 1932-ல் இதன் சாத்தியக் கூறுகளை ஆராய ஒட்டாவா மகாநாடு (Ottawa Conference) கூட்டப்பட்டது.

பிரிட்டன் பெரும்பாலும் தொழிற்சாலைப் பொருள்களையே ஏற்றுமதி செய்தது. எனவே, இப் பொருள்களை டொமினியன் அங்காடிகளில் விற்பதன்மீதிருந்த தடைகள் குறையவேண்டும் என்று பிரிட்டன் விரும்பியது. ஆனால், தம் தொழில்கள் மேலும் வளரவேண்டும் என்பதில் டொமினியன்கள் ஆழ்ந்த அக்கறை காட்டின. இவ்விரு குறிக்கோள்களும் ஒன்றுக்கொன்று முரணாகத் தோன்றின. இவை ஓரளவாவது ஒத்துப்போகவேண்டுமென்றால், வெளிநாட்டுப் பொருள்கள் மீது வரிகளை உயர்த்தி, ஆனால், அதேசமயம் பிரிட்டிஷ் பொருள்கள்மீது சிறிது குறைவாக, ஆனால் தம் தொழில்களைப் பாதுகாக்கத் தேவையான அளவுக்கு இறக்குமதி வரிகளை டொமினியன்கள் விதிக்கவேண்டும் என்பதைத் தவிர வேறு வழியில்லை. பொதுவாக இதைத்தான் அந் நாடுகள் செய்தன. தன்னைப் பொறுத்தவரையில், பிரிட்டன் ஏற்கெனவே இருந்த பல சலுகைகளை அப்படியே வைத்திருந்ததோடு, டொமினியன்கள் விசேஷ அக்கறை கொண்ட சில பொருள்களின் வெளிநாட்டு அளிப்புகள்மீது புது 'ஒட்டாவா' (Ottawa) வரிகளை விதித்தது. இவ்வாறு ஒட்டாவா மகாநாட்டுக்குப் பிறகு காமன்வெல்த் இறக்குமதி வரிகள் அயல்நாட்டுப் பொருள்கள்மீது மேலும் உயர்ந்தன.

பன்னாட்டு நிதி நெருக்கடியின் விளைவுகளைப் பின்வருமாறு சுருக்கிக் கூறலாம். முதலாவதாக, பன்னாட்டுப் பணமுறையின் சரிவுக்கு அது காரணமாக இருந்தது. அம் முறைக்குப் பதிலாகப் பொன் திட்டத்தைப் பின்பற்றிய ஐந்து நாடுகளும், ஏறி இறங்கும் வீதமுடைய, ஆனால், மாற்றுரிமை கொண்ட செலாவணிகளையுடைய அதைவிடப் பெரிய தொகுதியும், நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளையுடைய மற்றொரு பெரிய தொகுதியுமாக மூன்று தனித்தனிப் பிராந்தியங்களாக உலகம் பிரிந்தது. இரண்டாவதாக, முக்கியமாக இப் பிரிவினையினாலும் ஓரளவுக்கு வேறு வெளிக் காரணங்களாலும் உலக வாணிபமுறையே சிதையலாயிற்று; இறக்குமதி வரிகள் பெருகின, உயர்ந்தன; கோட்டாக் கட்டுப்பாடுகள் பரவின; வாணிபம் மேலும் மேலும் இருமுகப் பாதையில் சென்றது.

**உலகப் பொருளாதார மகாநாடு: 1932**

பன்னாட்டு வாணிபமும் நிதியமைப்பும் சரிவதைத் தடுக்க முயற்சி யெடுத்தால்தான் மீட்சி எல்லா நாடுகளிலும் எப்போதைக்கும் ஏற்படும் என்ற அபிப்பிராயம் 1932-ன் கோடைக்காலத்தில் பரவியிருந்தது. இந்த முயற்சிகளை எல்லா அரசாங்கங்களும் ஒத்துழைத்தால்தான் செய்யமுடியும். எனவே, 1933 ஜூனில் ஓர் உலகப் பொருளாதார மகாநாடு நடைபெற ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஏற்பாடுகள் செய்யும் நிபுணர் குழு மகாநாட்டுக்கான விஷயப்பட்டியல் ஒன்றை விவரமாகத் தயாரித்தது. இறக்குமதி வரிகள், வாணிப அளவுக் கட்டுப் பாடுகள், கச்சாப் பொருள்களையும் உணவுப் பொருள்களையும் பற்றிய உடன்பாடுகள், முக்கியமாகச் செலாவணியைத் திடநிலைப்படுத்துதல் உட்படப் பல பணப் பிரச்சினைகள் ஆகியவை இப் பட்டியலில் சேர்க்கப்பட்டன. பண நிலவரத்தை மீண்டும் திடநிலைப்படுத்தினால், ' நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை ஒழிக்கவும் மாற்றுகைக் கஷ்டத்தை நீக்கவும் அது வழி செய்யுமாதலின் ', பன்னாட்டு வாணிபம் மீண்டும் பழையபடி ஆகும் என்று எதிர்பார்க்கப்பட்டது. இந்த மகாநாடு லண்டனில் கூடியவுடன், அது உறுதியான எந்த விளைவையும் பெறும் முன்னர், அமெரிக்க டாலரின் திடநிலை அழிந்ததன் காரணமாக இந்த எண்ணம் ஈடேறுமல் போயிற்று.

**டாலரின் மதிப்புக் குறைப்பு**

அமெரிக்காவில் பணச் சுருக்கம் விசேஷமாகக் கடுமையாக இருந் தது. 1929-க்கும் 1932-க்கும் இடையில் மொத்த விற்பனை விலைகள் 32 சதவிகிதம் விழுந்தன. நாட்டு வருமானம் பாதி ஆயிற்று. விலை கள் விழுந்ததும், வணிகக் கடன்களை பாங்குகள் வேகமாகத் திருப்பி வாங்கின. 1932 முடிவில் எல்லா பாங்குகளும் கொடுத்திருந்த மொத்தக் கடன்கள் 42 சதவிகிதம் சுருங்கியது. நிலம், வீடுகள்மீது அளிக்கப் பட்ட கடன்கள் 10 சதவிகிதம்தான் குறைந்தன. சொத்துகளின் மதிப்புக் குறைந்ததால் இந்த அடைமானங்களின் ஈட்டு மதிப்பு மறைந்துபோயிற்று. மேலும்மேலும் பாங்குகள் மூடப்பட்டன. மொத்த எண்ணிக்கையில் சுமார் மூன்றில் ஒரு பங்கு பாங்குகள், அதாவது ஏறக்குறைய 5,100 பாங்குகள் 1930-க்கும் 1932-க்கும் இடையே மூடப் பட்டன.

பாங்குகளின் தளர்ந்தநிலை மேலும் தெரியத் தெரியச் செலாவணி யையும் பொன்னையும் மக்கள் வீட்டிலே சேர்த்துவைக்க ஆரம்பித்தனர். 1933-ல் இப் பதுக்கல் பீதி நிலையை அடைந்தது. மார்ச்சு 16ஆம் தேதி ஜனாதிபதி ரூஸ்வெல்ட், நாட்டு பாங்கு ' விடுமுறை ' (holiday) ஒன்றை அறிவித்தார். பொருளையும் வெள்ளியையும்

கருவூலத்தின் அனுமதியின்றி ஏற்றுமதி செய்யக்கூடாது என்ற தடையையும் அதேசமயம் விதித்தார். ஒரு மாதம் கழித்து இவ்வாறு அமெரிக்கா பொன் திட்டத்திலிருந்து விலகியது, தொடர்ந்து நீடிக்கும் என்றும் அறிவித்தார். அதேசமயம், டாலரின் பொன் அளவை 50 சதவிகிதம் குறைப்பதற்கு அவருக்கு அனுமதி அளித்து அமெரிக்கக் காங்கிரஸ் சட்டம் இயற்றியது. டாலர் நாணயத்தின் மதிப்பு ஏறி இறங்கலாயிற்று.

இந்தத் தீவிரமான நடவடிக்கைக்கும் அமெரிக்காவின் செலுத்துநிலைக்கும் சம்பந்தமில்லை. பிற நாடுகளின் செலுத்துநிலையைவிட அது பலமாக இருந்தது. கடன் செலாவணியும் விலைகளும் சுருங்குவதுபற்றியே நாம் எப்போதும் கவலைப்பட்டுக்கொண்டிருந்ததைத்தான் இது பிரதிபலிக்கிறது. பொன்னின் விலையை உயர்த்தினால் பொருள்களின் விலையும் நேர் விகிதத்தில் தானே உயரும் என்று ஜனாதிபதி ரூஸ்வெல்டின் ஆலோசகர்கள் சிலர் எளிமையான அபிப்பிராயம் கொண்டிருந்தனர். அவர்களது அபிப்பிராயம் அவருக்குச் சரியெனப்படவே அவர்களது கொள்கையைக் கடைப்பிடிக்க அவர் தீர்மானித்தார். அதனால், உலகப் பொருளாதார மகாநாடு நாணய மாற்றைத் திடநிலைப்படுத்தத் தெரிவித்த ஒரு குறிப்பான யோசனையை அவர் நிராகரித்தார்; மேலும், சுமார் மூன்று வாரங்களுக்குப் பயனற்ற விவாதங்களை மகாநாடு செய்தது. ஆனால், அதனின்று எந்த விளைவும் ஏற்படவில்லை.

சிலகாலத்துக்கு, டாலரின் மதிப்பிறக்கமும் விலைகள் உயருவதும் ஒன்றாக ஏற்பட்டன. முதலில் ஊகவாணிகர்கள் மேலும் அரசாங்கம் நடவடிக்கை எடுக்கும் என்று எதிர்பார்த்து அன்னியச் செலாவணிகளை உயர்ந்த விலைக்கு வாங்கினர். பின்னர் புனரமைப்பு நிதிக் கார்ப்பொரேஷன் (Reconstruction Finance Corporation) தன் புதிய அதிகாரத்தைப் பிரயோகித்துப் பொன்னை வாங்கலாயிற்று. அதனால் பொன்னின் விலை படிப்படியாக உயர்ந்தது. ஜூலை வந்தபோது, நாணயமாற்று வீதங்களின் எடையிட்ட சராசரி (weighted average) பிப்ரவரி அளவுக்கு மேல் 32 சதவிகிதம் உயர்ந்தது. ஏற்றுமதி விலைகள் 33 சதவிகிதம் உயர்ந்தன, இறக்குமதி விலைகள் 27 சதவிகிதம் உயர்ந்தன, உள்நாட்டு விலைகள்மட்டும் 12 சதவிகிதம் உயர்ந்தன.

கோட்பாட்டளவில் நியாயமாக எதிர்பார்க்கக்கூடியதைவிட உண்மையில் ஏற்றுமதி விலைகள் மிகவும் அதிகமாக உயர்ந்தன. ஏனெனில், அப்போதிருந்த மந்த நிலையில் ஏற்றுமதிகளின் அளிப்பு மிகவும் நெகிழ்ச்சியுடையதாக இருந்தது. மேலும், அமெரிக்க ஏற்றுமதிகளில் பெரும்பகுதி உள்நாட்டிலேயே நுகரப்பட்டதால், அவற்றின் டாலர் விலை கணிசமாக உயர்ந்தால் உள்நாட்டில் வாங்குவது குறைந்து

உற்பத்தி வெளிநாடுகளை நோக்கிப் பாயும்.[4] அமெரிக்க இறக்குமதிகளைப் பார்த்தோமானால், அவை பெரும்பாலும் கச்சாப் பொருள்களாகவும் பண்படுத்தப்படாத உணவுப் பொருள்களாகவும் இருந்தன. குறுகிய காலத்தில் அவற்றின் அளிப்பு நெகிழ்ச்சியற்றது. தவிர, அவற்றின் உற்பத்தியாளருக்கு இப் பெரிய அமெரிக்க அங்காடி மிகவும் முக்கிய மானது. இவ்விரு காரணங்களுக்காகவும், அமெரிக்க இறக்குமதிகளை அளித்த வெளிநாட்டுக்காரர்கள், டாலர் மதிப்பு இறங்கியபோது தம் விலைகளைக் குறைத்து, அமெரிக்காவில் அவற்றின் விலைகள் அதிகம் மாருதவாறு விட்டனர்.

கோட்பாடுகளின்படி எதிர்பார்த்ததும் உண்மையில் ஏற்பட்டதும் முரண்பட்டிருப்பதற்குக் காரணமாக அதேசமயம் நடந்த வேறு சில மாறுதல்களைக் காட்டலாம். 1933ஆம் ஆண்டின் நாட்டுத் தொழில் மீட்சிச் சட்டம் (National Industrial Recovery Act) விலைகளைக் குறைப்பதைத் தடை செய்தது. கூலிகளுக்கு அடிவரம்பு நிச்சயித்து அவற்றை உயர்த்தியது. கூலி உயர்வுகளை எதிர்பார்த்துத் தொழிற் சாலைகள் தம் உற்பத்தியை 1929 அளவில் பாதிக்குப் பெருக்கினர். விவசாயச் சட்டங்கள் உற்பத்தியைக் குறைப்பதற்கு விவசாயிகளுக்குப் பணம் கொடுத்தன. இதனால், விவசாய உற்பத்திகளை ஊகவணிகர்கள் வாங்கினர். ஏற்றுமதி விலைகள் உயர்ந்ததற்கு உள்நாட்டில்மட்டும் ஏற்பட்ட இந் நிகழ்ச்சிகள்தான் முக்கியக் காரணமே அன்றி நாணய மாற்று மதிப்பிறக்கம் அன்று. உலக நிலைமையில் தாற்காலிகமாக ஓர் அபிவிருத்தி ஏற்பட்டுப் பல முக்கிய நாடுகளில் மொத்த விற்பனை விலைகள் மேல்நோக்கி மாறியதன் காரணமாக ஏற்றுமதி விலைகள் மேலும் உயர்ந்து அமெரிக்க இறக்குமதிகளின் விலை உயருவதும் தூண்டப்பட்டது.

அடுத்த பல மாதங்களில், நிலைமை மாறியது. 1933 ஜூலைக்கும் 1934 பிப்ரவரிக்கும் இடையே ஏற்றுமதி விலைகள் 2 புள்ளிகள்தான் உயர்ந்தன. அவை 135 ஆயிற்று. இறக்குமதி விலைகள் மேலும் சற்று உயர்ந்தன. 127-லிருந்து 131 ஆயின. நாணயமாற்று வீதங்களின் சராசரி 132-லிருந்து 146ஆக உயர்ந்தது. உறுதியான ஆதரவு இல்லாமல் இருந்ததால் முதலில் ஏற்பட்ட விரிவு நின்று மேலும் ஒரு தாழ்ச்சி ஏற்பட்டது. தொழில் உற்பத்தி, வருமானம், நுகர்வு

[4] அமெரிக்கா ஒரு பெரிய நாடு. அதன் உற்பத்தியில் ஒரு சிறிய பகுதியையே அது ஏற்றுமதி செய்கிறது. வெளிநாட்டு விலைகள் குறைவால் வெளிநாட்டு விற்பனை அதிகமாவதன்மூலம் அதன் மொத்தத் தேவை மிகவும் அதிகமாகாது. தவிர, பல பொருள்களின் மொத்த உலக அளிப்பில் பெரும் பகுதியை இப் பெரிய அமெரிக்கப் பொருளாதாரம் அளித்தது ; அதன் ஏற்றுமதிகளில் எந்த உயர்வு ஏற்பட்டாலும் வெளிநாட்டு விலைகளை அது மோசமாக மந்தப்படுத்தும். (இதில் அடங்கிய பல காரணிகளைப்பற்றி மீண்டும் பார்க்க 18ஆவது அத்தியாயத்திற்குச் செல்லவும்.)

எல்லாம் விழுந்தன. வெளிநாட்டு விலைகள் உயருவது நின்றது. அவை கீழே போகலாயின. அமெரிக்காவில் நாணயமாற்று மதிப் பிறக்கத்தின் பணச் சுருக்க விளைவை ஓரளவுக்கு இது பிரதிபலிப்பதாக இருக்கக்கூடும்.

அதன் விளைவுகளைப் பார்த்தால், டாலரின் மதிப்பிறக்கம் சரிதான் என்று கூறுவது கடினம். நிர்வாகத்துறையினர் விலைகளை உயர்த்த வேண்டிய குறிக்கோளைக் கொண்டிருந்தனர். அதற்கு இது சரியாக உதவவில்லை. தவிர, இது மூலகாரணத்தைச் சரிசெய்யாமல் அதன் அடையாளத்தைக் குணப்படுத்தப் பார்த்தது என்று இதைக் கண்டிக்க லாம். மூலகாரணம், தனியார் முதலீட்டுச் செலவு மறைந்துபோன தாகும். நாட்டு வருமானத்தின் சுருங்கிப்போன இவ் அங்கத்தை ஈடு செய்ய அரசாங்கச் செலவை அதிகரிக்கப் பின்னர் கடைப்பிடிக்கப்பட்ட மீட்சி நடவடிக்கைகள் முயன்றன; அவை இதைவிட நன்கு வெற்றி பெற்றன.

எப்படி இருப்பினும், 1934 ஜனவரி 31 அன்று அமெரிக்காவின் செலாவணி மதிப்பிறக்கப் பரிசோதனை முடிந்தது. பொன்னின் விலை அவுன்சுக்கு $ 35 ஆக நிர்ணயிக்கப்பட்டது. மதிப்பிறக்கத்துக்கு முன் அதன் விலை $ 20·67. பொன்னுடனோ, பொன் நாணயங்களோடோ ஒப்பிட்டால் டாலரின் மதிப்பு நிச்சயமாகச் சுமார் 41 சதவிகிதம் குறைக்கப்பட்டுவிட்டது.

## நாணயமாற்று மதிப்பிறக்கத்தின் விளைவுகள்

### வியாபாரத்தின்மீதும் உற்பத்தியின்மீதும் விளைவுகள்

டாலரின் மதிப்புக் குறைப்போடு, ஸ்டர்லிங் மற்றும் அத்துடன் இணைந்த செலாவணிகளும் மதிப்பிறக்கம் அடைந்ததும், மீதமுள்ள பொன் திட்ட நாடுகளில்'பணச் சுருக்கம் பலப்பட்டது; நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளின் ஆதரவோடு மிகை மதிப்படைந்திருந்த செலாவணி களை உடைய நாடுகளின் செலுத்துநிலைமீது இருந்த அழுத்தமும் அதிமாயிற்று. பொன் நாடுகள் செலாவணி மதிப்பைக் குறைப்பதைத் தவிர்க்க முடியுமா என்ற சந்தேகம் அதிகமானதும் உலக வாணிபம் காரணமாக மூலதன ஓட்டம் ஏற்பட்டது. மீண்டும் போர் வரும் என்ற பயம் அதை அதிகமாக்கியது. டாலரின் திடநிலை மீண்டும் ஏற்பட்டுவிட்டதால் இம் மூலதனத்தில் பெரும் பகுதி பாதுகாப்பை நாடி அமெரிக்காவை வந்தடைந்தது. 1934-க்கும் 1936-க்கும் இடையே மூலதன உள்வரவுக்கு இணையாகப் பொன்னின் உள்வரவு $ 4 பிலியனைத் தாண்டியது. இதில் ஏறக்குறைய பாதித் தொகை பொன் திட்ட நாடு களின் சேமநிதிகளினின்று வந்தது.

முதலில் இந் நாடுகள் தம் இறக்குமதி வரிகளை உயர்த்தி வாணிப அளவுக் கட்டுப்பாடுகளை மேலும் இறுக்கமாக்கின. பின்னர், 1935-ன் தொடக்கத்தில், பெல்ஜியம் தன் செலாவணியை 28 சதவீதம் மதிப் பிறக்கம் செய்தது; ஸ்விட்சர்லாந்து, ஃபிரான்ஸ், நெதர்லாந்து நாடுகள் அதை 1936 செப்டெம்பரில் பின்பற்றி முறையே, ஏறக்குறைய 30, 25, 19 சதவிகிதங்கள் தம் செலாவணிகளின் மதிப்பைக் குறைத் தன. ஃபிரான்ஸ் தொடர்ந்து பொன்னை இழந்தது. அதனால், நிலைமை யைச் சமாளிக்க முடியவில்லை. அடுத்து இரு முறை ஃபிராங்கின் மதிப்புக் குறைக்கப்பட்டது. பின்னர் 1938-ல் அடியோடு பொன் திட்டத்தை விட்டு ஃபிரான்ஸ் நீங்கியது. ஸ்டர்லிங்கின் அளவில் ஃபிராங்கு நாண யத்தின் மதிப்பு திடநிலைப்படுத்தப்பட்டது. ஜெர்மனியும், கிழக்கு ஐரோப்பாவிலும் தென் அமெரிக்காவிலும் இருந்த பிற நாணயமாற்றுக் கட்டுப்பாட்டு நாடுகளும் தம் கட்டுப்பாடுகளை மேலும் பலப்படுத்தின. தம் ஏற்றுமதிகளைத் தூண்டுவதற்காகப் 'பல நாணயமாற்று வீதப்' பரிசோதனையை மேற்கொண்டன.

1933-லிருந்து உலகத்தின் தொழிற்சாலை உற்பத்தி, நிலையாக அதிகரித்து 1936-ன் முடிவில் 1929-ல் இருந்த அளவைவிட 20 சத விகிதம் அதிகமாக இருந்தபோதும் உலக வாணிபம் வேகமாக அபிவிருத்தி அடையவில்லை. 1936 டிசம்பரில் அது இன்னமும் 1929 அளவுக்கு 10 சதவிகிதம் குறைவாகவே இருந்தது. பொன் திட்டப் பிராந்தியம், நாணயமாற்றுக் கட்டுப்பாட்டுப் பிராந்தியம் ஆகிய இரண்டிலும் கட்டுப்பாடுகள் மேலும் பலப்படுத்தப்பட்டதை இது காட்டுகிறது.

இந்தப் பாதகமான மாறுதல்களுக்கு ஓரளவு ஈடு செய்யுமாறு நாணயமாற்று மதிப்பிறக்கமும் பொன்னை விட்டு விலகியதும் உள் நாட்டில் பொருளாதாரம் வளருவதற்குக் காரணமாக இருந்தது. இக் கொள்கையைக் கடைப்பிடித்த நாடுகளுக்குச் சேமநிதிகள் நஷ்ட மாகும் என்ற பயம் இல்லை. எனவே, கடன்கள், நிதிக்கொள்கை ஆகிய விஷயங்களில் அவை தாராளமாக இருக்க முடிந்தது. 1932-ன் முதல் பகுதியில் இங்கிலாந்து பாங்கு தன் பாங்கு வீதத்தை 6-லிருந்து 2 சதவீதமாகக் குறைத்தது; பகிரங்க மார்க்கெட்டில் பத்திரங்களை வாங்கி வணிக பாங்குகளின் சேமநிதிகளை அதிகரித்தது. ஸ்வீடனும் மலிவான பணக்கொள்கையைக் (cheap-money policy) கடைப் பிடித்து அரசாங்கச் செலவுகளை அதிகரித்தது. இந் நாடுகளிலும் இதே போன்று நடந்த பிற ஸ்டர்லிங் பிராந்திய நாடுகளிலும் தொழிற்சாலை உற்பத்தி வேகமாக உயர்ந்தது; 1936-ல் அதற்குமுன் 1929-லிருந்த உச்சநிலையைவிட மிக அதிகமான அளவை அது அடைந்தது. இந் நாடுகளில் உற்பத்தியும் வருமானங்களும் உயர்ந்ததனால் இவற்றின்

வாணிபம், முக்கியமாக ஒன்றேடொன்று செய்த வாணிபம் அதிகரித்தது.[5]

ஜெர்மனியைப்போன்று, நாணயமாற்றுக் கட்டுப்பாடுகள் இருந்த நாடுகளில் வெளிச் சக்திகள் பாதிக்காமல் உள்நாட்டுப் பொருளாதாரம் பாதிக்கப்பட்டதால், சில கட்டுப்பாடுகள் வாணிப வளர்ச்சியைத் தடுத்தபோதிலும், உள்நாட்டில் பொருளாதார வளர்ச்சி முதலில் கூறிய நாடுகளில் ஏற்பட்டதுபோலவே இங்கும் ஏற்பட்டது. ஆனால், பொன்னைக் கைவிடாத நாடுகளில் பொருளாதார மீட்சி மிகச் சிறிய அளவில்தான் இருந்தது; 1936-ன் உற்பத்தி அளவுகள் 1929-ன் அளவுகளைவிட மிகவும் குறைவாக இருந்தன.

## இரண்டாவது உலகப் போருக்குமுன் உலகப் பொருளாதாரம்

1932-க்குப் பின்னும் இறக்குமதி வரிகளை மேலும் உயர்த்துவதும் இறக்குமதி அளவுகளை மேலும் கட்டுப்படுத்துவதும், நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை மேலும் பலப்படுத்துவதும் தொடர்ந்து நடந்து வந்தன. இதனால் உலகப் பொருளாதார இணைப்பு மேலும் சிதைந்தது. எனினும், இரண்டாவது உலகப் போர் தொடங்குவதற்குச் சற்று முன்னால் நிலைமை சற்றுத் தெளியலாயிற்று.

### நாணயமாற்று வீதச் சமநிலை நெருங்குதல்

மூன்று தனித்தனிச் செலாவணிப் பிராந்தியங்கள் அப்போதும் இருந்தன. ஆனால், அடுத்தடுத்து நாணய மதிப்பைக் குறைத்த காலமும் திடநிலையற்று நாணயமாற்று வீதம் ஏறித் தாழ்ந்த காலமும் முடிவடைந்தன. இறுதியாக டாலரின் மதிப்புக் குறைக்கப்பட்ட பிறகு, டாலர்/ஸ்டர்லிங் வீதம் சுமார் மூன்று சதவீத வீச்சுக்குள்தான் ($ 4·90-லிருந்து $ 5·05-க்குள்) மாறியது; சுமார் பதினாறு இதர செலாவணிகள் ஸ்டர்லிங்கோடு உறுதியாக இணைக்கப்பட்டிருந்தன. கட்டுப்படுத்தப்பட்ட செலாவணிகள்மீதானவற்றைத் தவிர, நாணயமாற்று வீதங்கள் சமநிலை அளவுகளை நெருங்கின. பல நாணயமாற்று வீத முறையைப் பயன்படுத்துவதில் ஏற்படும் சிறிய அளவு மதிப்புக் குறைப்பினால் கட்டுப்பட்ட செலாவணிகள்கூட உண்மை மதிப்பை நெருங்கின.

[5] அமெரிக்கா தாற்காலிகமாகப் பொன்னைக் கைவிட்டதனால்தான் பின்னர் பெருக்கம் ஏற்பட்டது என்று அதை ஆதரிக்கலாம். (ஆனால், அதன் பின்னர் கட்டாயமாக ஏற்பட்ட மதிப்பிறக்கத்தை இவ்வாறு ஆதரிக்க முடியாது.) ஏனெனில், அதற்குமுன் 1933-லும் 1932-லும் கடன் அடிப்படையை விரிவாக்க முயற்சிகள் செய்தபோது, பொன் வெளியேறியது.

**வாணிப உடன்பாடுகள் திட்டம்**

வாணிபக் கொள்கை விஷயத்தில்கூட, இறக்குமதி வரிகளை ஓரளவுக்குக் குறைக்கும் திட்டம் ஒன்று அமலுக்கு வந்தது. இதற்கான மசோதாவை அமெரிக்க உள்துறைக் காரியதரிசி (Secretary of State) கார்டெல் ஹல் (Cordell Hull) கொண்டுவந்தார். படிப்படியாக இறக்குமதி வரிகளைக் குறைக்க அனுமதித்த இந்தச் சட்டம் 1934-ல் அமெரிக்கக் காங்கிரஸால் நிறைவேற்றப்பட்டது. இதற்குப் பரஸ்பர வாணிப உடன்பாடுகள் சட்டம் (Reciprocal Trade Agreements Act) என்று பெயர். பிற நாடுகளும் அமெரிக்கா செய்வதற்கு இணையான சலுகைகளைக் கொடுத்தால் அமெரிக்க இறக்குமதி வரிகளை 50 சதவிகிதம்வரை குறைக்க வியாபார ஒப்பந்தங்களை அப் பிற நாடுகளுடன் செய்துகொள்ள ஜனாதிபதிக்கு இச் சட்டம் அதிகாரம் அளித்தது. அமெரிக்கா கொடுக்க முன்வந்த சலுகைகளையும், அதற்கு மாறாக எதிர்பார்த்த சலுகைகளையும் ஆராய்வதும் அவற்றை அடையச் செய்யவேண்டிய பேச்சுவார்த்தைகளை நடத்துவதும் நிர்வாக இலாகாக்களின் பிரதிநிதிகள் கொண்ட குழுக்கள் செய்யவேண்டி இருந்தது. இதனால் இறக்குமதி வரி நிர்ணயம் காங்கிரஸின் அரசியல் மேடையை விட்டு விலக்கப்பட்டது. இப் பிரச்சினையை அறிவுக் கண்களோடு பரிசீலிக்க இது முதன்முதலாக வழி செய்தது.

முக்கியமாக, 1934-ல் இருந்த மந்த நிலவரத்தில், வெளிநாட்டு வரிகள் குறைவதால் அமெரிக்க ஏற்றுமதிகள் அதிகரிக்கும் என்பதை அழுத்திக் கூறியிராவிட்டால் காங்கிரஸ் இந்தச் சட்டத்தை இயற்றி இராது. அமெரிக்க இறக்குமதி வரிகளில் மாறுதல்கள் செய்வதைக் காங்கிரஸின் கைகளினின்று எடுத்து நிர்வாகத் துறையினரிடம் இச் சட்டம் கொடுத்துவிட்டது. 1930-ல் ஸ்மூட்-ஹாலி இறக்குமதி வரிச்சட்டம் நிறைவேறுமுன் ஓராண்டுக் காலம் சட்டமன்றத்தில் நடந்த சச்சரவுகள் பயங்கரக் கனவுகளாகப் பல காங்கிரஸ் உறுப்பினரின் நினைவில் இருந்ததால் இவ்வாறு அதிகாரத்தைத் துறப்பதை அவர்கள் வரவேற்றனர் என்பதில் ஐயம் இல்லை. அப்போது, அச் சட்டம் நிறைவேறுமுன், எண்ணற்ற தொகுதியினர் இவர்களது ஆதரவைத் தேடி, இவர்களைச் சதா தொந்தரவுபடுத்தி, இவர்களை 'நூற்றுக்கணக்கான வெவ்வேறு தொழில்களின் சங்கேத பாஷையில் விளக்கப்பட்ட ஆயிரக்கணக்கான வெவ்வேறு வரி வீதங்கள் வேண்டுமா வேண்டாமா என்பதைப்பற்றித் தீர்ப்பளிக்குமாறு' கேட்டுக்கொண்டனர்.[6]

[6] Raymond Vernon, 'America's Foreign Trade Policy and the GATT," *Essays in International Finance*, No. 21 (October, 1954). International Finance Section, Princeton University பதிப்பித்தது.

பாதுகாப்பளிப்பதைக் கைவிடவேண்டும் என்று பரஸ்பர வியாபார உடன்பாடுகள் திட்டம் எவ்வகையிலும் எண்ணவில்லை. ஏனெனில், அதில் 'அபாயநிலை ஷரத்து' (peril point clause) ஒன்று இருந்தது. இறக்குமதி வரிகளைக் குறைப்பதால் அமெரிக்கத் தொழிலுக்கு மோசமான தீங்கு விளையுமானால் வரிகளைக் குறைக்கக் கூடாது என்று அது கூறியது. ஒரு 'விலக்கு ஷரத்தும்' (escape clause) அதில் இருந்தது. பேச்சு வார்த்தைகளின் பயனாக ஒரு வரியைக் குறைத்ததனால் மோசமான தீங்கு ஏற்பட்டால் மீண்டும் அவ் வரியை உயர்த்தலாம் என்று இது கூறியது. இந்தத் தடைகள் இருந்தபோதிலும் வியாபாரத்தைத் தாராளமாக்கும் குறிக்கோளை நோக்கி முன்னேறுவதில் வாணிப உடன்பாடுகள் சட்டம் ஒரு படி என்பதில் ஐயமில்லை. பின்னர், சம்னர் வெல்லிஸ் (Sumner Welles) 'முழுவதும் மீளமுடியாது இருள் மண்டிக்கிடந்த உலக மனப்பாங்கிலே ஒரே ஓர் அறிவு ஒளி' என்று விவரித்தார்.[7]

வியாபார உடன்பாடுகள் சட்டம் முதலில் மூன்று ஆண்டுகளுக்காக இயற்றப்பட்டது. அதன் பிறகு மீண்டும்மீண்டும் புதுச் சட்டமாக இயற்றப்பட்டது. போருக்குப் பின் அதில் சில திருத்தங்கள் செய்யப் பட்டன. 1962-ல் மேலும் தாராளமான வியாபாரப் பெருக்கச் சட்டம் (Trade Expansion Act) அதற்குப் பதிலாக இயற்றப்பட்டது. போர் மூளுவதற்குமுன் இருபத்தொரு வியாபார ஒப்பந்தங்கள் கையெழுத்தாயின. இவற்றின்கீழ் அமெரிக்காவிற்குள் வரும் வரியுள்ள இறக்குமதிகளின் சராசரி இறக்குமதி வரி பெருமளவுக்குக் குறைந்தது. அதற்கு ஈடாக, இந்த ஒப்பந்தங்களில் கையெழுத்திட்ட பிற நாடுகள் அமெரிக்க ஏற்றுமதிகளின்மீது வரிகளைக் குறைத்தன.[8] போகப்போக வாணிபத் தடைகளை உயர்த்திக்கொண்டே போகும் போக்கை இத் திட்டம் மாற்றியதன்மூலம் பின்னர் போர் முடிந்தவுடன் இப் பிரச்சினைக்கு ஒரு பரவலான தீர்வு காண ஒரு வழியை ஏற்படுத்தியது.

## பார்வைக்குரிய சில நூல்கள்

Ashworth, William, *A Short History of the International Economy*, 1850–1950. London : Longmans, Green & Co., 1952. 1914-க்கும் 1950-க்கும் இடையில் நடந்த முக்கியமான நிகழ்ச்சிகளை அழகாகவும் சுருக்கமாகவும் VII, VIII அத்தியாயங்கள் விவரித்து அவற்றின் முக்கியத்துவத்தையும் மதிப்பிடுகின்றன.

[7] Sumner Welles, 'Postwar Trade Policies of the United States,' *International Conciliation* (May, 1943), பக்கம் 394.

[8] வியாபார உடன்பாடுகள் திட்டத்தின் விளைவாக எந்த அளவுக்கு அமெரிக்க இறக்குமதி வரிகள் குறைந்தன என்பதுபற்றிய மதிப்பீடுகளுக்கு முப்பதாவது அத்தியாயத்தைப் பார்க்கவும்.

Bank of International Settlements, *Annual Reports* (Berne). தற்கால மாறுதல்களை மதிப்பிட இந்த அறிக்கைகள் மிகவும் உபயோகமுள்ளவை.

Beyen, J.W., *Money in a Maelstrom*. New York: Macmillan, 1949. இரகசியங்களை நன்கு அறிந்தவர் ஒருவரால், போர்களுக்கிடையான காலத்தில் பணத்துறையில் ஏற்பட்ட சமநிலைக் கேடுகள் அழகாக விவரிக்கப்படுகின்றன.

Brown, William Adams, Jr., *The Gold Standard Reinterpreted*, 1914–1934. New York: National Bureau of Economic Research, 1940. முதல் உலகப் போருக்குப் பின் பொன் திட்டத்தில் ஏற்பட்ட மாறுதல்களை விவரமாகக் கூறுகிறது.

Harrod, R. F., *The Life of John Maynard Keynes*. London: Macmillan, 1952. நிகழ்ச்சிகளில் முக்கியமான பங்கு கொண்ட செல்வாக்கு உடையவர் ஒருவருடைய கண்ணோக்கில் போர்களுக்கு இடையான காலத்தில் நடந்த விஷயங்களைத் தெளிவாக இந்நூலின் மத்தியிலுள்ள அத்தியாயங்கள் கூறுகின்றன.

*Interim Report of the Committee on Currency and Foreign Exchanges after the War*, British Banking Statutes and Reports, 1922–28, Vol. II, ed. T. E. Gregory. New York: Oxford University Press, 1928-ல் மீண்டும் அச்சிடப்பட்டது. 1925-ல் பிரிட்டன் மீண்டும் பொன் திட்டம் மேற்கொள்ள அதிகார பூர்வமாக வழிசெய்த கன்லிஃப் கமிட்டியின் அறிக்கை.

Kahn, Alfred E., *Great Britain in the World Economy*. New York: Columbia University Press, 1946. பிரிட்டிஷ் பொருளாதாரத்தில் 1914-க்குப் பின் ஏற்பட்ட மாறுதல்களையும் அவை பிரிட்டனின் பன்னாட்டு நிலைமையை எப்படிப் பாதித்தன என்பதையும் சான்றுகளுடன் படிக்க இனிமையாகத் தருகிறது.

Keynes, J. M., 'The End of Laissez Faire,' in *Essays in Persuasion*. New York: Harcourt Brace, 1932. 'அனைவரும் கூட்டாகச் செயலாற்றுவதன்மூலம் முதலாளித்துவ அமைப்பில் என்ன அபிவிருத்திகள் செய்யமுடியும் என்பதை ஒரு பெரிய பொருளாதார நிபுணர் கூறுவது.

———, 'The German Transfer Problem,' *Economic Journal*, XXIX (1929); *Readings in the Theory of International Trade*-ல் மீண்டும் அச்சிடப்பட்டது. மாறுத நாணயமாற்று வீதத்தோடு திருத்த இயக்கத்தின் செயல்முறைபற்றிய புகழ் பெற்ற விவாதத்தின் ஒரு பக்கம்.

Lary, Hal B. and Associates, *The United States in the World Economy*, Economic Series No. 23. Washington, D. C. : U.S. Department of Commerce, 1943. போர்களுக்கிடையான காலத்தில் அமெரிக்காவின் பன்னாட்டு விவகாரங்களை விவரமாக ஆராய்கிறது.

League of Nations, *International Currency Experience*. Geneva : The League, 1944. பொன்திட்டத்தின் இயக்கத்தில் மாறுதல்கள், 1930-க்குப் பின் பத்தாண்டுகளில் மதிப்புக் குறைப்புகளின் வரலாற்றையும், விளைவுகளையும், நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளின் குறிக்கோள்களையும், செயல் முறையையும் அழகாக விவரிக்கிறது.

———, *World Economic Survey*, annually. Geneva : The League, 1932–40. பெரும் மந்தகாலத்தில் அவ்வப்போது ஏற்பட்ட மாற்றங்களை ஆராய்ந்து அளிக்கிறது.

Ohlin, Bertil, 'The Reparation Problem : A Discussion,' *Economic Journal*, XXXIX (1929); *Readings in the Theory of International Trade*-ல் மீண்டும் அச்சிடப்பட்டது. கீன்ஸ் துவக்கிவைத்த விவாதத்தின் எதிர்ப்பக்கம் (மேலே பார்க்கவும்).

*Report of the Committee on Finance and Industry*, Cmd. 3897. London : H.M.S.O., 1931. பிரிட்டனின் தலையான நிபுணர்கள் மந்தத்தின் விளைவான பணப் பிரச்சினைகளையும் மாற்று யோசனைகளையும் ஆராய்ந்துள்ளனர்.

மடல் VI

# புனரமைப்பு, மாறுதல், சீர்திருத்தம்

## 25. புனரமைப்பும் அதன் பின்விளைவும்

போர்களுக்கிடையான காலத்தின் முக்கியமான நிகழ்ச்சிகள் போரின் வழிவந்த விளைவுகளும், மந்தத்தின் விளைவுகளும் ஆகும் என்பதைப் பார்த்தோம். முதல் உலகப் போரின் விளைவாகச் சீர்குலைவும் சமநிலைக் கேடும் ஏற்பட்டன. லண்டன் பண அங்காடியை மையமாகக்கொண்டு பொன் திட்டத்தால் உறுதியாக இணைக்கப்பட்டு முன்னம் இருந்த எளிய, நிச்சயமான உலக அமைப்பை எண்ணிப் பார்த்து அந் நிலை மீண்டும் வரவேண்டும் என்று ஏங்கி, உலகின் அரசியல், பொருளாதாரத் துறைத் தலைவர்கள் பழைய அமைப்பை மீண்டும் அமைக்கப் பாடுபட்டனர். ஆனால், அவர்களுடைய முயற்சிகளுக்கு எதிராகச் சில அமைப்பு மாறுதல்களும் அரசியல் மாறுதல்களும் இருந்தன. அவற்றின் முழுப்பொருள் யாருக்கும் அப்போது விளங்கவில்லை. பொன் திட்டத்தை மீண்டும் அவர்கள் அமைத்து விட்டனர். ஆனால், லண்டன் முன்பு கொண்டிருந்த தலைமையிடத்தை மீண்டும் பெறவில்லை. போருக்குமுன் நிதித்துறையில் இருந்த நெருங்கிய இணைப்பும் மீண்டும் ஏற்படவில்லை. மேலும் மேலும் உலக வாணிபம் தடைபடுவதை நிறுத்தி அத் தடைகளை நீக்க அவர்கள் பாடுபட்டனர். ஆனால், போரின் விளைவாக எழுந்த நாட்டுப்பற்றின் அடக்கமுடியாத சக்தி அவர்களது முயற்சிக்கு முட்டுக்கட்டையிட்டது.

அமெரிக்காவின் பொருளாதார வலிமை மிகப்பெரியது என்பது இப்போது புரிந்தது. எனவே, மாறிய சூழ்நிலைக்கு ஏற்றவாறு உலகப் பொருளாதாரத்தை மாற்றியமைக்க அமெரிக்கா முன்நின்று முயற்சித்

திருக்கக்கூடும். ஆனால், உள்நாட்டு அபிவிருத்தியை நெடுங்காலமாகச் செய்து அப்போதுதான் முடித்திருந்த அந் நாட்டு மக்கள், அவர்கள் மீது அமெரிக்காவின் புது அந்தஸ்தினால் சுமத்தப்பட்ட பொறுப்பை ஏற்க மறுத்துவிட்டனர். மோட்டார்கார் யுகம் வந்துவிட்டது. அஃது அளித்த வாய்ப்புகளை அவர்கள் முழு அளவுக்குப் பயன்படுத்திக் கொண்டனர்.

எந்தச் சக்திகள் வாணிபத்தின் போக்கைத் தீர்மானிக்கவேண்டும் என்ற கேள்விக்கு 1920 தொடங்கிய பத்து ஆண்டுகளில் முடிவாகவும் முரணின்றியும் விடைகூற முடியவில்லை. ஒருபுறம் தராதரச் செலவுகளை முழு அளவில் பயன்படுத்தி வாணிபத்தை அமைக்க முயற்சிகள் நடந்தன. மறுபுறம் அதற்குப் போட்டியாகப் பணம், வியாபாரம், குடியேற்றம் ஆகியவைபற்றி நாட்டுப்பற்றை அடிப்படையாகக் கொண்ட கொள்கைகள் இருந்தன. விக்டோரியா காலத்தைவிட உலகப் பொருளாதாரத்தில் தடைகள் இப்போது அதிகம்; மெர்க்கன்டலிசக் காலத்தைவிட அதன் தடைகள் இப்போது குறைவு; அந் நிலையில் மக்கள் சார்பற்ற விலை இயக்கத்தின் அடிப்படையில் நிச்சயமற்ற நிலையில் உலகப் பொருளாதாரம் வளர்ந்தது.

பெரு மந்தம் தோன்றியதும் இவ் வளர்ச்சி திடீரென நின்றது. மந்தத்தின் ஒரு முக்கியமான அம்சமான தீவிரமான வருமானச் சுருக்கம் பொருளாதார மேடையில் பிரதான பாத்திரத்தை வகித்தது. உற்பத்திக் கோட்டுக்கு ஏற்ப இறக்குமதிகள் குறைந்தன; வேலையற்றிருந்தவர்களின் எண்ணிக்கை எங்கும் பெருகிற்று. வேலையின்மை அதிகமாவதைத் தடுப்பதற்கும் தன் செலாவணியைப் பாதுகாப்பதற்கும் ஒன்றன்பின் ஒன்றாக நாடுகள் கடுமையான கட்டுப்பாடுகளை மேலும்மேலும் செய்தன. சில விதிவிலக்குகளைத் தவிர, அரசாங்கம் அனுமதிக்காமல் பொருள்களோ மூலதனமோ இடம் பெயரமுடியாது. நாட்டுப்பற்றுச் சக்திகள் பன்னாட்டு வாணிபம், செலுத்தல்கள்பற்றிய எல்லாத் துறைகளிலும் ஆதிக்கம் செலுத்தின.

மீண்டும் இரண்டாவது உலகப் போரின்போது உலகம் போரிடும் தொகுதிகளாகப் பிரிந்த முறையையும், போர்ப்படைகளின் தீர்க்க முடியாத தேவைகளையும்பொறுத்து வாணிபம் சென்ற பாதைகளும் அதில் அடங்கிய பொருள்களும் இருந்தன. 1914–18 போரைவிட இப் போரில் அதிகமான நாடுகள் கலந்துகொண்டன; அதிகமான மக்கள் போரில் ஈடுபட்டனர். எனவே, போர்த் தேவைக்காகப் பொருள்கள் அதிகமாகத் தேவைப்பட்டன; அதன் விளைவாக அமைதிக் கால உற்பத்தி அமைப்பு அதிகமாகச் சீர்குலைந்தது. அதேசமயம் தேவைப்பட்ட பொருள்கள் கிடைப்பது மேலும் கடினமாயிற்று.

ஏனெனில், ஐரோப்பா, வட ஆஃப்ரிக்கா, இந்தியாவைத் தாண்டிக் கீழைநாடுகள் ஆகியவற்றில் பெரும்பகுதி அச்சு நாடுகளின் (Axis powers) ஆதிக்கத்தில் இருந்தன. எனவே, ரப்பர், வெள்ளீயம், கொயினா, ஹெம்ப் சணல் போன்ற பல முக்கியமான பொருள்களுக்கு பதிலிகளைத் தேடவேண்டியிருந்தது பன்னாட்டு வாணிபத்தின் மிக முக்கியமான பங்கைத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது.

## போரின் விளைவுகள்

உலகப் போரின் ஆறு ஆண்டுகளில் உற்பத்தி பெருமளவில் மாறிவிட்டது; அங்காடிகளுக்கும் அளிப்பாளர்களுக்கும் இடையே தொடர்பு துண்டிக்கப்பட்டுவிட்டது. இருந்தபோதிலும், அங்காடித் தொடர்புகளும், மீண்டும் அமைதிக்கால உற்பத்திக்கு மாறுதலும் குறிப்பிடத்தக்க வேகத்தில் வேலைவாய்ப்புகள் பொதுவாகக் குறையாமல் ஏற்பட்டன. போரினால் உற்பத்தித்திறன், நாட்டு நிதி நிர்வாகம், பன்னாட்டுக் கடன்களின் அமைப்பு ஆகியவை பாதிக்கப்பட்டதன் விளைவினால்தான் ஏற்கெனவே மிகவும் தளர்ந்திருந்த உலகப் பொருளாதாரத்தின் இயக்கத்தில் மிகுந்த சிதைவு உண்டாயிற்று. இந்த விளைவுகளில் சிலவும், இவை மீட்சிபெற்ற அளவும் 1914 போருடன் ஒப்பிட்டு 25·1 பட்டியலில் தரப்பட்டுள்ளன.

### பட்டியல் 25·1.

### முதல், இரண்டாவது உலகப் போர்கள் முடிந்தபின் இரண்டாவது முழு ஆண்டில் தராதர மீட்சி

| | தொழிற்சாலை உற்பத்தி | விவசாய உற்பத்தி | கால்நடை எண்ணிக்கை | மக்கள் தொகை |
|---|---|---|---|---|
| 1913 | 100 | 100 | 100 | 100 |
| 1920 | 76 | 63 | 90 | 99 |
| 1938 | 100 | 100 | 100 | 100 |
| 1946/7 | 80 | 75 | 81 | 97 |

**மூலம்:** United Nations, Department of Economic Affairs, *A Survey of the Economic Situation and Prospects of Europe*, Geneva, 1948. Tables 8, 11, and 16. இவ்விவரங்கள் ஐரோப்பாவைக் குறிக்கின்றன. ஒரே நாடுகளில் இரு காலக் கூறுகளிலும் இருந்த விவரங்கள் தரப்பட்டுள்ளன. மக்கள்தொகை ஒப்பீடு பின்வரும் நூலிலிருந்து எடுக்கப்பட்டது: United Nations, Economic Commission for Europe, *Growth and Stagnation in the European Economy*, Geneva, 1954, Table A-4.

## பன்னாட்டுச் செலுத்தல் பிரச்சினைகள்

சாதாரணமாக இருக்கவேண்டியதைவிடக் குறைவாக உற்பத்தியிருப்பதன் பன்னாட்டு விளைவுகளையும் போரினால் தூண்டப்பட்ட வேறு மாறுதல்களையும் மேற்கு ஐரோப்பாவின் செலுத்துநிலை நன்கு எடுத்துக்காட்டுகிறது (பட்டியல் 25·2 பார்க்க). உற்பத்தி குறைவாகவும், வருமானமும் வேலைகளின் அளவும் அதிகமாகவும் இருக்க, ஏற்றுமதி செய்திருக்கக்கூடிய பொருள்களெல்லாம் உள்நாட்டு நுகர்வுக்காக நிறுத்திவைக்கப்பட்டன; உள்நாட்டு உற்பத்தி மிகவும் குறைவாக இருந்ததால் அதை ஈடுசெய்ய இறக்குமதிகள் மிகவும் தேவைப்பட்டன. போர் நின்று முதல் மூன்று ஆண்டுகளில் ஐரோப்பாவின் வாணிபநிலை பற்றுக்குறை $5 பிலியனைவிட அதிகமாக இருந்தது. போருக்குமுன் மூன்று ஆண்டுகளில் வாணிபப்பற்றுக்குறை $2 பிலியனாகத்தான் இருந்தது. 1938-ல் நடப்புக் கணக்கு முழுவதையும் எடுத்துக்கொண்டால் சமநிலையில் இருந்தது. ஆனால், போர் முடிந்தபின் ஐந்து ஆண்டுகளில் பெரிய, ஆனால் போகப்போகக் குறைந்துவந்த, பற்றுக்குறை அக் கணக்கில் இருந்தது.

### பட்டியல் 25·2

### ஐரோப்பாவின் நடப்புக்கணக்கில் செலுத்து நிலை, 1938, 1946–50

(அப்போதைய டாலர்கள் பிலியன்களில்)

| | 1938 | 1946 | 1947 | 1948 | 1949 | 1950 |
|---|---|---|---|---|---|---|
| இறக்குமதிகள், *f.o.b.** | $ 5·8 | $ 9·4 | $ 13·7 | $ 14·4 | $ 13·5 | $ 12·5 |
| ஏற்றுமதிகள், *f.o.b.* | 3·7 | 4·3 | 6·4 | 8·8 | 9·4 | 9·6 |
| வாணிபக் கணக்கில் நிலுவை | $ –2·1 | –5·1 | –7·3 | –5·6 | –4·1 | –2·9 |
| முதலீடுகளினின்று வருவாய் (நிகரமாக) | 1·4 | 0·5 | 0·4 | 0·4 | 0·4 | 0·5 |
| பிற புலனாகாத நடப்பு உருப்படிகள் (நிகரம்) | 0·7 | –1·2 | –0·5 | 0·3 | –0·1 | –0·1 |
| பணிகள் கணக்கில் நிலுவை | 2·1 | –0·7 | –0·1 | 0 7 | 0·3 | 0.4 |
| நடப்புக் கணக்கில் (பொருள்கள், பணிகள்) நிலுவை | 0·0 | –5·8 | –7·4 | –4·9 | –3·8 | –2·5 |

**மூலங்கள்:** United Nations, *A Survey of the Economic Situation and Prospects of Europe*, பக்கம் 54; *Economic Survey of Europe in* 1949, பக்கம் 109; *Economic Survey of Europe in* 1950, பக்கம் 114.

* **f.o.b; free on board:** கப்பலில் ஏற்றும்வரை அடக்கச் செலவு.

(1946–50-ல்) ஐரோப்பாவின் சேர்த்த பற்ருக்குறையான $ 24·4 பிலியனில் ஏறக்குறைய முக்கால் பாகம் அமெரிக்காவுடன் செய்த வாணிபத்தில் இருந்ததனுல், இப் பற்ருக்குறை 'டாலர் பற்ருக் குறை' (dollar shortage) என்று அழைக்கப்பட்டது. ஐரோப்பா முன்னர் செலவழித்ததைவிட அதிகமாக டாலர்களைச் செலவழித்து வந்தது என்று இதற்குப் பொருள் அன்று. ஏனெனில், அவ்வாறு செய்வது அசாத்தியமாகும். அதன் பொருள் இதுதான்: தன் செலவு களுக்குப் போதுமான டாலர்களைச் சாதாரணமாகச் சம்பாதிக்கும் வழிகளில் ஐரோப்பாவினுல் பெறமுடியவில்லை. எனவே, தன் சேமநிதிகளினின்று பெரும் அளவில் தொகைகளை எடுத்தும், கூடுமான வரை கடன் வாங்கியும், எஞ்சி இருப்பதற்குப் பெரிய அளவில் விசேஷ மான உதவித்தொகைகளைப் பெற்றும் அந் நாடுகள் நிலைமையைச் சமாளித்தன.[1] டாலர் பற்ருக்குறை என்றழைக்கப்படும் இப் பிரச்சினை ஐரோப்பிய நாடுகளுக்குமட்டும் அன்றிப் பிற நாடுகளுக்கும் இருந்தது. 1950வரை கனடா, இலத்தீன் அமெரிக்கா, மற்றும் உலகின் எல்லா முக்கிய பகுதிகளிலும் தம் நடப்புக் கணக்கில் டாலர் பற்ருக்குறையைப் பெற்றிருந்தன.

### ஐரோப்பாவின் பற்ருக்குறைக்குக் காரணங்கள்

ஐரோப்பாவின் நடப்புக் கணக்கை 1938-லிருந்த சமநிலையினின்று 1947-ன் மோசமான சமநிலைக் கேடாக, போரின் விளைவாக ஏற்பட்ட எந்தச் சக்திகள் உண்மையில் மாற்றின? இம் மாறுதலின் பெரும் அளவுக்கு நிச்சயமாகப் பணவீக்கம் காரணமாக இருந்தது. ஆனுல், அதேசமயம் அமைப்பு மாறுதல்களும் இதற்குக் காரணமாக இருந்தன.

முதலில் வாணிபப் பற்ருக்குறையை எடுத்துக்கொள்வோம். இக் காலக்கூற்றில் அது $ 5·2 பிலியனுக உயர்ந்தது. 1938-லிருந்து விலைகள் மாருமல் இருந்திருந்தால், போருக்கு முன் இருந்ததைவிட $ 1·5 பிலியன் அதிகமாக இந்தப் பற்ருக்குறை இருந்திருக்கும். ஏனெனில், இறக்குமதிகளின் அளவு அதிகமான பொது ஏற்றுமதிகளின் அளவு உண்மையில் விழுந்தது. பாக்கி $ 3·7 பிலியன் உள்ளது.

[1] இந்தக் காலத்தைப் பொறுத்தவரை 'டாலர் பற்ருக்குறை' என்ற சொல்லுக்குச் சாதாரண வழிகளில் அமெரிக்கா அளிக்கும் டாலர்கள் போதுமான தாக இல்லை என்றும் பொருள் கொள்ளக்கூடாது. ஏற்றுமதிக்குப் போதுமான அளவு பொருள்களும் பணிகளும் இல்லாமற்போய், இறக்குமதிகளுக்கு அதே சமயம் மிக அதிகமான தேவை இருக்கும் நிலை ஐரோப்பாவில் இருந்ததனுல்தான், அதன் செலுத்துநிலைப் பற்ருக்குறை தோன்றிற்று. ஐரோபபா தன் தேவைகளில் பெரும் அளவுக்கு அமெரிக்காவை நம்பியிருந்ததால், அதன் பற்ருக்குறை இந் நாட்டைப் பொறுத்தவரையில் மிகவும் முக்கியமாகக் காணப்பட்டது.

அஃதாவது, வாணிபப் பற்றுக்குறையில் ஏறக்குறைய முக்கால் பாகத்துக்குக் காரணம் விலைமாறுதல்கள்தாம். உலகெங்கும் பணவீக்கம் ஏற்பட்டதன் விளைவாக ஏற்றுமதிகள், இறக்குமதிகள் இரண்டின் விலைகளும் ஏறத்தாழ இரண்டு மடங்குகளாயின. 1938-ல் ஏற்றுமதிகளைவிட இறக்குமதிகள் $2 பிலியனுக்குமேல் அதிகமாக இருந்ததனால், இந்தச் சக்தியே பற்றுக்குறையை ஏறக்குறைய இரட்டிக்கும்.

ஏற்றுமதிகளோடு ஒப்பிட்டால், இறக்குமதிகளில் ஏற்பட்ட உண்மை உயர்வில் ஒரு பகுதியும் பணவீக்கத்தினால் விளைந்தது எனலாம். ஏனெனில், பல ஆண்டுகளாகச் சிக்கனமாகவும் பெரும் இடையூறுகளின் மத்தியிலும் வாழ்ந்த மக்கள் தம் வாழ்க்கைத்தரங்களை பழைய நிலைக்கு உயர்த்த உள்நாட்டில் பெரிதும் முயல்வர். அதேபோல ஐரோப்பாவில் மோசமாகப் பாழான மூலதனச் சாதனங்களைப் புதுப்பிக்கவும் அபிவிருத்தி செய்யவும் அவசியம் மிகவும் இருந்தது. உள்ள வசதிக்கு ஏற்றபடி தேவையைக் குறைக்காமல், மிகையான தேவைக்கு நிதி ஏற்பாடு செய்ய அரசாங்கங்கள் இச் சக்திகளால் கட்டாயப்படுத்தப்பட்டன; மிகையான தேவை ஏற்றுமதிப் பாதையிலிருந்து உள்நாட்டு உற்பத்தியை எடுத்துக்கொண்டுவிட்டதோடு நிறைய இறக்குமதிகளையும் ஈர்த்தது; தவிர, அமெரிக்காவிலும் கனடாவிலும் பணவீக்கம் அவ்வளவு கடுமையாக இல்லை. அவற்றோடு ஒப்பிட்டால், அப்போதிருந்த நாணயமாற்று வீதங்களில் ஐரோப்பியச் செலாவணிகள் மிகை மதிப்புடையவையாக இருந்தன. எனவே, டாலர் பிராந்தியத்துக்கு ஏற்றுமதி செய்வது கடினமாயிற்று.

பலவிதமான அமைப்புச் சக்திகளும் இறக்குமதிகளை ஊக்கி ஏற்றுமதிகளை மந்தப்படுத்தக் காரணமாக இருந்தன. உதாரணமாக, போரினால் ஏற்பட்ட அழிவினாலும் போதுமான அளவு சாதனங்கள் புதுப்பித்தும் மராமத்து செய்தும் வைக்கப்படாமையாலும் ஐரோப்பாவின் உற்பத்தித் திறன் குறைந்ததனால், இறக்குமதிகள் மேலும் அவசியமாயின; ஏற்றுமதிகளின் அளிப்பு மேலும் குறைந்தது. வெளிநாட்டு அங்காடிகளை இழந்தது, ஏற்றுமதியின் அளவுகள் குறைந்து போனதற்கு மற்றொரு காரணம். வாணிபத் தொடர்புகள் மீண்டும் ஏற்பட்டதால் இந்த நஷ்டம் ஓரளவு குறைந்தது. ஆனால், ஐரோப்பிய விற்பனைகளுடைய இடத்தை (இலத்தீன் அமெரிக்கா போன்ற நாடுகளில்) அமெரிக்கா, கனடா நாடுகளைச் சேர்ந்த நிறுவனங்கள் பிடித்துக்கொண்டதால், அங்காடிகளை இழந்தது தொடர்ந்து அப்படியே இருந்தது. இறக்குமதிகளைப் பொறுத்தவரையில், மரம், கோதுமை, பிற தானியங்கள் ஆகியவற்றை முதலில் சோவியத் ரஷ்யாவும் கிழக்கு ஐரோப்பிய நாடுகளும் மேற்கு ஐரோப்பாவுக்கு

அளித்தன. இவ்வளிப்புகளை இனி நம்பமுடியாததால், இவற்றுக்காக அமெரிக்கக் கண்டத்தை மேற்கு ஐரோப்பா நம்பவேண்டியதாயிற்று.

கப்பல் தொழிலிலும் பிற வசதிப் பணிகளிலும் வந்த வருவாயில் $ 2·2 பிலியன் குறைந்ததற்கு மிக எளிதான ஒரு விளக்கம் கூறலாம். (1) கப்பல்கள் போரில் நிறைய அழிந்துவிட்டதால், முன்பிருந்ததை விட அதிகமாகிவிட்ட சரக்குகளை ஏற்றிச் செல்ல முன்பிருந்ததைவிடக் குறைவான கப்பல்கள் ஐரோப்பிய நாடுகளிடம் இருந்தன; வெளிநாடு களிடமிருந்து தம் இறக்குமதிகளைக் கொண்டுவர அவை அமெரிக்க வணிகக் கப்பல்களைப் பயன்படுத்தின. அவை புதிதாக நிறைய (அரசாங்க பண உதவியோடு) கட்டப்பட்டவை. 'பிற' வசதிப் பணிகளைப் பொறுத்தவரை, (2) போர் முடிந்த உடனே உல்லாசப் பிரயாணிகளுக்கு வசதிகளை விற்றதனால் சம்பாதித்த தொகை மிகக் குறைவாக இருந்த அதே சமயம், முக்கியமாக பிரிட்டனும் நெதர்லண்ட் ஸும் மத்தியக் கிழக்கிலும் தென்கிழக்காசியாவிலும் படைகளை வைத்திருக்க நிறைய செலவு செய்யவேண்டியிருந்தது.

## ஐரோப்பாவின் புனரமைப்பு

பற்றுக்குறை ஏற்பட்டால் எப்படியாயினும் அதற்குப் பணம் கொடுக்கவேண்டும். 1946, 1947-ல், ஏற்கெனவே மிகவும் குறைந்து போன சேமநிதிகளை மேலும் பயன்படுத்தியும், பலவகைக் கடன்களையும் பணவுதவிகளையும் பயன்படுத்தியும், வருவாயை மிக அதிக அளவுக்கு மிஞ்சியதன் செலுத்துதல்களை ஐரோப்பா செய்தது. சிறிது காலமே இருந்த ஐக்கிய நாடுகள் உதவி, மீட்சி நிறுவனம் (United Nations Relief and Recovery Administration—UNRRA) சுமார் $ 4 பிலியனைக் கொடுத்தது. மிக அதிகமான சிதைவு இருந்த, போருக்கு மிக அடுத்த காலத்தில், பட்டினி, நோய், பொருளாதாரச் சரிவு ஆகியவற்றைத் தடுக்கப் போர் நடந்த காலத்தில் இது நிறுவப்பட்டது. அமெரிக்கா—இங்கிலாந்து நிதி ஒப்பந்தப்படி அமெரிக்காவும் கனடா வும் சேர்ந்து பிரிட்டனுக்கு $ 5 பிலியன் கடன் கொடுத்தன. இதைத் தவிர, மீதத்துக்கு உதவியாகப் பல இடங்களிலிருந்து நிதி கிடைத்தது. கிரீஸுக்கும் துருக்கிக்கும், படைகளுக்கும் பொருளாதார உதவிக்கும் $ 400 மிலியன் கிடைத்தது. அமெரிக்க ஏற்றுமதி—இறக்கு மதி பாங்கு சுமார் $ 2 பிலியனைக் கடனாக அளித்தது. பன்னாட்டு பாங்கும் பன்னாட்டுச் செலாவணி நிதியும் மேலும் சுமார் ஒரு பிலியனைக் கொடுத்தன.

### ஐரோப்பிய மீட்சித் திட்டம் (The European Recovery Program)

1947 கோடைகாலத்தில், ஐரோப்பாவின் கஷ்டங்களைச் சமாளிக்க, உதவிப் பணிகளும் நெருக்கடி காலக் கடன்களும் அடியோடு போத

வில்லை என்பது தெளிவாயிற்று. பன்னாட்டுப் பற்றுக்குறை பெருகிக் கொண்டே வந்தது; எரிபொருளும் கச்சாப் பொருள்களும் போதுமான அளவு கிடைக்கவில்லை; தொழிற்சாலை உற்பத்தி மந்தமாக இருந்தது. பல ஆண்டுகளில் அவ்வாண்டில்தான் மோசமான அறுவடை ஏற்பட்டது. எனவே, உணவு தானியப் பற்றுக்குறை தீவிரமாக இருந்தது—இதை எல்லாம் பார்த்தால், தீர்க்கமானவும் ஆழ்ந்த விளைவுகள் உடையனவுமான வழிகளைக் கையாளுவது அவசியம் என்பது புரிந்தது. அதற்குத்தான் ஐரோப்பிய மீட்சித் திட்டம் அல்லது மார்ஷல் திட்டம் (Marshall Plan) நிறுவப்பட்டது.

ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில் 1947 ஜூன் 5 அன்று உள்துறைக் காரியதரிசி (Secretary of State) மார்ஷல் அவர்கள் தம் துவக்க உரையில், ஐரோப்பியப் பொருளாதாரம் சீர்குலைந்ததைப்பற்றி விவரித்து விட்டு, அமெரிக்கா இதைப்பற்றி மிகவும் கவலை கொண்டுள்ளதாகவும் ஒருங்கிணைந்த மீட்சி முயற்சியில் அமெரிக்கா முழு மூச்சுடன் ஒத்துழைக்கத் தயாராக இருப்பதாகவும் கூறினர். 'ஐரோப்பாதான் ......இதற்கு முதலடி எடுத்து வைக்கவேண்டும்' என்று கூறி, மொத்தத் தேவைபற்றியும் எடுக்கவேண்டிய நடவடிக்கைகளைப் பற்றியும் அவர்கள் ஒப்புக்கொண்டுவிட்டால் ஒரு திட்டம் வரையவும், பின்னர் அதற்கான நிதி ஆதரவளிக்கவும் அமெரிக்கா உதவி அளிக்கும் என்றும் அவர் வாக்களித்தார்.

இதை உடனே ஐரோப்பிய நாடுகள் ஏற்றுக்கொண்டன. கோடைகாலம் முழுதும் நடந்த ஒரு மகாநாட்டின் பயனாக ஒரு குழு அமைக்கப்பட்டது. பின்னர் ஒரு நிரந்தர உருப்பெற்று அக் குழு ஐரோப்பியப் பொருளாதாரக் கூட்டுறவு அமைப்பு (Crganization for European Economic Co-operation) ஆயிற்று. அதன் அறிக்கை ஐரோப்பாவின் பிரச்சினைகளை ஆராய்ந்து 1948–51 நான்கு வருடங்களில் அதன் பொருளாதார மீட்சிக்கு ஒரு திட்டம் வகுத்தது. அதற்காக நிதி உதவி $ 22·4 பிலியனுக்குத் தேவைப்படும் என்று எதிர்பார்க்கப்பட்டது. அதில் பெரும்பகுதி அமெரிக்காவிலிருந்து வர வேண்டியதாக இருந்தது. தம் பங்கில், மகாநாட்டில் பாகம் ஏற்ற நாடுகள்[2] ஐரோப்பாவின் உற்பத்தித் திறனை அதிகரிக்கத் தம்மால் இயன்றதையெல்லாம் செய்வதாக ஒப்புக்கொண்டன. ஐரோப்பா தன்

[2] பங்கு பெற்ற நாடுகள் அனைத்தும் பின்னர் OEEC உறுப்பினர்களாயின. அவை, ஆஸ்திரியா, பெல்ஜியம், டென்மார்க், ஃபிரான்ஸ், கிரீஸ், ஐஸ்லந்து, அயர்லந்து, இத்தாலி, லக்ஸம்பர்க், நெதர்லண்ட்ஸ், நார்வே, போர்ச்சுகல், ஸ்வீடன், ஸ்விட்ஸர்லந்து, துருக்கி, பிரிட்டன். தெரிவிக்கப்பட்ட யோசனைகளில் மேற்கு ஜெர்மனி இதல் எப்போதும் சேர்க்கப்பட்டிருந்தது. நேசநாடுகள் படைகளின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டவுடன், மேற்கு ஜெர்மனி இதில் உறுப்பினராயிற்று.

தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளவேண்டிய அளவுக்கு விற்பனை செய்ய முடியவேண்டும் என்பது குறிக்கோள். அப்படியானால், ஏற்று மதிகள், இதுவரை ஐரோப்பிய வாணிபப் பிராந்தியத்துக்கு வெளியே வாங்கப்பட்ட பொருள்கள் ஆகிய இரண்டின் விஷயத்திலும் உற்பத்தி யையும் உற்பத்தித் திறனையும் ஐரோப்பா பெருக்கவேண்டும். முக்கிய மான குறிக்கோளை அடைவதற்காக OEEC உறுப்பினர்கள் கூடுமான எல்லா வழிகளிலும் ஒருவரோடொருவர் ஒத்துழைக்கவேண்டும் என்று முடிவாயிற்று. முக்கியமாக வாணிபத்தைச் சுருக்கும் தடைகளை நீக்கவேண்டும்; ஒவ்வொரு நாடும் ஐரோப்பாவின் உற்பத்திச் சாதனங்கள் நன்கு பயனாகும் வழிசெய்யப் பணவீக்கத்தைத் தடுக்க வேண்டும்.

இதற்கு இணையாக அமெரிக்காவில் குழுக்கள் அமர்ந்து, செலவு மதிப்பீடுகளையும், உதவி செய்ய அமெரிக்காவில் இருந்த வசதிகளையும், இத்தகைய பெரிய உதவித் திட்டத்தினால் அமெரிக்கப் பொருளா தாரத்தில் ஏற்படக்கூடிய விளைவுகளையும் அலசி ஆராய்ந்தது. உண் மையில் நன்கு பலன்தர $12 பிலியனிலிருந்து $17 பிலியன்வரை அமெரிக்கா தரவேண்டியிருக்கும் என்று யோசனை கூறப்பட்டது. தாற்காலிக உதவிக்குக் காங்கிரஸ் சட்டமியற்றியது. ஐரோப்பியக் கூட் டுறவு நிர்வாகத்துறையின் (European Co-operation Administ- ration—ECA) முதல் ஆண்டு நடவடிக்கைகளுக்காக $4 பிலியனை ஒதுக்கியது. ஐரோப்பாவில் OEEC-க்கு எதிரிணையாக அமெரிக்க நிர்வாகத்துறையில் இந்த அமைப்பு ஏற்படுத்தப்பட்டது.

ஐரோப்பிய மீட்சித் திட்டத்தின் கதை மிகவும் கவர்ச்சிகரமாக இருக்கும். ஐரோப்பியத் தலைமை அலுவலகமாகிய பாரிஸிலும் ஒவ்வொரு OEEC நாட்டின் தலைநகரிலும் அலுவலகங்களில் எண்ணற்ற அமெரிக்க நிர்வாகிகளும் நிபுணர்களும் வந்துசேர்ந்தனர். அவர்களில் வணிக, தொழில் வல்லுநரும், கல்லூரிப் பேராசிரியர் களும், தொழில், விவசாயம் ஆகியவற்றில் தொழில்நுட்பத் தேர்ச்சி பெற்றவர்களும், விளம்பரப் பிரதிநிதிகளும் இருந்தனர். OEEC-யின் கூட்டுறவோடு ஐரோப்பாவின் தேவைக்குப் பட்டியல்கள் தயாரித்து, கோதுமையிலிருந்து புகையிலைவரை, டிராக்டர்களிலிருந்து இரயில் எஞ்சின்களும் ரயில் வாகன்களும்வரை பொருள்களுக்கு ஆர்டர்கள் செய்து, இப் பொருள்களை ஐரோப்பாவில் எங்குத் தேவையோ அங்குக் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டியது இவர்களுடைய பணியாகும்.

1951-ன் பிற்பகுதியில், மீட்சித் திட்டம் இன்னும் முடிவடையாத நிலையில், கம்யூனிச ஆதிக்கத்துக்கு எதிராகப் பரஸ்பரப் பாதுகாப்பு செய்துகொள்வது பொருளாதார உதவியைவிட முக்கியமாக இருந்த தால், ஐரோப்பியக் கூட்டுறவு நிர்வாகத்துறை ஒரு புதிய அமைப்பில்

கலந்தது. அவ்வமைப்பான பரஸ்பரப் பாதுகாதுகாப்பு நிர்வாகத் துறை (Mutual Security Administration), படை உதவி, பொருளாதார உதவி இரண்டையும் கவனித்துக்கொண்டது. 1950 ஜூனில் கொரியப் போர் மூண்டதும்தான் இத் திசையில் மாறுதல் ஏற்பட்டு, இப் புதிய அமைப்பு ஏற்பட்டது. படைபலம் பெருக்குவது இதன் விளைவாக முக்கியமாயிற்று.

1951 மத்திவரை ECA மொத்தம் $10·3 பிலியன் செலவழித்தது. இதில் சுமார் 90 சதவிகிதம் நேரிடையான உதவிகளாகும். மீதி $1·1 பிலியன்மட்டும் கடன்களாகத் தரப்பட்டது.

**ஐரோப்பாவின் மீட்சி**

**உற்பத்தி:** அமெரிக்காவிலிருந்து வந்த மிக முக்கியமான உதவியினால் ஐரோப்பா வேகமாக முன்னேறியது. OEEC நாடுகளில் தொழில் வளர்ச்சி 1947-ல் போருக்கு முன்னிருந்ததைவிட 17 சதவிகிதம் குறைவாக இருந்தது. 1948-ல் மீண்டும் பழைய அளவுக்கு வந்தது. அதன் பிறகு ஆண்டுக்கு 10 சதவிகிதமாக 1951 வரை உயர்ந்தது. 1938 அளவைவிட 35 சதவிகிதம் அதிகமாக அது 1951-ல் இருந்தது. விவசாய உற்பத்தியும் அதே போல, ஆனால், சிறிது மெதுவாக முன்னேறியது.

**பணவீக்கக் கட்டுப்பாடு:** முக்கியமாக ஃபிரான்சிலும் இத்தாலியிலும் பகிரங்கமாகவும் கட்டுப்படாமலும் பணவீக்கம் இருந்தது. இங்கிலாந்திலும் நெதர்லண்ட்ஸிலும் இருந்த பணவீக்கம் விலைக் கட்டுப்பாடுகளினால் அடக்கிவைக்கப்பட்டிருந்தது. இங்கெல்லாம் பணவீக்கம் வேகமாகக் கட்டுப்படுத்தப்பட்டது. உற்பத்திப் பெருக்கத்தினால் பொருள்கள் நிறையக் கிடைக்க ஆரம்பித்ததும் விலை உயர்வு மெதுவாயிற்று. பணத்துறையிலும் நிதித்துறையிலும் அரசாங்கம் வேண்டுமென்று தகுந்த கொள்கைகளைக் கடைப்பிடித்ததும், விலை உயர்வு மட்டுப்பட்டதற்கு, உற்பத்திப் பெருக்கத்துக்குச் சமமான காரணமாகும். ஜெர்மனியிலும் ஆஸ்திரியாவிலும் தீவிரமான செலாவணிச் சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. இங்குதான் பணவீக்கம் மிகவும் மோசமாக இருந்தது. இங்கு மிகையாக வழங்கப்பட்ட பழைய செலாவணியில் பெரும்பகுதி ரத்தாகிப் புதுச் செலாவணி வழங்கப்பட்டது. 1950 தொடக்கத்தில், பத்தாண்டுகளாக வேகமாக விலைகள் உயர்ந்துவந்த நிலை மாறி விலைத் திடநிலை ஏற்பட்டது.

அந்த ஆண்டு ஜூன் மாதம் கொரியப் போர் மூண்டதும் வாங்குவது அதிகமானதால், ஏற்பட்ட பணவீக்கம் மீண்டும் திடீரென அதிகமாயிற்று. தம் செலுத்துநிலையை இது பாதிக்கும் என்று பயந்து பெரும்

பாலான ஐரோப்பிய நாடுகள் கடன் செலாவணியை அடக்கும் உபாயங்களைத் தாமதிக்காமலும் திறம்படவும் கையாண்டன. மீண்டும், ஏற்பட்ட விலை உயர்வுகள் மெதுவாகி, ஓரிரு ஆண்டுகளுக்குள் நின்றுவிட்டன; அதன் பின்னர் 1956 வரை விலைகள் மாருமல் இருந்தன.

**ஐரோப்பாவுக்குள் வாணிபம்:** மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்கு இடையே நடந்த வாணிபம், போருக்குமுன் இருந்த அளவில் 60 சதவிகிதமாக 1947-ல் இருந்தது. தொழிலிலும் விவசாயத்திலும் உற்பத்தி குறைந்தது இந்த அதிகமான வீழ்ச்சிக்கு ஒரு காரணமாகும். அதைவிட முக்கியமான காரணம் உற்பத்தியில் சமநிலையின்மை. அதனல் ஏற்றுமதிகளை அளிக்கும் சக்தி திடமாக இல்லை. ஜெர்மனியில் தொழில் உற்பத்தி முக்கியமாகக் குறைவாக இருந்தது. போருக்குமுன் ஜெர்மனி, பிற ஐரோப்பிய நாடுகளுக்கு இறக்குமதியைவிட மிக அதிகமாக ஏற்றுமதிகளைச் செய்தது. ஐரோப்பிய வாணிபத்தின் அமைப்பு இதன் அடிப்படையில் போருக்குமுன் இருந்தது. இவ்வமைப்பு சீர்குலைந்து ஐரோப்பிய நாடுகள் ஒன்ரேடொன்று வாணிபத்தில் நெருக்கமான இருமுகச் சமநிலை பெறுவதற்கு முயற்சி செய்ய ஆரம்பித்தன. 1948-ல் ஐரோப்பிய நாடுகளுக்கிடையான் வாணிபத்தில் 200 இருமுக ஒப்பந்தங்கள் இருந்தன. அவற்றுக்கு ஆதரவு தரக் கடுமையான அளவுக்குக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன.

உற்பத்தி பெருக ஆரம்பித்ததும், ஐரோப்பாவுக்குள்ளான வாணிபத்தை மீண்டும் பழைய அளவுக்கு உயர்த்தவேண்டிய பொருள்கள் கிடைக்கலாயின. ஆனல், இருமுக ஒப்பந்தங்களும் வாணிபக் கட்டுப்பாடுகளும் பெருந் தடைகளாக இருந்தன. இவற்றை ஒழிக்க OEEC 'தாராளமாக்கும் விதித் தொகுப்பு' (A Code of Liberalization) ஒன்றை ஒப்புக்கொண்டது. அதன்படி உறுப்பு நாடுகள் ஒவ்வொன்றும் படிப்படியாகத் தனியார் வாணிபத்தின்மீதிருந்த தடைகளை நீக்கக் கடமைப்பட்டன. 1955 ஆண்டுக்குள் வாணிபத்தின் அளவுக் கட்டுபாடுகளில் பெரும்பகுதி (84 சதவிகிதம்) மறைந்துவிட்டன. அதேபோல முக்கியமானது ஐரோப்பியச் செலுத்தல்கள் சங்கத்தை (European Payments Union) நிறுவியது. ஐரோப்பிய நாடுகள் ஒன்றுக்கொன்று செய்யவேண்டிய செலுத்தல்களைத் தீர்க்க நல்ல வழி செய்து, இருமுகப் பாதையில் வாணிபம் செல்வதை இது தடுத்தது. இந்தக் கூட்டு முயற்சிகளாலும் நிலையாக உற்பத்தி பெருகியதாலும் ஐரோப்பாவுக்குள் நடந்த வாணிபம் (1955-ல்) போருக்குமுன் இருந்த அளவைவிட ஏறக்குறைய 90 சதவிகிதம் அதிகமாயிற்று.

**செலாவணி மதிப்புக் குறைப்பு:** போருக்குப் பின் அடுத்த சில ஆண்டுகளில் வாங்குவதற்கு ஆர்வம் அதிகமாகவும் விற்பதற்குச்

சரக்குக் குறைவாகவும் இருந்ததால், சரியான விற்போர் அங்காடிச் (sellers' market) சூழ்நிலை நிலவியது. 1949-ல் ஐரோப்பாவிலும் வட அமெரிக்காவிலும் பொருள்களின் அளிப்பு அதிகமானதும், இது திடீரென வாங்குவோர் அங்காடிச் (buyers' market) சூழ்நிலையாக மாறியது. விலையைப் பொறுத்து மீண்டும் விற்பனைகள் நடந்தன. ஐரோப்பியச் செலாவணிகள் மிகை மதிப்புடையவையாக இருந்தன. எல்லாவிதச் சரக்குகளின் அளிப்பும் தேவையைவிடக் குறைவாக இருந்தபோது இஃது ஒரு குறையாகத் தெரியவில்லை. ஆனால், இப்போதிருந்த மாறிய நிலையில் அது ஒரு முதல் தடையாக இருந்தது. செலாவணி மதிப்புகளை நிச்சயமாக மாற்றவேண்டும் என்பது மிகத் தெளிவாயிற்று.

1949 செப்டம்பர் 18 அன்று பிரிட்டன் துணிந்து தன் பவுன் செலாவணியின் மதிப்பை 30·5 சதவீதம் குறைத்தது. சில நாட்களுக்குள் சுமார் 27 நாடுகள் அவ்வுதாரணத்தைப் பின்பற்றின. இதில் பாகிஸ்தானைத் தவிர எல்லா ஸ்டர்லிங் பிராந்தியமும் 11 மேற்கு ஐரோப்பிய நாடுகளும் அடங்கின. பெரும்பாலான நாடுகள் அதே அளவுக்குச் செலாவணி மதிப்பைக் குறைத்தன. ஒருசிலமட்டும்—முக்கியமாக, பெல்ஜியம், ஃபிரான்ஸ், மேற்கு ஜெர்மனி, இத்தாலி நாடுகள்—அதைவிட மிகக் குறைவான அளவுக்குத் தம் செலாவணி மதிப்பைக் குறைத்தன.

**செலுத்துநிலை:** இதுவரை ஐரோப்பாவின் மீட்சியின் ஒவ்வோர் அம்சத்தையும் தனித்தனியாகப் பார்த்தோம். அவை, உற்பத்தி உயர்வு, பணவீக்கம் முடிவடைதல், ஐரோப்பிய நாடுகளுக்கிடையே வாணிபம் மீண்டும் ஏற்படுதல், செலாவணி மிகைமதிப்பைத் திருத்துவது ஆகியவை. இவையும் பிற காரணிகளும் சேர்ந்து செயலாற்றி, ஐரோப்பாவின் பன்னாட்டுக் கணக்குகளை மீண்டும் சமநிலை பெறச் செய்தன. உல்லாசப் பிரயாணம், கப்பல் போக்குவரத்து ஆகிய துறைகளில் வருமானம் நிலையாக அதிகரித்ததும் இதற்கு உதவியது. 1947-ல் நடப்புக் கணக்கில் இருந்த பெரிய பற்றுக்குறையில் மூன்றில் இரண்டு பங்கு 1950-ல் அழிந்தது. பற்றுக்குறை $ 2·5 பிலியனாகக் குறைந்தது. அதன்பின் நிலையான முன்னேற்றம் இருந்தது. ஐரோப்பாவில் அமெரிக்கா செய்த படைச்செலவுகள் அதிகமாகிக்கொண்டே வந்தன. ஐரோப்பாவின் டாலர் வருவாய்கள் அதிகமாகிக்கொண்டே வர உதவியது. இந்தச் செலவுகளையும் சேர்த்து 1952-லிருந்து 1955 வரை OEEC நாடுகளின் நடப்புக் கணக்கில் உபரி இருந்தது. பொருளாதார உதவி தொடர்ந்து பெறப்பட்டது. ஆனால், அதன் அளவு குறைந்துவந்தது. இவ்வுதவியின் காரணமாக, பொன், அன்னியச் சலாவணி ஆகியவற்றின் சேமநிதிகளை அதிகரிக்க முடிந்தது. அவை

1951 இறுதியில் $ 9·8 பிலியனிலிருந்து 1955-ல் $ 15·3 பிலியனுகப் படிப்படியாக உயர்ந்தன.

## தீராத டாலர் பற்றுக்குறை ?

உற்பத்தியும் போட்டித்திறனும் மேற்கு ஐரோப்பாவில் நிலையாக முன்னேறியிருந்தும், பொன், மற்றும் அன்னியச் செலாவணிச் சேம நிதிகள் உயருவது தெளிவாகத் தெரிந்தபோதும், 1957-ல் மேற்கு ஐரோப்பாவின் பன்னாட்டுச் செலுத்தல் பிரச்சினை தீர்ந்துவிட்டது என்று நம்பினவர் குறைவே. ஏற்பட்ட சமநிலை தாற்காலிகமானதாகவும் மாயத் தோற்றமாகவும் கருதப்பட்டதேயன்றி, நிரந்தரமானதாகவும் உண்மையானதாகவும் கருதப்படவில்லை. ஏனெனில், பெரும் அளவுக்கு அது அமெரிக்காவின் நிச்சயமற்ற வெளிநாட்டுச் செலவுகளை நம்பியிருந்தது ; டாலர் இறக்குமதிகள்மீது அளவுத் தடைகள் விதிப்பதனுல் காப்பாற்றப்பட்டுவந்தது. இந்தச் செலவுகள் குறிப்பிடத்தக்கவாறு குறைந்தாலோ, இத் தடைகள் நீக்கப்பட்டாலோ, மீண்டும் டாலர் பற்றுக்குறை தோன்ற ஆரம்பிக்கும்.

படைகளுக்காகவும் அயல்நாட்டுக்கு உதவவும் அமெரிக்காவின் வெளிநாட்டுச் செலவு செய்யப்படுவதை நிர்ணயிக்கும் சக்திகள் என்றும் நிலைத்திரா என்ற எண்ணம் இந்த அபிப்பிராயத்துக்கு ஒரு காரணமாகும். அதைவிட முக்கியமாக, ஐரோப்பாவின் மீட்சியின் வலிமையையும் வேகத்தையும் அவர்கள் சரியாகப் புரிந்துகொள்ள வில்லை எனலாம். எனவே, டாலர் பற்றுக்குறை 1914-லேயே இருந்தது என்றும், பிற நாடுகளைவிட அமெரிக்கா தொழில்துறையில் முன்னரே சிறந்த போட்டி நிலை அமைத்துத் தொடர்ந்து அந் நிலையில் இருப்பதனுல்தான் இப் பற்றுக்குறை இருக்கிறது என்றும், இச் சிறப்புக்கு அமெரிக்காவின் வேகமான தொழில்நுட்ப முன்னேற்றமே காரணம் என்றும், இப் பற்றுக்குறையைச் சரிசெய்ய இயலாது என்றும் ஒரு நம்பிக்கையற்ற மனப்பான்மையைப் பல பொருளியல் நிபுணர்கள் கொண்டிருந்தனர்.

இந்த அபிப்பிராயம் உண்மையன்று என்றும் அமெரிக்காவின் நிலையை மிகைபடக் கூறுகிறது என்றும் இப்போது நாம் அறிவோம் ; ஆனுல், 1957-ல்கூட இதற்கு ஆதரவாகப் பல சான்றுகள் இருந்தன. 1914 தொடங்கி 1951 வரை 37 ஆண்டுகள் முழுவதிலும் அமெரிக்காவுடன் ஐரோப்பாவின் செலுத்துநிலை பாதகமாகவே இருந்துவந்திருக்கிறது என்பது உண்மையே. 1920-க்குப் பின் குறுகிய ஒரு காலத்துக்குதான் அவ்வாறு அஃது இல்லை. ஓர் அரை நூற்றுண்டுக் காலம் அமெரிக்காவின் தொழில்நுட்ப முன்னேற்றம் மிகவேகமாக இருந்தது என்பதும் உண்மையே. இதன் விளைவாக உலகத்தின் தொழிற்சாலைப்

பண்டங்களின் வாணிபத்தில் அமெரிக்காவின் பங்கு சுமார் 11 சதவீதத்திலிருந்து 29 சதவீதமாக உயர்ந்தது.

ஒன்றன்பின் ஒன்றாகத் தற்செயலாக ஒருவனை நோய்கள் பீடித்ததால், அவன் குணப்படுத்த முடியாத நிரந்தர நோயாளியாகிவிட மாட்டான். அதேபோல நாற்பது ஆண்டுகளாக வெவ்வேறு காரணங்களால் வெவ்வேறு சமயங்களில் செலுத்துநிலைப் பற்றுக்குறை ஏற்பட்டதனால், அது தீராத பற்றுக்குறை நிலை ஆகிவிடாது. இதை அப்போதே குறிப்பிட்டோம். அமெரிக்காவில் உற்பத்தித்திறன் உயர்ந்ததை எடுத்துக்கொண்டால், அதன் வேகம் இரண்டு உலகப் போர்க் காலங்களில் தவிர பிற ஆண்டுகளில் வேறு நாடுகளில் இருந்ததைவிட அதிகமாக இல்லை என்பதை விவரமாகப் புள்ளிவிவரங்களை ஆராய்வதிலிருந்து அறிகிறோம்.[3]

## டாலர் பற்றுக்குறையிலிருந்து டாலர் மட்டிலா மிகுதி

தீராத டாலர் பற்றுக்குறை இருக்கும் என்பதுபற்றிய விவாதம் முடியத் தொடங்கு முன், அதைச் சத்தற்றதாக்கிய நிகழ்ச்சிகள் ஏற்படலாயின. ஐரோப்பாவின் செலுத்துநிலையில் ஒரு பிரச்சினை இருப்பதாகத் தோன்றிய நிலைக்கு மாறாக, அமெரிக்காவின் செலுத்துநிலையில் உண்மையிலேயே பற்றுக்குறை ஏற்பட்டது.

1950–57 ஆண்டுகளிலேயே, தீராத டாலர் பற்றுக்குறையிருப்பதாக அதைப்பற்றி மிகவும் கவலை காட்டப்பட்ட சமயத்தில், வரிசையாகச் செலுத்துநிலையில் அமெரிக்கா பெற்ற பற்றுக்குறைகள் மொத்தம் $ 10 பிலியன் ஆயின. பொருள்கள், பணிகளின் இறக்குமதிகளைவிட அவற்றின் ஏற்றுமதிகள் ஆண்டுக்கு $ 3 பிலியனைவிட அதிகமாக இருப்பினும், அமெரிக்கா வெளிநாடுகளில் செய்த படைச் செலவுகளும், அயல்நாட்டு உதவியும், நிகரத் தனியார் மூலதன ஏற்றுமதிகளும் இத் தொகையைவிடச் சுமார் $ 1·2 பிலியன் அதிகமாக இருந்தன. இதனால் பிற நாடுகள், முக்கியமாக ஐரோப்பிய நாடுகளுடைய சேம நிதிகள் அதிகமாயின. ஆனால், உலகத்தின் வலிமை மிக்க செலாவணியாக டாலர் விளங்கியதால், இவ்வுபரி டாலர் செலுத்தல்களில் பெரும் பகுதி அமெரிக்க பாங்குகளில் வைப்புகளாகவும், அமெரிக்காவில் குறுகிய கால அரசாங்கக் கடன்களாகவும் வைக்கப்பட்டிருந்தன. இந்தக் காலக்கூற்றில் அமெரிக்காவின் பொன் ஏற்றுமதிகள் $ 1·7 பிலியன்தான்.

[3] G. D. A. MacDougall, 'Does Productivity Rise Faster in the United States?' *Review of Economics and Statistics*, XXXVIII (May, 1956).

**மோசமான சமநிலைக் கேடு தோன்றுகிறது**

பின்னர் 1958 தொடங்கி நிலைமை திடீரென மாறிற்று. அடுத்தடுத்த நான்கு ஆண்டுகளில் அமெரிக்கப் பற்றுக்குறை $ 3 பிலியனுக்கு அதிகமாகவோ, $ 4 பிலியனுக்கு அதிகமாகவோ இருந்தது. டாலர் பற்றுக்குறைக்குப் பதிலாக இப்போது தெளிவாக டாலர் உபரிநிலை இருந்தது. முன்னர் அசைக்க முடியாது இருந்த அமெரிக்காவின் சேமநிதி நிலை இப்போது மிகவும் மாறியது. 1949-ல் அமெரிக்கப் பொன் சேமநிதிகள் $ 24·6 பிலியனாகவும் அதன் வெளிநாட்டுக் குறுகிய காலப் பொறுப்புகள் $ 8·2 பிலியனாகவும்தாம் இருந்தன. 1960 முடிவில் சேமநிதி $ 17·5 பிலியன் ஆயிற்று; குறுகிய கால வெளிநாட்டுப் பொறுப்புகள் $ 18·5 பிலியனாகச் சேமநிதிகளை மிஞ்சிவிட்டன. மேலும் இரண்டு ஆண்டுகள் கழிந்து பொன் சேமநிதிகள் $ 16 பிலியனாகக் குறைந்தன. குறுகிய கால வெளிநாட்டுப் பொறுப்புகள் $ 22 பிலியன் ஆயின.

இத்தகைய பெரு மாற்றத்துக்குக் காரணம் என்ன? இரண்டு முக்கியமான காரணங்களைக் கூறலாம். 1957-ல் சரக்கு ஏற்றுமதிகள் அசாதாரணமாக உயர்ந்து இருந்ததால் நடப்புக் கணக்கில் பெரிய உபரித் தொகை இருந்தது. இதைக்கொண்டு வெளிநாட்டில் படைச் செலவும் மூலதன ஏற்றுமதியும் செய்ய முடிந்தது. இப்போது வெளிநாட்டுப் படைச் செலவு அதிகமாக உயரவில்லை; மூலதன ஏற்றுமதிகள் 1957-ல் இருந்த உயர்ந்த அளவிலேயே இருந்தன.[4] ஆனால், ஏற்றுமதிகள் 1958, 1959-ல் 1957 அளவைவிட $ 3 பிலியன் குறைந்துவிட்டன. இறக்குமதிகள் 1959-ல் 1957 அளவைவிட $ 2 பிலியன் அதிகமாயின. அந்த ஆண்டு எஃகு தொழிலில் நடந்த வேலைநிறுத்தம் இதற்கு முக்கியக் காரணமாகும். தொடர்ந்து பெரும் அளவில் அரசாங்கம் வெளிநாடுகளில் செலவிட்டதோடு மிக அதிகமாகத் தனியார் முதலீடுகளும் செய்யப்பட்டதால் இவை அனைத்துக்கும் ஈடு கொடுக்க அமெரிக்காவின் வியாபார நிலையால் முடியவில்லை என்பது அதன் நடப்புக் கணக்கின் செலுத்துநிலை போதாமலிருந்ததிலிருந்து தெரிகிறது. இதன் விளைவாக 1958-ல் $ 3·5 பிலியன் பற்றுக்குறையும் 1959-ல் $ 4·2 பிலியன் பற்றுக்குறையும் இருந்தன.

[4] 1957-ல் ஏற்றுமதிகள் $ 26·7 பிலியன். 1951–56 சராசரியைவிட இது சுமார் $ 7·5 பிலியன் அதிகம். சூயஸ் நெருக்கடியின்போது பெட்ரோலியப் பண்டங்களுக்கும் அமெரிக்க எண்ணெய் ஏற்றும் கப்பல்களுக்கும் நிறைய தேவை ஏற்பட்டதன் விளைவு இது. ஐரோப்பாவின் தொழில் வளர்ச்சியில், முக்கியமாக 1957-ல் பொதுச் சந்தை ஏற்பட்ட பிறகு, அமெரிக்க முதலீட்டாளர் மிகுந்த அக்கறை காட்டியதை, 1957, 1958-ல் மூலதன ஏற்றுமதிகள் அதிகமாக இருந்தது காட்டுகிறது.

உலக வாணிபத்தில் அமெரிக்காவின் போட்டித் திறன் குறைந்திருக்கக்கூடும் என்பதை அதன் ஏற்றுமதிகளின் வீழ்ச்சியும் இறக்குமதிகளின் உயர்வும் காட்டுகின்றன. முக்கியமான தொழில் வளர்ந்த நாடுகள் உலக வாணிபத்தில் கொண்ட பங்குகளில் ஏற்பட்ட மாற்றங்கள் இக் கூற்றுக்கு ஆதரவாக இருக்கின்றன. ஒன்பது முக்கியமான தொழில் வளர்ந்த நாடுகளின் மொத்த ஏற்றுமதிகளில் அமெரிக்காவின் பங்கு 1952-ல் 36·3 சதவீதத்திலிருந்து 1959-ல் 29·4 ஆகக் குறைந்தது; அஃதாவது, 6·9 சதவீதம் குறைந்தது.[5] அதன் முக்கியப் பிரிவான தொழிற்சாலைப் பொருள்களின் ஏற்றுமதியை எடுத்துக்கொண்டால், அமெரிக்காவின் பங்கு இதைவிட அதிகமாக—8·8 சதவிகிதம்—குறைந்தது.[6] பால்டுவின் குறிப்பிடுவதுபோல, உலகத் தேவைகளின் மாறுதலினால் இவ் வாணிபப் பங்கீட்டு மாற்றம் எதுவும் ஏற்படவில்லை; அதன் காரணம் அமெரிக்காவின் போட்டி நிலை தளர்ந்ததுதான்.

உலக வாணிபத்தில் போட்டியிடும் திறமையை அமெரிக்கா ஏன் சற்று இழந்தது? அமெரிக்காவில் தொழில்நுட்ப முன்னேற்றத்தின் வேகம் அதிகமானதால் தீராத டாலர் பற்றுக்குறை இருக்கும் என்று ஐரோப்பிய நாடுகள் போருக்குப் பின் பயந்ததற்கு இக் கேள்வியின் விடை ருசிகரமான விமரிசனமாக விளங்குகிறது. அமெரிக்காவின் போட்டித் திறன் குறைந்ததற்கு, அதன் போட்டியாளர்களோடு ஒப்பிட்டால் உற்பத்தித்திறன் வளர்ச்சியில் அமெரிக்கா பின்தங்கியிருந்ததுதான் முக்கியக் காரணமாகும். ஒப்பிடப்பட்ட ஏழு நாடுகளில் அமெரிக்காவில்தான் உற்பத்தித்திறன் (ஓர் ஆள்–மணி வேலையின் உற்பத்தி) குறைவாக உயர்ந்தது. கூலிகள் (மணிநேர சம்பாத்தியம்) ஃபிரான்ஸைத் தவிரப் பிறநாடுகளைவிட அமெரிக்காவில் குறைந்தது உண்மையே. இருப்பினும், உற்பத்தித் திறனைவிடக் கூலிகள் வேகமாக உயர்ந்ததால், தொழில் உற்பத்திகளில் போட்டியிட்ட பிறநாடுகளைவிட அமெரிக்காவில் உழைப்புச் செலவுகள் அதிகமாயின. பிரிட்டன் மட்டுமே இதற்கு விதிவிலக்கு. இதே காரணங்களால் அமெரிக்க நிலையை விட பிரிட்டன் மோசமான போட்டி நிலையை அடைந்தது.

[5] பின்வரும் நாடுகள் இந்த விவரங்களில் சேர்ந்தவை: பெல்ஜியம்–லக்சம்பர்க், கனடா, ஃபிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான், ஸ்வீடன், பிரிட்டன், அமெரிக்கா. இவை அனைத்தின் பங்கு, உலக வாணிபத்தில் சுமார் 52 சதவிகிதம். பின்வரும் நூலைப் பார்க்க: Robert E. Baldwin, 'Implications of Structural Changes in Commodity Trade,' Joint Economic Committee, *Factors Affecting the United States Balance of Payments*, 87th Congress, 2nd sess., Washington, D.C., 1962.

[6] அதே நூல், பட்டியல் 3.

## பட்டியல் 25·3

## தொழிற்சாலைகளில் உற்பத்தித்திறன், சம்பாத்தியம், ஊதியச் செலவுகள், 1958-க்கும் 1953-க்கும் ஒப்பீடு (1953=100)

| | அமெரிக்கா | பெல்ஜியம் | ஃபிரான்ஸ் | ஜெர்மனி | இத்தாலி | ஜப்பான் | பிரிட்டன் |
|---|---|---|---|---|---|---|---|
| ஓர் ஆள் - மணி வேலையின் உற்பத்தி | 109 | 127 | 145 | 129 | 138 | 123 | 112 |
| மணிநேர சம்பாத்தியம் | 121 | 131 | 132 | 138 | 128 | 125 | 137 |
| ஊதியச் செலவுகள் (Labour costs) | 111 | 103 | 91 | 107 | 93 | 102 | 122 |

**மூலம் :** Bela Balassa, 'Recent Developments in the Competitiveness of American Industry and the Prospects for the Future,' Joint Economic Committee. மேற்கோள் காட்டிய நூலில் பக்கம் 36.

ஊதியச் செலவுகளை நாம் ஒருபடி மேலும் ஆராய்ந்தால், ஒரே ஒரு முக்கியமான துறையில்தான் தடங்கல் இருந்தது—ஆதார உலோகத் தொழில்களில், அதிலும் முக்கியமாக எஃகில். ஆதார உலோகத் தொழில்களிலும் மொத்தத் தொழிற்சாலை உற்பத்திகளிலும் உற்பத்தித் திறன் ஒரே அளவில் அதிகமாயின. (1958ஐ 1953-ஒடு ஒப்பிட்டால், 109); மணிநேர ஊதியம் 129 ஆக உயர்ந்தது. ஊதியச் செலவுகள் 118 ஆக உயர்ந்தன. இதற்கு மாறாக ஆதார உலோகத் தொழில்களில் ஊதியச் செலவுகள் பெல்ஜியத்திலும் (94), ஃபிரான்ஸிலும் (92), இத்தாலியிலும் (75) உண்மையில் குறைந்தன. ஜெர்மனியிலும் (112) ஜப்பானிலும் (111) அமெரிக்காவைவிடக் குறைவாக உயர்ந்தன.[7] எஃகு பல தொழில்களுக்கு முக்கியமான கச்சாப்பொருள் ஆகையால், இதன் விலை மாறுதல்கள் சிறப்பாக முக்கியமானவை.

உற்பத்தித்திறன் பொதுவாகப் பின்தங்கியதையும் கூலிகள் மிக அதிக விகிதத்தில் உயர்ந்ததையும் இத்துடன் சேர்த்தால், அமெரிக்காவின் போட்டிநிலை, உலோகத்தினால் செய்த பொருள்கள், எந்திரங்கள், வண்டிகள் ஆகியவற்றின் உற்பத்தியில்தான் தாழ்ந்தது என்பது விளங்கும்.[8]

[7] அதே நூல், பட்டியல் 4.
[8] அதே நூல், பின்சேர்க்கை, பட்டியல் A–3.

1958, 1959-லும் அதற்கடுத்த ஆண்டுகளிலும் அமெரிக்கச் செலுத்துநிலை மோசமானதற்கு வேறு காரணங்களைத் தேடிக்கொண்டிருக்கவேண்டியதில்லை. செலுத்துநிலைமீது படை உதவிக்கும் பொருளாதார உதவிக்குமாகச் செய்யப்பட்ட பெரிய செலுத்தல்களின் சுமை அழுத்த, மூலதனம் வேறு பெரிய அளவில் வெளியே போய்க் கொண்டிருக்க, அமெரிக்காவின் வியாபாரப் போட்டித்திறன் தளர்ந்ததும், இந்தப் பெரிய செலவுகளை ஈடுசெய்யும் அளவுக்கு உபரியை உற்பத்தி செய்ய நடப்புக் கணக்கால் இயலவில்லை.

வெளிநாட்டில் செய்யப்பட்ட படைச் செலவுகளிலோ, பொருளாதார உதவியிலோ, அல்லது இரண்டிலுமோ ஒரு கடுமையான வெட்டைச் செய்து இந்தப் பிரச்சினையை தீர்த்திருக்க முடியும்; அல்லது அமெரிக்க மூலதனம் வெளியே போவதைத் தடுக்க முயற்சி எடுத்திருக்கலாம். ஆனால், பாதுகாப்புக் கொள்கையும் வெளிநாட்டுப் பொருளாதாரக் கொள்கையும் மிகமிக முக்கியமானவையாகக் கருதப்பட்டன. எனவே, இந்த வழிகளைக் கடைப்பிடிப்பது சாத்தியமில்லை; அல்லது இதற்கு மாற்றாகச் செலவுகளையும் விலைகளையும் அரசாங்கம் சுருக்குவதற்கு முயற்சிபுரியலாம். இதன்மூலம் நாட்டின் போட்டிநிலையை அபிவிருத்தி செய்திருக்கலாம்; அல்லது அதே விளைவை டாலரின் மதிப்பைக் குறைப்பதன்மூலம் செய்திருக்கலாம். ஏனெனில், அப்போதிருந்த செலவு, விலை அளவுகளைக் கருதினால் டாலரின் மதிப்பு மிகவும் மிகையாகத் தோன்றியது.

**பற்றுக்குறையின் எதிர்விளைவுகள்**

முதலில் அரசாங்கம் ஒரு நடவடிக்கையையும் எடுக்கவில்லை. சேமநிதிகள் நிறைய இருந்தன. டாலரின் மிகைமதிப்புப்போன்ற அடிப்படைச் சமநிலைக் கேடு இப் பெரிய பற்றுக்குறைக்குக் காரணமாக இருப்பினும், சேமநிதிகளின் முக்கியமான பணித் திருத்தங்கள் செயல்பட்டுக்கொண்டு இருக்கும்போது நிலைமை சரியாகப் போதிய அவகாசத்தை அளிப்பதாகும் ஆதலின், உண்மையில் அதிகார வர்க்கத்தினர் 1959 கோடைகாலம்வரையில் இதுபற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை; அப்படி அக்கறை கொண்டபோதும் அடுத்த ஆண்டுவரை அதுபற்றித் தீவிரமாகக் கவலைப்படவில்லை.

1959-ல் பற்றுக்குறை மேலும் அதிகமாயிற்று. 1960-ல் அஃது அதிகமாகவே இருந்தது. உண்மையான திருத்தச் செயல்முறையை இயக்க விருப்பமின்றியோ, முடியாமலோ, ஐஸன்ஹோவர் நிர்வாகம், கென்னடி நிர்வாகம் இரண்டுமே 'டாலரைக் காக்கும்' (defending the dollar) கொள்கையைக் கடைப்பிடித்தன. அமெரிக்காவின்

பன்னாட்டுச் செலுத்தல்களைக் குறைக்கவும் வருவாய்களை அதிகரிக்கவும் வரிசையாக இதற்காகப் பல நடவடிக்கைகளை மேற்கொண்டனர். இந் நடவடிக்கைகள் மூன்று முக்கிய வகைகளைச் சேர்ந்தவை: (1) அமெரிக்கத் தொழில்களுக்கு மிதமான அளவில் பாதுகாப்பு அளிக்கும் நடவடிக்கைகள்—உதாரணமாக, வெளிநாட்டு உதவியை மேலும் அதிகமாக அமெரிக்கப் பொருள்களாகத் தருவது; வெளிநாடுகளில் படைச் செலவுகள் செய்யும்போது பண்டங்களை அமெரிக்காவிலிருந்து வாங்கச் செய்வது; திரும்பிவரும் அமெரிக்க உல்லாசப் பிரயாணிகள் இறக்குமதி வரி செலுத்தாமல் கொண்டுவரக்கூடிய பொருள்களின் அளவைக் குறைப்பது ஆகியவை. (2) பரஸ்பரப் பாதுகாப்புக்கான செலவிலும் வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கு உதவுவதிலும் முன்னைவிட அதிகமாக ஐரோப்பிய நாடுகள் பங்குகொள்ளவேண்டும் என்று அவற்றைக் கேட்டுக்கொள்வது. (3) ஏற்றுமதியாளர்களுக்கு அரசாங்கம் செய்துதரும் வசதிகளை அபிவிருத்தி செய்தும், ஏற்றுமதிக் கடன்கள், கடன் உத்தரவாதங்கள் ஆகியவற்றை அபிவிருத்தி செய்தும், அமெரிக்காவிலிருந்து வரும் இறக்குமதிகள்மீது மீதமுள்ள பேதம் காட்டும் தடைகளை நீக்குமாறு அமெரிக்காவின் வாணிபக் கூட்டாளிகளைக் கேட்டுக்கொண்டும் ஏற்றுமதிகள் பெருக ஊக்கமளிப்பது.

இந்த முயற்சிகளை விவாதித்துத் திட்டங்களைத் தீட்டி அவற்றைச் செயலாற்றத் தொடங்கியபோது, உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் போட்டியின் அழுத்தங்களும் தொழில்நுட்ப வளர்ச்சியும் அமெரிக்காவில் அடக்கச் செலவுகளையும் விலைகளையும் குறைக்கும் என்று எல்லாரும் எதிர்பார்த்தார்கள். உற்பத்தித் திறனையும் ஊதியச் செலவுகளையும் பொறுத்தவரையில் இவ்வெண்ணம் ஓரளவு நிறைவேறியது. அமெரிக்க உற்பத்தித்திறன் பிறநாடுகளில் ஏற்பட்டதை விட ஓரளவுக்கு வேகமாக உயர்ந்ததாலும் கூலிகள் அதைவிடக் குறைவாக உயர்ந்ததாலும், ஊதியச் செலவுகள் ஓரளவுக்கு மிதமாகக் குறைந்தன (பட்டியல் 25·4-ஐப் பார்க்க). ஆனால், ஐரோப்பாவில் முழு வேலைநிலையிருந்தது; தொழிலாளர் பற்றுக்குறை அதிகம். எனவே, முன்பிருந்ததைவிட அதிகமாகக் கூலிகள் உயர ஆரம்பித்தன. 1958-க்கும் 1961-க்கும் இடையே அமெரிக்காவில் ஊதியச் செலவுகள் பெல்ஜியம், ஃபிரான்ஸ், இத்தாலி நாடுகளில் இருந்த அளவுக்கே மாறி யிருந்தது. ஆனால், ஜெர்மனி, பிரிட்டன் நாடுகளுடன் ஒப்பிட்டால் அமெரிக்காவில் ஊதியச் செலவு நிறையக் குறைந்தது. (மணிநேரக் கூலியில் 30 சதவிகித உயர்வு இருந்தும் உற்பத்தித்திறன் வியக்கத் தக்க அளவு ஜப்பானில் உயர்ந்ததால், தன் போட்டி நாடுகள் அனைத்தையும்விட உயர்ந்த போட்டிநிலையை அஃது அடைந்தது.)

## பட்டியல் 25·4

## தொழிற்சாலைகளில் உற்பத்தித்திறன், சம்பாத்தியம், ஊதியச் செலவுகள் (1958-டுடன் 1961-ஐ ஒப்பிட்டால்)

(1958 = 100)

| | அமெரிக்கா | பெல்ஜியம் | ஃபிரான்ஸ் | ஜெர்மனி | இத்தாலி | ஐப்பான் | பிரிட்டன் |
|---|---|---|---|---|---|---|---|
| ஓர் ஆள்-மணியில் உற்பத்தி | 114 | 112 | 114 | 117 | 121 | 160 | 109 |
| மணிநேர சம்பாத்தியம் | 110 | 109 | 105 | 133 | 116 | 130 | 120 |
| ஊதியச் செலவுகள் | 96 | 94 | 92 | 113 | 95 | 80 | 109 |

**மூலம் :** Balassa-விலிருந்து எடுத்தது ; மேற்கோள் காட்டிய நூல், பட்டியல் 3.

அமெரிக்காவில் ஊதியச் செலவுகளில் மிதமான இக் குறைவு ஏற்பட்டது, செலுத்தல் சமநிலைக் கேட்டைச் சரிசெய்யப் போதுமானதாக இல்லை. ஆனால், அடிப்படைத் தொல்லை மேலும் கெட்டுப்போகாமல் இது தடுத்தது. இந்த முறையில் செலுத்துநிலைப் பற்றுக்குறை தீரவேண்டுமானால், ஐரோப்பாவில் தொடர்ந்து செழுமையும் தொழிலாளிகள் பற்றுக்குறையும் இருந்து, அமெரிக்காவில் தொடர்ந்து பெரும் அளவில் வேலையின்மை இருந்து (1957-லிருந்து 5·5 சதவீதத்துக்கு அதிகமாக), இவ்விரண்டின் தாராதர உற்பத்தித்திறன் எதிரிணையாக மாறாமல் இருந்தால், அது சரியாகும். அதைவிட முக்கியமாக, அதற்கு நிறைய காலம் செல்லும்.

'டாலரைக் காக்கும்' முயற்சிகளின் விளைவாக ஒரு பகுதியும் பிற வெளிச் சக்திகளின் விளைவாக ஒரு பகுதியுமாக வாணிபநிலை நிறைய அபிவிருத்தி அடைந்தது. அத்துடன் வாணிபம், அரசாங்க நடவடிக்கைகள், நெடுங்கால முதலீடு ஆகியவற்றின் விளைவான அடிப்படைப் பற்றுக்குறையும் நிறைய அபிவிருத்தி அடைந்தது. அமெரிக்க ஏற்றுமதிகள் 1960-ல் வேகமாக, $ 3·2 பிலியன் அளவு உயர்ந்தன. இறக்குமதிகள் அரை பிலியன் அளவு குறைந்தன. இதனால் வாணிபநிலை சாதகமாக $ 4·7 பிலியனாக இருந்தது. ஐரோப்பாவில் உற்பத்தித்திறனும் வருமானங்களும் தொடர்ந்து உயர்ந்ததும் அமெரிக்காவில் ஒரு மிதமான பின்னிறக்கம் ஏற்பட்டதும் தாம் இவ்வபிவிருத்திக்கு முக்கியமான காரணங்களாகும்.

## பட்டியல் 25·5

## அமெரிக்கச் செலுத்துநிலை உருப்படிகளில் சில, 1958–1963

(மிலியன் டாலர் அளவில்)

| | ஏற்று மதிகள் | இறக்கு மதிகள் | வாணிப நிலை | அடிப்படைப் பற்றுக்குறை* | பதிவான நிகர குறுகிய கால மூலதனப் போக்கு (−) | பதிவாகாத விவகாரங்கள் | மொத்தப் பற்றுக்குறை* |
|---|---|---|---|---|---|---|---|
| 1958 | 16,202 | 12,867 | 3,335 | −3,655 | − 362 | 488 | −3,529 |
| 1959 | 16,211 | 15,207 | 1,004 | −4,667 | 77 | 412 | −4,178 |
| 1960 | 19,401 | 14,654 | 4.747 | −1,900 | −1,433 | − 592 | −3,925 |
| 1961 | 19,819 | 14,449 | 5,370 | −1,216 | −1,332 | − 602 | −3,150 |
| 1962 | 20,566 | 16,193 | 4,373 | −1.173 | − 674 | −1,000 | −2,847 |
| 1963† | 10,454 | 8,105 | 2,349 | −1,540 | − 519 | − 54 | −2,113 |

* அமெரிக்க அரசாங்கத்துக்குத் தவணைப்படியில்லாமல் வெளிநாட்டுப் பொறுப்புகள் செலுத்தப்பட்டதைக் கழித்து; அஃதாவது, 1959 $ 435 மிலியன்; 1961 $ 764 மிலியன்; 1962 $ 666 மிலியன் ஆகிய தொகைகளைக் கழித்து.

† முதல் ஆறு மாதங்கள்.

**மூலங்கள் :** 1958 முதல் 1961 வரை விவரங்களுக்கு, Hal B. Lary, *Problems of the United States as World Trader and Banker*, பட்டியல் 1. Published by National Bureau of Economic Research, New York, 1963. 1962, 1963-க்கான விவரங்களுக்கு *Survey of Current Business*, March 1963, September 1963. Published by U.S. Department of Commerce, Washington, D. C.

1961-ல் வாணிப நிலையும் அடிப்படைப் பற்றுக்குறையும் மேலும் அபிவிருத்தி அடைந்தன. ஆனால், 1962-ல் இறக்குமதிகள் மிகவும் உயர்ந்ததும், இரண்டும் பின்னிறங்கின. முன்னைவிட அபிவிருத்தி அடைந்த நிலையில் இருந்தாலும், அடிப்படைப் பற்றுக்குறை நிலையாக ஒரு பிலியன் டாலருக்குமேல் இருந்தது.

அதற்குள்ளாக, பதிவான குறுகிய கால மூலதன இடப்பெயர்ச்சி களாகிய சுமார் $ 1·4 பிலியனும் (முக்கியமாகக் குறுகிய கால மூலதன மாக இருக்கக்கூடிய) ‘பதிவாகாத விவகாரங்கள்’ ஆகிய $ 600 மிலிய னும் சேர்ந்து 1960-ல் மொத்தப் பற்றுக்குறையை $ 3·9 பிலியன் ஆக்கின. இம் மூலதன வெளிப்போக்கின் பெரும்பகுதிக்கு வட்டி

வித்தியாசங்களையும் டாலருக்கு எதிராக ஊகவாணிப விவகாரங்களை யும் காட்டலாமாயினும், வெளிநாட்டாருக்கு அளித்த குறுகிய காலக் கடன்களில் பாதியாவது அதற்கு அதிகமான பகுதியாவது நேராகவோ மறைமுகமாகவோ அதே தொகைக்கு அமெரிக்க ஏற்றுமதிகளுக்குச் செய்யப்பட்ட நிதி ஏற்பாடாகும்.[9] குறுகிய கால நிலுவைகளின் இந்த இடப்பெயர்ச்சி இருந்திராவிட்டால் அமெரிக்க ஏற்றுமதிகள் மிகவும் குறைந்திருக்கும். எனவே, அடிப்படைப் பற்றுக்குறை மேலும் அதிகமாக இருந்திருக்கும்.

செலுத்துநிலையின் பல்வேறு அங்கங்கள் ஒன்றை ஒன்று சார்ந் திருப்பதை இஃது எடுத்துக்காட்டுகிறது. இது, நெடுங்கால மூலதன இடப்பெயர்ச்சிகள், வெளிநாட்டில் படைகளுக்காகச் செலவிடப் படுவது, அயல்நாடுகளுக்கு உதவி இவை விஷயத்திலும் உண்மையே. பற்றுக்குறைக்கு இவை காரணமில்லை என்று அவற்றைப் பார்த்த வுடன் கூறிவிட முடியாது.

1961-லும் 1962-லும் குறுகிய கால மூலதன இடப்பெயர்ச்சிகள் தொடர்ந்து பெரும் அளவில் நடந்தன. 1963ஆம் ஆண்டின் முதலில் வெளியான விவரங்களும் அத்தகைய போக்கையே குறிக்கின்றன. ஆறு ஆண்டுகள் அதை மட்டுப்படுத்த முயன்றபின்னும்,[10] அமெரிக்கா வின் செலுத்துநிலைப் பிரச்சினை இன்னமும் தீரவில்லை. இக் காலக் கூற்றின் பின்பகுதியில் அதைவிடப் பரவலான பிரச்சினையாகிய பன் னாட்டுப் பணச் சீர்திருத்தத்தோடு மேலும் மேலும் அது பின்னிக் கொண்டுவிட்டது (27ஆவது அத்தியாயத்தைப் பார்க்க).

[9] பிலிப் டபிள்யூ. பெல் (Philip W. Bell) என்பவர் சிரத்தையோடு செய்த ஆராய்ச்சியின் விளைவு இந்த முடிவு. ('Private Capital Movements and the U.S. Balance of Payments Position,' in *Factors Affecting the United States Balance of Payments.* மேற்கோளிட்ட நூலில் பக்கங்கள் 395–481.) 1960-ல் நிகரக் குறுகிய கால மூலதன ஏற்றுமதிகளில் $ 300–400 மிலியனும் அதற்கு அடுத்த ஆண்டில் ஏறக்குறைய அதே அளவு இருந்த குறுகிய கால மூலதன ஏற்றுமதிகளில் அதே பகுதியும் வட்டி வித்தியாசங் களின் விளைவாக ஏற்பட்டிருக்கலாம். சாதாரணமாக எண்ணப்படுவதைவிட மிகக் குறைவாகவே பன்னாட்டு வட்டி வித்தியாசங்கள் மூலதனப் போக்கை பாதிக் கின்றன என்பதை இது காட்டுகிறது. ஏனெனில், 1960 ஜூனில் 3 மாதக் கருவூல உண்டியல்களின் வீதம் நியூயார்க்கில் 2·7 சதவீதம், லண்டனில் 4·8 சதவீதம், ஃபிராங்ஃபர்ட்டில் (Frankfurt) 5·5 சதவீதம்.

[10] 1963 ஜூலையில், இதுவரை முயலப்படாத மிகத்தீவிரமான ஒரு நடவடிக் கையை ஜனாதிபதி கென்னடி காங்கிரஸில் எடுத்துரைத்தார். அமெரிக்காவிலிருந்து நெடுங்கால மூலதன வெளிப்போக்கைத் தடுக்க அமெரிக்காவில் வசிப்பவர்கள் அயல்நாட்டுப் பத்திரங்களை வாங்குவதன்மீது 'வட்டியைச் சமமாக்கும்' வரி ஒன்றை விதிக்கவேண்டுமென்பது அவரது யோசனை. வெளிநாட்டுக் கம்பெனிப் பங்குகள்மீது அவ்வரி 15 சதவிகிதம்; மூன்று ஆண்டுகளுக்கு அதிகமான தவணை உள்ள வெளிநாட்டுக் கடன் பத்திரங்கள்மீது அவ்வரி படிப்படியாக $2^3/_4$ சதவீதத்தி

## பார்வைக்குரிய சில நூல்கள்

Economic Commission for Europe, *Economic Survey of Europe in* 1949. New York : United Nations, annually since 1949. ஐரோப்பாவில் அவ்வப்போது ஏற்படும் நிகழ்ச்சிகளை ஆராய்வது.

———, *Economic Survey of Europe Since the War*. New York : United Nations, 1953. 1952 வரை ஐரோப்பாவின் முன்னேற்றத்தை முழு விவரங்களுடன் விளக்குகிறது. ஐரோப்பாவின் வாணிபம், செலுத்தல்கள் ஆகியவற்றின் பிரச்சினைகளையும் தொழில் வளர்ச்சியையும்பற்றி விவரிக்கிறது.

Harris, Seymour E., ed., *The Dollar in Crisis*. New York : Harcourt, Brace & World, Inc., 1961. முதலில் வரும் பல கட்டுரைகள் டாலர் நெருக்கடியின் பல்வேறு அம்சங்களை அருமையாக விவரிக்கின்றன.

Lary, Hal B., *Problems of the United States as World Trader and Banker*. New York : National Bureau of Economic Research, 1963. அமெரிக்காவின் செலுத்துநிலைப் பிரச்சினையை இதைவிட விளக்கமாகக் கூறும் நூல் இல்லை.

MacDougall, Sir Donald, *The Dollar Problem : A Reappraisal*. Princeton, N. J. : International Finance Section, Princeton University, November, 1960. டாலரின் நிலைமை 1960-ல் இருந்ததைப்பற்றி விவரிக்கும் சுருக்கமான துண்டு வெளியீடு.

United States Congress, Joint Economic Committee, *Factors Affecting the United States Balance of Payments*, 87th Congress, 2nd sess. Washington, D. C. : Government Printing Office, 1962. டாலர் பிரச்சினையின் பல்வேறு அம்சங்களைப்பற்றி விவரிக்கும் கட்டுரைகளின் அருமையான தொகுப்பு.

---

லிருந்து, 28½ ஆண்டுகள் அல்லது அதற்கதிகமான தவணை உள்ள பத்திரங்கள் மீது வரி 15 சதவிகிதம்வரை உயரும். ஓர் அமெரிக்கவாசி மற்றோர் அமெரிக்கவாசியிடமிருந்து வெளிநாட்டுப் பத்திரம் வாங்கினால் அதற்கு வரி இல்லை. நேரிடை முதலீடுகளுக்கு, அஃதாவது, ஒரு வெளிநாட்டுக் கம்பெனியில் 10 சதவீதம் அல்லது அதற்கு அதிகமாகப் பங்குகளை வாங்குவதன்மீதும் வரியில்லை. கடந்த காலத்துக்கும் பொருந்துமாறு சில ஷரத்துகள் அம் மசோதாவில் இருந்ததால், முக்கியமான வெளிநாட்டுப் பங்கு மார்க்கெட்டுகளை அது மந்தப்படுத்தியது. 1964 தொடக்கத்தில், காங்கிரஸின் குழுவசம் அம் மசோதா இன்னமும் இருந்தது.

# 26. போருக்குப்பின் செலாவணிப் பிரச்சினைகள்

போருக்குப் பின் வந்த ஆண்டுகளில் இருந்த இரு பெரும் பன்னாட்டுப் பிரச்சினைகளையும் அவற்றைத் தீர்க்கச் செய்த முயற்சிகளையும் இதற்கு முந்திய அத்தியாயம் விவரித்தது. இந்தக் காலத்தில் ஏற்பட்ட சில அமைப்பு மாறுதல்களையும் அஃது எவ்வாறு பன்னாட்டுப் பண முறைக்குப் புத்துரு கொடுத்தது என்பதையும் இனிப் பார்க்கலாம்.

போர் முடிந்ததும், அதன் பின் பல ஆண்டுகளும், உலகத்தின் செலாவணிமுறை அடியோடு ஒழுங்கு கெட்டு இருந்தது. முழுவதும் மாற்றுரிமை பெற்று, திடநிலை உடையனவாக, இரண்டே நாணயங்கள் தாம் இருந்தன. அவை அமெரிக்க டாலரும் ஸ்விட்சர்லாந்தின் ஃபிராங்குமாகும். (கனடா தவிர) பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளும் பிரிட்டனுடன் நெருங்கிய வாணிப உறவும் பாங்குத் தொடர்பும் கொண்ட வேறு சில நாடுகளும் கொண்ட தொகுதியான ஸ்டர்லிங் பிராந்தியம் முழுவதிலும் லண்டனில் இருந்த சேமநிதி வைப்புகளை மாற்றுவதன்மூலம் செலுத்தல் மாற்றுகைகளைத் தடையின்றிச் செய்ய முடிந்தது உண்மையே. ஆனால், அப் பிராந்தியத்துக்கு வெளியில் உள்ள நாடுகளுக்கு, முக்கியமாக டாலர் பிராந்தியத்துக்குப்[1] பணம் அனுப்புவது சம்பந்தமாகக் கடுமையான, ஆனால், நாட்டுக்கு நாடு வேறுபாட்டுடன் நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளும் இறக்குமதித் தடைகளும் இருந்தன. உலகின் பிறநாடுகளை எடுத்துக்கொண்டால், ஒவ்வொன்றும் அதனதன் குறிக்கோள்களைத் தன்னிச்சையாகப் பின்பற்றின. மேற்கு ஐரோப்பாவில், பொதுவாகப் பொருள்கள் பற்றுக்குறையில் இருந்தன; ஏற்றுமதித் திறன் போதுமான அளவு இல்லை; வாங்கும் சக்தி மிகையாக இருந்ததால், நாணய மாற்று வீதங்களை மிகைமதிப்பான அளவுகளில் வைத்திருக்க வேண்டியிருந்தது; அதற்கு ஆதரவாக நிறைய கட்டுப்பாடுகளும்

[1] அமெரிக்கா, கனடா, மற்றும் நியூயார்க் பாங்குகள்மூலம் தம் வாணிபத்துக்கு நிதி ஏற்பாடுகள் செய்த நாடுகள் (முக்கியமாக இலத்தீன் அமெரிக்கா).

வாணிபத் தடைகளும் விதிக்கப்பட்டிருந்தன. வேறு பல நாடுகளிலும் இதே போன்ற நிலவரம் இருந்தது ; அங்கும் இதேபோன்ற முறைகள் கடைப்பிடிக்கப்பட்டன. குறைந்தபட்சமாக ஓரளவாவது அத்தியா வசியமான இறக்குமதிகள் வர வழிசெய்ய இருமுக வாணிப ஒப்பந்தங்களைப் பல நாடுகள் செய்துகொண்டன.

## பன்னாட்டுச் செலாவணி நிதி
## (International Monetary Fund)

போர் முடியும்போது சீர்குலைவும் சிதைவும் ஏற்பட்டிருக்கக் கூடும் என்பது நிச்சயமாதலின், உலகமெங்கணும் தடைகள் விதிக்கப்பட்டிருக்கும் குழப்ப நிலையிலிருந்து ஓரளவுக்கு ஒழுங்கினை ஏற்படுத்த எல்லா நாடுகளும் முழு எண்ணத்தோடு கடுமையான முயற்சிகளைச் செய்யவேண்டும் என்பது போர் நடந்துகொண்டிருந்த போதே தெளிவாயிற்று. இதே எண்ணம் அமெரிக்காவிலும் பிரிட்ட னிலும் இருந்த நிபுணர்களுக்கு இருந்ததால், போருக்குப்பின் செலா வணித்துறையில் பன்னாட்டுக் கூட்டுறவுக்கான விவரமான திட்டங் களைப் போர் நடக்கும்போதே அவர்கள் தீட்டினர். முதலில் அவர்கள் தனியாக உழைத்தனர் ; பின்னர் பிறநாடுகளின் பிரதிநிதிகளுடன் சேர்ந்து உழைத்தனர். அதன் பலனாக, பன்னாட்டுச் செலாவணி நிதி என்னும் (IMF) ஒப்புமையற்ற ஒரு புது நிறுவனத்தை அமைக்க ஒரு பொதுத் திட்டத்தின் அம்சங்களை அவர்கள் தயாரித்தனர். 1944 ஜூலையில் நியூ ஹாம்ப்ஷயரில் பிரெட்டன் வுட்ஸில் (Bretton Woods, New Hampshire) நடந்த ஒரு பன்னாட்டு மகாநாட்டில் இவ்விஷயங்களை விவாதித்து, பன்னாட்டுச் செலாவணி நிதியின் ஒப்பந்த ஷரத்துகளையும் புனரமைப்புக்கும் வளர்ச்சிக்குமான பன்னாட்டு பாங்கு (International Bank for Reconstruction and Development) என்ற மற்றோர் அமைப்பை நிறுவுவதற்கான ஒப்பந்தத்தையும் தயாரித்தனர்.

இந் நிதியை அமைத்தது பன்னாட்டுக் கூட்டுறவின் முக்கியமான தொரு முயற்சியாகும். பன்னாட்டுச் செலாவணித் துறையில் இதற்கு முன் சில முயற்சிகள் செய்யப்பட்டிருப்பினும், அவ் விவகாரங்களை ஒழுங்காக நடத்த வழி செய்ய மிக விவரமாகச் செய்யப்பட்ட முதல் முயற்சி இதுதான். முதல் உலகப் போருக்கு முன்னரே பன்னாட்டுக் கூட்டுறவு இருந்தது. ஆனால், அஃது ஆட்சார்பற்ற மார்க்கெட் சக்திகளை அடிப்படையாகக்கொண்டது. டைரக்டர்கள், அலுவலக ஊழியர், செய லாற்றும் அதிகாரம் இவற்றை உடைய குறிப்பிட்ட நிறுவனம் எதுவும் நிறுவப்படவில்லை. 1920-ல் தொடங்கிய பத்து ஆண்டுகளில் மத்திய பாங்குகளிடையே இருந்த கூட்டுறவானது, இத்துடன் ஒப்பிட்டால், ஒழுங்குமுறை சாராதது ; இறுக்கமற்றது. சமீப ஆண்டுகளில் பன்னாட்டுத் துறையில் குறிப்பிட்ட குறிக்கோள்களை அடைய நாடுகள்

வேண்டுமென்றே எண்ணமிட்டு அமைப்புகளை நிறுவுகின்றன. இதற்கு ஒரு முக்கிய எடுத்துக்காட்டு, பன்னாட்டுச் செலாவணி நிதி.

**பணிகள்**

போர்களுக்கிடையான காலத்தில் பெற்ற படிப்பினைகளை நிதியின் மூன்று முக்கியக் குறிக்கோள்கள் தெளிவாகப் பிரதிபலிக்கின்றன.

1. அந்தக் காலத்தில், உலகமெங்குமுள்ள செலாவணிகள் ஒன்றுக்கொன்று மாற்றுரிமை பெற்றிருக்கவேண்டிய அவசியம் முக்கியமாகத் தென்பட்டது. ஏனெனில், அந் நிலையில்தான் பலமுகச் செலுத்தல் முறை மீண்டும் ஏற்பட்டுப் பன்னாட்டுச் சிறப்புத் தேர்ச்சி வாய்ப்புகளை முழு அளவுக்குப் பயன்படுத்தும் வாணிபமுறை மீண்டும் தோன்றமுடியும். எனவே, நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை நீக்குவதை நிதியின் முக்கியக் குறிக்கோளாக நிதியின் ஒப்பந்த ஷரத்துகள் கொண்டுள்ளன.

2. நாணயமாற்று வீதங்கள் நிலையற்று இருந்தால், முக்கியமாக நாடுகள் போட்டி போட்டுக்கொண்டு செலாவணிகளின் மதிப்பை இறக்கினால், ஏற்படக்கூடிய திடநிலை குலைக்கும் விளைவுகள் நேரா திருக்க, நாணயமாற்று வீதங்களில் நியாயமான அளவு திடநிலை ஏற்படுத்துவது நிதியின் மற்றொரு பணியாகியது.

3. மூன்றாவது குறிக்கோள் மிகவும் கடுமையானது; சேர்த்து வைக்க முடியாது தோன்றும் இரண்டும் உருப்படிகளைச் சேர்த்து வைப்பது; நாணயமாற்றுத் திடநிலையையும் பணம், நிதிக் கொள்கை களில் நாடுகள் சுதந்திரமாக இருப்பதையும் இணைப்பது. நாடுகள் முழு வேலைநிலைக் குறிக்கோளைப் பொதுவாக ஒப்புக்கொண்டுள்ளன. இதைப் பின்பற்ற சுதந்திரமான பண, நிதிக்கொள்கைகள் வேண்டும். ஆனால், உண்மையான பன்னாட்டுச் செலாவணி முறையும் இதுவும் ஒவ்வாதது. ஏனெனில், அத்தகைய செலாவணி முறையில் செலுத்து நிலை சீர்கெட்டால் பணவீக்கமோ, பணச்சுருக்கமோ தோன்றி வேலை நிலையில் மாறுதல்கள் ஏற்படும்.

**அதிகாரங்கள்**

இந்தக் கடினமான குறிக்கோள்களை அடைய ஒவ்வொரு நாட்டின் நாணயமாற்றுக் கொள்கையும் செலுத்தல் கொள்கையும் சுதந்திரமாக இயங்குவதற்குப் பதிலாக எல்லா நாடுகளும் அதன்படி நடக்க ஒப்புக் கொண்ட ஒரு பன்னாட்டுக் கூட்டுறவு விதிமுறையை நிதி ஒப்பந்தம் நிறுவியது.[2] அதன் குறிக்கோள்களை அடையும் விதிகளைப்பற்றிய முழு விவரங்களும் இவ் விதிமுறையில் (Code) அடங்கியுள்ளன.

[2] 1947-ல் IMF செயலாற்றத் தொடங்கியபோது அதில் 39 உறுப்பினர்கள் இருந்தனர்; பத்து ஆண்டுகள் கழிந்து 68 நாடுகள் சேர்ந்திருந்தன; 1963-ல் மொத்தம் 82 நாடுகள் அதில் அங்கம் வகித்தன.

**நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை நீக்குவது:** நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை நீக்கவும் இறுதியில் மாற்றுரிமையை மீண்டும் ஏற்படுத்தவும் பின்வருமாறு விதிக்கப்பட்டது: நிதியின் ஒப்புதல் இன்றிப் பன்னாட்டு நடப்பு விவகாரங்கள்மீது புதிதாக எந்த நாணய மாற்றுக் கட்டுப்பாடுகளையும் உறுப்பு நாடு எதுவும் விதிக்கக்கூடாது. திருத்தி அமைக்கும் காலம் 1952இல் முடிந்த பின்னர், இன்னமும் நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை வைத்துள்ள உறுப்பு நாடுகள் நிதியின் அதிகாரிகளை அவற்றைத் தொடர்ந்து வைத்திருப்பதைப் பற்றிக் கலந்து ஆலோசிக்கவேண்டும்.

தேவையற்ற மூலதன இடப்பெயர்ச்சிகள் விஷயத்தில்—அதாவது, ஊகவாணிபம் அல்லது அரசியல் காரணமாக ஏற்படும் மூலதன ஓட்டங்கள் விஷயத்தில் ஒரு விதிவிலக்குச் செய்யப்பட்டது. அத்தகைய ஓட்டங்களைத் தடுக்கக் கட்டுப்பாடுகளைப் புகுத்தும்படி உறுப்பு நாடுகளைக் கேட்டுக்கொள்ளலாம். ஆனால், நடப்பு விவகாரங்கள்மீது தடைவிதிக்காமல் ஒரு பிராந்தியத்தில் மூலதன ஓட்டங்களைமட்டும் திறம்படக் கட்டுப்படுத்த முடியுமா என்பது சந்தேகமே.

**நாணயமாற்று வீதங்களின் திடநிலை:** நாணயமாற்று வீதங்களில் மீண்டும் திடநிலை ஏற்படுத்துவது, பன்னாட்டுத் திருத்தத்துக்கு யாவரும் ஒப்புக்கொள்ளும் ஒரு வழியை ஏற்படுத்துவது ஆகிய இரு பிரச்சினைகள் விஷயத்தில் நிதி ஒப்பந்தத்தில் ஒரு புதுமையைக் காணலாம். பொன் திட்டத்தின் சில அம்சங்களை இதில் காணலாம்; அதன் எதிர் முறையான நாணயமாற்று வீதங்கள் மாறும் நிலையின் சில அம்சங்களையும் இதில் காணலாம். இவ்விரண்டையும் சேர்த்து ஒரு நடுநிலைத் திட்டம் ஏற்படுத்தப்பட்டுள்ளது—இதில் நாணயமாற்று வீதங்கள் நெகிழ்ச்சியோடு திடநிலையையும் பெற்றுள்ளன.

பொன்னே செலாவணிகளின் அடிப்படையாகப் பன்னாட்டுச் செலாவணி நிதியிலும் உள்ளது. நிதியின் கூட்டுறவோடு ஒவ்வோர் உறுப்பு நாடும் தன் செலாவணிக்கு ஒரு சமன்மதிப்பை ஏற்படுத்த வேண்டும். அம் மதிப்பைப் பொன்னாலோ, அமெரிக்க டாலராலோ அளவிட்டுக் கூறவேண்டும். இந்தச் சமன்மதிப்புகளைப் பாதுகாப்பதற்காக, உடனடி விகிதங்களின் உச்ச, நீச அளவுகள் சமன்மதிப்பில் 1 சதவிகிதத்துக்கு அதிகமாக மாறாமல் உறுப்பு நாடுகள் பார்த்துக் கொள்ளவேண்டும்.

**திருத்தம்: ஒரு நடுநிலை வழி:** அவ்வளவு கவலைக்கிடமில்லாத குறுகிய கால உலைவுகளைச் சரிசெய்யவும், அல்லது அதைவிட ஆழ்ந்த தொல்லைகளை முளையிலேயே சரிசெய்யவும் உறுப்பு நாடுகள் உபயோகப் படுத்துவதற்காகப் பெருமளவு நிதிவசதியைப் பன்னாட்டுச் செலாவணி நிதி சேர்த்தது. ஒரு நாடு நிதியில் சேருவதற்குப் பின்வரும் நிபந்தனை

இருந்தது. ஒவ்வொரு நாட்டுக்கும் அதன் உருவத்தையும் பொருளாதார வலிமையையும்பொறுத்து அது செலுத்தவேண்டிய ஒரு தனிக் கோட்டா தீர்மானிக்கப்பட்டது. அக் கோட்டாவில் 25 சதவிகிதத்தைப் பொன்னுகவும் மீதியை அந்த நாட்டின் செலாவணியாகவும் செலுத்த வேண்டும். இவ்வாறு கட்டப்பட்ட தொகைகளினின்று, (1957-ல்) பன்னாட்டுச் செலாவணியின் மொத்த நிதிவசதி $9 பிலியனுகச் ($1·7 பிலியனுக்குப் பொன்) சேர்ந்தது. இத் தொகையிலிருந்து ஒவ்வோர் ஆண்டும் தன் கோட்டாவில் 25 சதவீதம்வரை, ஐந்து ஆண்டுகளுக்கு ஒவ்வோர் உறுப்பு நாடும் கடன் வாங்கலாம்.[3] உறுப்பு நாடுகளுக்குத் தம் சொந்தப் பன்னாட்டுச் சேமநிதிகளோடு இந்தக் 'கடன் வாங்கும் உரிமைகள்' (drawing rights) துணைச் சேமநிதிகளாக விளங்குகின்றன. பின்னர், இச் சேமநிதிகளுக்குத் துணையாக மேலும் சேமநிதி வசதிகளைத் 'துணைநிற்கும் ஏற்பாடுகள்' (standby agreements) உருவில் இந் நிதி அமைத்துத்தந்தது. இதன்படி சாதாரணமாக வாங்கும் உரிமைகளுக்கு மிகையாக நிதிவசதியை உறுப்பு நாடுகளுக்கு அளிக்கப் பன்னாட்டுச் செலாவணி நிதி ஒப்புக்கொண்டது.

அதிகக் கவலைக்கிடமான, 'அடிப்படை' வகையான சமநிலைக் கேடுகள் ஏற்பட்டால், அவற்றைச் சரிசெய்ய மாருத நாணயமாற்று வீதமுறையின் அடிப்படையில் உள்ள தீங்கு விளைவிக்கக்கூடிய பணச் சுருக்கம்—பணவீக்கம் இயக்கத்தைப் பன்னாட்டுச் செலாவணிநிதி கைவிட்டது. ஓர் உறுப்பு நாட்டின் செலுத்துநிலையில் 'அடிப்படையான சமநிலைக் கேடு' ஏற்பட்டால் அது நிதியைக் கலந்தாலோசிக்க வேண்டும். IMF-ன் நிர்வாக போர்டு அடிப்படையான சமநிலைக் கேடு[4] இருப்பதாகவும் அந் நாட்டின் செலாவணியின் மதிப்பைக் குறைப்பது அவசியம் என்றும் (அதாவது, அது உகந்தது, அது பலன்தரும் என்றும்) ஒப்புக்கொண்டால், 10 சதவிகிதத்துக்கு மிகாமல் நாணய மதிப்பைக் குறைக்கப் பன்னாட்டுச் செலாவணி நிதி ஒப்புக்கொள்ள வேண்டும். அதைவிட அதிகமான அளவுக்கு மதிப்பைக் குறைக்க வேண்டுமாயின், அதற்குப் பேச்சு வார்த்தைகள் நடத்தவேண்டும்.

ஒரு ஷரத்தின்மூலம் உறுப்பு நாடுகளுக்குப் பணத்துறையிலும் அரசாங்க நிதித்துறையிலும் பூரண சுதந்திரமளிக்கிறது. அதன்படி,

[3] கடன் வாங்குதல் என்ற சொல்லை உபயோகிப்பது சரியன்று. ஏனெனில், உண்மையில், தன் வாணிபம் யாருடன் பற்றுக்குறையில் உள்ளதோ அந் நாட்டின் செலாவணியைத் தன் செலாவணி வைப்புகளை மேலும் கொடுத்து உறுப்பு நாடு ஒவ்வொன்றும் வாங்கிக்கொள்கிறது.

[4] இந்தக் கருத்து ஒப்பந்த ஷரத்துகளில் விளக்கப்படவில்லை. ஆனால், கவலைக்கிடமான, நெடுநாள் இருக்கக்கூடிய சமநிலைக் கேடு என்று இதற்குப் பொருள்போலும்.

நாணய மதிப்புக் குறைப்பு அவசியம் என்று நிதி ஒப்புக்கொண்டபின், 'அந்த உறுப்பு நாட்டின் உள்நாட்டுச் சமூக, அரசியல் கொள்கைகளின் காரணமாக, செய்வதாகத் தீர்மானிக்கப்பட்ட மாறுதலுக்கு ஆட்சேபணை எதுவும் கூறுது'. நாணய மதிப்புக் குறைப்பினுல் ஏற்படும் திருத்த விளைவைப் பணவீக்கம் பயனற்றதாக்கக்கூடும். அப்படி இருந்தாலும் உள்நாட்டில் பணவீக்கக் கொள்கையை ஓர் உறுப்பு நாடு கடைப் பிடிக்கலாமா? அவசியமில்லை. ஏனெனில், உறுப்பு நாடுகள் 'நாணய மாற்றுத் திடநிலையைக் காக்க நிதியோடு ஒத்துழைப்பதாக' வாக்களிக் கின்றனர். உள்நாட்டில் பணவீக்கம் இருந்தால் நாணயமாற்றுத் திடநிலை இராது. நடைமுறையில் புறத்திடநிலைக்கு ஒத்த உள்நாட்டுக் கொள்கைகளைக் கடைப்பிடிக்குமாறு உறுப்பு நாடுகளைச் செய்யவைப் பதில் நிதி பெருவெற்றியடைந்திருக்கிறது; அவ்வாறு நிலைமைக் கேற்ற கொள்கைகளை அமைக்கவும் பின்பற்றவும் தேவையான தொழில்நுட்ப உதவியையும் அந் நாடுகளுக்கு அது தருகிறது.

## ஒரு பலமுகச் செலுத்தல் முறையை நோக்கி

ஒரு பூரணமான பலமுகச் செலுத்தல் முறையை மீண்டும் ஏற்படுத்துவதைக் குறிக்கோளாக உடைய மதிப்புக்குரிய ஒரு பன்னாட்டு நிறுவனத்தைச் சுதந்திர உலகம் பன்னாட்டுச் செலாவணி நிதியின் உருவில் பெற்றது. அதன் முதல் சில ஆண்டு களில் அதன் வெற்றி குறிப்பிடத்தக்கதாக இல்லை. ஆனால், மாறுதலுக்கென்று நிர்ணயித்த இடைநிலைக் காலமாகிய ஐந்து ஆண்டுக் காலம் 1952-ல் முடிந்ததும் மேலும் மேலும் நாடுகள் நெகிழ்ச்சியற்ற நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளைக் கைவிட்டன; அதைவிட எளிதானவும் தடைகள் குறைவானவுமான பல நாணய மாற்று வீதங்களை மேற்கொண்டன. இதற்கும் பொதுவாகத் தடைகள் தளர்த்தப்பட்டதற்கும் ஓரளவுக்கு நிச்சயமாகப் பன்னாட்டுச் செலா வணி நிதி காரணமாக இருந்தது.

போர் முடிந்து கிட்டத்தட்டப் பத்து ஆண்டுகளுக்கு, தம் உறுப்பினர்களுக்கிடையில் மாற்றுகைகளைத் தடையின்றி அனுமதித்த போதிலும், பிற பிராந்தியங்களுக்கு, அதுவும் முக்கியமாக டாலர் பிராந்தியத்துக்கு, மாற்றுகைகள், செய்வதைக் கடுமையாக ஸ்டர்லிங் பிராந்தியம் கட்டுப்படுத்தியது. 1954-ல் இம் முறை மிகவும் எளிதாக் கப்பட்டுக் கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டன. லண்டனில் 'மாற்றக் கூடிய' (transferable) கணக்குகளை உடைய 51 நாடுகளில் எந்த நாடும் தான் பெற்ற ஸ்டர்லிங்கை நடப்பு விவகாரங்களுக்காக, ஸ்டர்லிங் பிராந்தியத்திலுள்ள வேறு எந்த நாட்டுக்கும் மட்டுமன்றி, வேறு எந்த மாற்றக்கூடிய கணக்குக்கும்கூடத் தடையின்றி மாற்றலாம். மூலதன

மாற்றுகைகளைக் கட்டுப்படுத்திய நிர்வாக விதிகள்கூடப் பலமுறை தளர்த்தப்பட்டன.

மாற்றுரிமையும் தடையிலாப் பன்னாட்டுச் செலுத்தல் முறையும் ஏற்படச் செய்த மிக முக்கியமான முயற்சி, ஐரோப்பாவில் 1950-ல் ஐரோப்பியச் செலுத்தல் சங்கத்தைத் (European Payments Union) துவக்கியதாகும். பல நாள் இருக்கவில்லை. எனினும், போருக்குப்பின் பற்றுக்குறைகளினால் கட்டாயமாக ஐரோப்பிய நாடுகள் ஏற்கவேண்டியிருந்த இருமுக வாணிப முறையை அது ஒரே அடியில் ஒழித்து விட்டது. அமெரிக்கா கொடுத்த $ 350 மிலியன் உதவியின் ஆதரவில், இச் சங்கம், செலுத்துநிலையில் பற்றுக்குறையுள்ள உறுப்பு நாடுகளுக்குக் குறிப்பிட்ட வரம்புவரை கடன்களைக் கொடுக்க ஒப்புக்கொண்டது; உபரியுள்ள நாடுகள் சங்கத்துக்குக் கடன் கொடுத்தன. இக் கடன்களின் அளவுகள் அதிகமானால், அவற்றைப் பொன் அல்லது டாலர்களைக் கொண்டு தீர்க்கவேண்டிய விகிதாசாரமும் அதிகரிக்கும். தம் தேவைக்குப் போதாமலிருந்த சேமநிதிகளுக்குத் துணையாக இந்த முக்கியமான கடன் ஆதரவைப் பெற்றதும், உறுப்பு நாடுகள் ஐரோப்பாவுக்குள் நடந்த வாணிபத்தில் கடுமையாக இருந்த கட்டுப்பாடுகளை எடுக்கமுடியும்; அவை படிப்படியாக எடுக்கவும்பட்டன. நிறைய ஏற்றுமதிச் சக்தி கொண்ட நாடுகள், குறைந்த ஏற்றுமதிச் சக்திகொண்ட நாடுகளின் பயனற்ற செலாவணிகளைச் சேர்த்துவைத்துக்கொள்ள விரும்பாமல், அதுவரை தம் ஏற்றுமதிகளைக் கட்டுப்படுத்திவந்தன. இப்போது அக் கட்டுப்பாடுகளை அவை தளர்த்த முடிந்தது; அதிகமான ஏற்றுமதிகளில் ஒரு குறிப்பிட்ட பகுதியைச் சங்கக் கணக்கில் வரவாகவும் (credits) மிகுதியைப் பொன்னாகவும் டாலராகவும் அவை பெற்றன.

ஏற்றுமதிகள் தாராளமாக்கப்பட்டது ஐரோப்பாவுக்குள் நடந்த வாணிபத்தில் ஒரு பெருக்கி விளைவைத் தோற்றுவித்தது. அத்தியாவசியமான பொருள்களைத் தடையின்றி நிறைய வாங்க முடிந்த நாடுகள் தம் பொருளாதாரச் சக்தியை வேகமாக மீண்டும் பெற முடிந்தது. ஏற்றுமதியை அதிகம் செய்த நாடுகளோ தம் வருவாயில் மேலும் அதிகமான பகுதியைச் செலவழிக்கவும் அதைக்கொண்டு போகப் பொருள்களை (luxuries) வாங்கவும் முடிந்தது. [மதுவகைகள், வாசனைப் பொருள்கள் (perfumes), வெப்பமண்டலத்தை அடுத்த பிராந்தியங்களின் பழங்கள் (sub-tropical fruits) போன்ற] இவ்வகைப் பொருள்களை உற்பத்தி செய்த நாடுகள், தம் புனரமைப்புக்குத் தேவையான ஆதாரத் தொழிற்சாலைப் பொருள்களை, மூன்றாவது நாடுகளிலிருந்துகூட இறக்குமதி செய்ய முடிந்தது.

ஐரோப்பியச் செலுத்தல் சங்கத்தின் பேருதவியினால் ஐரோப்பாவினுள் வாணிபம் வேகமாக வளர்ந்தது. ஐரோப்பிய நாடுகளின்

பொருளாதார நிலை மேலும் வலிமை பெற்றது. அவற்றின் போட்டித் திறன் உயர்ந்தது. 1958-ன் முடிவில் ஐரோப்பியப் பொருளாதாரக் கூட்டுறவு அமைப்புத் (OEEC) தொகுதி நாடுகளில் பதினொன்று தம் திறனில் முழு நம்பிக்கை பெற்றதன் விளைவாக, அந் நாட்டு வாசிகளல்லாதவரைப் (non-residents) பொறுத்த வரையில் செலாவணியைப் பூரணமாக மாற்றும் உரிமையை அளித்தன. ஆனால், மூலதன மாற்றுகைகள், பிரயாணச் செலவுகள் ஆகியவற்றின் விஷயத்தில்மட்டும் அந் நாட்டுவாசிகள் (residents) சில கட்டுப்பாடுகளுக்கு உட்படவேண்டியிருந்தது.

தொழிலை அதிகம் நம்பியிராத நாடுகளில், 1950–60-ன் மத்தியிலிருந்து, சிக்கலான பல நாணயமாற்று வீதங்கள் கைவிடப்பட்டு எளிதான ஒரே ஒரு மாறும் விகிதமுறை கடைப்பிடிக்கப்பட்டது. 1962-ல் அத்தகைய 32 நாடுகளில் 16 நாடுகள் ஒரே ஒரு நிலையான வீதத்தை ஆதரித்து நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளைத் தொடர்ந்து விதித்திருந்தன ; 4-ல் ஒரே ஒரு திடநிலைபெற்ற நாணயமாற்று வீதமும் ஏறக்குறைய தடையற்ற செலுத்தல் முறையும் இருந்தன ; 8 நாடுகள் தடையின்றி மாறும் வீதங்களைக் கொண்டிருந்தன ; 3 நாடுகளில் குறிப்பிட்ட சில விவகாரங்களுக்கு மாறுக ஓர் அதிகாரபூர்வமான வீதமும் பிறவற்றுக்கு ஒரு தடையற்ற மாறும் வீதமும் இருந்தன ; ஒரே ஒரு நாட்டில் தொடர்ந்து பல வீதமுறை இருந்தது.

## டாலர் சேமநிதி செலாவணி ஆகிறது

1958-ல் ஐரோப்பியச் செலாவணிகளில் பெரும்பாலானவை மாற்றுரிமை பெறும்வரை, உலகில் வலிமைமிக்கதும் மிகவும் விரும்பப்பட்டதுமான செலாவணியாக டாலர் இருந்தது. எனவே, 1949-க்குப் பின் வந்த ஆண்டுகளில், படை ஆதரவுக்கும், வெளிநாட்டு உதவிக்கும், வெளிநாட்டில் தனியார் முதலீட்டுக்குமாக அமெரிக்கா செலுத்த வேண்டிய தொகைகள் மிக அதிகமாக இருந்ததனால், பிறநாடுகளுக்குத் தாம் பொருள்களை வாங்குவதற்கு வேண்டியிருந்ததைவிட அதிகமாக டாலர்கள் கிடைத்தன. அவற்றை அவை மகிழ்ச்சியோடு சேர்த்தன. வேண்டுமாயின், இந்த டாலர்களைப் பொன்னுக மாற்றித் தம் பொன் சேமிப்புகளை அவை அதிகமாக்கிக்கொண்டிருக்கலாம். ஆனால், அவ்வாறு மிகச் சிறிய அளவுக்குத்தான் அந் நாடுகள் டாலரைப் பொன்னுக மாற்றிக்கொண்டன. 1950-57-ல் அமெரிக்கப் பற்றுக் குறைகள்—உலகின் பிறநாடுகளின் உபரிகள்—மொத்தம் சுமார் $10 பிலியன். இப் பெருந் தொகையில் $1·7 பிலியன் தான் பொன்னுக மாற்றப்பட்டு எடுத்துப்போகப்பட்டது. மீதி $8·4 பிலியனை அதைப் பெற்றவர்கள் தொடர்ந்து டாலராகவே

வைத்திருந்தனர். ஓரளவுக்கு டாலர் வைப்புகளாக அவை இருந்தன ; பெரும் அளவுக்குக் குறுகிய கால அரசாங்கப் பத்திரங்களாக அவை வைக்கப்பட்டிருந்தன. அவற்றை வைத்திருந்த நாடுகளின் பன்னாட்டுச் சேமநிதிகளில் ஒரு பகுதியாக இந்த டாலர் இருப்புகள் விளங்கின. ஸ்டர்லிங் பிராந்திய நாடுகளுக்கு ஸ்டர்லிங் வைப்புகளும் அரசாங்கப் பத்திரங்களும் எவ்வாறு உதவினவோ, அதேபோல ஸ்டர்லிங் பிராந்தியத்தில் இல்லாத நாடுகளுக்கு இந்த டாலர் வைப்புகள் உதவின.

இப்போது சுதந்திர உலகின் செலாவணி முறை, பொன் மாற்றுத் திட்டமாயிற்று. முக்கியமான சேமநிதி இன்னமும் பொன்னே. அதற்குத் துணையான சேமநிதிகள் அன்னியச் செலாவணி இருப்புகள். அமெரிக்கா, பிரிட்டன் ஆகிய இரு சேமநிதி நாடுகளில் ஒன்றில் இவை முக்கியமாக வைக்கப்பட்டிருந்தன.

இதுபோலப் பொன் இருப்புகளுக்குப் பதிலாக அன்னியச் செலாவணிகள் சேமநிதிகளாகப் பயன்பட்டிராவிட்டால், பெரும் அளவுக்குப் பணச்சுருக்கம் ஏற்படாது தடுக்கப் போதுமான அளவு உலகத்தின் சேமநிதிகள் உயர்ந்திருக்கமாட்டா. பட்டியல் 26·1 காட்டுவதுபோல, பொன் சேமிப்புகள் 1949-லிருந்து 1958-வரையான ஒன்பது ஆண்டுகளில் $ 4,925 மிலியன்தான், அதாவது, 14·8 சதவீதம்தான் உயர்ந்திருக்கிறது. அது ஆண்டுக்கு 1·6 சதவீதம் ஆகிறது. இதே ஒன்பது ஆண்டுகளில் உலக வாணிபமோ ஆண்டுக்கு 5·8 சதவீதம் கூட்டு வீதத்தில் அதிகரித்திருக்கிறது. அன்னியச் செலாவணிச் சேமநிதிகள் கிட்டத்தட்ட இருமடங்காயின. அவை 84 சதவீதம் அதிகமாயின: அதாவது, ஆண்டுக்கு 9·3 சதவீத உயர்வு. இவ்வாறு மொத்தப் பொன்னும் அன்னியச் செலாவணியுமான சேமநிதிகள் இரண்டுமாகச் சேர்ந்து 31 சதவீதம் அதிகமாயின ; அதாவது, ஆண்டுக்கு 3·4 சதவீதம். சேமநிதிகளின் அன்னியச் செலாவணிப் பகுதி அதிகரித்ததில் ($ 8,810,000,000), 60 சதவீதத்துக்கு மேல் ($ 5,445,000,000) டாலர் இருப்புகள் உயர்ந்ததனுல் ஏற்பட்டது. மீதமிருப்பது முக்கியமாக ஸ்விஸ் பிராங்கைப் போன்ற பிற மாற்றுரிமையுள்ள செலாவணிகளின் இருப்புகள் உயர்ந்ததாலும் ஐரோப்பியச் செலுத்தல் சங்கக் கணக்கில் அதிகமான வரவுகளாலும் ஏற்பட்டன.[5]

[5] 1959-ல் ஐரோப்பியச் செலுத்தல் சங்கம் மூடப்பட்டதும், இந்த வரவுகள் மறைந்தன. மீதமிருந்த வரவு நிலுவைகளும் பற்று நிலுவைகளும் நெடுங்கால இருமுகப் பொறுப்புகளாக மாற்றப்பட்டன.

**பட்டியல் 26·1. சுதந்திர உலகின் மத்திய பாங்குகளும் பிற தேசியப் பணத்துறை அதிகாரிகளும் வைத்திருந்த சேமநிதிகள்**

(ஆண்டு முடிவில், மிலியன் டாலர்களில்)

| | 1949 | 1950 | 1951 | 1952 | 1953 | 1954 | 1955 |
|---|---|---|---|---|---|---|---|
| 1. பொன் சேமநிதிகள்* ... | 33,150 | 33,830 | 33,935 | 33,920 | 34,360 | 34,970 | 35,445 |
| 2. அன்னியச் செலாவணிச் சேமநிதிகள்† | | | | | | | |
| (அ) அமெரிக்க டாலர் ... | 3,071 | 4,440 | 4,014 | 5,254 | 6,016 | 7,067 | 7,878 |
| (ஆ) பிரிட்டனின் பவுன் ஸ்டர்லிங் ... | 7,856 | 7,775 | 8,694 | 7,596 | 8,148 | 8,157 | 8,095 |
| (இ) பன்னாட்டுத் தீர்வுகள் பாங்கும் ஐரோப்பியச் செலுத்தல் சங்கமும் ... | 100 | 541 | 794 | 1,286 | 1,485 | 1,432 | 1,258 |
| (ஈ) திருத்தங்களைக் கழித்து, பிற ... | —527 | 1,939 | 1,583 | 1,474 | 1,491 | 1,589 | 1,529 |
| ஆக ... | 10,500 | 14,695 | 15,085 | 15,610 | 17,140 | 18,245 | 18,760 |
| பொன்னும் அன்னியச் செலாவணியும் ... | 43,650 | 48,525 | 49,020 | 49,530 | 51,500 | 53,215 | 54,205 |
| 3. பன்னாட்டுச் செலாவணி நிதிக் கணக்கின் மொத்த நிலை‡ ... | 7,891 | 7,905 | 8,183 | 8,265 | 9,028 | 9,690 | 9,757 |
| மொத்தம் ... | 51,541 | 56,430 | 57,203 | 57,795 | 60,528 | 62,905 | 63,962 |

**பட்டியல் 26·1** (தொடர்ச்சி)

| | 1956 | 1957 | 1958 | 1959 | 1960 | 1949–60-ல் அதிகரித்தது |
|---|---|---|---|---|---|---|
| 1. பொன் சேமநிதிகள் * | 36,095 | 37,360 | 38,075 | 37,870 | 38,050 | 4,900 |
| 2. அன்னியச் செலாவணிச் சேம நிதிகள் † | | | | | | |
| (அ) அமெரிக்க டாலர் | 8,612 | 8,231 | 8,516 | 9,419 | 10,484 | 7,413 |
| (ஆ) பிரிட்டனின் பவுன் ஸ்டர்லிங் | 7,807 | 7,222 | 6,955 | 7,448 | 7,563 | –293 |
| (இ) பன்னாட்டுத் தீர்வுகள் பாங்கும் ஐரோப்பியச் செலுத்தல் சங்கமும் | 1,352 | 1,541 | 1,877 | 378 | 477 | 377 |
| (ஈ) திருத்தங்களைக் கழித்து, பிற | 1,964 | 1,921 | 1,962 | 1,925 | 3,121 | 3,648 |
| ஆக | 19,735 | 18,915 | 19,310 | 19,170 | 21,645 | 11,145 |
| பொன்னும் அன்னியச் செலாவணியும் | 55,830 | 56,275 | 57,385 | 57,040 | 59,695 | 16,045 |
| 3. பன்னாட்டுச் செலாவணி நிதியின் கணக்கில் மொத்தநிலை‡ | 9,813 | 9,491 | 9,849 | 16,148 | 17,224 | 9,333 |
| மொத்தம் | 65,643 | 65,766 | 67,234 | 73,188 | 76,919 | 25,378 |

* **பொன் சேமநிதிகள்** என்பதில் தேசியப் பணத்துறை நிர்வாகத்தினர் வைத்துள்ளவைமட்டும்தான் சேர்க்கப்பட்டுள்ளன. பன்னாட்டுச் செலாவணி நிறுவனங்களின் பொன் இருப்புகள் இதில் சேர்க்கப்படவில்லை.

† **அன்னியச் செலாவணிச் சேமநிதிகள்** என்பது தேசியப் பணத்துறை நிர்வாகத்தினரின் அன்னியச் செலாவணி இருப்புகளைக் குறிக்கிறது. அதாவது, அமெரிக்கா, பிரிட்டன், வேறு சில நாடுகள் ஆகியவற்றில் அவர்கள் வைத்துள்ள நிலுவைகளும் பன்னாட்டுத் தீர்வுகள் பாங்கிலும் (Bank of International Settlements—B. I. S), ஐரோப்பியச் செலுத்தல் சங்கத்திலும் உள்ள வரவு நிலுவைகளும் இதில் சேர்ந்தன.

(அ) தேசியப் பணத்துறை நிர்வாகத்தினர் வைத்திருக்கும் அமெரிக்க டாலர்கள், அமெரிக்க அரசாங்கமும் பாங்கிகளும் கொண்டுள்ள பொறுப்புகளுக்குச் சமம்; அதாவது, (1) பெடரல் ரிசர்வ் பாங்குகளும் பிற அமெரிக்க பாங்குகளும் வெளிநாட்டுப் பண அதிகாரிகளுக் த் தரவேண்டிய பொறுப்புகள், (2) குறுகிய கால அரசாங்கப் பத்திரங்களையும் பிற குறுகிய காலப் பொறுப்புகளையும் அதிகாரபூர்வமாக வெளிநாட்டார் வைத்திருப்பது, (3) ஓர் ஆண்டைவிட அதிகமான மூலத்தவணையுள்ள அமெரிக்கப் பத்திரங்களின் அதிகாரபூர்வமான இருப்புகள்; இவை அனைத்தையும் கூட்டிப் பன்னாட்டு நிறுவனங்களுக்குத் தரவேண்டிய அமெரிக்கப் பொறுப்புகளைக் கழிக்கவேண்டும்.

(ஆ) தேசியப் பணத்துறை அதிகாரிகள் வைத்திருக்கும் ஸ்டர்லிங் பவுன்கள், பிரிட்டனின் பொறுப்புகளுக்குச் சமம்; அதாவது, (1) பிரிட்டனிலுள்ள பாங்குகளில் அயல்நாட்டுப் பண அதிகாரிகள் நிகரமாக வைத்திருக்கும் பவுன்கள் அல்லது ஸ்டர்லிங் பிராந்தியச் செலாவணிகள்; (2) அவர்கள் வைத்திருக்கும் பிரிட்டிஷ் அரசாங்கப் பத்திரங்கள்; (3) இராஜாங்கப் பிரதிநிதிகளும் (Crown Agents) செலாவணி போர்டுகளும் வைத்துள்ள நிறுவனங்கள்; (4) அரசாங்கங்கள் ஒன்றுக்கொன்று கொடுத்த சில கடன்கள்; (5) வைத்திருப்பவர்களின் வெளிநாட்டுச் சொத்துகளில் சேர்ந்துள்ள காமன்வெல்த் நாடுகள் வழங்கிய ஸ்டர்லிங் பத்திரங்கள்; இவை அனைத்தையும் கூட்டிப் பன்னாட்டு நிறுவனங்களுக்கு பிரிட்டன் தரவேண்டிய பொறுப்புகளைக் கழிக்கவேண்டும். வெளிநாட்டில் தனியாரும் கம்பெனிகளும் வைத்துள்ள சில இருப்புகளும் இந் நிகரத் தொகையில் சேர்ந்துள்ளன.

(இ) பன்னாட்டுத் தீர்வுகள் பாங்கின் நிலுவைகள் என்பன அதனிடமிருந்து பணம் பெறவேண்டிய நாடுகளின் பணத்துறைச் சேமநிதிகளாகக் கணக்கிடப்படும் ப. தீ. பாங்கின் பொறுப்புகளாகும். ஐரோப்பியச் செலுத்தல் சங்க உறுப்பினர்கள், பிற உறுப்பினர்களோடு பெற்ற வாணிப உபரிகளுக்கு நிதி ஏற்பாடாகப் பெற்று, அதனால் சேர்ந்துள்ள நிலுவைகளை ஐரோப்பியச் செலுத்தல் சங்கப் பொறுப்புகள் குறிக்கின்றன. 1958-ல் ஐரோப்பியச் செலுத்தல் சங்கம் மூடப்பட்டதும், மீதமிருந்த பற்று நிலுவைகளும் வரவு நிலுவைகளும் இருமுக உரிமைகளாகவும் கடன்களாகவும் மாற்றப்பட்டன. இவை பணத்துறைச் சேமநிதிகளில் சேர்க்கப்படுவதில்லை.

(ஈ) பிற அன்னியச் செலாவணி இருப்புகள் என்பன மாற்றுரிமையுள்ள செலாவணிகளை உடைய பிற நாடுகளில் உள்ள வைப்புகள் கடன்பட்டவர்கள் கூறிய பொறுப்புகளின் தொகைக்கும் கடன் அளித்தவர்கள் கூறிய உரிமைகளின் அளவுக்கும் இடையே சில வித்தியாசங்கள் இருந்தன. அவை இந்த உருப்படியினின்று கழிக்கப்பட்டன.

‡ ஒரு நாட்டின் பணத்துறை நிர்வாகத்தின் **பன்னாட்டுச் செலாவணி நிதியின் மொத்தநிலை,** அந்த உறுப்பு நாட்டின் கோட்டாவை இரட்டிப்பாக்கி அதனின்று அந்நிதி வைத்திருக்கும் அந் நாட்டின் செலாவணி அளவைக் கழித்துக் கணக்கிடப்படுகிறது. அந் நாடு நிதியினின்று எவ்வளவு செலாவணி வாங்கமுடியுமோ அதன் அளவு இது. இவ் விவர வரிசையை நிதி 1961 ஆகஸ்டில், *International Financial Statistics*-ல் வெளியிட ஆரம்பித்தது.

**மூலம்:** Fritz Machlup, *Plans for Reform of the International Monetary System*, பக்கம் 3, வெளியீடு 1962 by International Finance Section, Princeton University.

பவுன் செலாவணி இருப்புகளின் அளவில் $ 900 மிலியன் உண்மையில் குறைந்தது.

## புதுப் பிரச்சினைகள்

1958-ல் கணிசமான அளவுக்கு ஐரோப்பியச் செலாவணிகள் மாற்றுரிமை பெறும்வரையில் புதிதாக ஏற்பட்ட பொன்-மாற்றுத் திட்டம் தடையின்றிச் செயலாற்ற வாய்ப்பில்லை. ஏனெனில், ஏதாவதொரு வகையில் பன்னாட்டுச் செலுத்தல்களில் பெரும்பகுதி கட்டுப்படுத்தப்பட்டு இருந்தது. ஆனால், முக்கியமான செலாவணிகள் பல மாற்றுரிமை பெற்றபோது இக் கட்டுப்பாடுகள் மறைந்தன; செலுத்தல்களைத் தடையின்றிச் செய்ய முடிந்தது; செலுத்து நிலைக் கொள்கை ஒவ்வொரு நாட்டின் சேமநிதிகளின் நிலையை முக்கியமாகப் பொறுத்து அமையலாயிற்று. முக்கியமாக, மாற்றுரிமை உள்ளபோது, பொருள்களுக்கும் பணிகளுக்கும் எந்தச் செலாவணியி லும் பணம் கொடுக்கலாம். அது தவிர, மூலதன அங்காடிகள் மீண்டும் நெருக்கமாக இணைந்தன. எனவே, சிறு வட்டி வித்தியாசங்கள்கூடக் குறுகிய கால மூலதனம் பன்னாட்டுப் பாதையில் பெருமளவு இடம் பெயரக் காரணமாக இருக்கலாம்.

இடரில்லாமல் இழைவாகச் செயலாற்றும் பன்னாட்டுப் பண அமைப்பாக விளங்கப் புதிய பொன் மாற்றுத் திட்டத்தினால் இயலவில்லை என்பது மிக விரைவிலேயே தெரிந்தது. நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல, அடுத்தடுத்து ஐந்து ஆண்டுகளுக்கு முக்கியமான சேமநிதிச் செலாவணியைக்கொண்ட நாடு ஆண்டுதோறும் பெரிய பற்றுக்குறைகளைக் கொண்டிருந்தது.[6] இதற்கு அப் பொன் திட்டம் காரணமன்று. ஆனால், அத் திட்டத்தின் ஒரு முக்கியக் குறையை மோசமான இந்த இருதலைக் கொள்ளிப் பிரச்சினை காட்டுகிறது.

பன்னாட்டுச் சேமநிதிகளின் அளவு அதிகமாவதற்குச் சுதந்திர உலகம் ஆண்டுதோறும் பொன்னின் இருப்பு அதிகமாவதையே நம்பியிருந்தால், அது போதுமானதாக இராது. பணத்துக்கான பொன் இருப்பு ஆண்டுக்கு 1·6 சதவீதம்தான் அதிகமாகிவந்தது. ரஷ்யா பொன் விற்றதனால் அதிகமான பகுதியை எடுத்துவிடுவோம். ஏனெனில், அதை அதிகமாக நம்பமுடியாது. அப்போது பணத்துக்கான பொன் இருப்பு ஆண்டுதோறும் $ 440 மிலியன்தான்; அதாவது, 1·2 சதவீதம்தான் அதிகமாகிறது (1951–62). ஆனால், உலக வாணிபம்

[6] 1961-லும் 1962-லும் பற்றுக்குறைகள் முறையே $ 2·5 பிலியனும் $ 2·1 பிலியனும். அமெரிக்காவுக்கு ஐரோப்பிய அரசாங்கங்கள் தவணைக்குமுன் கடன்களைப் பெரிய அளவில் திருப்பித்தந்ததைக் கழித்தால், பற்றுக்குறைத் தொகை $ 3·2 பிலியனும் $ 2·8 பிலியனும் முறையே ஆகும் (பட்டியல் 25·5).

5·8 சதவீதம் அதிகமாகிறது என்பதை நாம் பார்த்தோம். சேமநிதிகளைப் பயன்படுத்துவதில் சிக்கனம் செய்து பன்னாட்டுத் தீர்வு இயக்கத்தில் அபிவிருத்தி செய்ய முடியலாம். அப்படியானால் வாணிப அளவு அதிகமாகும் அளவுக்குச் சேமநிதிகளும் அதிகரிக்கவேண்டியதில்லை. ஆனால், இப்போது குறிப்பிட்ட பல பெரிய அளவுக்கு இவ்விரண்டுக்கும் இடையே வித்தியாசம் உள்ளபோது நிச்சயமாகச் சேமநிதிப் பற்றுக்குறை அதிகரித்துக்கொண்டே போகும். இறுதியில் உலகமெங்கிலும் விலைச் சுருக்கம் செய்யவேண்டியது அவசியமாகும். ஏனெனில், விலைகள் மாறாமல் இருக்கும்போது, உலக வாணிபத்தின் மதிப்பு நிலையாக உயர்ந்துகொண்டே போனால், அத்துடன் ஒப்பிட்டால் சேமநிதிகளின் அளவு குறையும். ஏதாவதொரு சமயத்தில் மிதமான செலுத்துநிலைப் பற்றுக்குறைகூடத் தாங்கமுடியாத அளவு அதிகமாக இருக்கும். சேமநிதிகளுக்கான போட்டியில் அநேகமாக எல்லா நாடுகளும் கடன் செலாவணியைக் கட்டுப்படுத்தும்.

பொன்-மாற்றுத் திட்டத்தில் இதற்கு மாற்றுவழி என்னவென்றால் சேமநிதிச் செலாவணி நாடுகள் உலகின் பிற நாடுகளுக்குத் தம் பொறுப்புகளை அதிகமாக்கி அதனால் அவற்றின் சேமநிதிகளை உயர்த்த வேண்டும். ஆனால், இதற்குச் சேமநிதிச் செலாவணியின் திடநிலை மீதும்—இறுதியில் அது பொன்னாக மாற்றமுடியும் என்பதன்மீதும்—முழு நம்பிக்கையும், அச் செலாவணியை நிலையாக அதிகமாகிக் கொண்டே போகும் அளவுகளில் வைத்திருக்க இணக்கமும் அவசியம். 1960 தொடங்கி, ஓரிரு ஆண்டுகளிலிருந்த சூழ்நிலையில் இவ்விரு மனப்பான்மைகளும் இருப்பது மேலும் மேலும் அசாத்தியமாயிற்று. 1958-க்கு முன், அமெரிக்கப் பற்றுக்குறைகளால் கிடைத்த டாலர் அளிப்புகள் சுருங்கிப்போன சேமநிதிகளைப் பெருக்கும் வழியாக வரவேற்கப்பட்டன. பல நாடுகள் அந்த ஆண்டு தம் செலாவணிகளுக்கு மாற்றுரிமை அளித்ததே சேமநிதிகள் அப்போது போதுமான அளவு இருந்தது என்பதற்கு அடையாளமாகும். 1958-லிருந்து 1962 வரை 1953-க்கு முன்பிருந்ததைவிட அதிகமாக டாலர்கள் வெளிப் போனது அனாவசியமாகவும் தேவையற்றதாகவும் அவற்றைப் பெற்ற பெரும்பாலான நாடுகளால் கருதப்பட்டன. 'மத்திய பாங்குகள் வழக்கமாகக் கடைப்பிடித்த மரபுப்படி........ஒழுங்கு முறைப்படி மரியாதையோடு' அந் நாடுகள் மேலும் வந்த டாலர் நிலுவைகளைப் பெற்றுக்கொண்டன.[7] பெற்று, அவற்றில் பெரும்பகுதியைப் பொன்னாக மாற்றிக்கொண்டன.

[7] Fritz Machlup, *Plans for the Reform of the International Monetary System*, பக்கம் 10. வெளியீடு 1962, International Finance Section, Princeton University.

## பட்டியல் 26·2
## பொன்னாக எடுத்துக்கொள்ளப்பட்ட அமெரிக்கச் செலுத்துநிலைப் பற்றுக்குறையின் சதவீதம்

| | | | |
|---|---|---|---|
| 1950–57 | 17 | 1960 | 43 |
| 1958 | 64 | 1961 | 35 |
| 1959 | 20 | 1962 | (40) |

**மூலம் :** S. E. Harris, 'The U.S. Balance of Payments: The Problem and Its Solution,' in *Factors Affecting the United States Balance of Payments*, Joint Economic Committee, 87th Congress, Second Session, Washington, D.C., 1962, பக்கம் 4.

டாலரை வைத்திருக்கும் விருப்பம் குறைந்ததோடன்றி அதன் திடநிலைமீது நம்பிக்கை குறைந்ததற்கும் பல அடையாளங்கள் காணப்பட்டன: 1960 இலையுதிர் காலத்தில் லண்டன் பொன் அங்காடியில் ஊகவாணிபம் திடீரெனப் பரபரப்படைந்தது; அமெரிக்கப் பற்றுக்குறையைக் குறைக்கப் பல முயற்சிகள் செய்யப்பட்டன. அவற்றில் சில கீழ்த்தரமானவை. டாலரின் மாற்றுரிமையைக் காப்பாற்றியே தீருவதாக 1961 தொடக்கத்தில் ஜனாதிபதி கென்னடி வாக்களித்தார்.

எப்படிக் கணக்கிட்டாலும்[8] அமெரிக்காவின் பொன் சேமிப்புகள் தொடர்ந்து நிறைய இருந்தன. எனினும், அயல்நாட்டார் டாலர் இருப்புகளைச் சேர்த்துக்கொண்டே போவதற்கு ஒரு முடிவு இருந்தது. அப்போது அது அதிகமாகி வந்த வீதங்களில், அது வெகுநாட்கள் தொடர்ந்து நடக்கும் எனத் தோன்றவில்லை.

இதுதான் போருக்குப்பின் ஏற்பட்ட பொன்-மாற்றுத் திட்டத்தின் முதல் பெரும் குறை. பன்னாட்டுச் சேமநிதிகள் போதுமான அளவு அதிகரிக்க வழி இருக்கத்தான் வேண்டும். ஆனால், அதற்காக அத் திட்டம் நிறுவிய வழி ஒப்புக்கொள்ளத்தக்கதாக இல்லை. இந்தப் பிரச்சினையைத் தீர்க்க, சேமநிதி வளர்ச்சி நிச்சயமாக ஏற்பட ஒரு புது வழியைக் கண்டுபிடிக்கவேண்டும்.

1960-ஐ அடுத்திருந்த பொன்-மாற்றுத் திட்டத்தின் இரண்டாவது குறை பின்வருவது. பெரிய ஊகவாணிப மூலதன இடப்பெயர்ச்சிகளால் தனித்தனி நாடுகளின் செலுத்துநிலைகள் பெருமளவில் திடநிலை

[8] 1962 முடிவில் அமெரிக்கப் பொன் சேமநிதிகள் $ 16 பிலியன். அவற்றின் மீது வெளிநாட்டார் கொண்டிருந்த குறுகியகால உரிமைகள் மொத்தம் சுமார் $ 22 பிலியன்.

குலையக்கூடும். மாற்றுரிமை மீண்டும் ஏற்பட்டதும் மேற்கத்திய உலகின் மூலதன அங்காடிகள் மீண்டும் ஒன்றோடொன்று இணைக்கப் பட்டன. வட்டி வீதங்களில் சிறு வித்தியாசங்கள் இருந்தாலும் வட்டி ஆர்பிட்ரேஜ் தோன்றுகிறது. அதாவது, லாப வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ள மூலதனம் ஓடுகிறது. அவை தனியாக இருந்தால் அவற்றைத் தாங்கிக்கொள்ளலாம். ஆனால், ஏற்கெனவே பற்றுக்குறை இருக்கும்போது அவை ஏற்பட்டால், அதுவும் பற்றுக் குறை நாட்டில் வேலை வாய்ப்புகள் அதிகரிப்பதற்காகக் கழிவுவீதத் தைக் குறைவாக வைத்திருக்கும் கொள்கை கடைப்பிடிக்கப்படுவதனால் இந்த ஓட்டங்கள் அதிகமானால், நாணய மதிப்புக் குறைக்கப்படுமோ என்ற பயம் ஏற்படுகிறது. அகச் சமநிலைக்கும் புறச் சமநிலைக்கும் இடையே உள்ள அடிப்படை முரண்பாடு பகிரங்கமாகிறது. பெரிய அளவில் ஏற்படக்கூடிய ஊகவாணிப மூலதன இடப்பெயர்ச்சிகள், சாதாரணமாகப் பிற காரணங்களால் ஏற்படும் இடப்பெயர்ச்சிகளோடு சேர்ந்துகொண்டு தாங்கமுடியாத சேமநிதி நஷ்டத்தை ஏற்படுத்தக் கூடும்.

இது தீர்க்கவேண்டிய மற்றொரு பிரச்சினையாகும் என்பது தெளிவு. திடமான நாணயமாற்று வீதங்களோடு அகச் சமநிலையும் புறச் சமநிலையும் ஒரே சமயம் இருக்கமுடியாது என்பதை இப் பிரச்சினை மையமாகக் கொண்டிருக்கிறது. நாணயமாற்று வீதங்களைத் திட நிலையில் வைத்திருக்கவேண்டுமானால், செலுத்துநிலைப் பற்றுக்குறை உடைய நாடு அப் பற்றுக்குறையைத் தவிர்க்கப் பலனளிக்கக்கூடிய முயற்சிகளை மேற்கொள்ளவேண்டும். இம் முயற்சிகளில் ஒன்றாகக் கடன் செலாவணியைக் கட்டுப்படுத்துவதும் இருக்கலாம். அதைச் செய்யாவிட்டால் அந் நாடு நாணயமாற்றுவீதத் திடநிலையை முக்கிய மாகக் கருதுகிறது என்பது சந்தேகத்துக்கு இடமாகிறது. அதைச் செய்தாலோ அதன் வேலையின்மைப் பிரச்சினை மேலும் மோசமாகும்.

இப்போதுள்ள பன்னாட்டுச் செலாவணி அமைப்பில் மூன்றாவது குறை ஒன்றும் உள்ளது. அதை மாச்லப் (Machlup) உடையும் தன்மை (fragility) என்று அழைக்கிறார். அதை அழுத்தும் சக்தி களின் சுமையைத் தாங்காமல் அது சரியக்கூடும். நாம் ஏற்கெனவே பார்த்த சக்திகளின் மற்றொரு விளைவுதான் இது. வெளிநாட்டு டாலர் இருப்புகள் நிலையாகவும், 1957-க்குப்பின் வேகமாகவும் உயர்ந்த தனால் பன்னாட்டுச் சேமநிதிகள் போதுமான அளவு நிச்சயமாக வளரத் தகுந்த வழிமுறைகளை வகுக்கும் பிரச்சினை ஏற்பட்டது. அதே சமயம், வெளிநாட்டு மத்திய பாங்குகளும், தனி பாங்குகளும், தனி நிறுவனங் களுங்கூடத் தம் டாலர் இருப்புகளை அதிகமாக்கிக்கொள்ள விரும்ப வில்லை. அவற்றின் பெரும்பகுதியைப் பொன்னாக வேறு மாற்றிக்

கொள்ளலாயின. இக் காரணங்களால் அமெரிக்கா டாலரின் பொன் மதிப்பை நெடுங்காலத்துக்கு அதே அளவில் வைத்திருக்குமோ அல்லது மாற்றிவிடுமோ என்ற பயம் வளர்ந்தது. அப் பயம் இனியும் தொடர்ந்து இருக்கும்.

அதேபோல, ஒரு சேமநிதிச் செலாவணி நாட்டின் தொல்லைகளோடு குறுகியகால மூலதனப் பெயர்ச்சியும் சேர்ந்துகொண்டால், ஒரு தனி நாட்டின் பிரச்சினையாக இருந்தது, அமைப்பு முழுவதன் பிரச்சினை ஆகிறது. இவ்வாறுதான், 1960–61-ல் அமெரிக்காவிலும் 1961-ல் பிரிட்டனிலும் நேர்ந்தது. இந்தக் காரணத்தாலும் சேமநிதிச் செலாவணியின் திடநிலைபற்றிய பயம் தோன்றுகிறது.

அதன் செயல்முறையே செலாவணி அமைப்பை அழிக்கக்கூடும் என்ற பயம் இருக்கும்போது அடிக்கடி பொன்னின் விலை உயர்த்தப்பட வேண்டும்; அதாவது, டாலர் அல்லது பவுன் செலாவணிகளின் மதிப்பைக் குறைக்கவேண்டும் என்ற யோசனைகள் தோன்றுகின்றன. இத்தகைய சூழ்நிலையில் அந்த யோசனைகள் தவிர்க்க முடியாதவை கூட. இந்த யோசனைகள் மேலும் சந்தேகத்தைத் தோற்றுவிக்கின்றன.

உலோகத்திலுல்மட்டும் ஆன பணமுறை தவிர, வேறு எந்தப் பணமுறையும் நம்பிக்கையின் அடிப்படையில்தான் நடக்கிறது. ஏனெனில், அதில் ஓரளவு கடன் செலாவணியும் கலந்திருக்கிறது. நம்பிக்கை அசையும்போது அந்தத் திட்டமே நடுங்குகிறது; நம்பிக்கை மறையும்போது, அந்தத் திட்டம் சரிந்தே போகிறது. 19[illegible]0 தொடங்கிய ஓரிரு ஆண்டுகளில் எழுந்த சந்தேகங்களும் பயங்களும் பொன்மாற்றுத் திட்டத்தின் அடிப்படையான நம்பிக்கையைத் தளர்த்திவிட்டன. ஆகவே, இத் திட்டம் வலிமையானது அன்று; உடையும் தன்மை பெற்றது.

## இதற்கு மருந்துகள்

**நிதிக் கோட்டாக்களைப் பெரியதாக்குதல்**

பன்னாட்டுச் செலாவணி முறையில் உடனே தெரியும் குறைகள் பலத்த விவாதத்தைத் தோற்றுவித்தன. அவற்றைத் திருத்த ஒருசில முயற்சிகளும் செய்யப்பட்டன. அபிவிருத்திக்காகச் செய்யப்பட்ட முதல் நடவடிக்கைகளில் ஒன்று, உறுப்பு நாடுகளின் கோட்டாக்களைச் சுமார் 50 சதவீதம் 1959-ல் பன்னாட்டுச் செலாவணி நிதி அதிகமாக்கியதாகும். நிதியின் மூலதனத்தை இது அதிகமாக்கியது. நிதியின் மூலதனமாகிய பொன்னும் உறுப்பு நாடுகளின் செலாவணிகளும் 1958-ல் $ 9 பிலியனிலிருந்து அடுத்த ஆண்டு $ 14 பிலியனைவிட அதிகமாக உயர்ந்தன.

இதிலிருந்து சுதந்திர உலகில் உபயோகிக்கப்படக்கூடிய சேம நிதிகள் சுமார் $ 5 பிலியன் அதிகமாகிவிட்டதென முடிவு கட்டக் கூடாது. அல்லது, நிதி அளிக்கக்கூடியதும், உறுப்பு நாடுகள் பயன் படுத்தக்கூடியதுமான துணைச் சேமநிதிகளின் அளவு மொத்தம் $ 14 பிலியன் என்றும் கூறமுடியாது. ஏனெனில், நிதியிடம் வைக்கப்பட்ட செலாவணிகளின் பெரும் பகுதியைத் தேவை ஏற்பட்டால் 'கடனாகப் பெறலாம்'; ஆயினும், செலுத்தல்களுக்குப் பன்னாட்டுப் பணம் தேவைப்படும் ஒரு நாட்டுக்கு அவை உதவாமல் இருக்கலாம். தொழில் துறையில் முன்னிருக்கும் நாடுகளின் செலாவணிகள் எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுப் பன்னாட்டுச் செலுத்தல்களுக்கு மிகவும் பயன் படுகின்றன. அவைதான் பணம் தேவைப்படும் நாடுகளுக்கு உபயோகமாக இருக்கும். அப்படி இருந்தும், நிதி உறுப்பு நாடுகளின் கோட்டாக்கள் அதிகமானது பன்னாட்டு நீர்மையை உயர்த்த முக்கிய மாக உதவியது. 1958-க்கும் 1959-க்கும் இடையே பன்னாட்டுச் செலாவணி நிதி வைத்திருந்த பொன், மற்றும் முக்கியமான நாடுகளின் செலாவணிகள், $ 6·2 பிலியனிலிருந்து $ 10 பிலியனாக உயர்ந்தன. அல்லது, அமெரிக்காவின் நிலையில் உள்ள மாறுதல்களை எடுத்துக் கொள்ளுங்கள். 1959-க்கு முன் அது கடனாக வாங்கக்கூடிய தொகை (அதன் கோட்டாவான $ 2,750,000,000-ல் 125 சதவீதம்) அதாவது $ 3,437,000,000.[9] 1959-ல் அதன் கோட்டா $ 4,125,000,000 ஆக உயர்த்தப்பட்டது. எனவே, அதன் பணம் வாங்கும் உரிமை $ 5,156,250,000 ஆகக் கூடவே உயர்ந்தது.

தம்முடைய சொந்தப் பொன் அல்லது அன்னியச் செலாவணி இருப்புகளுக்குத் துணையாக நிதியில் உறுப்பு நாடுகள் கொண்டுள்ள பணம் வாங்கும் உரிமைகளும் ஒருவகையான சேமநிதியே யாயினும் பல ஆண்டுகள் அவை அப்படிக் கருதப்படவில்லை. 1962 தொடங்கி அவை அவ்வாறு கணக்கிடப்படும் வழக்கம் பரவலாயிற்று. பன்னாட்டுச் செலாவணி நிதி ஓர் ஆதரவு தரும் ஸ்தாபனம் என்ற எண்ணம் எங்கும் தோன்றினால் பன்னாட்டு நம்பிக்கை வலிமை பெறும்.

## ஒரு பன்னாட்டுத் துணை நிற்கும் பொதுநிதி

1961-லும் 1962-லும் பன்னாட்டுச் செலாவணிச் சீர்திருத்தம்பற்றிய பிரச்சினைகள் நிறைய விவாதிக்கப்பட்டன. முக்கியமாக ஊகவாணிப மூலதன இடப்பெயர்ச்சிகளினால் ஏற்படும் உலைவுகளை எப்படித்

[9] சாதாரணமாக ஒரு நாடு தன் கோட்டாவில் 25 சதவீதம்தான் வாங்க முடியும். எனவே, உரிமைப் பணம் முழுவதையும் பெற 5 ஆண்டுகள் ஆகும். ஆனால், முக்கியமாக நிதியின் கடன் வசதியைப் பெருமளவிலும் தொடர்ச்சி யாகவும் பயன்படுத்தாத உறுப்பு நாடுகள் விஷயத்தில் இந்தக் காலவரம்பை அவர்கள் தள்ளிவைக்கலாம்.

தடுப்பது அல்லது ஈடுசெய்வது என்ற அம்சம் 'அதிகமாகக் கவனிக்கப் பட்டது.[10] தவிர, 1961-ல் ஒரு நெருக்கடி நிலைமை ஏற்பட்டு இப் பிரச்சினையை உடனே சமாளிக்க நடவடிக்கை எடுக்கவேண்டிய தாயிற்று.

மார்ச்சு தொடக்கத்தில், ஜெர்மன் மார்க்கும் டச்சு கில்டரும் (guilder) 5 சதவீதம் மதிப்பு உயர்த்தப்பட்டன. பெரிய செலுத்து நிலை உபரிகள் மிகையாக ஏற்பட்டு இந் நாடுகளில் பணவீக்கத்தைத் தோற்றுவிக்கும் நிலை இருந்ததால் இந் நடவடிக்கை எடுக்கப்பட்டது. இந் நாணயங்களின் மதிப்பு உயர்வின் அளவு போதுமானதாக இராது என்றும், மேலும் மார்க், கில்டரின் மதிப்பு உயரக்கூடும் என்றும் பலர் நினைத்தனர். இவ்வாறு எதிர்பார்க்கப்பட்ட நடவடிக்கையினின்று லாபம் பெற ஊகவணிகர்கள் பிற செலாவணிக் கேந்திரங்களிலிருந்து ஜெர்மனிக்கும் நெதர்லண்ட்ஸுக்கும் நிதிகளைக் கொண்டுவந்தனர். முக்கியமாக ஸ்டர்லிங் வைப்புகளை வைத்திருந்தவர்கள் அவற்றைப் பெருமளவில் திருப்பி வாங்கிக்கொண்டனர். இவ் வைப்புகள் பிற இடங்களைவிட லண்டனில் வட்டிகள் உயர்ந்திருந்ததால் அதற்கு முந்திய மாதங்களில் அதிகமாகி இருந்தது. இவ் வைப்புகள் வெளி யேறத் தொடங்கியதும் அன்னியச் செலாவணியை உடனே அளித்து இங்கிலாந்து பாங்கு பவுனுக்கு மும்முரமாக ஆதரவு தந்தது. அதற் குள்ளாக, பேஸிலில் (Basle) பன்னாட்டுத் தீர்வுகள் பாங்கில் கூடி ஐரோப்பாவின் மத்திய பாங்குகளின் பிரதிநிதிகள் மேலும் இனி மதிப்பு மாற்றங்கள் அவசியமில்லை என்று அவர்களது நிச்சயமான நம்பிக்கையைத் தெரிவித்து, 'நாணயமாற்று அங்காடிகளில் அவர்கள் நெருங்கி ஒத்துழைப்பார்கள்' என்றும் அறிக்கைவிட்டனர். ஆனாலும், பிரிட்டனில் உற்பத்திச் செலவுகள் உயருவது, ஏற்றுமதிகள் மந்தமாக இருப்பது, போட்டிநிலை தாழ்வது ஆகியவற்றின் அடிப் படையில் எதிர்காலத்தில் பவுனைப்பற்றிய பயம் காரணமாகவோ என்னவோ, பவுனுக்கு எதிராக ஊகவாணிபம் தொடர்ந்து நடந்தது.

மத்திய பாங்குகள் இவ்வாறு நிச்சயமாகக் கூறியிருந்தும் இங்கிலாந் திலிருந்து செலாவணிப் போக்கு அடுத்த நான்கு மாதங்கள் தொடர்ந்து நடந்தது. 1961-ன் முதல் பாதியில் அது மொத்தம் சுமார் £ 600

[10] உதாரணமாகப் பின்வரும் நூல்களைப் பார்க்க. Philip W. Bell, 'Private Capital Movements and the U.S. Balance of Payments Position,' in *Factors Affecting the United States Balance of Payments*, op. cit., p. 395; Edward M. Bernstein, 'Interest Rates and the U.S. Balance of Payments,' in Carl J. Friedrich and Seymour E. Harris, *Public Policy, A Yearbook of the Graduate School of Public Administration.* Cambridge: Harvard University Press, 1961.

மிலியனாக இருந்தது. இத் தொகையில் சுமார் £ 265 மிலியன் பொன்னாகப் போயிற்று. மீதியில் பெரும்பகுதி, £ 250-லிருந்து £ 300 மிலியனுக்கு பேஸில் உடன்பாட்டின்படி ஐரோப்பிய மத்திய பாங்குகள் அளித்தன. இந்த உதவி கிடைத்தும்கூட பிரிட்டிஷ் அரசாங்கம் பாங்கு வீதங்களை 5-லிருந்து 7 சதவீதமாக உயர்த்தவேண்டியிருந்தது. இதற்குத் துணையாகத் தேவையை அடக்கும் பிற நடவடிக்கைகளையும் பிரிட்டன் மேற்கொண்டது. இப்போது வெளிநாடுகளிலிருந்து பணம் திரும்பிவர ஆரம்பித்தது. உடனடியான நெருக்கடி கட்டுக்குள் அடங்கியது.

ஆனால், பிரிட்டனின் சேமநிதிகள் மிகக் குறைவாக இருந்தன. மத்திய பாங்குக் கடன்களையும் வரம்பின்றி மீண்டும் புதுப்பிக்க முடியவில்லை. இந் நிலையில், ஆகஸ்டு தொடக்கத்தில், பன்னாட்டுச் செலாவணி நிதி தன் ஆதரவை அளித்தது. உடனடியாக $ 1·5 பிலியனை வாங்கிக்கொள்ள பிரிட்டனுக்கு அது அதிகாரம் அளித்தது. அத்துடன், மேலும் $ 500 மிலியனை ஓர் ஆண்டின் துணை நிற்கும் கடனாக அளித்தது.[11] நாணயமாற்று அழுத்தங்கள் பவுனிலிருந்து டாலரை நோக்கிப் பாய்ந்துவிடாமலிருக்க, இத் தொகையில் $ 450 மிலியன் மட்டுமே டாலராக வாங்கிக்கொள்ளலாம் என்று நிதி கூறியது. ஐரோப்பியச் செலாவணிகளை வாங்கத் தன் பொன் நிதிகளினின்று $ 500 மிலியனைப் பயன்படுத்தி வேறு எட்டுச் செலாவணிகளில் சுமார் ஒரு பிலியன் டாலர்களைப் பன்னாட்டுச் செலாவணி நிதி சேகரித்தது.

பிரிட்டிஷ் நெருக்கடி காரணமாக இரு பணிகள் மிக முக்கியமாகத் தென்பட்டன. எதிர்காலத்தில் நாடுகள் தாமே மனமார முன்வந்து ஒத்துழைப்பது ஏற்படாமல் போகலாம். அந்த ஒத்துழைப்பை நம்பியிராமல் நெருக்கடியைத் தீர்க்க ஒரு முறையான வழியை ஏற்படுத்த வேண்டும். நெருக்கடி வேறு செலாவணியிலிருந்து டாலரை நோக்கிப் பாய்வதைத் தடுக்க, உதவி தரும்போது, பணம் பெறவேண்டிய நிலையில் உள்ள நாடுகள் பலவற்றின் செலாவணிகளை உதவியாகத் தர வேண்டும்.

1961 செப்டம்பரில் நடந்த பன்னாட்டுச் செலாவணி நிதியின் வருடாந்திரக் கூட்டத்தில், நிதியின் நிர்வாக டைரக்டர் பெர் யாகூப்ஸன் (Per Jacobsson) இதுபோன்று எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய நெருக்கடிகளைச் சமாளிக்கப் பல செலாவணிகள் கொண்ட துணை நிற்கும் பொது நிதி ஒன்றை (a multi-currency standby pool) நிறுவ ஒரு யோசனை தெரிவித்தார். கொள்கை அளவில் இது ஒப்புக்

[11] இந்த நெருக்கடி நடவடிக்கையால் தன் கோட்டா முழுவதையும் உடனடியாக வாங்கிக்கொள்ள பிரிட்டன் அனுமதிக்கப்பட்டது.

கொள்ளப்பட்டு அடுத்து வந்த மாதங்களில் அவரது யோசனை விவாதிக்கப்பட்டது. அதன் இறுதி உருவில் இத் துணை நிற்கும் பொதுநிதியில் பத்துத் தொழில் வளர்ந்த நாடுகள் இருந்தன. இந் நாடுகள் சில முக்கியமான நிபந்தனைகளோடு—நீர்மை நெருக்கடி ஏற்பட்டால் எந்த உறுப்பு நாட்டுக்கும் உதவ அதிகபட்சமாக மொத்தம் $6 பிலியனைத் தர வாக்களித்தன.[12]

பொது நிதியை நிர்வகிக்கும் கடமை IMF உடையது. ஆனால், ஒவ்வோர் உறுப்பு நாடும் ஒரு குறிப்பிட்ட உதவித் தொகையில் எவ்வளவு தரவேண்டும் என்பதை அது முடிவு செய்ய முடியாது. செலுத்துநிலை மோசமாகிப் போனால் ஓர் உறுப்பு நாடு நிதியின் நிர்வாக டைரக்டரிடம் பொது நிதியிலிருந்து பணம் வாங்க அனுமதி கோரவேண்டும். அவர் பொது நிதியின் பிற உறுப்பு நாடுகளைக் கலந்து ஆலோசிப்பார். (அவற்றில் மூன்றில் இரண்டு பங்கு நாடுகள், அந்த நாடு பணம் பெறுவதை ஆதரித்தால்) அவை ஒவ்வொன்றும் தம் செலாவணிகளை எவ்வளவு எவ்வளவு கொடுக்கும் என்பதை அவருக்குச் சொல்லும். அச் சமயத்தில் இருக்கும் அவற்றின் சேமநிதிகளையும் புறச் செலுத்தல் நிலையையும் பொறுத்து இத் தொகைகள் தீர்மானிக்கப்படும். கடன் வாங்கும் நாடு நிலையான கட்டணமாகிய ½ சதவீதமும், கூட ஆண்டுக்கு 1½ சதவீத வட்டியும் கட்டவேண்டும். அதிகபட்சமாக ஐந்து ஆண்டுகளில் மாற்றுரிமையுள்ள செலாவணிகளில் அத் தொகையைத் திருப்பித் தந்துவிட வேண்டும்.

இந்த ஏற்பாடு, பிரிட்டன் 1961-ல் வருந்தியது போன்ற நீர்மை நெருக்கடிகளைச் சமாளிக்க மேலும் போதுமான அளவு பன்னாட்டுக் கடன்களை அளிக்க ஓர் அடக்கமான முயற்சி ஆகும். அமெரிக்கா தவிர, பிற எல்லா உறுப்பு நாடுகளுக்கும் இவ்வாறு கொடுக்கப்படக் கூடிய கடன்கள் போதுமானதாக இருக்கக்கூடும். அமெரிக்கா மிகவும் கவலைக்கிடமாகச் செலாவணி வெளிப்போக்கினால் வருந்துமானால், அதற்கு முதலில் பொதுச் சந்தைச் (Common Market) செலாவணிகளை அளிக்க வழி செய்யவேண்டும். அதிகபட்சமாக இச் செலாவணிகளுக்குப் பொது நிதியில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள அளவு $2.5 பிலியனுக்குச் சற்றுக் குறைவு. எனவே, ஏதாவது நெருக்கடி ஏற்பட்டால் பன்னாட்டுக் கடன் வசதி அளிக்கும் ஓர் அமைப்பை நோக்கிப் பாதி வழிதான் இப் புது ஏற்பாடு செல்கிறது.

[12] அதில் பங்கு பெறுபவர்களும் அவர்கள் தர ஒப்புக்கொண்ட தொகைகளும்: அமெரிக்கா, $2 பிலியன்; பிரிட்டன், $1 பிலியன்; ஜெர்மனி, $1 பிலியன்; ஃபிரான்ஸ், $550 மிலியன்; இத்தாலி, $550 மிலியன்; ஜப்பான், $250 மிலியன்; நெதர்லண்ட்ஸ், $200 மிலியன்; கனடா, $200 மிலியன்; பெல்ஜியம், $510 மிலியன்; ஸ்வீடன், $100 மிலியன்.

**மேலும் பன்னாட்டுக் கூட்டுறவு**

1961 தொடக்கத்தில் ஜெர்மன் மார்க் மேலும் மதிப்பேற்றம் அடையும் என்று எதிர்பார்த்ததன் விளைவாகப் பன்னாட்டுக் கூட்டுறவை அதிகமாக்க மேலும் ஒரு முயற்சி செய்யப்பட்டது. அப்போது ஊக வாணிப மூலதனம் பெருமளவில் அமெரிக்காவிலிருந்து ஜெர்மனிக்குப் போகலாயிற்று. முன்னேக்கிய மார்க்கின் விலை கிட்டத்தட்ட 4 சதவீதம் அதிகமாக இருந்ததால் இந்த மூலதனப் போக்கு அதிகமாயிற்று. ஜெர்மன் ஃபெடரல் பாங்கின் யோசனையின்படி அமெரிக்கக் கருவூலம் நிறைய முன்னேக்கிய மார்க்கினை அளித்ததனுல் ஆறு மாதங்களில் விலை வித்தியாசம் 1 சதவீதத்துக்குக் குறைவாக்கப்பட்டது. ஊக வாணிப வெளிப்போக்கை இது அடக்கி, நம்பிக்கையை மீண்டும் ஏற்படுத்தி, டாலரை வலிமைப்படுத்தியது. இதற்காக மிக எளிமையானதோர் ஏற்பாடு செய்யப்பட்டது. அமெரிக்கக் கருவூலம் முன்னேக்கிய மார்க்கை விற்ற அதே விலைக்கு, முன்னேக்கிய ஒப்பந்தங்களின் தவணைக் காலத்தில், அமெரிக்கக் கருவூலத்துக்கு மார்க்குகளை அளிக்க ஜெர்மன் ஃபெடரல் பாங்கு ஒப்புக்கொண்டது. இந்த காலத்தில், இதற்கிணையான விவகாரங்களை ஸ்விஸ் ஃபிராங்குகளில் நடத்த ஸ்விஸ் தேசிய பாங்குக்கும் அமெரிக்கக் கருவூலத்துக்கும் இடையே ஏறக்குறைய இதேபோன்ற ஓர் ஏற்பாடு இருந்தது.[13]

பேச்சுவார்த்தைகளை நடத்த நல்லதொரு மேடையாகப் பயன்பட்டதும், தொடர்ந்து பயன்படக்கூடியதுமான மற்ருெரு பன்னாட்டு அமைப்பையும், அதற்குச் செயலாற்றும் அதிகாரம் இல்லாவிடினும் இங்குக் குறிப்பிடவேண்டும். இது ஐரோப்பியக் கூட்டுறவு, வளர்ச்சி அமைப்பு (Organization for Economic Co-operation and Development) ஆகும். இது ஐரோப்பியப் பொருளாதாரக் கூட்டுறவு அமைப்பிற்குப்பின் வந்த அமைப்பாகும். பின்னர் கூறிய அமைப்பின் 17 உறுப்பு நாடுகளோடு அமெரிக்காவும் கனடாவும் இதில் அங்கம் வகிக்கின்றன. உறுப்பு நாடுகளை வருத்தும் பொருளாதாரப் பிரச்சினைகளை ஆராய்வதும் அவற்றைத் தீர்க்க யோசனைகள் கூறுவதும் இதன் பணிகளாகும். தொழில் வளர்ச்சியில் சிறப்பாக விளங்கும் நாடுகள் ஒன்றுகூடி இவ்வமைப்பில் இடைவிடாமல் கருத்துகளைப் பரிமாறிக்கொள்வதால் மிகுந்த நன்மை விளைகிறது. அதன் யோசனைகள்—நிதி, மற்றும் செலுத்துநிலைப் பிரச்சினைகள் விஷயத்தில் அதற்காக ஏற்படுத்தப்பட்ட நடைமுறைக் குழுவின் யோசனைகள்—மிகுந்த

[13] இந் நடவடிக்கைகளைப்பற்றிய முழு விவரங்களுக்குப் பின்வரும் அறிக்கையைப் பார்க்க: Charles A Coombs, 'Treasury and Federal Reserve Foreign Exchange Operations,' in *Factors Affecting the United States Balance of Payments*, Joint Economic Committee, 87th Congress, 2nd sess., 1962.

செல்வாக்கு உடையன. தனி நாடுகளின் பணக் கொள்கைகளும் நிதிக் கொள்கைகளும் ஒருங்கிணைந்து அமைய, மேலும் வழி செய்ய, ஒழுங்குமுறைப்படி இல்லாவிடினும், பயனுள்ளதான ஒரு சாதனமாக இவ்வமைப்பு விளங்க முடியும். தனி நாடுகளின் விசேஷப் பிரச்சினை களையும் அதனால் அவை கடைப்பிடிக்கும் கொள்கைகளையும் மேலும் நன்றாகப் பிற நாடுகள் உணரவாவது இவ்வமைப்பு வழி செய்ய வேண்டும். இதன்மூலம் ஓரளவுக்கு இக் கொள்கைகள் எல்லா நாடு களிலும் இசைவாக இருக்குமாறு செய்ய இது உதவக்கூடும்.

## அமெரிக்காவின் நிலையின் தனித்தன்மை

நாணயமாற்று வீதங்களின் திடநிலையைக் காப்பாற்றும் குறிக் கோளை உடைய எந்தப் பன்னாட்டுச் செலாவணி அமைப்பிலும் உறுப்பு நாடுகள் கட்டாயமாகச் செலுத்துநிலை விதிகளுக்கு அடங்கி நடக்க வேண்டும். இருப்பினும் 1960 தொடங்கிய ஓரிரு ஆண்டுகளில் இருந்த முறைப்படி 'சாதாரணமான' சேமநிதி நாடு அல்லாத உறுப்பு நாட்டுக்கும், முக்கியமான ஆதாரச் செலாவணி நாடான அமெரிக்கா வுக்கும் இவ் விஷயத்தில் சிறப்பாக ஒரு வேறுபாடு இருந்தது. பன் னாட்டுச் செலாவணி நிதியை அமைத்த உடன்பாட்டில், அமெரிக்கா இவ்வாறு முக்கியமான ஆதாரச் செலாவணி நாடாக விளங்கும் என்பது எதிர்பார்க்கப்படவில்லை யாதலின், 'அடிப்படையான' சமநிலைக் கேடு ஏற்பட்ட எந்த உறுப்பு நாடும் தன் செலாவணியின் மதிப்பைக் குறைக் கலாம் என்று ஏற்பாடு செய்திருந்தது. பன்னாட்டுப் பற்றுக்குறையைத் தவிர்த்துச் சமநிலை ஏற்படுத்தக் கடினமான உபாயமாகிய கட்டாயப் பணச் சுருக்கத்தைவிட நாணயமாற்று வீத மாறுதல் மேலானதாகக் கருதப்பட்டது. (அல்லது, பன்னாட்டுச் செலுத்தலில் உபரியிருப்பின், பணவீக்கத்துக்குப் பதில் நாணயமாற்று வீதத்தை மாற்றுவது என்பது ஏற்பாடு). இந்த உபாயம் அமெரிக்காவைப் பொறுத்தவரை யில் சில விசேஷமான பிரச்சினைகளை ஏற்படுத்துகிறது.

டாலர் சேமநிதிச் செலாவணியாகப் பயன்படுத்தப்படுவதால் அதன் பொன் மதிப்பை மாற்றாமல் வைத்துக்கொள்ள வேண்டும் என்று அமெரிக்காவுக்கு விசேஷமான பொறுப்பு ஏதும் இல்லை. இஃது ஒரு பிரச்சினையே அன்று. 1953-ல் டாலர்கள் பிற செலாவணிகளைவிட நிறையக் கிடைத்ததால் அதன் வலிமையின் அடிப்படையில் டாலர் சேமநிதிச் செலாவணியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. அதை அவ்வாறு உபயோகிக்கச் சொல்லி அமெரிக்கா வேண்டிக்கொள்ளவில்லை. அதன் பொன் மதிப்பை மாற்றுவதில்லை என்று எவ்வித உத்தரவாதத்தையும் அது அளிக்கவும் இல்லை. பன்னாட்டுச் செலாவணி நிதியின் உறுப்பு நாடாக, பிற நாடுகளைப்போலவே தன் செலாவணியின் மதிப்பைக்

குறைக்க அமெரிக்காவுக்கு உரிமை உண்டு. டாலரின் வலிமை 1957-க்குப்பின் குறைந்த பின்னும் வெளிநாட்டு மத்திய பாங்குகள் டாலர் இருப்புகளை வைத்திருந்தால் அதற்கு ஈடாக அவற்றுக்கு எந்தச் சலுகையையும் காட்டவேண்டும் என்பது இல்லை. டாலரின் மதிப்புக் குறையக்கூடிய நஷ்ட பயம் சிறிது இருப்பது தெரிந்துதான்—முன்னைவிடச் சிறிது தயங்கி—டாலர்களைப் பெரிய அளவில் அவை வைத்திருந்தன. அத் தொகைகளில் பெரும்பகுதிக்கு அவற்றுக்கு வட்டி இலாபமும் கிடைத்தது. ஜனுதிபதி உட்பட உயர்ந்த அரசாங்க அதிகாரிகள் டாலரின் மதிப்பைக் குறைப்பதில்லை என்று கூறி வந்ததனுல், இப்போது அதைக் குறைப்பது நம்பிக்கைத் துரோகம் என்று கருதப்பட்டாலும், அப்படிக் குறைத்தால் வெளிநாட்டு மத்திய பாங்குகளின் நஷ்டத்தை ஈடுசெய்ய ஓர் எளிய வழி இருக்கிறது. செலாவணி மதிப்பைக் குறைப்பதால் ஏற்படும் பொன் இலாபத்தில் ஒரு பகுதியை அமெரிக்க அரசாங்கம் வெளிநாட்டு மத்திய பாங்குகளின் டாலர் நிலுவைகளை அவற்றின் பழைய மதிப்புக்குச் சமமான அளவுக்கு உயர்த்த உபயோகிக்கலாம்.

ஆனுல், நாணய மதிப்பைக் குறைப்பதில் உள்ள நடைமுறைக் கஷ்டங்கள்தான் கவலையைத் தருகின்றன. அதைச் சட்டென்று செய்யாவிட்டால் பொன் பெருமளவில் நாட்டைவிட்டு வேளியேறி விடும். நாணய மதிப்புக் குறையப்போகிறது என்று யாருக்கும் முன்னதாகத் தெரியக்கூடாது. ஆனுல், பொன்னின் விலையை அமெரிக்கா மாற்றவேண்டுமானுல், 1946-ல் பிரெட்டன் உட்ஸ் ஒப்பந்தத்தை ஒப்புக்கொண்ட சட்டத்தை அமெரிக்க காங்கிரஸ் திருத்தவேண்டும். டாலர்மீது ஓர் ‘ஓட்டம்’ (run) ஏற்பட்டுப் பொன் நிதிகள் குறையாமலிருக்க, பொன் விற்பனைமீதும் பொன் வாங்குவதன்மீதும் தடைகளை முதலில் ஜனுதிபதி விதிக்கவேண்டும். 1917-ல் நிறைவேறிய எதிரியுடன் வாணிபச் சட்டத்தின்படி (Trading with the Enemy Act) ஜனுதிபதிக்கு இந்த அதிகாரம் உண்டு. ஆனுல், இவ்வதிகாரத்தை அசாதாரணமான நிலைமைகளில் தான் பயன்படுத்தலாம். அவர் இந்தச் சட்டத்தின்கீழ் நடவடிக்கை எடுக்க ‘நாட்டு நெருக்கடி’ ஒன்று இருக்கவேண்டும். அமெரிக்காவின் பொன் சேமநிதிகள் அடியோடு தீர்ந்துபோகும் அபாயம் இருந்தால் சந்தேகமற அதை நெருக்கடி நிலைமை எனலாம். ஆனுல், இதைவிடச் சற்றுக் குறைவாக நெருக்கடியுள்ள நிலைமையில் பொன் மீது தடை விதிப்பதைச் சட்டம் ஒப்புக்கொள்ளுமா என்பது சந்தேகமே. எனவே, ஓர் அடிப்படையான சமநிலைக் கேடு ஒரு நெருக்கடியாக மாறுமுன்னர் அதைத் திருத்த IMF விதிகளின்படி அமைதியாக வேண்டுமென்றே நாணய மதிப்பைக் குறைப்பது அமெரிக்காவுக்குச் சாத்தியமில்லை என்றே தோன்றுகிறது.

## தீராத பிரச்சினைகள்

பொன் மாற்றுத் திட்டத்தில் ஏற்கெனவே செய்யப்பட்ட சீர்திருத் தங்கள், பெரிய அளவில் குறுகிய கால மூலதனம் இடம்பெயர்ந்து, நாட்டின் சேமநிதிகளைப் பாதிப்பதைக் குறைப்பதற்கு ஏற்பாடு செய்தன. திடநிலையைக் குலைக்கும் ஒரு முக்கியமான பிரச்சினைக்குத் தீர்வு காண்பதன்மூலம் இச் சீர்திருத்தங்கள் பன்னாட்டுச் செலாவணி அமைப்புச் சரியும் அபாயத்தைக் குறைத்து இந்த அமைப்பைப் பலப்படுத்தி இருக்கவேண்டும். ஆனால், அதன் அடிப்படைக் குறை களைத் தீர்க்க இச் சீர்திருத்தங்களால் முடியவில்லை.

முதலாவதாக, நீர்மை, நெருக்கடி நிலைமையைச் சமாளிக்கத் துணைச் சேமநிதிகளை மேலும் அளிக்க இப் புது ஏற்பாடுகள் வழி செய்த போதிலும், உலகின் முதற் சேமநிதிகளான பொன்னும் அன்னியச் செலாவணியும் நிலையாக அதிகரிக்க ஒரு வழியும் செய்யவில்லை. இச் சேமநிதிகள் அதிகரிப்பது, முன்போலவே, ஆண்டுதோறும் பணப் பொன் இருப்புகள் சிறிய அளவில் சாதாரணமாக அதிகரிப்பதையே பொறுத்திருக்கின்றன. மேலும் இந் நிதிகள் அதிகமாக வேண்டு மானால், டாலர்கள், ஸ்டர்லிங் ஆகிய சேமநிதிச் செலாவணிகளின் இருப்புகள் மேலும் பெருகவேண்டும். எனவே, உலகப் பண அமைப்புக்கு மேலும் பலமான ஆதரவைக் கண்டுபிடிக்கும் பிரச்சினை சரியாகத் தீர்க்கப்படவில்லை.

இரண்டாவதாக, அகச் சமநிலைக்கும் புறச் சமநிலைக்கும் உள்ள முரண்பாடும் தீரவில்லை. இப்போது உள்ள முளை மாற்றியடிக்கும் (adjustable peg) முறையில் நாணயமாற்று வீதங்கள் நிலையாக இருக் கும்வரை, ஒரு நாட்டின் செலுத்துநிலைப் பற்றுக்குறையைப் பணச் சுருக்கத்தினால்தான் ஒழிக்கமுடியும். அடிப்படையான சமநிலைக் கேடு இருப்பதற்குப் போதுமான சான்றுகளைச் சேகரித்த பிறகு தான் முளையை எடுத்துச் செலாவணியின் மதிப்பைக் குறைக்க முடியும். அதற்குள், நாணயமாற்று வீதம் மாறாது இருந்து பணச் சுருக்கக் கொள்கைகள் கடைப்பிடிக்கப்பட்ட காலத்தில் உற்பத்தி சுருங்கி வேலையின்மை பெருகுவதனால் உள்நாட்டுப் பொருளாதார நிலைக்குப் பெரும் தீங்கு விளையக்கூடும். விசேஷமாக அமெரிக்கா வுக்கு, நாணய மதிப்பைக் குறைக்கும் இறுதி உபாயம்கூட, மிக மோசமான நெருக்கடி ஏற்பட்டாலொழிய, சாத்தியம் இல்லைபோல் தோன்றுகிறது. குறுகிய கால மூலதன நுட்பங்களைத் தடுக்க இதுவரை ஏற்பாடு செய்யப்பட்ட உபாயங்கள்கூட நிச்சயமாக வும் போதுமான அளவும் எப்போதும் வேலைசெய்யும் என்று கூற முடியாது.

## பார்வைக்குரிய சில நூல்கள்

Economic Co-operation Administration, *The Sterling Area, An American Analysis*. London and Washington, D. C.: The Administration, 1951. ஸ்டர்லிங் பிராந்தியம், அதன் செயல்முறை, அதன் வாணிபம், அதன் சாதன வளம் ஆகியவைபற்றி நிறைய விவரங்களைக் கொண்டுள்ளது. எடுத்துக் காட்டுப் படங்கள் பிரமாதம்.

Gardner, Richard N., *Sterling-Dollar Diplomacy*. New York. Oxford University Press, 1956. போருக்குப்பின் பன்முக வாணிபத்தைப் புனரமைக்க இங்கிலாந்தும் அமெரிக்காவும் செய்த கூட்டு முயற்சியை விளக்கமாக விவரிக்கிறது.

Mikesell, Raymond F., *Foreign Exchange in the Post-war World*. New York: The Twentieth Century Fund, 1954. 1954வரை பன்னாட்டுச் செலாவணிப் பிரச்சினைகளைப்பற்றிப் பல விவரங்களை அருமையாகத் தருகிறது.

Harris, Seymour E., ed., *The Dollar in Crisis*. New York: Harcourt, Brace & World, Inc., 1961. Wallich, ‘Government Action’ என்பதைப்பற்றி எழுதிய கட்டுரையை முக்கியமாகப் பார்க்க.

Tew, Brian, *International Monetary Co-operation*, 1945—1952. London: Hutchinson's University Library, 1952. IMF, ஸ்டர்லிங் பிராந்தியம், EPU ஆகியவற்றின் அமைப்பும் செயல் முறையும்பற்றி அழகாகவும் சுருக்கமாகவும் கூறுகிறது.

United States Congress, Joint Economic Committee, *Factors Affecting the United States Balance of Payments*, 87th Congress, 2nd sess., Washington, D. C.: Government Printing Office, 1962. முக்கியமாக 5ஆம் பாகத்தைப் பார்க்க.

# 27. பன்னாட்டுச் செலாவணிச் சீர்திருத்தம்
## (International Monetary Reform)

அமெரிக்கச் செலுத்துநிலையில் தொடர்ந்து பற்றுக்குறை இருந்தது, இரு ஆதாரச் செலாவணி நாடுகளாகிய அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் பிறவற்றைவிட வளர்ச்சி குறைவாக இருந்தது ஆகியவற்றோடு, குறுகிய பலனுடைய தாற்காலிகமான நடவடிக்கைகளைத் தவிர, வேறு எந்தத் திருத்தத்தையும் உலகத்தின் பணத்துறை அதிகாரிகள் செய்யாமலிருப்பதையும் கண்டு பொருளாதார வட்டாரங்களில் அதிருப்தியும் கவலையும் அதிகரித்தன. புத்தகங்களும் கட்டுரைகளும் பொங்கி எழுந்து வெளிவந்து அதைக் கண்டனம் செய்தன; பயனுள்ள யோசனைகளையும் கூறின. பன்னாட்டுப் பணத்துறையைவிட அதிகமாக ஒரு பொருள்பற்றி நூல்கள் வெளிவந்தது, வளர்ச்சி குன்றிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சியைப்பற்றிதான். முந்திய அத்தியாயத்தில் விவரிக்கப்பட்ட, பின்வரும் முக்கியப் பிரச்சினைகளைப்பற்றியே முக்கியமாகத் திறனாய்ந்து பயனுள்ள யோசனைகள் கூறப்பட்டன: (1) உலகத்தின் செலாவணிச் சேமநிதிகள் போதுமான அளவு நிச்சயமாக அதிகரிக்க எல்லாரும் ஒப்புக்கொள்ளுமாறு ஒரு வழியை எப்படிக் கண்டுபிடிக்கலாம்? (2) செலுத்துநிலைச் சமநிலையின் தேவைகளையும் கணிசமான அளவு நிதி, பணத்துறைகளில் தனிநாடுகளின் சுதந்திரத்தையும் எப்படி முரண்பாடின்றி இணைப்பது? (3) திடீரெனக் குறுகிய கால மூலதனம் ஓடுவதால் நாட்டுச் சேமநிதிகள் பாதிக்கப்படுவதன் விளைவாகப் பன்னாட்டுச் செலாவணி அமைப்பில் ஏற்படும் திடநிலைக் குலைவைக் குறைப்பதோ, ஒழிப்பதோ எப்படி?

பன்னாட்டுச் செலாவணி அமைப்பைச் சீர்திருத்தக் கூறப்பட்ட திடமான யோசனைகள், மேற்கு நாடுகளின் நிதித்துறை இணைப்பிலிருந்து, முழு அளவுக்கு மாறுபடும் நாணயமாற்று வீத முறையை மேற்கொள்வதுவரையில், பலவகைப்பட்டன. ஒரே ஓர் அத்தியாயத்துக்குள் இவ்வளவு அதிகமான யோசனைகளை விவரிக்க முடியாது. சீர்திருத்த யோசனைகளில் மிகவும் மாறுபட்ட சிலவற்றை மட்டும்

மாதிரிக்கு எடுத்து விளக்குவோம். ஐந்து வகை யோசனைகள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன ; யோசனைகள் அனைத்துக்கும் சரியான பிரதிநிதிகளாக இவை இருக்கும் என்று நான் நம்புகிறேன். ஒவ்வொரு வகையிலும் பல மாறுதல்கள் கொண்ட யோசனைகள் கூறப்பட்டுள்ளன. அல்லது ஒவ்வொன்றிலும் பல மாறுதல்களை எண்ணிப் பார்க்கமுடியும். இம் மாறுபாடுகளை யெல்லாம் நாம் இங்குப் பார்த்துக்கொண்டிருக்க முடியாது ; அவற்றைப்பற்றிப் படிக்க ஆவல் கொண்டவர்கள் இந்த அத்தியாயத்தின் இறுதியில் குறிக்கப்பட்டுள்ள நூல்களைப் படிக்கலாம்.

சீர்திருத்தத்துக்காகக் கூறப்பட்ட ஒவ்வொரு யோசனையும் சிறப்பானது. இவற்றைக் கூறியவர்கள் தம் யோசனைகளுக்கு ஒரே அடிப்படைப் பொருளாதாரக் கோட்பாடுகளைத்தான் எடுத்துக்கொண்டுள்ளனர். ஆனால், எந்தக் காரணிகள் செயல்படுகின்றன என்பதை அவர்கள் மதிப்பிட்டது, எந்தக் குறிக்கோள்கள் அதிக முக்கியமானவை என்று அவர்கள் கருதியது, ஒரு குறிப்பிட்ட இயக்கம் அல்லது நிறுவன மாறுதல் எவ்வளவு பலன்தரும் என்று அவர்கள் எதிர்பார்த்தது ஆகியவற்றைப் பொறுத்து இந்த யோசனைகள் மாறுபடுகின்றன.

## நெருக்கமான நிதித்துறை இணைப்பு

பன்னாட்டுச் செலாவணி அமைப்பின் சீர்திருத்தத்துக்கான எல்லா யோசனைகளிலும் மாறாத நாணயமாற்று வீதங்களை அடிப்படையாகக் கொண்ட ஒன்று உள்ளது. நமது ஆராய்ச்சியை அதைக் கொண்டு ஆரம்பிப்பதுதான் நியாயம். அட்லான்டிக் சமுதாயத்தை (Atlantic Community) நிதித்துறையில் முழுமையாக இணைத்து மாறாத நாணயமாற்று வீதங்களின் ஒரு தொகுதியின்மூலம் பன்னாட்டுத் திருத்தத்துக்கு இழைந்து செயலாற்றும் ஓர் இயக்கத்தை அமைப்பது இந்த யோசனையின் நோக்கம்.[1]

### நிதித்துறை இணைப்பு என்றால் என்ன ?

நிதித்துறை இணைப்பு என்றால் என்ன? அச் சமுதாயத்திற்குள் மூலதன இடப்பெயர்ச்சிகள் எவ்விதத் தடையுமின்றி முழுச் சுதந்திரத்துடன் நடைபெறவேண்டும். எல்லா உறுப்பு நாடுகளின் பத்திரங்களுக்கும் ஒரே ஒரு பெரிய அங்காடி இருக்கவேண்டும் என்பது குறிக்கோள். இந்த அங்காடியில் எல்லாப் பத்திர வெளியீடுகளும் ஒன்றோடொன்று போட்டியிடவேண்டும். அதன் விளைவாகக் குறிப்பிட்ட குணங்

[1] இந்த யோசனையையும் இதை ஆதரிக்கும் வாதங்களையும்பற்றிய முழு விளக்கத்துக்கு James C. Ingram, 'Proposal for Financial Integration in the Atlantic Community,' in *Factors Affecting in the United States Balance of Payments*, பக்கங்கள் 177-207-ஐப் பார்க்க.

களும் தவணைக்காலமும் கொண்ட ஒவ்வொரு வகைப் பத்திரங்களுக்கும் தனி ஒரு வட்டி வீதம் ஏற்படும். இப்போது பண்டங்களின் அங்காடிகள் இணைந்துள்ளன. அதனால், அட்லான்டிக் சமுதாயத்துக்குள் பண்டங்களின் விலைகள் போக்குவரத்துச் செலவு, சாதாரணச் சுங்க வரிகள் இவற்றின் அளவுக்குத்தான் நாட்டுக்கு நாடு மாறுபடுகிறது. பணத்துறையிலும் இணைப்பில் சிறிது முன்னேற்றம் ஏற்பட்டால், ஒரே நாட்டின் பல பிராந்தியங்களுக்கிடையில் ஏற்படுவது போலவே சுலபமாகவும் அமைதியாகவும் செலுத்துநிலைத் திருத்தம் ஏற்படும்.

ஐக்கிய அமெரிக்காவில் பிராந்தியங்களுக்கிடையே செலுத்துநிலைத் திருத்தம் எப்படிச் செயல்படுகிறது என்பதை எடுத்துக்கொள்வோம். நாட்டின் எல்லா பாகங்களுக்கும் இடையில் நெருங்கிய நிதித்துறைத் தொடர்புகள் இருப்பதை இது பெரும்பாலும் பொறுத்திருக்கிறது. ஒரு நாட்டுக்கு ஏற்படுவது போலவே, ஒரு பிராந்தியத்தின் வருவாய்களும் செலுத்தல்களும் மாறுபட்டால், அதன் செலுத்துநிலையில் பற்றுக்குறைகளோ, உபரிகளோ தோன்றும். ஆனால், அதை நேராக்க மத்திய பாங்குகள் குறுக்கிடுவதில்லை; குறுக்கிட வேண்டியதுமில்லை. எந்தப் பிராந்தியத்தில் பற்றுக்குறை ஏற்படுகிறதோ அதன் வணிக பாங்குகள் தன் அதிகமான செலுத்தல்களைச் செய்யப் பணத்தைப் பெற வேண்டும். ஒவ்வொரு பாங்கும் வைத்திருக்கும் ஃபெடரல், மாநில அல்லது ஸ்தல ஸ்தாபனப் பத்திரங்களில் சிலவற்றை விற்பதன் மூலம் சுலபமாக அப் பணத்தைப் பெறமுடியும். நாடு முழுவதிலும் இணைந்த ஒரு மூலதன அங்காடி உள்ளது. அதில் போட்டியின் விளைவாக நிர்ணயமாகும் விலைகளிலும் வட்டி வீதங்களிலும் பத்திரங்கள் விற்கின்றன. எனவே, மிகச்சிறிய அளவு விலை குறைத்து விற்றாலே பத்திரங்களனைத்தையும் வாங்கச் சிலர் எப்போதும் தயாராக இருக்கின்றனர்.

பற்றுக்குறைப் பிராந்தியத்திலுள்ள பாங்குகளின் சொத்துகளும் (பத்திரங்கள்), பொறுப்புகளும் (நடப்பு வைப்புகள்) ஒரே அளவு குறைகின்றன. சேமநிதிகள் ஏதும் நஷ்டமடைவதில்லை. (ஒரு பிராந்தியத்தின் சேமநிதி எவ்வளவு என்று யாருக்குத்தான் தெரியும்?) கடன் செலாவணியைக் குறைக்கவேண்டிய கட்டாயமும் இல்லை. பற்றுக்குறையைச் சரிக்கட்ட தனியார் மூலதனம் உள்நோக்கி வருகிறது. செலுத்துநிலை அழுத்தத்தைக் குறைப்பதன்மூலம் அது சமநிலையைத் தோற்றுவிக்கிறது. அந்த இடத்தில் (நடப்பு வைப்புகள் குறைவதன்மூலம்) ஓரளவுக்குப் பணத்தின் அளிப்புக் குறைகிறது; பற்றுக்குறையை ஏற்படுத்தும் சூழ்நிலை தொடர்ந்து இருக்குமானால், இப் பணச் சுருக்கம் தொடர்ந்து இருக்கும். இறுதியில், அந்தப் பிராந்தியத்து வருமானங்களும் விலைகளும் சுருங்கும்.

## அட்லாண்டிக் சமுதாயத்தின் இணைப்பு

ஐக்கிய அமெரிக்காவின் பல்வேறு மாநிலங்களில் பண்ட அங்காடியும், நிதி அங்காடியும் நன்கு இணைந்திருப்பதுமட்டுமன்று; அவற்றில் ஒரே பணம் பொதுவாகப் புழங்குகிறது. வியாபாரம் செய்யப்படும் பண்டங்களுக்கு இணைந்த ஓர் அங்காடி ஏற்படும் அளவுக்கு அட்லான்டிக் சமுதாயத்தில் வாணிபக் கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டிருப்பினும், அச் சமுதாயத்துக்குப் பொதுப் பணம் கிடையாது. ஆனால், நிலையான விகிதத்தில் செலாவணிகள் மாற்றுரிமையை மீண்டும் பெற்றது ஏறத்தாழப் பொதுப்பணம் இருப்பது போன்ற நிலைதான். ஆனால், நிதி அங்காடிகளின் ஒருமைப்பாடு ஏற்படவே இல்லை. உதாரணமாக, விதிமுறைப்படியானவையும் அல்லாதவையுமான நாணயமாற்றுக் கட்டுப்பாடுகள்மூலம் ஐரோப்பாவின் மூலதன அங்காடிகள் இணைய முடியாமல் பிரித்து வைக்கப்பட்டுள்ளன. அமெரிக்காவில்கூட, மூலதனத்தின் பன்னாட்டு ஓட்டம் தடையின்றிப் போகாமல் செய்யும், விதிமுறைப்படி விதிக்கப்படாத பல கட்டுப்பாடுகள் உள்ளன.[2] இக் கட்டுப்பாடுகள் பின்வருவன: ஃபெடரல், மாநிலக் கட்டுப்பாட்டு அமைப்புகளின் விதிகள் சில, பலவகை நிதி நிறுவனங்களின் முதலீடுகளை அடியோடு அல்லது பெரும் அளவுக்குத் தடை செய்கின்றன;[3] வெளிநாடுகள்பற்றிப் போதுமான விஷயங்கள் தெரியாமை; போதுமான அளவு விற்பனை வசதிகள் இல்லாமை; வாணிப மரபு; மற்றும் 'வணிகத்துறையில் நாட்டுப்பற்றும்' கூட.

இந்த யோசனையைக் கூறிய பேராசிரியர் இங்கிரம் இக் குறைகளை நிவர்த்தி செய்யமுடியும் என்று நம்புகிறார். பன்னாட்டு விவகாரங்கள் மீது எஞ்சியுள்ள கட்டுப்பாடுகள் அனைத்தையும் ஒழிப்பதோடு, அட்லான்டிக் சமுதாய நாடுகள் வாணிபப் பெருக்கத்தைத் தடுக்கும் உள்நாட்டுச் சட்டங்களை மாற்றி, அறியாமையைப் போக்க வழி செய்து, பத்திரங்களுக்கு மேலும் பயனுள்ள பன்னாட்டு அங்காடியை ஏற்படுத்த வேண்டும். நாணயமாற்று வீதங்களை உறுதியாக நிலைநாட்ட வேண்டும். எந்தவிதமான மாறுதலையும் அதில் அனுமதிக்கக் கூடாது. இப்போது அனுமதிக்கப்படும் கூடவோ குறையவோ 1 சதவீத

[2] கம்யூனிஸ்டு பிராந்தியத்தோடு நடக்கும் மூலதன விவகாரங்களுக்கும் அமெரிக்கவாசிகள் வெளிநாடுகளில் வைத்துள்ள பொன் இருப்புகளுக்கும்தான் அமெரிக்கா முறைப்படியான நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை விதிக்கிறது.

[3] உதாரணமாக, ஆயுள் இன்ஷூரன்சு கம்பெனிகளின் மொத்தச் சொத்துகளான $ 120 பிலியனில் $ 5 பிலியன்தான் (1960 முடிவில்) வெளிநாட்டுப் பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டிருந்தன என்று இங்கிரம் குறிப்பிடுகிறார்; வணிக பாங்குகளின் சொத்தான $ 267 பிலியனில் சிறிதும் வெளிநாட்டுக் கடன் பத்திரங்கள் இல்லை; (1961 முடிவில்) $ 4·7 பிலியன் மட்டும் வெளிநாட்டார் தரவேண்டிய குறுகிய காலப் பொறுப்புகள்; இவை பெரும்பாலும் டாலர்களில் குறிப்பிடப்பட்ட வணிகக் கடன்கள். Ingram, மேற்கோள் காட்டிய நூல், பக்கங்கள் 188–89.

மாறுதலேக்கூட அனுமதிக்கக்கூடாது. அப்போது பெயரில் இல்லாவிட்டாலும் நடைமுறையில் அச் சமுதாயம் முழுவதற்கும் ஒரே பொதுப் பணம் இருக்கும் நிலே ஏற்படும்.

இந்தச் சீர்திருத்தங்களேச் செய்தால், 1914-க்கு முந்திய பொன் திட்டத்தில் நடைமுறையில் இருந்த திருத்த இயக்கம், மேலும் வலிமையுடனும் நிறைவுடனும் மீண்டும் ஏற்படக்கூடிய, பன்னாட்டுச் செலாவணி அமைப்புத் தோன்றும். நிதித்துறை இணைப்பும் செலாவணி ஒருமைப்பாடும் மட்டும் கைகூடிவிட்டால், பின்னர், ஒரு நாட்டின் பல பிராந்தியங்களுக்கிடையே செலுத்துநிலேகள் திருந்திக்கொள்வதுபோல, மாறும் சூழ்நிலேகளுக்கு ஏற்ப அட்லான்டிக் சமுதாயத்தின் உறுப்பு நாடுகளின் செலுத்துநிலேகளும் திருந்திக்கொள்ளும். இம்முறையில் பின்வரும் பெரும் நன்மைகள் உள்ளன : (1) ஒரு செலாவணியின் மதிப்பைப் பாதுகாக்க மத்திய பாங்குக் குறுக்கீடு அவசியமில்லே ; (2) மூலதன இடப்பெயர்ச்சிகள் சமநிலேயைத் தோற்றுவிக்கும் ; செலுத்துநிலே சமமாவதற்கு உதவி செய்யும். நாணயமாற்று வீதங்கள் உறுதியாக மாருமல் இருக்கும்வரை சமநிலேயைக் கெடுக்கும் இடப்பெயர்ச்சிகள் நிச்சயமாக ஏற்படமாட்டா.

### இணைப்புடன் திருத்தம்

இந்த யோசனேப்படி நிறுவப்பட்ட அமைப்பைக் கற்பனே செய்து பாருங்கள். ஒவ்வொரு நாட்டின் பத்திர மார்க்கெட்டுகளும் பிறநாடுகளில் உள்ளவற்ருேடு நெருங்கிய தொடர்பு கொண்டு, இன்று அன்னியச் செலாவணி அங்காடிகள் இருப்பது போன்று, ஒரு பெரும் நிதி அங்காடியாக இணைந்திருக்கும். ஒரு குறிப்பிட்ட தரமும் தவணேயும் உடைய பத்திரத்தை விற்க அதேபோன்ற தரமும் தவணேயும் உடைய பிற பத்திர வெளியீடுகளோடு போட்டியிடவேண்டும். எனவே, பொதுவான அளவிலிருந்து வட்டி வீதங்கள் எந்த நாட்டிலும் வேறுபட்டால், அந்த வேறுபாடு தாற்காலிகமானதாகத்தான் இருக்கும். ஒரு நாட்டில் வட்டி வீதம் உயர்ந்தால் அதை நோக்கிப் பன்னாட்டு மூலதனம் பாயும். அவசியம் இருப்பின் இதன் அளவு பெரிதாக இருக்கும். ஆனல், சாதாரணமாகச் சிறிய அளவு மூலதன இடப்பெயர்ச்சிதான் ஏற்படும். இந்தப் பாய்ச்சலினுல் அங்கு வட்டி வீதங்கள் பொது வீதத்துக்கு இணேயாகிவிடும். நாணயமாற்று வீதங்கள் சிறிதளவு கூட மாருது இருக்கும் என்ற உத்தரவாதம் இருப்பதால், ஒவ்வொரு நாட்டிலுமுள்ள பாங்குகள் தம் சொந்த நாட்டு அரசாங்கம், அல்லது ஸ்தல ஸ்தாபனப் பத்திரங்களோடு அட்லான்டிக் சமுதாயத்தின் பிற அரசாங்கங்களின் பத்திரங்களேயும் வைத்திருக்கும்.

அமெரிக்கா போன்று ஏதாவதொரு நாட்டின் செலுத்துநிலேயில் பற்ருக்குறை ஏற்பட்டால், அமெரிக்கர்களால் வெளிநாட்டாரின்

பெயருக்கு எழுதப்பட்ட டாலர் செக்குகளின் மதிப்பு (அந்த நிலையான நாணயமாற்று வீதத்தில்) அமெரிக்கர்களின் பெயருக்கு அன்னியச் செலாவணிகளில் வரையப்பட்ட செக்குகளின் மதிப்பைவிட அதிகமாக இருக்கும்.[4] அமெரிக்கப் பற்றுக்குறையின் அளவுக்குச் சமமாக அயல் நாட்டு பாங்குகள் தீர்வு (clearing), நிலுவைகளைப் பெறும். இந் நிலுவைகளை அவை பல வழிகளில் மாற்றிக்கொள்ளலாம். அவை வைத்துள்ள அமெரிக்கப் பத்திரங்களின் அளவை அதிகரிக்க விரும் பினால், இவ்வாறு பெற்ற டாலர்களைக் கொண்டு அப் பத்திரங்களை நியூயார்க் அங்காடியில் வாங்கலாம். ஐரோப்பிய (அல்லது கனடாவின்) பாங்குகள் தம் நெடுங்காலச் சொத்துகளையும், தம் வைப்பாளர் களுக்கு (உதாரணமாக, ஏற்றுமதியாளர்களுக்கு) தரவேண்டிய பொறுப்புகளையும் சமமாக அதிகரித்துக்கொண்டுள்ளன. அமெரிக்க பாங்குகளில், சொத்துகள், பொறுப்புகளின் அளவு மாருமல் இருக்கும். நடப்பு வைப்புகள்மட்டும் கை மாறியிருக்கும். உதாரண மாக அமெரிக்க இறக்குமதியாளர்களின் கணக்கிலிருந்து அமெரிக்கப் பத்திர வணிகர்களின் கணக்குக்கு வைப்புகள் மாறியிருக்கும். இப்படி இல்லாவிட்டால், அமெரிக்க பாங்குகள்மீது தம் வசமுள்ள உரிமை களைப்பற்றி வெளிநாட்டு பார்ங்குகள் அவற்றுக்குச் சொல்லும். அமெரிக்க பாங்குகள் தாம் வைத்துள்ள வெளிநாட்டுப் பத்திரங்களை விற்று, அதில் பெற்ற தொகையை இவ்வுரிமைகளை வைத்துள்ள பாங்கு களுக்குச் செலுத்தச் சொல்லித் தம்மோடு தொடர்புடைய வெளிநாட்டு பாங்குகளுக்கு அதிகாரம் அளிக்கும். அப்போது அமெரிக்க பாங்கு களின் நெடுங்காலச் சொத்துகள் குறையும். வெளிநாட்டில் பணம் செலுத்தவேண்டிய அமெரிக்கக் கம்பெனிகளின் நடப்பு வைப்புகளும் குறையும். வெளிநாட்டு பாங்குகளில், ஏற்றுமதியாளர்களும் அமெரிக்காவிடமிருந்து பணம் பெறவேண்டிய பிறரும் வைத்துள்ள நடப்பு வைப்புகள் அதிகமாகும்; அந்நாட்டுப் பத்திர வணிகர்களின் நடப்பு வைப்புகள் குறையும்.

சேமநிதி மாற்றுகைகளுக்கு அவசியமின்றிப் பன்னாட்டுச் செலுத்தல் செயல்முறை இழைந்து நடக்கவேண்டுமாயின் நாணய மாற்று வீதங்கள் மாருமல் இருக்கும் என்ற திடமான நம்பிக்கை வேண்டும். அத் திடநிலை ஏற்பட்டுவிட்டால் ஊகவாணிப மூலதன

4 நாணயமாற்று வீதம் திடமாகத் தீர்மானிக்கப்பட்டிருப்பதால், நாணய மாற்று அங்காடி அவசியமில்லை. செலுத்தல்களைச் செய்ய அயல்நாட்டு உண்டி யல்களை வாங்குவதற்குப் பதிலாக, தனது செலாவணியிலேயே எழுதித் தான் பணம் தரவேண்டிய வெளிநாட்டானுக்கு, இறக்குமதியாளன் தன் செக்கைத் தபாலில் அனுப்பிவிடுவான். வெளிநாட்டான் அதைத் தன் பாங்கில் கட்டுவான். அந் நாட்டுப் பணத்தில் அதன் மதிப்பை அவனது வைப்புக் கணக்கில் பாங்கு வரவு வைத்து, பெற்ற வெளிநாட்டு நிலுவையைப் பின்னர் மாற்றிக்கொள்ளும் வரை வைத்திருக்கும்.

ஒட்டங்கள் இருக்கமுடியாது; பொருள்களை அனுப்புதல், சமநிலை ஏற்படுத்தும் மூலதனப் பெயர்ச்சிகள், அரசாங்க மாற்றுகைகள் ஆகிய வற்றுக்காகமட்டுமே பன்னாட்டுச் செலுத்தல்கள் நடைபெறும். இம் முறை நடக்க, நாணயமாற்று வீதம் மாருமலிருப்பதும், வரம்பின்றிச் செலாவணி மாற்றுரிமையும்மட்டும் இருந்தால் போதாது; நிதி அங்காடிகளும் பொருள் அங்காடிகளும் இணைந்திருக்கவேண்டியதும் அதேபோல அவசியமாகும்.[5]

## இதற்கும் இப்போதுள்ள முறைக்கும் உள்ள வேறுபாடு

இப்போதுள்ள பன்னாட்டுச் செலாவணி அமைப்பு, பல சமரச ஏற்பாடுகளிலிருந்தும் எதிர்பாராத நிகழ்ச்சிகளிலிருந்தும் இன்றைய தோற்றத்தை அடைந்திருக்கிறது. இவ்வமைப்பின்கீழ்ப் பிற அங்காடி களோடு ஒப்பிட்டால் பொருள் அங்காடிகள் பூரணமாக இணைந் துள்ளன; பண அங்காடிகள் ஓரளவுக்கு இணைந்துள்ளன. ஆனல், நாணயமாற்று வீதங்கள் குறுகிய வரம்புகளுக்குள் நிலைத்திருப்பினும் பொன் ஏற்றுமதி நிலையையோ அதற்குச் சமமான அளவையோ அவ் வீதங்கள் அடையும்போது அவற்றுக்கு அதிகாரபூர்வமான ஆதரவு அவசியமாகிறது. மேலும், ஒரு நாட்டின் செலுத்துநிலைமீது பலமான அழுத்தம் இருக்கும்போது, திடநிலையில் நாணயமாற்று வீதத்தை வைத்திருக்க முடியுமா என்ற சந்தேகம் எழுகிறது. மூலதன இடப் பெயர்ச்சிகளைப் பொறுத்தமட்டில், அவற்றின்மீது முறைப்படியும் அவ்வாறு இல்லாமலும் கட்டுப்பாடுகள் இருந்தபோதும் அந்த இரு வகைக் கட்டுப்பாடுகளைத் தவிர்க்கவோ மீறவோ முடியும்.

பெரும்பாலான சமரச ஏற்பாடுகளைப் போலவே, உறுதியான நாணயமாற்று வீதங்களோடு பெருமளவில் இணைப்புச் சேர்ந்த அமைப்பு, அல்லது மாறும் வீதங்களோடு பணத்துறை சுதந்திரம் சேர்ந்த இணைப்புப் போன்ற மேலும் பொருத்தமான மாதிரி அமைப்பு களினின்று நாம் பெறக்கூடிய நன்மைகளை இப்போதுள்ள பணமுறை நமக்குத் தருவதில்லை. சமீபகாலங்களில், குறுகியகால மூலதன இடப்பெயர்ச்சிகள் அமெரிக்கச் செலுத்துநிலையைத் திடநிலைப்படுத்து வதற்குப் பதிலாக, திடநிலையைக் குலைத்துவந்திருக்கின்றன. வேண்டு மென்றே ஏற்படுத்தப்பட்ட வட்டி வித்தியாசத்துக்கு ஏற்ப வெளியே செல்லும் மூலதனம் செலுத்துநிலைப் பற்றுக்குறையை மேலும் மோசமாக்கியிருக்கிறது. டாலரின் திடநிலை குறித்து அடிக்கடி பயம் தோன்றி ஊகவாணிப மூலதனம் மேலும் வெளியேறுவதைத் தூண்டி

[5] மூன்று வகை அங்காடிகளில் ஏதாவது ஒன்றின் இணைப்பு அடியோடு இல்லை என்று வைத்துக்கொண்டு செலுத்துநிலை உலைவு ஏற்பட்டால் என்ன விளைவு ஏற்படும் என்பதைப் பயிற்சிக்காகக் கணக்கிட்டுப் பார்க்கவும்.

வந்திருக்கிறது. அந் நாட்டின் புறப்பற்றுக்குறையை அதிகப்படுத்திய தோடு, வேலைப் பிரச்சினை, வளர்ச்சிப் பிரச்சினையைத் தீர்க்கச் செய்யப் பட்ட முயற்சிகளையும் அவை பாதித்துள்ளன.

**இணைப்பினால் ஏற்பட்ட நன்மைகள்**

அட்லான்டிக் சமுதாயத்தை நிதித்துறையிலும் பணத்துறையிலும் இணைக்கும் யோசனையை இப்போதைய பணமுறையினால் ஏற்படும் பிரச்சினைகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால், அதற்குச் சாதகமாக இரண்டு அம்சங்களைக் கூறலாம்.

1. சமீப ஆண்டுகளில் மிகவும் உலைவுக்குக் காரணமாக இருந்த பெரிய குறுகியகால மூலதன இடப்பெயர்ச்சிகள் மிகவும் அளவில் சுருங்கிவிடும். நாணயமாற்று வீதங்கள் ஒரு சிறிதும் மாற வாய்ப் பில்லை யாதலின், ஊகவாணிப மூலதன ஓட்டங்கள் ஏற்படத் தூண்டுதல் இல்லை. ஆனால், வட்டி வீதங்களில் சிறு வித்தியாசம் இருந்தாலும் அதற்கு ஏற்ப மூலதன இடப்பெயர்ச்சியின் அளவு மாறும். அதாவது வட்டி ஆர்பிட்ரேஜ் வட்டி வித்தியாசங்களால் நுண்மையாகப் பாதிக்கப்படும். விரைவில் இவ்வாறு மூலதன ஓட்டம் ஏற்பட்டால் விரைவில் நிலைமை திருந்தும். எனவே, மூலதன ஓட்டம் மிகப்பெரிய அளவில் இருக்கவேண்டியதில்லை. சற்று இருந்தால் போதும்.

2. இவ்வாறு தொடர்ந்து ஏற்படும் குறுகியகால மூலதன இடப் பெயர்ச்சிகள் செலுத்துநிலையின் பற்றுக்குறைகளுக்கும் உபரிகளுக்கும் விரைவாகவும் தயாராகவும் நிதி ஏற்பாடு செய்யும். இதற்காக அதிகார பூர்வமான ஈடுகட்டும் நிதி ஏற்பாடோ, நாட்டின் பொன் அல்லது அன்னியச் செலாவணிச் சேமநிதிகளைப் பயன்படுத்துவதோ தேவை யில்லை. எனவே, நாடுகள் பெரும் சேமநிதிகளை வைத்திருக்கத் தேவை யில்லை. அவற்றின் அளவு மாறுவதைப்பற்றி வீணாகக் கவலைப்படவும் வேண்டியதில்லை.

இத்தகைய நிதி, மற்றும் பணத்துறை இணைப்புமூலம் நமது பிரச்சினைகளில் முக்கியமான இரண்டு மூன்றினை நன்கு தீர்க்க வழியுண்டு: உதாரணமாக, சேமநிதிகள் போதுமான அளவு வளர இப்போதுள்ள அமைப்பு வழிசெய்யவில்லை; குறுகிய கால மூலதன இடப்பெயர்ச்சி ஏற்படும்போது திடநிலை குலைந்துவிடுகிறது.

ஒரு விஷயத்தை இங்கு முக்கியமாகக் கவனிக்கவேண்டும். செலுத்துநிலையின் பற்றுக்குறைக்கு நிதி ஏற்பாடு செய்யும் ஒருவழி யாக, குறுகிய அர்த்தத்தில்தான் 'சமநிலை ஏற்படுத்துவதாக'க் குறுகிய கால மூலதன இடப்பெயர்ச்சிகள் நிதித்துறையில் இணைந்த ஒரு சமுதாயத்தில் பணியாற்றுகின்றன. அவ்வாறு நிதி ஏற்பாடு

செய்வதால் தன் சேமநிதிகளைப் பற்றுக்குறை நாடு குறைத்துக்கொள்ள வேண்டிய அவசியம் குறைகிறது. கடன் செலாவணி, பன்முறை சுருங்குவதை அனுவசியமாக்குவதன்மூலம் அவசியமான அடிப்படைத் திருத்தங்கள் செயல்பட மேலும் அவகாசத்தை அளித்தபோதிலும் இத் திருத்தங்கள் ஏற்பட அவை ஒருவழியிலும் உதவுவதில்லை. அதாவது, பற்றுக்குறையைத் திருத்த வழிசெய்கிறது என்ற பொருளில், குறுகிய கால மூலதனப் போக்குகள் சமநிலை ஏற்படுத்துவன அல்ல.

### இணைப்பும் நாட்டுச் சுதந்திரமும்

இந்த யோசனை, செலுத்துநிலைச் சமநிலையின் தேவைகளுக்கும் பண, நிதித்துறைச் சுதந்திரத்துக்கும் இடையே உள்ள முரண்பாட்டை எப்படிச் சமரசம் செய்கிறது என்பதை நாம் இன்னமும் பார்க்கவில்லை. பணக் கொள்கை விஷயத்தில் நாட்டுக்கு நாடு சுதந்திரமான கொள்கை யைக் கடைப்பிடிப்பது என்பது நடவாது என்பது தெளிவு. மூலதன அங்காடிகள் நெருக்கமாக இணைந்திருக்குமாதலின், குறைந்த வட்டி வீதங்களைக் கொண்டு சுலபமாகக் கடன் செலாவணியை அதிகரிக்கும் கொள்கையைக் கடைப்பிடிக்கும் ஒரு நாடு, இப்போது நடைபெறக் கூடியதைவிட விரைவில் மூலதன வெளிப்போக்கினால் தன் சேம நிதிகளை இழக்க நேரிடும். உறுதியாக நிலைத்த நாணயமாற்று வீதத்தைக் கடைப்பிடித்தால் சமுதாயத்தில் எல்லா நாடுகளும் ஒன்றுக் கொன்று பொருந்துகின்றது போலப் பணக் கொள்கைகளைக் கட்டாய மாகக் கடைப்பிடிக்கவேண்டும்.

ஒரு நாட்டில் மட்டும் வேலையின்மை இருக்குமானால் அரசாங்க நிதிக் கொள்கையை உபயோகித்துத்தான் அதைச் சீராக்கவேண்டும். அட்லான்டிக் சமுதாய உறுப்பு நாடுகள் ஓரளவுக்கு அரசாங்க நிதி இயலைப் பொறுத்தவரை சுதந்திரமான கொள்கையைக் கடைப் பிடிக்கலாம் என்று இங்கிரம் அபிப்பிராயப்படுகிறார். இப்போது அந் நாடுகள் அனுபவிக்கும் அளவுக்கு அச் சுதந்திரம் இருக்கக்கூடும். வேலையின்மையைப் போக்க முற்படும் ஒரு நாடு பற்றுக்குறை நிதி நிர்வாகத்தில் ஈடுபடலாம். ஆனால், இப்போது அதைச் செய்வதற்கும், அந்தச் சூழ்நிலையில் அதைச் செய்வதற்கும் ஒரு குறிப்பான வித்தி யாசம் உள்ளது. அதிகமாகச் செய்யப்படும் செலவைப் புதிதாக உற்பத்தியாகும் கடன் செலாவணிமூலம் செய்யமுடியாது. பொது மூலதன அங்காடியில் அரசாங்கம் தன் பத்திரங்களை வசீகரமான வட்டி வீதத்துக்கு வெளியிட்டுப் பணத்தைப் பெற்றுதான் அச் செலவு களைச் செய்யவேண்டும். அரசாங்கம் எவ்வளவு அதிகமான கடன் தொகையைப் பெற நினைக்கிறதோ, அவ்வளவு வசீகரமான வட்டியைத் தரத் தயாராக இருக்கவேண்டும். எனவே, வேலையின்மையைத் தீர்க்கும் திட்டத்தின் செலவு அதிகமாகும். பணத்தின் அளிப்பை

அதிகமாக்கிச் செய்வதைவிட அச் செலவு அதிகமாகத் தெரியும். செலவு அதிகமாகத் தெரிவது, தன் கடன் வாங்கும் யோக்கியதையைப் பாதுகாப்பது ஆகிய இரண்டுமே இத்தகைய விரிவு நடவடிக்கைகளில் ஈடுபடும் அரசாங்கங்களை அதிகம் செலவு செய்யாமல் தடுக்கும்.

அரசாங்க நிதிச் சுதந்திரத்தின்மீது இதனால் வைக்கப்பட்டுள்ள வரம்பு மிகையாகத் தோன்றக்கூடும். தன் கடன்பெறும் யோக்கிய தையை பாதிக்காமல் இருக்கும் வரையில்தான், தன் வருவாய்க்கு மிகையாகக் கடன் வாங்கிச் செலவு செய்ய ஓர் அரசாங்கத்தால் முடியும். அதாவது அது கடன் வாங்கக்கூடிய தொகை, அதன்மீது வட்டியும் கடன் தீர்க்கும் செலவுகளும், அவ்வரசாங்கம் செலுத்தக் கூடிய அளவில் இருக்கவேண்டும். ஒரு வலிமையுள்ள அரசாங்கத்தின் வரிவிதிக்கும் திறனையும் வேலைகள் அதிகமாவதன்மூலம் வருமான வரிகள் அதிகமாகக்கூடியதையும் எடுத்துக்கொண்டால் இத் தொகை நிறைய இருக்கக்கூடும்.

இப்போதுள்ள முனையடித்த நாணயமாற்று வீதமுறையில் அரசாங்கங்கள் முழுநிதிச் சுதந்திரத்தைப் பெற்றிருக்கவில்லை என்பதை நினைவுகொள்ள வேண்டியது அவசியம். பற்றுக்குறை நிதி நிர்வாகத்துக்காக வட்டி வீதங்களைக் குறைவாக வைத்துள்ள நாட்டி லிருந்து மூலதனம் வெளியே போகும்; செலுத்துநிலை மேலும் கெடும். சேமநிதி இழப்பைத் தடுக்காவிட்டால், நாணய மதிப்புக் குறைக்கப்படும் என்ற பயம் மேலும் மூலதன ஓட்டத்தைப் பலப் படுத்தும். எனவே, பிறநாடுகளுடன் பொருந்துமாறு இருக்கும் பண, நிதிக் கொள்கைகளை அந் நாடு கடைப்பிடிக்கவேண்டும் அல்லது வாணிப, நாணயமாற்று விவகாரங்கள்மீது கட்டுப்பாடுகளை விதிக்க வேண்டும். கடுமையான, திறனுடைய நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை வைத்திருந்தால்தான் நிதித்துறையிலும் பணத்துறையிலும் முழுச் சுதந்திரம் இருக்கமுடியும்.

### இந்த யோசனை நடக்குமா?

அட்லான்டிக் சமுதாயம் பணத்துறையிலும் நிதித்துறையிலும் ஒன்றுபடுவது அரசியல் சாத்தியமானதுதானா? சந்தேகம் என்பது தான் நாம் குறைந்தபட்சம் கூறக்கூடியது. மத்திய பாங்குகளைப் பொறுத்தவரையில் தாங்கள் சுதந்திரமாகச் செயல்படுவது என்று எண்ணுவது மாயை என்பதை அவை தம் அனுபவ உண்மைமூலம் புரிந்துகொள்ளும். ஆனால், தேசிய அரசாங்கங்கள், முழுவேலை நிலை, பொருளாதார வளர்ச்சி ஆகிய தம் குறிக்கோள்களை அடைவதை ஆள் சார்பற்ற அங்காடிச் சக்திகள் நிர்ணயிப்பதை ஒப்புக்கொள்ளுமா? ஒப்புக்கொண்டால் மிக முக்கியமான பொருளாதாரக் கொள்கையில்

தங்கள் மேலாண்மையை அவை கைவிடவேண்டும். மேற்கு ஐரோப்பாவின் ஆறு நாடுகள் தம் இறக்குமதி வரிகளை இணைத்து அவற்றின் ஒருமைப்பாட்டை மேலும் பலப்படுத்த ஒப்புக்கொண்டுள்ளன என்பது உண்மையே. ஆனால், அவை இம் முடிவுக்கு வர வலிமை மிக்கதும் விசேஷமானதுமான அரசியல், பொருளாதாரக் காரணங்கள் இருந்தன. இதேபோல, அதைவிடப் பெரிய எண்ணிக்கையில் நாடுகள் ஒன்றுகூடி இதைவிட முக்கியமாகக் கருதப்படும் விசேஷ உரிமைகளைத் தாமாகக் கைவிட முன்வரக்கூடிய சூழ்நிலை ஏற்படுவது அவ்வளவு சாத்தியமில்லை. இன்னும் நாம் எண்ணிப் பார்க்கக்கூடிய சில காலத்துக்கு அட்லான்டிக் சமுதாயம் முழுவதும் நிதித்துறையில் இணைவது என்பது சாத்தியமான யோசனை அன்று. பின்னர் ஒரு காலத்தில் இது நேருமோ, என்னவோ. ஆனாலும் கோட்பாட்டளவில் இது கருதத்தக்க ஓர் அருமையான யோசனை; மேலும் இதில் சிறப்பும் உண்டு. இதை ஆழ்ந்து பரிசீலிக்க வேண்டும். பரிசீலித்தால் இதற்கு ஆதரவு கிட்டக்கூடும்.

## ஒரு பல-செலாவணித் திட்டம்

மிக முக்கியமான விஷயங்களில் தம் மேலாண்மையை விட்டு கொடுக்க அரசாங்கங்கள் விரும்புவதில்லை. ஆதலின் இப்போதுள்ள பன்னாட்டுப் பண முறையை அடியோடு மாற்றும் சீர்திருத்தங்களைவிட அதைச் சிறிதளவு மாற்றும் அல்லது திருத்தும் யோசனைகளை அதிகமான நாடுகள் ஒப்புக்கொள்ளும். ஒரு சில திருத்தங்கள் செய்யப்பட்டாலும் இப்போதுள்ள முறையில் மேலாண்மை கைவிடப் படுவதில்லை. கூறப்பட்ட பல யோசனைகளில், சேமநிதிச் செலாவணிக் கோட்பாட்டின் அடிப்படையைப் பரவலாக்கும் யோசனைதான் மிகக் குறைவான அமைப்பு மாறுதல் அல்லது நடைமுறை மாறுதலை ஏற்படுத்தும்.

இப்போது, டாலர், 'பவுன் ஆகிய இரு செலாவணிகள் மட்டுமே, பொன்னுக்குப் பதிலாகப் பன்னாட்டுச் சேமநிதிகளாக வைத்திருக்கப் படுகின்றன. வேறு செலாவணிகளும் இதற்குப் பயன்படுமானால் கிடைக்கும் சேமநிதிகளின் அளவை மிகவும் அதிகரிக்கலாம். அப்போது பன்னாட்டு நீர்மைபற்றிய கவலை மறைந்துவிடும்.

இதற்கு ஏதாவதொரு செலாவணியை உபயோகித்துவிட முடியாது. சேமநிதி ஆகத் தகுதி பெற, அச் செலாவணிகள் இப்போதுள்ள செலாவணி வீதங்களில் மாற்றுரிமை நிச்சயமாகப் பெற்றுள்ளன என்ற நம்பிக்கையைத் தோற்றுவிக்கவேண்டும். இறுதியில், சமன் மதிப்புக்கு அவற்றைப் பொன்னாக மாற்றவும் இயலும் என்ற நம்பிக்கையும் இருக்கவேண்டும். இதன்படி பார்த்தால் தகுதியுள்ள செலாவணிகள்

சுமார் அரை டஜன்தான் தேறும். அவை ஃபிரான்சு, மேற்கு ஜெர்மனி, இத்தாலி, நெதர்லண்ட்ஸ், பெல்ஜியம், ஸ்விட்ஜர்லண்டு ஆகியவையும் மேற்கு அரைக் கோளத்தில் கனடாவும் ஆகிய நாடுகளின் செலாவணிகளே.

### செய்யவேண்டிய மாறுதல்கள்

இந்த யோசனைப்படி சீர்திருத்தம் செய்ய ஒரு சிறு மாறுதல் அவசியமாகிறது.[6] ஆதாரச் செலாவணிக் கேந்திரங்கள் ஆக விரும்பும் நாடுகள் நிலையான ஒரு விலைக்கு அயல்நாட்டு மத்திய பாங்குகளுக்குப் பொன் விற்கத் தாங்கள் தயார் என்பதை அறிவிக்க வேண்டும்.[7] அதன் பிறகு, தன் செலுத்துநிலையில் உபரியைப் பெற்ற எந்த நாடும் புது ஆதாரச் செலாவணிகளில் ஒன்றையோ அதற்கு அதிகமானவற்றையோ அவ் வுபரிக்கு ஈடாகப் பெற்றால், தன் சேமநிதிகளோடு அதையும் சேர்த்துக்கொள்ளலாம். மேலும் டாலர் வைப்புகளைப் பன்னுட்டுச் சேமநிதிகளாக ஒப்புக்கொள்ளப் பல நாடுகள் தயங்குவதால், இந்த யோசனைக்கு உடனடியாக ஆதரவு கிடைக்கும். இரு செலாவணித் திட்டத்திலிருந்து பல-செலாவணித் திட்டத்துக்கு மாறுதல் இழைவாகவும் குறிப்பாகத் தெரியாதவாறும் ஏற்படவேண்டும். வெளிநாட்டினர் டாலர் நிலுவைகள் வைத்திருப்பது தொடர்ந்து அதிகமாவதில் உள்ள நஷ்ட பயத்தைக் குறைக்கும் விருப்பத்தின் விளைவாகவே அது ஏற்படவேண்டும்.

### சேமநிதி நஷ்ட பயத்தைப் பகிர்ந்துகொள்ளுதல்

உதாரணமாக, 1962-க்கு முன்னிருந்த ஆண்டுகளில் ஒரு பல-சேமநிதிச் செலாவணிமுறை அமலில் இருந்ததாகவும், அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் சேர்ந்துள்ள குறுகிய கால வெளிநாட்டுப்

[6] இந்த யோசனையை ஆதரிப்பவர்கள் சிலர் பின்வருமாறு: அமெரிக்கக் கருவூலத்தின் அண்டர் செக்ரடரியான ராபர்ட் ரூசோ (Robert Roosa); நெதர்லண்ட்ஸ் பாங்கின் டைரக்டர், டாக்டர் பாஸ்துமா (Dr. Posthuma); ஜூரிக் பல்கலைக் கழகப் பொருளாதாரப் பேராசிரியர் ஃபிரெட்ரிக் ஏ. லுட்ஸ் (Friedrich A. Lutz). இந்த யோசனையின் சிறப்புப்பற்றிய சுருக்கமான விளக்கத்துக்குப் பேராசிரியர் லுட்ஸின் இப் பொருளைப்பற்றி எழுதிய தனி நூலைப் பார்க்கவும். *The Problem of International Liquidity and the Multiple-Currency Standard*, Essays in International Finance No. 41. Published 1963 by International Finance Section, Princeton University.

[7] லுட்ஸின் அதே நூல் பக்கம் 13 பார்க்க. பல-செலாவணிக் கோட்பாட்டை ஆதரிக்கும் சிலர் பொன் உத்தரவாதம் ஒன்று வேண்டும் என்று யோசனை கூறியுள்ளனர். பேராசிரியர் லுட்ஸ் இதற்கு ஒப்பவில்லை. தேவைப்படும்போது நாணயமதிப்புக் குறைக்கும் செலவு அப்போது மிகவும் அதிகம் ஆகும் என்றும் அதனால் இப்போதுள்ள நாணயமாற்று வீத அமைப்பு அப்படியே உறைந்துவிடும் என்றும் அவர் கூறுகிறார்.

பொறுப்புகள் அந்த இரண்டு நாடுகளுக்குப் பதிலாக, இவற்றோடு இப்போது கூறிய ஏழு நாடுகளுமாக, ஒன்பது நாடுகளில் பரவி யுள்ளது எனவும் கொள்வோம். குறுகிய கால உரிமைகள் இவ்வாறு மறு பங்கீடு செய்யப்படுவதால் பொன் சேமநிதிகளுக்கும் சேமநிதிப் பொறுப்புகளுக்கும் உள்ள வீதாசாரம் எப்படி மாறும் என்பதை 27·1 பட்டியல் காட்டுகிறது.

## பட்டியல் 27·1
## குறுகியகாலப் பன்னாட்டுப் பொறுப்புகளின் மறுபங்கீட்டின் விளைவு

(பிலியன் டாலர்களில், 1962 டிசம்பரில் இருந்தாற்போல)

| | அமெரிக்கா | பிரிட்டன் | ஒன்பது நாடுகள்* |
|---|---|---|---|
| 1. பொன் இருப்புகள் | 16·0 | 2·9 | 34·1 |
| 2. அதிகாரபூர்வமான குறுகியகால வெளிநாட்டுப் பொறுப்புகள் | 12·1 | 6·8 | 18·9 |
| 2-க்கும் 1-க்கும் விகிதம் | 0·7 | 2·07 | 0·55 |
| 3. மொத்த குறுகியகால வெளி நாட்டுப் பொறுப்புகள் | 20·1 | 9·8 | 29·9 |
| 3-க்கும் 1-க்கும் விகிதம் | 1·26 | 3·37 | 0·88 |

* அந்த ஒன்பது நாடுகள் பின்வருமாறு: அமெரிக்கா, பிரிட்டன், கனடா, பெல்ஜியம், ஃபிரான்சு, மேற்கு ஜெர்மனி, இத்தாலி, நெதர்லண்ட்ஸ், ஸ்விட்சர் லந்து.

**மூலம்** ; International Financial Statistics.

அமெரிக்காவின் பொன் சேமநிதிகளின்மீது இருந்த அதிகார பூர்வமான உரிமைகள் அச் சேமநிதிகளில் 70 சதவீதத்துக்கு இருந்தன ; பிரிட்டனுக்கு இதற்கு இணையான எண்ணிக்கை 207 ஆக இருந்தது. இந்த உரிமைகளை ஒன்பது நாடுகளிடையே பங்கிட்டால் குறுகியகால அதிகாரபூர்வமான பொறுப்புகள் மொத்தப் பொன் சேமநிதிகளில் 55 சதவீதம்தான் இருக்கும்.[8] தனியார் வசமுள்ள பொறுப்புகள் ஒரு நாட்டின் பணத்துறை அதிகாரிகளுக்கு விற்கப் படுவதன்மூலம் எளிதில் அதிகாரபூர்வமான பொறுப்புகள் ஆகிவிடும் ஆதலின், பொன் சேமநிதிக்கு மொத்த குறுகியகால வெளிநாட்டுப்

[8] 1962-ல் இங்கிலாந்து, அமெரிக்கா அல்லாத ஏழு நாடுகளில் ஒன்றிலும் குறுகியகால வெளிநாட்டுப் பொறுப்புகள் குறிப்பிடத்தக்கவாறு இல்லை. எனவே, இவ்விரு நாடுகளின் எண்ணிக்கையை ஒன்பது நாடுகளின் மொத்த சேமநிதிப் பொறுப்புகளாக எடுத்துக்கொள்ளலாம்.

பொறுப்புகளின் விகிதத்தை மேலும் முக்கியத்துவம் வாய்ந்ததாக எடுத்துக்கொள்ளலாம். இந்த மொத்தப் பொறுப்பு, அமெரிக்காவில் 126 சதவீதம் ; பிரிட்டனுக்கு, 337 சதவீதம். ஒன்பது நாடுகளிடை யேயும் பங்கிட்டால், இது 88 சதவீதம்தான். சேமநிதிகளுக்குப் பொறுப்புகள் இருக்கும் விகிதம் அதிகமாக இருந்தால் பன்னாட்டுப் பணத் திடநிலைமீது நம்பிக்கை தளரும். எனவே, சேமநிதிச் செலா வணிகளின் எண்ணிக்கையைப் பெருக்குவது இந்த அபாயத்தைக் குறைக்கிறது.

இந்த முறையைத் திடீரென ஒரே சமயத்தில் ஏற்படுத்த முடியாது. அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் உள்ள நிலுவைகளை அவற்றை வைத்திருப்பவர்கள் பொன்னாகத் திருப்பிப் பெற்று அதை வேறொரு நாட்டில் வைக்கவேண்டும். இவ்விரு நாடுகளின் சேமநிதி நிலைமையை அது தளரச் செய்துவிடும். ஆனால், படிப்படியாக இம் முறையை ஏற்படுத்தலாம். டாலர், ஸ்டர்லிங் நிலுவைகள் மேலும் சேருவதை அதன்படி நிறுத்தலாம். அதற்கு, புது ஆதாரச் செலாவணி நாடுகளுக் கெதிராகச் செலுத்துநிலை உபரிபெறும் நாடுகள், அதைப் பொன், டாலர் அல்லது பவுன் வைப்புகளாகப் பெற்றுக்கொள்ளாமல், அந்த ஆதாரச் செலாவணி நாடுகளிடமே நிலுவைகளாக வைத்திருக்க ஒப்புக்கொள்ள வேண்டும். இப்படிச் செய்தால், உலகப் பொன் சேமநிதிகளை ஈடாகக் கொண்ட பொறுப்புகளைப் பல நாடுகள் பகிர்ந்துகொள்வதோடு, உள்ள பன்னாட்டுச் சேமநிதிகளை நாட்டுக்குநாடு மாற்றிக்கொள்ளாமல் அவற்றின் மொத்தத் தொகையை அதிகரிக்க வழியுண்டாகும்.

### சமீபகால முன்னேற்றங்கள்

1960 தொடங்கிய சில ஆண்டுகளில் பல-செலாவணி முறை யைத் துவக்கிவைக்கப் பல முயற்சிகள் உண்மையில் எடுக்கப்பட்டன. 1961 பின் பகுதியில், ஜெர்மனியின் மார்க்கு தாற்காலிகமாகத் தளர்ச்சி அடைந்தபோது, அமெரிக்கக் கருவூலம் $ 55 மிலியனுக்கு மார்க்குகளை வாங்கியது. இத் தொகையைக் கொண்டு பின்னர் டாலர்மீது அழுத்தம் ஏற்பட்டபோது அதற்கு ஆதரவு தரப் பயன்படுத்தியது. அழுத்தம் தீர்ந்ததும் மீண்டும் டாலர் இருப்புகளை அதிகமாக்கிக்கொண்டது. 1962-ல் இத்தாலி பாங்கு அமெரிக்கக் கருவூலத்துக்கு இத்தகைய ஆதரவு நடவடிக்கைகளில் பயன்படுத்துவதற்காக $ 150 மிலியன் கடன் கொடுத்தது.

இதைவிட முக்கியமான ஒரு முயற்சி 1962-ல் செய்யப்பட்டது. அப்போது ஃபெடரல் ரிசர்வ் அதிகாரிகள் ஏழு வெளிநாட்டு மத்திய பாங்குகளுடனும் பன்னாட்டுத் தீர்வு பாங்குடனும் மொத்தம் $ 700 மிலியனுக்கு வரிசையாகப் பல பரஸ்பரக் கடன்களைக் கொடுப்பதற்கு

அதாவது 'பண்டமாற்று' (swap) வசதிகளைச் செய்துகொள்வதற்கு ஒப்புக்கொண்டது. உதாரணமாக, ஃபெடரல் ரிசர்வும் இங்கிலாந்து பாங்கும் ஒன்றையொன்று கேட்டுக்கொண்டதும், தன் செலாவணியை மற்றதன் செலாவணிக்கு ஈடாக, மூன்று மாத காலத்துக்கு $ 50 மிலியன்வரை தர ஒவ்வொன்றும் ஒப்புக்கொண்டன. டாலருக்கு ஆதரவு தேவையென்றால் இங்கிலாந்து பாங்குக் கணக்கில் $ 50 மிலியனை உதாரணமாக $ 2·80/£ வீதத்தில் ஃபெடரல் ரிசர்வ் வரவு வைக்கும். அதே சமயம் இங்கிலாந்து பாங்கு ஃபெடரல் ரிசர்வின் கணக்கில் சுமார் £ 18 மிலியனை வரவு வைக்கும். அமெரிக்காவின் வெளிநாட்டுச் செலுத்தல்கள் தாற்காலிகமாகப் பாதகமாக இருப்பதால் அன்னியச் செலாவணிகளின் தேவை அதிகமாக இருந்தால், தான் கடன் வாங்கிய ஸ்டர்லிங்கை ஃபெடரல் ரிசர்வ் விற்கமுடியும். இதனால் பொன் ஏற்றுமதியும், வெளிநாட்டார் வைத்துள்ள டாலர் நிலுவைகள் அதிகமாவதும் அவசியமில்லாமல் போகின்றன. மூன்று மாதங்கள் கழித்து இவ் விவகாரம் திருப்பப்படும். அதாவது கடன்கள் திருப்பித் தரப்படும். மீண்டும் அவசியம் ஏற்பட்டால் மறுமுறை ஒரு புது 'பண்டமாற்று" ஏற்பாடு செய்துகொள்ளப்படும்.

1963 மே மாத முடிவில் தங்கள் பரஸ்பரக் கடன் வசதிகளை $ 50 மிலியனிலிருந்து $ 500 மிலியனாக உயர்த்துவதாக ஃபெடரல் ரிசர்வும், இங்கிலாந்து பாங்கும் அறிவித்தன. இதன் விளைவாக ஃபெடரல் ரிசர்வுக்கோ அதன் கூட்டாளிகளுக்கோ கிடைக்கக்கூடிய மொத்த பரஸ்பரக் கடன்களின் தொகை $ 700 மிலியனிலிருந்து $ 1,150 மிலியனாக உயர்ந்தது.

ஜெர்மனியின் செலுத்துநிலை தாற்காலிகமாக அதற்குப் பாதகமாக மாறியபோது மார்க்குகளை அமெரிக்கா பெற்றதைப்பற்றி முதலில் குறிப்பிட்டோம். இந் நடவடிக்கைதான் பல-சேமநிதிச் செலாவணி அமைப்பின் தொடக்கம். அதன் பின்னர் கடன்களை மாற்றிக் கொள்ளும் 'பண்டமாற்று' ஏற்பாடுகள் வந்தன. இதன் பயனாகப் பன்னாட்டுத் தீர்வுகளுக்கு உபயோகப்படும் செலாவணிகளின் எண்ணிக்கை அதிகமாயிற்று. மார்க்குகள், லீரே (lire) மற்றும் பிற வலிய செலாவணிகளில் செலுத்துநிலை உபரிகளைத் தீர்த்துக்கொள்ளும் வழக்கம் பரவினால் இரு சேமநிதிச் செலாவணி முறையிலிருந்து பல-சேமநிதிச் செலாவணிமுறை ஏற்பட்டுவிடும். இம் மாற்றம் விரைவாக ஏற்படவேண்டுமானால், வலிமை மிக்க செலாவணிகள் உடைய நாடுகள், இப்போது டாலர்களை ஓர் அதிகபட்சமான நாணய மாற்று வீதத்தில் அளிக்க ஒப்புக்கொண்டுள்ளதற்குப் பதிலாக ஒரு குறிப்பிட்ட விலையில் பொன்னை விற்கத் தாம் தயாராக இருப்பதாக அறிவிக்கவேண்டும்.

**மதிப்பீடு**

இப்போதுள்ள பொன்–மாற்றுத் திட்டத்தை பலச் சேமநிதிச் செலாவணித் திட்டமாக மாற்றுவதனால் பன்னாட்டுப் பணப் பிரச்சினைகள் இரு வழிகளில் குறையும். முதலாவதாகப் புது அன்னியச் செலாவணிச் சேமநிதிகள் ஏற்படுகின்றன. இதனால் மொத்த உலகச் சேமநிதி களின் அளவு அதிகரிக்கும். ஒரு புதிய சேமநிதிச் செலாவணியைப் பெறும் நாடு தன் சேமநிதிகளை இதனால் அதிகமாக்கிக்கொள்கிறது; எந்த நாட்டின் செலாவணி இவ்வாறு பெறப்படுகிறதோ அந்த நாடு பொன்னை ஏற்றுமதி செய்வதற்கும் தன் டாலர் இருப்புகளைக் குறைப் பதற்கும் பதிலாகத் தன் பணத்தைத் தருவதாக வாக்குறுதிகளை அளிக்கிறது.[9] எனவே, கடன் கொடுத்தவர், வாங்கியவர் இருவருடைய சேமநிதிகளும் அதிகமாகின்றன. இதற்கு மாறாக, கடன் வாங்குபவர் தன் கடன் வாங்கும் சக்தியைப் பிரயோகிக்கமட்டும் முடிகிற கடன் விவகாரங்களைப் பாருங்கள். இவற்றில் கடன் கொடுப்பவருடைய சேமநிதிகள் அதிகரிப்பதில்லை.[10] கடன் வாங்கியவர் அதைத் திருப்பித் தரவேண்டிய பொறுப்பே சேமநிதிச் செலாவணியாக இல்லாதபோது இவ்வாறு ஏற்படுகிறது. உதாரணமாக ஒரு நாடு பன்னாட்டுச் செலாவணி நிதியில் தன் கடன் வாங்கும் உரிமையைப் பயன்படுத்தும் போதும், மற்றொரு நாட்டிலிருந்து டாலர் வைப்புகளைக் கடன் வாங்கும்போதும் இவ்வாறு கடன் கொடுத்தவருடைய சேமநிதிகள் அதிகரிப்பதில்லை.

உலகின் பண அமைப்பின்மீது மேலும் நம்பிக்கை ஏற்படுவதால் இத் திட்டத்தினால் மற்றொரு நன்மை உண்டாகிறது. மேலும் அதிக மான பொன் சேமநிதிகள்மீது சேமநிதிச் செலாவணிப் பொறுப்புகள் பங்கிடப்படுவதாலும் உலகச் சேமநிதிகள் போதாதோ என்ற கவலை தீருவதாலும் இந் நம்பிக்கை அதிகமாகிறது. நன்மை என்னவென்றால், ஊகவாணிப மூலதன இடப்பெயர்ச்சிகள் குறையும். வட்டி ஆர்பிட் ரேஜ் தொடர்ந்து இருந்தபோதிலும், உலகச் சேமநிதிகள் அதிகமாகி விட்டபடியால் அத்தகைய மூலதனப் பெயர்ச்சிகளைத் தாங்கிக் கொள்வது மேலும் எளிதாகிறது. குறுகிய காலத்தில், பொன்னுக்குத்

[9] வெளிநாட்டாருக்குச் சொந்தமான வைப்புகள், அவற்றை வைத்திருக்கும் நாட்டுவாசிகளுக்கு (சாதாரணமாக பாங்குகள்) அவை வைக்கப்பட்டுள்ள நாடு களின் பாங்குகள் கேட்டவுடன் அளிக்கவேண்டிய பொறுப்புகள் ஆகும். எனவே, வைப்புகளை வைத்திருக்கும் நாடு, அவை வைக்கப்பட்டிருக்கும் நாட்டுக்குக் கடன் கொடுக்கிறது. தனக்கு வரவேண்டிய தொகைக்குப் பொன்னையோ, ஒரு சேமநிதிச் செலாவணியையோ கேட்காமல், பின்கூறிய நாட்டின் பொறுப்புகளை அது வைத்துக்கொள்கிறது.

[10] Lutz, மேற்கோள் காட்டிய நூல், 6–9 பக்கங்களைப் பார்க்க; இந்த வேறு பாட்டை விவரமாக விளக்கியிருக்கிறது.

தன் வெளிநாட்டுப் பொறுப்புகளின் விகிதம் உயர்வதை அடக்க ஒரு சேமநிதிச் செலாவணி நாடு மற்றொன்றில் உள்ள தன் வைப்புகளைப் பயன்படுத்தக்கூடும். இதைத் தவிர, தேசிய பண, நிதிச் சுதந்திரத்துக்கும், செலுத்துநிலை ஒழுங்கு கட்டுப்படுவதற்கும் உள்ள முரண்பாடு தொடர்ந்து இருக்கும்.

## பொன்னின் விலையை உயர்த்துதல்

உலக நீர்மையை அதிகரிக்கும் பல வழிகளில் மிகவும் எளியது, முக்கியமான நாடுகள் சேர்ந்து ஒப்பி ஒரே சமயத்தில் பொன்னின் விலையை உயர்த்துவதுதான். இப்போதுள்ள அவுன்ஸ் $35 என்ற விலையை இரட்டிப்பாக்கி அவுன்ஸ் $70 என்று ஆக்கினால், தானே உலகப் பொன் சேமநிதிகளின் மதிப்பு இரண்டு மடங்காகும். மொத்த சேமநிதிகளின் தொகை இதே அளவுக்கு அதிகமாகாவிட்டாலும், குறிப்பிடத்தக்கவாறு உயரும். 1962 முடிவில் மொத்த சேமநிதிகள்—அதாவது பொன், அன்னியச் செலாவணி, மொத்த IMF நிலைகள் ஆகியவை—$78·7 பிலியனாக இருந்தன. அதில் பொன் மட்டும் $39·2 பிலியன்.[11] பொன்னின் விலையை இரட்டித்தால் இதன் தொகை $117·9 ஆக அதிகரிக்கும்; அதாவது சரியாக 50 சதவீதம் அதிகரிக்கும். வெறுமனே மக்களாகச் சேர்ந்து முடிவு செய்து இதை விளைவித்து விடலாம். மத்திய பாங்குகள், கருவூலங்கள் ஆகியவற்றின் பேரேடுகளில் சில எளிய எண்ணிக்கை மாற்றங்களைப் பின்னர் செய்ய வேண்டும். இதைச் செய்தால், பன்னாட்டுக் கடன்கள்மூலம் சேமநிதிகளைக் கஷ்டத்துடன் அதிகரிக்கும் பல வழிகள் அனாவசியமாகின்றன. அப்படியானால் அவற்றுக்குப் பதிலாக இந்த எளிய நேரிடையான முறையை ஏன் கையாளக்கூடாது?

போதுமான அளவு சேமநிதிகளை உண்டாக்க முக்கியமாக உதவுவதோடு, இந்த யோசனையில் சிறந்த தருக்க நியாயமும் (logic) உள்ளது. ஹேரட் (Harrod) வாதிடுவதுபோல, பன்னாட்டு கடன்களை இறுதியில் தீர்க்கும் பணியை மனித சமுதாயம் பொன்னுக்கு அளித்திருக்கிறது. இப் பணியைப் பொன்னுக்கு அளித்தபின், பொன்னுக்கு முழுமையாக மாற்றுப் பொருளாகப் பயன்படக்கூடிய வேறு எதுவும் இல்லாமல் இருக்கும்போது, தன் பணியைத் திறம்படச் செயலாற்றப் போதுமான மதிப்பைப் பொன்னுக்குக் கொடுக்காமல் இருப்பது முட்டாள்தனமல்லவா?[12] மேலும் 1934-க்குப்பின் விலை கணிசமாக உயராத ஒரே பொருள் பொன்தான். பொருள்களின் அளவில் கூறினால்

[11] International Financial Statistics, June, 1963.

[12] Sir Roy Harrod, 'The Role of Gold Today,' *South African Journal on Economics* (March, 1958).

டாலரின் மதிப்பு, போருக்குமுன் இருந்ததில் பாதிக்குமேல் குறைந்து விட்டது; பிற செலாவணிகளின் மதிப்பு இதைவிட அதிகமாகக் குறைந்திருக்கிறது. எனவே, பொன்னின் பணவிலையை நிறைய உயர்த்தி, பொன்னையும் பிற பொருள்களின் நிலைக்குக் கொண்டுவர வேண்டியது பொது அறிவு கூறும் யோசனையாகும்.[13] (முன்னரே கூறியபடி பொன்னின் விலையை உயர்த்துவதாக இருந்தால் அதை எல்லா நாடுகளும் செய்யவேண்டும். அமெரிக்காமட்டும் செய்தால், அது டாலரின் மதிப்பைக் குறைத்ததாகும். அவ்வளவே.)

ஆனால், பொன்னின் விலையை இரட்டித்தால், இப்போதுள்ள பொன் சேமநிதிகளின் மதிப்பு இரண்டு மடங்காவதோடு பிற விளைவு களும் ஏற்படும். ஆண்டுதோறும் உற்பத்தியாகும் பொன்னின் பண மதிப்பும் இருமடங்காகும். எனவே, பொன் சேமநிதிகள் ஆண்டு தோறும் அதிகரிப்பதும் இருமடங்காகும். பொன்னை உற்பத்தி செய்யும் செலவும் அதே சமயம் இருமடங்கானலொழிய, பொன் உற்பத்தியை அதிகரிக்கத் தீவிரமான தூண்டுதல் இருக்கும். மிகக் குறைவாக மதிப்பிட்டால், பொன் உற்பத்தி பாதி அளவு அதிகரிக்கக்கூடும். எனவே, இப்போதைய பொன் உற்பத்தியின் மொத்த மதிப்பு மூன்று மடங்காக அதிகரிக்கும். இறுதியாக, பொன்னின் விலையேற்றத்தை எதிர்பார்த்துப் பொன்னைத் தேக்கிவைத்துள்ள தனிநபர்கள் விலை உயர்ந்தபின் இலாபத்தைப் பெறத் தம் பொன் இருப்புகளைப் பண அதிகாரிகளிடம் கொடுத்துவிடுவர். இதனாலும் பொன் சேமநிதி அளவு அதிகரிக்கும்.

பொன்னின் விலையை உயர்த்தினால் (உதாரணமாக இரட்டித்தால்) ஏற்படக்கூடிய இரண்டு நேரிடை விளைவுகளின் வேறுபாட்டை இங்குக் குறிப்பிடவேண்டும். முதல் விளைவு, உடனடியான விளைவு, ஒரே ஒரு முறை ஏற்படுவது; உலகப் பொன் சேமநிதிகளின் மதிப்பு இருமடங்கு ஆகும். தனியார் வசம் தேங்கியுள்ள பொன் வெளிவருவது நிறைய இருக்கும்; ஆனால், எவ்வளவு என்று தெரியாது. அதையும் சேர்த்து உலகத்தின் மொத்தச் சேமநிதிகளின் அளவு 50 சதவீதத்தைவிட அதிகமாக உயரும். இரண்டாவது விளைவு தொடர்ந்து ஏற்படுவது; அது காலவரம்பின்றி ஏற்படும்; ஆண்டுதோறும் பொன் இருப்பில் சேரும் மதிப்பு இருமடங்காகும்; சில காலத்துக்கு அது மும்மடங்கும் ஆகலாம். இவ்விரு விளைவுகளுக்கும் இடையான வேறுபாட்டை மறக்கக்கூடாது. ஏனெனில், ஒரே ஒருமுறை ஏற்படும் விளைவு காரண

[13] Sir Roy Harrod, 'The Dollar Problem and the Gold Question' கட்டுரையைப் பார்க்க. நூல், *The Dollar in Crisis*, Seymour E. Harris, ed. Published 1961 by Harcourt, Brace & World, Inc., New York.

மாக எவ்வளவு தூரம் தம் சேமநிதி நிலைமையை மாற்றலாம் என்பதைத் தான் பண அதிகாரிகள் நிச்சயிக்கமுடியுமேயன்றித் தொடர்ந்து பொன் சேமநிதிகளின் மதிப்பு அதிகரிப்பதை அவர்கள் ஒன்றும் செய்ய முடியாது ; எவ்வளவு பொன் வருகிறதோ அவ்வளவுதான் அவர்களுக்குக் கிடைக்கும்.

**சில மாற்று வழிகள்**

ஒரு நாட்டின் பண அதிகாரிகள் விரும்பினால், பொன் சேமநிதி களின் பணமதிப்பை இரட்டிப்பதனால் தம் சேமநிதி நிலையை ஒரு சிறிதும் மாறாமல் தடுக்கமுடியும். தம் பொன் இருப்பின் மதிப்புயர்வி லிருந்து வரும் இலாபத்தை ஏதாவதொரு வகையில் பயனற்றதாக்கி இதைச் செய்யமுடியும். அதற்கு எளிய ஒரு வழி மத்திய பாங்கின் வசமுள்ள பொன்னில் பாதியைக் கருவூலத்துக்கு மாற்றி, அதைக் கருவூலத்தார் எதற்கும் கொடுக்காமல் வைத்திருக்குமாறு செய்யலாம்.[14] மத்திய பாங்கின் பண நிலைமை முன்போலவே இருக்கும் ; அதன் பொன் சேமநிதிகளின் பணமதிப்பு மாறாது ; அதன் எடைமட்டும் பாதியாகி யிருக்கும்.

சேமநிதிகள் அதிகமானால் பணவீக்கம் ஏற்படும் என்று பணத் துறையில் அடக்கமான கொள்கையுடைய சிலர் பயப்படுவார்கள். பொன்னின் விலை இரட்டிப்பதனால் சேமநிதிகள்மீது முதலில் ஏற்படும் விளைவை இவ்வாறு செய்வது அவர்களுக்கு மிகவும் பிடித்திருக்கும். ஆனால், தேக்கமும் வேலையின்மையும் தீர விரிவுக்கொள்கை வேண்டும் என்று கூறுபவர்கள் இதை ஒப்புக்கொள்ள மாட்டார்கள். நாட்டுக்கு நாடு சூழ்நிலை மாறுபடுகிறது ; எனவே, சிலநாடுகள் பொன்னைப் பயனற்றதாகச் செய்யும் ; சில செய்யமாட்டா.

இப்போதுள்ள ஆதாரச் செலாவணி நாடுகள் மற்றொரு மாற்று வழி யைக் கடைப்பிடிக்கலாம். பொன்னின் மதிப்புயர்வினால் வரும் இலாபத்தை அதிகாரபூர்வமான நிலுவைகளை வைத்திருப்பவர்களுக்குக் கொடுத்து அவர்கள் கடனைத் தீர்த்துவிடலாம். பொன்னுக்கும் குறுகிய கால வெளிநாட்டுப் பொறுப்புகளுக்கும் உள்ள விகிதத்தை இது நிறையக் குறைக்கும். இதனால் இந் நாடுகளின் நீர்மையில் அபி விருத்தி உண்டாகும். உதாரணமாக, அமெரிக்காவின் பொன் சேமநிதி $ 16 பிலியனிலிருந்து $ 32 பிலியனானால், இதில் $ 12 பிலியன் அதிகார பூர்வமான நிலுவைகளைத் திருப்பிக் கொடுக்கப் பயன்படுத்தினால்,

[14] இவ்வாறு பயனற்றுப்போன பொன்னைச் செலாவணியின் மதிப்பை அவசியமானபோது ஆதரிக்க ஒரு சமன்காப்பு நிதியாகப் பயன்படுத்தலாம். அல்லது, எதிர்காலத்தில் ஓர் உலக மத்திய பாங்கு ஏற்பட்டால் அதன் மூலதனத் துக்காகக் கட்டலாம். அல்லது, மேலும் சேமநிதிகள் பின்னர் அவசியமானால் அவற்றை மத்திய பாங்குக்கே மாற்றும்வரை வைத்திருக்கலாம்.

அதிகாரபூர்வமான பொறுப்புகளின் சுமை இல்லாது $ 20 பிலியனுக்கு அமெரிக்காவில் பொன் சேமநிதிகள் இருக்கும். மீதமுள்ள அதிகார பூர்வமற்ற குறுகியகால வெளிநாட்டுப் பொறுப்புகள் சேமநிதிகளில் 50 சதவீதம்தான் இருக்கும். (1962-ல் $ 10 பிலியனாக இருந்த இந்தப் பொறுப்புகள்தான் மொத்தப் பொறுப்புகளாக இனி இருக்கும்.)

கூர்மையாகக் கவனித்தால், இம்மாதிரிச் செய்வதால், நடப்புப் பொன் உற்பத்தியின் மதிப்பு உயர்வதன் ஒரு விளைவோடு சேர்த்துக் கருதினால், மற்றொரு பயனும் உண்டாகுவது தெரியும். பொன் சேம நிதிகள் ஆண்டுதோறும் அதிகமாகும் தொகை குறைந்தபட்சமாக இரு மடங்காவது ஆகும். மொத்தச் சேமநிதிகளில் இப்போது சேரும் தொகைகளில் பாதி பொன் உற்பத்தியினாலும், பாதி டாலர் நிலுவைகள் உயருவதனாலும் ஏற்படுவதால், இனி டாலர் நிலுவைகள்மூலம் சேமநிதி அதிகமாவதை விட்டுவிடலாம். ஏற்கெனவே உள்ள அதிகார பூர்வமான நிலுவைகளை ஆதாரச் செலாவணி நாடுகள் பொன்னாக மாற்றிக்கொண்டுவிட்டால், அப்போது உலகச் சேமநிதிகள் இனி அதிகமாவது முழுவதும் பொன் உற்பத்தியிலிருந்தே வரும். எனவே, பொன்-மாற்றுத் திட்டத்துக்குப் பதிலாகப் பொன் திட்டம் மீண்டும் அமையும். பொன்னின் மதிப்புயர்வினால் ஏற்படக்கூடிய முக்கிய நன்மை இதுதான் என்பது சிலருடைய கருத்து.

பொன்னின் விலையை உயர்த்தினால் அமெரிக்காவின் நிகரச் சேமநிதி நிலை மிகவும் அபிவிருத்தி அடையும். ஆனால், அதன் செலுத்துநிலைப் பற்றாக்குறையைத் தீர்க்க அது ஒன்றும் செய்யாது என்பதை இங்குக் கவனிக்கவேண்டும். இந்தப் பிரச்சினையும், உலக நீர்மை அல்லது உலகச் சேமநிதிகள் போதுமான அளவு இருப்பது பற்றிய பிரச்சினையும் வெவ்வேறு. அமெரிக்கப் பற்றாக்குறை ஆண்டு தோறும் தோன்றுவதன் காரணங்களை நீக்கினால் ஒழிய, இப் பற்றாக் குறைகள் தொடரும். பொன்னின் மதிப்பு உயர்ந்த பின்னர் உபரி நாடு களிடம் முன்னைவிட அதிகப் பொன் சேமநிதிகள் இருக்கும். எனவே, தம் டாலர் இருப்புகளை அதிகரித்துக்கொள்ள அவை விரும்பமாட்டா. எனவே, அமெரிக்கப் பற்றாக்குறைகள் தொடர்ந்து இருந்தால் அந் நாட்டின் புது மதிப்புக் கொடுக்கப்பட்ட பொன் சேமநிதிகள் நஷ்ட மடைவது அதிகமாகும்.

இறுதியாக ஒன்று: பொன்னும் அன்னியச் செலாவணியும் ஒரு நாட்டின் சேமநிதிகளில் கலந்துள்ள விகிதம் நாட்டுக்கு நாடு மாறுபடு கிறது.[15] அதிருஷ்டவசமாகப் பொன் நிறைய விகிதத்தில் உள்ள நாடு

[15] 1962 இறுதியில் பொன், அன்னியச் செலாவணி ஆகியவற்றின் சேமநிதி களின் விகிதங்கள் முழு எண்ணிக்கைகளில் பல நாடுகளில் பின்வருமாறு இருந்தன: ஸிவிட்ஸர்லந்து, 14 : 1 ; நெதர்லண்ட்ஸ், 8 : 1 ; தென் ஆஃப்ரிக்கா, 5 : 1; பெல் ஜியம், 4 : 1 ; ஃபிரான்ஸ், 2 6 : 1 ; ஜெர்மனி, 1·3 : 1 ; கனடா, 1 : 2·6 ; ஸ்வீடன், 1 : 3 ; ஜப்பான், 1 : 5.

களின் சேமநிதிகள், பொன்னின் விலை இரட்டித்தால் ஏறக்குறைய இரட்டிக்கக்கூடும். அதற்கு எதிர்க்கோடியில் ஜப்பான் போன்ற நாடுகள் உள்ளன. அவற்றின் சேமநிதிகளில் பொன் ஐந்தில் ஒரு பங்குதான். பொன்னின் விலை இரு மடங்கானால் அவற்றின் சேமநிதி நிலைமை சிறிதளவே அபிவிருத்தி அடைகிறது. இதைப்பற்றி மேச்லப் (Machlup) கூறுவது பின்வருமாறு:

> பொன்னின் விலை உயர்வைப்பற்றி அடிக்கடி ஜோசியம் கூறப்படுவதை நம்பி மத்திய பாங்குகள் தன்னலம் கருதித் தம் நிலையை அதன்மூலம் அபிவிருத்தி செய்துகொள்வதற்காகத் தம்மிடமுள்ள அன்னியச் செலாவணி இருப்புகளை எல்லாம் பொன்னாக மாற்ற முயன்றிருந்தால் இப்போதுள்ள பன்னாட்டுச் செலாவணி அமைப்பு எப்போதோ சரிந்து விழுந்திருக்கும்.[16]

**மதிப்பீடு**

இப்போதுள்ள பன்னாட்டுச் செலாவணிப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்குப் பொன்னின் விலையை உயர்த்துவது மிகவும் உதவியாக இருக்க முடியும். எல்லாவற்றுக்கும் முதலாவதாக, தொழில் வளர்ந்த நாடுகளில் பெரும்பாலானவற்றுக்கு, இன்னும் சில காலத்துக்குப் போதுமான அளவு சேமநிதிகளை அது அளிக்கும். ஆதாரச் செலாவணி நாடுகளின் சேமநிதி நிலைமையை அபிவிருத்தி செய்வதன்மூலம் அவற்றின் செலாவணிகளின் திடநிலைபற்றிய பயங்களைப் போக்கி, அதன்மூலம் ஊகவாணிப மூலதன இடப்பெயர்ச்சிகளின் அபாயத்தைக் குறைக்கும்; மேலும், நாடுகள் விரும்பினால் பொன்-மாற்றுத் திட்டத்தை முழுப் பொன் திட்டமாகவும் மாற்றிக்கொள்ளலாம்.

செலுத்துநிலை ஒழுங்கு விதிகளின்படி கையாள வேண்டிய அடக்கக் கொள்கைக்கும், நாட்டுக் கொள்கைச் சுதந்திரத்துக்கும் இடையே உள்ள முரண்பாட்டைத் தீர்க்கப் பொன்னின் மதிப்புயர்வு ஒன்றும் செய்யாது. ஏனெனில், நாணயமாற்று வீதங்கள் மாறாது இருக்கும். எனவே, தம் சேமநிதிகளின் அளவைப் பொறுத்து விரைவிலோ சிறிது காலம் கழித்தோ தம் உள்நாட்டுப் பொருளாதாரக் கொள்கைகளைத் தம் பன்னாட்டுச் செலுத்துநிலைக்கு ஏற்றவாறு மாற்றிக் கொள்ளவேண்டியிருக்கும். அமெரிக்கா அல்லது இங்கிலாந்தின் பற்றுக்குறைகள் தொடர்ந்து ஏற்படுவதைத் தடுக்கவும் பொன்னின்

[16] Fritz Machlup, *Plans for Reform of the International Monetary System*, பக்கம் 46. Published 1962 by International Finance Section, Princeton University.

விலை உயர்வு ஒன்றும் செய்யாது. ஆனால், அதற்குத் தகுந்த கொள்கையைச் செயலாற்ற மேலும் இடம்மட்டும் கொடுக்கும். சேமநிதிகள் நிறைய இருப்பதால், இந் நாடுகள் வேலை வாய்ப்புகளையும் பொருளாதார வளர்ச்சியையும் பெருக்கத் தேவையான கொள்கைகளைக் கடைப்பிடிக்கலாம். முதலில், வருமான உயர்வுகள், செலுத்துநிலைப் பற்றுக்குறையை அதிகரிக்கலாம். ஆனால், இலாபமும் விற்பனையும் பெருகியதால் தொழில்களைப் புதுப்பிக்க முதலீடு அதிகமாக ஏற்படத் தொடங்கும். எனவே, நெடுங்காலத்தில் அந் நாடுகளின் போட்டி நிலைமை அபிவிருத்தி அடையக்கூடும். இலாபம் அதிகமான சூழ்நிலை இருப்பதால் நெடுங்கால மூலதன வெளிப்போக்குக் குறைந்து வெளிநாட்டு மூலதனம் இந் நாடுகளை நோக்கி வரவும் தொடங்கலாம்.

சேமநிதிகள் அதிகமாகி, குறுகிய காலத்தில் பொருளாதார சுதந்திரம் அதிகமாகியதன் இந்த இனிமையான விளைவு ஏற்பட வேண்டுமானால் பணக் கொள்கையிலும் நிதிக் கொள்கையிலும் அரசாங்கம் அடக்கத்தைக் காட்டவேண்டும். தொழிலாளிகள் கூலிகள் விஷயத்திலும் தொழில் வணிகர்கள் விலைகள் விஷயத்திலும்கூட அடக்கத்தைக் காட்டவேண்டும். இல்லாவிட்டால் தேவையால் தூண்டப்பட்ட பணவீக்கமோ அல்லது கூலி—உற்பத்திச் செலவு பணவீக்கமோ ஏற்பட்டு வருமானங்களும் இலாபமும் உயர்வதன் சாதகமான விளைவுகளை ஒன்றுமில்லாமல் செய்துவிடும்.

பொதுவாகச் சேமநிதிகள் அதிகமாவதும், குறிப்பாக நடப்புக் காலத்து உற்பத்தி அதிகமாவதால் அவை நிலையாக அதிகமாவதும் பணவீக்கத்துக்குப் பலமான தூண்டுகோலாக இருக்கும் என்றும், பல நாடுகள் ஆவலுடன் அதை மேற்கொண்டுவிடும் என்றும் சில பொருளியல் நிபுணர்கள் அஞ்சுகின்றனர். ஆனால், திடமான பணக் கொள்கைக்குப் பலமான பொதுமக்கள் ஆதரவு இருப்பதை இவர்கள் மறந்துவிட்டனர். தவிர, அரசாங்கம் பொறுப்பற்ற முறையில் நடந்தால்தான் இப் பணவீக்கம் ஏற்படும். அவ்வாறு அரசாங்கங்கள் நடக்கும் என்பதற்குச் சான்று ஒன்றும் இல்லை. 1962-ன் பின்பகுதியிலும் 1963-ன் தொடக்கத்திலும் கூலிகளும் விலைகளும் உயர்ந்த போது மேற்கு ஐரோப்பிய நாடுகள் தம் பயத்தைத் தெரிவித்ததை உதாரணமாக நோக்கலாம். தவிர, பணவீக்கக் கொள்கைகளை எல்லா நாடுகளும் கடைப்பிடித்தாலொழிய, நாணயமாற்று வீதம் மாறுமலிருப்பதால், எந்த நாடு பணவீக்கத்தைக் கடைப்பிடிக்கிறதோ அதன் செலுத்துநிலை விரைவிலேயே பாதகமாக மாறி அப் பணவீக்கக் கொள்கையைக் கைவிடச் செய்யும்.

சேமநிதிகள் அதிகமாவதால் பணம் அதிகமாகுமோ என்ற அபாயத்தோடு நெருங்கிய தொடர்புடைய மற்றோர் அபாயம் உள்ளது:

மேலும் பொன்னின் விலை உயரும் என்று எதிர்பார்த்துப் பொன்னை ஊகவணிகர்கள் வாங்கத் தொடங்கலாம். பண அதிகாரிகள் அடக்கத்தோடு செயலாற்றி உலக விலை அளவுகளில் தராதரத் திடநிலையைக் காப்பாற்றி வந்தால், மற்றொரு பொன் மதிப்புயர்வு அவசியமாவதற்கு நெடுங்காலம் செல்லும். அதற்குள் பன்னாட்டுப் பண முறையில் அடிப்படைச் சீர்திருத்தங்களைச் செய்து அவ் விலை உயர்வை அவசியமற்றதாகச் செய்துவிடலாம். ஆனால், பொறுப்பற்ற முறையில் அரசாங்கங்கள் நடந்துகொண்டு அதனால் விலைகள் வேகமாக உயர்ந்தால் நிச்சயமாக ஊகவாணிபம் மீண்டும் தோன்றும்.

பொன்னில் ஊகவாணிபம் செய்பவர்களுக்கும், தென் ஆஃப்ரிக்கா, சோவியத் நாடு போன்ற பொன் உற்பத்தியாளர்களுக்கு அநியாயமாக ஒரு வெகுமதியையும், டாலர்களையும் பவுன்களையும் வைத்திருந்து பன்னாட்டுச் செலாவணி அமைப்பைக் காப்பாற்றிவந்த நாடுகளுக்கு அநியாயமான ஒரு தண்டனையையும் பொன்னின் விலை உயர்வு அளிக்கிறது என்பது உடனடியாக எழும் ஒரு கண்டனம். ஆனால், பொன்னில் ஊகவாணிபம் செய்பவருக்கு ஓர் இலாபத்தைத் தருவது பெரிய நஷ்டமில்லை. சோவியத் நாடு இலாபமடைந்தாலும், அதுவும் பெரிய நஷ்டமில்லை. ஏனெனில், ஹேரட் (Harrod) கூறுவதுபோல, சுதந்திர உலகம் அதைவிடப் பெரிய வெகுமதியைத் தனக்கே அளித்துக்கொள்கிறது. தென் ஆஃப்ரிக்காவைப் பொறுத்தவரை, அந்த நாட்டின் அரசாங்கம் தன் பொன் சேமநிதியின் (1926-ல் சுமார் $500-லிருந்து $600-மிலியன்) மதிப்பு உயரும் அளவுக்கும் பொன் உற்பத்தியாளரிடமிருந்து அதிகமாக வரும் வரி வருமானத்தின் அளவுக்கும்தான் இலாபமடையும். பொன்னை வெட்டி எடுக்கும் கம்பெனிகளும் அவற்றின் பான்டு (Bantu) தொழிலாளர்களும்தான் முக்கியமாக இலாபமடைவார்கள். இந்தக் கம்பெனிகளையோ 'சமஷ்டியில் (Union) ஒளியூட்டும் பெரிய சக்திகளாக மதிக்கலாம்'.[17] ஆதாரச் செலாவணிகளை வைத்திருப்பவர்கள் அநியாயமாக வருந்துவார்கள் என்ற எதிர்ப்புக்கு விடையளிப்பது கடினம். ஆனால், பிற நாடுகளைப் போலவே, பொன் சேமநிதிகளுக்காகப் போட்டி ஏற்பட்டுப் பணச்சரிவு ஏற்பட்டால் இதைவிட மோசமான நிலையை இந் நாடுகள் அடையும் அல்லவா? எனவே, அந்த அளவுக்குப் பொன்னின் மதிப்புயர்வு அவர்களுக்கு நன்மை தரும்.

பொன்னின் விலையை மாற்றுவதில் ஒரு நடைமுறைச் சிக்கல் உள்ளது. அதுதான் மிகப் பெரிய தடங்கல். இந் நடவடிக்கையை எடுப்பது என்று அரசாங்க அதிகாரிகள் முடிவு செய்யுமுன் அதைப்

[17] Harrod கூறுவதை ஒப்பிடுக; Harris பதிப்பித்த மேற்கோள் காட்டிய நூல், பக்கம் 60.

பற்றி விவரமாக விவாதிக்கவேண்டும். இவ் விவாதம் இரகசியமாக இருந்தாலொழிய பொன்னை எல்லாரும் வேகமாக வாங்க ஆரம்பித்து நாணயமாற்று அங்காடிகளில் குழப்பநிலை ஏற்படும். இவ்வளவு பரவலான பொருளைப்பற்றி இரகசியமாக விவாதிப்பது இயலாது. எனவே, எப்போது அவசியமோ அப்போது இந்த யோசனையைத் தீவிரமாகக் கருத முடியாது.

## ஓர் உலக மத்திய பாங்கு அமைப்பை நிறுவுதல்

பன்னாட்டுச் செலாவணி அமைப்பில் இப்போது மிகவும் அடிப்படையான சீர்திருத்தம் தேவைப்படுகிறது; சேமநிதிச் செலாவணிகளின் எண்ணிக்கையை அதிகரிப்பது, பொன்னின் விலையை உயர்த்துவது, துணைநிற்கும் கடன் தொகு நிதி அமைப்பது போன்றவை அந்த அடிப்படையான சீர்திருத்தத்தைச் செய்யாமல் சிறு மராமத்துகள் செய்து செலாவணி அமைப்புக்கு முட்டுக் கொடுக்கின்றதோடு சரி என்று சிலர் கருதுகின்றனர். தேசீய மத்திய பாங்குகள் அமைக்கப்பட்டபின் தேசியப் பணத்துறைத் திடநிலை ஏற்பட வழியுண்டாயிற்று. எனவே, பன்னாட்டு மத்திய பாங்கு ஒன்றை நிறுவ அவர்கள் பல யோசனைகளைக் கூறியுள்ளார்கள். ஒரு நாட்டின் மத்திய பாங்கு அந் நாட்டுக்குச் செய்யும் பணிகளைப் பெரிய அளவில் உலக சமுதாயத்துக்குப் பன்னாட்டு மத்திய பாங்கு செய்யும் இதற்கான பல மாற்றுத் திட்டங்களை ஒப்பிட இங்கு இடமில்லை. எனவே, அவற்றுள் மிக அதிகமான கவனத்தைக் கவர்ந்த திட்டத்தை இங்கு ஆராய்வோம். இதன் யோசனையைக் கூறியவர் யேல் பல்கலைக் கழகத்துப் (Yale University) பேராசிரியர் ராபர்ட் ட்ரிஃபின் (Robert Triffin).[18]

### அடிப்படை

உலகின் பணச் சேமநிதிகள் போதுமான அளவு இல்லை; பன்னாட்டுப் பண அமைப்பு, அன்னியச் செலாவணியின் அதிகாரபூர்வமான இருப்புகளையே பெரும்பாலும் நம்பியிருப்பதால் அதற்கு எப்போதும் தீங்கு நேரக்கூடிய நிலை உள்ளது. இதுபற்றி ட்ரிஃபின் கொண்ட கவலையினின்று நேரிடையாக இந்தப் பன்னாட்டுப் பணத்துறைச் சீர்திருத்த யோசனை எழுகிறது. இத்துடன் நெருங்கிய தொடர்புகொண்ட பிரச்சினையாக, டாலர் நிலுவைகள் மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டே போவதால் அமெரிக்கா சுதந்திரமாக உள்நாட்டுப் பொருளாதாரக் கொள்கைகளைக் கடைப்பிடிக்க முடியாமல் போகக்கூடிய ஆபத்தைத் தவிர்க்கவேண்டிய அவசியத்தையும் அவர் வலியுறுத்துகிறார்.

18 பன்னாட்டு மத்திய பாங்கை அமைப்பதுபற்றிய பல யோசனைகளை அருமையாகவும் சுருக்கமாகவும் ஒப்பிடுவதை Fritz Matchlup-ன் நூலில் பார்க்க.

பொன்-மாற்றுத் திட்டத்தின் குறைகளைப்பற்றிப் பேராசிரியர் ட்ரிஃபின் விசேஷமாகக் கூறியிருக்கிறார். பொன்னைப் பணத்திற்காகப் பயன்படுத்துவதை 'மனிதனுடைய சாதனங்களை முட்டாள்தனமாக வீணடிப்பது' என்று அவர் கருதுகிறார். பொன்னுக்குப் பதிலாகத் தேசியச் செலாவணிகளைப் பன்னாட்டுச் சேமநிதிகளாகப் பயன் படுத்துவது சூழ்நிலையின் அவசியத்தினால் ஏனோதானோ என்று ஏற்பட்ட ஒரு நிகழ்ச்சியே. அவற்றை இப் பணிக்குப் பயன் படுத்துவது முற்றிலும் அறிவுக்குப் பொருந்தாதது என்பது ட்ரிஃபி னுடைய அபிப்பிராயம். உலகச் செலாவணி அமைப்பில் உள்ளேயே இருந்து திடநிலை குலைக்கும் அம்சங்கள் அவை என்கிறார் அவர்.[19]

## ட்ரிஃபின் திட்டம் என்ன?

எனவே, ட்ரிஃபின் யோசனைகளின் முக்கியமான அம்சம், பன்னாட்டுச் சேமநிதிகளாக இப்போது வைக்கப்பட்டுள்ள நாட்டுச் செலாவணி நிலுவைகள், பன்னாட்டு நிலுவைகளாக மாற்றுவது ஆகும். முதலாவதாக, நாட்டுச் செலாவணிகளைப் பன்னாட்டுச் சேமநிதிகளாகப் பயன்படுத்துவதை எல்லா நாடுகளும் விட்டுவிடவேண்டும். அமெரிக் காவும் இங்கிலாந்தும், டாலரும் பவுனும் அவ்வாறு பயன்படுவதைத் தடைசெய்யவேண்டும். இரண்டாவதாக, (அதன் அமைப்பில் தகுந்த மாறுதல்கள் செய்தபின்) பன்னாட்டுச் செலாவணி நிதி அதிகார பூர்வமான டாலர் அல்லது பவுன் இருப்புகளுக்கு மாற்றாகத் தன்னுடைய வைப்புகளையே அளிக்கும். இந்தப் பன்னாட்டு வைப் புகள் 'எல்லா விதத்திலும் பொன்னுக்குச் சமமாக்கப்படவேண்டும், உலகச் செலுத்தல்களுக்காக யாவராலும் பயன்படுத்தப்படவேண்டும், ஒப்புக்கொள்ளப்படவேண்டும்'.[20] இது நிச்சயமாக நடப்பதற்காக, பன்னாட்டுச் செலாவணி நிதியில் வைத்த வைப்புகளுக்கு நாணய மாற்று உத்தரவாதமும் மாற்றுரிமை உத்தரவாதமும் கொடுக்கப்படும். மேலும், அவற்றுக்கு வட்டி கிடைக்கும். இவ் வட்டி, தான் கொடுத்த கடன்களிலிருந்தும் முதலீடுகளிலிருந்தும் பன்னாட்டுச் செலாவணிநிதி பெறும் வட்டி வருமானத்தைப்பொறுத்து இருக்கும். தான் பெற்ற டாலர் சொத்துகளையும் பவுன் சொத்துகளையும் தன் விருப்பப்படி, ஆண்டுக்கு 5 சதவிகிதத்துக்கு மிகாமல், பன்னாட்டுச் செலாவணிநிதி விற்றுவிடும்.[21]

[19] *Robert Triffin, Gold and the Dollar Crisis*, p. 87. Published 1960 by Yale University Press, New Haven, Conn.

[20] அதே நூல், பக்கம் 102.

[21] இதனால் கிட்டத்தட்ட ஒரு பிரச்சினை தோன்றக்கூடும். டாலர், ஸ்டர்லிங்கு இருப்புகளை நிதி விற்பதால் அமெரிக்காவும் பிரிட்டனும் அதற்காகத் தம் சேமநிதிகளினின்று பொன்னைத் தரவேண்டும் அல்லது செலாவணிநிலை

திருத்தி அமைக்கப்பட்ட நிதிக்குப் போதுமான மூலதன வசதியை அளிக்கத் தம் பணச் சேமநிதிகளில் 20 சதவீதத்தைப் பன்னுட்டுச் செலாவணி நிதியிடம் உறுப்பு நாடுகள் வைக்கவேண்டும்.[22] இத் தொகையைவிட மிகையாக உள்ள வைப்புகளை வேண்டுமாயின் பொன்னுக மாற்றிக்கொள்ளலாம். ஆனுல், நிதியின் வைப்புகளின் மீது வட்டி கிடைக்கிறது. பொன்னுக்கு வட்டியில்லை. நிதியின் வைப்புகளையும் பொன்னைப்போலவே பன்னுட்டுத் தீர்வுகளுக்குப் பயன்படுத்தலாம். எனவே, நிதியில் வைப்புகளாகவே அதை வைத்திருப்பது மேல். அவ் வைப்புகளை வைத்திருக்கும் ஒரு மத்திய பாங்கு தனக்குத் தேவையான எந்தச் செலாவணியாகவும் அவற்றை மாற்றிக்கொள்ளலாம். நாணயமாற்று அங்காடிகளில் தம் செலாவணி யைத் திடநிலைப்படுத்த அவற்றை எடுத்து உபயோகிக்கலாம்.

நிதி வைப்புகளை மாற்றிக்கொள்வதன்மூலம் பன்னுட்டு எச்சங்களைத் தீர்க்க உறுப்பு நாடுகள் வழக்கம் செய்துகொண்டதும், இம் முறை எளிதாகவும் வசதியாகவும் இருப்பதால் தம் சேமநிதிகளில் பெரும்பகுதியை அந் நாடுகள் இந்த உருவில் வைத்திருக்கும்; இறுதியில் சேமநிதிகள் அனைத்தையுமே நிதியில் வைப்புகளாக வைக்கக்கூடும். இஃது எப்படி இருப்பினும் பன்னுட்டுச் செலாவணி நிதியின் காரணமாக ஏற்படும் உலகச் சேமநிதிகளின் வளர்ச்சியின் விளைவாக, உலகச் சேமநிதிகள், மேலும் மேலும் அதிகமாகும் விதத் தில், நிதி வைப்புகளாக இருக்கும்.[23]

இப்போது நாட்டு மத்திய பாங்குகள் பயன்படுத்தும் முறையைப் போலவே சேமநிதிகளை நெடுங்காலத்தில் அதிகரிப்பதற்கு ட்ரிஃபின் திட்டம் வழிசெய்கிறது. தவணை, வட்டி போன்ற நிபந்தனைகளுக்கு

---

உபரியை வளர்க்கவேண்டும். இந்தப் பிரச்சினையைத் தீர்க்கவேண்டுமானுல் ட்ரிஃபின் திட்டம் அமல் செய்யப்படும் அதே சமயத்தில் பொன்னின் விலையையும் உயர்த்தலாம். அப்போது சேமநிதிகளின் மதிப்புயர்வினுல் வரும் இலாபத்தினுல் இந்த இருப்புகளைக் கஷ்டமில்லாமல் தீர்க்கலாம்.

22 இப்போது உறுப்பு நாடுகளுக்கு IMF தரவேண்டிய நிகரப் பொறுப்புகள் இந்த முதல் வைப்புகளில் சேர்ந்ததாகக் கணக்கில் கொள்ளப்படும். பணச் சேமநிதிகளில் 20 சதவீதமாக அதை ஆக்க மேலும் பொன் அல்லது அன்னியச் செலாவணியைக் கட்டவேண்டும்.

23 பன்னுட்டுச் செலாவணி நிதியின் வைப்புகளை பன்னுட்டுத் தீர்வுகளுக்கு இனிது பயன்படுத்தலாம் என்று முழு நம்பிக்கை ஏற்பட்டதும், பன்னுட்டுச் சேமநிதிகளில் பொன்னின் அவசியம் இராது. அதுவரை பண அமைப்பில் பொன்னை 'பண்பாட்டில் பின்தங்கியிருப்பதற்கு ஒரு தீங்கற்ற எடுத்துக்காட்டாக வும், உலகம் விரும்புகின்ற ஆனுல் அதற்கு அவசியமற்ற ஒன்றை உற்பத்தி செய்வதற்காகச் செலவில்லாத மானியமாகவும்' வைத்திருக்கலாம். (Oscar Altman, 'Professor Triffin, International Liquidity, and the International Monetary Fund,' in Harris, *op. cit.*, p. 246.)

ஒப்புக்கொண்டு, மற்றும் சமீபகாலத்தில் ஏற்படுவதுபோல, நெடுங் காலத்தில் செலுத்துநிலைச் சமநிலையைப் பாதுகாக்கத் தேவையான பொருளாதாரக் கொள்கைகளையும், நிதிக் கொள்கைகளையும் கடைப் பிடிப்பதாக நாடுகள் ஒப்புக்கொண்டால் பன்னாட்டுச் செலாவணி நிதி உறுப்பு நாடுகளுக்குக் கடன்களைத் தரலாம். அல்லது உறுப்பு நாடுகளின் நிதி அங்காடிகளில் பொருளாதார வளர்ச்சிக்காக நிதி திரட்டும் பத்திரங்களுட்பட பலவிதமான சொத்துகளில் பன்னாட்டுச் செலாவணி நிதி முதலீடு செய்யலாம். அத்தகைய பத்திரங்களுக்கு உதாரணம், புனரமைப்புக்கும் வளர்ச்சிக்குமான பன்னாட்டு பாங்கின் கடன் பத்திரங்கள். கடன்கள், முதலீடுகள் ஆகிய இரண்டுமே புது IMF வைப்புகளைத் தோற்றுவிக்கின்றன. எனவே, உலகச் சேமநிதி களின் மொத்த அளவை அதிகரிக்கின்றன.

பன்னாட்டுச் செலாவணி நிதியின் கடன்களும் முதலீடுகளும் அடக்கமின்றிச் செய்யப்பட்டால், சேமநிதிகள் மிகையாக அதிகரித்துப் பணவீக்க அபாயம் ஏற்படக்கூடும். இதைத் தவிர்க்க உலகச் சேமநிதிகள் அதிகரிக்கும் அளவு, உயர்ந்தபட்சமாக ஆண்டுக்கு 3-லிருந்து 5 சதவீதம் வரை ஏதாவதொரு வீதத்தை நிர்ணயித்து, அதை மிஞ்சாமல் பார்த்துக்கொள்ளவேண்டும் என்பது ட்ரிஃபினுடைய யோசனை. அப்படியானல் ஒப்புக்கொள்ளப்பட்ட வளர்ச்சி வீதத்துக்கும் பொன் சேமநிதிகள் ஆண்டுதோறும் அதிகரிக்கவேண்டிய தொகைக்கும் உள்ள வித்தியாசம் இருக்கும் அளவுக்குமேல் நிகரமாகப் பன்னாட்டுச் செலாவணிநிதி கடன் கொடுக்கக்கூடாது. உண்மையில் சேமநிதி அதிகரிக்கவேண்டிய வீதத்தைப் பன்னாட்டுச் செலாவணிநிதியின் நிர்வாகத்தினரே முடிவு கொள்ளவேண்டியது; நிர்ணயிக்கப்பட்ட உயர்ந்தபட்ச அளவு வரை அஃது உயரவேண்டும் என்பதில்லை. எவ்வளவு போதும் என்று தோன்றுகிறதோ அவ்வளவு உயர்ந்தால் போதும்.

### மதிப்பீடு

குறையுள்ள பன்னாட்டுச் செலாவணி முறைக்குப் பதிலாக வலிமை யானதொன்றை, உலகச் சேமநிதிகளை ஒரு மத்திய அமைப்பில் சேர்த்துவைக்கும் ட்ரிஃபின் திட்டம் அளிக்கிறது. இப் புது அமைப்புத் தோன்றி, நன்கு நடக்க ஆரம்பித்துவிட்டால், அதன் சொத்துகளில் பொன்னின் விகிதம் குறைந்து, நாட்டுச் செலாவணி இருப்புகள் அல்லது நெடுங்காலப் பத்திரங்கள் அதிகமாவதனல் எவ்விதக் கவலைக் கும் இடம் இராது. பன்னாட்டுத் தீர்வுகளுக்குப் பொதுவாக ஒப்புக் கொள்ளப்படக்கூடிய ஒரு பரிவர்த்தனைச் சாதனம் வேண்டும். அது பொன்னாகவே இருக்கவேண்டியதில்லை. நிலையான தேவையுள்ள பணங்களில் குறிப்பிடப்படும் சொத்துகளில் மட்டும் பன்னாட்டுச்

செலாவணி நிதி முதலீடு செய்யுமானால், அதன் வைப்புகள் பன்னாட்டுத் தீர்வுகளுக்கு நம்பிக்கையோடு பயன்படுத்தப்படும். (தொல்லைப் பட்டுக்கொண்டிருக்கும் நாடுகளுக்குக் 'கஷ்டகாலக்' கடன்களைத் தொடர்ந்து கொடுக்கவேண்டும். ஏற்கெனவே கூறியுள்ளபடி, அவற்றை நிறுத்தக்கூடாது. ஆனால், அவற்றின் தவணை ஒரு வரம்புக்குள் இருக்கவேண்டும்.)

இத் திட்டத்தினால் உலகச் சேமநிதிகளின் வளர்ச்சி நிச்சயமாக ஏற்படும். அதேசமயம் மிகையான பெருக்கத்தை நிச்சயமாகத் தவிர்க்கவும் முடியும். இப்போது பன்னாட்டுச் செலாவணி நிதி அமைப்பில் உள்ள சூழ்நிலைக்கேற்ப மாறும் நெகிழ்ச்சி ட்ரிஃபின் திட்டத்திலும் உள்ளது, அதைவிட அதிகமாகவும் உள்ளது.

பொன்னின் விலையை உயர்த்தும் யோசனையைப் போலவே, ட்ரிஃபின் திட்டத்தின்படியும், நிறைய குறுகிய கால வெளிநாட்டுப் பொறுப்புகள் இருப்பதால் உடனடியாகப் பொருளாதாரக் கொள்கைகளில் தீவிரமான அடக்கத்தை அமெரிக்கா கடைப்பிடிக்கவேண்டியதில்லை. ஆனால், இதுவரை பார்த்த பிற யோசனைகளைப் போலவே இதுவும் அமெரிக்கச் செலுத்துநிலையின் அடிப்படைப் போக்கைச் சரிசெய்யாது. ஏனெனில், நெடுங்காலத்தில் சமநிலை கெடுக்கும் சக்திகளைச் சீர்செய்யும் பிரச்சினை அது. எனவே, பொதுவாக எல்லா நாடுகளிலும் குறிப்பாக அமெரிக்காவிலும் புறச் சமநிலைக்கும் அகக் கொள்கைகளுக்கும் உள்ள முரண்பாட்டை இந்தத் திட்டத்தாலும் தீர்க்க முடியாது.

## மாறும் நாணயமாற்று வீதங்கள்

வரிசைக் கிரமமாகப் பார்த்தால் பன்னாட்டுச் செலாவணிச் சீர்திருத்தத்துக்கான மாற்று வழிகளில் கடைசியாக வருவது மாறும் நாணயமாற்று வீதங்கள். இதைக் கடைசியில் சொன்னதால் இதன் மதிப்பு எல்லாவற்றையும்விடக் குறைந்தது என்று பொருள் அன்று; பல பொருளியல் நிபுணர்கள் இதைவிடச் சிறந்த வேறு வழியில்லை என்று கருதுகின்றனர்.[24]

மாறாத நாணயமாற்று வீதங்களை அடிப்படையாகக்கொண்ட பிற யோசனைகள், செலுத்துநிலைச் சமநிலையின் அவசியத்துக்கும், நிதி

[24] ஏதாவதொரு வகையில் மாறும் நாணயமாற்று வீதங்களைப் பின்வரும் பொருளியல் நிபுணர்கள் ஆதரிக்கிறார்கள்: Milton Friedman, Frank D. Graham, Gottfried Haberler, George N. Halm, Erik Lundberg, Friedrich A. Lutz, Lloyd W. Mints, James E. Meade, Egon Sohmen, Charles R. Whittlesey. இவர்களும் மற்றவர்களும் இப் பொருள்பற்றிக் கூறியதன் பட்டியலுக்குப் பின்வரும் நூலைப் பார்க்க: Fritz Machlup, *Plans for the Reform of the International Monetary System*, பக்கங்கள் 57-58.

பணக் கொள்கைகளை நிர்ணயிக்கும் தேசிய சுதந்திரத்துக்கும் உள்ள முரண்பாட்டை அதிகம் கருதுவதில்லை. அல்லது அடியோடு பொருட்படுத்துவதில்லை. இந்தப் பிரச்சினையை மாறும் நாணயமாற்று வீத யோசனை மையமாகக் கருதுவது நியாயமே. நாணயமாற்று வீதங்கள் மாற அனுமதிக்கப்பட்டால், அதனால் ஏற்றுமதிகள் தூண்டப்பட்டும் இறக்குமதிகள் குறைந்தும் பற்றுக்குறைகள் அகன்றுவிடும். பின்னர், செலுத்துநிலைத் தேவைகளை இரண்டாவது பட்சமாகக் கருதி முதல் கவனத்தை முழுவேலை நிலையை உண்டாக்குவதன்மீதும் முழு அளவுக்குப் பொருளாதார வளர்ச்சி அடைவதன்மீதும் செலுத்தலாம்; அல்லது பன்னாட்டு வாணிபத்தின்மீதுள்ள தடைகளை அகற்றலாம்; பின்தங்கிய நாடுகளில் நாட்டுப்பற்று காரணமாகக் கடன்களையும் பண உதவியையும் 'பெற்றுப் பயன்படுத்துவதன்மீதுள்ள கட்டுப்பாடுகளை நீக்கலாம்.[25] நாணயமாற்று வீதங்கள் மாறாமல் இருக்கவேண்டும் என்பதைவிட இம் முக்கியமான குறிக்கோள்களை நிறைவேற்றும் கொள்கை மிகவும் முக்கியமானது. அதாவது எப்போதைக்கும் நாணயமாற்று வீதங்கள் மாறாதிருப்பதைப்பற்றி இங்குச் சொல்லவில்லை. தவணை குறிப்பிடாத சில காலக் கூறுகளுக்கு மாறாமலிருப்பதைப் பற்றிதான் நாம் கருதுகிறோம். உலகிலேயே மிகப் பணக்கார நாடு ஒன்று தன் மொத்த நாட்டு உற்பத்தியில் அரை சதவிகித அளவுக்குத் தன் செலுத்துநிலையில் பற்றுக்குறை இருப்பதால் நிறைய வேலையின்மையாலும் உற்பத்திக் குறைவாலும் வருந்த வேண்டும் என்கிற நிலையைப் பார்த்தால் சிரிப்பு வருகிறது. இதுபற்றி ஒரு பொருளாதார நிபுணர் பின்வருமாறு கூறுகிறார்: ‘இது வால் நாயை ஆட்டும் உதாரணம்கூட அன்று; ஆனால், நாயின் மேலுள்ள உண்ணியின் வால் நாயை ஆட்டும் உதாரணமாகும்.’[26]

மாறும் நாணயமாற்று வீதங்களின் சிறப்பை நிரூபிக்க, அத்தகைய சூழ்நிலையில் தாம் மிக முக்கியமாகக் கருதும் தேசியக் குறிக்கோள்களை நோக்கிச் செல்லும் சுதந்திரம் நாடுகளுக்கு உண்டு என்பதை வலியுறுத்தினாலோ, நிரூபித்தாலோ மட்டும் போதாது. ஏனெனில், இந்தச் சுதந்திரத்தைத் தவறாகப் பயன்படுத்த முடியும். முழு வேலைநிலை அல்லது பொருளாதார வளர்ச்சியை மிகையான ஆர்வத்துடன் பின்பற்றினால், கடுமையான பணவீக்கமும், நாணயமாற்று

[25] இந்த அபிப்பிராயத்தை வலிமையுடன் James E. Meade பின்வரும் கட்டுரையில் கூறுகிறார்: ‘The Future of International Payments’, in *Factors Affecting the United States Balance of Payments*, Joint Economic Committee, 87th Congress, 2nd sess. (Government Printing Office, Washington, D. C., 1962).

[26] J. M. Culbertson, Joint Economic Committee முன் கூறியது, 14 ஆகஸ்டு, 1962.

அங்காடிகளில் ஊகவாணிபமும், நாணயமாற்று வீதங்களில் கட்டு மீறிய ஏற்ற இறக்கமும், நிலையாகவும் வேகமாகவும் ஒரு நாட்டின் செலாவணியின் மதிப்பிறக்கமும் ஏற்படக்கூடும். இதனால் ஒரு வகைத் திடநிலைக் கேட்டுக்குப் பதிலாக வேறொருவகை திடநிலைக் கேடு விளையும்'; அவ்வளவே. அவ்வாறு திடநிலை குலைவு ஏற்படும் அபாயம் இல்லை, அல்லது அதன் அளவு மிகைபடக் கூறப்படுகிறது என்று காட்டவேண்டும். தவிர, திடநிலை குலைக்கும் ஊகவாணிபம் ஏற்படாது அல்லது ஏற்பட்டாலும் அதைத் திறம்படக் கட்டுப்படுத்த முடியும் என்றும் காட்டவேண்டும். அப்போதுதான் இம் முறையின் சிறப்பை நிரூபிக்க முடியும்.

இந்தப் பிரச்சினையைக் கருதும்போது முதலில் இத்துடன் தொடர்புகொண்ட சில கேள்விகளுக்கு விடை கண்டுபிடித்துவிடுவது நல்லது. எனவே, மீண்டும் பன்னாட்டு நீர்மைப் பிரச்சினையைக் கவனிப்போம். நீர்மையைப்பற்றி, அதாவது பன்னாட்டுச் சேம நிதிகள் போதுமான அளவு உள்ளதா என்பதைப்பற்றி ஏன் அவ்வளவு அக்கறை காட்டப்படுகிறது? சமீபகாலத்தில் நிறைய பன்னாட்டுச் சேமநிதிகளுக்கு ஏற்பாடு செய்வதுபற்றி இவ்வளவு கவனம் செலுத்தப்பட்டு நடவடிக்கைகள் 'எடுக்கப்படுகின்றனவே, அதன் அவசியம் என்ன?

### மீண்டும் நீர்மை

ஒரு நாட்டின் பன்னாட்டுக் கணக்கில் தாற்காலிகமாகப் பற்றுக்குறை ஏற்பட்டால் அதைத் தீர்க்கப் பன்னாட்டுச் சேமநிதிகள் அவசியம் என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. செலுத்துநிலையின் குறுகியகாலப் பற்றுக்குறைகளுக்கு நிதி ஏற்பாடு செய்யும் முக்கிய உபாயம் அவை. சேமநிதி இடப்பெயர்ச்சிகளால் தீர்க்கப்படும் தாற்காலிகமான பற்றுக்குறைகள் பின்வரும் பல காரணங்களால் ஏற்படலாம்: ஒரு நாட்டின் ஏற்றுமதி இறக்குமதிகளின் மதிப்பில் பருவகால அல்லது வணிகச் சுழல் காரணமான மாறுதல்கள், இவற்றைவிட அடிப்படையான ஒரு சமநிலைக் கேட்டுக் காரணத்தின் முதல் விளைவுகள், முக்கியமாகச் சமீப ஆண்டுகளில் நாட்டுக்கு நாடும் பணக் கொள்கைகளில் உள்ள வேறுபாடு அல்லது செலாவணி மதிப்புக் குறைப்புபற்றிய அச்சம் காரணமாக ஏற்படும் குறுகிய கால மூலதன இடப்பெயர்ச்சிகள். நீர்மையைப்பற்றி விவாதிக்கும்போது தாற்காலிகமான சமநிலைக் கேடுகளைத் தான் முக்கியமாகக் கவனிப்போம், கவனிக்கவேண்டும். ஏனெனில், தொடர்ந்து நெடுங்காலத்துக்குச் சமநிலைக் கேடு இருப்பின் எவ்வளவு பெரிய அளவுக்குச் சேமநிதிகள் இருந்தாலும் போதாது.

தாற்காலிகமான பற்றுக்குறைகளுக்கு நிதி ஏற்பாடு செய்ய எந்த அளவுக்குச் சேமநிதிகள் இருந்தால் 'போதும்' என்பது நாட்டுக்கு

நாடு மாறுபடும் : அது பின்வரும் காரணிகளைப்பொறுத்து மாறு படும். அந் நாட்டின் பன்னாட்டுச் செலுத்தல்கள் அல்லது வருவாய் களின் திடநிலை அல்லது நெகிழ்ச்சி; அதன் சேமநிதிகளுக்குத் துணை யாகப் பயன்படக்கூடிய நிதிச் சொத்துகளை அது வைத்திருக்கும் அளவு; அது ஏற்கவேண்டிய பொறுப்புகள். உதாரணமாக, பிறநாடு களின் பன்னாட்டுச் சேமநிதிகளை வாங்கி வைத்துக்கொண்டிராத நாட்டைவிட, ஒரு சேமநிதிச் செலாவணி நாடு அதிகமான சேம நிதியை வைத்திருக்கவேண்டும்.

பன்னாட்டுச் செலாவணிச் சீர்திருத்தம் என்னும் பெரும் பிரச்சினை பற்றிய விவாதத்தில் மிக அசாதாரண அளவு முக்கியத்துவத்தை அப் பிரச்சினையின் ஓர் அம்சமான பன்னாட்டு நீர்மை பெற்றுள்ளது. இந்தப் பொருளுக்கு முக்கியத்துவம் தராது செலாவணிச் சீர்திருத்தத் தைப்பற்றி எழுதப்பட்ட கட்டுரையோ நூலோ இல்லை எனலாம். பல வற்றுள் இப் பொருளுக்கு முதலிடம் கிடைத்துள்ளது. நீர்மை, அல்லது சேமநிதிகள் போதுமான அளவு இருப்பது என்பது, செலுத்துநிலைச் சமநிலைக் கேட்டின் குறுகியகால அல்லது தாற்காலிகப் பகுதிகளைப் பற்றியது. அடிப்படையில் அநித்தியமான இதன்மீது இவ்வளவு கவனம் செலுத்துவானேன்? சமநிலைக்கேட்டின் ஆழ்ந்த காரணங்களும் அவற்றைச் சரி செய்யும் வழிகளும் இதைவிட நித்தியமான முக்கியத் துவம் பெற்றவை அன்றோ? குறுகியகால மூலதன இடப்பெயர்ச்சிகள் சமீப காலத்தில் அடிக்கடியும் அதிக அளவிலும் ஏற்பட்டுவருவதைக் கண்டு மயங்கிப் பொருளாதார நிபுணர்களும், பாங்கு நிர்வாகிகளும், அரசாங்க அதிகாரிகளும் இதைவிடப் பெரிய பிரச்சினையின் இச் சிறு பகுதியையே எண்ணி வருகிறார்கள் என்று தோன்றுகிறது. உண்மையில் சமநிலைக் கேட்டின் பெரிய காரணங்களையும் அவற்றை இழைவாகத் திருத்துவதையும்பற்றிக் கவனம் செலுத்தினால், இப் பிரச்சினையைத் தீர்ப்பதனாலேயே குறுகியகாலத்தில் ஊசலாடும் மூலதன இடப்பெயர்ச்சி களின் எண்ணிக்கையையும் அளவையும் குறைக்க முடியும்.

ஒருவேளை, இந்த அநித்தியமான விஷயத்தையேபற்றி நினைத்துக்கொண்டிருந்தால் உள்ளத்தின் பின் தளத்தில் அதைவிட அடிப்படையான ஆனால் வெளியில் கூறாத கவலை ஒன்று இருக்கக்கூடும் —அதாவது நாணயமாற்று வீதங்களை மாறாது இருக்குமாறு வைக்க வேண்டியதன் கவலை. அவ்வாறு வைக்கவேண்டியது மீறக்கூடாத ஒரு வேத வாக்காக இப்போதெல்லாம் கருதப்பட்டுவருகிறது. ஆனால், பன்னாட்டுச் செலாவணி நிதியின் அமைப்பைத் தயாரிக்க பிரெட்டன் வுட்ஸில் கூடிய பொருளாதார நிபுணர்களும் அரசாங்க அதிகாரிகளும் நிச்சயமாக அவ்வாறு நினைக்கவில்லை. அப்போது அழுத்தமாக நிராகரிக்கப்பட்ட பொன் திட்ட இயக்கத்தினால் தோன்றிய பணச்

சுருக்கத்தைத் திருத்துவதைவிட, செலுத்துநிலையில் அடிப்படைச் சம நிலைக்கேட்டைத் திருத்த மேலும் சிறந்த வழியைக் கண்டுபிடிப்பதில் தான் அவர்கள் கவனம் செலுத்தினர். பன்னாட்டுச் செலாவணி நிதியின் சாசனத்தில் சேர்க்கப்பட்ட கட்டுக்கடங்கிய செலாவணி மதிப்புக் குறைப்புகள்தான் அந்த வழி என்று அவர்கள் எண்ணினர்.

நாணய மதிப்புக் குறைப்புக்கு இரண்டு அடிப்படைக் குறைகள் இருப்பது தெரிகிறது. (1) நடைமுறையில் ஒரு சேமநிதிச் செலாவணி நாடு இதைக் கையாள முடியாது. ஏனெனில், அதிகாரபூர்வமாகச் சேமநிதி வைப்புகளை வைத்திருப்பவர்களுக்கு இதனால் நஷ்டம் ஏற்படும். (2) செலாவணி மதிப்பைக் குறைக்கப்போகிறார்கள் என்று சந்தேகம் ஏற்பட்ட உடனே ஊகவாணிப மூலதன ஓட்டங்கள் உடனே ஏற்படுகின்றன. சமீப காலத்தில் இத்தகைய ஓட்டங்கள் அடிக்கடி ஏற்பட்டுள்ளன. அவற்றின் அபாயத்தைத் தவிர்க்கப் பன்னாட்டு நீர்மை அளவை உயர்த்த ஒரு வழியைக் கண்டுபிடிக்க மேலும் முயற்சி செய்யப்பட்டுவருகின்றன. அதற்கு ஒரு வழியாகப் பல சேமநிதிச் செலாவணி முறையை அமைக்க மேலும் முயற்சி செய்யப்பட்டது. ஆனால், இதைக் கையாண்டாலோ செலாவணி மதிப்பைக் குறைக்க முடியாது தடைப்பட்ட நாடுகளின் எண்ணிக்கை அதிகமாகிறது. எனவே, உலகச் செலாவணி ஏற்பாடுகளில் மாறாத நாணயமாற்று வீத முறை நிச்சயமாக இணைக்கப்படுகிறது. பல சேமநிதிச் செலாவணி முறையை ஆதரிப்பவர்கள் சிலர் இதை விரும்பமாட்டார்கள். ஆனால், இதுதான் ஏற்படும். அம் முறையை ஆதரிப்பவர்கள் பலர் விரும்பு வதும் இதுதான் என்றும் தோன்றுகிறது. பிரெட்டன்வுட்ஸிலிருந்து நாம் எவ்வளவு விலகிவந்துவிட்டோம்! மீண்டும் நாம் நமது படிப் பினைகளை முதலிலிருந்து அனுபவிக்கவேண்டுமா ?

### மாறும் நாணயமாற்று விதங்கள் நிச்சயமாக ஏன் வேண்டும்?

மேற்கத்திய உலகில் அதிகம் காணப்படும் மார்க்கெட்டுப் பொருளா தாரத்தில் நாணயமாற்று வீதம் போன்ற ஒரு முக்கியமான விலையை அதிகாரபூர்வமாகவும் நெடுங்காலத்துக்கும் நிர்ணயிப்பது மிகவும் ஒழுங்கற்றதாகும். பணத்தைப்பற்றிய நம் மனப்போக்குதான் இதன் அடிப்படைக் காரணமாக இருக்கக்கூடும். எந்த நாட்டின் செலாவணியின் விலையும், உதாரணமாக டாலரின் விலை, அதன் விளக்கப்படியே, மாறாத ஒன்றாகும். உள்நாட்டின் விலைவாசிகள் திடநிலையில் இருந்தால் டாலரின் மதிப்பையும் மாறாததாகக் கொள்ளலாம். ஆனால், பொருளாதாரக் கொள்கைகள் நாட்டுக்கு நாடு மாறுகின்ற உலகில், நாடுகளின் செலாவணிகளின் மதிப்பைப் பாதிக்கும் சக்திகள் மாறுகின்ற உலகில் இரண்டு செலாவணிகளின்

தராதர மதிப்பை மாருதது என்று கொள்வது நியாயமில்லை.[27] நாணய மாற்று அங்காடியில் தேவைச் சக்திகளும் அளிப்புச் சக்திகளும் ஒவ்வொரு முறை மாறும்போதும் உண்மையில் இத் தராதர மதிப்பு மாறுகிறது. தவிர, ஓர் அன்னியச் செலாவணி அதன் வாங்கும் சக்திக்காக மட்டும், அதாவது அதன் உள்நாட்டு மதிப்புக்காக மட்டும் வாங்கப்படுவதில்லை; வெளிநாட்டுச் சொத்துகளைப் பெறுவதற்காகவும், நன்கொடைகளை அனுப்புவதற்கும், வட்டியையும் இலாபத்தையும் அனுப்புவதற்கும்கூட அன்னியச் செலாவணி வாங்கப்படுகிறது. தடையின்றி மாறும் நாணயமாற்று வீதம் இச் சக்திகளுக்கு ஏற்ப மாறுகிறது. அவற்றிடையே சமநிலையைத் தோற்றுவிக்கிறது; அதை வாங்குவோருக்கும் விற்போருக்கும் அச் செலாவணியின் உண்மையான தராதர மதிப்பை அவ்வீதம் பிரதிபலிக்கிறது.

உலகிலே நாணயமாற்று அங்காடியில் பிற எல்லா அங்காடிகளையும் விட நிறைந்த போட்டியைக் காணமுடியும். அத்தகைய அங்காடியில் மார்க்கெட் சக்திகளுக்கு ஏற்ப விலை உடனே மாறும். தொடர்ந்து மாறிக் கொண்டே இருக்கும். மாறும் நாணயமாற்று வீதமுறையின் முக்கியமான எதிர்ப்புக்கு காரணம் இந்த உண்மைதான் போலும்—அதாவது, நாணயமாற்று வீதங்கள் நிச்சயமாக மாறிக்கொண்டிருக்கும், அதனுல் மார்க்கெட்டில் திடநிலை இருக்காது. ஆனுல், விலை மாறுவது என்பது ஒன்று; திடநிலை இல்லாமை என்பது வேறொன்ருக இருக்க முடியும், வேறொன்ருகத்தான் இருக்கவும் செய்கிறது. வணிகர்களுக்கு விலை மாறுதல்கள் ஒரு பழக்கப்பட்ட விஷயம்: தவிர, முன்னேறிய அங்காடிகளில் நாணயமாற்று வீத மாறுதல்களுக்கு எதிர்காப்புச் செய்ய வசதிகள் அவர்களுக்குத் தயாராக இருக்கின்றன. தடையின்றி மாறும் நாணயமாற்றுச் சூழ்நிலையில் இவ் வசதிகள் சிறந்த முறையில் வளர்ந்திருக்கும். ஒரு செலாவணியின் நெடுங்காலச் சமநிலை மதிப்புக்கு மேலும் கீழும் நாணயமாற்று வீதம் மாறுவது, அதாவது மிதமான குறுகியகாலத் திடநிலை இன்மை வரவேற்கத்தக்கதாகும். ஒரு செலாவணியின் சமன்மதிப்பு மாருமல் நிர்ணயிக்கப்பட்டுள்ளதாகக் கொள்வோம். நெடுங்காலத்திற்கு அது சரியான சமநிலை மதிப்பாக இருக்கக் கூடும். ஆனுல், அச் செலாவணி எப்போதும் ஓரளவுக்கு மிகை மதிப்புடனே, குறைமதிப்புடனே தான் இருக்கும்.[28]

[27] இதை மேலும் விவரமாக George N. Halm ஆராய்கிருர். கட்டுரை, 'Fixed or Flexible Exchange Rates?' in *Factors Affecting the United States Balance of Payments.*

[28] பின்வரும் நூலைப் பார்க்க: Egon Sohmen, *International Monetary Problems and the Foreign Exchanges*, p. 71. Published 1963 by International Finance Section, Princeton University.

ஆனால், நெடுங்காலத் திடநிலையின்மையை எடுத்துக்கொண்டால், முக்கியமான நாடுகள் தாம் மேற்கொண்ட குறிக்கோள்களாகிய முழு வேலைநிலை, உயர்ந்த வளர்ச்சி ஆகியவையோடு விலைத் திடநிலைக் கொள்கையையும் பின்பற்றினால் அவற்றின் நாணயமாற்று வீதங்களில் நியாயமான அளவுக்குத் திடநிலை நிச்சயமாக இருக்கும். ஒரு நாடு அமித வேகமாக வளரத் தொடங்கினால் அதன் செலுத்துநிலை பாதகமாக மாறி அதன் செலாவணி மதிப்பிறக்கம் அடையும். இதனால் ஏற்றுமதிகள் தூண்டப்பட்டு விலைகள் உயரக்கூடும், அப்போது அந்நாடு பணக் கட்டுப்பாட்டுக் கொள்கையை அவசியமாகக் கடைப்பிடிக்க வேண்டும். அப்படிச் செய்தால் மூலதனம் நாட்டுக்குள் வந்து நாணய மாற்று வீதத்தைத் திடநிலை அடையச் செய்யும். இந் நடவடிக்கையை எடுக்காவிட்டால் அது மேற்கொள்ளப்பட்ட குறிக்கோளுக்கு முரணானதாகும். ஏனெனில், விலைத் திடநிலையும் ஒரு குறிக்கோளாக மேற்கொள்ளப்பட்டது. இக் குறிக்கோள்களைப் பின்பற்றவேண்டுமாயின், பணத்துறையிலும் நிதித்துறையிலும் பொறுப்பற்ற முறையில் நடந்து கொள்வது தகாது.

தொழில்களில் சர்வாதீன நிலைமை இருப்பதாலோ, வலிமை மிக்க தொழிலாளர் சங்கங்களாலோ, கூலிகளும் அடக்க விலையும் ஒன்றை ஒன்று தள்ளிக்கொண்டே மேலே போகும் பணவீக்க நிலைமை ஏற்படும் விசேஷ அபாயம் எப்போதும் உள்ளது. இந் நிலைமையைச் சமாளிக்க, பணக் கொள்கையால் இயலாது. அதைக் கடைப்பிடித்தால் வேலையின்மைதான் அதிகரிக்குமேயொழிய விலை உயர்வு கட்டுப்படாது. முழு வேலைநிலை, விலைத் திடநிலை இரண்டையும் அடைய முக்கியமான கூலிகள்மீதும் விலைகள்மீதும் நேரிடையான கட்டுப்பாடுகளை விதிக்க வேண்டிய நிர்ப்பந்தம் அரசாங்கங்களுக்கு ஏற்படலாம். ஆனால், இந்தப் பிரச்சினை, மாறும் நாணயமாற்று வீத முறையில்தான் விசேஷமாக இருக்கிறது என்பதில்லை. மாறுத நாணயமாற்றுவீத முறையிலும் இவ்வபாயம் இருந்து பெரும் தொல்லைகளை விளைவிக்கிறது.

ஒரு நாடு பணக் கொள்கை, நிதிக் கொள்கை ஆகியவற்றைக் கையாளுவதில் பொறுப்பற்று நடந்துகொண்டால், அல்லது பண வீக்கத்தைத் திறம்பட அடக்கத் தேவையான அமைப்புகளைப் பெற்றிராவிட்டால், மாறும்வீத முறையில் அதன் செலாவணி தொடர்ந்து மதிப்பிறக்கம் அடையும்.[29] ஆனால், அத்தகைய நாட்டில் எந்தவிதமான செலாவணி முறையிலும் இதே கதிதான் நேரும். பண வீக்கம் கடுமையாக இருக்கும்போது மாறுத சமநிலையை வைக்க முயன்றால் அடிக்கடி செலாவணி மதிப்பைக் கட்டாயமாகக் குறைக்கவேண்டி

[29] பிரேசில், சிலி நாட்டுச் செலாவணிகள் பல ஆண்டுகளாக இதுபோலத் தொடர்ந்து அடிக்கடி மதிப்பிறக்கம் அடைந்து வந்திருக்கின்றன.

வரும்; அல்லது நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை விதிக்கவேண்டி வரும். ஒரு நாடு பொறுப்போடு நடந்துகொண்டால்தான், அதாவது அப்போது மரபாக ஏற்றுக்கொள்ளப்பட்ட பண, நிதிக் கொள்கைகளி லிருந்து அதிகமாக விலகாமல் இருந்தால்தான், எந்தப் பன்னாட்டுச் செலாவணி முறையும் அதில் பங்கு கொள்ளும் நாட்டைப் பொறுத்த வரையில் திறம்படச் செயலாற்றும். அதாவது, அதன் செலுத்துநிலைத் திருத்தங்கள் இழைவாக ஏற்படும். அரசாங்க பட்ஜெட்டுகளைச் சம நிலையில் வைத்திருப்பதுதான் ஏற்றுக்கொள்ளப்பட்ட மரபு என்றால், எந்த நாடு அதற்கு ஒத்தவாறு நடக்காமல் சமநிலை அற்ற பட்ஜெட் டைத் தயாரிக்கிறதோ அதைப் பொறுத்தவரை பன்னாட்டுச் செலாவணி இயக்கம் சரியாகச் செயல்படாது. அல்லது, இப்போது இருப்பது போல விலைத் திடநிலையோடு முழு வேலைநிலையும் உயர்ந்த வளர்ச்சி யும்தான் ஒப்புக்கொள்ளப்பட்ட மரபு-என்றால் இக் குறிக்கோள்களி னின்று தீவிரமாக விலகிய நாட்டுக்கும் அதேபோல இவ்வியக்கம் சரியாகச் செயல்படாது. வேறுவிதமாகச் சொன்னால், பன்னாட்டுச் செலாவணி அமைப்பு மாறாத நாணயமாற்றுவீத அடிப்படையில் இருந் தாலும் நெகிழ்ச்சி உடைய வீதங்களின் அடிப்படையில் இருந்தாலும் சரி, உள்நாட்டுப் பணக் கொள்கை, நிதிக் கொள்கைகளிடையே நாட்டுக்கு நாடு நியாயமான இசைவு (harmony) இருக்கவேண்டும். இல்லாவிட்டால் பன்னாட்டுத் துறையில் கவலைக்கிடமான முரண்பாடு ஏற்படும்.

தொழில்நுட்ப மாறுதல்கள், அல்லது உலகத் தேவையில் மாறுதல் கள் போன்ற நெடுங்காலச் சக்திகளினால் ஒரு நாட்டின் செலுத்து நிலையில் சமநிலைக் கேடு ஏற்படுவது, மாறுகின்ற உலகில் எப்போதும் நிகழக்கூடியதே. மாறாத நாணயமாற்றுவீத முறையில் அத்தகைய சமநிலைக் கேட்டினால் பாதிக்கப்பட்ட ஒரு நாட்டின் செலாவணி மிகை மதிப்படைகிறது; அதன் ஏற்றுமதிகள் சுருங்குகின்றன; அதன் சேம நிதிகள் குறைகின்றன. அதன் செலாவணியின் புற மதிப்பைக் காப் பாற்ற, பணச் சுருக்கக் கொள்கையை அந் நாடு கடைப்பிடிக்க வேண்டும். இதுபோல வெளிச் சக்திகளுக்கு உள்நாட்டுக் கொள்கை கள் அடிமை ஆவதைத்தான் மாறும் நாணய மாற்றுவீத முறை தவிர்க் கிறது. இம்முறையில் செலாவணி மிகை மதிப்படையும்போது அரசாங் கம் முனைப்பாகத் தலையிடாமல் படிப்படியாக மதிப்பிறக்கம் ஏற்பட்டு நிலைமை சீராகிறது. எனவே, கட்டாயமாகப் பணச் சுருக்கத்தைப் பின்பற்ற வேண்டியதில்லை. மாறாக நிலையான பொருளாதார வளர்ச்சி ஏற்பட முடியும்.

**ஊகவாணிபம்**

இதுவரை ஊகவாணிபத்தைப்பற்றி அதிகமாகக் கூறவில்லை. இருப்பினும், ஊகவாணிபம் திட நிலையைக் குலைக்கும் என்று மாறும்

நாணயமாற்றுவீத முறையை எதிர்ப்பவர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்; சமநிலையை மீண்டும் ஏற்படுத்துவதற்குப் பதிலாக ஏற்கெனவே ஏற்பட்ட சமநிலைக் கேட்டை அது மேலும் மோசமாக்கும் என்பது அவர் கூற்று. இவ்வாறு நேரக்கூடியதை நெகிழ்ந்த வீத முறையின் மிகப் பெரும் குறையாக அவர்கள் கருதுகின்றனர்.

நெறிகோணிய ஊகவாணிபம்—அதாவது மிகையாக நம்பிக்கை அதிகமானதாலோ, மிகையாக நம்பிக்கை குறைந்ததாலோ ஏற்படுவது, அல்லது, எளிதாகக் கூறினால் தவறான மதிப்பீட்டின் விளைவான ஊகவாணிபம்—இராது என்று முதலிலேயே கொள்ளலாம். தொடர்ந்து தவறாகச் சூழ்நிலையைப் புரிந்துகொள்ளும் ஊகவணிகர்கள் நஷ்டமடைந்து விலகி, பகுத்தறிவில் அவர்களைவிட மேம்பட்டவர்கள் அவர்கள் இடத்தில் இருப்பர்.

தொடர்ந்து வணிகம் செய்ய வேண்டுமானால் ஊகவணிகர்கள் சூழ்நிலையைச் சரியாக மதிப்பிடவேண்டும். எனவே, (பருவகாலச் சக்திகள், வேலை நிறுத்தங்கள் அல்லது இயற்கைத் தீங்குகளின் விளைவுகள் ஆகிய) தாற்காலிகமான சமநிலைக் கேடுகளுக்கு மாறாகவும், அதேபோல (ஓர் இயற்கை வசதி தீர்ந்துபோவது, தொழில்நுட்ப மாறுதல் அல்லது இறக்குமதி உயர்வினால் அங்காடிகளை இழப்பது போன்று) ஒரே ஒரு முறை ஏற்பட்டு முடிந்துவிடும் மாறுதல்களால் ஏற்படும் சமநிலைக் கேடுகளுக்கு எதிராகவும் செயலாற்றி ஊகவணிகர்கள் நாணயமாற்று வீதத்தைத் திடநிலைப்படுத்துவர். செலாவணியின் மதிப்பிறக்கத்தின் தாற்காலிகமான காரணம் ஒன்று நேர் எதிராகத் திரும்பப் போகிறது என்பதை எதிர்பார்த்து, பெருமளவு விற்பனைக்கு எதிராக முன்னோக்கிய நாணயமாற்று வீதத்துக்கு அவர்கள் ஆதரவு அளிப்பர். அதன் காரணமாக உடனடி வீதம் மாறாது நிற்கும். அதேபோல ஒரே தடவையாக ஏற்படுகின்ற பாதகமான (அல்லது சாதகமான) மாறுதல் விஷயத்திலும், அம் மாறுதலினால் அந்நாட்டின் செலுத்துநிலை எந்தச் சிறிய அளவுக்கு உடனடியாகப் பாதிக்கப்படும் என்பதைப் பிறர் உணருமுன் உணர்ந்து இலாபமடைவர். இறுதியாக ஏற்படவேண்டிய மதிப்பிறக்கம் உடனடியாக ஏற்படுவதைவிடக் குறைவாக இருக்கும் என்பதையும் முன்னாலேயே உணருகின்றனர். பாதிக்கப்பட்ட செலாவணி மிகையாக மதிப்பிறக்கம் அடைந்தால் அவர்கள் அதை வாங்க ஆரம்பித்து அதனால் நாணயமாற்றுவீதம் விழாமல் காக்கப்படுகிறது.

ஆனால், ஒரே ஒரு சமயத்தில் மட்டும் ஊகவாணிபம் திடநிலையைக் குலைக்கலாம். ஒரு நாடு பணவீக்கத்தில் ஈடுபட ஆரம்பித்தால் இந்நிலைமை தோன்றுகிறது. விலைகளும், பண வருமானங்களும் உயருகின்றன; அதன் செலுத்துநிலை பாதகமாகிறது; அதன் செலாவணி

மதிப்பிறக்கம் அடைகிறது. இறக்குமதி, ஏற்றுமதி விலைகள் உயர்ந்து பணவீக்கத்தை மேலும் வலுப்படுத்துகின்றன. இப்போது, பண வீக்கம் தொடர்ந்து இருக்கும் என்று ஊகவணிகர்கள் (சரியாக) மதிப்பிட்டால், அவர்கள் உடனடியாகவும், முன்னேக்கியும் அச் செலாவணியை விற்பர். அதனால் மதிப்பிறக்கத்தின் அளவு மேலும் அதிகமாகிறது. எரியும் நெருப்பில் எண்ணெயை வார்த்த நிலை உண்டாகிறது. ஆனால், இது நாம் ஏற்கெனவே அறிந்த ஒரு குறை தான்—நிதித்துறையில் பொறுப்பற்ற தன்மை சீர்குலைக்கும் மதிப்பிறக்கத்துக்குக் காரணமான உண்மைக் குற்றவாளி இதுதான். ஏற்கெனவே கெட்டுப்போன நிலையைத்தான் ஊகவாணிபம் மேலும் கெடுக்கிறது; நெகிழ்ச்சியுள்ள நாணயமாற்று வீதங்கள் இல்லாமல் மாருத வீதங்கள் இருக்குமானல் இதே நிலைமையில் இதைவிட மோசமான நிலையை ஊகவாணிபம் ஏற்படுத்தக்கூடும்.

திடநிலை குலைக்கும் ஊகவாணிபம்பற்றிய பயம் மிகவும் மிகைபடக் கூறப்படுகிறது. எனினும், அப் பயம் இருப்பதனுலேயே நாணய மாற்று வீதங்கள் தடையின்றி மாறுவதைப் பெரும்பாலான அரசாங்கங்கள் அனுமதிப்பதில்லை. மேலும், நாள்தோறும் நாணய மாற்று வீதங்கள் மீண்டும் மீண்டும் ஏறி இறங்குவதை அவைகள் விரும்புவதில்லை. எனவே, அவை திடநிலைப்படுத்தும் நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றன. அதற்காகத் தம் நாட்டுச் செலாவணி ஒரு பகுதியும், பொன்னும் அன்னியச் செலாவணியும் மற்றப் பகுதியும் கொண்ட நிதிக் கணக்கை ஒவ்வோர் அரசாங்கமும் நிறுவும். அவசியமற்ற மதிப்புயர்வைத் தடுக்க நாணயமாற்று அங்காடியில் தன் செலாவணியை விற்கும்; மதிப்பிறக்கத்தைத் தவிர்க்க, தன் பிற சொத்துகளைக் கொண்டு தன்னுடைய செலாவணியையே வாங்கும்.

### ஒரு பன்னாட்டு அதிகாரக் குழு (An International Authority)

திடநிலைப்படுத்தும் நடவடிக்கைகளைப் பன்னாட்டு அளவிலும் செய்ய முடியும். அப்போது அவற்றின் திறனும் அதிகமாக இருக்கும். ஒரு பன்னாட்டுச் செலாவணி அதிகாரக் குழுவை அமைப்பதன்மூலம் தனியார் மூலதன இடப்பெயர்ச்சியால் ஏற்படும் நீர்மையோடு பன்னாட்டு நீர்மையும் கிடைக்கும். இதுபோன்ற ஓர் அருமையான யோசனையைப் பேராசிரியர் மீட் (Professor Meade) தெரிவித்திருக்கிருர். தடையின்றி நாணயமாற்று வீதங்கள் மாறும் முறையின் பல கண்டனங்களை இது தவிர்க்கும்.[30] அவரது திட்டப்படி (1) சீர்திருத்தப்

[30] James E. Meade, 'The Future of International Payments,' in *Factors Affecting the United States Balance of Payments.*

பட்ட ஓர் பன்னாட்டுச் செலாவணி நிதியில் இதில் பங்குபெறும் நாடுகளின் செலாவணி நிர்வாகத்தினர் அனைவரும் தம்மிடமுள்ள பொன்னும் அன்னியச் செலாவணியுமான சேமநிதி அனைத்தையும் செலுத்திவிடுவர். அதற்குப் பதிலாகப் பொன் சர்ட்டிபிகேட்டுகளைப் பெறுவர். இந்தப் பொன் சான்றிதழ்கள்தான் இனி இந் நாடுகளின் ஒரே சேமநிதிகளாக இருக்கும். (2) இப் பொன் சான்றிதழ்களின் அளவில் ஒவ்வொரு நாட்டின் செலாவணியும் மதிப்பில் மாறுபட அனுமதிக்கப்படும். ஒவ்வொரு நாட்டின் செலாவணி நிர்வாகத்தினரும் தம் செலாவணிக்கு ஆதரவாக இப் பத்திரங்களை உபயோகிக்கலாம்; தம் செலாவணியின் மதிப்பைக் குறைக்க அதைக் கொடுத்து இந்தச் சான்றிதழ்களை வாங்கலாம். (3) ஏற்கெனவே உறுப்பு நாடுகள் IMF-ல் கட்டியுள்ள பொன், சொந்தச் செலாவணிகளோடு இவையும் சேர்ந்தால் மொத்தச் சேமநிதித் தொகை மிகப் பெரிய அளவில் இருக்கும். இந்த மூலதன வசதியை வைத்துக்கொண்டு அந் நிதி பிரம்மாண்டமான பன்னாட்டுத் திடநிலை காக்கும் நிதிக் கணக்கு ஒன்றை நடத்தலாம். எந்தச் செலாவணிகளைக் குறை மதிப்புள்ளவை யாக அது நினைக்கிறதோ அவற்றை ஆதரிக்கவும், எவற்றை மிகை மதிப்புடையவையாக அது நினைக்கிறதோ அவற்றின் மதிப்பைக் குறைக்கவும் இக் கணக்கைப் பயன்படுத்தலாம். இந் நடவடிக்கை களின்மூலம் பன்னாட்டுச் செலாவணி நிதி திடநிலைக்கு உதவும் தனியார் மூலதன இடப்பெயர்ச்சிகளுக்குத் துணை செய்யலாம்; திடநிலை குலைக்கும் மூலதன இடப்பெயர்ச்சிகளுக்கு ஈடு செய்யலாம். (4) புதிதாகப் பொன் சர்டிபிகேட்டுகளை வழங்கித் தேசியச் செலாவணி களை வாங்கியும், ஏற்கெனவே பாக்கி நிற்கும் சர்டிபிகேட்டுகளை தன் தேசியச் செலாவணி இருப்புகளை விற்றுத் திருப்பி வாங்கி யும், தேசியச் செலாவணி நிர்வாகத்தினர் தம் திடநிலைப்படுத்தும் நடவடிக்கைகளுக்காக உபயோகப்படுத்தக்கூடிய மொத்த நிதித் தொகையைக் கட்டுப்படுத்தப் பன்னாட்டுச் செலாவணி நிதியால் முடியும்.

இத்தகைய நிறுவன ஏற்பாட்டினால் இரு முக்கியமான நன்மைகள் விளையும். (1) நாட்டுக்கு நாடு போட்டி போட்டுக்கொண்டு செலாவணி மதிப்பிறக்கம் செய்ய முயல்வதை இது தடுக்கும். (இது நேருவது அரிது. ஆனால், சிலர் இது ஏற்படக்கூடும் என்று அஞ்சுகிறார்கள்.) (2) பொதுவாகத் தேசியச் செலாவணிகளின் அளவில் தன் பொன் பத்திரங்களின் மதிப்பைப் பன்னாட்டுச் செலாவணி நிதி மாறாது வைத்திருந்தால், (வணிக பாங்குகளும் தனிநபர்களும் வைத்திருக்கக் கூடிய) இப் பத்திரங்கள் பன்னாட்டு ஒப்பந்தங்களின் மதிப்பை அள விடப் பயன்படக்கூடும். இதனால் பன்னாட்டு முதலீடு சுலபமாக நாடு விட்டு நாடு போகும்.

## முடிவு

மையத்தில் ஒரு சீர்திருத்தப்பெற்ற பன்னாட்டுச் செலாவணி நிதியுடனோ, அல்லாமலோ நெகிழ்ச்சியுள்ள நாணமாற்று வீதங்களுள்ள அமைப்பு ஒன்றுதான் முழு வேலைநிலை, விலைத் திடநிலை, பொருளாதார வளர்ச்சி ஆகிய மிக முக்கியமான நாட்டுக் குறிக்கோள்களைத் தம் பன்னாட்டுக் கணக்குகளின் நிலைபற்றி அதிகம் கவலைப்படாமல் நாடுகள் பின்பற்ற வழி செய்யும் பன்னாட்டுச் செலாவணி அமைப்பாகும். இவ்வமைப்பில் அங்காடித் தொடர்புகளில் பன்னாட்டுத் தேவைகளிலும் அளிப்புகளிலும் ஏற்படும் தராதர மாறுதல்களைச் செலுத்துநிலை பிரதி பலிக்கும். ஓர் அங்காடி அமைப்பில் ஏற்படுவது போன்றே செலாவணி களின் தராதர விலைகள் மாறுவதன் மூலம் செலுத்துநிலை திருத்தமடை கிறது—அதாவது, நாணயமாற்று வீதங்களின் மாறுதல்கள்மூலம் திருத்தமடைகிறது. செலுத்துநிலைபற்றிய கவலை குறைவதால் பண உதவி, வாணிபம் இவற்றின்மீதிருந்த தடைகளைத் தாராள மனப் பான்மையோடு நாடுகள் நீக்கும். பின்தங்கிய நாடுகளுக்கு அளிக்கப் படும் பண உதவி, அந்தச் சமயத்தில் உதவி தரும் நாட்டின் செலாவணி மிகை மதிப்புடையதாக உள்ளதா, குறைமதிப்புடையதாக உள்ளதா என்பதைப் பொறுத்திராமல், அந்நாட்டின் உதவும் சக்தியை, அதன் செல்வத்தைப் பொறுத்திருக்கும்.

அடுத்த சில ஆண்டுகளில் இத்தகையதொரு பெரிய பன்னாட்டுச் செலாவணிச் சீர்திருத்தம் ஏற்படக்கூடியது மிகவும் அசாத்தியம் எனத் தோன்றுகிறது. ஏனெனில், சாதாரணமாகப் புதியதொரு வழியை மேற்கொள்வதில் தயக்கம் எங்கும் உண்டு. அதைத் தவிர, முதல் மத்திய பாங்கு நிர்வாகிகளையும் கருவூல அதிகாரிகளையும் ஒப்புக்கொள்ளச் செய்யும் கடினமான காரியம் உள்ளது. அதன் பிறகு ஒரு டஜன் நாடுகளின் சட்டமன்றங்களாவது அதை ஒப்புக் கொள்ளவேண்டும். அதுவும் மிகக் கடினம்; இருந்தபோதும் அபிப் பிராயங்கள் மாறுகின்றன. அதுவும் அவற்றை மாற்ற முயற்சி செய்து வந்தால் பலமுறை அவை மாறுவதைக் கண்டிருக்கிறோம். அப்படி அவை மாறும் வரை சமரச வழி ஏதாவது செய்யவேண்டும். எப்படிச் சமரச வழி இருக்கவேண்டும் என்பது ஏற்கெனவே தெரிந்ததுதான். சேமநிதிச் செலாவணி அமைப்பை விரிவடையச் செய்யவேண்டும்; பன்னாட்டு நீர்மையைப் பல வகையில் பெருக்கவேண்டும்; பொதுவாக, உள்ள நிலையை அதிகம் மாற்றாத உபாயங்களைக் கையாளவேண்டும்.

## பார்வைக்குரிய சில நூல்கள்

Friedman, Milton, 'The Case for Flexible Exchange Rates,' in *Essays in Positive Economics*. Chicago:

University of Chicago Press, 1953. நெகிழ்ச்சியுள்ள நாணய மாற்று வீதங்களை ஆதரித்துச் சுருக்கமாகவும் அதை ஒப்புக் கொள்ளச் செய்யுமாறும் கூறுகிறது.

Harris, Seymour E., ed., *The Dollar in Crisis*. New York: Harcourt, Brace & World, Inc., 1961. இதில் பொன் விலையுயர்வுபற்றி ஹேரடின் கட்டுரையும், தன் திட்டத்தை ட்ரிஃபின் விவரிக்கும் ஓர் அத்தியாயமும், ஆல்ட்மன் (Altman) அதைக் குறைகூறுவதும், அதற்கு ட்ரிஃபினின் பதிலும் உள்ளன.

Joint Economic Committee, *Factors Affecting the United States Balance of Payments*, 87th Congress, 2nd sess. Washington, D. C.: Government Printing Office, 1962. 3, 4, 7 பாகங்களில் பன்னாட்டுச் செலாவணிச் சீர்திருத்தம்பற்றிப் பணத்துறை நிபுணர்கள் கூறும் பலவகை அபிப்பிராயங்களைக் கொண்ட கட்டுரைகள் உள்ளன.

Lutz, Friedrich A., *The Problem of International Liquidity and the Multiple-Currency Standard*, Essays in International Finance No. 41. Princeton, N. J.: International Finance Section, Princeton University, March, 1963. பன்னாட்டுச் செலாவணிப் பிரச்சினைகளுக்கு இரண்டாவது சிறந்த தீர்வாகப் பல-செலாவணித் திட்டத்தை விரிவாக்குவதை ஆதரிக்கிறது.

Machlup, Fitz, *Plans for Reform of the International Monetary System*, Special Papers in International Economics No 3. Princeton, N. J.: International Finance Section, Princeton University, August, 1962. சுமார் 60 பக்கங்களில் சுருக்கமாக எழுதப்பட்டிருப்பினும் அப் பொருளை அருமையாக விளக்குகிறது. அடிக் குறிப்புகள் குறிப்பு நூல்களை நிறையக் கூறுகின்றன.

Sohmen, Egon, *International Monetary Problems and the Foreign Exchanges*, Special Papers in International Economics No 4. Princeton, N. J.: International Finance Section, Princeton University, April, 1963. கட்டுப்படாத நாணயமாற்றுவீத முறையை ஆதரிப்பவர் ஒருவரின் கண்ணோக்கில் பன்னாட்டுச் செலாவணிச் சீர்திருத்தப் பிரச்சினையின் அழகான திறனாய்வு.

———, *Flexible Exchange Rates: Thsory and Controversy.* Chicago: University of Chicago Press, 1961. மாறுத நாணய மாற்றுவீத முறையும் மாறும் நாணயமாற்றுவீத முறையும் எப்படிச் செயலாற்றுகின்றன என்பதைப்பற்றிக் கோட்பாட்டளவில் ஆராய்ச்சி.

Triffin, Robert, *Gold and the Dollar Crisis.* New Haven, Conn.: Yale Univerisity Press, 1960. சீர்திருத்தத்துக்கான ட்ரிஃபின் யோசனையின் விவரம், மாற்றுரிமையின் பொருள் இப் போது மாறுபட்டுள்ளதுபற்றி ஒளியூட்டும் விளக்கம், சேமநிதி போதுமான அளவு இருப்பதைப்பற்றிய விளக்கம் ஆகியவை உள்ளன.

# 28. பொருளாதார வளர்ச்சி
## (Economic Development)

பன்னாட்டுச் செலாவணிச் சீர்திருத்தம் தொடர்ந்து இருக்கக்கூடியதும் மிக அவசரமானதொரு பிரச்சினையாகவும் இருக்கலாம். சில சமயம் ஒரு நெருக்கடியாகவும் அஃது இருக்கலாம். ஆனால், அஃது எல்லாருக்கும் விளங்காது; சிலரை மட்டுமே அது பாதிக்கக்கூடியது. செலாவணித்துறையில் மிகவும் தீவிரமான ஒரு சீர்திருத்தம் ஏற்பட்டால்கூட அது பாதிக்கும் மக்களது பழக்க வழக்கங்களையோ மனப்பாங்கையோ அது பாதிக்காது; அவர்களது தினசரி வாழ்க்கையைப் பாதிக்கும் அமைப்புகள் மாரு; பொருளாதாரச் சாதனங்கள் பயன்படும் விதமும் மாருது. ஆனால், அதற்கு மாருக, உலகில் பொருளாதார வளர்ச்சியில் பின் தங்கிய பிராந்தியங்களின் வளர்ச்சியை வேகமாக்கும் பிரச்சினையை எடுத்துக்கொண்டால், அதன் காரணமாக உற்பத்திச் சாதனங்களின் பயன் அதிகமாகிறது. பொருளாதார, சமூக அமைப்புகள் திருத்தி அமைக்கப்படும், மக்களது பழக்க வழக்கங்களும் மனப்பாங்கும் மாறும்.

### பொருளாதார வளர்ச்சி என்ருல் என்ன?

பொருளாதார வளர்ச்சி என்பது எதைக் குறிக்கிறது என்பதைச் சற்றுக் கவனிப்போம். முன்னேறிய நாடுகளுக்கும் வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கும் தலா வருமானங்களிலுள்ள (per capita incomes) வித்தியாசத்தைக் குறைப்பது என்று சிலர் இதற்குப் பொருள் கொள்கிருர்கள். இந்த வித்தியாசம் பெரியது என்பதில் சந்தேகமே இல்லே. 28 1 பட்டியல் 'அதன் அளவைப்பற்றி ஓரளவுக்குக் கூறுகிறது. 1955-ல் வளர்ச்சி மிக்க நாடுகளின் சராசரி தலா வருமானம் ($ 1,228), மிக ஏழை நாடுகளின் சராசரி தலா வருமானத்தைப் போல ($ 97) பன்னிரு மடங்குக்கு அதிகமாக இருந்தது. அதற்குப் பின்னும் நிலைமை அதிகமாக மாறவில்லே. காலநிலே, நுகர்வுப் பழக்கங்கள், நடவடிக்கைகள் இவற்றின் மாறுதல்களினுல் வருமானம் மாறுவதற்கு ஒரு மிகை மதிப்பீடு செய்தாலும்கூட, இந்த வித்தியாசம் அதிகமே.

**பட்டியல் 28·1. பொருள்சார் நலத்தின் அளவுகள், 1955**
(Measures of Material Welfare, 1955)

| | நாட்டு உற்பத்தி தலா (டாலர்கள்) | ஒரு நாளுக்குத் தலா உண்ணும் காலரி அளவு (எண்ணிக்கையில்) | புரதச்சத்து ஒரு நாளுக்கு உண்ணப்படுவது (கிராம்களில்) | குழந்தைச் சாவு (1000 உயிரோடு பிறக்கும் குழந்தைகளில் சாகும் எண்ணிக்கை) | எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் (10 வயதும் அதைவிட அதிகமானதும் ஆன மக்கள் தொகையில் சதவீதம்) | குடியிருப்பவர்கள் எண்ணை, உள்ள மருத்துவர்கள் எண்ணிக்கையால் வகுத்தது (எண்) | GNP-ல் மொத்த முதலீட்டின் சதவீதம் (1954) |
|---|---|---|---|---|---|---|---|
| 1. $ 750-க்குமேல் தலா வருமானங்கள் கொண்ட நாடுகள் | 1288 | 3,078 | 90 | 33 | 98 | 953 | 18·8 |
| 2. $ 300-க்கும் $ 750-க்கும் இடையே தலா வருமானங்கள் கொண்ட நாடுகள் | 470 | 2,761 | 84 | 57 | 84 | 782 | 20·7 |
| 3. $ 150-க்கும் $ 300-க்கும் இடையே தலா வருமானங்கள் கொண்ட நாடுகள் | 229 | 2,369 | 70 | 72 | 55 | 4,129 | 14·9 |
| 4. $ 150-க்குக் குறைவாகத் தலா வருமானங்கள் கொண்ட நாடுகள் | 97 | 2,048 | 55 | 114 | 38 | 14,388 | 9·8 |

**குறிப்பு:** வருமானத் தொகுதிகளில் சேர்ந்த நாடுகள் பின்வருமாறு: 1. அமெரிக்கா, கனடா, ஃபிரான்ஸ், பிரிட்டன், டென்மார்க், ஜெர்மனி; 2. உருகுவே, இஸ்ரேல், ஆஸ்டிரியா, இத்தாலி, அர்ஜென்டினா, கியூபா; 3. துருக்கி, பிரேசில், ஜப்பான், கிரீஸ், பிலிப்பீன்ஸ், ஈராக், மெக்சிகோ; 4. எகிப்து, இந்தோனேசியா, இலங்கை, சிரியா, தாய்லந்து, இந்தியா, பர்மா, பாகிஸ்தான்.

**மூலம்:** The Role of Foreign Aid in the Development of Other Countries, அமெரிக்க செனட்டின் வெளிநாட்டு உதவித் திட்டத்தை ஆராய அமைந்த விசேஷக் குழுவின் வேண்டுகோளுக்கிணங்க சிகாகோ பல்கலைக்கழகத்தில் பொருளாதார வளர்ச்சி, கலாசார மாறுதல் ஆராய்ச்சிக் கேந்திரம் தயாரித்த நூல். 85th Congress, 1st Session (Government Printing Office, Washington, D. C., 1957).

ஒரு நாட்டின் தலா வருமான அளவு அதன் பொருளாதார வளர்ச்சிக்கு ஓர் அளவையாக இருக்கிறது. இருந்தாலும் அதை வைத்துக் கொண்டு ஏன் வருமானம் அதிகமாகவோ குறைவாகவோ இருக்கிறது என்பதைக் கூறமுடியாது. தலா வருமான அளவு உயர்ந்தால், அந்த மாறுதலின் காரணங்களை அதிலிருந்து அறிய முடியாது. தலா வருமானம் என்பது முன்னேற்றம் அல்லது முன்னேற்றமின்மையைக் குறிக்கும் ஓர் எளிய எண்ணிக்கை. இது எந்த நிலவரத்தைப் பொறுத்திருக்கிறதோ அதைப் பார்த்தால்தான் பொருளாதார வளர்ச்சி எப்படி ஏற்படுகிறது என்பதை நாம் அறியலாம். அந்த நிலவரத்தில் ஒரு நாட்டின் பொருள், பணிகளை உற்பத்தி செய்யும் சக்தியைப் பாதிக்கும் அம்சங்கள் அடங்கியுள்ளன. அவை பின்வருமாறு: அந் நாட்டின் இயற்கை வசதிகள்; அதன் உழைப்பாளிகளின் எண்ணிக்கையும் திறமையும்; அதன் தொழிலுக்கும் விவசாயத்துக்கும் கிடைத்துள்ள மூலதனப் பொருள்களின் அளவும் வகைகளும்; இப் பொருளாதார சாதனங்கள் எவ்வளவு திறம்பட பயனுகின்றன என்பதை நிர்ணயிக்கும் அந் நாட்டின் சமூக, பொருளாதார அமைப்புகள் (institutions), மனப்பாங்குகள், பழக்க வழக்கங்கள் ஆகியவை.

ஐக்கிய அமெரிக்காவை, ஒரு 'சரியான' (typical) வளர்ச்சி குன்றிய நாடோடு உதாரணத்துக்கு ஒப்பிடலாம். அமெரிக்கா அளவில் பெரியது, இயற்கைச் செல்வத்தை நிறையப் பெற்றிருக்கிறது. கடந்த ஒரு நூற்றுண்டுக்கு மேலாக ஏற்பட்ட மூலதனச் சேர்க்கையினுல் அங்குப் பலவகையான சமூகப் பொது முதலீட்டு அமைப்புகள் (social overhead capital) நிறைய உள்ளன. உதாரணமாக, அங்கு இருப்புப்பாதைகள், சாலைகள், விமானக் கம்பெனிகள் ஆகியவை விரிவாக அமைந்துள்ளன; நிறைய மின்சக்தி உள்ளது; எல்லாருக்கும் அடிப்படைக் கல்வியும் பலருக்கு மேலும் உயர்ந்த பயிற்சியும் தரப் போதுமான பள்ளிக்கூடங்களும் கல்லூரிகளும் உள்ளன; உயர்ந்த ஆரோக்கிய நிலையைக் காப்பாற்றப் போதுமான வைத்தியசாலைகளும் மருத்துவ வசதிகளும் உள்ளன. தனியார் முதலீடு காரணமாக, தொழிற்சாலைகளிலும் பண்ணைகளிலும், உற்பத்தியை மிக அதிகமாகத் தரும் தொழில்நுட்ப அறிவு எல்லா நாடுகளையும்விட அதிகமாக வளர்ந்து பயன்படுகிறது. நாட்டின் உழைப்பாளிகள் நன்கு தேர்ச்சி பெற்றவர்கள், ஒழுங்காக வேலை செய்பவர்கள், சுறுசுறுப்பாக உழைப்பவர்கள். அதன் தொழில் வணிகத் தலைவர்களின் எண்ணிக்கை அதிகம்; அவர்கள் துணிவுமிக்கவர்கள்; மிகவும் மரியாதையோடு நடத்தப்படுபவர்கள். அதன் அரசாங்கம் திடமானது, திறமையானது. பிற பல நாடுகளுடன் ஒப்பிட்டால் நேர்மையானது. தொழில்களில் ஊன்றிய சில சுயநலமிகள் எதிர்த்தாலும்கூட, சதா

மாறுதல் ஏற்படுவது இயற்கை என்று அங்கு எல்லாரும் ஒப்புக் கொள்கிறார்கள்.

இதற்கு மாறாகப் பெரும்பாலான வளர்ச்சி குன்றிய நாடுகளில் இயற்கைவளம் குறைவு. ஆனால், இதற்குச் சில விதிவிலக்குகள் இருக்கின்றன. இத்தகைய நாடுகளின் மூலதனச் சேர்க்கையின் வேகம் குறைவாக இருந்து வந்துள்ளது. இதன் விளைவுகளை இவற்றில், போக்குவரத்து அமைப்புச் சுமாராக நன்றாக உள்ள நிலையினின்று (இந்தியா, அர்ஜென்டினா), மிக மோசமான நிலைவரையில் இருப்பதிலிருந்து பார்க்கலாம்; மேலும், மின்சாரப் பற்றாக்குறை அடிக்கடி ஏற்படும். மின்சார அளிப்பு அடிக்கடி தடைப்படும்; பள்ளிகளும் ஆசிரியர்களும் மிகக் குறைவாக இருப்பதால் எழுதப் படிக்கத் தெரியாதவர்களின் எண்ணிக்கை மிக அதிகம்; வைத்தியர்கள் மிகவும் குறைவு, வைத்தியசாலைகள் அதைவிடக் குறைவு. வளர்ச்சி குன்றிய நாடுகள் பலவற்றில் 'தொழில்' என்பது கைத்தொழில் உற்பத்தியைத்தான் இன்னமும் குறிக்கிறது. ஆனால், சிலவற்றில் சிறு தொழிற்கூடங்களுக்குப் பக்கத்தில் பெரிய எஃகாலைகளும் சிமிட்டித் தொழிற்சாலைகளும் காணப்படுகின்றன. பெரிய தோட்டங்களில் தவிர விவசாய உற்பத்தி முறைகள் பொதுவாகப் பழங்காலத்தவையே. தொழிலாளர்களும் பெரும்பாலும் தேர்ச்சியற்றவர்கள்; உற்பத்தித்திறன் குறைந்தவர்கள்; நவீன தொழிற்சாலைகள் எதிர்பார்க்கும் அளவுக்கு உழைக்கும் பழக்கம் இல்லாதவர்கள்; உணவுச் சத்துப் போதாமையாலும் தீராத உடல்நலக் குறைவினாலும் உழைக்கும் சக்தி குறைந்தவர்கள். இந் நாடுகளில் பண்ணை நிர்வாகம், புரோகிதம், போர்ப்படையில் சேருதல், அரசாங்க உத்தியோகம் ஆகியவை உயர்ந்தவையாகக் கருதப்படுவது மரபு. வாணிபமும் தொழிலும் தாழ்ந்த, மதிப்பற்ற உத்தியோகங்களாகக் கருதப்படுகின்றன. தொழில் நிர்வாகத்தில் சிறந்தவர்களின் எண்ணிக்கை, எனவே மிகவும் குறைவு. பல நாடுகளில் தொழில் நிர்வாகத்தை வெளிநாட்டார் மேற்கொள்ளவேண்டியிருக்கிறது. உதாரணமாக, இந்தோனேஷியாவிலும், தாய்லந்திலும், மலேயாவிலும் சைனாக்காரர்கள்; இலங்கையில் இந்தியர்களும் அராபியர்களும்; இலத்தீன் அமெரிக்காவில் பெரும் பகுதியில் சமீபகாலம் வரை மத்தியதரைக் கடலின் கிழக்கேயுள்ள நாடுகளைச் சேர்ந்தவர்கள் அல்லது புதிதாக ஐரோப்பாவிலிருந்து வந்தவர்கள் தொழிலை நிறைய நிர்வகிக்கின்றனர். பல நாடுகளில் திடமான அரசாங்கம் இல்லை. அப்படித் திடமாக இருந்தால் அங்குத் தனியார் சுதந்திரம் இராது. இலஞ்ச ஊழல் அதிகம். அரசாங்க நிர்வாகத்தில் திறமை இராது. மாறுதலை எதிர்க்கும் ஊன்றிய நலமிகள் (vested interests) பல நாடுகளில் மிகவும் சக்திவாய்ந்தவர்கள்: உதாரணமாக, ஈரானில் நிலப்பிரபுக்களும் சமயத் தலைவர்

களும்; பல இலத்தீன் அமெரிக்க நாடுகளில் பணக்கார நில முதலாளி கள்; இந்தியாவில் உயர்ந்த ஜாதிகள்; மேற்கு ஆஃப்ரிக்காவிலும் மத்திய ஆஃப்ரிக்காவிலும் இனங்களின் தலைவர்கள்.

பொருளாதார வளர்ச்சி என்றால் என்ன என்பதை இச் சுருக்கமான ஒப்பீடு தெளிவாக விளக்குகிறது. ஒரு பின்தங்கிய, சில சமயம் பழமையான, ஆனால் எப்போதும் உற்பத்தி குறைந்த சமுதாயத்தை ஒரு நவீன, உற்பத்தி மிகுந்த சமுதாயமாக மாற்றுவதுதான் அது. முன்னேறிய நாடுகளில் இந்த மாற்றம் இடைக்காலத்திலிருந்தே ஏற்பட்டு வருகிறது. ஆனால், அந்த நூற்றைம்பது ஆண்டுகளில்தான் இம் மாற்றம் அங்கு மிக அதிகமாக இருந்திருக்கிறது. ஆனால், இன்றைய வளர்ச்சி குன்றிய நாடுகள் அவ்வளவு காலம் காத்திருக்க விரும்பவில்லை. 'அதிகமாக எதிர்பார்க்கும் எண்ணப் புரட்சி' ஏற்பட்டு வளர்ச்சியின் கால அட்டவணை மாறிவிட்டது. கால அட்டவணையை மாற்றிவிட்டதால் வளர்ச்சி சீக்கிரம் வந்துவிடப்போவ தில்லை. சில நாடுகளில் எதிர்பார்த்த வளர்ச்சி ஏற்படாமல் போகலாம்; எந்த நாடும் அவை எதிர்பார்த்த காலத்துக்குள் வளரப்போவதில்லை. ஆனால், வளர்ச்சி வேகத்தை அதிகரிக்க பல நடவடிக்கைகளை எடுக்க முடியும். அபிவிருத்தியில் பெரும்பகுதியை வளர்ச்சிகுன்றிய நாடுகள் தாமே செய்துகொள்ள வேண்டியிருக்கும். ஆனால், ஏற்கெனவே வளர்ந்த நாடுகளில் நிறையச் சேர்ந்துள்ள தொழில்நுட்ப அறிவையும் விஞ்ஞான அறிவையும் இந் நாடுகள் பயன்படுத்திக்கொள்ள முடியும். தம்மிடம் குறைவாக உள்ள மூலதனத்துக்குத் துணையாகப் பணக்கார நாடுகளின் சேமிப்புகளையும் அவை பயன்படுத்திக்கொள்ள முடியும். தங்கள் வேகமான வளர்ச்சிக்குத் தேவையான சாதனங்களையும் பொருள்களையும் வாணிபத்தின்மூலம் அவை பெறமுடியும். பொருளா தார வளர்ச்சியின் இப் பன்னிரண்டு அம்சங்களைத்தான் இந்த அத்தியா யத்தில் பார்க்கப்போகிறோம்.

## உற்பத்தி முறைகளில் அபிவிருத்தி

முன்னேறிய நாடுகளுக்கும் பின்தங்கிய நாடுகளுக்கும் இடையே காரணி வீதாசாரத்தில் பெரும் வித்தியாசம் உள்ளது. இதன் காரணமாகவாவது இவ்விருவகை நாடுகளுக்கும் இடையே உற்பத்தி முறைகளில் நிறைய வித்தியாசம் இருக்கும். வளர்ச்சி குன்றிய நாடு களில் பெரும்பாலானவற்றில் உழைப்பாளிகள் நிறைய உள்ளனர். ஆனால், தொழில் வளர்ந்த நாடுகளில் பெரும்பாலானவற்றில் மூலதனம் நிறைய உள்ளது; மூலதனத்தோடு ஒப்பிட்டால் தொழிலாளிகள் பிற நாடுகளில் உள்ளதைவிடக் குறைவு. உலகின் வளர்ச்சி குன்றிய பிராந்தியங்களில் மூலதனத்தைச் சிக்கனமாக உபயோகிப்பதற்கும்,

மூலதனப் பொருள்களை அதிகம் உபயோகிக்கும் தொழில் முறைகளைவிட உழைப்பை அதிகமாக உபயோகிக்கும் தொழில் முறைகளைப் பயன் படுத்துவதற்கும் இதுவே போதுமான காரணமாக இருக்கிறது.

ஆனால், உண்மையில் உற்பத்தி முறைகளில் உள்ள வித்தியாசத் துக்கு இதுமட்டும் காரணமன்று. பின்தங்கிய நாடுகளில் பெரும் பாலானவை, தொழிலிலும் விவசாயத்திலும் பயன்படுத்தும் தொழில் நுட்பம் மிகவும் பழமையானது; எப்படிப் பார்த்தாலும், பொதுவாகக் காலங்கடந்தது. அந் நாடுகளில் மிகக் குறைவான செலவில் சில தொழில் முறைகளைப் புதுப்பிப்பதன்மூலம் குறிப்பிடத்தக்க விளைவுகளை உண்டாக்க முடிகிறது. உதாரணமாக, விருத்தி செய்த விதைகளை உபயோகிப்பது, கால் நடைகளின் இனப்பெருக்கத்தை விஞ்ஞான ரீதியில் செய்வது, சரியான பயிர்ச் சுழற்சி முறையைக் கையாளுவது ஆகியவற்றினால் விவசாய உற்பத்தியைப் பெருமளவு அதிகரிக்க முடிந்திருக்கிறது. தொழில்களில்கூட, சரக்கு இருப்புக் கட்டுப்பாடு களிலும், கணக்குப் பதிவுகளிலும் அபிவிருத்தி, உற்பத்தியை நன்கு சரி பார்ப்பது, தொழிலாளிகளுக்கு மேலும் நன்கு பயிற்சி அளிப்பது போன்ற சிறு அபிவிருத்திகள் பெரும் பலனை அளிக்கக்கூடும். வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கு உதவ ஐக்கிய நாடுகள் அமைப்பு (United Nations) எடுக்கும் நடவடிக்கைகளில் கடந்த சில ஆண்டுகளாகத் தொழில்நுட்ப உதவித் திட்டங்கள்தான் முக்கியமாக இருக்கின்றன. பிரிட்டிஷ் காமன்வெல்த்தைச் சேர்ந்த தென்கிழக்கு ஆசிய நாடுகளுக் கான கொழும்புத் திட்டத்திலும் தொழில்நுட்ப உதவியே முக்கியமாக இருக்கிறது. தனித்தனியாக அமெரிக்கா, பிரிட்டன், ஃபிரான்ஸ் மற்றும் பிற நாடுகள் அளிக்கும் உதவியிலும் இது முக்கிய பங்கு பெறுகிறது. குறைந்த செலவில் நிறைய அளவுக்கு உற்பத்தித் திறனை உதவிபெறும் நாடுகளில் இத் திட்டங்கள் உயர்த்தியுள்ளன.

தொடர்ந்து தொழில்நுட்ப உதவியை மேலும் பலப்பல துறை களில் அளிக்கமுடியும். ஆனால், தொழில்நுட்ப உதவியால் மட்டும் சாதிக்க முடிவதற்கு ஓர் எல்லை உண்டு. மூலதனச் சாதனங்களில் நிறைய முதலீடு செய்யாமல் உற்பத்தித்திறன் மிக அதிகமான இன்றைய தொழில் நுட்பத்தில் மிகச்சிறிய அளவுக்குமேல் வளர்ச்சி குறைந்த நாடுகள் பெறமுடியாது. உதாரணமாக, ஒரு பெரிய நீர்ப் பாசனத் திட்டத்துக்கு நிறைய செலவில் அணைகளும், தேக்கங்களும், கால்வாய்களும் கட்டப்படவேண்டும். நிலப்பரப்பு, பயிராகும் பொருள்கள், நில உடைமை அமைப்பு ஆகியவற்றுக்கு உகந்ததாக இருந்தால், டிராக்டர்களையும் பிற எந்திர சாதனங்களையும் பயன்படுத்து வதற்கும் நிறைய செலவு ஆகும். ஊது உலைகளும் (blast furnaces), எஃகு உருட்டாலைகளும் (rolling mills) பெரியவையாக இருந்தால்

தான் திறம்பட வேலே செய்யும்; அவற்றுக்கு நிறைய மூலதன முதலீடு தேவை. நவீன சிமிட்டித் தொழிற்சாலேகளுக்கும் அதேபோல நிறைய மூலதன முதலீடு தேவை. மிருகங்களோ, நீராவியோ பயன்பட்ட இடத்தில் தொழில்களில் மின்சாரத்தைப் பயன்படுத்தவேண்டுமாளுல், அணேகள், மின் உற்பத்திசாலேகள், மின்சாரத்தை எடுத்துச் சென்று பங்கிடத் தேவையான அமைப்புகள், அதை மீண்டும் அனுப்பும் நிலேயங்கள் ஆகியவற்றுக்கு நிறைய பணம் தேவைப்படுகிறது.

## முதலீடும் பொருளாதார வளர்ச்சியும்

ஓர் ஏழை நாடு தன் மக்களின் வாழ்க்கைத்தரங்களே உயர்த்த வேண்டுமாயின் அவர்களுடைய உற்பத்தித்திறனே அதிகரிக்க வேண்டும். இதைச் செய்ய, உற்பத்தி முறைகளே அபிவிருத்தி செய்ய வேண்டும். நமக்குத் தெரிந்த திறன் அதிகமான தொழில் முறைகளுக்கு நிறைய மூலதனம் அவசியம். எனவே, வளர்ந்துவரும் நாடுகள் நிறைய முதலீட்டுக்கு ஏற்பாடு செய்து, அந்த ஏற்பாடுகளேத் தம் திட்டங்களில் சேர்க்கின்றன. பெரும்பாலான நாடுகளில் இம் முதலீட்டு ஏற்பாடுகள்தான் அவற்றின் பொருளாதார வளர்ச்சித் திட்டத்தின் மையமான பாகமாக இருக்கின்றன.

### செலுத்துநிலே

பிற நாடுகளோடு ஒப்பிட்டால் நடப்புச் சேமிப்புகள் குறைந்த அளவில் இருப்பது வளர்ச்சி குன்றிய நாடுகளின் மற்ருெரு பொது அம்சமாகும். இதளுல் சேமிப்புக் குறைவாக இருக்க, முதலீடு குறைவாக இருக்கும்; அதளுல் வருமானங்கள் குறைவாக இருக்கும்; அதளுல் சேமிப்புகள் குறைவாக இருக்கும்; இதைத்தான் பின்தங்கிய பொருளாதாரத்தை வருத்தும் 'பொல்லாத வட்டங்களுள்' (vicious circles) ஒன்ருக அடிக்கடி கூறுவது.

தாமாக மக்கள் சேமிக்கும் தொகை இவ்வாறு குறைவாக இருக்கவே அதைச் சரி செய்யப் பல நாடுகள் கட்டாயச் சேமிப்புகளேயும் அதிக வீதத்தில் முதலீடுகளேயும் செய்யப் பணவீக்க முறைகளேக் கையாளத் தொடங்கின. கடன் செலாவணி அதிகரித்ததால் அதிகமான முதலீட்டில் ஒரு பகுதி இறக்குமதிகளே அதிகரிக்கப் பயன்படுகிறது. உள்நாட்டில் பொருள்களுக்கும் பணிகளுக்கும் செய்யப்படும் செலவு அதிகமாகி, ஏற்றுமதி செய்யப்படும் பொருள்கள் உள்நாட்டிலேயே நுகரப்படுகின்றன; எல்லா விலேகளும் உயருகின்றன. ஏற்றுமதிகள் குறைகின்றன. நாட்டின் செலுத்துநிலேயில் பற்ருக்குறை உண்டாகிறது. வளர்ச்சி குன்றிய நாடுகளிடம் பொன்னும் அன்னியச் செலாவணிச் சேமநிதியும் குறைவு. அப்படியின்றி அவை நிறையச் சேம

நிதிகளை வைத்திருந்தாலும் இத்தகைய பற்றுக்குறையை நெடுங்காலத்துக்குத் தாங்கமுடியாது. எனவே, எதையாவது தியாகம் செய்தாக வேண்டும். சாதாரணமாக முதலீட்டு ஏற்பாடுகள் கைவிடப்படுவதில்லை. வாணிபச் சுதந்திரம்தான் கைவிடப்படுகிறது. நுகர்வுப் பொருள் இறக்குமதிகளுள் மிக அவசியமானவை மட்டும் அனுமதிக்கப்படும். மூலதனப்பொருள் இறக்குமதிகள்தான் முக்கியமாக அனுமதிக்கப்படும். நுகர்வோரைத் தவிர்த்து (அரசாங்கம் அல்லது தனியார்) முதலீட்டாளர்களை ஆதரித்தால் எப்படியாவது மூலதன அளிப்பு அதிகமாகும் என்பது அவற்றின் எண்ணம்.

மிஞ்சிமிஞ்சிப் போனால் இது கால்பாகம் உண்மை. பற்றுக் குறையை அடக்க இறக்குமதிக் கட்டுப்பாடுகள் உதவும். ஆனால், சேமிப்புகளை அதிகமாகச் செய்தால்தான் இறக்குமதிக் கட்டுப்பாடுகளால் மூலதன அளிப்பை அதிகரிக்கமுடியும். வழக்கமாக அவர்கள் உபயோகிக்கும் இறக்குமதிப் பொருள்கள் நுகர்வோருக்குக் கிடைக்காவிட்டால் உள்நாட்டில் அவற்றுக்கு இருக்கும் சிறந்த மாற்றுப் பொருள்களை அவர்கள் வாங்குவர். மோட்டார் கார்கள், நைலான் உடைகள், டப்பாவில் அடைத்த பண்டங்கள் அல்லது ஸ்காட்ச் விஸ்கி ஆகியவற்றை வெளிநாடுகளிலிருந்து அவர்கள் பெறமுடியாவிட்டால் அவற்றுக்கு மாறாக முன்னைவிடச் சிறந்த குடியிருப்பு வசதி, உல்லாசப் பொழுதுபோக்குகள், விளையாட்டுகள் ஆகியவற்றின்மீது தம் பணத்தைச் செலவிடுகின்றனர். நாட்டுக்குள் மூலதன உற்பத்திக்குச் செலவிடப்படக்கூடிய நிதிகள் இதுபோல உள்நாட்டுப் பொருள்கள்மீது செலவிடப்படுகின்றன. இதனால் என்ன சாதிக்கப்பட்டது? உள் நாட்டில் உற்பத்தியாகும் மூலதனப் பொருள்களுக்குப் பதிலாக இறக்குமதியான மூலதனப் பொருள்கள் பயன்படுத்தப்படுகின்றன. முதலில் இறக்குமதியான பொருள்களுக்குத் தகுந்த மாற்றுப் பொருள்கள் நுகர்வோர்களுக்குக் கிடைக்காமல் இருந்தால்தான் அவர்களுடைய சேமிப்புகள் கணிசமாக உயரும். இதற்காக, இறக்குமதிக் கட்டுப்பாடுகளோடு நுகர்ச்சியின்மீது கடுமையான பல வரிகளை விதித்து நுகர்ச்சியை நிறையக் குறைக்கவேண்டும். இறக்குமதிக் கட்டுப்பாடுகளை மட்டும் கொண்டு இக் குறிக்கோளைச் சாதாரணமாக அடைய முடியாது.[1]

மூலதனச் சேர்க்கையின் வேகத்தை அதிகமாக்க மற்றொரு வழி ஏற்றுமதிகளை அதிகரிப்பதாகும். அதற்கான நிதி வசதிக்கு பாங்குக்

[1] மூலதனச் சேர்க்கைக்கும் இறக்குமதிக் கட்டுப்பாடுகளுக்கும் உள்ள தொடர்புபற்றி விவரமான ஆராய்ச்சிக்குப் பின்வரும் நூலைப் பார்க்க: R. Nurkse, *Capital Formation in Underdeveloped Countries*, pp. 109–116. Published 1953 by Basil Blackwell, Oxford.

கடன்களை அதிகரிக்கலாம். ஏற்றுமதிகளை அதிகரித்தால் அன்னியச் செலாவணி அதிகமாக அந் நாட்டுக்குக் கிடைக்கிறது. அதைக் கொண்டு தேவையான மூலதனச் சாதனங்களை வெளிநாட்டில் வாங்கலாம். இறக்குமதிகளைக் கட்டுப்படுத்தினலும்தான் அன்னியச் செலாவணி அதிகமாகக் கிடைக்கிறது. எனவே, அதைவிட ஏற்றுமதிகளை அதிகரிப்பதனுல் பயன் அதிகம் இல்லை. அதன்மூலம் சேமிப்பு ஏற்படவில்லை. சேமிப்பு ஏற்பட்டால்தான் நிகரமாக மூலதனச் சேர்க்கை அதிகமாகும்.

ஏற்றுமதிகளை அதிகரிக்கத் தேவையான வசதிகளுக்கு எங்கே போவது? அந் நாடு மூலதனப் பெருக்கத்தை ஏற்படுத்த பணவீக்க நிதி ஏற்பாட்டைச் செய்து வருவதால் அப் பொருளாதாரத்தில் முழு வேலைநிலை இருப்பதாக வைத்துக்கொள்வோம். ஏற்றுமதியாளர்களிடம் நிறைய பணம் உள்ளது; எனவே, மூலதனப் பொருள்களை உள்நாட்டில் உற்பத்தி செய்து வந்தவர்களிடமிருந்து காரணிகளை ஏற்றுமதியாளர்கள் எடுத்துக்கொண்டுவிடுகின்றனர். மீண்டும் உள்நாட்டு மூலதனத்துக்குப் பதிலாக வெளிநாட்டு மூலதனம் உபயோகப்படுவது தவிர வேறு ஏதும் இதனுல் நிகழவில்லை. அல்லது உள்நாட்டு நுகர்ச்சிப் பொருள் உற்பத்தியிலிருந்து காரணிகளை அதிக விலை கொடுத்து ஏற்றுமதியாளர்கள் எடுத்துக்கொண்டு விடலாம். அப்படியும், நுகர்வோர் செலவுகளைக் குறைக்க ஒன்றும் செய்யப்படவில்லை ஆதலின் விலை ஏற்றம் மேலும் அதிகமாகும். எனவே, நுகர்வோரின் தேவைகளைப் பூர்த்தி செய்வதிலிருந்து எந்தச் சாதனமும் வேறு வழிகளில் செல்லாது. ஆகையால், மூலதன உற்பத்தியிலிருந்துதான் சாதனங்கள் ஏற்றுமதி உற்பத்தியை நோக்கிச் செல்லக்கூடும்

### வெளிநாட்டு மூலதனத்தின் பங்கு

இதுவரை பார்த்ததிலிருந்து ஓர் ஏழை நாட்டில் மூலதனச் சேர்க்கைப் பிரச்சினையில் மூன்றுவகை அடிப்படைப் பற்றுக்குறைகள் இருப்பது தெரியும். (1) பணச் சேமிப்புகளின் பற்றுக்குறை உள்ளது: விரும்பிய அளவுக்கு முதலீடு செய்யப் போதுமான பணத்துக்குத் தேவையான அளவைவிடக் குறைவாகச் சராசரிச் சேமிப்பு நாட்டம் இருக்கிறது. (2) உண்மைச் சேமிப்புகளின் பற்றுக்குறை உள்ளது: திட்டமிட்டபடி முதலீட்டைச் செய்யப் போதுமான அளவுக்குச் சாதனங்களை நுகர்வுப் பொருள் உற்பத்தியினின்று வெளியே விட மக்கள் அனுமதிக்கவில்லை. (3) விரும்பிய அளவுக்கு மூலதன உற்பத்திகளைச் செய்யப் போதுமான அளவுக்கு உள்நாட்டில் உற்பத்திச் சாதனங்கள் இல்லை; எனவே, அம் மூலதனப் பொருள்களை வெளிநாடு

களிலிருந்து வாங்கவேண்டி யிருக்கிறது.[2] முதலில் செலுத்துநிலையில் உபரி இல்லை என்று கொண்டால், அந் நாட்டில் அன்னியச் செலாவணிப் பற்றுக்குறை ஏற்படுகிறது.[3]

வளர்ச்சி பெற்றுவரும் நாடுகளில் எதனிடமும் பொன்னும் அன்னியச் செலாவணியுமான சேமநிதிகள் ஒரு குறைந்தபட்ச அளவைவிட அதிகமாக இல்லை. எனவே, இவ்வாறு நெருக்கடியான பற்றுக் குறைகள் ஏற்பட்டால் அவற்றை எடுத்து உபயோகிக்க முடியாது. அப் பற்றுக்குறைகளைச் சமாளிக்க ஒரே ஒரு வழிதான் உள்ளது: வெளிநாட்டு மூலதனத்தை வளர்ச்சிபெறும் நாடுகளுக்குள் ஈர்க்க வேண்டும். ஒரு வளர்ச்சிபெறும் நாட்டுக்குத் தேவையான அளவுக்கு முதலிடவும் கடன் தரவும் பண உதவி அளிக்கவும் அயல்நாட்டாரைச் சம்மதிக்கச் செய்துவிட்டால் இம் மூன்று பற்றுக்குறைகளும் தீர்ந்து போகும். வெளிநாட்டு மூலதனத்திலிருந்து அவசியமான இறக்குமதிகளை வாங்க அன்னியச் செலாவணி கிடைக்கிறது; முன்னம் இல்லாதிருந்த துணைச்சாதனங்களை இந்த இறக்குமதிகள் அளிக்கின்றன; இல்லாதுபோன உள்நாட்டுச் சேமிப்புகளின் இடத்தை வெளிநாட்டிலிருந்து வரும் பணம் நிரப்புகிறது.

நாட்டு வருமானச் சமன்பாட்டின் வாயிலாகக் கூறினால், ஒரு நாட்டின் மக்கள் தாமாகவே சேமிப்பதைவிட அதிகமாக முதலீடு செய்ய வேண்டுமானால், நாட்டு ஆக்கத்தைவிட அதிகமாகச் செலவு செய்யவேண்டும். நமக்கு ஏற்கெனவே தெரிந்த சமன்பாட்டிலிருந்து தொடங்குவோம்.

$$Y = C + I + G + (X - M)$$

இதில் $(C+I+G)$-யைத் தனியாகப் பிரிப்போம். அது மொத்த உள்நாட்டுச் செலவு அல்லது உள்நாட்டில் உறிஞ்சப்படும் (absorption)

[2] எல்லா முதலீட்டுத் திட்டங்களும் உழைப்பை முக்கியமாகப் பயன்படுத்துவதாகவும் மூலதனச் சாதனங்கள் இறக்குமதி செய்ய அவசியம் இல்லை என்று கொண்டாலும், முதலீட்டுக்குப் போதுமான அளவு உள்நாட்டுச் சாதனங்கள் இல்லாமையால் மூலதனப் பொருள் உற்பத்தியில் ஈடுபட்டுள்ள உழைப்பாளிகளுக்குத் தருவதற்கு உணவுப் பொருள்களையும் பிற கூலிப் பொருள்களையும் இறக்குமதி செய்யவேண்டியிருக்கும். சாதாரணமாக இருப்பது போல, மூலதனச் சாதனங்களை இறக்குமதி செய்யவேண்டியிருக்குமானால், என்ன இறக்குமதியாகிறது என்பது மாறுகிறதே தவிர, அடிப்படையான பிரச்சினையில் மாறுதல் ஏதும் இல்லை.

[3] இம் மூன்று பற்றுக்குறைகளைப்பற்றிய கூற்றைப் பின்வரும் நூலில் பார்க்கலாம்: S. Kuznets, 'International Differences in Capital Formation and Financing,' National Bureau of Economic Research, *Capital Formation and Economic Growth*, பக்கங்கள் 34–35. Published 1955 by Princeton University Press. Gerald M. Meier, *International Trade and Development*, பக்கங்கள் 85–89-ஐயும் பார்க்க. Published 1963 by Harper & Row, New York.

உற்பத்தி (இதை $A$ என்போம்).[4] இரு புறமும் மூலதனப் போக்கு இல்லாமல் இருந்தால், $(X-M)$ என்பது செலுத்துநிலே (balance of payments). (அதை $B$ என்போம்). எனவே,

$$Y=A-B, \text{ அல்லது}$$
$$B=Y-A.$$

முழு வேலேநிலேச் சூழ்நிலே இருப்பதாக வைத்துக்கொள்வோம். உதாரணத்தை எளிமையாக்க, இறக்குமதிகளும் ஏற்றுமதிகளும் சமம் என்றும் கொள்வோம். அப்போது உறிஞ்சலின் (absorption) ஓர் அம்சம் ஆன முதலீடு அதிகமானுல், பொருள்களும் பணிகளும் (உண்மை அளவில்) மொத்தம் உறிஞ்சப்படும் அளவு மொத்த உற்பத்தியைவிட ($Y$) அதிகமாக இருக்கும். உள்நாட்டுப் பொருள்களின் பற்றுக்குறை, செலுத்துநிலேயில் ஓர் உண்மைப் பற்றுக்குறையைக் காட்டுகிறது ; $B$ எதிர்கணிய எண்ணுகும். பண அளவில் எடுத்துக் கொண்டால் உறிஞ்சல் அதிகமாகும்போது, $C$, $I$ மற்றும் $G$-யின் பண மதிப்பு அதிகமாக்கப்படுகிறது. ஆனல், உற்பத்தியின் மதிப்பை ($Y$) அதிகரிக்க முடியாது. எனவே, மிகையாக உள்ள வாங்கும் சக்தி வெளிநாட்டை நோக்கிச் சென்று இறக்குமதிகளின் அளவை அதிகமாக்குகிறது. எனவே, செலுத்து நிலேயில் ஒரு பற்றுக்குறை ஏற்படுகிறது.

வெளிநாட்டு மூலதனத்தை உள்நாட்டுக்கு வரவழைத்தால் இதையெல்லாம் தடுக்கலாம். [அம் மூலதனம் நன்கொடைகள் கடன்கள் ஆகிய அயல்நாட்டு உதவியாக ($D$) வருவதாகக் கொள்வோம்.] திட்டப்படி முதலீடு அதிகமாவதால் உறிஞ்சல் $dA$ அளவு அதிகமாகிறது என்றும் அதே அளவுக்கு அயல்நாட்டு உதவி ($D$) கிடைக்கிறது என்றும் கொள்வோம். அப்போது நம் சமன்பாடு பின்வருமாறு இருக்கும் :

$$B+D=Y-(A+dA).$$

பொதுவாகச் சொன்னல் இச் சமன்பாட்டின் பொருள் இதுதான். வெளிநாட்டு மூலதனம் உள்ளே வருவதால், செலுத்துநிலேப் பற்றுக்குறை ஏற்படாமல் நாட்டு உற்பத்தியை நாட்டுச் செலவு அல்லது உறிஞ்சல் மிஞ்ச முடிகிறது. குறிப்பாகச் சொன்னல், மிகையான இறக்குமதிகளுக்குப் பதில் பணம் தர வெளிநாட்டு மூலதனம் ($D$, உதவுகிறது. நடப்புக்கணக்கில் செலுத்துநிலே ($B$) எதிர்கணியமாகிறது. ஆனல், நேர்கணிய வெளிநாட்டு முதலீடு, மொத்தச் செலுத்து நிலேயில் $(B+D)$, எதிர்கணிய $B$-யை ஈடு செய்கிறது. அதனல் அன்னியச்

[4] நுகர்வோர், முதலிடுவோர், அரசாங்கம் அனேவரும் இறக்குமதிகள் மீது செலவிடப்படும் தொகையும் இதில் கலந்துள்ளது. நிகர நாட்டு உற்பத்தி அல்லது நாட்டு வருமானத்தைப் பெற இத் தொகையைக் கழிக்கவேண்டும்.

செலாவணிப் பற்றுக்குறை ஏற்படாமல் தடுக்கிறது. அயல்நாட்டு முதலீட்டின் விளைவாக மேலும் பெற்ற இறக்குமதிகளைக் கொண்டு, உற்பத்தியைவிட ($Y$) உறிஞ்சல் ($A+dA$) மிகையாக இருப்பதனால் உள்ள பொருள், பணிகளின் பற்றுக்குறையை ஈடுகட்ட முடியும். இறுதியாக, உள்நாட்டுச் சேமிப்புகளின் பற்றுக்குறையையும் வெளி நாட்டு முதலீடு ஈடு செய்கிறது. சேமிப்பு-முதலீடு சமன்பாடான, $S=I_d+I_f$-ல் $I_f$ என்ற வெளிநாட்டு முதலீடும் $D$-யும் ஒன்றே. (அந்தத் தொகைக்கு, உள்நாட்டுச் சேமிப்புகளைவிட அதிகமாக மொத்த முதலீட்டை அந் நாடு செய்யமுடியும்.)

நாம் எடுத்துக்கொண்ட முழு வேலைநிலைப் பொருளாதாரத்தில், கிடைத்த வெளிநாட்டு நிதி வசதிகளைவிட அதிகமாக முதலீட்டுப் பெருக்கம் (அதாவது $dA$) இருக்க முடியாது. ஏனெனில், செலவு அதிக மாவதற்கு ஏற்ப உற்பத்தியைப் பெருக்கப் பொருளாதாரத்தில் வேலை யற்றிருக்கும் சாதனங்கள் ஏதும் இல்லை. எனவே, இறுதிநிலை இறக்கு மதி நாட்டத்தின் எண் ஒன்று. பணவீக்க விலை இயக்கத்தின்மூலம், அதிகமான செலவு வெளிநாட்டை நோக்கிப் பாய்கிறது.

ஒரு நாட்டில் உழைப்பும், மூலதனமும் இயற்கை வசதிகளும் வேலையற்றிருந்து தேவை அதிகரித்தால் உற்பத்தியை உயர்த்தக் கூடிய நிலையில் இருக்குமானால், விளைவு வேறாக இருக்கும். அப்போது வெளிநாட்டு மூலதனம் எந்த அளவுக்கு வருகிறதோ அதைப்போலப் பல மடங்கு உள்நாட்டு முதலீடு பெருகும். வருமான உயர்வு காரணமாக இறக்குமதிகள் அதிகமானல் ஒழிய இப் பெருக்கம் தொடர்ந்து நடக்கும். ஆனால், மூலதன வரவுக்குச் சமமாக இறக்குமதிகள் அதிகரித்தால், முதலீடு மேலும் பெருகினால் செலுத்து நிலையில் பற்றுக்குறை ஏற்படும். அதாவது, அதிகபட்சப் பெருக்க வீதம்—அல்லது வெளிநாட்டுக் கடனுக்கு ஏற்ப முதலீடு அனுமதிக்கப்படக்கூடிய வீதம், $dI/dD$—எனவே, ஒரு முதலீட்டுத் திட்டத்தின் பணவீக்கமற்ற வரம்பைப் பின்வரும் சமன்பாடு குறிக்கிறது: $dI/dD=dI/dM$. இறுதிநிலைச் சேமிப்பு நாட்டம் (s), இறுதிநிலை இறக்குமதி நாட்டம் ($m$) ஆகிய வற்றின் மதிப்புகளைப் பொறுத்து இந்த வரம்பு இருக்கும்.[5] $dM=m \cdot dY$ என்பதையும் $dY=k \cdot dI$ என்பதையும் நாம் அறி வோம். எனவே: $dM=m \cdot dY=m \cdot k \cdot dI=m \cdot dI/(s+m)$.

அதனால்,

$$\frac{dI}{dD}=\frac{dI}{dM}=\frac{dI}{m\left(\frac{dI}{s+m}\right)}$$

[5] ஒரு சிறு நாட்டை எடுத்துக்கொண்டால், வெளிநாட்டு எதிர் விளைவுகளைப் பொருட்படுத்தாமல் உள்நாட்டு நாட்டங்களை மட்டும் கவனிக்கலாம்.

உதாரணமாக, $s=\frac{1}{4}$ என்றும் $m=\frac{1}{4}$ என்றும் கொள்வோம். அப்போது பெருக்கி $k$ $(=1/s+m)$யின் மதிப்பு 2. கடைசிச் சமன் பாட்டில் இந்த மதிப்புகளைப் புகுத்தினால்,

$$\frac{dI}{dD}=\frac{dI}{\frac{1}{4}\left(\frac{dI}{\frac{1}{4}+\frac{1}{4}}\right)}=\frac{dI}{\frac{1}{4}(2dI)}=\frac{dI}{dI/2}=2.$$

s-க்கும் $m$-க்கும் இந்த மதிப்புகள் இருந்தால், (ஏற்கெனவே செய்யப் படுவதைவிட) முதலீடு அதிகமாகக் கூடிய அளவு, செலுத்துநிலைப் பற்றுக்குறை ஏற்படாமல் இருக்கவேண்டுமானால், உள்ளே வரும் வெளிநாட்டு மூலதனத்தைப் போல இரண்டு மடங்குக்கு அதிகமாக இருக்கக் கூடாது.[6]

## நிகர முதலீடு

வெளிநாட்டு மூலதனம் நாட்டுக்குள் வரும்போது அதே அளவுக்கு உள்நாட்டு முதலீடு குறைந்து அந்த இடத்தை வெளிநாட்டு மூலதனம் நிரப்புமானால், அம் மூலதன வரவினால் நாட்டின் வளர்ச்சிக்கு நிகரமாக ஒரு நன்மையும் இல்லை. தனியார் தொழில்களில் முதலீடு செய்ய வெளி நாடுகளில் கடன்கள் வாங்கப்பட்டாலோ, வளரும் ஒரு நாட்டின் தொழில் களில் ஓர் அன்னிய முதலாளி முதலீடு செய்தாலோ இவ்வாறு நேராது. ஆனால், வெளிநாட்டு உதவிகள் வரும்போது இதுபோல அடிக்கடி நேரு கிறது. உள்நாட்டு வளர்ச்சிக்கு நிகரமாக நன்மையில்லாமல் போகிறது. உதாரணமாக, ஒரு லத்தின் அமெரிக்க நாட்டில் அமெரிக்க உதவி நிர்வாகிகள் ஒரு வைத்தியசாலை கட்ட உதவினார்கள். இதன் பலனாகச் சுகாதாரச் செலவுக்கு பட்ஜெட்டில் ஒதுக்கியிருக்க வேண்டிய தொகை படைச் செலவுக்கு ஒதுக்கப்பட்டது. எனவே, பொருளாதார வளர்ச்சிக்கு இந்தக் குறிப்பிட்ட அமெரிக்கத் திட்டம் நிச்சயமாக உதவ வேண்டுமானால் உள்நாட்டில் செய்யப்படும் சுகாதாரச் செலவுகள் குறையாமல் இருக்கவேண்டும் என்ற நிபந்தனையை விதிக்கவேண்டும். அப்படி நிபந்தனையிட்டாலும், வேறு ஒரு துறையில் வளர்ச்சிக்காகச் செலவழித்திருக்கக்கூடிய பணத்தைக் குறைத்து அந் நாடு சுகாதாரச் செலவுகளைக் குறையாமல் செய்யலாம். அதைத் தடுக்க வேண்டுமானால், முன்னதாகவே அந்த நாட்டின் வளர்ச்சிக்கு ஒரு திட்டம் அமைத்து

[6] தொடக்கத்தில், மூலதன இறக்குமதிகள் பூஜ்யம் என்று எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. பொருளாதாரத்தில் வேலையற்ற சாதனங்கள் இருந்தால் தான் இந்தப் பிரிவில் கூறப்பட்ட ஆராய்ச்சி சரியாக இருக்கும். அவை முழு வேலை நிலையிலிருந்தால் இறுதிநிலை இறக்குமதி நாட்டம் ஆகிறது; அப்போது செலுத்துநிலைப் பற்றுக்குறை ஏற்படாமல் உள்நாட்டுச் சேமிப்பைவிட உள்நாட்டு முதலீடு அதிகமாக வேண்டுமானால் அந்த வித்தியாசம் அப்போது கிடைத்த வெளி நாட்டு மூலதனத்தின் அளவை மிஞ்சக்கூடாது.

அதற்கேற்ப உதவியை இணைத்துத் தரவேண்டும். உண்மையில் இப்படித்தான் திட்டப்படி உதவிகள் இப்போது செய்யப்பட்டு வருகின்றன.

**முதலீட்டை ஏற்றுக்கொள்ளும் சக்தி (Capacity to Assimilate Investment)**

செலுத்து நிலையில் பற்றுக்குறை ஏற்படக்கூடாது என்றால், நாம் இப்போது விவரித்தபடி, பொருளாதார வளர்ச்சிக்கான முதலீடு அதன் பணவீக்கம் ஏற்படாத வரம்பை மிஞ்சக்கூடாது. இவ் வரம்புக்குள் முதலீடு செய்தால் பணவீக்கத்தைத் தடுத்து அதனால் செலுத்து நிலையில் பாதகமான விளைவுகள் ஏற்படாமல் தடுக்கலாம். பணவீக்கம் ஏற்பட்டால் சரக்கு இருப்புகளை அதிகமாக்குவதிலும் தேவையற்ற விலையுயர்ந்த கட்டடங்களிலும் ஊக வாணிபத்திலும் முதலீடு செய்யப் படும்; பத்திரமான இடத்தை நாடி வெளிநாடுகளுக்கு மூலதனம் வெளியேறும். இவற்றையெல்லாமும் தடுக்கலாம். ஆனால், விரயமான முதலீடுகள் செய்வதைத் தடுக்க முடியாது. முதலீடு சிக்கன மாகவும் லாபகரமாகவும் இருக்கவேண்டுமானால் அது வேறோர் உச்ச வரம்புக்குள் இருக்கவேண்டும். இவ் வரம்பைத் திருத்தமாக விவரிக்க முடியாது. இது நாட்டுக்கு நாடு வேறுபடும். இவ் வரம்பு, ஒரு பொருளாதாரம் எவ்வளவு முதலீட்டை ஏற்றுக்கொள்ளுமோ அதைப் பொறுத்திருக்கிறது; அதாவது, மூலதனத்தைத் திறம்படப் பயன்படுத்தக்கூடிய அதன் சக்தியைப் பொறுத்திருக்கிறது. இந்தத் திறமை பல நிபந்தனைகளைப் பொறுத்திருக்கிறது. அவற்றுள் முக்கியமானவை பின்வருமாறு: அரசாங்கத்தின் திடநிலையும் நிர்வாகத்திறனும்; முதலீட்டுத் திட்டங்களை அமைக்கவும் திறம்பட நடத்தவும் அரசாங்கத்திலும் அதற்கு வெளியிலும் தொழில் துணிவும் நிர்வாகத்திறனும் உள்ள அளவு; பிற துணைக்காரணிகளின் அளவு; குறிப்பிட்ட பொருள்களுக்கும் பணிகளுக்கும் அங்காடியின் அளவு; பொருள்களுடைய இடப்பெயர்ச்சியும் மக்களுடைய இடப்பெயர்ச்சியும் பொறுத்துள்ள இருப்புப்பாதைகள், சாலைகள், துறைமுக வசதிகள், செய்தித் தொடர்பு போன்ற சமுதாயப் பொது மூலதனத்தின் அளவு; மற்றும், இறுதியாக, உற்பத்தித் திறனைப் பாதிக்கும் மாறுதல் ஆர்வம், சமுதாய அமைப்புகள், பழக்க வழக்கங்கள் போன்ற சமுதாயக் காரணிகள். சுருக்கமாகச் சொன்னால், ஒரு நாட்டின் மூலதனத்தை ஏற்கும் சக்தி அதன் பொருளாதார வளர்ச்சியின் அளவைப் பொறுத்தது.

உதாரணமாக, நியூகினி (New Guinea) போன்ற வளர்ச்சியின் முதற்படியிலுள்ள ஒரு சமுதாயம் மிகச்சிறிய அளவு மூலதனத்தையே ஏற்கும். அதன் விவசாயத்தைப் புதுமைப்படுத்தவோ, அங்குத்

தொழில்களை நிறுவவோ, அல்லது இருப்புப்பாதைகளையும் நவீன சாலைகளையும் அமைக்கவோகூட முயன்றால் அம் முயற்சி அடியோடு வீணாகும். முதலில் இவற்றைப் பெற அந்த நாட்டின் மக்களைத் தயாராக்கவேண்டும். அதற்காக அவர்களுக்கு எழுத்தறிவைத் தரவும், மிகப் பழங்கால மூடநம்பிக்கைகளைப் போக்கவும் அவர்களுடைய மனப்பாங்கையும் இன்றைய உலக நிலைக்கு ஏற்றவாறு மாற்றவும் அவர்களுக்குக் கல்வி புகட்டவேண்டும்; எளிய தொழிற்பயிற்சியைத் தரவேண்டும்; கடற்கரையோரமாக இருக்கும் ஒழுங்கான அரசாங்க நிர்வாகம் உள்நாட்டில் பரவவேண்டும்; உள்ள போக்குவரத்தின் தன்மைக்கும் அளவுக்கும் ஏற்ற எளிய சாலைகளை அமைக்கவேண்டும்; இவ்வாறெல்லாம் செய்து அவர்களை வளர்ச்சியை விரும்பி ஏற்கச் செய்யவேண்டும்.

பொருளாதார வளர்ச்சியில் நியூகினி கீழ் எல்லையில் உள்ள நாடு. ஆனால், பிற நாடுகளில் இதேபோன்ற சில பிராந்தியங்கள் உள்ளன. எப்படி இருந்தாலும் இதுதான் உண்மை; எந்த நாடும் தன் திறமைக்கு அதிகமாக முதலீட்டை ஏற்காது; மேலும் முதலீட்டைச் செய்யவேண்டுமானால் அந் நாட்டை அதை ஏற்கத் தயார் செய்ய வேண்டும்.

**வெளிநாட்டு முதலீட்டை நம்பிய நிலை**

வளர்ச்சி குன்றிய நாடுகள் வெளிநாட்டு மூலதன உதவியையே சார்ந்து இருக்கவேண்டிய நிலை ஏற்படும் என்றும், வெளிநாட்டு மூலதனத்தையே எதிர்நோக்கியுள்ள நிலைக்கு முடிவே இராது என்றும் சிலர் அஞ்சுகின்றனர். தனி நாடுகளின் பொருளாதார வளர்ச்சித் திட்டங்கள் உற்பத்தித் திறனையும், வருமானத்தையும் கணிசமாக உயர்த்தும் தம் குறிக்கோள்களை அடையுமானால் இம் முடிவு ஏற்பட அவசியமில்லை. ஏனெனில், அக் குறிக்கோள்களை அடைந்தால், தொடர்ந்து வளர்ச்சிக்குத் தேவையான மூலதனத்தை அளிக்கக்கூடிய சேமிப்புகள் உள்நாட்டிலேயே அதனால் ஏற்பட்டுவிடும். வெளிநாட்டு மூலதனத்தைச் சார்ந்த நிலை ஏற்படாதிருக்க, பிழைப்புத்துறை (subsistence sector) வளருவதைவிட அதிகமாக முதலாளித்துறை (capitalist sector) வளர வேண்டும். முதலாளித் துறையில், அதிகமான வருமான உற்பத்தியில் பெரும்பகுதி லாபங்களாக உள்ளன; அவற்றில் பெரும்பகுதி சேமிக்கப்படும்.[8] மேலும் விரும்பிய

[8] பின்வரும் கட்டுரையைப் பார்க்க: W. Arthur Lewis, 'Economic Development with Unlimited Supplies of Labour,' *Manchester School of Economics and Social Studies* (May, 1954). இதில் ஒரு பகுதி Okun & Richardson, *Studies in Economic Development*-ல் மீண்டும் அச்சிடப்பட்டது; Published 1961 by Holt, Rinehart & Winston, Inc., New York.

அளவு சேமிப்பு சேராவிட்டால் தன் வரி அதிகாரத்தைப் பிரயோகித்து அரசாங்கச் சேமிப்புகளை அரசாங்கம் அதிகரிக்க முடியும். உள் நாட்டில் சேமிப்புகள் வளர வளர, வெளிநாட்டு உதவி, வெளிநாட்டு முத லீடுகளையே அந்நாடு சார்ந்திருக்கும் நிலை படிப்படியாகக் குறைகிறது.

இந்தச் சுதந்திரம் ஏற்படாமல் இரண்டொரு காரணங்கள் தடுக்க லாம். உதாரணமாக, வருமானங்கள் நிறைய உயர்ந்தாலும், அதிக மாக வேண்டிய சேமிப்புகள் உண்மையில் ஏற்படாமல் போகலாம். ஆனால், லாபங்கள் அதிகமாகி முதலீட்டு வாய்ப்புகள் கவர்ச்சிகரமாக இருந்தால் சேமிப்புகள் எதிர்பார்த்த அளவு ஏற்படும். அல்லது, அரசியல் காரணங்களால் அரசாங்கம் பொதுநலச் செலவுகளை அதிக மாகச் செய்து மூலதனச் சேர்க்கையைக் குறைத்துவிடலாம். மற்றொரு தடங்கல் உள்ளது; அது ஏற்படக்கூடிய வாய்ப்பு அதிகம். ஜனத் தொகை நிலையாக அதிகரித்து வருவதால் தலா வருமானங்கள் மிகக் குறைவாக உயரலாம் அல்லது உயராமலே போகலாம். வளர்ச்சி குன்றிய நாடுகளில் சுகாதார அபிவிருத்தி, வைத்திய வசதிகளின் முன்னேற்றம் ஆகியவை காரணமாக மரண விகிதம் மிகவும் குறைந்து வருகிறது. எனவே, பல நாடுகளில் 2·5-லிருந்து 3 சதவீதம் வரை ஆண்டுதோறும் மக்கள்தொகை அதிகரிக்கிறது. இந்த வீதத்தைவிட அதிக அளவில் ஆண்டுதோறும் உற்பத்தியைப் பெருக்க, நிறைய அளவு வெளிநாட்டு உதவி இருந்தாலே, பல வளரும் நாடுகளால் முடியாமல் போகலாம்.[9] அப்படியானால், தொடர்ந்து வெளிநாட்டு உதவியைத் தருவதானால், ஏற்கெனவே மக்களது நெரிசல் அதிக மான உலகில் மேலும் மக்கள்தொகையை அதிகரிக்க மானியம் தருவதற்கு அது இணையாகும். நிச்சயமாக, வெளிநாட்டு உதவி சீக்கிரம் நிற்க இது வழி செய்துவிடும். மக்கட்தொகையின் பெரும் பெருக்கத்தைத் தடுக்க மலிவான, நன்கு பயன் தரக்கூடிய, அனை வரும் ஒப்புக்கொள்ளக்கூடிய வழிகளைக் கண்டுபிடிக்க இப்போது நடந்து வரும் முயற்சிகள் வெற்றி பெறும் என்று நம்புவோமாக.

[9] ஆண்டுதோறும் சேமித்து முதலீடாகும் வீதத்தை s என்றும், முதலீட்டின் சராசரி சமூக உற்பத்தித் திறனை (அதாவது, ஒரு குறிப்பிட்ட அளவு நடப்பு முதலீட் டுடன் ஏற்படும் அதிக உற்பத்திக்கும் அம் முதலீட்டுக்கும் உள்ள விகிதத்தை) $e$ என் றும், மக்கட்தொகை பெருகும் வீதத்தை $r$ என்றும் குறித்தால்; ஏற்படக்கூடிய வருமான வளர்ச்சி $(dY)$ என்பதைப் பின்வருமாறு கூறலாம் $dY = s \cdot e - r$. முதலீட்டு உற்பத்தித் திறனுக்குச் சாதாரணமாக $\frac{1}{3}$ என்ற எண்ணைத் தரலாம். அதாவது, 33 சதவீதம். எனவே, வருமானத்தில் 10 சதவீதம் சேமிக்கப்பட்டு, மக்கள்தொகை 3 சதவீதம் பெருகினால்: $dY = \cdot 10 \times \cdot 33 - \cdot 03 = \cdot 003$ மக்கள் தொகை பெருகும் வீதத்தைவிட வருமானம் உயரும் வீதம் அதிகமாக இருப்பது 1 சதவீதத்தில் $\frac{3}{10}$ மடங்குதான்; தலா வருமானம் அப்படியே உள்ளது. 2 சதவீத அளவுக்குமட்டும் ஆண்டுதோறும் வருமானம் உயர, சேமிப்பும் (முதலீடும்) ஆண்டுக்கு 15 சதவீத அளவுக்கு உயர வேண்டும்.

ஒரு வளரும் நாடு தன் உற்பத்தித் திறனைப் பெருக்கிக் கூடிய விரைவில் தொடர்ந்து வரும் தன் மூலதனத் தேவைகளைத் தானே பூர்த்தி செய்துகொள்ள முடியலாம். இருப்பினும், அதன் தொழில் வளர்ச்சி பெருகி வரும் சமயத்தில், விசேஷமாக வெளிநாட்டிலிருந்து மூலதனப் பொருள்களை இறக்குமதி செய்யவேண்டியிருக்கும். முதலீட்டுக்குப் போதுமான அளவு சேமிப்புகள் இருந்தால் பண வீக்கம் விளையாது; ஆனால், அன்னியச் செலாவணிப் பற்றுக்குறை ஏற்படக்கூடுமா? அப்படி ஏற்பட்டால் மூலதனப் பொருள் இறக்குமதி என்ன ஆவது? அன்னியச் செலாவணிப் பற்றுக்குறை ஏற்படக்கூடும். ஆனால், அதன் விளைவைத் தடுக்க இந்தியா வரிசையாகத் தன் ஐந்தாண்டுத் திட்டங்களில் செய்து வருவது போலத் தேவையான மூல தனப் பொருள்களை உள் நாட்டிலேயே உற்பத்தி செய்யப் பொருளா தாரத் திட்டத்தில் ஏற்பாடு செய்யவேண்டும். அல்லது பிறவகை இறக்குமதிகளுக்கு மாற்றுப் பொருள்களை உற்பத்தி செய்வதன்மூலம் அந்த இறக்குமதிகளைக் குறைத்து அதில் மிஞ்சிய அன்னியச் செலா வணியைக் கொண்டு மூலதனப் பொருள்களை வாங்க வேண்டும். ஏற்றுமதிகளை அதிகரித்தும் மூலதனப் பொருள்களை இறக்குமதி செய்ய லாம். இறுதியில், கடைசி வழியாக, முக்கியமாக மூலதனப் பொருள் இறக்குமதிகளுக்கு மிக அதிகமான தேவை உள்ள சமயத்தில் பிற பொது இறக்குமதிகளின்மீது கட்டுப்பாடுகளை விதிக்கலாம்.

### வெளிநாட்டு மூலதனத்தைப் பராமரிக்கும் செலவுகள் (Service Charges)

மூலதனத்தைக் கடன் வாங்கிய நாட்டுக்கு அதனால் விளையும் நேரிடைச் செலவு அதன் பயனுக்காகத் தரவேண்டிய வட்டியும் லாப ஈவுகளும் (dividends) ஆகும். இதைத் தவிர கடன்களைத் திருப்பித் தர வேண்டும். ஆனால், பங்குகளில் செய்யப்பட்ட முதலீடுகளை வெளி நாட்டு முதலிடுவோர் தம் மூலதனத்தைத் திருப்பி வாங்கிப் போக முடிவு செய்தால்தான் அவற்றைத் திருப்பித் தரவேண்டும். மேலும், பல சமயங்களில் சம்பாதித்த வட்டியையும் லாபத்தையும் கடன் கொடுத் தவர் அல்லது முதலீடு செய்தவர் இங்கேயே மீண்டும் முதலீடு செய்வர்.[10] இவையெல்லாம் இருந்தபோதிலும், வெளிநாட்டு முதலீட்டைப்

[10] 1956–59-ல், வளர்ச்சி குன்றிய நாடுகளில் பதினொன்கு தொழில் வளர்ந்த OEEC நாடுகளும் அமெரிக்காவும் கானடாவும் சேர்ந்து $ 7,492,000,000-க்குத் தனியார் முதலீடுகளைச் செய்திருந்தன. அதே காலத்தில் மீண்டும் முதலீடு செய்யப்பட்ட சம்பாத்தியங்கள் $ 3,658 மிலியன்; அதாவது, நடப்புக்காலப் புது முதலீட்டில் ஏறக்குறைய பாதி. மொத்த சம்பாத்தியத்தில் எந்த விகிதம் மீண்டும் முதலீடு செய்யப்பட்டது என்பது கூறப்படவில்லை. OEEC, *The Flow of Financial Resources to Countries in Course of Economic Development* (Paris, April, 1961), பட்டியல் 2.

பெறும் ஒரு நாடு, தன் நடப்புக் கடன்களும் நன்கொடைகளும் குறைந்துகொண்டே வர, உள்ளே வரும் மூலதனத்தைவிட அதிகமாக முன்னர் முதலிடப்பட்ட மூலதனத்தின் பராமரிப்புக்குப் பணத்தை வெளிநாடுகளுக்குச் செலுத்தவேண்டிய நிலையை ஒரு நாள் அடையக் கூடும். [அந்த நிலையில் அதைப் 'பழுத்த' கடனாளி நாடு ('mature' debtor nation) என்று அழைப்பர். அதற்கு முன்னர் பழைய முதலீடுகளின் பராமரிப்புச் செலவுகளைவிட அதிகமாக நடப்பு மூலதன உள்வரவு இருந்தபோது அது 'பழுக்காத' (immature) நிலையில் இருந்தது.]

அவசியம் வரும்போது தன் வெளிநாட்டுக் கடனைப் பராமரிக்க ஒரு கடனாளி நாட்டால் முடியும் என்பது என்ன நிச்சயம் என்ற கேள்வி எழுகிறது. வேறு விதமாக இதைச் சொன்னால், எந்த நிபந்தனைகள் பூர்த்தியானால் ஒரு கடனாளி நாட்டால் தன் வெளிநாட்டுக் கடன்களைப் பராமரிக்க முடியும்?

அடிப்படையில் நிகரமாக ஒரு நாடு தன் பராமரிப்புச் செலவுகளைச் செலுத்த வேண்டிய நிலை, அந் நாட்டுக்கு நிகரமாக மூலதனம் உள் வந்த நிலைக்கு நேர் எதிராகும். வெளிநாட்டு மூலதனம் நாட்டுக்குள் வந்தால், உண்மைச் சேமிப்புகள், பணச் சேமிப்புகள், வெளி நாட்டுக்குச் செலுத்தும் சாதனங்கள் இவற்றின் பற்றாக்குறைகளை ஈடு செய்ய அம் மூலதனம் பொருள் வசதிகளையும், நிதியையும், அன்னியச் செலாவணியையும் அளிக்கிறது என்பதை முன்னர் காட்டினோம். இவ்வாறு அளிப்பதன்மூலம், ஒரு நாடு தன் உள்நாட்டுச் சேமிப்பை விட அதிகமாக முதலிட ஏற்பாடு செய்ய வெளிநாட்டு முதலீடு வழி செய்கிறது; அதே சமயம் செலுத்துநிலைப் பற்றாக்குறை இன்றியே அந் நாடு தான் உற்பத்தி செய்வதைவிட அதிகமாகச் செலவிட (உறிஞ்ச) முடிகிறது. தன் செலுத்து நிலைக்கு வெளிநாட்டிலிருந்து கிடைக்கும் இவ்வுதவியின்மூலம் தீவிரமான பற்றாக்குறைகளைச் சமாளித்து ஒரு வளரும் நாடு தன் வளர்ச்சியின் வேகத்தை அதிகமாக்க முடிகிறது.

பின்னர் கடன் பராமரிக்கும் நாடாக அது மாறும்போது இதற்கு நேரெதிரானது அந் நாட்டின் பிரச்சினை. தன் பொருள், பணி இறக்குமதிகளின் அளவைவிட, தான் செலுத்தவேண்டிய பராமரிப்புச் செலவுகளின் அளவுக்கு அதிகமாக எப்படியாவது அந் நாடு உபரி அன்னியச் செலாவணி வருவாய்களை உண்டாக்க வேண்டும்.[11] அப்படியானால் அது தன் ஏற்றுமதிகளைப் பெருக்கவேண்டும், அல்லது தன் இறக்கு

[11] பிரச்சினையின் முக்கியமான அம்சத்தை மட்டும் ஆராய, நிகர மூலதன உள் வரவு நின்றுவிட்டதாகவும் பராமரிப்புச் செலவுகளுக்காகப் பயன்படக்கூடிய உபரி அன்னியச் செலாவணி அல்லது பொன் சேம நிதிகள் அந் நாட்டிடம் இல்லை என்றும் நான் எடுத்துக்கொண்டிருக்கிறேன். இந்த உருப்படிகளையும் சேர்த்தால் முக்கியமான மாறுதல் எதுவும் இராது, ஆனால் ஆராய்ச்சி சிக்கலாகிவிடும்.

மதிகளைச் சுருக்கவேண்டும், அல்லது இரண்டையும் செய்ய வேண்டும். இறக்குமதிகளைவிட இவ்வாறு மிகையாக ஏற்றுமதிகளைச் செய்ய, அந் நாடு தான் உறிஞ்சுவதைவிட அதிகமாக உற்பத்தி செய்ய வேண்டும். (அதாவது, வேண்டுமான உபரி ஏற்றுமதி அளவுக்கு மொத்த நுகர்வையும் முதலீட்டையும் விட மொத்த உற்பத்தி அதிகமாக இருக்க வேண்டும்.) இறுதியாக, நடப்பு உற்பத்தியில் போதுமான அளவு ஏற்றுமதிக்காக உண்மையில் ஒதுக்கப்படுவதற்காக உபரி ஏற்று மதிகள், உள்நாட்டு முதலீடு இரண்டும் சேர்ந்த அளவுக்கு அதன் சேமிப்புகள் உயர வேண்டும்.

சுருக்கமாகக் கூறினுல், தன் சாதனங்கள், சேமிப்புகள், அன்னியச் செலாவணி ஆகியவற்றின் பற்ருக்குறையைத் தீர்க்க ஒரு வளரும் நாட்டுக்கு மூலதன உள்வரவு உதவுகிறது. சேர்ந்த கடனைப் பராமரிக்கும் கடமைக்கு இவற்றுக்கிணையான உபரிகளை உண்டாக்கு வது அவசியமாகிறது. அந் நாடு அவ் வுபரிகளை உண்டாக்குமா? அதன் பொருளாதார வளர்ச்சித் திட்டம் மேலே கூறிய மூன்று நிபந்தனை களின்படி உள்ளதா என்பதைப் பொறுத்தது இக் கேள்வியின் விடை.

சேமிப்புகளிலிருந்து தொடங்குவோம். சேமிப்பு அதிகமாவது, தலா வருமானங்கள் உயருவதனின்று ஏற்படுகிறது. தனி நபர் வருமானங்கள் உயர்ந்தால் இறுதிநிலை சேமிப்பு வீதம் உயரும் என்று எதிர்பார்க்கலாம்; இல்லாவிட்டால் உயர்ந்த வருமானத்தில் ஒரு பகுதியைக் கைப்பற்றத் தன் வரிவிதிக்கும் அதிகாரத்தை அரசாங்கம் உபயோகிக்கலாம். பொருளாதார வளர்ச்சித் திட்டம் எவ்வளவு வெற்றியடைகிறதோ அவ்வளவு வேகமாகத் தலா வருமானங்கள் உயரும், எனவே தனியார் அல்லது அரசாங்க இறுதிநிலைச் சேமிப்பு களும் உயரும். உயரும் வருமானங்களின் விளைவாக உயரக்கூடிய சேமிப்புகளையும் சேர்த்துத் திட்டத்தில் முதலீட்டுப் பட்டியல் வரையப் படாமல் இருந்தால், இந்தப் புதுச் சேமிப்புகளினுல் நிகரமாகச் சேமிப்புகளின் அளவு உயரும்.[12] அவை இருப்பதனுல் அவற்றுக்கு இணையான மதிப்புக்குப் பொருள்கள் மிஞ்சும். அவற்றை ஏற்றுமதி செய்யலாம். அல்லது இறக்குமதிகளுக்குப் பதிலாக உபயோகிக்கலாம். அத்துடன், இறக்குமதிகளுக்குச் செலுத்தவேண்டியதைவிட அதிகமாக அதே அளவுக்கு அன்னியச் செலாவணி வருவாய் உபரியாகக் கிடைக் கிறது. அதைக்கொண்டு கடன் பராமரிப்புச் செலவுகளைச் செய்யலாம்.

ஆண்டுதோறும் தலா வருமானங்கள் உயருவதனுல் தேவையான உபரிகள் ஓரளவுக்குக் கிடைக்கக்கூடும். ஆனுல், செலுத்தவேண்டிய

12 இவ்வாறு பின்னர் தோன்றக்கூடிய சேமிப்புகளை முன்னரே பட்ஜெட்டில் சேர்த்துக்கொள்வது அபாயகரமானது. ஏனெனில், எதிர்பார்த்த உயர்வு குறிக் கோளேயன்றி, கையில் இருப்பது அன்று.

கடன் பராமரிப்புச் செலவுகள் முழுவதற்கும் அது போதுமா? பொருளாதார வளர்ச்சியின் வேகம் போதுமான அளவு அதிகமாக இருந்தால் அது போதும். அந்த வளர்ச்சி வேகம், வளர்ச்சித் திட்டத்தின் தன்மை, அதைச் செயலாற்றும் திறன், அதன் விளைவுகளைப் பாதிக்கும் அரசியல், சமூக, பொருளாதார நிலவரங்கள் ஆகியவற்றைப் பொறுத்தது. இக் கேள்விக்குப் பொதுவாக விடை கூறிவிடமுடியாது. ஒவ்வொரு நாட்டுக்கும் வளர்ச்சி வேகத்தை நிர்ணயிக்கும் இத்தகைய காரணிகள் அனைத்தையும் சரியாக மதிப்பிட்ட பின்னரே விடையளிக்க முடியும். அவற்றுள் முக்கியமானவை பின்வருமாறு: உழைப்பாளிகளின் எண்ணிக்கையில் வளர்ச்சி, இயற்கைச் சாதனங்களின் அளவு, தொழில் நுட்ப முன்னேற்றத்தின் வேகம், நிர்வாகத் திறனும், தேர்ந்த உழைப்பும் கிடைக்கும் அளவு. இவை அனைத்தும், ஒரு குறிப்பிட்ட அளவு முதலீட்டுடன் ஏற்படும் உற்பத்தியின் அளவை நிர்ணயிக்கின்றன.[13] முதலில் நாட்டு வருமானத்தில் எந்த விகிதத்தில் சேமிப்பு உள்ளது என்பதும், மக்கட்தொகை உயரும் விகிதமும்கூட முக்கியமான காரணிகளே. இவற்றை எல்லாம் மதிப்பிட்டபின், தலா வருமானங்கள் போதுமான அளவு வேகமாக உயரும் என்று எதிர்பார்த்தால், ஒவ்வோர் ஆண்டும் பராமரிப்புச் செலவுகளுக்குப் போதுமான அளவு அன்னியச் செலாவணி உபரி இருக்கும்.[14]

இவ்வாறு மூலதனத்தைப் பராமரிக்கும் செலவுகளைச் செய்யக்கூடிய திறன் ஒரு நாட்டுக்கு இருக்குமானால், வெளிநாட்டு மூலதனம் ஏற்றுமதிப் பொருள்கள் அல்லது இறக்குமதிகளுக்கு மாற்றுப்

[13] இந்த உற்பத்தி உயர்வு, முதலீட்டின் இறுதிநிலைச் சமூக உற்பத்தித் திறன், 'மூலதனம், உற்பத்தி உயர்வு வீதத்தின்' (incremental capital output ratio), K/O வின் தலைகீழ்ப் பின்னமாகும். இதைப் பொருளாதார வளர்ச்சி பற்றிய நூல்களில் நிறைய (சில சமயம் அஜாக்கிரதையாக) உபயோகிக்கிறார்கள்.

[14] ஆல்டர் பின்வருமாறு இதைக் காட்டுகிறார். மக்கட்தொகை ஆண்டுக்கு $2\frac{1}{2}$ சதவீதம் வளருகிறது என்றும், முதலில் சராசரிச் சேமிப்பு வீதம் $8\frac{1}{2}$ சதவீதம் என்றும், உற்பத்தி மூலதன வீதம் 1 : 3·5 என்றும், தலா வருமான வளர்ச்சி வீதம் ஆண்டுக்கு $\frac{1}{2}$ சதவீதம் என்றும் கொள்வோம். $4\frac{1}{2}$ சதவீத வட்டியுடன் நிகர முதலீட்டில் 7 சதவீதத்துக்கு 25 ஆண்டுகளுக்கு இறக்குமதியாகும் மூலதனத்தைப் பராமரிக்க தலா இறுதிநிலைச் சேமிப்பு வீதம் 0·23 ஆக இருந்தால் போதும். அதே காலத்துக்கும், செலவோடும், ஆனால் மொத்த நிகர முதலீட்டில் 22 சதவீதத்துக்கு வரும் மூலதனத்தைப் பராமரிக்க, தலா வருமானங்கள் ஆண்டுக்கு 2 சதவீதம் வளர்ந்தால், இருக்கவேண்டிய தலா சேமிப்பு வீதம் 0·31. (முதலில் மூலதனம் நிறைய வந்தால், வருமானங்கள் நிறைய வளருகிறது; கடன் பராமரிப்புச் செலவுகளைச் செய்வது மேலும் சுலபமாகிறது என்பதை இங்குக் கவனிக்க வேண்டும்.) Gerald M. Alter, 'The Servicing of Foreign Capital Inflows by Underdeveloped Countries.' *Economic Development for Latin America*-ல் 6ஆவது அத்தியாயம், Howard S. Ellis, ed., பக்கம் 151. Published 1961 by Macmillan & Co., Ltd., London. இப் பொருள்பற்றி மேலும் விவரமான விளக்கத்துக்கு இந்த அத்தியாயத்தைப் படிக்கவும்.

பொருள்கள் ஆகியவற்றின் உற்பத்தியில்தான் முதலீடு செய்யப்பட வேண்டும் என்று வேண்டுமென்றே அதைக் கட்டுப்படுத்த வேண்டிய தில்லை. சமூக உற்பத்தியைக் கூடுமான அளவு அதிகரிக்கக்கூடியவாறு அது முதலீடு செய்யப்பட்டால் போதும். அல்லாமல் ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சி மிகவும் மெதுவாக ஏற்பட்டால், அல்லது அதன் மக்கள்தொகை மிக வேகமாக வளர்ந்தால், முதலீட்டை இக் குறிப்பிட்ட தொழில்களில் செய்யவைத்தோ, அல்லது இறக்குமதி களையும் நுகர்வையும் கட்டுப்படுத்தியோதான் பராமரிப்புச் செலவு களைச் செய்யமுடியும்.

## பொருளாதார வளர்ச்சியில் வெளிநாட்டு மூலதனத்தின் பங்கு

வெளிநாட்டு மூலதனத்தை வாங்குவதனால் வட்டியையும் லாபத் தையும் தரவேண்டிய செலவு ஏற்படுகிறது. எனவே, இச் செலவைக் கட்டும் அளவுக்கு அதிகமாக நாட்டு உற்பத்தியை இறக்குமதியான மூலதனம் உயர்த்தினால்தான் அதை இறக்குமதி செய்த நாட்டுக்கு நேரிடையான நன்மை உண்டாகிறது. சாதாரணமாக இதுபோலத் தான் உற்பத்தி உயரும்; ஏனெனில், மூலதன அளிப்பு அதிகமானால், உழைப்புக்கு உதவ நிறைய சாதனங்களும், கருவிகளும், உற்பத்தியை அதிகரிக்கும் பிற உதவிகளும் கிடைக்கும். உழைப்பின் உற்பத்தித் திறனும், அத்துடன் சேர்ந்து பயன்படும் நிலம் மற்றும் பிற சாதனங் களின் உற்பத்தித் திறனும் உயரும்.

### ஓர் எளிய மாதிரி அமைப்பு

மிக எளிய ஓர் உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். இதில் ஒரு நாட்டின் மூலதனமும் உழைப்பும் முழு வேலை நிலையில் உள்ளன. படம் 28·1-ல், $OD$ அளவில் உள்நாட்டு மூலதனம் ஒரு குறிப்பிட்ட அளவு உழைப்போடும் இயற்கைச் சாதனங்களோடும் கலந்து $OBED$ பரப்பு குறிக்கும் ஒரு மொத்த உற்பத்தியை உண்டாக்குகிறது. மூலதனத்தின் இறுதிநிலை உற்பத்தித் திறன் $DE$; மூலதனத்தின் மொத்த வருவாய் $OAED$. நாட்டு உற்பத்தியில் $ABE$ பகுதி உழைப் பாளிகளுக்குக் கூலியாகவும் இயற்கை வசதிகளின் சொந்தக்காரர் களுக்கு வாடகையாகவும் போகிறது.

இப்போது $DF$ அளவுக்கு அன்னிய மூலதனம் இறக்குமதி செய்யப் படுவதாகக் கொள்வோம். அம் மூலதனம் இப்போதுள்ள கம்பெனி களில் உள்நாட்டு மூலதனத்தோடு சேர்ந்து பயன்படலாம். அல்லது அதேபோன்ற உற்பத்தி முறைகளுடைய புதுக் கம்பெனிகளை ஏற்படுத்தப் பயன்படலாம். மூலதனம் மேலும் அதிகமானதால்,

உள்நாட்டு மூலதனம், வெளிநாட்டு மூலதனம் இரண்டுக்குமாக இறுதி நிலை உற்பத்தி $FM$ ஆகக் குறையும். மொத்த நாட்டு ஆக்கம் அதிகரித்து $OBMF$ ஆகிறது. அதாவது, $DEMF$ அளவு அதிகமாகிறது. இதில் $DE'MF$ என்பது வெளிநாட்டு மூலதனத்தைப் பயன்படுத்துவதன் செலவு. இதை எடுத்துவிட்டால் மீதி நிகர உற்பத்தி உயர்வான $EE'M$-ஐ உழைப்பாளிகளும், இயற்கைச் சாதனங்களின் சொந்தக்காரர்களும் பகிர்ந்துகொள்கிறார்கள். வெளிநாட்டு மூலதனத்தைப் பயன்படுத்துவதால் அப் பொருளாதாரம் பெற்ற நிகர லாபம் இதுதான்.




படம் 28·1. மாறாத அளவு உழைப்போடும் இயற்கைச் சாதனங்களோடும் வெளிநாட்டு முதலீடு

மூலதனத்தின் இறுதிநிலை உற்பத்தித் திறன் குறைவதால் உள்நாட்டு முதலாளிகளின் மொத்த வருவாய்கள் $OA'E'D$ ஆகக் குறைகின்றன. இதனால் வருமானம் அவர்களிடமிருந்து உழைப்பாளிகளுக்கும் இயற்கைச் சாதனங்களின் சொந்தக்காரர்களுக்கும் மாற்றப்படுகிறது.

### மேலும் உண்மையான மாதிரி அமைப்பு

இத்தகைய எளிய மாதிரி அமைப்பு உண்மைக்கு ஏற்றதாக இல்லை. ஏனெனில், வெளிநாட்டிலிருந்து மூலதனம் வந்தால் மூலதனத்தின் வருவாய் குறையும் என்பதுதான் முக்கியமாக எதிர்பார்க்கப்

பட்ட விளைவு என்றால் ஒரு வளர்ச்சி குன்றிய நாட்டில் வெளிநாட்டு முதலீடுகள் செய்யப்படமாட்டா. அப்படிக் குறைந்த வருவாயும், நஷ்டபயத்துக்கான திருத்தத்தைச் செய்த பின் சொந்த நாட்டில் உள்ளதைவிட அதிகமான வீதத்தில் இருந்தால் அம் மூலதனம் வளர்ச்சி குன்றிய நாடுகளை நோக்கிப் பாயும். ஆனால், வெளிநாட்டு மூலதனம் வருமுன்னர் வளர்ச்சி குன்றிய நாட்டில் மூலதனத்தின் லாபம் மிகவும் அதிகமாக இருப்பதாக இது கொள்கிறது. அவ்வாறு இருப்பதாக ஆதாரம் ஒன்றும் இல்லை. அந் நாடுகளில் உற்பத்திச் செலவுகளைவிட மிக அதிகமாக விலை குறிக்கப்படுவதால், விற்ற ஒவ்வொரு பொருளின் மீதும் லாபம் அதிகமாக இருக்கும். ஆனால், உற்பத்தி, விற்பனை ஆகியவற்றின் மொத்த அளவு குறைவு. எனவே, முதலீட்டின் லாப வீதம் நிறைய இல்லை.

அல்லாமல், உள்நாட்டு மூலதனம் சம்பாதிக்கும் வீதத்தில் வெளிநாட்டு மூலதனத்துக்கும் லாபம் வருமானால், வெளிநாட்டு மூலதனத்தை முதலீடு செய்ய அது போதுமானது. இந்தியா, எகிப்து, மற்றும் பல லத்தீன் அமெரிக்க நாடுகளில் உள்ளது போன்று உழைப்பாளிகள் முழுவதுமாக வேலை பெறவில்லை எனக் கொள்வோம். அல்லது அவர்களது உற்பத்தித் திறன் மிகக் குறைவாக உள்ள வேலைகளில் அவர்கள் இருக்கிறார்கள் எனக் கொள்வோம்.[15] இதைத் தவிர ஏற்கெனவே பயன்படும் சாதனங்களுடைய உற்பத்தித் திறன் அளவுக்கு உற்பத்தித் திறனுடைய இயற்கைச் சாதனங்களும் கிடைக்குமானால், வெளிநாட்டு மூலதனத்துக்குத் தேவையான காரணிகள் அனைத்தும் முழுவதாகக் கிடைக்கின்றன. அந்த மூலதனம் உள்ளே வருவதால் எல்லா உற்பத்திக் காரணிகளும் மேலும் பயன்படும்.

ஒரு படத்தின் மூலம் விளக்கினால், ஒரு குறிப்பிட்ட அளவு உழைப்போடும் நிலத்தோடும் சேர்ந்து உள் நாட்டு மூலதனம் செய்யும் உற்பத்தியோடு (படம் 28·1), முன்னர் வேலையற்றிருந்த அல்லது உற்பத்தித் திறனற்ற வேலையிலுள்ள உழைப்போடும் இயற்கைச் சாதனங்களோடும் இணைந்து வெளிநாட்டு மூலதனம் அப் பொருளாதாரத்தில்

15 உற்பத்தித் திறன் குறைவான வேலைகளில் மக்கள் இருப்பதற்கு, எடுபிடி வேலையாட்கள், உணவு கொண்டு தருபவர்கள், கடைக்காரர்கள், வீட்டு வேலையாட்கள் போன்றவர்கள் பெரும் எண்ணிக்கையில் இருப்பதே சான்று. ஏதாவதொரு காரியத்தைச் செய்யக் காத்திருப்பதிலேயே அவர்களுடைய காலத்தில் பெரும் பகுதி கழிகிறது. செருப்புகளுக்குப் பாலிஷ் போடுவது, புட்டிகளையும் பெட்ரோல் டின்களையும் சேகரித்து விற்பது, பின்னர் விற்பதற்காகத் தோட்டவேலைக் கருவிகளையும் மோட்டார் பாகங்களையும் திருடுவது ஆகியவை ஏழ்மைக்கும் குறைவான உற்பத்தித் திறனுக்கும் வேறு அடையாளங்களாகும். குறைவான உற்பத்தித்திறனைப் பலர் குறைந்த வேலை நிலை (under employment), அல்லது மறைந்த வேலைநிலை (disguised employment) என்பர்.




படம் 28·2. வேலையற்றிருந்த உழைப்போடும் இயற்கைச் சாதனங்களோடும் சேர்ந்து வெளிநாட்டு மூலதனம்




படம் 28·3. வெளிநாட்டுப் பகுதியிலும், உள்நாட்டுப் பகுதியிலும் பொருளாதாரம் முழுவதிலும் மூலதனத்தின் உற்பத்தித் திறன்

ஒரு புது உற்பத்திப் பகுதியை இப்போது சேர்க்கிறது (படம் 28·2). இந்த வெளிநாட்டுப் பகுதியில், ஏற்கெனவே உள்ள தொழில்களில் புதுக் கம்பெனிகளின் உற்பத்தியும் அல்லது வெளிநாட்டு முதலீட்டிஞல் பெரிதான உள்நாட்டுக் கம்பெனிகளின் உற்பத்தியும், புதிய பொருள் களைப் புதிய கம்பெனிகள் செய்யும் உற்பத்தியும், புதிய அரசாங்கத் தொழிற்சாலைகளின் உற்பத்தியும் அடங்கக்கூடும்.

இதற்குமுன் உள்நாட்டில் நடந்த உற்பத்தியோடு இந்தப் புது வெளிநாட்டுப் பகுதியின் உற்பத்தியைச் சேர்த்தால், 28·3 படத்தில் உள்ளதுபோல ஒரு புது நாட்டு உற்பத்திக் கோடு கிடைக்கிறது. அது $BNM$ என்ற புள்ளிகளாலான கோடாகக் காட்டப்படுகிறது. உள் நாட்டு மூலதனம் பெறும் லாபவிகிதம் வெளிநாட்டு முதலீட்டாளர்களுக் குப் போதுமானதாக இருந்தால் அவர்கள் முதலீட்டை $OF$ புள்ளிவரை அதிகரிக்கச் செய்வர். அப்போது இறுதிநிலை உற்பத்தி $GF$, உள் நாட்டுத் துறை இறுதிநிலை உற்பத்திக்கு $(ED)$ சமமாக இருக்கும். மொத்தம் உபயோகமாகும் மூலதனம் $OT\ (=OF+OD)$. வெளிநாட்டு முதலீட்டுப் பகுதியின் உற்பத்தி $OBGF$, உள்நாட்டுப் பகுதியின் உற்பத்தி (முன் போலவே) $OBED$. மொத்த நாட்டு உற்பத்தி என்பது இவ்விரண்டின் தொகையாகும். அதாவது, $OBMT$. இதில் உள்நாட்டு மூலதனத்துக்குக் கிடைக்கும் மொத்த வருமானம், முன்போலவே, $OAED$. வெளிநாட்டு மூலதனத்துக்குக் கிடைப்பது $DEMT$ $(=OAGF)$.

உற்பத்தியாக அப் பொருளாதாரம் பெறும் நிகர லாபம், அதன் உழைப்பாளிகளும் இயற்கைச் சாதனங்களின் சொந்தக்காரர்களும் அதிகமாகப் பெறும் சம்பாத்தியம் ஆகும். இதன் அளவை $ABNG$ அல்லது (ஏறக்குறைய) அதற்குச் சமமான $ENM$ குறிக்கிறது. ஒரு பகுதி வேலைகள் அதிகமானதாலும், மற்ருெரு பகுதி வேலையின் உற்பத்தித்திறன் அதிகமானதாலும், உழைப்பாளிகளின் வருவாய் அதிகமாகிறது.[16] எல்லா இயற்கைச் சாதனங்களும் அந்நாட்டவருக்கே சொந்தமாஞல், அவற்றின் அதிகமான வருவாயும் நாட்டு லாபத்தில் அடங்கும். ஆஞல், சில இயற்கைச் சாதனங்களை வெளிநாட்டார் வாங்கியிருந்தால், அவர்கள்தான் அதிகமான வருவாயைப் பெறுவர். ஆஞல், இதன்மீது வேண்டுமாயின் வரி விதிக்கலாம். வெளிநாட்டு

[16] தொழிலாளிகள் உற்பத்தித் திறன் குறைந்த வேலைகளிலிருந்து திறனதிகமான வேலைகளுக்கு மாறும்போது ஓரளவு உற்பத்தி நஷ்டமாகும். அது சிறிய அளவாக இருப்பினும் அதைப் பொருட்படுத்தாமலிருக்கக் கூடாது. எனவே, திருத்தமாக இருக்கவேண்டுமாஞல் உள்நாட்டு மூலதனத்தின் உற்பத்தித் திறன் கோட்டைச் சிறிது கீழே இறக்கவேண்டும். இதன் விளைவாக மொத்த உற்பத்திக் கோடும் சிறிது இறங்கும்.

மூலதனத்தின் வருவாய்மீதும்—ஒரு குறுகிய வரம்புக்குள்—வரி விதிக்கலாம்.

முன்னர் இருந்ததைவிட நிறைய புதுப் பொருள்கள் உற்பத்தியாவதாலும், ஏற்கெனவே உற்பத்தியாகும் பொருள்களின் தரம் உயர்ந்ததாலும் நுகர்வோராக நாட்டின் மக்கள் முழுவதும் லாபமடைகின்றனர். வேலைகளும் வருமானங்களும் அதிகரித்ததனால் விற்பனையும் அதிகமாவதால் பெரிய அளவு உற்பத்தி உண்டாகும்; அதனால் பண்டங்களின் விலைகளும் குறையும்.

வெளிநாட்டு மூலதனம் இறக்குமதியாகும்போது அதனுடன் சாதாரணமாகப் பல புறச்சிக்கனங்களின் உருவில் மற்றொரு வகை லாபமும் ஏற்படுகிறது. உதாரணமாக, நவீனத் தொழில் முறைகளை அறிந்த வெளிநாட்டுக் கம்பெனிகள் தம் மூலதனத்தோடு இப் புது முறைகளையும் அந் நாட்டுக்கு இறக்குமதி செய்கின்றனர். அதனுடன் நன்கு தேர்ந்த நிர்வாகிகளும், தொழில் முறை நிபுணர்களும் வருவர். வெளிநாட்டுக் கம்பெனிகளின் கிளைத் தொழிற்சாலைகளில் மட்டும் புதுத் தொழில் முறைகளும் தேர்ந்த நிர்வாகமும் இருந்தால் விலை குறைவதும், உற்பத்தியின் தரம் உயருவதும் மட்டுமே அந் நாடு பெறும் லாபம் ஆகும். ஆனால், லாபம் அதனோடு நிற்காது. உள்ளூர்த் தொழிலதிபர்கள் அப் புது முறைகளைப் பின்பற்றுபவர்கள்; உள்ளூர்த் தொழிலாளிகள் புது முறைகளில் தேர்ச்சி பெறுவர். இத் தேர்ச்சி வேண்டுமென்றே நிறுவப்பட்ட பயிற்சித் திட்டங்களால் ஏற்படும். தொழிலாளிகள் ஒரு ஆலையைவிட்டு மற்றொன்றில் வேலை ஏற்றதால் இத் தேர்ச்சி பிற ஆலைகளுக்கும் பரவும்.

முறைகளில் அபிவிருத்தி இல்லாமற்போனாலும்கூட மேலும் அதிகமாகவும் உற்பத்தி, திறனுள்ளதாகவும் வேலைகள் கிடைப்பதன் நேரிடை விளைவாகத் தேர்ச்சிபெற்ற உழைப்பாளிகளின் எண்ணிக்கை அதிகமாகும். அதேபோலத் தேர்ச்சி பெற்ற நிர்வாகிகளின் எண்ணிக்கையும் அதிகமாகும். இவர்களில் சிலர் வெளிநாட்டவராக இருக்கும். சிலர் நிர்வாக வேலைகளை ஏற்றுக்கொண்ட உள்ளூர் மக்களாகவும் இருக்கும்.

புதுப்பொருள்கள் உற்பத்தி செய்யப்படுவதால் மேல் படிகளில் தொழில்களின் செலவுகள் குறையும். உதாரணமாக, ஒரு சிமிட்டித் தொழிற்சாலை ஏற்படுவதால் இறக்குமதியான சிமிட்டிக்குப் போக்குவரத்துச் செலவுகள் செய்யவேண்டிய செலவு, கட்டடம் கட்டும் தொழிலுக்குக் குறைகிறது. அல்லது மூலப்பொருள்கள், இடைநிலைப் பொருள்கள் ஆகியவற்றை உற்பத்தி செய்பவர்களின் விற்பனை

இப்போது அதிகமாவதால் அவர்கள் பெரிய அளவு உற்பத்தியைச் செய்வதன்மூலம் செலவுகளைச் சிக்கனம் செய்யலாம்.

இறுதியாக, வெளிநாட்டு மூலதனமோ, அது வந்ததனால் வேறு துறைகளினின்று உள்நாட்டு மூலதனமோ, சாலைகள், இருப்புப் பாதைகள், மின்சக்தி உற்பத்தி, அல்லது பிற சமூகப் பொது மூல தனங்களில் முதலீடு செய்யப்பட்டால் அவற்றின் பணியைப் பயன் படுத்தும் எல்லாத் தொழில்களிலும் உற்பத்தித் திறன் பெருகும்.

இந்த மாதிரி அமைப்புக்கு ஏற்றவாறுதான் பெரும்பாலான வெளிநாட்டு முதலீடுகள் உள்ளன. மெக்சிகோ, பிரேஜில், வெனிசுவேலா (Venezuela), இந்தியா ஆகியவற்றிலும் வேறு பல நாடுகளிலும், உள்நாட்டு நிறுவனங்களும், வெளிநாட்டுக் கம்பெனி களும், ஒரு பகுதி மூலதனம் வெளிநாட்டார் போட்டிருக்கும் கம்பெனி களும் ஒருங்கே காணப்படுகின்றன. அவற்றுக்குப் பணி புரியும் பொதுப்பணித் துறை நிறுவனங்களிலும் நிறைய வெளிநாட்டு மூலதனம் காணப்படுகிறது. எல்லா வகை நிறுவனங்களும் ஒன்றோடொன்று போட்டியிடுகின்றன; எல்லாம் சேர்ந்து நாட்டுத் தேவைகளைப் பூர்த்தி செய்கின்றன; ஒரே அளவு இலாபத்தைப் பெறுகின்றன; சிலவற்றின் வெளிநாட்டுப் பெயர்களையும், சிலவற்றின் நிர்வாக ஊழியர்களின் வெளிநாட்டுத் தோற்றத்தையும் பார்த்துத்தான் இவை உள்நாட்டு நிறுவனமல்ல, வெளிநாட்டு மூலதனம் கொண்டவை என்று பிரித்துக் கூறமுடியும்.

## இரட்டைப் பொருளாதாரம் (Dual Economy)

ஒரு வளர்ச்சி குன்றிய நாட்டில் ஒரு குறிப்பிட்ட பகுதியில் மட்டும் அதாவது இயற்கை வளம் செறிந்து, பயன்படுத்தினால் நல்ல இலாபம் கிடைக்கக்கூடிய பகுதியில் மட்டும், வெளிநாட்டு முதலீடு செய்யப்படுவதும் உண்டு. பல நாடுகளில் இப் பகுதி மக்கள்தொகை அதிகம் வாழும் முக்கிய கேந்திரங்களினின்று தூரத்தில் இருக்கும். இதற்கு, சிலியின் செம்புச் சுரங்கங்களையும், வெனிசு வேலாவின் எண்ணெய்ப் படிவங்களையும், இலங்கையிலும் இந்தியா விலும் உள்ள தேயிலைத் தோட்டங்களையும் உதாரணமாகக் கூறலாம். அப்போது ஒரு பொருளாதாரத்துக்குள் இரண்டாம் பொருளாதாரம் தோன்றுகிறது. முதலது உழைப்பை அதிகம் பயன்படுத்துவது, பழையது, ஒவ்வொரு காரணிக்கும் குறைந்த வருவாயைத் தருவது. இரண்டாவது, மூலதனத்தை அதிகம் பயன்படுத்துவது, புதியது, நல்ல இலாபத்தைத் தருவது. 28·2 எண்ணுள்ள படத்தை ஓர் இரட்டைப் பொருளாதாரத்தின் இந்த வெளிநாட்டுப் பகுதியைக் குறிக்கப் பயன்படுத்தலாம். ஆனால், இயற்கைச் சாதனங்களின்

உயர்ந்த உற்பத்தித் திறனை காட்ட, கோட்டை மேலும் உயர்த்த வேண்டும். மூலதனத்தினால் விளையும் இறுதிநிலை உற்பத்தி உள் நாட்டுப் பகுதியைவிட இதில் அதிகமாக இராமல் போகலாம். ஆனால், அந்த இயற்கைச் சாதனங்கள் தனக்குச் சொந்தமாக இருப்பதாலோ, அல்லது அவற்றைப் பயன்படுத்தும் உரிமைகளைப் பெற்றதாலோ, வெளிநாட்டு முதலீட்டாளன் அந்த இயற்கை வசதி களுக்கான வாடகை முழுவதையும் அல்லது அதில் ஒரு பகுதியைப் பெறுவான். (இது A'BG பரப்பில் ஒரு பகுதி; அது பெரும் பகுதியாக வும் இருக்கலாம்.) இந்த வாடகையும், மூலதனத்துக்குக் கிடைக்கும் இலாபமும் பெரும்பாலும் வெளிநாட்டுக்கு அக் கம்பெனியின் மொத்த இலாபமாக அனுப்பப்படுவதால், உள்நாட்டுப் பொருளாதாரத்துக்கு இந் நடவடிக்கையால் கிடைக்கும் வருமானம் அதன் தொழிலாளர்கள் பெறும் கூலிதான். அதுவும் அத்தகைய பல தொழில்களில், முக்கியமாக அவை மூலதனத்தை அதிகமாகப் பயன்படுத்துபவையாக இருந்தால், குறைந்த அளவுக்குத்தான் உழைப்பாளிகள் தேவைப் படுவர். ஆனால், அதே சமயம் இத் தொழிலாளிகள் வேறு வேலைகளில் பெறுவதைவிட அதிகமாகக் கூலியைப் பெறுவர். சிலசமயம் அவர்கள் பெறும் வீட்டு வசதிகளும் பிற வசதிகளும் பிற இடங்களைவிட நன்றாக இருக்கும். இத்தகைய வழிகள் நல்ல தொழில் நிர்வாகத்தின் ஓர் அம்சம். இதனால், அடிக்கடி தொழிலாளிகள் மாறுவதனால் ஏற்படும் நஷ்டம் தவிர்க்கப்படுகிறது.

வெளிநாட்டுப் பகுதிக்கும் உள்நாட்டுப் பகுதிக்கும் வித்தியாசம் இல்லாமல் இருக்கக்கூடிய அளவைவிட இந்த இரட்டைப் பொருளா தாரத்தில் உழைப்பாளிகள் பெறும் தொழில்நுட்பப் பயிற்சி பரவுவதால் ஏற்படும் நன்மை குறைவு. இதற்குக் காரணம், தொழிலாளர் பெறும் தேர்ச்சி ஒரு குறிப்பிட்ட தொழில்முறையில் மட்டும் இருந்து அதை வேறு தொழில்களில் பயன்படுத்த முடியாது இருக்கலாம். அல்லது, தொழிலாளர்கள் அந்த இடத்தைவிட்டு வேறு இடங்களுக்குப் போகாமல் இருக்கலாம்.[17] இருப்பினும், அத் தொழில்களை அடுத்து ஏற் படும் வேலை வாய்ப்புகளால் நன்மை ஏற்படக்கூடும். உதாரணமாக, உள்ளூர் கான்டிராக்டர்களுக்கு வேலை கிடைக்கும்; அந்தப் பிரதேசத்தி லுள்ள விவசாயிகள் தம் உற்பத்தியை அங்குப் புதிதாக விற்கமுடியும். தவிர, தீர்ந்துபோகக்கூடிய ஓர் இயற்கை வளத்தை ஒரு வெளிநாட்டு நிறுவனம் பயன்படுத்திக்கொண்டிருக்குமானால் அதன் சம்பாத்தியத் தின்மீது வரி விதிக்க நல்ல ஆதாரம் உள்ளது. பல ஆண்டுகளாக

[17] இதற்கும் இத்துடன் தொடர்புடைய விஷயங்களுக்கும் ராபர்ட் பால்ட் வினது அருமையான கட்டுரையைப் பார்க்கவும். Robert E. Baldwin, 'Export Technology and Development from a Subsistence Level,' *Economic Journal*, LXXIII (March, 1963).

பெட்ரோலியம் உற்பத்தியாகும் நாடுகளின் அரசாங்கங்கள் ராயல்டியாகவோ, வருமான வரியாகவோ எண்ணெய்க் கம்பெனிகளின் வருமானத்தில் பெரும்பாலும் 50 சதவீதத்தைப் பெற்றுவந்துள்ளன. உற்பத்தியாளர்களோடு பேரம்பேசப் பெட்ரோலியம் ஏற்றுமதி நாடுகளின் சங்கம் (Organization of Petroleum Exporting Countries—OPEC) ஒன்று சமீபத்தில் அமைக்கப்பட்டது. ஓரளவுக்கு அதன் பயனாக மத்தியக் கிழக்கு நாடுகள் எண்ணெய்க் கம்பெனிகள் பெற்ற இலாபத்தில் இப்போது சுமார் 55 சதவீதத்தைப் பெறுகின்றன. வெனிசுவேலாவில் அரசாங்கம் 67 சதவீதத்தை எடுத்துக்கொள்கிறது.[18] உற்பத்தியாகும் எண்ணெய் முழுவதும் வெளிநாடுகளில் விற்கப்படுவதால், இந்த வருமானங்கள் அரசாங்க பட்ஜெட்டுகளுக்குப் பெருந் தொகைகளைத் தருவதோடு அந்த நாடுகளுக்கு அன்னியச் செலாவணி கிடைக்கும் ஒரு முக்கியமான வழியாகவும் உள்ளன.

## அயல்நாட்டு உதவி

வளரும் நாடுகளுக்கு அரசாங்கப் பண உதவிகளாகவும் கடன்களாகவும் வரும் அயல்நாட்டு உதவிக்கும் தனியார் முதலீடுகளுக்கும் கூட முந்திய பக்கங்களில் கூறியவை அதே அளவுக்குப் பொருந்தும். ஆனால், இவற்றுக்குள் ஒரு வித்தியாசம் என்னவென்றால், அயல்நாட்டு உதவி அரசாங்கங்களின் கொள்கை முடிவுகளினின்று ஏற்படுகிறது. தனியார் முதலீடுகள் இலாபத்தின் கவர்ச்சியால் ஏற்படுகின்றன. அப்படியானால் எந்தக் குறிக்கோள்களுக்காக அயல்நாட்டு உதவியைத் தரவேண்டும். எந்த நிபந்தனைகளைப் பொறுத்து அதைக் கொடுக்க நிச்சயிக்கவேண்டும் என்ற கேள்விகள் எழுகின்றன.

### பயன்கள்

1950-ல் வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கு உதவி தருவது முதன் முதலாக ஒரு முக்கியமான பிரச்சினை ஆயிற்று. அது தொடங்கிப் பல குறிக்கோள்களுக்காக உதவி தரப்பட்டுள்ளது. உதாரணமாகப் பின் வருவனவற்றைக் கூறலாம்: கம்யூனிச நாடுகளுக்கும் சுதந்திர நாடுகளுக்குமிடையே உள்ள கெடுபிடிப் போரில் (cold war) நேச நாடுகளுக்கு ஆதரவாக, முக்கியமாக நெருக்கடி அதிகமாக உள்ள எல்லைகளில், கொரியா, தென் வியட்நாம் போன்றவற்றில் அளிக்கப்பட்டது; அந்தப் போரில் ஒரு பக்கம் சாய்ந்த நாடுகளை மறுபக்கம் ஈர்க்கக் கொடுக்கப்பட்டது; பாதுகாப்புக்கு அவசியமான பொருள்களை வாங்க உதவி தரப்பட்டது; பொருளாதாரச் சரிவு ஏற்படும் நிலையிலிருந்த நாடுகளைக்

[18] *The Economist* (June 29, 1963), பக்கம் 1396.

காப்பாற்றப் பயன்பட்டது; சில நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக் காகவும் உதவி தரப்பட்டது. பல முன்னேறிய நாடுகளின் அயல் நாட்டுக் கொள்கைகளில் வளரும் நாடுகளுக்கு உதவி தருவது முக்கிய மான இடத்தைத் தொடர்ந்து வகிக்கப்போகிறது. எனவே, அதை வேகமாக வளர்ப்பது முக்கியமான குறிக்கோளாகிவிட்டது. ஆனால், சில சமயங்களில் தாற்காலிகமாக இந்தக் குறிக்கோளைக் கடைப்பிடிக்க முடியாமல் நெருக்கடிகள் தோன்றவும் கூடும்.

பொருளாதார வளர்ச்சியில் பல அம்சங்கள் உள்ளன என்பதை முன்னரே பார்த்தோம். தொழில்நுட்ப அபிவிருத்தி, முதலீட்டை நிறைய அதிகரிப்பது, பலப் புதுமுறைகளில் தேர்ச்சி பெறுவது, அறியாமையைப் போக்குவது, நோயை ஒழிப்பது போன்ற பல அம்சங்கள் அதில் உள்ளன. வளர்ச்சிக்கான உதவி அவற்றுள் ஏதாவது ஒன்றுக்காகத் தரப்படலாம். பெரும்பாலும் அவ்வாறுதான் உள்ளது. குறிப்பிட்ட திட்டம் எதையும் எடுத்துக்கொள்ளாமல் உதவி தரும் ஏற்பாட்டை எடுத்துக்கொள்வோம். அஃது எதற்கு ஆதர வாகத் தரப்படுகிறதோ அந்தப் பொருளாதார வளர்ச்சித் திட்டத்தைப் போலவே, அயல்நாட்டு உதவியும், வளரும் நாட்டின் மொத்தப் பொரு ளாதார நிலையில் மாறுதலைப் பொறுத்து வெற்றி அடைகிறது அல்லது தோல்வி அடைகிறது என்று சொல்லப்படுகிறது. அத்தகைய மாறுதலை அளக்கத் திருப்திகரமான வழி ஒன்றுதான்; அது, தலா வருமானங்களில் உள்ள மாறுதல்தான். எனவே, சாதாரணமாக இதைக் கொண்டுதான் அந்த வளர்ச்சித் திட்டமும், அதை ஆதரித்த அயல்நாட்டு உதவியும் பயனடைந்ததா இல்லையா என்பதைக் கூற முடியும்.

### திட்டமிடுதலும் அயல்நாட்டு உதவியும்

வளர்ச்சிக்கான ஓர் ஏற்பாடும், உதவிக்கான ஓர் ஏற்பாடும் இணைபிரியாதவை. பொருளாதார வளர்ச்சி ஏற்படப் பல ஆண்டுகள் செல்லும். அதில் பல அம்சங்கள் உள்ளன. அனைவரும் ஒருங்கே இணைந்து செயலாற்றினால்தான் அஃது ஏற்படும். அதற்குத் தேவை யான நிதி வசதியும் மக்கள் ஆதரவும் இருந்தால்தான் வளர்ச்சி ஏற்படும். எனவே, வளர்ச்சி பெற அதற்காக முன்கூட்டியே திட்ட மிடுவது அவசியம். திட்டம் இடாவிட்டால் தனித்தனிப் பணிகள் ஏனோதானோவென்று ஒன்றுக்கொன்று தொடர்பின்றிச் செய்யப்படும். ஆனால், திட்டமிடுவது அவசியமானால், அமைக்கப்பட்ட திட்டத்தில் நன்கு இணைந்திருந்தால்தான் அயல்நாட்டு உதவி முழுப்பலன் தரும். இரசாயன உரத் தொழிலும், அதனால் விவசாய உற்பத்தியும், ஒரு பெரிய மின்விசை நிலையத்தின் உற்பத்தியை நம்பியுள்ளது என்று கொள்வோம். ஒரு குறிப்பிட்ட சமயத்தில் அதைக் கட்டி முடிப்பது என்று திட்டமிடப்பட்டுள்ளது. அச் சமயத்தில் உதவி தரும் நாடு,

நான் இருப்புப் பாதைச் சாதனங்களைத்தான் தருவேன் அல்லது கல்வி வளர்ச்சிக்குத்தான் உதவுவேன் என்று கூறுவது தவறு. அஃது அடக்க மற்று, ஒத்துழையாமல் நடக்க விரும்புகிறது என்று அதற்குப் பொருள்.

அமெரிக்கா உதவி தருவதில் பெற்ற அனுபவங்கள் இம் முடிவுகள் உண்மை என்பதைக் காட்டுகின்றன. வளர்ச்சிப் பணிகளை ஒன்றொன்றாகத் தனித்தனியாக எடுத்துக்கொண்டு உதவுவதால் பல நாடுகளில் வளர்ச்சியின் பல பயனுள்ள அம்சங்கள் ஏற்பட்ட போதிலும், அவை ஒன்றுக்கொன்று இசைந்தவையாகவும் ஒரே குறிக் கோளை அடைய உதவுபவையாகவும் இல்லை. ஜனாதிபதி கென்னடி பதவி ஏற்ற முதல் ஆண்டு அயல்நாட்டு உதவிக்கொள்கை முழுவது மாகப் பரிசீலிக்கப்பட்டது. அதன் விளைவாக ஒரு முழுப் பொருளா தார வளர்ச்சித் திட்டத்தை உதவிகோரும் இலத்தீன் அமெரிக்க நாடுகள் தயாரிக்கவேண்டிய அவசியம் உண்டாயிற்று. அதை அமெரிக்க நாடு களின் சங்கம் (Organization of American States) நியமிக்கும் நிபுணர்கள் ஒப்புக்கொள்ளவேண்டும். அதன் பின்னரே அமெரிக்கா உதவி தரும் என்று இலத்தீன் அமெரிக்க முன்னேற்றத்துக்கான கூட்டணியை (Alliance for Progress in Latin America) அமைக்கும்போது நிச்சயிக்கப்பட்டது. உலக பாங்கின் அனுபவமும் இம் முடிவைத்தான் நிரூபிக்கிறது. அதன் பொருளாதார சுற்றுப் பார்வைக் குழுக்கள் (Economic Survey Missions) அனைத்தும் வளர்ச்சிக்காக நன்கு அமைந்த திட்டம் ஒன்றைத் தயாரிப்பதை ஆதரிக்கின்றன. உலக பாங்கின் பொருளாதார வளர்ச்சிப் பயிற்சி நிலையம் (Economic Development Institute) பல நாடுகளில் இனித் திட்டமிடுவதில் பணியாற்றப் போகும் அலுவலர்களுக்குப் பயிற்சி அளிக்கிறது.

ஆனால், திட்டமிடுவதற்கு உதவுவதை எதிர்ப்பவர்களும் இருக் கிறார்கள். திட்டத்துக்கு உதவி தருவதற்கு எதிர் வாதங்களுள் வலிமை மிக்கது, அதனால் தனியார் தொழில்கள் பாதிக்கப்பட்டு வளராமல் தடுக்கப்படும்; அதே சமயம் மத்திய அரசாங்கத்தின் அடக்குமுறை அதிகாரத்தை அவ்வுதவி அதிகமாக்கும் என்பது[19] தவிர, தாம் தயாரிப் பதில் உதவிய திட்டங்களின் வெற்றிக்கு உதவி தரும் நாடுகள் முழுப் பொறுப்பு ஏற்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது என்பது மற்றொரு

[19] பின்வரும் கட்டுரையைப் பார்க்கவும்: M. Friedman, 'Foreign Economic Aid: Means and Objectives,' *The Yale Review* (June, 1958). Reprinted in De Vere E. Pentony, ed., *United States Foreign Aid*. Published 1960 by Howard Chandler, San Francisco.

வாதம். முதல் எதிர்வாதம் கூறியது போன்ற பயம் உண்மையில் இல்லை. வளர்ச்சிக்கான திட்டம் என்றால், கம்யூனிச நாடுகளின் ஒருமையத் (central) திட்டமாகவேதான் இருக்கவேண்டும் என்ப தில்லை. சாதாரணமாக அஃது அவ்வளவு தீவிரமாக இருப்ப தில்லை. திட்டம் என்பது சாதாரணமாக 'எதிர்காலப் பொருளாதார அமைப்பைப்பற்றி ஓர் ஒழுங்கான முறையில் ஒரு நாடு எண்ணமிடும் ஒரு சுற்றமைப்பு......இத்தகைய திட்டத்தில் தனியார் தொழில்களுக்கு நிறைய வாய்ப்பு உள்ளது. தனியார் துறையின் கட்டுப்பாடுகளை நீக்கி அவற்றின் திறனை உயர்த்தும் பல அம்சங்கள் அதில் அடங்கி யுள்ளன.'[20] திட்டங்களுக்கு முழுப் பொறுப்பேற்கும் வாதத்தைப் பொறுத்தவரையில், உதவி தரும் நாடுகளின் சட்டமன்றங்கள் அவ்வாறு ஒப்புக்கொள்ளவில்லை என்பதை உதவி பெறும் நாடுகள் நன்கு அறியும்.

எந்தக் குறிக்கோள்களுக்கு உதவுவது, அதை எப்படி வளர்ச்சித் திட்டத்துக்கு ஏற்றவாறு தருவது என்பது முக்கியமான கொள்கை விஷயங்கள். அவற்றை அடுத்த பல கொள்கைப் பிரச்சினைகளும் முக்கியமானவை. அவற்றுள் ஒன்று, உதவியை, முக்கியமாகக் நன்கொடையாகத் தருவதா, அல்லது முக்கியமாகக் கடனாகத் தருவதா என்பது. காங்கிரஸ் சபையின் வற்புறுத்தல் காரண மாக அமெரிக்கா இப்போது நன்கொடைகளைவிடக் கடன்களை அதிக மாகத் தரவேண்டும் என்று நினைக்கிறது. அதேசமயம் பன்னாட்டு பாங்கு அதன் புதிய துணை நிறுவனமாகிய பன்னாட்டு வளர்ச்சிச் சங்கத்தின் (Internationial Development Association) மூலம் அதற்கு எதிர்த் திசையில் சென்றுகொண்டிருக்கிறது. உண்மையில் இங்குக் கருதவேண்டிய விஷயம் மூலதனத்தைப் பெறும் நாட்டின் தேவைதான். ஆனால், இதைத்தான் அதிகாரபூர்வமான விவாதங்களில் பெரும்பாலும் கருதிப் பார்ப்பதே இல்லை. ஒரு நாடு தன் கடன்களைத் திருப்பித்தர வேண்டுமானால் தன் முதலீட்டுக்குப் பயன்படுத்தி யிருக்கக்கூடிய தன் சேமிப்புகளைக் கடனைத் திருப்புவதற்குப் பயன் படுத்தவேண்டும். அப்படிச் செய்தால் அதன் எதிர்கால முன்னேற் றத்தின் வேகம் மிகவும் குறையும்.

வெளிநாட்டு உதவிபற்றிய முழு ஆராய்ச்சியில் பின்வரும் வேறு பல பிரச்சினைகளும் இடம்பெறும் :- உதாரணமாக, உதவி இருமுகமாக இருக்கவேண்டுமா அல்லது பலமுகமாக இருக்கவேண்டுமா, எது நல்லது, எது மேலும் சாத்தியமானது, கடன் வாங்கும் நாடு உள்

20 Robert E. Asher, *Grants, Loans, and Foreign Currencies*, பக்கங்கள் 83–4. Published 1961 by The Brookings Institution, Washington, D. C.

நாட்டுச் செலவாணியில் கடனைத் திருப்பித் தந்தால் அதன் பொருளாதார விளைவுகள் என்ன? குறிப்பிட்ட பணிகளையும், திட்டங்களையும் எவ்வாறு மதிப்பிட்டு அவை உதவிக்கு ஏற்றவையா என்று கண்டு பிடிப்பது, ஆகியவை இவை.[21] உலகம் முழுவதிலும் அயல்நாட்டு உதவி மொத்தம் எவ்வளவு தேவைப்படுகிறது என்று மதிப்பிடும் தொகைபற்றிச் சுருக்கமாகக் கூறி இப் பிரிவை முடிக்க விரும்புகிறேன்.

## உலக முழுவதிலும் பொருளாதார வளர்ச்சிக்குத் தேவைப்படும் மூலதனம்

உலகின் வளர்ச்சி குன்றிய நாடுகளுடைய வளர்ச்சிக்கு அவசியமாக இருக்கக்கூடிய மொத்த அயல்நாட்டு மூலதனத்தின் அளவைப் பலர் மதிப்பிட்டுள்ளனர்.[22] இந்த மதிப்பீடுகளின் அடிப்படைகளும், அவற்றுக்கான புள்ளிவிவரங்களின் காலமும் வித்தியாசப்பட்டாலும் அவற்றை ஒப்பிடுவதற்கு ஏற்ப அவற்றைத் திருத்தினுல் இவை அனைத்தும் வியக்கத்தக வகையில் ஒரே முடிவுகளைக் கொண்டிருக்கின்றன என்பதைக் காண்கிறோம்.[23] வளர்ச்சி குன்றிய நாடுகளின் தலா வருமானங்களில் ஆண்டுக்கு 2 சதவீதம் உயர்வு பெற, பத்து ஆண்டுக்காலத்தில் ஒவ்வோர் ஆண்டுக்கும் தேவைப்படக்கூடிய மொத்த அயல்நாட்டு மூலதனம் $ 5·7-லிருந்து $ 7·0 பிலியன் வரை இருக்கும் என்று மதிப்பிடப்படுகிறது. (கடைசி மூன்று மதிப்பீடுகள் முதல் மதிப்பீட்டைவிடப் புதிய புள்ளிவிவரங்களை அடிப்படையாகக் கொண்டன.) அம் மூன்றின்படி வளர்ச்சிக்கான மூலதனம் இப்போது

21 இவற்றையும் இவற்றோடு தொடர்புகொண்ட விஷயங்களையும்பற்றிச் சுருக்கமாக Robert, E. Asher எழுதிய *Grants, Loans, and Local Currencies,* in *Framing a Development Program,* Gustav F. Papanek, ed. (Carnegie Endowment for International Peace, International Conciliation Series No. 527, March 1960) நூலையும், Andrew Schonfield எழுதிய *The Attack on World Poverty* (Chatto & Windus, London, 1960) நூலையும் பார்க்க.

22 இம் மதிப்பீடுகளில் நான்கு அனைவருக்கும் நன்கு தெரிந்தவை: ஐக்கிய நாடுகள் சபை நிறுவிய நிபுணர் குழு; மாக்ஸ் எப். மில்லிகனும் (Max F. Millikan), டபிள்யூ. டபிள்யூ. ராஸ்டோவும் (W. W. Rostow); பால் ஜி. ஹாஃப்மன் (Paul G. Hoffman); (4) பி. என். ரோஸன்ஸ்டீன்-ரோடன்); P. N. Rosenstein-Rodan); இந் நான்கையும் சுருக்கமாக ஒப்பிட்டுத் தருகிறது ஐக்கிய நாடுகள் வெளியிட்ட சிறு நூல், *The Capital Development Needs of the Less Developed Countries* (Sales No.: 62.II.D.3).

23 ஐக்கிய நாடுகள் நிபுணர் குழு மூலதனம்-உற்பத்தி விகிதத்தை (capital output ratio) 6 : 1 என்று கொண்டது. கடைசியாகக் கூறிய ரோஸன்ஸ்டீன்-ரோடன் அதை 2.8 : 1 என்று கொண்டிருக்கிறார். இவருடைய மதிப்பீட்டில் பின்னர் ஒரு பட்டியலில் சிலவகைச் செலவுகள் சேர்க்கப்பட்டதன் காரணமாக மேலும் தேவைப்படும் அயல்நாட்டு மூலதனத்தின் தொகை உயர்ந்து ஏறக்குறைய பிற மதிப்பீடுகளின் அளவை எட்டுகிறது (அதே நூல், பக்கம் 13, குறிப்பு).

வரும் அளவு $3-லிருந்து $4 பிலியன் வரை இருக்கும். எனவே, நான்கு மதிப்பீட்டின்படியும் மேலும் ஏறக்குறைய $3 பிலியன் மூலதனம் தேவைப்படுகிறது. நடப்பு மூலதன வரவைப் போல மொத்தம் தேவைப்படுவது இரண்டு மடங்கு இருப்பதால், ஒப்புக் கொள்ளக்கூடிய அளவுக்கு மூலதன வரவை உயர்த்தப் பெருமுயற்சி எடுக்கவேண்டும்.

## பட்டியல் 28·2

## 14 தொழில் வளர்ந்த OEEC நாடுகளும் அமெரிக்காவும், கனடாவும் வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கும் பலமுக நிறுவனங்களுக்கும் உதவிய மூலதனம்.

(பிலியன் அமெரிக்க டாலர்களில்)

இருமுக உதவிகள்

| | அதிகார பூர்வ மானவை | | தனியார் துறை | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | நன்கொடைகள் | நிகரக் கடன்கள் | உத்தரவாதம் அளிக்கப்பட்ட ஏற்றுமதிக் கடன்கள் | பிற பகுதிக் கடன்களும் முதலீடுகளும் | சம்பாத்தியங்களை மறுமுதலீடு செய்தது | பலமுக நிறுவனங்களுக்குக் கொடுத்தது | மொத்தம் |
| 1950–55-ன் சராசரி ... | 1·2 | 0·6 | 0·2 | 0·7 | 0·6 | 0·2 | 3·5 |
| 1956–59-ன் சராசரி ... | 2·3 | 1·3 | 0·4 | 1·5 | 0·9 | 0·5 | 6·8 |
| மொத்தம், 1956–59 OEEC நாடுகள் | 3·6 | 1·7 | 1·4 | 2·6 | 2·2 | 1·6 | 12·8* |
| அமெரிக்காவும் கனடாவும் ... | 5·4 | 3·4 | — | 3·4 | 1·4 | 0·8 | 14·4 |

* 'திருத்தங்கள்' காரணமாக உட்பிரிவுகளின் தொகைகளைக் கூட்டினால் மொத்தத் தொகை வராது. திருத்தங்களின் அளவு குறிப்பிடப்பட்டுள்ளன. ஆனால், விளக்கப்படவில்லை.

**மூலம் :** Organization for European Economic Co-operation, *The Flow of Financial Resources to Countries in Course of Economic Development*, 1956–1959 (Paris, April, 1961) பட்டியல் 1, 2. IMF உடன் நடக்கும் விவகாரங்கள், ஓர் ஆண்டுக்குள் திருப்பவேண்டிய கடன்கள், போர்ப்படைகள் சம்பந்தப்பட்டவை ஆகியவை இதில் சேர்க்கப்படவில்லை.

இம் மதிப்பீடுகளில் கடைசி மதிப்பீடு வெளிவந்த அதே சமயத்தில் வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கு அயல்நாட்டு மூலதனம் செல்லுவதைப் பற்றிய நம்பத்தகுந்த விவரங்கள் மேலும் சில வெளிவந்தன.[24] இரு முகமாக வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கு அதிகாரபூர்வமாகவும் தனியார் துறையிலிருந்தும் கொடுக்கப்பட்ட நன்கொடைகள், கடன்கள், பிற தொகைகள் ஆகியவற்றை எல்லாம் சேர்த்து இவ் விவரங்கள் தருகின்றன. உலக பாங்கு, ஐ. நா. போன்ற பலமுக நிறுவனங்கள் மூலம் செல்லும் மூலதனமும் இவ் விவரங்களில் அடங்கியுள்ளன. 1950–55 ஆண்டுகளில் சராசரி வருடாந்திர மூலதனக் கொடைகள் $ 3·5 பிலியன். இதற்குமுன் செய்யப்பட்ட மதிப்பீடுகளுக்குக் கிட்டத்தட்ட இஃது இருப்பதைக் கவனிக்கவேண்டும் (பட்டியல் 28·2).

ஆனால், பின்னர் நான்கு ஆண்டுகளில் என்ன ஏற்பட்டது என்பதைக் கவனியுங்கள். சராசரி வருடாந்திர மூலதனக் கொடை $ 6·8 பிலியனாக இரட்டித்தது. இதற்குக் காரணம் விலை மாறுதல்கள் அல்ல. ஏனெனில், அச் சமயத்தில் உலகின் பல பாகங்களில் ஏற்றுமதி இறக்குமதி விலைகள் மாறாமல் இருந்தன அல்லது மிதமாக இறங்கின; சில நாடுகளில்மட்டும் உள்நாட்டில் பணவீக்கம் இருந்தது. உலக முழுவதிலும் பணவீக்கம் இல்லை. உண்மையில் நெடுங்கால மூலதனம் நிறைய அதிகரித்திருக்கிறது.

அமெரிக்காவைப் பொறுத்தவரை இதற்கு நேரிடையாகச் சான்று உள்ளது. 1951–55-ல் $ 4·5 பிலியனாக இருந்த (போர்ப்படைகளுக்காக அல்லாது) ஆசியா, ஆஃப்ரிக்கா, இலத்தீன் அமெரிக்க நாடுகளுக்கு அமெரிக்கா அளித்த உதவி 1956–59-ல் $ 7·6 பிலியனாக உயர்ந்தது. அதே நாடுகளுக்குச் சென்ற நேரிடையான தனியார் முதலீடுகள் 1951–55-ல் $ 1·2 பிலியனிலிருந்து, 1956–59-ல் $ 2·8 பிலியனாக உயர்ந்தன.[25] 1950–55-ல்தான் அயல்நாட்டு உதவித் திட்டங்கள் முதலில் செயல்படத் தொடங்கின. 1955–60-ல் அவை அளவில் அதிகரித்தன; மேலும் அரசியல் முக்கியத்துவமும் பெற்றன. ஐரோப்பாவைப் பொறுத்தவரை, 1955–60-ல்தான் வெளிநாடுகளுக்குக் கடனாகவும் முதலீடாகவும் பெரும் தொகைகளை அதனால் அளிக்க முடிந்தது.

பொருளாதார வளர்ச்சியைப் பெருக்க உண்மையில் பெரிய முயற்சிகள் எடுக்கப்பட்டன. ஆனால், இதுவரை பார்த்த விவரங்களினின்று அம் முயற்சிகளின் குறிக்கோள் பூர்த்தி அடைந்ததாகக் கூற

[24] OEEC, *The Flow of Financial Resources to Countries in Course of Development*, 1956–59 (Paris, April, 1961).

[25] U. S. Department of Commerce, *Balance of Payments Statistical Supplement*, Tables 46 and 49.

முடியுமா? தன் வளர்ச்சித் திட்டத்துக்கான நிதிகளை, முக்கியமாக அன்னியச் செலாவணியைப் பெற முடியாது இந்தியா திண்டாடுவதைக் கண்டால் இல்லையென்றுதான் கூறவேண்டும். அதேபோல இலத்தீன் அமெரிக்காவில் முன்னேற்றத்துக்கான கூட்டணியின் நடவடிக்கைகள் இன்னும் வலுக்கவில்லை. பல ஆஃப்ரிக்க நாடுகளில் வளர்ச்சிக்கான முயற்சிகள் இன்னும் தொடங்கவே இல்லை. நாட்டு வருமானம்பற்றிய புள்ளிவிவரங்கள் சரியாக இல்லாததால் அவற்றை அடிப்படையாகக் கொண்டதாலோ, இறுதிநிலைச் சேமிப்பு நாட்டங்கள் அதிகமாவதை மிகையாக மதிப்பிட்டதாலோ மொத்த அயல்நாட்டு மூலதனத்தின் தேவை குறைவாக மதிப்பிடப்பட்டது. தவிர, சாதாரணமாக அயல் நாட்டு உதவியில் அடங்காத உறுப்படிகளெல்லாம் OEEC பட்டியலில் அடங்கியுள்ளன. அவற்றுக்கு உதாரணம் (இரண்டிலிருந்து ஐந்து ஆண்டுகள் தவணை உள்ள) குறுகியகால வாணிபக் கடன்களும் மீண்டும் முதலீடு செய்யப்பட்ட வட்டியும் இலாபமும் ஆகியவை. இவை மூலதன வளர்ச்சிக்கு உதவியபோதும் இவற்றால் வளரும் நாடுகளின் அன்னியச் செலாவணித் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியாது. இவற்றுக்காகத் தோராயமாக $ 1·8 பிலியனைக் கழித்தால் 1955–60-ல் கொடுக்கப்பட்ட மொத்த மூலதன உதவிகள் ஆண்டுக்கு $ 5 பிலியனாகும். ஐ. நா. மதிப்பீடுகளைவிட இஃது அதிகமே.

மேலும், மூலதனம் தேவை என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால், எந்த அளவுக்குத் தேவை என்பதுதான் விவாதத்துக்குரியது. மொத்தத் தொகையைவிட அஃது எப்படிப் பங்கிடப்படுகிறது என்பது முக்கியம். முக்கியமாக அரசாங்க உதவியை எடுத்துக்கொண்டால், தன் பொருளாதார வளர்ச்சிக்குத் திறம்பட உழைக்கும் நாடுகளுக்குத் தரப்படும் உதவிதான் நல்ல பலனைத் தரும். வளர்ச்சி அதிகமாகும் போது, பார்த்துப் பொறுக்கி உதவியைத் தருவது மிகவும் முக்கியமாகிறது.

## வாணிபமும் பொருளாதார வளர்ச்சியும்

பன்னாட்டு வாணிபத்தின் கோட்பாட்டை நாம் ஆராய்ந்தபோது உற்பத்தியில் நாடுகள் சிறப்புத் தேர்ச்சி பெற்று ஒவ்வொரு நாடும் தான் சிறப்பாகச் செய்யும் பொருள்களை மாற்றிக்கொள்வதன்மூலம் எல்லா நாடுகளின் வருமானமும் உயரும் என்பதை நாம் அறிந்தோம். உலகெங்கணும் உற்பத்திச் சாதனங்களின் ஒதுக்கீட்டை மிகத் திறம்படச் செய்து உலகத்தில் சாத்தியமாகும் உற்பத்தியைத் தடையிலா வாணிபம் உயர்த்துகிறது. அந் நன்மையில் எல்லா நாடுகளும் பங்கு கொள்கின்றன. இத்தகைய திறமையான சாதன ஒதுக்கீட்டைப் பாதுகாப்புக் கொள்கை தடுப்பதால் ஒருசில குறுகிய குறிக்கோள்களுக்கு மட்டுமே அதைப் பயன்படுத்தவேண்டும்.

இம் முடிவுகள் உண்மைதான். ஆனால், இவ்வாராய்ச்சிகளிலும் சில குறைகள் உள்ளன. ஒரு சிறு காலக்கூறுக்கு இது பொருந்தும். காலம் செல்லச் செல்ல அதன் விளைவாக மாறுதல்கள் பல ஏற்படுகின்றன. அவற்றையெல்லாம் இது கணக்கில் கொள்ளவில்லை. ஒரு மாருத சூழ்நிலைக்கான கோட்பாடு இது. ஆனால், பொருளாதார வளர்ச்சியில் எப்போதும் மாற்றம் உள்ளது. ஒன்ருேடொன்று தொடர்பு கொண்ட பல நிகழ்ச்சிகளின் இயக்கம் அது. தொன்மையான தராதரச் செலவுக் கோட்பாட்டின் மாருத தன்மைக்கும் இதற்கும் நிறைய வேறுபாடு உண்டு.

ஆனால், பன்னாட்டு வாணிபம்பற்றிய தொன்மைப் பொருளியலாரின் (classical economists) நூல்களிலும் வளர்ச்சிபற்றிய கோட்பாட்டின் சில அம்சங்கள் இருக்கின்றன. வாணிபம் பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிக்கிறது என்று பொருள்படக்கூடிய சில பகுதிகளை அந் நூல்களில் காணலாம். உதாரணமாக, வாணிபம் காரணமாக ஒரு நாட்டின் விசேஷ உற்பத்திகளுக்கு அங்காடிகள் புதிதாக ஏற்பட்டு வேலைகளும் இலாபங்களும் அதிகமாகி அதனால் சேமிப்பும், உற்பத்தியை அதிகமாக்க முதலீடும் உயர வழி உண்டாகிறது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. உற்பத்தி பெருகும்போது அளவுச் சிக்கனங்கள் ஏற்படுகின்றன; புதுமுறைகள் பயன்படுத்தப் படுகின்றன; உற்பத்தித்திறன் உயருகிறது. வாணிபம் இன்றேல் நாட்டு வளர்ச்சிக்கு மிக முக்கியமான மூலதனப் பொருள் இறக்குமதிகளைச் செய்ய முடியாது. வாணிபம் காரணமாக மக்கள் புதுமையான கவர்ச்சிகரமான பொருள்களைக் காண்கிருர்கள். அவற்றைப் பெறுவதற்காக மேலும் உழைத்து வருமானத்தைப் பெருக்கிக் கொள்கிருர்கள். பின்னர் வந்த ஓர் அபிப்பிராயப்படி, வாணிபம் காரணமாக மூலதனமும், தொழில் துணிவும், உழைப்பாளிகளும் இயற்கை வளம் உள்ள இடத்துக்கு இடம்பெயர்ந்து ஒரு செழுமையான ஏற்றுமதித் தொழிலை அங்கு நிறுவவும் கூடும். இந்த அபிப்பிராயம் உண்மைக்குப் பொறுத்தமற்றதன்று. இவ் வழிகளில் எல்லாம் ஒரு நாட்டின் வளர்ச்சியை வாணிபம் மிகவும் தூண்டுகிறது. சர் டெனிஸ் ராபர்ட்ஸனுடைய (Sir Dennis Robertson) சொற்படி, வாணிபம் 'வளர்ச்சியை இயக்கும் பொறி'[26] (engine of growth) என்பதாகும்.

[26] D. H. Robertson, 'The Future of International Trade,' *Economic Journal* (March, 1938). Reprinted in American Economic Association, *Readings in the Theory of International Trade*. வாணிபத்தினுல் ஏற்படும் வளர்ச்சிபற்றிய கோட்பாடுகளுக்கும், முந்திய ஆசிரியர்கள் கூறியவற்றுக்கும், அவற்றை விவரமாக விளக்கும் பின்வரும் நூலைப் பார்க்க: Gerald M. Meier, *International Trade and Development*, பக்கங்கள் 153–59. Published 1963 by Harper & Row, New York.

பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் இருபதாவது நூற்றாண்டின் தொடக்கத்திலும் இந்தப் 'பொறி' திறமையாக வேலை செய்தது. பிரிட்டனிலும் ஐரோப்பாவிலும் மேலும் மேலும் நிறைய விற்க முடிந்ததால் மூலப் பொருள்களைச் செய்த நாடுகளின் ஏற்றுமதிகள், முக்கியமாக, மித சீதோஷ்ண மண்டலத்துப் புது நாடுகளான அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா, நியூஸிலாந்து, அர்ஜென்டினு, உருகுவே, தென் ஆஃப்ரிக்கா ஆகிய நாடுகளின் ஏற்றுமதிகள் வேகமாகப் பெருகின. நல்ல சம்பாத்தியம் கிடைக்கும் வாய்ப்புகள் இருக்கவே, பெருமளவில் மக்கள் இந் நாடுகளில் குடியேறினர். வரும்போது தம் தொழில் திறமைகளையும், மேற்கு ஐரோப்பாவின் கலாசாரத்தையும் ஓரளவு மூலதனத்தையும் கூடவே கொண்டுவந்தனர். 1870-ல் பிரிட்டிஷ் மூலதனத்தில மூன்றில் ஒரு பகுதி இந்தப் பிராந்தியங்களுக்கு இருப்புப்பாதைகளைக் கட்டவும், சுரங்கங்களை இறக்கவும், கால்நடைத் தொழிலையும் கோதுமை விவசாயத்தையும் வளர்க்கவும் பயன்பட்டது. 1913-ல் அது மூன்றில் இரு பகுதி ஆயிற்று.[27] இந்தப் புது நாடுகளில் மக்கள்தொகையும் செல்வமும் பெருகியதும், உள் நாட்டு விற்பனைகளின் அளவு பெருகிப் ஆலைத்தொழில்கள் ஏற்பட வழி உண்டாயிற்று.

ஆனால், முதல் உலகப் போருக்குப் பின்னர், வளரும் ஒரு கேந்திரத்திலிருந்து தூரத்தில் உள்ள பிரதேசங்களுக்கு வளர்ச்சி அவ்வளவாகப் பெருகப் பன்னாட்டு வாணிபம் வழி செய்யவில்லை. அதற்கு ஒரு காரணம், வாணிபம் வளரும் வேகம் குறைந்துபோனது. உலக முன்னேற்றத்தின் மையக் கேந்திரம் இன்னமும் வேகமாக வளர்ந்தாலும், பிற நாடுகளின் வளர்ச்சியை முன்னிருந்த அளவு அது தூண்டவில்லை. 1850-லிருந்து 1880 வரை உலக வாணிபம் 270 சதவீதம் உயர்ந்தது. 1880-லிருந்து 1913 வரை 170 சதவீதம் உயர்ந்தது. 1928-லிருந்து 1958 வரை 57 சதவீதம்தான் உயர்ந்தது.[28] உலக உற்பத்தியைவிட அதிகமான வேகத்தில் வளராமல், அதைவிடக் குறைவாகவே பன்னாட்டு வாணிபம் வளர்ந்திருக்கிறது.

மூலப்பொருள்களின் தேவையைக் குறைத்தபின் வரும் சக்திகளே இதற்குக் காரணமாகும்.[29] (1) தொழில்முறை மாறுதல்கள் காரணமாகக் கச்சாப் பொருள்கள் தொழில்களில் பயனாகும் அளவு முன்னைவிடக் குறைந்துள்ளது. உதாரணமாக, தொழில்முறைகளின் அபிவிருத்தியால் கச்சாப் பொருள்கள் வீணாகாமல் சிக்கனமாகப் பயன்படுத்தப்படுகின்றன; இயற்கையான மூலப்பொருள்களுக்குப் பதிலாகச் செயற்

[27] R. Nurkse, *Patterns of Trade and Development*, பக்கம் 17, Published 1961 by Basil Blackwell, Oxford.

[28] அதே நூல், பக்கம் 19 அடிக்குறிப்பு.

[29] அதே நூல், பக்கம் 23.

கைப் பொருள்கள் நிறைய உபயோகமாகின்றன. (பட்டு, கம்பளி, நைட்ரேட்டுகள், ரப்பர், தோல் ஆகியவற்றின் உபயோகம் குறைந்ததற்கு இஃது ஒரு காரணம்.) தொழில் வளர்ந்த நாடுகளில் இலகு தொழில்களைவிடக் கனரகத் தொழில்கள் (பொறி செய்வதும் இரசாயனப் பொருள் செய்வதும்) அதிகமாக வளர்ந்துவருகின்றன. இவை மூலப்பொருள்களை உபயோகிக்கும் அளவு குறைவு. (2) தொழில் வளர்ந்த நாடுகளில் வருமானங்கள் உயர உயர, அவற்றில் பெரிய பகுதி வசதிப் பணிகளுக்குச் செலவிடப்படுகிறது. (3) பல விவசாயப் பொருள்களின் தேவையின் வருமான நெகிழ்ச்சி (income elasticity of demand) குறைவு. (4) மேற்கு ஐரோப்பாவில், அரசாங்க வருவாயைப் பெருக்கவும் உள்நாட்டுத் தொழில்களைப் பாதுகாக்கவும் இறக்குமதி வரிகள் உயர்த்தப்பட்டதனால், விவசாயப் பொருள்களின் இறக்குமதி குறைந்துவிட்டது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வளர்ச்சியைத் திறம்படவாணிபம் தூண்டியது இப்போது குறைந்துபோனது மட்டுமன்று; தூண்டப்படும் பொருளாதாரங்களின் தன்மையே இப்போது மாறிவிட்டது. முதல் உலகப் போருக்குமுன் வேகமாக வளர்ந்த புதுநாடுகள் மித சீதோஷ்ண மண்டலத்தில் இருந்தன. ஒரு வளரும் கலாசாரத்தின் அமைப்புகளையும், பண்பாட்டையும், திறன்களையும் அந் நாடுகள் பெற்றுக்கொண்டன. இருபதாம் நூற்றாண்டின் மத்தியில் மேலே வந்துகொண்டிருக்கும் நாடுகளெல்லாம் வெப்ப மண்டலத்தில் உள்ளவை; தொன்றுதொட்டு விவசாயச் சமுதாயங்களாக இருப்பவை; பெரிய நிலப்பண்ணைகளைக் கொண்ட நிலமானிய அமைப்பைப் பெற்றவை, இன்னும் பெரும்பாலும் கொண்டிருப்பவை; அல்லது வளர்ச்சியற்ற பூர்வகுடிகளின் பொருளாதாரங்கள்; வலிமை குறைந்த தூண்டுதல்களுக்கு ஏற்ப வளராத தன்மையை உடையவை அவை. எனவே, முன்னர் இருந்த திறமையோடு பன்னாட்டு வாணிபம் ‘வளர்ச்சியை இயக்கும் பொறியாக’ விளங்காததில் வியப்பில்லை. முன்னேறிய நாடுகள் மேலும் வேகமாக முன்னேற, வளர்ச்சி குன்றிய நாடுகளின் பொருளாதாரம் இன்று தேக்கநிலையில் இருக்க, இவ்விரண்டு வகை நாடுகளுக்குமிடையே வாழ்க்கைத் தரங்களிடையே உள்ள வித்தியாசம் அகன்றுகொண்டேபோவதிலும் வியப்பில்லை.

இந்த உண்மைகளை அடிப்படையாகக்கொண்டு, பன்னாட்டு வாணிபத்தைப் பொறுத்தவரையில், வளர்ச்சி குன்றிய நாடுகள் என்னென்ன வழிகளைக் கடைப்பிடிக்கலாம் என்பதை இனிப் பார்ப்போம்.[30]

30 நர்க்ஸ் (Nurkse) எழுதிய, மேற்கோள் காட்டிய நூலின் இரண்டாவது சொற்பொழிவில் இதற்கான மாற்று வழிகளின் விவரங்களைக் காணலாம்.

இந் நாடுகள் தொடர்ந்து மூலப்பொருள்களை ஏற்றுமதிக்காக உற்பத்தி செய்வதில் சிறப்பாக ஈடுபடலாம். ஆனால், பொருளாதார நன்மைகளைமட்டும் பார்த்தால்கூட இது கவர்ச்சிகரமாகத் தோன்ற வில்லை. மூலப்பொருள்களைமட்டும் உற்பத்தி செய்தால், விலை விழுதல், அங்காடியில் மிகையான அளிப்பு வந்துசேருதல், தொடர்ந்து தொழி லில் தேக்கம் ஆகியவை அந் நாடுகளைப் பாதிக்கக்கூடும். ஏற்கெனவே சிறப்பாக உற்பத்தி செய்யும் மூலப்பொருள்களை அந் நாடுகள் தொடர்ந்து உற்பத்தி செய்யட்டும். ஆனால், மேலும் மூலப்பொருள் உற்பத்தியில் சிறப்புத் தேர்ச்சி பெற அவை முயலக்கூடாது. வளரும் நாடுகளுக்கு இறக்குமதிகள் நிறையத் தேவைப்படுகின்றன. அதற்காகக் கூடுமானவரையில் ஏற்றுமதிகளை அதிகரிக்க வேண்டும். எனவே, தன்னாலியன்ற அளவு சிக்கனமாகத் தராதரச் சிறப்பைப் பயன்படுத்தி உற்பத்தி செய்வது மிகவும் நல்லதே. மூலப்பொருள் களின் விற்பனை மேலும் அதிகரிக்குமானால் மேலும் அவற்றைச் சிறப்பாக உற்பத்தி செய்வது நல்லதே. சமீபத்தில் உலக வாணிபத்தில் ஏற்பட்ட அபிவிருத்தி மூலப்பொருள்களை உற்பத்தி செய்யும் நாடுகளின் நிலைமையை அபிவிருத்தி செய்யக்கூடும். 1953-லிருந்து உலகத்தின் ஏற்றுமதிகள், உலக உற்பத்தியைப் போல இருமடங்கு வேகமாக அதிகரித்துவந்துள்ளன. மேலும், ஆலை உற்பத்திகளின் ஏற்றுமதிகள் மட்டும் அதிகமாயிற்று என்பதில்லை; அளவிலும் மொத்த மதிப்பிலும் மொத்த ஏற்றுமதிகளும் ஆலைப்பொருள் ஏற்றுமதிகள் உயர்ந்த அளவுக்கு அதிகரித்துள்ளன. எனவே, மூலப்பொருள் ஏற்றுமதிகளும் நிறைய உயர்ந்துள்ளன (பட்டியல் 30·1 பார்க்க).

அல்லது இரண்டாவது மாற்று வழியான தொழில் வளர்ச்சியை, வளர்ச்சி குன்றிய நாடுகள் மேற்கொள்ளலாம். தம் தொழில்களைப் பெருக்கி அதன் உற்பத்திகளை ஏற்றுமதி செய்யலாம். வளர்ந்த நாடு களில் விற்பனையை நன்கு பெருக்கலாம். இப்போதும் அவை ஒன்றி லிருந்து ஒன்று நிறைய ஆலை உற்பத்திகளை வாங்குகின்றன. வளர்ச்சி குன்றிய நாடுகளில் நிறைய உழைப்பாளிகள் உள்ளனர். எனவே, மூலதனத்தை அதிகம் பயன்படுத்தாத இலேசான பொருள்களை நன்கு உற்பத்தி செய்து அவை விற்கலாம். ‘விற்கலாம்’ என்று சொன்னால் உண்மையில் விற்க முடியுமா என்பதை ஆராயவேண்டும். வளர்ந்த நாடுகளில் இலேசான பொருள் உற்பத்திகளின் விற்பனைதான் பிறவற்றுடன் ஒப்பிட்டால் குறைந்துவருகிறது. சில இடங்களில் அவற்றின் மொத்த விற்பனையே குறைந்துவருகிறது. எனவே, வெளிநாடுகளிலிருந்து இப் பொருள்கள் வருவதை அவை நிச்சயமாக எதிர்க்கும். மேலும், வளர்ச்சி குன்றிய நாடுகளில் உழைப்பாளிகள் அதிகமே தவிர உழைப்பின் விலை மிகவும் குறைவாக இருக்க வேண்டும் என்பதில்லை. (உதாரணமாக, இந்தியா வெளிநாடுகளில்

போட்டியிட்டு நன்கு துணியை விற்க முடிகிறது. ஆனால், சைக்கிள்கள், மின்சார விசிறிகள், தையல் எந்திரங்கள் ஆகியவற்றை நிறைய விற்க முடியவில்லை.) மலிவான விலைகளில் மேலும் நிறைய தொழிற்சாலை உற்பத்திகளை இந் நாடுகள் விற்கவேண்டுமானால், அவற்றில் உழைப் பாளிகளின் உற்பத்தித்திறனை மேலும் பெருக்கவேண்டும்.[31]

இறுதியாக, உள்நாட்டு அங்காடியில் விற்கத் தம் தொழில்களை வளர்ச்சி குன்றிய நாடுகள் பெருக்கலாம். இதில் பெருங் கஷ்டம் என்னவென்றால், இந் நாடுகளில் மூன்றில் இரண்டு பங்கும் அதற்கதிக மாகவும் மக்கள்தொகை விவசாயத்தில் ஈடுபட்டுள்ளது. அவர் களுடைய உற்பத்தித்திறன் மிகவும் குறைவாகவும் உள்ளது. உற்பத்தித்திறன் குறைவாக இருப்பதனால்தான் அவ்வளவு அதிகமான மக்கள் உணவு உற்பத்தியில் ஈடுபடவேண்டியிருக்கிறது. விவசாயத் தில் உற்பத்தி முறைகளை அபிவிருத்தி செய்யாவிட்டால், மிக எளிய சில பொருள்களைவிடப் பிறவற்றை உள்ளூர் அங்காடியில் நன்கு விற்க முடியாது. விவசாய முறைகளை அபிவிருத்தி செய்வது மிகவும் கஷ்ட மானதொரு பணியாகும். உதாரணமாக, கிராம அபிவிருத்தி இந்தியா வில் ஆமை வேகத்தில் ஏற்பட்டுவருகிறது.[32]

தொழில்கள் வளருமுன் விவசாயம் வளர்ச்சி பெறவேண்டும்; அல்லது இரண்டும் ஒன்றாகவாவது வளரவேண்டும். அப்போதுதான் உள்நாட்டில் விற்பனைக்காகத் தொழில் வளர்ச்சியைச் செய்யமுடியும். இந்தத் துறையில் முன்னேற்றம் ஏற்பட ஏற்பட, மேலும் மேலும் தொழில்களைத் தொடங்கி உற்பத்திச் செலவுகளைக் குறைக்க முடியும்

31 GATT-ன் ஆதரவில் 1963 மே மாதம் ஜினீவாவில் நடந்த மந்திரிகள் மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்களின்படி, வளர்ச்சி குன்றிய நாடுகளின் மூலப் பொருள்கள், ஆலைப் பொருள்கள் ஆகிய இருவகை ஏற்றுமதிகளையும் தொழில் வளர்ந்த நாடுகள் மேலும் தாராளமாக வாங்கக்கூடும் என்ற நம்பிக்கை ஏற்பட் டுள்ளது. மூலப்பொருள்கள்மீதிருந்து வரிகளையும் கட்டுப்பாடுகளையும் நீக்கவும் மூன்று ஆண்டுகளுக்குள் பாதி வினைமுடிந்த பொருள்களும் முழுவதாக வினைமுடிந்தவையும் வளர்ச்சி குன்றிய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்தால் அவற்றின்மீதுள்ள வரியை 50 சதவீதம் குறைக்கவும் ஒரு செயல் திட்டத்தைக் கோட்பாட்டளவில் தொழில் வளர்ந்த நாடுகள் ஒப்புக்கொண்டன. ஐரோப்பாவில் EEC தொகுதி நாடுகள்மட்டும் அதற்குச் சில விதிவிலக்குகளைக் குறிப்பிட்டன. 1964 மே மாதத்தில் இதையும் இதற்குத் தொடர்புடைய பொருள்களையும்பற்றிப் பேச்சு வார்த்தைகள் தொடங்க இருந்தன.

32 இந்தியாவில் நகர்ப்புறங்களின் தலா வருமானத்தில் ஆறில் ஒரு பங்கு தான் கிராமப்புறங்களில் தலா வருமானமாக இருக்கிறது. நாட்டின் இவ்விரு பகுதி களுக்கும் உள்ள வித்தியாசத்தைப் பின்வரும் நூல் தெளிவாக எடுத்துக் காட்டு கிறது: Alvin H. Hansen, *Economic Issues of the 1960's*, பதினோ ராவது அத்தியாயம், McGraw-Hill Book Co., New York, 1960. இது பற்றி மிகவும் படிக்க நன்றாக உள்ள நூல் Kusum Nair, *Blossoms in the Dust*. Published 1961 by Gerald Duckworth & Co., Ltd., London.

என்ற நம்பிக்கை அதிகமாகிறது. இறக்குமதிகள், நன்கு விற்ற பொருள்வகைகள்தாம் முதலில் தொழில் வளர்ச்சிக்கு மிகச் சிறப்பானவை. தொடக்கத்தில் இளந்தொழில்கள் என அவற்றுக்குப் பாதுகாப்பு அளிக்கவேண்டியது அவசியம். ஆனால், அவை அனுபவம் பெற்று, தொழில்முறைகளை நன்கு உணர்ந்துகொண்ட பிறகு, இந்த ஆதரவில்லாமலேயே அவை செயலாற்றும். ஏதாவதொரு தொழிலில் வளர்ச்சி ஏற்பட்டால், கூடவே அதற்குக் கச்சாப் பொருள்களையும் பாகங்களையும் அளிக்கும் தொழில்களும், அத் தொழிலின் உற்பத்தியை மேலும் சீராக்கும் தொழில்களும் வளரும். (ஏதாவது ஒருவகைப் பானத்தை உற்பத்தி செய்யும் தொழில் வளர்ந்தால் கூடவே புட்டிகளை உற்பத்தி செய்யும் தொழிலும் வளரும்; துணித் தொழிலோடு ஆடைகள் உற்பத்தியும், தோல் தொழிலோடு செருப்பு உற்பத்தியும் வளரும்.) இந்த வழியைப் பின்பற்றுவதானால், விவசாயம், தொழில், சமூகப் பொது வசதிகள் ஆகிய அனைத்தையும் ஒன்றோடொன்று இணைத்து வளர்க்க வேண்டும். இதைத்தான் வளர்ந்த நாடுகள் பல மேலும்மேலும் செய்துவருகின்றன.

'வளர்ச்சி குன்றிய' என்று நாம் பொதுவாகக் கூறும் நாடுகளில் ஒன்றுக்கொன்று மிகவும் மாறுபட்ட நிலவரங்கள் இருக்கக்கூடும் என்பதை மறக்கக்கூடாது. மெக்சிகோ, பிரேஜில், அர்ஜென்டினா போன்ற சில நாடுகளில் இணையாகத் தொழிலும் விவசாயமும் வளரத் தொடங்கிவிட்டன. புது ஆஃப்ரிக்க நாடுகள் பலவற்றில் இப்போதுதான் அடிப்படையான தொழில்முறைகளும் ஒருசில சமூகப் பொது வசதிகளும் தோன்ற ஆரம்பித்துள்ளன. ஒரு நாடு எந்த வழிகளில் தன்னை வளர்க்க முயல்கிறது என்பதும் அதன் முன்னேற்றம் பெரிய அளவுக்குச் சாத்தியமா என்பதும் அதன் இயற்கை வளத்தின் அளவையும் தன்மையையும் அதன் பொருளாதாரத்தின் அளவையும் பொறுத்தது. பழைய மூலப்பொருள்கள் அல்லது புதியவற்றை நிறைய ஏற்றுமதி செய்வது உடனடியாகச் சில நாடுகளுக்கு இலாபகரமாக உள்ளது.

மத்திய அமெரிக்கக் குடியரசுகள் போன்ற சிறிய நாடுகள் பொருளாதாரச் சங்கம் அமைத்து, அதன்மூலம் பெரிய விற்பனைகளைச் செய்து தம் வளரும் தொழிற்சாலைகளையும் மேலும் பொருள்களை உற்பத்தி செய்யும் விவசாயத்தையும் ஆதரிக்கின்றன. (இதுபற்றி, 29, 30ஆம் அத்தியாயங்களைப் பார்க்க.) இந் நாடுகளின் சாதனவளம், அவற்றின் முன்னேற்றத்தின் நிலை, அவற்றின் சமுதாயப் பண்பாடு ஆகியவற்றில் வித்தியாசங்கள் உள்ளதால், அவற்றின் பொருளாதார வளர்ச்சியின் தன்மை, வேகம் அளவு ஆகியவற்றிலும் வித்தியாசங்கள் இருக்கும்.

## பார்வைக்குரிய சில நூல்கள்

Asher, Robert E., *Grants, Loans, and Local Currencies.* Washington, D. C.: The Brookings Institution, 1961. வெளிநாட்டு உதவியின் நன்மை தீமைகளைப்பற்றி இச் சிறு நூல் அழகாகக் கூறுகிறது.

Haberler, Gottfried, *International Trade and Economic Development.* Cairo: National Bank of Egypt, 1959. பொருளாதார வளர்ச்சிக்குப் பன்னாட்டு வாணிபம் மிகவும் உதவியுள்ளது என்பதற்கு ஆதாரவாக உள்ளது.

Meier, Gerald M., *International Trade and Development.* New York: Harper & Row, 1963. இப் பொருள்பற்றி இதைவிட விவரமாக எந்த நூலும் எழுதப்படவில்லை.

Myrdal, Gunnar, *An International Economy.* New York: Harper & Bros., 1956. பொருளாதார வளர்ச்சியை வாணிபம் பாதிக்கவில்லை. ஆனால், அதற்கு உதவியிருக்கிறது என்பது தவறு என்று வாதித்து, வாணிபத்துக்கும் வளர்ச்சிக்கும் உள்ள பல்வேறு தொடர்புகளை ஆராய்கிறது.

Nurkse, Ragnar, *Patterns of Trade and Development.* Oxford: Basil Blackwell, 1961. Reprinted in *Equilibrium and Growth in the World Economy.* Cambridge: Harvard University Press, 1961. உலக வாணிபத்தின் போக்கில் மாறுதல்களும் அவற்றுக்கும் பொருளாதார வளர்ச்சிக்கும் உள்ள தொடர்புபற்றியும் பேசப்பட்ட விக்செல் சொற்பொழிவுகள் (Wicksell Lectures).

———, *Problems of Capital Formation in Underdeveloped Countries.* Oxford: Basil Blackwell, 1953. மூலதனச் சேர்க்கையின் பன்னாட்டு அம்சங்களைப்பற்றி அத்தியாயம் 5, 6-ல் படிக்கலாம்.

Tinbergen, Jan, *Shaping the World Economy.* New York: The Twentieth Century Fund, Inc., 1962. மூலப்பொருள் உற்பத்தி நாடுகளின் ஏற்றுமதி வருமானங்களைத் திடநிலை அடையச் செய்ய பண்ட ஒப்பந்தங்கள் எப்படிப் பயன்படுகின்றன என்பதை 4ஆவது அத்தியாயம் சுருக்கமாகக் கூறுகிறது. உலகக் குறிக்கோள்கள் மேலும் பல நாடுகளையும் சேர்த்திருக்கவேண்டும் என்பதையும் அதை அடையும் கொள்கைகளையும்பற்றி 5, 6, 7 அத்தியாயங்கள் எதிர்காலத்தை மனத்தில் கொண்டு எழுதப்பட்டுள்ளன. பொருளாதார வளர்ச்சியில் பிராந்தியங்களின் நிலையை 1-லிருந்து 4-வரை பிற்சேர்க்கைகள் காட்டுகின்றன.

# 29. பிராந்திய இணைப்பு
## (Regional Integration)

**மாறுபட்ட வாணிபக் கொள்கைகள் : 1500–1939**

வாணிபக் கொள்கைகளின் வரலாற்றைப் பார்க்கும்போது, அரசாங்கங்கள் பன்னாட்டு வாணிபத்தைப்பற்றி ஒன்றுக்கொன்று மிகவும் மாறுபட்ட கொள்கைகளைக்கொண்டிருந்த மூன்று காலக் கூறுகள் இருந்ததைப் பார்த்தோம். இவற்றில் முதலாவது மெர்க் கன்டலிசக் காலம். அப்போது வாணிபத்தின்மீது தீவிரமான கட்டுப் பாடு இருந்தது. அரசாங்கத்தின் அதிகாரத்துக்கு ஆதரவாக இக் கொள்கை மேற்கொள்ளப்பட்டது. அது வழங்கிவந்த இரண்டரை நூற் றுண்டுகளில், அதற்குமுன் சிறிய எண்ணிக்கையில் முக்கியத்துவம் அற்றிருந்த வணிகர்களும் கைவினைப் பொருள் உற்பத்தியாளர்களும் எண்ணிக்கையில் பெருகிப் பணக்காரராயினர். இருப்பினும், அதன் கட்டுப்பாட்டு அம்சங்களின் காரணமாக மெர்க்கன்டலிசம் வளர்ச்சி யையும் தொழில் துணிவையும் தடுத்து இலாபங்களைச் சுருக்கியதனால், புதிதாக ஏற்பட்ட மத்தியதர வகுப்பினர் அக் கொள்கையை எதிர்த்து அதன் தடைகளையும் விதிகளையும் மீறலாயினர். வணிக–முதலாளி வர்க்கத்தினரின் பொருளாதார பலமும் அரசியல் செல்வாக்கும் நிலையாக வளர்ந்தது. அவர்களுடைய நலன் பொருளாதாரச் சுதந்திரத் தினல் அதிகமாக வளரமுடியும் என்பதை அவர்கள் உணர்ந்தனர். அவர்களுடய செல்வாக்கின் காரணமாக, மெர்க்கன்டலிசக் கொள்கை யின்படி விதிக்கப்பட்ட உள்நாட்டுக் கட்டுப்பாடுகள் படிப்படியாக நீக்கப்பட்டன. தடையிலா வாணிபக் கொள்கைக்கு ஆதரவு பெருகியது. ஆடம் ஸ்மித் (Adam Smith) அதை மிகவும் ஆதரித்து எழுதினர். பிரிட்டனில் அது முக்கியமான கொள்கையாயிற்று. ஐரோப்பாக் கண்டத்திலும் அதை ஆதரித்த செல்வாக்குடையவர்களின் எண் ணிக்கை அதிகரித்துக்கொண்டேபோயிற்று.

நெப்போலியப் போர்களுக்குப் பின்னர் தடையிலா வாணிபத்தை ஆதரித்தவர்களின் அரசியல் வலிமை பெருகியதனல், இதுவரை உள்

நாட்டுப் பொருளாதாரத்தில் கையாண்டுவந்த தாராள மனப்பான்மை அயல்நாட்டு வாணிபத்துறைக்கும் பரவியது. பல நூற்றுண்டுகளாக வாணிபத்தைப் பிணைத்திருந்த தளைகளை நாடுகள் ஒன்றன்பின் ஒன்ருக நீக்கின. ரோமானியர்களுடைய காலத்தில் இருந்ததைவிடப் பத்தொன்பதாம் நூற்ருண்டில் வாணிபச் சுதந்திரம் அதிகமாக இருந்தது. வாணிபம் சென்ற திசையும் நாடுகளின் சிறப்புத் தேர்ச்சி யின் தன்மையும் முழுக்க முழுக்க அங்காடிச் சக்திகளாலேயே நிர்ண யிக்கப்பட்டன. புதுக்கொள்கை வந்ததும், பன்னுட்டு வாணிபம் பன்மடங்கு பெருகியது. இதன் விளைவாகத் தொழிற்சாலை உற்பத்தியில் மேற்கு ஐரோப்பா மிகச் சிறப்பாக விளங்கியதால், அதன் மக்கள் தொகை பெருகிக்கூட அவர்களுடைய வாழ்க்கைத்தரம் தாழவில்லை.

இந்த அற்புதமான காலத்தின் முடிவில் நாட்டுப்பற்று மீண்டும் ஏற்பட்டது. அதனுடன் வாணிபக் கட்டுப்பாடுகள் மீண்டும் வரத் தொடங்கின. 1914-ல் போர் மூண்டதும் இவ்வியக்கம் வலுப்பட்டது. இதற்குக் காரணம், போர் காரணமாக நாட்டுப்பற்று உணர்ச்சி மேலும் அதிகமானதுதான். 1920-ல் மீண்டும் எளிமையான விக்டோரியா காலத்து அமைப்புகள்மீது நாட்டம் கொண்டவர்கள் ஏமாற்றமடையு மாறு நாட்டுப்பற்றுச் சக்திகள் வலுத்தன; பொருளாதாரத்தில் நெகிழ்ச்சியின்மையும் உலைவுகள் அதிகம் ஏற்படக்கூடிய சூழ்நிலையும் ஏற்பட்டன. உலகப் பெருமந்தத்தினுல் பன்னுட்டுப் பொருளாதாரம் சீர்குலைந்தது. அதன் முடிவாக நாட்டுப் பிரச்சினைகளை முக்கியமாகக் கருதும் கொள்கைகள் ஏற்பட்டன. தேவையும் அளிப்பும் தொடர்ந்து செயல்பட்டபோதும், அவற்றின் செல்வாக்கு வழங்கிய இடங்கள் குறைந்தன; 1914-க்குமுன் நாடுகளிடையே உற்பத்தியைப் பங்கிட்டு எல்லாவிதப் பொருள்களும் நிலையாகக் கிடைக்க ஏற்பாடு செய்திருந்த அகில உலக அங்காடி அமைப்பு அழிந்துவிட்டது.

### உலகப் பொருளாதாரத்தை மீண்டும் அமைக்கக் கூட்டுறவு

பத்தொன்பதாம் நூற்ருண்டில் நாடுகள் மிகவும் சிறப்புத் தேர்ச்சி பெற்றுவிட்டிருந்தன. மக்கள்தொகை நிறைய வளர்ந்துவிட்டிருந்தது. எனவே, இந்தச் சீர்குலைவு நெடுநாட்களுக்கு இருக்கக்கூடாது என்பதை 1930–40-ல் ஏற்பட்ட தொல்லைகள் நிரூபித்தன. மேற்கு ஐரோப்பாவும் ஜப்பானும் உலக வாணிபத்தைப் பெரிதும் சார்ந்திருந்தன. எனவே, அந்த வாணிப அமைப்பைச் சீராக்குவது மிகவும் அவசியமாயிற்று. இரண்டாவது உலகப் போர் நடந்துவந்த காலத்திலேயே இதுபற்றி நிறைய விவாதிக்கப்பட்டது. பேச்சு வார்த்தைகள் நடந்தன. விற்பனைப் பிராந்தியத்தை மேலும் பரவலாக்கத் திட்டங்கள் வகுக்கப் பட்டன. அதே சமயம், நியாயமான அளவு பொருளாதார திடநிலை வேண்டுமென்ற தேசிய கொள்கைக்கும் பன்முக வாணிப அமைப்பின்

தேவைகளுக்கும் சமரசமான நடுநிலைத் திட்டங்களை ஏற்படுத்தவும் முயற்சிகள் செய்யப்பட்டன.

இம் முயற்சிகளில் சில பிராந்திய அளவில் செய்யப்பட்டன; வேறு சில அதைவிடப் பரவலான அளவில் செய்யப்பட்டன. ஏற்கெனவே ஸ்டர்லிங் பிரதேசத்தைப்பற்றிக் கூறினோம். அப் பிரதேச நாடுகளின் நிதி இணைப்பும், செலாவணிகளின் திடநிலையும், மாற்றுரிமையும் ஏற்பட்டன. ஒரு பெரிய பிரதேசத்தில் தடையின்றி வாணிபமும் செலுத்தல்களும் அந்த ஏற்பாட்டால் செய்ய முடிந்தது. ஐரோப்பிய நாடுகளிடையே வாணிபத் தடைகளை நீக்க ஐரோப்பியப் பொருளாதாரக் கூட்டுறவு அமைப்பின் (OEEC) முயற்சிகளைப்பற்றியும் கூறினோம். அதே குறிக்கோளுடன் ஐரோப்பியச் செலுத்தல்களை இலகுவாக்க ஐரோப்பியச் செலுத்தல்கள் சங்கம் முயன்றது. ஐரோப்பிய மீட்சித் திட்டம், ஐரோப்பாவின் புனரமைப்புக்கு உதவி இவ்விரு அமைப்புகளை நிறுவியதோடு, பண-உதவி கொடுத்து ஐரோப்பியச் செலுத்தல் சங்கம் நன்கு நடக்கவும் வழி செய்தது. மேலும், அதன் நிர்வாகத்தின் ஊடே, இந்த ஐரோப்பிய மீட்சித் திட்டம், ஐரோப்பிய நாடுகள் நெருக்கமாக இணைந்து அவற்றின் வாணிபத்தைத் தாராளமாக்கவேண்டும் என்பதை இடைவிடாமல் வற்புறுத்தி வந்தது.

உலகப் பொருளாதாரம் மீண்டும் திறம்பட நடக்க வழிசெய்ய உழைக்கும் நிறுவனங்களை எடுத்துக்கொண்டால், இதற்காகப் பன்னாட்டுச் செலாவணி நிதியும் புனரமைப்புக்கும் வளர்ச்சிக்குமான பன்னாட்டு பாங்கும் எப்படி உதவிவருகின்றன என்பதையும் பார்த்தோம். செலாவணி நிலைமையில் இருந்த குழப்பத்தை நீக்கி ஓரளவு திடநிலையைத் தோற்றுவிக்கவும், நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை நீக்க உறுப்பினர்களை இடைவிடாது வற்புறுத்தவும், மாற்றுரிமைக்கான இயக்கத்தை ஆதரிக்கவும் பன்னாட்டுச் செலாவணி நிதி அமைக்கப்பட்டது. முன்னேற்றம் குறைவாக உள்ள நாடுகளின் வளர்ச்சியை ஆதரிப்பது பன்னாட்டு பாங்கின் முக்கியமான பணியாகும். அதே சமயம், அந் நாடுகளின் பொருளாதார வளர்ச்சி அவற்றின் வாணிபத் தடைகளைக் குறைக்கவும், அவற்றின் செலாவணிகள் மாற்றுரிமை பெறுவதிலும் ஓரளவு உதவும்.

## பன்னாட்டு வாணிப நிறுவனத்துக்கான (International Trade Organization) யோசனை

பிரெட்டன் வுட்ஸ் மகாநாட்டு விவாதங்கள் நல்ல பலனை அளித்தன. எனவே, நிதி, பணத்துறைகளில் பன்னாட்டுக் கூட்டுறவு சரியாக நடக்குமானால் அஃது ஏன் பன்னாட்டு வாணிபத் துறையில்

நடக்காது என்ற கேள்வி எழுந்தது. இதுபற்றி வெகு நாட்கள் விவாதம் நடந்தபின், அமெரிக்க உள்நாட்டுத்துறை ஒரு சிற்றேட்டை வெளியிட்டது. அதன் தலைப்பு, 'உலக வாணிபமும் வேலைகளும் பெருக யோசனைகள்' (Proposals for Expansion of World Trade and Employment). வணிகக் கொள்கைத் துறையில் பல பொருள்களைப் பற்றிய யோசனைகள் இதில் அடங்கின. உதாரணம் பின்வருமாறு: இறக்குமதி வரிகள், சலுகைகள், கோட்டாக்களும் (quotas) லைசென்சு முறைகளும், வாணிபத்தைக் கட்டுப்படுத்தும் பழக்கங்கள், முழு வேலை நிலையைப் பாதுகாப்பது, நாடுகளிடையே ஏற்படக்கூடிய ஒப்பந்தங்களை நிர்வகிக்க ஒரு பன்னாட்டு வாணிப நிறுவனத்தை நிறுவுவது.

அமெரிக்க சர்க்காரின் நிர்வாகத் துறையினரின் ஒப்புதலையும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஒப்புதலையும் பெற்றபின் இந்த யோசனைகள் ஒரு வாணிபம், வேலைபற்றிய பன்னாட்டு மகாநாட்டில் (International Conference on Trade and Employment) விவாதிக்கப்பட்டன. இம் மகாநாடு 1946 இலையுதிர் காலத்தில் லண்டனில் முதலில் கூடியது. அடுத்த ஆண்டு ஜினீவாவில் நடந்தது. 1947–48 குளிர் காலத்தில் ஹவானாவில் (Havana) முடிந்தது. இதன் விளைவான பன்னாட்டு வாணிப நிறுவனத்தின் (ITO) சாசனத்தில் 50 நாடுகள் ஹவானாவில் கையெழுத்திட்டன. ஒரு குறிப்பிடப்பட்ட எண்ணுக்கு நாடுகள் அச் சாசனத்தை ஒப்புக்கொண்டால் (ratification), இந்த நிறுவனம் அமைக்கப்படும்.

ஆனால், பன்னாட்டு வாணிப நிறுவனம் காகிதத்தில் எழுதப்பட்டதோடு நின்றுவிட்டது. அஃது அமைக்கப்படவே இல்லை. அந்த ஏற்பாட்டின் விதிகள் மிகவும் தம் நாட்டு வாணிபத்தைப் பாதிக்கும் என்று அமெரிக்கக் காங்கிரஸ் சபையில் தீவிரமான எதிர்ப்பு எழுந்தது. அதனால் அச் சாசனத்தை அஃது ஒப்புக்கொள்ளவில்லை. அதனுடன் அதுபற்றிய பேச்சே நின்றுவிட்டது.

## இறக்குமதி வரி, வாணிபம்பற்றிய பொது ஒப்பந்தம் (General Agreement on Tariffs and Trade)

எதிர்பார்த்திருந்த பன்னாட்டு வாணிப நிறுவனம் வந்தாலும் வராவிட்டாலும் வாணிபத் தடைகளைக் குறைக்க முயற்சி செய்ய விரும்பி, லண்டன் மகாநாட்டில் கலந்துகொண்ட நாடுகளில் சில, ஜினீவாவில் அம் மகாநாடு தொடர்ந்து வாணிப சாசனத்தைப் பரிசீலிக்கும் அதே சமயத்தில், பரவலாக இறக்குமதி வரிகளைக் குறைக்கப் பேச்சுவார்த்தைகள் நடத்துவது என்று தீர்மானித்தன. இந்தப் பேச்சுவார்த்தைகளில் 23 நாடுகள் கலந்துகொண்டன. இவற்றின் விளைவாகப் பல இணைந்த

இருமுகச் சலுகைகள் ஏற்பட்டன. ஒப்பந்தத்தில் கலந்துகொண்ட நாடுகள் அனைத்துக்கும் பின்னர் இச் சலுகைகள் தரப்பட்டன. இவற்றை ஓர் இறக்குமதி வரி, வாணிபம்பற்றிய பொது ஒப்பந்தத் தில் (GATT) பதிவு செய்தனர். முதல் மகாநாடு 1947-ல் ஜினீவாவில் ஏற்பட்டபின், பன்முக இறக்குமதிப் பேச்சுவார்த்தைகள் வெற்றிகரமாக 1949, 1951, 1956, 1961-ல் நடந்தன. 1964 வசந்தகாலத்தில் கூட்டப்பட்ட மகாநாடு மிகவும் முக்கியத்துவம் பெற்றது.

இறக்குமதி வரி ஒப்பந்தத்தில் கையெழுத்திடும் நாடுகளின் கடமைகளை அவை செய்யுமாறு பார்த்துக்கொள்ளவும் அவற்றின் உரிமைகளைப் பாதுகாக்கவும் 1947-ல் முதல் ஜினீவா ஒப்பந்தத்தில் பங்கு கொண்ட நாடுகள், வணிகக் கொள்கைபற்றிய பன்னாட்டு வாணிப நிறுவன ஏற்பாடுகள் அடங்கிய விதிகளின் தொகுதி ஒன்றை யும் ஏற்றுக்கொண்டன. இந்த விதிகளை நாடுகள் பின்பற்று கின்றனவா என்பதைப் பார்க்க ஒப்பந்த நாடுகளின் கூட்டங்கள் ஆண்டுக்கு ஒரு முறை (பின்னர், ஆண்டுக்கு இருமுறை) நடப்ப தெனத் தீர்மானிக்கப்பட்டது. அதற்காக ஒரு சிறு தலைமை அலுவல கத்தையும் (secretariat) (1954-க்குப்பின்) ஒரு நிரந்தர பிரதிநிதிகள் சபையையும் (Council of Representatives) நிறுவினர். இவ்வாறு பல நாடுகள் (1963 தொடக்கத்தில் இவற்றின் எண்ணிக்கை 44 ஆக உயர்ந்துள்ளது) சேர்ந்து செய்துள்ள ஒப்பந்தமாக இருந்தபோதிலும், GATT பன்னாட்டு வாணிபத்தைத் தொடர்ந்து பாதுகாத்து வரும் நிரந்தரப் பன்னாட்டு ஸ்தாபனமும்கூட. அது தொடங்கிச் சில ஆண்டு களே ஆனபோதிலும், வாணிபம் பன்முகப் பாதையில் பெருகுவதற் காகப் பாடுபடும் முக்கியமான சக்தியாக இன்று அது விளங்குகிறது.

**முக்கியமான கொள்கைகள்**

இந்த அமைப்பின் விதிகளில் மூன்று கொள்கைகள் முக்கிய மானவை: (1) வாணிபத்திலே பேதங் காட்டக்கூடாது; (2) வாணி பத்தின் அளவுகளைக் கட்டுப்படுத்தக் கூடாது; (3) தகராறுகளைத் தீர்க்கப் பேச்சுவார்த்தைகள் நடத்தவேண்டும்.

பேதம் காட்டுவதைத் தவிர்க்க, எல்லா இறக்குமதி ஏற்றுமதி வரிகள் விஷயத்திலும் உச்ச-சலுகை-நாட்டுக் கொள்கையைக் (most-favoured-nation principle) கடைப்பிடிக்க ஒப்பந்த நாடுகள் ஒப்புக்கொள்கின்றன. அதாவது, உச்சமான சலுகை பெறும் நாடு நடத்தப்படுவது போலவே எந்த நாடும் நடத்தப்படுகிறது. வாணிபத்தின் அளவுத் தடைகள் அனுமதிக்கப்படும் அளவுக்கு அவை யும் பேதம் காட்டாமல் விதிக்கப்படவேண்டும். விசேஷமான சிக்கல் கள் இருக்குமிடத்தில்மட்டும் பேதம் காட்ட விதிவிலக்குகள் ஜாக்

கிரதையாக வரம்பு குறித்து அனுமதிக்கப்படுகின்றன. உதாரணமாக, விற்பனைக் குவிப்பு (dumping) அல்லது ஏற்றுமதிக்குப் பண உதவி செய்யும் ஒரு நாட்டுக்கு எதிராகமட்டும் நடவடிக்கைகளை எடுக்கலாம். அவற்றைப் பிற நாடுகளுக்கு எதிராகச் செய்யக்கூடாது. புதிதாக ஒரு சில நாடுகளுக்குமட்டும் சலுகைகள் காட்டுவது தடுக்கப்படுகிறது. ஆனால், எல்லாருக்கும் சலுகை காட்டும் முறைகளை நிறுவும் ஏற்பாடுகள் அனுமதிக்கப்படுகின்றன. அஃதாவது, சுங்க இணைப்புகள் (customs unions) அல்லது தடையிலா வாணிபப் பிராந்தியங்கள் (free-trade areas) அனுமதிக்கப்படுகின்றன; அஃதுவும், 'அதில் அடங்கியுள்ள நாடுகளிடையே வாணிபத்தைப் பெருக்குவதாக இருந்து, ஆனால், அதேசமயம் பிற நாடுகளுடன் நடக்கும் வாணிபத்தின்மீது தடைகளை உயர்த்தாமல் இருந்தால்தான்' இந்த அனுமதி உண்டு.

வாணிபத்தின்மீது கட்டுப்பாடுகள் 'நெகிழ்ச்சியுடைய இறக்குமதி வரிகளாகமட்டுமே இருக்கலாம். இறக்குமதிக் கோட்டாக்களைப் பயன்படுத்துவது கூடாது என்று தடுப்பது இந்த ஒப்பந்தத்தின் முக்கியக் கொள்கையாகும். இத் தடைக்கு மூன்று முக்கிய விதிவிலக்குகள் அனுமதிக்கப்பட்டுள்ளன. அவையும் வரம்பு மீறிச் செல்லாமல் இருக்க வழி செய்யப்பட்டுள்ளது. (1) செலுத்துநிலைப் பற்றுக்குறையினால் வருந்தும் நாடுகள் கோட்டாக் கட்டுப்பாடுகளை விதிக்கலாம். சேம நிதிகள் கவலைக்கிடமாகக் குறைவதைத் தடுக்கவோ, அல்லது அவற்றில் குறைவு ஏற்படும் என்ற பயம் தோன்றும்போதோ அல்லது அசாதாரணமாக மிகக் குறைவாக உள்ள சேமநிதிகளை நியாயமான அளவுக்கு உயர்த்தவோ தேவைப்படும் அளவுக்குமட்டுமே வாணிப அளவுக் கட்டுப்பாடுகளை விதிக்கலாம். மேலும், உண்மையில் இவை அவசியம்தானா என்பதுபற்றிப் பன்னாட்டுச் செலாவணி நிதியைக் கலந்து ஆலோசிக்கவேண்டும். (2) வளர்ச்சி குன்றிய நாடுகள் தம் வளர்ச்சியைப் பெருக்கக் கோட்டா கட்டுப்பாடுகளை உபயோகிக்கலாம். அப்போதும் இந்த அமைப்பு ஒப்புக்கொள்ளும் செயல்முறைகளின் படிதான் அதைச் செய்யவேண்டும். (3) இறுதியாக விவசாயம், மீன்பிடித்தல் ஆகிய தொழில்களின் உள்நாட்டு உற்பத்திகள் அல்லது விற்பனைகள்மீது கட்டுபாடுகள் இருந்தால், அதே அளவுக்குமட்டும் அப் பொருள்களின் இறக்குமதிகளைக் கட்டுப்படுத்தலாம்.

நடைமுறையில், செலுத்துநிலைக் காரணங்களுக்காகவும் பொருளாதார வளர்ச்சிக்காகவும் அளிக்கப்பட்ட விதிவிலக்குகளை எந்த நாடும் துஷ்பிரயோகம் செய்யவில்லை. ஆனால், பல நாடுகளில், அவற்றுள் முக்கியமாக அமெரிக்காவில், உற்பத்திக் கட்டுப்பாடுகள் இன்றி விவசாயப் பொருள்களுக்கு விலை ஆதரவு தரும் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. தம் அங்காடிகளில் விவசாயப் பொருள்கள்

வந்து குவிவதைத் தடுக்க இறக்குமதிகள்மீது அந் நாடுகள் கட்டாய மாக அளவுக் கட்டுப்பாடுகளை விதிக்கவேண்டியிருக்கிறது. எனவே, விவசாயப் பொருள்களைப் பொறுத்தவரையில் இந்த அமைப்பின் விதிகள் பெரும்பாலும் பின்பற்றப்படவில்லை என்று சொல்வது தவறில்லை.

இந்த ஒப்பந்த அமைப்பின் ஆதரவில் பன்முக இறக்குமதி வரிப் பேச்சுவார்த்தைகள் வரிசையாக நடந்தன. உலக முழுவதிலும் உள்ள மொத்த வாணிப வரிகளில் மூன்றில் இரண்டு பங்கு குறையும் அளவுக்கு இப் பேச்சுவார்த்தைகள் பரவலாக நடந்தன. இவ்வாறு வரிகள் குறைந்ததோடன்றி, நாடுகள் தொடர்ந்து ஒன்றையொன்று கலந்தாலோசிக்க வழிசெய்தது இந்த அமைப்பின் முக்கிய சாதனை யாகும். சில சமயம் நாடுகளுக்கிடையே எழும் தகராறுகள் காரணமாக மனக்கசப்பு, பழிவாங்கும் நடவடிக்கைகள், ராஜதந்திர உறவு முறிவது ஆகியவையெல்லாம் நேரக்கூடும். அத்தகைய தகராறுகளை யெல்லாம் மாநாட்டில் கூடிப் பேசித் தீர்த்து இதனால் சமரசம் ஏற்பட்டிருக்கிறது.

இவ்வொப்பந்த அமைப்பு தோன்றிய முதல் சில ஆண்டுகளில் ஓர் உறுப்பு நாடு ஒப்பந்த விதிகளை மீறியதாகவோ, ஒரு முக்கியமான சலுகையை ரத்து செய்துவிட்டதாகவோ, ஒப்பந்தத்துக்கு முரணான முறையில் நடந்ததாகவோ மற்றோர் உறுப்புநாடு கருதினால், வருடாந் தரக் கூட்டத்தில் அதன் புகாரை அந் நாடு கொண்டுவந்தது. அவ் விரு நாடுகளும் தம் தகராற்றை இரு முகமாகத் தீர்த்துக்கொள்ளக் கேட்டுக்கொள்ளப்படுகின்றன. அவ்வாறு அதைத் தீர்க்க முடியவில்லை யானால், ஒப்பந்த நாடுகள் ஒரு செயற் குழுவை (working committee) நிறுவுகின்றன. விஷயத்தைப் பரிசீலித்தபின் தன் யோசனை அல்லது தீர்ப்பை அக் குழு தெரிவிக்கிறது. தவறு செய்த நாடு தன் தவற்றைத் திருத்த மறுத்தால், அதனால் வருந்திய நாடு வேறு ஒரு சலுகையை எடுத்துவிடுவதன்மூலம் அதற்குப் பழிக்குப் பழிவாங்கலாம். பெரும்பாலும் தம் நிர்வாக நடைமுறையில் ஒரு சிறு மாறுதல் செய்து, தவறிழைத்த நாடுகள் ஒப்பந்த நாடுகளின் யோசனையின்படி நடக்க முடியும் ; அப்படி நடக்கவும் செய்தன.

பெரும்பாலான தகராறுகளை இந்த அமைப்பு தீர்த்துவைத்தது. எனவே, 1953-ல் ஒப்பந்த நாடுகள் தம் தகராறுகளைத் தீர்க்கும் முறைப் படி அல்லாத ஒரு நீதிமன்றமாகப் பணியாற்ற ஒரு சிறு குழுவை (panel) ஏற்படுத்தியது. தகராறுகளின் இரு சாரார் கூறுவதையும் இக் குழு கேட்டுத் தகராறு என்ன என்பதை ஆராய்ந்து ஓர் அறிக்கை யைத் தயாரிக்கிறது ; முழுவதும் இவ்விரு நாடுகளையும் கலந் தாலோசித்தே அதை அக் குழு செய்கிறது. இந்த நடைமுறை மாறுத

லினால், இந்த அமைப்பு ஏற்றுக்கொண்டு வெற்றிகரமாகத் தீர்த்து வைத்த தகராறுகளின் எண்ணிக்கை மேலும் அதிகமாயிற்று.

## ஐரோப்பாவில் ஒரு பொதுச் சந்தை

பொது ஒப்பந்த அமைப்பு ஏற்பட்டுப் பத்து ஆண்டுகளுக்குப் பிறகு, நீண்ட நாட்கள் பேச்சுவார்த்தைக்குப் பிறகு, நாட்டு எல்லைகளைத் தொடர்ந்து பொருட்படுத்துவதால் தம் பிரதேசத்தின் பொருளாதார, அரசியல் தேவைகள் பாதிக்கப்படுகின்றன என்று மேற்கு ஐரோப்பாவின் ஆறு நாடுகள் முடிவு செய்தன. 1957 மார்ச்சு மாதம் 24-ஆம் நாள் ரோம் நகரில் அவை ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டன. அதன்படி அவர்களுடைய தனித்தனிப் பொருளாதாரங்களை ஒரே ஒரு பொருளாதார அமைப்பாக இணைக்க அவை ஒப்புக்கொண்டன.[1] இதில் பங்குகொண்ட நாடுகளின் பொருளாதாரங்களிலும், அவற்றின் எதிர்கால அரசியல் அமைப்பிலும், பிற சுதந்திர நாடுகளின் வாணிபத்திலும் முன்னேற்றத்திலும், கம்யூனிஸ நாடுகளுடன் சுதந்திர உலகம் கையாளும் போட்டி முறைகளிலும் மிக முக்கியமான விளைவுகளை இம் முடிவு ஏற்படுத்தப்போகிறது.

ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயத்தை (European Economic Community) நிறுவ உடன்படிக்கை முக்கியமாக உதவியது. இருப்பினும், அதற்கு முன்னாலேயே இதுபோன்ற வேறு ஒரு நடவடிக்கையும் எடுக்கப்பட்டது. 1952-ல் ஏற்படுத்தப்பட்ட ஐரோப்பியக் கரி, எஃகு சமுதாயம் (European Coal and Steel Community) தான் அந்த முதல் நடவடிக்கை. வாணிபக் கட்டுப்பாடுகளை நீக்கியும் சாதனங்கள் தடையின்றி இடம்பெயருவதை ஆதரித்தும் இந்த ஆறு நாடுகளிலும் நிலக்கரி, எஃகு உற்பத்தித் திறமை மிக்க உற்பத்தியாளர்களால் செய்யப்படுவதற்கு ஊக்கமளிக்கும் இத் திட்டம் துணிச்சலானது; கற்பனைத்திறன் வாய்ந்தது. ஒரு மத்திய அதிகாரக் குழுவின் காவலின்கீழ்ப் போட்டி நிரம்பிய ஒரு பொது அங்காடி நடப்பதால், இன்றைய தொழிலுக்கு மிகவும் அவசியமான நிலக்கரியும் எஃகும் மலிவாகவும் நிறையவும் நிச்சயமாகக் கிடைக்கும் என்ற நம்பிக்கை உண்டாயிற்று. வெறுமனே வாணிபத்தின் தடைகளை நீக்குவதோடு நிற்காமல், ஐரோப்பிய நிலக்கரி, எஃகு சமுதாயம் நிறைய அதிகாரங்களோடு ஒரு பன்னாட்டு அதிகாரக் குழுவை (International Authority) நிறுவியது. வாணிபத்தின்மீது இருந்த இறக்குமதி வரிகளையும் பிற கட்டுப்பாடுகளையும் நீக்குவது, பேதம் காட்டும் சிக்கலான போக்குவரத்துக் கட்டணங்களைச் சரிப்படுத்தி ஒரு நியாயமான முறையை

[1] இந்த ஆறு நாடுகள் [பெனெலக்ஸ் (Benelux) நாடுகளான] பெல்ஜியம், நெதர்லண்ட்ஸ், லக்சம்பர்க் நாடுகளும், ஃபிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலியும்.

ஏற்படுத்துவது, ஓர் ஐந்து ஆண்டு இடைக்காலத்துக்குப் பொதுச் சந்தையின் விளைவாக ஏற்படக்கூடிய கஷ்டங்களைத் தாங்க உதவப் பணத்தொகைகளை ஒதுக்குவது ஆகியவை அதன் பணிகள். பொதுச் சந்தை ஏற்பட்டபின் அதன் விதிகளை மீறுவதைத் தடுக்கவும் தொழில் நிறுவனங்கள் இணைவதைத் தடுக்கவும், ஏற்கெனவே ஏற்பட்ட இணைப்புகளுக்கு ஒரு முடிவு காணவும், அதிகபட்ச விலைகளை நிர்ண யிக்கவும் இதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. இறுதியாக முதலீடு களைக் கட்டுப்படுத்தவும் இந்த அதிகாரக் குழு முக்கியமான அதிகாரங் களைப் பெற்றது; திட்டங்களைப்பற்றிய விவரங்களைக் கொடுக்கச் சொல்லி அது கேட்கலாம்; அது தகுதியற்றதாகக் கருதும் எந்தத் திட்டத்துக்கும் வெளியிலிருந்து நிதிகளைப் பெறக்கூடாது என்று நிறுவனங்களைத் தடுக்கலாம்; நிறுவனங்களுக்கு அவற்றைப் புதுமைப் படுத்தவும் விரிவடையச் செய்யவும் கடன்களை அளிக்கலாம்.

நிலக்கரி, எஃகு சமுதாயத்தை அமைத்த உடன்படிக்கை யிலேயே, ஐரோப்பாவின் பொருளாதார, அரசியல் இணைப்புக்கு இது முதல் படி என்று உணர்த்தும் ஒரு ஷரத்து உள்ளது. ஐரோப்பிய நாடுகள் இதுபற்றிக் கொண்டிருந்த பேரார்வத்தை அது காட்டுகிறது. கையெழுத்திட்ட ஆறு நாடுகளாலும்:

> ‘தொன்றுதொட்டு வந்த போட்டி மனப்பான்மையை நீக்கி அனைவருடைய முக்கிய நலனையும் இணைக்க முடிவு செய்யப்பட்டது; ஒரு பொருளாதாரச் சமுதாயத்தை இணைப் பதன்மூலம், கடுமையான போர்களில் நெடுங்காலமாக ஈடு பட்டிருந்த மக்களைக்கொண்டு எல்லாம் கலந்த ஒரு சுதந்திர சமுதாயத்தை அமைக்க முடிவு செய்யப்பட்டது; அவர் களுடைய எதிர்காலத்தை வகுக்கும் நிறுவனங்களுக்கு அடித் தளம் நாட்டுவதென முடிவு செய்யப்பட்டது; இதற்காக ஓர் ஐரோப்பிய நிலக்கரி, எஃகு சமுதாயத்தை ஏற்படுத்துவது என்று தீர்மானிக்கப்பட்டது.’

மேலும் பொருளாதார இணைப்புக்கான முன்னேற்றம் மூன்று ஆண்டுகளுக்குப் பின் மெஸ்ஸினா (Messina) மகாநாட்டில் ஏற்பட்டது.

பெல்ஜியத்தின் அயல்நாட்டு மந்திரி ஹென்ரி ஸ்பாக் (Henri Spaak) தலைமையில் ஒரு பொதுச் சந்தை அமைக்கவும் ஐரோப்பிய நாடுகளின் வசதிகளை அணுமின்சார உற்பத்தியைப் பெருக்க இணைக் கவும் வழிமுறைகளை ஆராய ஒரு குழு அமைக்கப்பட்டது. அதன் பிறகு ரோம் உடன்படிக்கைகள் (Treaties of Rome) தயாராயின. இவற்றின்படி இணைப்புக்கான இரு புதிய அமைப்புகள் ஏற்படுத்தப் பட்டன. அவை ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயமும் ஐரோப்பிய அணுசக்திச் சமுதாயமும் ‘Europ an Atomic Community)

ஆகும். இவ்வுடன்படிக்கைகள் 1957-ல் கையெழுத்தாகி, 1958 ஜனவரி 1-ல் அமலுக்கு வந்தன.

## ஐரோப்பியப் பொருளாதார இணைப்பு

**குறிக்கோள்**

சிறப்புத் தேர்ச்சி பெருகுவதால் ஏற்படும் நன்மைகளைப் பெறுவது தான் ஐரோப்பியப் பொதுச் சந்தையை நிறுவியதன் முக்கியமான பொருளாதாரக் குறிக்கோள். இந்த ஆறு நாடுகளின் மக்கள்தொகையும் சேர்த்தால் 160 மிலியன் ஆகிறது. அவ்வளவு பெரிய அங்காடியில் விற்பனை செய்வதால் ஒவ்வொரு தொழிலிலும் சிக்கனம் அதிகமான பகுதிகள் மிக வேகமாக வளர்ந்து புத்யபுதிய உற்பத்தி முறைகளைக் கடைப்பிடிக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. இந் நாடுகளின் தனித் தனி அங்காடிகள் சிறியவை. எனவே, சர்வாதீன உற்பத்தியாளர்களாக இருந்தால் தவிர, சில தொழில்களால் சிக்கனமாக உற்பத்தி செய்ய இயலவில்லை. அங்காடி பெரிதாக இருந்து விற்பனை அளவு பெருகினால் உற்பத்தி அளவும் பெருகும்; சர்வாதீனம் இல்லாமலே சிக்கனமான உற்பத்தியைச் செய்யமுடியும். இவ்வாறு தொழில்கள் பெருகினால் இந்த இணைந்த பிரதேசம் வலிமை மிக்கதாகும்; தொடர்ந்து வளர்ச்சி பெறும். அங்குப் பொருளாதாரம் திடநிலை அடையும். மக்களது வாழ்க்கைத்தரம் உயரும். அங்க நாடுகள் ஒன்றுக்கொன்று இணக்க மாக வாழும்.[2]

**சுங்க இணைப்பு** (Customs Union)

பொதுச் சந்தையின் மிக முக்கியமான அம்சம் ஆறு நாடுகள் கொண்ட ஒரு சுங்க இணைப்பை அமைத்தது. இதன் பொருள் என்ன வென்றால், உறுப்பு நாடுகளிடையே எல்லா இறக்குமதி வரிகளும் நீக்கப் படும். பிற நாடுகளுக்கு எதிராக எல்லா உறுப்பு நாடுகளும் ஒரே அளவில் இறக்குமதி வரிகளை விதிக்கும். மாறுதலுக்கு அவகாசம் தரப் பன்னிரண்டிலிருந்து பதினான்கு வருடங்கள் இடைக் காலமாக அனு மதிக்கப்பட்டன. இந்தக் காலக்கூற்றில் நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறையாக மூன்று படிகளில் அடுத்தடுத்து 30, 30, 40 சதவீதமாக உறுப்பு நாடுகளிடையே இருந்த இறக்குமதி வரிகள் நீக்கப்பட வேண்டும்.

உறுப்பு நாடுகளின் வெளிநாட்டுப் பிரதேசங்கள் (அல்லது முன்னர் அவ்வாறிருந்தவை) வேண்டுமாயின் பொதுச் சந்தையோடு சேர்ந்து

[2] Organization for European Economic Co-operation, *Report Prepared by the Heads of Delegations of the Intergovernmental Committee Set Up by the Messina Conference to the Ministers of Foreign Affairs* (Paris, 28th August, 1956).

கொள்ளலாம். இப் பிரதேசங்களிலிருந்து வரும் இறக்குமதிகள்மீது இவை எந்நாட்டின் பிரதேசங்களோ அதிலிருந்து வரும் இறக்குமதிகள் மீதுள்ள வரிகளே விதிக்கப்படும். இந் நாடுகள் விதிக்கும் இறக்குமதி வரிகளை அவற்றின் தாய்நாடுகளினின்று வரும் இறக்குமதிகள்மீதுள்ள அளவுக்குப் படிப்படியாகக் குறைக்கவேண்டும். வெளிநாட்டுக்குச் சொந்தமான உள்நாட்டுத் தொழில்கள் விஷயத்தில்மட்டும் இதற்கு விதிவிலக்கு உண்டு.

இந் நாடுகள் அனைத்தும் பிற நாடுகளினின்று வரும் இறக்குமதிகள்மீது விதிக்கும் ஒரே அளவான வரிகள், இதற்குமுன் உறுப்பு நாடுகள் விதித்திருந்த வரிகளின் சராசரி அளவை மிஞ்சக்கூடாது. நடைமுறையில் பெனெலெக்ஸ், ஜெர்மனி நாடுகளின் வரிகளைவிடச் சிறிது அதிகமாக இவை இருக்கும்; ஃபிரான்ஸ், இத்தாலி நாடுகளின் வரிகளைவிடச் சிறிது குறைவாக இருக்கும். அளவுக் கட்டுப்பாடுகளைப் பொறுத்தவரையில் அவற்றைப் படிப்படியாக நீக்கவேண்டும் என்று உடன்படிக்கை குறிக்கிறது. (மேலே சொன்னதெல்லாம் தொழிற்சாலை உற்பத்திகளைமட்டுமே பொறுத்தவை. இவற்றிலிருந்து விவசாய உற்பத்திகளுக்கு விதிவிலக்கு கொடுக்கப்படவில்லை எனினும், அவற்றால் பல பிரச்சினைகள் எழுவதால் அவற்றுக்கு விசேஷமான ஏற்பாடுகள் தேவைப்படுகின்றன. கீழே பார்க்கவும்.)

### பொருளாதார இணைப்பு

பொதுச் சந்தை என்பது சுங்க இணைப்போடு நிற்கவில்லை. இணைந்த நாடுகளுக்கிடையே வாணிபம் இனிது நடக்கவும் அரசியல் தொடர்புகள் மேலும் நெருக்கமாகவும் வழிசெய்யப் பொதுச் சந்தைப் பிராந்தியத்தை ஒரு பொருளாதார இணைப்பாகச் செய்ய ரோம் உடன் படிக்கையில் ஷரத்துகள் உள்ளன. வாணிபத் தடைகளை நீக்குவ தோடுமட்டும் நிற்பது தடையிலா வாணிபப் பொருளாதாரங்களுக்குத் தான் ஏற்றது. ஆனால், உறுப்பு நாடுகள் ஆறிலும் வெவ்வேறு அளவி லும் வகையிலும் அரசாங்கம் குறுக்கிட்டுப் பொருளாதார அமைப்பின் செயல்முறையைப் பாதித்துவருகிறது. நாட்டு வரிவிதிப்பு, முக்கிய மாகச் சமூகப் பாதுகாப்புத் திட்டங்களுக்கு நிதி ஏற்பாடு செய்வது பற்றிய அம்சங்கள் வெவ்வேறு தொழில்களை வெவ்வேறு அளவில் பாதிக் கும். ஒரு நாட்டில் சில தொழில்களை ஆதரிக்க வரிகளும் மானியங்களும் பயன்படுத்தப்படும்; வேறு நாடுகளில் அத்தொழில்களுக்கு அத்தகைய ஆதரவு இராது. பணவீக்கம் அல்லது பணச்சுருக்கச் சூழ்நிலை களில் நாடுகள் மேற்கொள்ளும் நடவடிக்கைகள், முக்கியமாக அவை செய்யப்படும் காலத்தைப்பொறுத்து மாறுபடக்கூடும்.

இந்த நாட்டுக் கொள்கைகள் ஒன்றுக்கொன்று ‘இசைவாக அமையாவிட்டால்’ அமிதமான சமூகப் பாதுகாப்புச் செலவுகளைச்

செய்யவேண்டிய உழைப்பை அதிகமாகப் பயன்படுத்தும் ஒரு தொழில் இலாபகரமாக நடக்க வழியில்லை; ஒரு நாட்டில் பண உதவி பெறும் தொழில் பிற நாடுகளில் பண உதவிபெருத, ஆனால், திறமையாக நடக்கும் அதே தொழிலை நசுக்கிவிடும்; ஒன்றுக்கொன்று இசைவாக இல்லாத பண, நிதிக் கொள்கைகளின் விளைவாக, தேவையற்ற செலுத்துநிலைச் சீர்கேடுகள் ஏற்படக்கூடும். மேலும், வாணிப வழி நன்கு திறந்துள்ளதால், ஒரு நாட்டில் சர்வாதீனமாக உள்ள ஒரு நிறுவனம், மற்றொன்றில் போட்டிச் சூழலில் வாழும் பல நிறுவனங்களை ஒழித்துவிடக்கூடும். எனவே, 'பொருளாதார நடவடிக்கைகளைப் பொதுச் சமுதாயம் முழுவதிலும் இசைவாக இருக்குமாறு செய்யவும், 'உறுப்பு நாடுகளிடையே உள்ள தொடர்பை மேலும் நெருக்கமாக்கவும்', தத்தம் பொருளாதாரக் கொள்கைகளில் 'படிப்படியாக ஒற்றுமையை ஏற்படுத்தவும்' அந் நாடுகள் முயன்றன.

இதைச் செய்ய, ரோம் உடன்படிக்கை பின்வரும் ஏற்பாடுகளுக்கு வழிசெய்தது (3ஆவது ஷரத்து) :

1. உறுப்பு நாடுகளுக்கிடையே மக்களும், பணி வசதிகளும், மூலதனமும் சுதந்திரமாகப் போய்வருவதன்மீதுள்ள தடைகளை நீக்கவேண்டும்;
2. ஒரு பொது விவசாயக் கொள்கையை ஆரம்பிக்கவேண்டும்;
3. ஒரு பொது போக்குவரவுக் கொள்கையை ஆரம்பிக்க வேண்டும்;
4. பொதுச் சந்தையில் போட்டி நிலைமை சீராக இருக்குமாறு செய்யவேண்டும்;
5. உறுப்பு நாடுகளின் பொருளாதாரக் கொள்கைகள் ஒன்றுக்கொன்று இசைந்தவாறு இருக்க ஏற்பாடு செய்து, அவற்றின் செலுத்துநிலைகளின் சீர்கேடுகளைத் திருத்தவேண்டும்;
6. பொதுச் சந்தை நன்கு நடைபெறத் தேவையான அளவுக்கு ஒவ்வொரு நாட்டின் தனிச் சட்டங்களுக்கிடையே வித்தியாசங்களை நீக்கவேண்டும்.

இந்த நிபந்தனைகள் பொதுவாகத்தான் இங்குத் தரப்பட்டுள்ளன. நடைமுறை முடிவுகள், மாநாட்டில் நாடுகள் அமர்ந்து ஒன்றோடொன்று பேரம் பேசிச் செய்யவேண்டியன.

**சிறப்பான உதவி நிதிகள்**

இதுவரை இறக்குமதி வரிகளால் பாதுகாக்கப்பட்டுவந்த தொழில்கள், இவ் வரிகள் படிப்படியாக நீக்கப்படும்போது பாதிக்கப்படும். ஒரு வேளை நீண்ட அவகாசம் இருந்தால், தங்கள் சிறப்புத் தேர்ச்சியை

மேலும் விருத்தி செய்தோ, செயல்திறனை அபிவிருத்தி செய்தோ, வேறு உற்பத்திகளைச் செய்யத் தொடங்கியோ நிலைமையை அவை சமாளிக்கக் கூடுமெனினும், உடனடியாக அவை பாதிக்கப்படும். இத் தொழில்களில் உள்ள ஊழியர்களுக்கு அவர்களது வேலை போனால் உதவ ஒரு ஐரோப்பியச் சிறப்பு நிதி (European Special Fund) நிறுவப்பட்டது. தொழிலாளிகளுக்கு வேறு வேலைகளில் பயிற்சி தரவும் தேவையானால் அவர்களைப் புதிய இடங்களுக்கு அனுப்பவும் ஆகும் செலவில் பாதியை அது தருகிறது.

ஒரு பெரிய திட்டத்தின் ஒரு பகுதியாகத் தொழிற்சாலை முதலாளிகளுக்கு உதவி தரப்படுகிறது. அப் பெரிய அமைப்பு, ஐரோப்பிய முதலீட்டு நிதி (European Investment Fund). இதற்கு முக்கியமான பணி ஒன்றும் இரண்டாம்தரமான பணிகள் இரண்டும் உள்ளன. முக்கியமான பணி, உறுப்பு நாடுகளில் வளர்ச்சி குன்றிய பிரதேசங்களில், சமூகத்தின் அடிப்படையான வசதிகளுக்கு நிதி தருவதுபோல, நிலைமையை அபிவிருத்தி செய்ய உதவி தருவது. இதைத் தவிர, ஐரோப்பாவுக்கு முக்கியமான, ஆனால், தனி நாடுகள் தாமே செய்ய முடியாத பணிகளுக்கு நிதி வசதி அளிப்பதும் வேறு உற்பத்திகளுக்கு மாறுவதற்குக் கஷ்டப்படுகிற நிறுவனங்களுக்குக் கடன்கள் தருவதும் இந் நிதியின் வேறு பணிகளாகும். இந் நிதியின் மூலதனம் $ 1 பிலியன். பன்னாட்டு மூலதன அங்காடிகளில் கடன்கள் வாங்கித் தன் மூலதன வசதியை அஃது அதிகரித்துக்கொள்ளும்.

ஃபிரான்ஸுக்கு விசேஷமாக முக்கியமாக இருக்கும் மற்றொரு நிதி, ஐரோப்பிய வளர்ச்சி நிதி (European Development Fund). 1962 வரை இந் நிதி சுமார் $ 600 மிலியனுக்கு முதலீடு செய்தது. இதில் ஃபிரான்ஸ் கொடுத்த தொகை, மேற்கு ஜெர்மனி கொடுத்த அளவே, அதாவது $ 200 மிலியன்தான். ஆனால், ஃபிரான்ஸின் வெளி நாட்டுப் பிரதேசங்கள் செலவில் பெரும் பகுதியைப் பெற்றன. அஃதாவது, $ 511 மிலியனுக்கும் அதிகமாக.

**அமைப்பு**

1958-ல், ரோம் உடன்படிக்கை அமலுக்கு வந்தவுடன், ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயத்தின் பணிகள் உடனடியாகப் பெருகின. நிர்வாக நிறுவனங்களை அமைப்பது, அவை செயலாற்றும் முறைகளைத் தீர்மானிப்பது, போட்டியைக் கட்டுப்படுத்துவதற்கும் விவசாயத்துக்கும் விதிகளை நிர்ணயிப்பது, இறக்குமதி வரிகள் முதன்முதலாகக் குறைப்பதற்கு ஏற்பாடு செய்வது—ஆகப் பல பணிகளை அது செய்யவேண்டியிருந்தது. பொருளாதார விஷயங்களில் ஐரோப்பியப் பொருளாதாரச்

சமுதாயம் ஒருவகை மேலான அரசாங்க அமைப்பு (super-government) ஆதலின், எந்த அரசாங்கத்தையும்போலச் செயலாற்றவும், சட்டமியற்றவும், தகராறுகளைத் தீர்க்கவும் குறிப்பிட்ட பிரதிநிதி அமைப்புகளை அது கொண்டிருக்கவேண்டும். அதற்குத் தேவையான எல்லா நிறுவனங்களுக்கும் ரோம் உடன்படிக்கையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

முக்கியமான நிர்வாக அமைப்பு ஐரோப்பியக் கவுன்சில் (European Council). இஃது ஆறு நாடுகளுக்கும் ஒருவகைப் பொருளாதார மந்திரிசபை. ஒவ்வொரு நாட்டுக்கும் இதில் ஒரு பிரதிநிதி உண்டு. பொருளாதாரச் சமுதாயத்தின் நிர்வாகத்தை இது செய்தது. நாள் தோறும் முடிவுகளைச் செய்வதும், நடைமுறை விதிகளை அமைப்பதும், புதிய சட்டங்களைத் தயார்செய்வதும், உடன்படிக்கையின் விதிகளைக் கடைப்பிடிக்குமாறு உறுப்பு நாடுகளைத் தூண்டுவதும் இதன் பணிகள். இச் சபைக்கு உதவ ஒன்பது பேர் கொண்ட ஐரோப்பியக் கமிஷன் (European Commission) ஒன்று உண்டு. உடன்படிக்கை செயலாற்றப்படுவதை மேற்பார்வை செய்வது, சிறப்பான பிரச்சினைகளை ஆராய்வது, கவுன்சிலுக்குத் தன் யோசனைகளைக் கூறுவது ஆகியவை இதன் பணிகள். சில ஆலோசனைக் குழுக்களும் உண்டு. செலுத்து நிலையைப் பார்த்துக்கொள்வது அதில் உலைவுகள் ஏற்பட்டால் அவற்றைக் கவனித்து அவற்றைக் குணப்படுத்த யோசனைகள் கூறுவதுமான பணக் குழு (Monetary Committee) அவற்றுள் ஒன்று. மற்றொன்று ஐரோப்பியப் பொருளாதார, சமூகக் குழு (European Economic and Social Committee). இக் குழுவில் தொழில்கள், உழைப்பாளிகள், விவசாயிகள், சில்லறை வியாபாரிகள், மேலான பணிகளைச் செய்வோர் ஆகியோரின் பிரதிநிதிகள் உள்ளனர். இது கவனிக்கக்கூடிய விஷயங்களுக்கு எல்லையே இல்லை.

சட்டமியற்றுவது சட்டசபை (Assembly). இதில் 106 உறுப்பினர்கள் உண்டு. கவுன்சிலின் யோசனைகள்மீது இறுதி முடிவை இஃது எடுக்கிறது. அவற்றைப் புதிய சட்டங்களாக நிறைவேற்றுகிறது. ஐரோப்பியக் கரி, எஃகு சமுதாயத்துக்கும் யூரேட்டம் (Euratom) அமைப்புக்கும்கூட இதுவே சட்டமியற்றும் சபை. இந்த ஆறு நாடுகளுக்குமாக அணுமின்சார வசதிகளை வளர்க்கத் திட்டமிடுவதற்கும் அவற்றை நிர்வகிப்பதற்குமாக நிறுவப்பட்ட அமைப்பு யூரேட்டம்.

இறுதியாகத் தகராறுகளைத் தீர்த்துவைக்க ஒரு நீதி ஸ்தலமும் உள்ளது. இதுவும் கரி, எஃகு சமுதாயத்துக்கும் யூரேட்டத்துக்கும் பொது.

## இணைப்பை நோக்கி முன்னேற்றம்[3]

தன் மாறுதல் காலக்கூற்றின் (transitional period) இரண்டாவது நான்காண்டுப் படியில், 1962-ல், ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயம் காலடி எடுத்து வைத்தது. அவ்வாண்டு முடியும்போது அது பல சாதனைகளைச் செய்துவிட்டிருந்தது. சில முக்கியப் பிரச்சினைகளை அதன் தலைவர்கள் இன்னும் தீர்க்கவில்லை. ஆயினும், பல அம்சங்களில் எதிர்பார்த்ததற்கு மிகையாகச் சாதனைகள் ஏற்பட்டன.

### சமுதாயத்துக்குள் வரிகளை நீக்குதல்

1963 ஜூலையில் தொழிற்சாலை உற்பத்திகளின் அகவாணிபத்தின் மீது விதிக்கப்பட்ட வரிகள் 60 சதவீதம் குறைக்கப்பட்டிருந்தது. இது எதிர்பார்த்த காலத்துக்கு முன்னாலேயே ஏற்பட்டுவிட்டது. மேலும், இதே வேகத்தில் அச் சமுதாயத்தின் பொருளாதார முன்னேற்றம் தொடர்ந்து ஏற்பட்டால், 1967 தொடக்கத்தில் இவ் வரிகளை அடியோடு நீக்கிவிடத் தான் யோசனை கூறப்போவதாக இதற்கு முன்னர் ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயத்தின் கமிஷன் கூறியிருந்தது. அவ்வாறு ஏற்பட்டுவிட்டால், எதிர்பார்த்ததற்கு மூன்று ஆண்டுகள் முன்னதாகவே சுங்க இணைப்பு ஏற்பட்டுவிடும்.

### புற இறக்குமதி வரிகளும் வாணிபக் கொள்கையும்

1962-ல், பொது இறக்குமதி வரிகளின் முதல் இணைப்பு முடிவடைந்தது. 1963 ஜூலையில் இரண்டாவது இணைப்பு திட்டமிடப்பட்டிருந்தது. இறுதியான இணைப்பு முழுச் சமுதாயத்துக்குமான இறக்குமதி வரி அமைப்பு, அகவரிகள் நீக்கம் செய்யப்படும் அதே சமயத்தில், அஃதாவது, 1967 தொடக்கத்தில் ஏற்படவிருக்கிறது.

1962 மத்தியில் ஓர் இறக்குமதி வரி, வாணிபப் பொது ஒப்பந்த (GATT) மகாநாட்டில் பரஸ்பர அடிப்படையில் பல பொதுச்சந்தை இறக்குமதி வரிகளை 20 சதவீதம்வரை குறைக்கச் சமுதாயம் முன் வந்தது. அமெரிக்காவோடும் பிரிட்டனோடும் ஆண்டுக்குச் சுமார் $ 5 பிலியன் மதிப்புக்கு நடந்த வாணிபத்தின்மீது இதனால் இறக்குமதி வரி குறைப்பு ஏற்பட்டது.

[3] பொதுச்சந்தை நிலவரங்கள் வேகமாக மாறும் இயல்புடையவை. இதைப் பற்றி நூல் உருவில் எழுதினால் அது வெளியாகும். வெளியிலேயே கொடுத்த விவரங்கள் தவறாகிவிட்டிருக்கும். எனவே, கடைசியாக ஏற்பட்ட அபிவிருத்திகளைப் பற்றி அறிய விரும்பும் மாணவனும் ஆசிரியரும் பின்வரும் அருமையான பத்திரிக்கையைப் படிக்கலாம்: *Bulletin from the European Community*, Published by the Information Service, European Economic Community, 235 Southern Building, Washington 5, D. C.

சமுதாயம் முழுவதற்கும் ஏற்றுமதிகளுக்கும் இறக்குமதிகளுக்கும் பொதுவான கொள்கையைப் படிப்படியாகக் கடைப்பிடிக்க ஒரு திட்டத்தையும் ஐரோப்பியக் கவுன்ஸில் வகுத்தது. அதன்படி, ஏற்றுமதி உதவிக்கும் ஏற்றுமதிகளை அதிகரிக்கும் முறைகளுக்கும் ஒரே மாதிரி ஏற்பாடு சமுதாயம் பூராவும் செய்யப்படவேண்டும்; உறுப்பு நாடுகளிடையேயும் மூன்ருவது நாடுகளோடும் இருமுக வாணிப ஒப்பந்தங்கள் தவிர்க்கப்படவேண்டும்; பொது ஒப்பந்த (GATT) உறுப்பினர்களுடனுன வாணிபத்தின்மீது அளவுக் கட்டுப்பாடுகளை நீக்க வேண்டும்.

**விவசாயம்**

போருக்குப்பின் உணவுப் பொருள் பற்றுக்குறை மோசமாயிற்று; இறக்குமதிகளுக்குச் செலுத்த அன்னியச் செலாவணி போதவில்லை; விவசாயிகள் தம் வருமானங்களைப் பெருக்க அரசியல் அமைப்புகள் மூலம் கோரினர். இதனுல் பொருளாதாரச் சமுதாயத்தின் தனித்தனி நாடுகள் சிக்கலான பல இறக்குமதிக் கட்டுப்பாடுகளை விதித்திருந்தன. பலவிதமான விலை ஆதரவுத் திட்டங்களைப் பல அளவுகளில் அவை கையாண்டன. இவற்றின் விளைவாக ஒவ்வொரு நாட்டிலும் அதன் சாதன வசதிக்குப் பொருத்தமில்லாத விவசாய உற்பத்தி அமைப்பும், பல பொருள்களின் உள்நாட்டுத் தேவையைப் பூர்த்தி செய்யும் அளவுக்கு உற்பத்திப் பெருக்கமும், பெரும் அளவுக்குச் சிக்கனமற்ற உற்பத்தியும் ஏற்பட்டன.

விவசாய உற்பத்திகளின் வாணிபத்தின் மீதிருந்த தடைகளை நீக்கவேண்டுமானுல், மிகவும் மாறுபட்ட வெவ்வேறு நாட்டுக் கொள்கைகளை ஒன்றுக்கொன்று இசையவைக்க வேண்டியிருந்தது. இதுதான் பொருளாதாரச் சமுதாயத்தின் மிகக் கடினமான பிரச்சினையாக இருந்தது. 1962 ஜனவரியில் நெடுநாள் பேச்சுவார்த்தைக்குப் பிறகு ரோம் உடன்படிக்கையில் குறிப்பிட்ட குறிக்கோள்களை அடையப் பின்வரும் ஏற்பாடுகளைச் செய்வது என்று சமுதாய நாடுகள் ஒப்புக் கொண்டன: (1) தொழில்நுட்ப முன்னேற்றத்தாலும், சாதனங்களைச் சிறந்த முறையில் பயன்படுத்தியும் உற்பத்தித் திறனைப் பெருக்க வேண்டும். (2) விவசாயத்தில் ஈடுபட்டுள்ள மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை நியாயமான அளவுக்கு உயர்த்தவேண்டும். (3) அங்காடிகளைத் திடநிலைப்படுத்த வேண்டும். (4) அளிப்புகள் இடைவிடாமல் வர வழி செய்யவேண்டும். (5) நுகர்வோருக்கு நியாயமான விலையில் பொருள்கள் கிடைக்க வழிசெய்யவேண்டும்.

பொருள்கள் இரு வகைகளாகப் பிரிக்கப்பட்டன. இவ்விரு வகைகளுக்கும் ஏற்பாடுகள் வித்தியாசப்பட்டன. முதல் வகையில்

சேர்ந்தவை தானியங்கள், பன்றி இறைச்சி, கோழி வாத்து முட்டைகள், பழங்கள், காய்கறிகள் ஆகியவை. இவைபற்றிய ஏற்பாடு 1962 ஜூலை முடிவில் அமுலுக்கு வந்தது. இரண்டாவது வகையில் சேர்ந்தவை அரிசி, மாட்டிறைச்சி, பால்பண்ணைப் பொருள்கள், சர்க்கரை. இவைபற்றிய விவரமான விவாதம் அடுத்த ஆண்டுக்குத் தள்ளிப் போடப்பட்டது.

முதலில் கூறிய பொருள்களுக்கு ஓர் ஏற்பாடு ஒப்புக்கொள்ளப் பட்டது. இதன் முக்கிய அம்சங்கள் பின்வருமாறு: (1) சமுதாயம் முழுவதற்குமாக ஒரே ஒரு குறிக்கோள் விலையை (target price) நிர்ணயிப்பது. (2) உலக அங்காடி விலைக்கும் இக் குறிக்கோள் விலைக் கும் உள்ள வித்தியாசத்துக்குச் சமமாக இறக்குமதி வரிகளை மாற்று வதன்மூலம் இந்த விலையை நிலையாக வைத்திருப்பது; தேவையானால் இதற்காக விலையைக் குறைக்கும் விளைவுடைய' சமுதாய உபரி உற்பத்திகளை வாங்குவது.

குறிக்கோள் விலைகளை உடனடியாக நிர்ணயிப்பதாக ஏற்பாடு செய்யவில்லை. அதற்கு அடுத்த ஆண்டில் எப்போதாவது பேச்சுவார்த் தைகள்மூலம் அதை நிர்ணயிப்பது என்று ஏற்பாடு. மேலும், அந்தச் சமயத்தில் (சமுதாயத்தால் விதிக்கப்படும்) மாறும் இறக்குமதி வரிகள், வெளியிலிருந்து வரும் பொருள்கள்மீதுமட்டுமன்றி சமுதாயத்துக்குள் நடக்கும் வாணிபத்தின் மீதும் விதிக்கப்படும். ஆனால், பின்னால் கூறிய வாணிபத்தின்மீது வரிகள்'சிறிது குறைவாக இருக்கும்.

இந்த ஏற்பாட்டை நிர்வகிக்க நிதி வசதி வேண்டும். அதற்காக ஓர் ஐரோப்பிய வழிகாட்டும் மற்றும் உத்தரவாதமளிக்கும் நிதி (European Guidance and Guarantee Fund) நிறுவப்பட்டது. மாறும் இறக்குமதி வரிகளாக வந்த தொகையில் ஒரு பகுதியையும் அரசாங்கங்கள் நேரிடையாகச் செலுத்தும் சில தொகைகளையும் அது மூலதனமாகக் கொள்கிறது. விவசாயத் தொழிலாளிகளுக்குப் பயிற்சி அளிக்கவும், ஆலோசனை வசதிகளை அளிக்கவும், கடன் வசதிகளைப் பெருக்கவும், சமுதாயத்தின் கமிஷன் தயாரிக்கும் பிற யோசனைகள் சிலவற்றைச் செயலாற்றவும் இந் நிதி உதவுகிறது.

ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயத்தின் கொள்கை விவசாய உற்பத்தியை எவ்வளவு தூரம் குறைக்கும் என்பது பின்வரும் முக்கிய மான விஷயத்தைப்,'பொறுத்தது: அதாவது, குறிக்கோள் விலைகள் எவ்வளவு அதிகமாக இருக்கின்றன என்பதையும் அதனோடு, இறக்கு மதி விலைகளையும் உள்நாட்டு விலைகளையும் சமமாக்க எவ்வளவு அதிக மாக இறக்குமதி வரிகளை விதிக்கவேண்டும் என்பதையும் அது பொறுத்திருக்கிறது.

குறிக்கோள் விலைகள் குறைவாக இருந்தால், நிறைய இறக்குமதிகள் வரும்; விலைகள் அதிகமாக இருந்தால் இறக்குமதிகள் குறையும். அதனால் ஐரோப்பிய உற்பத்தி மிகவும் அதிகரித்துப் பெரிய உபரிகள் ஏற்பட்டு, அவற்றை விற்றுத் தீர்க்க ஏற்றுமதி மானியங்களைக் கொடுக்க வேண்டிய காலமும் வரலாம்.

**இணைப்பின் பிற அம்சங்கள்**

1963 வசந்த காலம் வந்தபோது, ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயத்தின் பிற கொள்கைகள் பெரும்பாலும் ஒரு பகுதிதான் அமுலாகியிருந்தது. வேகமாக முன்னேற்றம் மேலும் ஏற்பட யோசனைகள் தயாராகிவந்தன.

உழைப்பாளிகள் பெருமளவில், முக்கியமாக இத்தாலியிலிருந்து வடக்கே புலம் பெயர்ந்தனர். ஒவ்வொரு நாட்டிலும் தொழிலாளருக்கு வேலை தேடித்தரும் நிறுவனங்களில் அந் நாட்டு உழைப்பாளிகளுக்கு ஓரளவு சலுகை கிடைத்தபோதிலும், நடைமுறையில் தொழிலாளர் இடப்பெயர்ச்சியின்மீது எத்தகைய தடையும் இல்லை.

ஐரோப்பிய முதலீட்டு பாங்கின் முதலீடுகள் காரணமாகப் போக்குவரத்து அமைப்பில் பல அபிவிருத்திகள் ஏற்பட்டன. போக்குவரத்தைப் பாதிக்கும் தொழில் நுட்ப, நிதி, சமூகக் கட்டுப்பாடுகளை எல்லா நாடுகளிலும் இசைவாக்கத் திடமான ஏற்பாடுகளை ஐரோப்பியக் கமிஷன் கொண்டுவந்தது.

ரோம் உடன்படிக்கையில் சர்வாதீன வழக்கங்களைப்பற்றிய ஏற்பாடுகள் பொதுவாகத்தான் குறிப்பிடப்பட்டுள்ளன. போட்டியில் குறுக்கிடும் சில செயல்கள் தடுக்கப்பட்டன. ஆனால், தொழில்நுட்ப வளர்ச்சி, உற்பத்தி அல்லது பொருள் விற்பனையில் அபிவிருத்தி ஏற்படுமானால் அச் செயல்கள் அனுமதிக்கப்பட்டன. ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட தொழில் நிறுவனங்கள் தம் 'தலைமை' (dominant) நிலைமை காரணமாக 'அநியாயமான' (unfair) இலாபம் பெறுமாறு செயலாற்றுவதை உடன்படிக்கை தடை செய்கிறது. ஆனால், இந்த முக்கியமான சொற்களுக்கு விளக்கம் தரப்படவில்லை. பல தொழில்கள் விஷயத்தில் ஐரோப்பியச் சமுதாயம் சர்வாதீனத்தை எப்படி நடத்தப்போகிறது என்பது இன்னமும் தீர்மானிக்கப்படாமல் இருக்கிறது. அதன் கொள்கை சர்வாதீனத்தைக் கடுமையாக எதிர்க்குமா அல்லது அக் கொள்கை இளகியிருக்குமா என்பது தெரியவில்லை.

1962 அக்டோபர் 24 அன்று, தன் குறிப்பொன்றில் ஐரோப்பியக் கமிஷனது, ஐரோப்பியச் சமுதாயம் முழுவதற்கும் பொருளாதாரத்

திட்டம் அமைக்கப்போவதாகக் கூறியது. அதாவது, ஒரு குறிப்பிட்ட அளவுக்கு நாட்டின் பொது ஆக்கத்தை உயர்த்தும் குறிக்கோளோடு, அரசாங்க முதலீடு, தனியார் முதலீடு, நுகர்வு ஆகியவை உயரத் திட்டமிட்டு அதற்காக எவ்வகையான பொருளாதார நடவடிக்கைகளையும் கொள்கைகளையும் மேற்கொள்ளவேண்டும் என்பதை நிச்சயிக்கப்போவதாகக் கூறியது. ஃபிரான்ஸில் சமீப ஆண்டுகளில் திறம்படச் செயலாகி வரும் ஒருவகை மிதமான பொருளாதாரத் திட்டத்தை ஐரோப்பியச் சமுதாயம் முழுவதற்குமாக மேற்கொள்வது என்பது இந்த ஏற்பாடு.

இக் குறிப்பில் மற்றொரு சிறப்பான யோசனையும் காணப்படுகிறது. அதன்படி உறுப்பு நாடுகளின் மத்திய பாங்குகளின் தலைவர்கள் (governors) கொண்ட சபை ஒன்றும் நிறுவப்படும். பணக் கொள்கைகளை விவாதிக்கவும், ஐரோப்பியச் சமுதாய நாடுகளின் நிதி மந்திரிகளைச் சந்திக்கவும், எல்லா நாடுகளுக்கும் இசைவான பண, நிதிக் கொள்கைகளை வகுக்கவும் இச் சபை உதவும். மாறுதல் காலத்தின் மூன்றாவது பகுதியில் சமுதாய நாடுகளிடையே பண இணைப்பு ஏற்படும்போது இந்த ஏற்பாடு செய்யப்படும்.

இறுதியாக, ஐரோப்பியச் சமுதாயத்துடன் சேர்ந்துள்ள (associated) 18 ஆஃப்ரிக்க நாடுகளுடன் ஓர் ஒப்பந்தம் கையெழுத்தாக இருக்கிறது. அதன்படி இந் நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் காப்பி, தேயிலை, கோக்கோ, வாழைப்பழம், அன்னாசி, வாசனைத் திரவியங்கள், வெப்ப மண்டல மரம் ஆகியவற்றின்மீது விதிக்கப்பட்டிருந்த எல்லா இறக்குமதி வரிகளும் நீக்கப்படும். முதன் மூன்று பொருள்கள்மீது விதிக்கப்பட்ட பொதுப் புற இறக்குமதி வரி (common external tariff) 40 சதவீதம் குறைக்கப்படும். 1963–67 ஆகிய ஐந்தாண்டுகளில் சுமார் $800 மிலியன் அளவுக்கு ஆஃப்ரிக்க நாடுகளுக்குப் பண உதவி தரப்படும். ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாய நாடுகள், பிரிட்டிஷ் காமன்வெல்த்தைச் சேர்ந்த ஆஃப்ரிக்க நாடுகளுக்கும் பொதுச் சந்தையில் சேர வாய்ப்பளித்தன. மேலே சொன்ன 18 நாடுகளுக்கும் கொடுக்கப்படும் அதே சலுகைகளைப் பெறுவது, அதைவிடச் சிறிது தாராளமான நிபந்தனைகள்படி சேருவது, அல்லது அந்த ஆறு நாடுகளுடன் வாணிப ஒப்பந்தங்களைச் செய்துகொள்வது ஆகிய மூன்று வழிகளில் ஒன்றை அவை கடைப்பிடிக்கலாம்.

**சுருக்கம்**

பன்னிரண்டு வருட மாறுதல் காலத்தின் ஐந்தாவது ஆண்டிலேயே, சுங்க இணைப்பின் மையமான அம்சங்களில் பாதியை அந்த

ஆறு நாடுகளும் நிறைவேற்றிவிட்டன. விவசாயக் கொள்கைப் பிரச்சினையின் அடிப்படை அம்சங்களையும் செயலாற்றவேண்டிய வழிகளையும்பற்றி உடன்பாடும் ஏற்பட்டுவிட்டது. முக்கியமான பிற விஷயங்களிலும் நிலையான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது.

அமெரிக்கப் பொருளியல் நிபுணர் ஒருவர்[4] 1958-ல் கூறிய ஒரு ஜோசியம் பலித்ததுதான் இங்கு மிக முக்கியமானது: போட்டி அதிகமாவதால் நாடுகளுக்கிடையே பொருளாதார, சமூக, எண்ணத் தொடர்புகள் நெருக்கமாகும் என்றும் அதனால் உற்பத்தி சம்பந்தமான கொள்கைகள், அமைப்புகள், மனப்பாங்குகள் ஆகியவை மாறும் என்பதும்தான் அந்த ஜோசியம்.

> 'இளைஞர்களும் பல்கலைக்கழக ஆசிரியர்களும், வழக்கறிஞர்களும் எந்திர அமைப்பாளர்களும், அரசாங்க அலுவலர்களும் தொழிற் சங்கத்தலைவர்களும் கலந்து பேசும் பலவிதமான சமுதாயக் கூட்டங்களைப் பொதுச் சந்தை தோற்றுவித்திருக்கிறது. இந்தப் புதிய கூட்டங்களினின்று புதிய கருத்துகள் தோன்றி ஐரோப்பா எங்கும் பரவுகின்றன. பழைய பலன் குறைந்த அமைப்பு முறைகளை மாற்றிப் புது முறைகளைக் கையாள மக்கள் விரும்புகின்றனர். இப் பொருளாதாரச் சமுதாயம் ஏற்பட்டபின், ஒவ்வொரு நாடும் தன் அமைப்புகளையும் முன்னேற்றத்தையும் பிற உறுப்பு நாடுகளில் இருப்பதோடு ஒப்பிட்டுப் பார்க்கவேண்டிய கட்டாயம் உள்ளது. எல்லாரும் பழைய பழக்க வழக்கங்களை மாற்ற விரும்புகின்றனர். புதிய வேலைகள், கஷ்டமான வேலைகள் செய்யப் புது மக்களுக்கு அதுவும் இளைஞர்களுக்கு வாய்ப்புகள் உண்டாகின்றன. சில சமயங்களில் அஃது ஒரு விளங்காத புதிர்போலத் தோன்றும். ஆனால், பழைமையினின்று விடுதலை பெறும் இந்த அனுபவத்தை அங்கேயே இருந்து, ஐரோப்பிய நண்பர்களுடனும் சக ஊழியர்களுடனும் சேர்ந்து அனுபவித்தால்தான் அதன் முழு அர்த்தமும் புரியும். ஃபிரான்ஸிலும், ஜெர்மனியிலும், ஹாலந்திலும், இத்தாலியிலும் இன்றைய இளைஞர்கள், புதுக் கருத்துகள் உருவாகும் தம் பெரிய ஐரோப்பியத் தொழிற்கூடத்தின் பொருளை முழுவதுமாக உணருகின்றனர். பெரிய சாதனைகளைச் செய்துவிட்ட பெருமை அவர்களிடம் பிரதிபலிக்கிறது. தம் எதிர்காலம் தம் கையில் உள்ளது என்பதை அவர்கள் உணர்ந்துள்ளனர்.

[4] Tibor Scitovsky, *Economic Theory and Western European Integration*. Published 1958 by Stanford University Press, Stanford, Calif.

உலகத்துக்கே தாம் வழிகாட்டியாக இருந்து செய்யவேண்டிய பணியையும் அவர்கள் உணர்ந்துள்ளனர். இப் புதிய அமைப்பை அவர்கள் நடத்துகின்றனர். நாட்டின் பழைய அமைப்புகளை மாற்றித் தம் புதுப் பணிக்குத் தேவையான புதிய தொழில் நிறுவனங்களை அவர்கள் அமைக்கின்றனர்.'[5]

## பிரிட்டன் பொதுச்சந்தையில் சேரும் பிரச்சினை

ரோம் உடன்படிக்கை கையெழுத்தாவதற்கு முன்பு, அதாவது ஐரோப்பியக் கரி, எஃகு சமுதாயம் அமைக்கப்பட்டு, பொதுச் சந்தையைப்பற்றிப் பேச்சு வார்த்தைகள் நடந்துகொண்டிருந்த போது, அந்த ஆறு நாடுகளின் முயற்சிகளில் தானும் கலந்துகொள்ள பிரிட்டன் முன்வரவேயில்லை. கரி, எஃகு உற்பத்தியை நாட்டுக்கு மேலான ஓர் அமைப்புக் கட்டுப்படுத்துவதைக் கருதிப் பார்க்கக்கூட பிரிட்டன் தயாராக இல்லை. எனவே, ஐரோப்பிய நிலக்கரி, எஃகு சமுதாயப் பேச்சு வார்த்தைகளில் கலந்துகொள்ள வந்த அழைப்பை பிரிட்டிஷ் அரசாங்கம் மறுத்துவிட்டது. அதேபோல, ரோம் உடன் படிக்கையைத் தயாரிப்பதில் பங்கு கொள்ளவும் அது மறுத்துவிட்டது. அதற்கு மாருக ஒரு பெரிய தடையிலா வாணிபச் சங்கத்தை (Free Trade Association) அமைக்க ஓர் எதிர்த் திட்டத்திற்கான யோசனையை பிரிட்டன் வெளியிட்டது. இத் திட்டத்தின்படி உறுப்பு நாடுகள் தொழிற்சாலை உற்பத்திகள்மீது சுங்க வரிகளை நீக்கிவிட வேண்டும். ஆனால், எல்லா நாடுகளுக்கும் பொதுவான இறக்குமதி வரி அமைப்போ, நாட்டுக் கொள்கைகளை இசைவாக அமைக்க வேண்டிய அவசியமோ கிடையாது. பிரிட்டனுடைய விவசாயக் கொள் கையின்படி, காமன்வெல்த்திலிருந்து உணவுப் பொருள்கள் இறக்குமதி வரியின்றி வரவழைக்கப்பட்டதால், பிரிட்டிஷ் மக்கள் அவற்றை மலிவாகப் பெற்றனர். அதேபோல ஐரோப்பிய உற்பத்தியாளர்களின் பொருள்களையும் வரியின்றி இறக்குமதி செய்தால் காமன்வெல்த் நாடுகள் பாதிக்கப்படுமாதலின் விவசாயப் பொருள்களைப் பொதுச் சந்தை ஏற்பாட்டில் சேர்க்க பிரிட்டனுக்கு விருப்பம் இல்லை. பிரிட்டனில் விவசாயத்துக்கு அந் நாட்டு அரசாங்கம் நேரிடையாகப் பண உதவி அளித்து ஆதரித்தது.

1959-ல் பொதுச் சந்தை நிறுவப்பட்டுவிட்டது; பிரிட்டனுக்கு அதில் சேர விருப்பமில்லை. ஆனால், அதேசமயம் அதனால் தன் வாணிபம் கெடுமோ என்ற பயம் வேறு. எனவே, வேறு ஏழு நாடு களுடன் கூட்டாகச் சேர்ந்து பிரிட்டன் பொதுச் சந்தைக்குப் போட்டி

[5] U. W. Kitzinger, *The Challenge of the Common Market*, பக்கம் 47. Published 1961 by Basil Blackwell, Oxford.

யாக ஐரோப்பியத் தடையிலா வாணிபச் சங்கத்தை (European Free Trade Association) அமைத்தது.[6] அதன் பிராந்தியத்துக்குள் நடக்கும் தொழிற்சாலை உற்பத்திப் பொருள்களின் வாணிபத்தின்மீது விதிக்கப்படும் வரிகள் முதலில் 20 சதவீதம் வெட்டப்பட்டன. அதன் பின்னர், ஐரோப்பியப்பொருளாதாரச் சமுதாயம் சென்ற வேகத்திலேயே ஏறக்குறைய இச் சங்க நாடுகளும் வரிகளைக் குறைத்துக்கொண்டன. ஆனால், ஒவ்வொரு நாடும் பிற வெளிநாடுகளுடன் நடந்த வாணிபத் தின்மீது விதித்த வரிகளை இந்த ஒப்பந்தம் பாதிக்கவில்லை. 1963-ன் போது, அந்த ஆறு நாடுகள் செய்தது போலவே அஃதே வேகத்தில் அக இறக்குமதி வரிகளை இந்த ஐரோப்பியத் தடையிலா வாணிபச் சங்க நாடுகளும் குறைத்திருந்தன. 1966 முடிவில் இந் நாடுகளிடையே இறக்குமதி வரிகளை அடியோடு நீக்கிவிடவேண்டுமென்பது ஏற்பாடு.

தடையிலா வாணிபச் சங்கம் ஏற்பட்ட இரண்டு ஆண்டுகளுக்கெல் லாம், பொதுச் சந்தையில் சேரவேண்டும் என்ற ஆவல் பிரிட்டனில் மிகவும் அதிகமாயிற்று. 1961 ஜூலையில் பிரதம மந்திரி மாக்மில்லன் (MacMillan) தன் சர்க்கார் பொதுச் சந்தையில் சேர அதிகாரபூர்வ மாக விண்ணப்பித்திருப்பதாக அறிவித்தார். திடீரென எண்ணம் மாறுவானேன்? வளர்ந்துகொண்டே இருக்கும் பெரிய பொதுச் சந்தை தன்னை அடியோடு விலக்கிவிடுமோ என்ற பயம் இதற்கு முக்கிய காரணம். பிரிட்டனில் பல புதுத் தொழில்கள் மிகுந்த தொழில் நுட்ப வளர்ச்சியை அடிப்படையாகக்கொண்டு வளர்ந்துவந்தன. ஐரோப்பியச் சமுதாய நாடுகளில் பெருமளவில் அவற்றை விற்றால் அதன் பலனாகப் பெருமளவு உற்பத்திச் சிக்கனங்கள் ஏற்படும் என்று பலர் பொதுச் சந்தையில் சேருவதை ஆதரித்தார்கள். பிரிட்டிஷ் பொருளாதாரத்தில் பல பிரிவுகளில் தேக்கமும் துணிவற்ற தன்மையும் நிறைந்திருந்தது. போட்டி வாடை வீசினால் அது குளிர் நடுக்கினாலும் இப் பிரிவுகளுக்குப் புத்துயிர் அளிக்கும். எனவே, பொதுச் சந்தையில் சேருவது நல்லது என்று கருதப்பட்டது. பிரிட்டனைவிடத் திறன் குறைந்திருந்த ஃபிரெஞ்சுத் தொழில்கள்கூட இவ்வாறுதான் தம்மைவிட முன்னேற்றமடைந்த நாடுகளின் தொழில் களோடு போட்டியிட முதலில் பயந்தன. ஆனால், இறுதியில் அவை அப் போட்டியால் புது வாழ்வைப் பெற்று முன்னேறின.

பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கும் பொதுச் சந்தையின் பிரதிநிதி களுக்குமிடையே பேச்சுவார்த்தைகள் அடுத்த ஒன்றரை ஆண்டுகள் நடைபெற்றன. அவற்றில் மூன்று பிரச்சினைகளை எப்படியாவது

6 இதில் அங்கம் வகிக்கும் நாடுகள், டென்மார்க், நார்வே, ஸ்வீடன் ஆகிய மூன்று ஸ்காண்டிநேவிய நாடுகளும், ஆஸ்திரியா, ஸ்விட்சர்லந்து, போர்ச்சுகல், பிரிட்டன் ஆகியவையும்.

தீர்க்கவேண்டி யிருந்தது. முதலாவது, பிரிட்டனுடைய விவசாயக் கொள்கையை அந்த ஆறு நாடுகளின் கொள்கையோடு ஏதாவதொரு வகையில் இசைவு கொள்ளுமாறு மாறுதல்களைத் திட்டமிட்டுச் செய்ய வேண்டும். பிரிட்டனில் விவசாயப் பொருள்களை நுகர்வோர் பிற நாடு களைவிடத் தடையிலாத அங்காடி விலைகளில் மலிவாக வாங்கினர்கள். கணக்கிடப்பட்ட ஆதரவு விலைக்கும், அங்காடி விலைக்கும் உள்ள வித்தி யாசத்தை அரசாங்கம் விவசாயிக்குக் கொடுத்துதவியது. நாம் ஏற் கெனவே பார்த்ததுபோல, பொதுச் சந்தை நாடுகளோ, அரசாங்க விலை ஆதரவையும் இறக்குமதி வரிகளையும் பயன்படுத்தி விலைகளை உலக விலை அளவுகளைவிட அதிகமாக வைத்திருக்க முடிவு செய்திருந்தன.

இரண்டாவது பிரச்சினை, எப்படிக் காமன்வெல்த் நாடுகளைப் பாதிக்காமல் பிரிட்டன் பொதுச் சந்தையில் சேருவது என்பது. முக்கிய மாக இது கோதுமை ஏற்றுமதி செய்யும் ஆஸ்திரேலியா, கானடா நாடு களையும், பால்பண்ணைப் பொருள்களை ஏற்றுமதி செய்யும் நியூஜிலாந் தையும் முக்கியமாகப் பாதிக்கும். அவை பிரிட்டிஷ் அங்காடியில் தம் பொருள்களை விற்கப் பேரரசு சலுகைமுறை அவற்றுக்கு உதவியது.

இறுதியாக, ஐரோப்பியத் தடையிலா வாணிபச் சங்கத்தில் தன் கூட்டாளிகளான நாடுகளுக்கு ஆற்றவேண்டிய கடமை வேறு பிரிட்ட னுக்கு இருந்தது. அவற்றுள் இரண்டு நாடுகள், டென்மார்க்கும் நார்வேயும் பொதுச் சந்தையில் சேரத் தாமும் விண்ணப்பித்திருந்தன. இந் நாடுகளுடைய அக்கறைகளும் பிற சங்க நாடுகளுடைய அக்கறை களும் சிறிதும் கெடாதவாறு பார்த்துக்கொள்ளவேண்டிய பொறுப்பு பிரிட்டனுக்கு இருந்தது.

பிரஸ்ஸல்ஸில் (Brussels) பல மாதங்கள் பேச்சு வார்த்தைகளில் கடுமையான பேரம் நடந்தது. 1962 இறுதியில் இந்தப் பேச்சுகளுக் குப் பின்னரும் பல பிரச்சினைகள் தீரவேயில்லை. பிரிட்டன் பொதுச் சந்தையில் சேர்ந்துவிடும் என்று மிதமான நம்பிக்கை அப்போது இருந்தது. பின்னர், ஜனவரி மத்தியில் ஒரு பத்திரிகையாளர் கூட்டத்தில், ஃபிரெஞ்சு ஜனாதிபதி டிகாலே ஃபிரான்ஸுக்கு உடன் பாடான நிபந்தனைகளின்படி பிரிட்டன் நடக்கத் தயாரில்லை என்றும் இப்போது உள்ளதைவிட ஐரோப்பியச் சமுதாயத்தை விஸ்தரித்து அதன் ஒற்றுமையைக் குறைக்க ஃபிரான்ஸ் ஒப்புக்கொள்ளாது என்றும் கூறினர். 'எந்தக் கட்டுப்பாடும் நிபந்தனையும் இன்றி ஐரோப்பியச் சமுதாயத்தில் ஒன்றுபடும் அளவுக்கு பிரிட்டன் என்ருவது ஒரு நாள் தன்னை மாற்றிக்கொள்ளும்' என்றும், அப்போது 'ஃபிரான்ஸ் பிரிட்ட னின் வழியை மறிக்காது' என்றும் அவர் கூறி மேலும் பேச்சு வார்த்தைகள் நடப்பதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தார்.

## இலத்தீன் அமெரிக்காவின் பொருளாதார இணைப்பு

### இலத்தீன் அமெரிக்கத் தடையிலா வாணிபப் பிராந்தியம் (The Latin American Free Trade Area)

இலத்தீன் அமெரிக்க நாடுகளின் சர்க்கார்களின் அமைப்பிலும் அரசியல் மனப்போக்கிலும் பெரும் வித்தியாசங்கள் உள்ளன. எனவே, இந் நாடுகள் பொருளாதார இணைப்பைப் பெற ஏற்ற அரசியல் அடிப் படை அவற்றிடையே இல்லை. ஆனாலும், தம் வாணிபத்தைப் பாது காத்து வளர்க்கவும் தம் பொருளாதார வளர்ச்சியைப் பெருக்கவும் அவற்றுக்குப் பொது அக்கறை இருந்தது. அந் நாடுகளின் வாணிபம் வளர்ந்துவந்த போதிலும் அவ் வளர்ச்சியின் வேகம் அதிகமாக இல்லை. 1950–60-ல் சுதந்தர உலகின் ஏற்றுமதிகளில் இலத்தீன் அமெரிக்காவின் பங்கு உண்மையில் 11 சதவீதத்திலிருந்து 8 சதவீதமாகக் குறைந்தது. மேலும், இலத்தீன் அமெரிக்க ஏற்றுமதிகளில் நான்கில் ஒருபங்கு ஐரோப்பியப் பொதுச் சந்தைக்குப் போகிறது. இதில் பாதி, தம் முடன் சேர்ந்த ஆஃப்ரிக்க நாடுகளுக்கு ஐரோப்பியப் பொதுச் சந்தை காட்டும் சலுகை காரணமாக விற்க முடியாமல் போகக்கூடிய பொருள்கள்.[7] இதுமட்டுமன்றி இலத்தீன் அமெரிக்க நாடுகளிடையே நடக்கும் வாணிபமும் மிகக் குறைவு—மொத்த வாணிபத்தில் அது சுமார் 10 சதவீதம்தான். இதுவும் கவலைப்படக்கூடிய விஷயமாக இருந்தது.

இலத்தீன் அமெரிக்காவின் வாணிபத்தின் நிலைமையைப் பலப்படுத் தக்கூடிய ஏற்பாடுகளை அமைக்க முடியுமா என்பதுபற்றிய பேச்சுகள் 1954-ல் தொடங்கின. முக்கியமாக, இலத்தீன் அமெரிக்க நாடுக ளிடையே வாணிபத்தைப் பெருக்கவும் அப் பிராந்தியத்தின் பொருளா தார வளர்ச்சிக்கு உதவவும் ஏற்பாடுகள் செய்வதைப்பற்றிப் பேச்சுகள் நடந்தன. பல ஆண்டுகளாகக் கருத்துகள் பரிமாறப்பட்டன. இதில் முக்கியப் பங்கு இலத்தீன் அமெரிக்காவுக்கான பொருளாதாரக் கமிஷனுடையது (Economic Commission for Latin America). இறுதியாக, அர்ஜென்டினா, பிரேஜில், சிலி, பராகுவே, பெரு, உருகுவே ஆகிய தென் அமெரிக்க நாடுகளும், மெக்சிகோவும் ஆக ஏழு நாடுகளிடையே போதுமான அளவு உடன்பாடு இருந்தமையால் தம் கருத்துகளைப் பதித்து அவை 1960 பிப்ரவரி 18 அன்று மான்டிவிடியோ உடன்படிக்கையில் (Treaty of Montevideo) கையெழுத்திட்டன.

7 இத் தொகுதியில் முக்கியப் பொருள்கள், காப்பி, கோக்கோ, வாழை, தோல், தாவர எண்ணெய்கள், சர்க்கரை, கோதுமை, இறைச்சி, கடின மரங்கள், காரீயம், துத்தநாகம் ஆவன. விவரங்கள் பின்வரும் கட்டுரையிலிருந்து: Walter J. Sedwitz, 'A Common Market for Latin America?', *Current History* (July, 1962).

1961 ஜூலை 1ந்தேதி அந்த உடன்படிக்கை அமலுக்கு வந்தது. பின்னர் கொலம்பியா, ஈக்வடார் ஆகிய நாடுகளும் முதலில் இருந்த ஏழோடு சேர்ந்துகொண்டன. மேலும் பல இதில் சேரலாம். எதிர் காலத்தில் இவ்வுடன்படிக்கையில் மேலும் பல நாடுகள் கையெழுத் திடக்கூடும் என்ற நம்பிக்கை உள்ளது.

இதன் குறிக்கோள்கள், இலத்தீன் அமெரிக்காவின் அக வாணிபத் தின்மீதிருந்து தடைகளை நீக்குவது, அந் நாடுகள் ஒன்றுக்கொன்று நிறைவுபடுத்துமாறு அவற்றின் தொழிற்சாலை உற்பத்திகளை அதிகரிப் பது, விவசாய வளர்ச்சியையும் வாணிபத்தையும் இசைவாகச் செய் வது ஆகியவை. பன்னிரு ஆண்டுக்காலத்தில் பரஸ்பர வாணிபத்தின் மீதிருந்து எல்லா வரிகளையும் கட்டுப்பாடுகளையும் படிப்படியாக நீக்கு வதன்மூலம் வாணிபத்தைத் தாராளமாக்க எண்ணமிடப்பட்டிருக் கிறது. பொதுவான புற இறக்குமதி வரிகளுக்கு ஏற்பாடு ஒன்றும் இல்லை. எனினும், மூன்ருவது நாடுகளிலிருந்து வரும் மூலதனம், பொருள்கள், பணிகள் ஆகியவற்றை இலத்தீன் அமெரிக்க நாடுகள் ஒவ் வொன்றும் ஒரே மாதிரி நடத்தவேண்டும் என்று அந்த உடன்படிக்கை வற்புறுத்துகிறது. இதன்மூலம் பின் ஒரு காலத்தில் இருபது இலத்தீன் அமெரிக்க நாடுகள் அனைத்தும் சேர்ந்த ஒரு பொதுச் சந்தையை ஏற்படுத்துவது சாத்தியமாகலாம்.

இலத்தீன் அமெரிக்க நாடுகள் சிறப்புத் தேர்ச்சி முறையில் உற் பத்தி செய்தால் தொழிற்சாலைகள் எங்குச் சிக்கனமாக நடக்குமோ அங்கு அமையும்; அதனுல் அகச் சிக்கல்களும் புறச் சிக்கல்களும் விளைந்து உற்பத்தி செலவு குறையும். எனவே, இதற்காகக் குறிப்பிட்ட ஒருசில தொழில்கள் ஒருசில நாடுகளிலும் வேறு சில தொழில்கள் வேறு சில நாடுகளிலும்தான் அமையவேண்டும் என்று ஏற்பாடு செய்ய 'நிறைவு படுத்தும் ஒப்பந்தங்கள்' தயாரிக்க இந்த உடன்படிக்கை அதிகார மளிக்கிறது.

விவசாய வளர்ச்சியையும் வாணிபக் கொள்கையையும் இசை வாக்கும் குறிக்கோள் குறிப்பாகக் கூறப்படாமல் மிகவும் பொதுப் படையாகக் கூறப்படுகிறது. ஆனுல், அதற்கு எதிரான குறிக்கோளான விவசாயத்துக்குப் பாதுகாப்பளிப்பது குறிப்பாக ஒப்பந்தத்தில் சொல்லப்படுகிறது. இப் பாதுகாப்புக்காக உறுப்பு நாடுகள், சாதாரண மாக நுகரப்படும் அளவு, உள்நாட்டு உற்பத்தியைக்காட்டிலும் எவ்வளவு அதிகமோ அந்த அளவுக்கு விவசாயப் பொருள்களின் இறக்குமதிக்கு வரம்பு குறிக்கலாம்.

பின்னர் இலத்தீன் அமெரிக்க நாடுகள் முழுவதற்கும் ஓர் உண்மை யான பொதுச் சந்தையை மான்டிவிடியோ உடன்படிக்கையின் அடிப்

படையில் அமைக்கமுடியும். ஆனால், அதைச் செய்யுமுன் பல தடைகளைத் தாண்டவேண்டும். தொழிலிலும், விவசாயத்திலும் அக்கறை கொண்ட சுயநலமிகள் இதற்கு ஒரு தடை. பல நாடுகள் தொடர்ந்து இருமுக வாணிப, செலுத்தல் ஒப்பந்தங்களை வைத்துக்கொண்டிருப்பது மற்றொன்று. பேச்சுவார்த்தை நடத்தும் குழுக்களில் நாடுகள் ஒன்றின் மீது ஒன்று கொண்டுள்ள சந்தேகமும் நம்பிக்கையின்மையும் மற்றொரு தடை. இப்போதுதான் வித்திட்டிருக்கும் தடையிலா வாணிபப் பிராந்தியத்தின் எதிர்காலம் எப்படி இருக்கும் என்பதை இதற்குள் சொல்லமுடியாது.

**மத்திய அமெரிக்கப் பொருளாதார இணைப்பு**

மத்திய அமெரிக்காவில் இதைவிடத் துரிதமாக இணைப்பு ஏற்பட்டு வந்திருக்கிறது. (காஸ்டா ரிகா, எல் சால்வடார், குவாடிமாலா, ஹாண்டுரஸ், நிகராகுவா ஆகிய) ஐந்து நாடுகள் 1958-லும் 1959-லும் மூன்று தனித்தனி உடன்படிக்கைகளில் கையெழுத்திட்டன. அதற்கு அடுத்த ஆண்டில் இவற்றை எல்லாம் சேர்த்து ஒரு பெரிய ஒப்பந்தம் தயாராயிற்று. அதுதான் மத்திய அமெரிக்காவின் பொருளாதார இணைப்புக்கான பொது ஒப்பந்தம் (The General Treaty of Central American Economic Integration)[8] இதன் குறிக்கோள், ஒரு பொது புற இறக்குமதி வரி அமைப்போடு ஒரு சுங்க இணைப்பை ஐந்து ஆண்டுகளுக்குள் ஏற்படுத்துவது. உடனடியாக அந்த ஐந்து நாடுகளிலும் தோன்றும் எல்லாப் பொருள்களுக்கும் அக இறக்குமதித் தடைகள் நீக்கப்பட்டன. ஆனால், படிப்படியாகத் தடைகளை நீக்கலாம் என்று பல பொருள்களுக்கு இந்த விதியினின்று விதிவிலக்கு அளிக்கப்பட்டது.

குறிப்பிட்ட நாடுகள் குறிப்பிட்ட தொழில்களை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று ஒதுக்கிடுவதன்மூலமும் பொருளாதார இணைப்புக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. 1961 மே மாதம் ஒரு மத்திய அமெரிக்கப் பொருளாதார இணைப்பு பாங்கு (Central American Economic Integration Bank) அமைக்கப்பட்டது. அதன் மூலதனம் $ 16 மிலியன். மொத்த சமுதாயத்துக்கும் முக்கியமான விவசாய, தொழில், சமூகப் பொது மூலதனத் திட்டங்களுக்கு நிதி வசதியளிப்பதன்மூலம் நெருங்கிய பொருளாதார இணைப்பு ஏற்பட அஃது உதவத் தயாராக இருக்கிறது.

பிற நாடுகளுடன் ஒப்பிட்டால் மத்திய அமெரிக்கக் குடியரசுகள் மிகவும் குறைந்த வளர்ச்சி பெற்றுள்ளன. அவர்களுடைய மொத்த

[8] 1962 கோடை காலத்துக்குள் எல்லா நாடுகளும் உடன்படிக்கையை ஏற்றுக் கொண்டுவிட்டன.

மக்கள்தொகை 10 மிலியன்தான். எனவே, அவை ஒரே தொகுதியாக இணைந்தாலும்கூடத் தொழிற்சாலை உற்பத்தி நன்கு இலாபக்ரமாக நடக்கக் கூடிய அளவுக்கு அங்கு விற்பனை நடக்காது. இப்போது அவற்றின் ஏற்றுமதிகளில் சுமார் 80 சதவீதம் காப்பியும் வாழையும். இந்தப் பிராந்தியத்தில் தொழிலபிவிருத்தி அதிகம் இல்லை. தொழிற்சாலை உற்பத்தியும் சிறிய அளவில்தான் நடக்கிறது. கல்வியறிவின்மை, பழைய விவசாய முறைகள், மத்தியதர வகுப்பினர் குறைவாகவும் துணிவற்றும் இருப்பது, போக்குவரத்துச் சாதனங்கள் சரியாக வளராதது, எங்கும் மின்விசைப் பற்றுக்குறை ஆகிய காரணங்களால் பொருளாதார வளர்ச்சி தடைப்படுகிறது. இருந்தபோதும் சில இலகுரகத் தொழில்கள் (light industries) திறம்பட நடக்கின்றன. மேலும் போட்டி ஏற்பட்டால் பிற தொழில்களும் அபிவிருத்தி அடையும். நிதி உதவி கிடைத்தால் மேலும் பல தொழில்கள் தோன்றும். ஐந்து சிறு நாடுகள் சேர்ந்து ஒரு பெரும் அங்காடியானால் குறைந்தபட்சம் வளர்ச்சிக்கு மேலும் தூண்டுதல் நிச்சயம் உண்டாகும். பொருளாதாரத்தின் அடிப்படை வளர்ச்சி மேலும் ஏற்படும்போது இத் தூண்டுதல் மேலும் உண்டாகும்.

## பார்வைக்குரிய சில நூல்கள்

Benoit, Emile, *Europe at Sixes and Sevens*. New York: Columbia University Press, 1961. மேற்கு ஐரோப்பா இரு போட்டியிடும் வாணிபப் பிராந்தியங்களாகப் பிரிந்ததனால் விளைந்த பிரச்சினைகளை அருமையாகவும் விவரமாகவும் விளக்குகிறது.

Kitzinger, U. W., *The Challenge of the Common Market*. Oxford: Basil Blackwell, 1961. ஐரோப்பிய இணைப்பின் பொருளாதார, அரசியல் முக்கியத்துவத்தை அருமையாக அத்தியாயங்கள் 1—4 விவரிக்கின்றன; கடைசி நான்கு அத்தியாயங்கள் பிரிட்டன் இதில் சேருவதுபற்றிக் கூறுகின்றன.

Lamfalussy, A., *The United Kingdom and the Six*. Homewood, Ill.: Richard D. Irwin, Inc., 1963. பிரிட்டனிலும் பொதுச் சந்தை நாடுகளிலும் வளர்ச்சியின் வேகம் மாறுபட்டிருப்பதன் காரணங்களை நன்கு ஆய்ந்து விளக்குகிறது.

Mikesell, Raymond F., 'The Movement Toward Regional Trading Groups in Latin America,' in *Latin American Issues*, Albert O. Hirschman, ed. New York: The Twentieth Century Fund, 1961. மான்டிவிடியோ உடன்படிக்கையின் சிறப்புகளைத் திறனாய்வதோடு, இலத்தீன் அமெரிக்கப் பொருளாதார இணைப்பின் எதிர்காலம் பற்றியும் கூறுகிறது.

Sannwald, Rolf F. and Jacques Stohler, *Economic Integration*. Princeton, N. J.: Princeton University Press, 1959. பொருளாதார இணைப்பின் பிரச்சினைகளைப்பற்றி, முக்கிய மாக மேற்கு ஐரோப்பாவைப் பொறுத்து, கோட்பாட்டளவில் விவரிக்கிறது.

Scitovsky, Tibor, *Economic Theory and Western European Integration*. Stanford, Calif.: Stanford University Press, 1958. ஐரோப்பாவில் பொருளாதார இணைப்பினால் ஏற்படக்கூடிய விளைவுகளைப் பூரணமாக ஆராய்கிறது.

Urquidi, Victor L., *Free Trade and Economic Integration in Latin America*. Berkeley, Calif.: University of California Press, 1962. இலத்தீன் அமெரிக்காவின் பொருளாதார இணைப்பை ஆதரித்து மிகுந்த நம்பிக்கையோடு எழுதப் பட்டுள்ளது.

Vernon, Raymond, *American Foreign Trade Policy and the GATT*. Princeton, N. J.: Princeton University Press, 1954. இறக்குமதி வரி, வாணிபப் பொது ஒப்பந்தத்தில் அமெரிக்கா கலந்துகொள்வதுபற்றிய விவரங்களைத் திறனாய் கிறது.

United States Tariff Commission, *Operation of the Trade Agreements Program*. Washington, D. C.: Government Printing Office, காலந்தோறும் வெளிவருகிறது. வாணிப ஒப்பந்த ஏற்பாடுகளின் செயல் முறை, விளைவுகள்பற்றிய அறிக்கையும், இறக்குமதி வரி, வாணிபப் பொது ஒப்பந்தத்தின் நடவடிக்கைகளை விளக்குவதும்.

# 30. பிராந்திய இணைப்பும் வாணிபப் பெருக்கமும்

## சுங்க இணைப்பின் விளைவுகள்

மேற்கு ஐரோப்பாவில் நன்கு முன்னேறியுள்ளதும் இலத்தீன் அமெரிக்காவில் இப்போதுதான் தொடங்கியுள்ளதுமான பொருளாதார இணைப்பு ஒரு புதிய, குறிப்பிடத்தக்க இயக்கமாகும். இணைந்த நாடுகள் இதுவரை ஒன்றையொன்று சாராது இருந்தவை. கடந்த காலத்தில் ஒன்றோடொன்று கடுமையாக விரோதம் பாராட்டியவை. அவை தம் வேறுபாடுகளை மறந்து ஒரு பொருளாதார இணைப்பை ஏற்படுத்துகின்றன அல்லது தம்மைப் பிரித்து வைத்த இறக்குமதி வரித் தடைகளை அகற்றிவிடுகின்றன. இத்தகைய செயல்கள் அந் நாடுகளிலும் பிற வெளிநாடுகளிலும் நிச்சயமாகப் பல முக்கியமான விளைவுகளை ஏற்படுத்தும். அவை என்ன விளைவுகளாக இருக்கும்?

ஒரு சுங்க இணைப்பு அல்லது ஒரு தடையிலா வாணிபப் பிராந்தியம் அமைத்தால் அந்தப் பிரதேசத்துக்குள் வாணிபத்தின் மீதிருந்த எல்லாச் செயற்கைத் தடைகளையும் நீக்கிவிடவேண்டும்.[1] இதனால் நிச்சயமாக விலைகள், வாணிபத்தின் அளவும் அதில் பங்கு பெறும் பொருள்களும், சாதனங்களின் பங்கீடு, ஆகியவை எல்லாம் பாதிக்கப்படும். இம் மாறுதல்களோடு, உற்பத்தியின் திறனும், நுகர்வோரின் நலனும்கூட பாதிக்கப்படும். நீண்டதொரு காலத்தை எடுத்துக்கொண்டால், ஒரு பெரிய பிராந்திய அங்காடியை ஏற்படுத்துவதன்மூலம் மேலும் பெரிய அளவில் உற்பத்தியைச் செய்யவும், புறச் சிக்கனங்களைப் பெறவும் வழி ஏற்படும். இத்தகைய பெரும் மாறுதல்களினால் என்ன விளைவுகள் நேரும் என்பதைச் சரியாகக் கூறுவது

[1] ஐரோப்பியத் தடையிலா வாணிபச் சங்கத்தில் உள்ளதுபோலச் சில பொருள்கள் ஒப்பந்தத்தில் அடங்காமல் இருக்கலாம். ஆனால், ஒப்பந்தத்தில் அடங்கிய பொருள்கள்மீது எல்லாத் தடைகளையும் நீக்கிவிடவேண்டும். இல்லாவிட்டால் அந்த ஒப்பந்தம் இறக்குமதி வரி, வாணிபப் பொது ஒப்பந்தத்தின் விதிகளுக்கு முரணானது. முழுவதாக வரிகளைக் குறைக்காமலிருந்தால் அது சலுகை காட்டுவதாகிறது. அதைப் பொது ஒப்பந்தம் தடைசெய்கிறது.

சாத்தியமே இல்லை. இம் மாறுதல்கள் ஏற்படும் சூழ்நிலையைப் பொறுத்தவை அவற்றின் விளைவுகள்.

சுங்க இணைப்பை அமைப்பதனால் என்ன விளைவுகள் ஏற்படக்கூடிய வாய்ப்பு அதிகம், அவை ஏற்படக்கூடிய அளவை எந்த நிலவரங்கள் நிர்ணயிக்கின்றன என்பதைப்பற்றி இச் சிக்கலான பொருளை ஆழ்ந்து ஆராய்ந்து சிலர் கூறியுள்ளனர்.[2] சமீபகால ஆராய்ச்சியின் பயனாக நாம் அறிந்த முக்கியமான விளைவுகளைப்பற்றி மட்டும் இங்குச் சுருக்கமாகக் கூறுவோம்.

மாறுதல் இல்லாத சூழ்நிலையில் சுங்க இணைப்பினால் ஏற்படக்கூடிய விளைவுகளைப் பார்ப்போம். அதாவது, சாதனங்களின் மறு பங்கீட்டினால் ஏற்படும் மாறுதல்களும், உற்பத்தியின் அமைப்பின் மாறுதல்களும் ஏற்படுமுன் என்ன விளைவுகள் உண்டாகும் என்பதைப் பார்ப்போம். இத்தகைய நிலைமை மாறா விளைவுகளை இருவகையாகப் பிரிக்கலாம்; உற்பத்தியைப் பாதிப்பவை, நுகர்வைப் பாதிப்பவை.

**உற்பத்தி விளைவுகள்**

ஓர் இணைப்பின் உறுப்பு நாடுகள் தமக்குள் நடக்கும் வாணிபத்தின்மீது இறக்குமதி வரிகளை நீக்கும்போது பல பொருள்கள் புதிதாக இணைப்பு நாடுகளுக்குள்ளிருந்து உற்பத்தியாகின்றன. பழைய அளிப்புக்குப் பதிலாகப் புதிய இடங்களிலிருந்து அளிப்புகள் வருகின்றன. இந்த மாற்று அளிப்பு இருவகையில் ஏற்படும்.

1. சில நாடுகளில் உற்பத்திச் செலவு அதிகமாக இருந்து இறக்குமதி வரிகளால் பாதுகாக்கப்பட்டிருந்த அந்நாட்டு உற்பத்திக்குப் பதிலாக இணைப்பில் பிற நாடுகளிலிருந்து புது அளிப்பு வரும். உதாரணமாக, இணைப்புக்குமுன் கண்ணாடித் தகடுகளை ஃபிரெஞ்சு உற்பத்தியாளர்கள் ஃபிரான்ஸில் அதிக விலைக்கு விற்றுவந்தனர். இணைப்புக்குப் பிறகு அந்த விற்பனையின் இடத்தை மலிவான பெல்ஜிய

[2] இதுபற்றிய முக்கிய நூல்கள் பின்வருமாறு: Bela Balassa, *The Theory of Economic Integration* (Richard D. Irwin, Inc., Homewood, Ill., 1961); James E. Meade, *Problems of Economic Union* (University of Chicago Press, 1953); James E. Meade, *The Theory of Customs Unions* (The North Holland Publishing Co., Amsterdam, 1955); Rolf Sannwald and Jacques Stohler, *Economic Integration* (Princeton University Press, 1959); Tibor Scitovsky, *Economic Theory and Western European Integration* (Stanford University Press, 1958); Jan Tinbergen, *International Economic Integration* (Elsevier, Amsterdam, 1954); Jacob Viner, *The Customs Union Issue* (Carnegie Endowment for International Peace, New York, 1950). முக்கியமாக மீட், பலாஸா ஆகியோரின் நூல்களும் இவற்றுள் பிற பல நூல்களையும் அடிப்படையாகக் கொண்டு இந்த அத்தியாயம் எழுதப்பட்டது.

உற்பத்தியாளர்கள் பிடித்துக்கொள்வார்கள். முன்னர் பன்னாட்டு வாணிபத்தில் சேராத பொருள்கள் இனி வெளிநாடுகளில் விற்பனை ஆகும். இந்தப் புது வாணிபம் தோன்றுவதனால் உலக உற்பத்தியின் திறன் உயரும்; மொத்த உலக உற்பத்தி அதிகரிக்கும். ஏனெனில், வேறு எங்கும் உற்பத்தி குறையாமல், சுங்க இணைப்புக்குள் உற்பத்தி அதிகமாகிறது.

2. வெளிநாடுகளிலிருந்து மலிவாக இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களுக்குப் பதிலாகப் புதிதாக இணைப்பு நாடுகளுக்குள்ளிருந்தே பொருள்கள் வாங்கப்படும். உதாரணமாக, கனடாவிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் அலுமினியத்தை டன்னுக்கு $100 விலை, அத்துடன் 30 சதவீத வரி என்ற நிபந்தனையில் ஃபிரான்ஸ் இறக்குமதி செய்வதாகக் கொள்வோம். இப்போது இணைப்பு நாடுகளுக்குள் வரிகள் நீக்கப்பட்டுவிட்டன. எனவே, டன்னுக்கு $120 விலையில் இத்தாலிய உற்பத்தியாளர்கள் இனி ஃபிரான்ஸுக்கு விற்பார்கள். உண்மையில் ஃபிரான்ஸ் வாங்கும் அலுமினியத்தின் விலை முன்னைவிட டன்னுக்கு $20 அதிகமாகிறது. இதனால் மலிவாக உற்பத்தியாகும் நாட்டிற்குப் பதிலாக உற்பத்தி செலவு அதிகமான நாட்டின் விற்பனை ஏற்படுகிறது. வாணிபம் இவ்வாறு வேறு வழியிலிருந்து வருவதால் உலகத்தின் உற்பத்தியின் திறன் குறைகிறது. ஏனெனில், முன்னர் உற்பத்தியான அதே அளவுப் பொருளுக்கு, இப்போது சாதனங்களை அதிகமாகப் பயன்படுத்தவேண்டியிருக்கிறது. (அல்லது, இப்படியும் கூறலாம். முன் வாங்கிய அதே அளவு இறக்குமதிகளைப் பெற, அதற்கு ஈடாக ஏற்றுமதிகளை உற்பத்தி செய்ய முன்னைவிட அதிகமாகச் சாதனங்களை இப்போது ஃபிரான்ஸ் பயன்படுத்தவேண்டும்.)

வாணிபத் தோற்றத்தின் (creation) சாதகமான விளைவுகள் அதிகமா, வாணிப வழிமாற்றத்தின் (diversion) பாதகமான விளைவுகள் அதிகமா என்பது, வாணிபத்தின் அளவு மாறியதன்மீது மட்டுமன்றிப் பொருள்களின் அலகுச் செலவுகளின் (unit costs) வித்தியாசங்களையும் பொறுத்திருக்கும். செலவு மிஞ்சுவது குறைவாக இருந்தால், புது வாணிபம் தோன்றியது நிறைய அதிகமாவதன் சாதக விளைவை அதனோடு ஒப்பிட்டால், அலகுச் செலவுகள் அதிகமாக வித்தியாசப்படுமானால், புதிதாகத் தோன்றியதைவிடக் குறைவாக வாணிபம் வழிமாறினால் ஏற்படும் பாதக விளைவுகூட அழித்துவிடும். ஒரு சுங்க இணைப்பினால் உலக உற்பத்தித் திறன் எவ்வாறு பாதிக்கப்படுகிறது என்பதற்கு எதை ஆராயவேண்டும் என்பதை இவ்விரு அம்சங்களின் விளைவுகளே காட்டுகின்றன.

(அ) சுங்க இணைப்பில் சேர்ந்த நாடுகள் ஒன்றோடொன்று போட்டியிடும் நிலையில், அதாவது ஒரே மாதிரி உள்ள பல பொருள்களை உற்பத்தி செய்வனவாக இருக்குமானால், இணைந்த ஒரு நாட்டின்

உற்பத்திகளுக்கு மற்றென்றின் உற்பத்திகளுக்கு மாற்றாக உபயோகிக்கப்பட வாய்ப்புகள் பல உண்டு. இதனால், வாணிப திசைமாற்றத்தைவிட அதிகமாக வாணிபத் தோற்றத்துக்கு வாய்ப்புகள் அதிகம். ஆனால், மலிவாக உற்பத்தி செய்யும் நாடு இணைப்புக்கு வெளியில் இருக்குமானால், இவ்வாறன்றி வாணிபம் வழிமாறும் வாய்ப்பு ஏற்படும்.

வெவ்வேறு பொருள்களை உற்பத்தி செய்து ஒன்றை ஒன்று நிறைவுபடுத்தும் நாடுகள் இணையுமானால், இதற்கு மாறாக, இணைப்பு நாடுகளுக்குள் ஒன்றன் உற்பத்திக்குப் பதிலாக மற்றென்றின் உற்பத்தி விற்கக்கூடிய வாய்ப்புகள் குறைவாக இருக்கும். போட்டி நாடுகள் இணைந்தால் ஏற்படக்கூடியதுபோல, உற்பத்திச் செலவு அதிகமான நாட்டின் அளிப்பின் இடத்தில் உற்பத்திச் செலவு குறைவான நாட்டின் உற்பத்தி ஏற்படும் வாய்ப்புகள் குறைவு. இறக்குமதி வரிகள் நீக்கப்படுவதால் இப்போது குறைந்த செலவில் உற்பத்தி செய்யும் நாடுகளின் வாணிபம் உயரும். ஆனால், அதிகச் செலவு உற்பத்திக்குப் பதிலாகக் குறைந்த செலவு உற்பத்தி ஏற்படுவதன்மூலம் வாணிபம் தோன்ற இது வழி செய்யாது. ஆனால், மூன்றாவது நாடுகளினின்று வரும் குறைந்த செலவுடைய பொருள்களுக்குப் பதிலாக இணைப்பு நாடுகளுக்குள்ளேயே அதிகச் செலவில் உற்பத்தியாகும் பொருள்களின் விற்பனை ஏற்பட்டு நிறைய வாணிபம் வழிமாறக்கூடும்.

(ஆ) போட்டியிடும் பொருளாதாரங்கள் இணைவதால் ஏற்படும் இலாபம், அலகுச் செலவுகளில் பெரிய வித்தியாசங்கள் இருக்குமானால், மேலும் அதிகம் ஆகும். விற்கப்படும் பொருள்கள் ஒவ்வொன்றுக்கும் இலாபம் அதிகமாவதோடு, சாதனங்களின் மறு பங்கீடும் (realloca-tion) நிறைய ஆகும்.

(இ) உலக உற்பத்தித் திறனைச் சுங்க இணைப்பு எப்படிப் பாதிக்கும் என்பதைத் தீர்மானிக்கும் மற்றொரு முக்கிய காரணி, இறக்குமதி வரிகளின் அளவு. (1) இணைப்புக்கு முன் உறுப்பு நாடுகளின் இறக்குமதி வரிகளின் அளவு மிக அதிகமாக இருந்தால், எல்லா இறக்குமதிகளையும் அது குறைக்கும். அவ் வரிகளை நீக்குவதால் அதிகச் செலவாகும் உள் நாட்டு அளிப்புகளுக்குப் பதிலாக இணைப்புக்கு உள்ளேயே பல இடங்களிலிருந்து குறைந்த செலவுள்ள அளிப்புகள் விற்பனை ஆகும். இதனால், வாணிபம் தோன்ற வழி உண்டாகிறது. (2) இணைப்பு ஏற்பட்டபின், வெளி உலகத்துக்கு எதிராகக் குறைந்த இறக்குமதி வரிகள் இருக்குமானால், வாணிப வழிமாற்றம் மிகக் குறைவாக இருக்கும். அதனால் உற்பத்தித்திறன் அதிகரிக்கும். அப்படியிருந்தால் குறைந்த செலவில் உற்பத்தி செய்யும் மூன்றாவது நாடுகள் இணைப்பு நாடுகளில் தொடர்ந்து விற்பனை செய்யும். ஆனால், இணைப்பு நாடுகளைச் சுற்றி இறக்குமதி வரிகளை உயரமாக வைத்துப் பாதுகாப்புச் செய்யப்பட்டிருந்தால் இணைப்பு நாடுகளின் அங்காடியில்

இணைப்பைச் சேர்ந்த அதிகச் செலவுடைய அளிப்பாளர்கள்மட்டுமே விற்க முடியும்.

(ஈ) வேறு மாறுதல் ஏதும் இல்லாவிட்டால், சுங்க இணைப்பினால் உண்டான அங்காடி எவ்வளவு பெரிதாக உள்ளதோ அவ்வளவுக்குச் சாதனங்களின் மறுபங்கீடு (reallocation) உற்பத்தித்திறன் அதிகமாகுமாறு அமைய வாய்ப்புகள் அதிகமாகின்றன. உதாரணமாக, பெல்ஜியமும் லக்ஸம்பர்கும் (Luxembourg) இணைந்தபோது இத்தகைய மாறுதல் அதிகமாக ஏற்படவில்லை. ஆனால், பொதுச் சந்தை ஏற்பட்டபின் பல திறன்குறைந்த உற்பத்தியாளர்கள் நீக்கப்பட்டு வருகின்றனர். திறமை மிக்க உற்பத்தியாளர்கள்மட்டுமே உற்பத்தியைச் செய்ய முடிகிறது.

சுங்க இணைப்பு ஏற்படுவதன்மூலம் அங்காடியின் அளவு எவ்வளவு அதிகமாகும் என்பது தராதரப் போக்குவரத்துச் செலவுகளையும் குறிப்பாகப் பொறுத்துள்ளது. போக்குவரத்துச் செலவுகள் அதிகமாக இருந்தால் அதுவும் வாணிபத்தைத் தடை செய்யும். நாடுகளுக்கிடையே போக்குவரத்துச் செலவுகள் குறைவாக இருக்குமானால் அத்தகைய நாடுகள் இணைந்தால், தமக்கிடையே அதிகப் போக்குவரத்துச் செலவு உள்ள நாடுகளின் இணைப்பினால் ஏற்படுவதைவிடப் பெரிய அங்காடி ஏற்படும்.

**சுருக்கம் :** சுங்க இணைப்பினால் உற்பத்தி எவ்வாறு பாதிக்கப்படும் என்பதைப் பின்வருமாறு சுருக்கமாகக் கூறலாம். முன்னர் இருந்ததைவிடச் சிறப்புத் தேர்ச்சி திறம்பட அமையுமாறு உற்பத்திச் சாதனங்கள் மறு பங்கீடு ஆவதன்மூலம், சுங்க இணைப்பினால் பெருகும் வாணிபத்தால் உலக உற்பத்தியின் திறன் அதிகமாகிறது. இவ்வாறு ஆனால், நுகர்வுக்கு அதிகமாகப் பொருள் கிடைப்பதால் உலக மக்களின் நலன் உயரும். நிகரமாக வாணிபம் உயருவதற்குப் பதிலாக, வாணிபம் வழிமாற மட்டும் செய்தால் அதனால் உற்பத்திச் சாதனங்கள் திறங்குறைந்த சிறப்புத் தேர்ச்சி ஏற்படுமாறு மறு பங்கீடாகும். அதனால், மொத்த உற்பத்தி, உற்பத்தியின் திறன், உலக மக்களின் நலன் ஆகிய அனைத்தும் குறையும்.

### நுகர்வு விளைவுகள்

உற்பத்தியின்மீது விளைவுகள் ஏற்படும் அதே சமயத்தில் வாணிபப் பெருக்கம் காரணமாக நுகர்வின்மீதும் முக்கிய விளைவுகள் ஏற்படும். வாணிபம் என்பது முக்கியமாக, மலிவான இடங்களில் பொருள்களை வாங்கி நல்ல விலைபோகும் இடங்களில் அவற்றை விற்பது. வேறுவிதமாகச் சொன்னால் எங்குப் பொருள்களுக்குக் குறைந்த மதிப்புள்ளதோ அங்கிருந்து அவற்றின் மதிப்பு அதிகமாக உள்ள இடங்களுக்கு மாற்றுவதுதான் வாணிபம். உற்பத்தியாளர், வணிகர்

ஆகிய இரு சாராரும் நுகர்வோரின் மகிழ்ச்சியையே இறுதிக் குறிக்கோளாகக் கொண்டிருக்கின்றனர். வாணிபம் காரணமாக நுகர்வோரின் திருப்தி அதிகமாகிறது. ஏனெனில், அதன்மூலம் தாம் மிகவும் மதிக்கும் பொருள்களை அவர்கள் அதிகமாக நுகர முடிகிறது.

வாங்குவோர் எல்லாருக்கும் எல்லாப் பொருள்களின் தராதர இறுதிநிலை மதிப்பைச் சமமாக்கும்போதுதான் வாணிபம் உச்சநிலையை அடைந்ததாகக் கூறலாம். அதாவது அதற்குமேல் நுகர்வோரது நலத்தை வாணிபத்தால் உயர்த்த முடியாது. எந்த ஒரு நுகர்வோனும், பிற நுகர்வோரைவிட, ஒரு குறிப்பிட்ட பொருளை மேலும் வாங்கும் அலகுகள்மீது அதிக மதிப்பை வைக்கும்வரை, வாணிப நலனை அதிகரிக்கிறது. உதாரணமாக $A$ என்பவனுக்கு கிராமபோன் இசைத்தட்டுகளின் இறுதிநிலை மதிப்பு $ 10 என்று கொள்வோம்; அவனுக்குப் புகையிலை ஓர் இராத்தல் எடையின் இறுதிநிலை மதிப்பு $ 5; $B$-க்கு இரண்டின் இறுதிநிலை மதிப்பும் $ 5தான். அப்போது $A$ ஓர் இராத்தல் புகையிலையைக் கொடுத்து $B$-யிடம் ஓர் இசைத்தட்டை வாங்கிக்கொண்டால், $ 5 மதிப்பை இழந்து $ 10 மதிப்புக்குத் திருப்தியை $A$ அடைகிறன். அவனுக்கு நிகர இலாபம் $ 5. $B$-க்கு நஷ்டமுமில்லை, இலாபமுமில்லை.

அங்காடியில் போட்டி நிறைந்துள்ளபோது இதேபோலத் தராதர இறுதிநிலை மதிப்புகள் சமமாகின்றன. எந்த ஒரு குறிப்பிட்ட நுகர்வோனும், ஒரு பொருள்மீது அவன் வைக்கும் இறுதிநிலை மதிப்பு அதன் விலைக்குச் சமமாகும்வரை அதை வாங்கிக்கொண்டே இருப்பான். அப்போது அவன் பல வழிகளில் செலவழிக்கும் ஒவ்வொரு டாலரும் அவனுக்கு ஒரே இறுதிநிலைத் திருப்தியைத் தரும். அவனது மொத்த திருப்தி உச்சநிலையை அடையும். ஆனால், நிறைந்த போட்டியுள்ள அங்காடியில் ஒரே விலைக்குப் பொருள்களை எல்லாரும் வாங்குகின்றனர். எனவே, வாங்குபவன் ஒருவனுக்குப் பொருந்துவது எல்லாருக்கும்கூடப் பொருந்தும். எல்லா வாங்குவோருக்கும் இறுதிநிலை மதிப்பு விலைக்குச் சமமாக இருக்கும். மேலும் நிறைந்த போட்டிச் சூழ்நிலையில் விலையும் இறுதிநிலைச் செலவும் சமம். எனவே, ஒவ்வொரு பொருளின் இறுதிநிலை மதிப்பும் அதன் உற்பத்திச் செலவுக்குச் சமமாகும் நிலைவரையில் பொருள்கள் வாங்கப்படும்.

இந்த ஆராய்ச்சியில், சர்வாதீனத்தையோ, ஓர் எக்ஸைஸ் வரியையோ, அல்லது ஓர் இறக்குமதியாகும் பொருள்மீது இறக்குமதி வரியையோ சேர்த்துக்கொண்டோமானல், அதனல் விலையும் அப் பொருளின் இறுதிநிலை மதிப்பும் அதன் இறுதிநிலைச் செலவைவிட அதிகமாக இருக்கும். புதிய அதிகமான விலையிலும் ஒருவன் முன் வாங்கப்பட்ட அதே அளவுக்குப் ஒரு பொருளை வாங்கினல் அப் பொருள்

மீது செலவழிக்கப்பட்ட டாலரிலிருந்து அவன் அடையும் இறுதிநிலைத் திருப்தி பிற பொருள்கள்மீது செலவழிக்கும் ஒரு டாலரிலிருந்து கிடைப்பதைவிடக் குறைவாக இருக்கும். செலவழிக்கும் ஒவ்வொரு டாலரிலிருந்தும் ஒரே அளவு திருப்தி கிடைக்கவேண்டுமானால் அவன் தன் செலவுகளை மாற்றியமைத்துக்கொள்ளவேண்டும். இப்போது விலை அதிகமான பொருளை வாங்குவதைக் குறைத்து, விலை மலிவான வற்றை அதிகமாக வாங்கவேண்டும். அப்படிச் செய்தால் வாங்கிய பொருள்கள் ஒவ்வொன்றின் இறுதிநிலைத் திருப்தியும் குறையும். இறக்குமதி வரி விதித்தால் அதன் பயனாக இறுதிநிலை மதிப்புக்கும் இறுதிநிலைச் செலவுக்கும் வித்தியாசம் உண்டாகிறது. எனவே, நுகர்வில் உச்சநிலைத் திருப்தி ஏற்படுவதில்லை. இதற்கு நேரெதிராக, இறக்குமதி வரியை நீக்கினால் நுகர்வோரின் திருப்தி அதிகமாகும்.

இன்னும் பொதுவாகச் சொன்னால், நுகர்வோர் வாங்கக்கூடிய பொருள்களின் எண்ணிக்கையைக் குறைத்தால் நுகர்வோரின் திருப்தி குறைகிறது என்பதைத்தான் இஃது எடுத்துக்காட்டுகிறது. ஒரு தீவிர மான உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். நுகரப்படும் பல பொருள்கள்மீது வரிகள் மிகவும் அதிகமாக விதிக்கப்பட்டு வாங்க முடியாதபடி அவற்றின் விலை உயர்ந்துள்ளதாகக் கொள்ளுவோம். அப்போது நுகர்வோர்கள் தம் வருமானத்தையெல்லாம் ஒரு சில பொருள்களையே நிறைய வாங்குவதில் செலவழிக்கவேண்டியிருக்கும். குறைந்துசெல் இறுதிநிலைத் திருப்தி தோன்றும். எனவே, மொத்த திருப்தி நிறையக் குறையும்.

இந்தக் கோட்பாடுகளைச் சுங்க இணைப்பை அமைப்பதோடு இணைத்துப் பார்ப்போம். இணைப்பு நாடுகளுக்கிடையே இறக்குமதி வரிகளை நீக்கினால், உள்நாட்டில் விலை அதிகமான பொருள் விற்ற இடத்தில் மற்றோர் இணைப்பு நாட்டிலிருந்து மலிவாக வந்த பொருள் விற்கலாகும் (வாணிபத் தோற்றம்), அல்லது வெளியிலிருந்து மலிவான செலவில் இறக்குமதியாகி வந்த பொருள்களுக்குப் பதிலாக அதற்கு அடுத்தபடி உயர்ந்த விலையுடைய இணைப்பிலேயே உற்பத்தியாகும் பொருள் விற்க லாகும் (வாணிப வழிமாற்றம்.) இவ்விரு நிகழ்ச்சிகளில் எது நேர்ந் தாலும், நுகரும் நாட்டில் இணைப்புக்குள் வரியின்றி அப் பொருள் வருவ தால், அதன் விலை குறையும். நுகர்வோருக்கு இலாபம் உண்டாகிறது. விலை மலிவாக அளிக்கும் உற்பத்தியாளன் இணைப்புக்குள்ளேயே இருந் தால் இறுதிநிலை மதிப்புக்கும் இறுதிநிலைச் செலவுக்கும் உள்ள வித்தி யாசம் நீங்கிவிடும். இணைப்பில் உள்ள உற்பத்தியாளன் இரண்டாம் பட்சமாகத்தான் மலிவாக உற்பத்தி செய்கிறான் என்றால், இறுதிநிலை மதிப்புக்கும் (அதாவது முதலில் இருந்த விலைக்கும்) மிகக் குறைவாக இருக்கக்கூடிய இறுதிநிலைச் செலவுக்கும் உள்ள வித்தியாசம் குறையும்.

நேரிடையாகப் பாதிக்கப்பட்ட பொருளைப் 'பொறுத்தவரையில், நுகர்வோரின் திருப்தி அதிகமாகும். ஏனெனில், பிறவற்றைவிட அதிக மதிப்புடைய இப் பொருளின்மேல் செய்யப்படும் செலவு உயருகிறது. இந்தப் பொருளின் நுகர்ச்சி அதிகமாவது, வேறு எந்தவகைப் பொருள்களின் நுகர்ச்சிக்குப் பதிலாக என்பதைப் பொறுத்தது, நுகர்வோரின் நலனில் ஏற்படும் நிகர உயர்வு. அப்படியானால் இப்போது புதிதாக இறக்குமதி செய்யப்படும் பொருள் எவ்வகைப் பொருள்களுக்கு மாற்றுப் பொருள் ?

இறக்குமதி செய்யும் நாட்டில் ஏற்கெனவே உள்நாட்டில் உற்பத்தியாகும் பொருள்களுக்கு இது நல்ல மாற்றுப் பொருளாக இருக்கலாம், அப்படியானால், இறுதிநிலை மதிப்பு, விலை, இறுதிநிலைச் செலவு மூன்றும் ஒன்றாகும் அளவுக்கு அவர்கள் முன்னர் வாங்கிய பொருள்களின் நுகர்வை அவர்கள் குறைப்பார்கள். அதற்குப் பதிலாக, இறக்குமதி வரியால் இறுதிநிலை மதிப்பு உயர்வாக வைக்கப்பட்டுள்ள பொருளை உபயோகிப்பார்கள். தாம் குறைவாக மதிக்கும் பொருள்களுக்குப் பதிலாக, தாம் அதிகமாக மதிக்கும் பொருள்களை நுகர்வதனால், அவர்களுடைய திருப்தி நிகரமாக அதிகரிக்கும்.

அல்லது, இப்போது புதிதாக இறக்குமதியாகும் பொருள், இணைப்புக்கு வெளியிலிருந்து இறக்குமதியாகி வரி விதிக்கப்படுவதால் விற்பனை குறைந்த ஏதாவதொரு பொருளுக்குப் பதிலாகப் பயன்படலாம். அப்படியானால், புதிதாக வரியின்றி இறக்குமதியான பொருளை மேலும் உபயோகிப்பதால் நுகர்வோரின் திருப்தி (குறையும் விகிதத்தில்) அதிகரிக்கும். ஆனால்,' இறுதிநிலை மதிப்பும், புதிய குறைவான இறுதிநிலைச் செலவும் சமமாகும்வரை, வரி விதிக்கப்பட்டுள்ள, ஆனால், இன்னமும் மதிப்பு உயர்ந்த பொருள்களைக் குறைவாக நுகர்வதால் அவர்களது திருப்தி' அதே சமயம் குறைகிறது. இப் பொருளின்மீது விதிக்கப்பட்டுள்ள வரி, இறுதிநிலை மதிப்புக்கும் இறுதிநிலைச் செலவுக்கும் இடையே உள்ள வித்தியாசத்தை அப்படியே வைத்திருக்கிறது. அந்தப் பொருளின் நுகர்வு எவ்வளவு குறைகிறதோ, அவ்வளவின் ஒவ்வோர் அலகுக்கும் எவ்வளவுக்கு நுகர்வோரின் திருப்தி குறைகிறதோ அதை இந்த வித்தியாசத்தைக் கொண்டு அறியலாம்.[3]

3 இன்னமும் வரிவிதிக்கப்படும் பொருளின் நுகர்வு குறைந்ததனால் ஏற்படும் திருப்தி நஷ்டம், இப்போது வரியின்றி வரும் பொருளின் நுகர்வு அதிகமானதால் ஏற்படும் திருப்தி இலாபத்தைவிட எப்போதும் அதிகமாக முடியாது. அவ்வாறு நேரவேண்டுமானால், நுகரும் மனிதன் அறிவற்ற முறையில் நடந்துகொள்ள வேண்டும். அஃதாவது, செலவழித்த ஒவ்வொரு டாலரின் மதிப்பும் சமமாக இராதபடி அவன் செய்திருப்பான்.

இதைப் பின்வரும் எடுத்துக்காட்டால் விளக்குவோம்: பொதுச் சந்தை அமைக்கப்படுமுன் ஜெர்மனியிலிருந்து 200 ஃபிராங்குகள் விலை உள்ள காமிராக்களையும் (cameras), ஸ்விட்சர்லந்திலிருந்து அதே விலை உள்ள கைக்கடிகாரங்களையும் ஃபிரான்ஸ் இறக்குமதி செய்வதாகக் கொள்வோம். ஒவ்வொன்றின்மீதும் 50 சதவீத வரி விதிக்கப்படுகின்றன. இணைப்புப் பொருள்கள்மீது வரிகளை நீக்கியபின், காமிராக்கள் 200 ஃபிராங்குகள் விலைக்கு விற்கும். ஆனால், கைக்கடிகாரங்கள் முன்பிருந்த 300 ஃபிராங்குகள் விலைக்கே விற்கும். 30·1 எண்ணுள்ள




படம் 30·1. ஒன்றுக்கொன்று பதிலியாக உள்ள இரு இறக்குமதிப் பொருள்களில் ஒன்றன்மீது வரி நீக்கப்படுவதால் நுகர்ச்சியின்மீது ஏற்படும் விளைவு

படம் காட்டுவதுபோல, பொதுச் சந்தை தோன்றுமுன் காமிராக்களும் கைக்கடிகாரங்களும் நூறு, நூறு ஃபிரான்ஸில் விற்றதாகவும், அதன் பின்னர், குறைந்த விலையில் காமிராக்களின் விற்பனை இரட்டித்து 200 விற்பதாகவும் (கைக்கடிகாரங்களுக்குப் பதிலாகக் காமிராக்கள் வாங்கப்படக்கூடுமாதலின்) கைக்கடிகாரங்கள் 80தான் விற்பதாகவும் கொள்வோம். காமிராக்களின் இறுதிநிலை மதிப்புக்கும், இறுதிநிலைச் செலவுக்கும் உள்ள வித்தியாசம் நீங்கிவிட்டதால், படத்தில் சீராக இல்லாத பரப்பு (irregular area) காட்டும் அளவுக்கு நுகர்வோரின்

நலன் அதிகரிக்கும். ஆனால், கைக்கடிகாரங்களின் நுகர்வு குறைந்த தனால் நுகர்வோர் நலன் குறைகிறது. இது படத்தின் கடிகாரப் பக்கத்தில் நீண்ட சதுரப் பரப்பாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. கைக் கடிகாரங்களைப் பொறுத்தவரையில் இறுதிநிலை மதிப்புக்கும் இறுதி நிலைச் செலவுக்கும் இடையே வித்தியாசம் முன்னிருந்த அளவிலேயே உள்ளது. எனவே, வாங்காத ஒவ்வொரு கடிகாரத்துக்கும் இந்த அளவுக்கு திருப்தி நஷ்டம் உண்டாகிறது. காமிராக்களைப் பொறுத்த வரை வாங்கப்படும் எல்லாக் காமிராக்களுக்கும் நுகர்வோரின் திருப்தி அதிகரிக்கிறது. அதாவது பழைய விலைக்கு முன்னர் வாங்கப்பட்ட அளவுக்குமட்டுமன்றிப் புதிய குறைந்த விலைக்கு மேலும் இப்போது வாங்கப்படும் அளவுக்கும் நுகர்வோரின் திருப்தி அதிகரிக்கிறது. (ஆனால், மேலும் வாங்கப்படும் அளவின் திருப்தி உயர்வு, பழைய விற்பனை அளவின் திருப்தியைவிடக் குறைவாக இருக்கும்.)

எனவே, ஒரு சுங்க இணைப்பு நுகர்வோரின் நலனை எப்படிப் பாதிக்கும் என்பதை மதிப்பிட இறக்குமதி வரிகளின் அளவை முதலில் கவனிக்கவேண்டும். இணைப்புக்குமுன் உறுப்பு நாடுகளின் இடையே நடந்த வாணிபத்தின்மீது, இறக்குமதி வரிகள் அதிகமாக இருந்தால், நுகர்வோர் நலன் அதிகமாகும் வாய்ப்பு நிறைய உள்ளது. ஏனெனில், அதனால் அதிக விலையுள்ள உள்நாட்டு உற்பத்தி அல்லது இறக்கு மதிக்குப் பதிலாக பிற இணைப்பு நாடுகளினின்று வரும் மலிவான பொருள்கள் அதிகமாகப் பயன்படுத்தப்படும். இணைப்பு ஏற்பட்ட பின் மூன்றாவது நாடுகளின் பொருள்கள்மீது குறைவாக இறக்குமதி வரிகள் விதிக்கப்பட்டாலும் நுகர்வோரின் நலன் அதிகமாகும். ஏனெனில், அப்போது இறக்குமதிகளின் இறுதிநிலை மதிப்புக்கும் இறுதிநிலைச் செலவுக்கும் இடையே வித்தியாசம் மிகவும் குறைவாக இருக்கும். இணைப்பு நாடுகளுக்குள் மாற்றுப் பொருள்களின் வாணிபம் அதிகமாகி இறக்குமதிகள் குறைவதால் இதற்கு எதிராக நுகர்வோர் நலன் குறையும் அளவு இப்போது முன்னைவிடச் சிறிதாக இருக்கும்.

உற்பத்தியின்மீது ஏற்படும் விளைவுகளைப்போலவே, இணைப்பு நாடுகளின் பொருளாதாரங்களிடையே போட்டி நிறைவாக இருப்பதும் நுகர்வைப் பாதிக்கிறது. இணைப்பு நாடுகள் ஒரேமாதிரிப் பொருள்களை உற்பத்தி செய்தால், உள்நாட்டில் அதிக விலைக்கு உற்பத்தியாகும் பொருள்களுக்குப் பதிலாகப் பிற இணைப்பு நாடுகளிலிருந்து குறைந்த செலவில் வரும் பொருள்களின் விற்பனை ஏற்படும் வாய்ப்பு அதிக மாகும்.

## இணைப்பின் வளர்ச்சி அம்சங்கள்

ஒரு சுங்க இணைப்பு ஏற்பட்டுப் பல சிறு நாட்டு அங்காடிகளுக்குப் பதிலாக ஒரு பெரிய அங்காடி ஏற்பட்டபின் உற்பத்தியில் சிறப்புத்

தேர்ச்சி அதிகமாகும் என்பதையும் நுகர்வோரின் திருப்தி அதிகமாகும் என்பதையும் பார்த்தோம். இவை வளர்ச்சியைக் குறிக்காத விளைவுகள். அஃதாவது இவற்றால் தொழில் அமைப்பிலோ, அதன் தொழில்நுட்பத் திலோ, அல்லது மக்களது நடத்தைமுறைகளிலோ மாறுதல்கள் ஏதும் ஏற்படுவதில்லை. எல்லாம் முன்போலவே நடக்கின்றன. இரண்டு விஷயங்களில்தான் மாறுதல்கள் ஏற்படுகின்றன. உற்பத்திச் சாதனங்கள் முன்னைவிடத் திறமையாகச் சேர்ந்திருக்கும். நுகர்வுச் செலவுகள் மேலும் திருப்திதரும் அளவில் இருக்கும்.

இந்த மாறுநிலை விளைவுகளைவிட, அங்காடிப் பரப்பு மிகவும் பெரிதாவதன் வளர்ச்சி விளைவுகள் மிகவும் முக்கியமானவை. புதிய விற்பனை வாய்ப்புகள் தோற்றுவிக்கும் அதிகப் போட்டிதான் இவ் வளர்ச்சி விளைவுகளுக்குக் காரணம். சில நாடுகளில் அங்குள்ள பாதுகாப்புக் காரணமாக, விற்க முடியாத நிறுவனங்கள் இப்போது தம் விலைகள், தம் பொருள்களின் தரம், பொருள்களைச் சரிசெய்து தரும் வசதிகள், கடனுக்குப் பொருள் விற்பது, விரைவில் பொருளைத் தருவது, விளம்பரம் அல்லது விற்பனைக்கு உதவுவது ஆகிய விஷயங்களில் தமது மேன்மையைக் காட்டித் தம் விற்பனையை இப்போது செய்ய முடியும்.

**1. போட்டியும் போட்டியாளர்களின் சிறந்த முறைகளை அப்படியே பின்பற்றுவதும்:** பாதுகாக்கப்பட்ட உற்பத்தியாளர்கள் தம் பொருள்களை வாங்குபவர்களுக்குத் தம் பொருள்களைவிடச் சிறந்த மாற்றுப்பொருள்கள் கிடைப்பதைக் கண்டதும், தாமும் தொடர்ந்து வாழ வேண்டுமானால், அப்பொருள்களைக் 'காப்பி' அடிக்கவேண்டும் அல்லது வேறு புதுப்பொருள்களை உண்டாக்கவேண்டும். போட்டி யாளர்களைப் பின்பற்றுவதனால் சிறந்த செயல்முறைகள் பரவுகின்றன. இதன் பயனாக, திறன் குறைந்த நிறுவனங்கள் அல்லது தொழில்களி லிருந்து போட்டியைச் சமாளிக்கக்கூடிய அல்லது புதுப்போட்டியைத் தோற்றுவிக்கக்கூடிய திறன் நிறைந்த நிறுவனங்கள் அல்லது தொழில் களின் கைக்குச் சாதனங்கள் மாறுவதோடு நிற்கவில்லை. ஆனால், மனப்பாங்குகள், பழக்க வழக்கங்கள், தொழில் அமைப்புகள் எல்லாம் மாறிவிட்டன. பழைய முறைகளைப் பயன்படுத்தும் பழைய தொழில்கள் புதிய செயல்முறைகளைக் கடைப்பிடிக்கவேண்டியுள்ளது. வெளியில் ஏற்படும் மாறுதலுக்கு ஏற்றவாறு அவையும் மாறவேண்டியுள்ளது. அவற்றின் உற்பத்தி முறைகளை அபிவிருத்தி செய்யவேண்டியிருக் கிறது. அப்போதுதான் அவை தொடர்ந்து வாழமுடியும். அதே சமயம் நாட்டிலும் வயதானவர்களுக்குப் பதிலாக இளைஞர்கள் நிர்வாகப் பொறுப்புகளை ஏற்கின்றனர். இவர்கள் மாறுதலை விரும்பு கிறார்கள்; மாறுதலைச் செய்ய அவர்களால் முடியவும் முடிகிறது;

போட்டி மனப்பான்மையின் தூண்டுதலால் அவர்கள் புதிய செயல் முறைகளை விருத்தி செய்கின்றனர்.

சுங்க இணைப்போடு பொருளாதார இணைப்பும் ஏற்பட்டு மூலதனமும், உழைப்பாளிகளும், தொழிலதிபர்களும் தடையின்றி நாட்டுக்குநாடு செல்வார்களானால், அதேசமயம் அரசாங்கக் கொள்கைகளை அமைப்பதிலும், பொது அமைப்புகளை நிறுவுவதிலும் நாடுகளுக்குள்ளே கூட்டுறவும் இருக்குமானல், பொருள்களின் போட்டியினால் தோன்றும் கருத்துகளின் போட்டி மேலும் பரவுகிறது. தடையின்றி இடம்பெயரக்கூடிய மூலதனம் தொழிலை அடக்கும் அல்லது பேதங் காட்டும் வரிகள் இல்லாத இடத்தை நோக்கிச் செல்கின்றது. உழைப்பாளிகள் எங்கு நல்ல பணக்கூலி கிடைக்கிறதோ, எங்கு வேலைச் சூழ்நிலையும் பிற வசதிகளும் மேலும் கவர்ச்சிகரமாக இருக்கிறதோ அந்த இடங்களை நாடிச் செல்கின்றனர். இலாபங்கள் சமமாக இருந்தாலும் எங்குத் தொழில் நடத்துவது மிகவும் தடையின்றிச் சுலபமாக இருக்கிறதோ அந்த இடத்தைத் தொழிலதிபர்கள் நாடுகின்றனர். எனவே, அரசாங்கங்கள் தம் வரி அமைப்புகள், சமூகப் பாதுகாப்பு ஏற்பாடுகள், தொழிலமைப்புபற்றிய சட்டங்கள் ஆகியவற்றைக் கட்டாயமாகச் சீர்திருத்தவேண்டியிருக்கிறது. அதாவது பிற நாடுகள் எதில் இத்தகைய சட்டங்கள் சிறந்த முறையில் உள்ளனவோ அவற்றைப் பின்பற்றவோ, அல்லது அதற்கும் மேலாக அபிவிருத்தி செய்யவோ வேண்டியிருக்கிறது. பொறியியல் நிபுணர்கள், விற்பனையாளர்கள், நிர்வாகிகள், கணக்காளர்கள் ஆகியோர் நாட்டு மகாநாடுகளுக்குப் பதிலாகப் பன்னாட்டு மகாநாடுகளைக் கூட்டுகின்றனர். இதனால், கருத்துகளின் பரிவர்த்தனை மிகவும் அதிகமான அளவில் ஏற்படுகிறது. இதன் விளைவுகளை அளப்பது கடினம். ஆயினும் சிறந்தவற்றைப் பின்பற்றும் உணர்ச்சி ஏற்படுவது உண்மையில் பொருளாதார இணைப்பின் மிக முக்கியமான நன்மைகளில் ஒன்றாகும்.

'காப்பி' அடிப்பது (emulation) என்றால், நல்ல முறைகளையும் பின்பற்றலாம்; கெட்டவற்றையும் பின்பற்றலாம். இணைப்புக்குமுன் உள்நாட்டு அங்காடியில் கார்ட்டெல் (cartel) நிறுவனங்கள் முற்றுரிமை பெற்றிருந்தால், இணைப்புக்குப்பின் இவற்றுக்குப் பதிலாக இன்னும் பெரிய பன்னாட்டுக் கார்ட்டெல்கள் ஏற்பட்டு மேலும் திறம்பட உற்பத்தியைச் சுருக்கி விலைகளை உயர்த்தக்கூடும். அப்படி ஏற்படுமாயின் அந்தப் பிராந்தியத்தில், சுங்க இணைப்போ, முழுப் பொருளாதார இணைப்போ எது ஏற்பட்டாலும், நாடுகள் அனைத்தும் ஒரு பொதுக் கொள்கையைக் கடைப்பிடித்து இதைத் தடுத்தால்தான் மக்களது நலன் பாதுகாக்கப்படும்.

2. **அளவுச் சிக்கனங்கள்** (Economies of scale): கடந்த சில ஆண்டுகளில் செய்யப்பட்ட பல ஆராய்ச்சிகள்[4] அங்காடி அளவுக்கும் உற்பத்தித் திறனுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதைக் காட்டுகின்றன. இவ்விரண்டுக்கும் காரண-காரணி தொடர்பு இருப்பதைப் பல வழிகளில் காணலாம். அங்காடி அளவு பெருகுவதால் பெரிய அளவு உற்பத்தி செய்வதனுல் சிக்கனங்கள் ஏற்படுவதிலும், புறச் சிக்கனங்களிலும், தொழில்நுட்ப மாறுதலே அது தூண்டுவதிலும், முதலீடு செய்யப்படும் வேகம் அதிகரிப்பதிலும் இத் தொடர்பைக் காணலாம். அளவுச் சிக்கனங்களைப் பொறுத்தவரை, ஒரே ஒரு பெரிய அளவுத் தொழிலை நிறுவுவதானுலும்கூட அது சிறியதோர் அங்காடியிலிருப்பதைவிடப் பெரியதோர் அங்காடியில் நிறுவப்பட்டால் அதனுல் ஏற்படக்கூடிய நஷ்ட பயம் குறைவு. இவ்வாறு பெரிய உற்பத்தியைச் செய்யக்கூடிய தொழில்கள் ஒன்றன்று, பல உள்ளன.

பெரிய அளவு உற்பத்தியினுல் ஏற்படும் சிக்கனங்கள், அதாவது அளவுச் சிக்கனங்கள், விலை உயர்ந்த சிறப்புத் தேர்ச்சியுடைய சாதனங்களைப் பயன்படுத்துவதாலும், சிறப்புத் தேர்ச்சி பெற்ற உழைப்பாளிகளைப் பயன்படுத்துவதாலும், சரக்கு இருப்புகளிலும் பெரிய அளவில் பொருள்களை அனுப்புவதாலும் செலவு மிச்சப்படுவதாலும், உற்பத்தி அல்லாது ஆராய்ச்சி, திட்டமிடுதல் போன்ற பணிகளுக்குச் செலவாகும் தொகைகளின் விகிதம் குறைவாக இருப்பதாலும் இதுபோன்ற வேறு சில காரணங்களாலும் ஏற்படுகின்றன என்பதைப் பார்த்தோம் (எட்டாம் அத்தியாயம்.) இச் சிக்கனங்களை எல்லா இடங்களிலும் அடைந்துவிடமுடியாது. கடந்த சில ஆண்டுகளில் ஜெர்மனி, அமெரிக்கா, நியூஜீலண்டு நாடுகளின் தொழிற்சாலைகளை ஆராய்ந்ததில் எவ்வளவுக்கெவ்வளவு தொழிற்சாலை பெரியதாக உள்ளதோ அவ்வளவுக்கு உற்பத்தித் திறன் அதிகமாகிறது என்று பார்த்த தொழில்களில் கணிசமான அளவில் காணப்பட்டது.[5] உதாரணமாக, அமெரிக்காவில் தேனிரும்பு, சுத்தம் செய்யாத பெட்ரோலியம், சர்க்கரை, காகிதம், மின்சாரம், பாலேடு இவற்றின் உற்பத்தியில் அளவுச் சிக்கனங்கள் காணப்பட்டன. ஆனுல், உரம் (fertilizers), ரொட்டி பிஸ்கட்டுகள், டயர்கள் ஆகியவற்றின் உற்பத்தியில் அவை காணப்படவில்லை, அல்லது அதிகமாகக் காணப்படவில்லை.[6]

3. **புறச் சிக்கனங்கள்:** அங்காடியின் அளவு அதிகமாகும்போது, தொழிற்சாலைக்கு வெளிப்புறமாகச் சில சிக்கனங்கள் தோன்றக்கூடும்.

[4] மேற்கோள் காட்டப்பட்ட பலாஸாவின் (Balassa) நூலில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. பக்கங்கள் 109-112.

[5] அதே நூல், பக்கம் 126.

[6] அதே நூல், பக்கம் 128.

தொழில் வளர்ச்சி ஏற்பட்ட இடத்தில் தேர்ச்சி பெற்ற தொழிலாளிகளும் நிர்வாகத் திறமை பெற்றவர்களும் நிறைய சேருவதால் தொழில்நுட்ப அறிவு பரவவும் வளரவும் வழி உண்டாகிறது. ஒரு தொழில் வளருவதனுல் அதற்குப் பொருள்களை அளிப்பவர் தம் தொழிலில் சிக்கனமான பெரிய அளவு உற்பத்தி முறைகளைக் கையாளலாம். அல்லது தனது தொழிலிலேயே மேலும் சிறப்புத் தேர்ச்சியை ஏற்படுத்தலாம். அல்லது சிறப்பாக பாகங்களை உற்பத்தி செய்ய வேறு விசேஷமான கம்பெனிகளுக்கு மீண்டும் உப-ஒப்பந்தங்களை (sub-contracts) அளிக்கலாம். இவற்றின்மூலமும் சிக்கனங்கள் விளையும்.

4. **மேலும் வேகமான தொழில்நுட்ப முன்னேற்றம் :** விற்பனை பெருகும்போது சில தொழில்களிலாவது அளவுச் சிக்கனங்கள் ஏற்படுகின்றன என்பதைப் பார்த்தோம். இந்தத் தொழில்களில் பெரிய நிறுவனங்கள் விற்பனையில் தங்கள் பங்கைப் பெருக்கிக்கொள்ளும். பெரிய நிறுவனங்கள் நிறைய ஆராய்ச்சி செய்யமுடியும். அவற்றின் நிதி வசதியும் அதிகம். மூலதன அங்காடியினின்று அது நிறையப் பணம் பெறமுடியும். அது நீண்ட காலத்தை எதிர்நோக்கிச் செயலாற்றமுடியும். இவையெல்லாமும் சேர்ந்து, நிறையப் பணம் செலவு செய்து ஆராய்ச்சியில் பெரிய நிறுவனங்களை ஈடுபடச் செய்கின்றன.[7] இதனுல் தொழில்நுட்ப முன்னேற்றம் மேலும் துரிதமாகும். தவிர, ஒரு பெரிய பொருளாதாரத்தில் பெரிய உற்பத்தியாளர்கள் நிறைய இருந்து அவர்கள் ஆராய்ச்சிக்காக நிறைய செலவழித்தால், அப் பெரிய பொருளாதாரத்தில் மேலும் பல துறைகளில் புதிய கண்டுபிடிப்புகள் ஏற்படும். அவற்றை உபயோகித்துத் தொழில்நுட்ப வளர்ச்சி பெருக அதன் அளவு காரணமாக அப் பொருளாதாரத்தில் வாய்ப்புகளும் அதிகமாக ஏற்படுகின்றன.

5. **முதலீடு :** இதற்கு முந்திய பக்கங்களில் குறிப்பிட்டதுபோல ஒரு பொருளாதார இணைப்பினுல் உற்பத்தித் திறனை உயர்த்தச் சாதகமான விளைவுகள் ஏற்படுமானுல், வருமானங்கள் உயரும். சேமிப்புகள் அதிகமாகும். மொத்த முதலீட்டின் அளவும் அதிகரிக்கும். வருமானத்தில் மேலும் அதிகமான விகிதம் சேமிக்கப்பட்டு முதலீடு செய்யப்படுவதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். உதாரணமாக இணைப்பு நாடுகளுக்குள் வாணிபம் பெருகுவதாலும் அவ் வாணிபம் திடநிலையில் இருப்பதாலும் நம்பிக்கை மேலும் அதிகமாக இருப்பதால் சேமிப்பு அதிகரிக்கிறது. திறன் குறைந்த நிறுவனங்கள் நீக்கப்படுவதாலும் அவற்றின் திறன் உயருவதாலும் முதலீட்டின் சராசரி உற்பத்தித் திறன் அதிகரிக்கிறது. அதனுலும் சேமிப்பும் முதலீடும் அதிகமா

7 அதே நூல், பக்கங்கள் 174-5.

கின்றன. முதலீட்டில் பெரும்பகுதி பெரிய அளவுள்ள, உற்பத்தித் திறன் அதிகமாக உள்ள சாதனங்களில் முதலீடு செய்யப்படுவது மற்றொரு காரணம்.

இணைந்த ஒரு சமுதாயத்தின் சேமிப்புகளும் முதலீடும் அதிகமாவதோடு வெளிநாட்டு நிதிகளும் அதை நோக்கி வருகின்றன. ஏனெனில், அங்குப் பெருகியுள்ள அங்காடியில் உற்பத்தி செய்வதும் விற்பதும் மேலும் இலாபகரமாக உள்ளன; அங்குப் பொருளாதார வளர்ச்சியின் வேகமும் அதிகமாகி உள்ளது. இதற்கு உதாரணமாக 1950-ல் $ 637 மிலியனிலிருந்து 1959-ல் $ 2,194 மிலியனாக ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயத்தில் அமெரிக்காவின் நேரிடை முதலீடு உயர்ந்ததைக் குறிப்பிடலாம்.[8]

## அகில உலகக் கொள்கையும் பிராந்தியக் கொள்கையும்
## (Multilateralism versus Regionalism)

ஓர் அகில உலகப் பலமுக வாணிப அமைப்பை மீண்டும் ஏற்படுத்துவதில் செய்யப்பட்ட முன்னேற்றத்தை இதற்கு முந்திய அத்தியாயங்களில் பல இடங்களில் குறிப்பிட்டோம். முக்கியமான முன்னேற்றமாகக் கூறவேண்டியவை பின்வருவன: பிரதான வாணிப நாடுகள் கோட்டா கட்டுப்பாடுகளைப் பெரும் அளவு குறைத்ததும், அவர்களுடைய செலாவணிகள் மீண்டும் மாற்றுரிமை பெற்றதும், இறக்குமதி வரிகளைக் குறைக்கவும் தகராறுகளை மத்தியஸ்தம் செய்யவும் இறக்குமதி வரி, வாணிபப் பொது ஒப்பந்த நிறுவனம் இடைவிடாது முயன்று வெற்றி பெற்று வருவதும், இத்தகைய முன்னேற்றங்கள் மேலும் மேலும் வாணிபத்தில் தடைகள் நீங்கி, அதேசமயம் ஐரோப்பாவிலும் ஜப்பானிலும் மீட்சி ஏற்பட்டு உற்பத்தி பெருகியதும், உலக வாணிபத்தின் அளவும் மதிப்பும் குறிப்பிடத்தக்கவாறு உயர்ந்தன. 30·1 எண்ணுள்ள பட்டியல் இதைத் தெளிவாகக் காட்டுகிறது.

1953-க்கும் 1961-க்கும் இடையே உலகப் பொருள் உற்பத்தி 35 சதவிகிதம் உயர்ந்தபோது உலக ஏற்றுமதிகளின் அளவு 73 சதவீதம், அஃதாவது இரு மடங்குக்குமேல் வேகமாக உயர்ந்தது. இவ்வாறு இந்த ஒன்பது ஆண்டுகளில் உலக வாணிபத்தில் புகும் உலக உற்பத்தியின் விகிதம் நிலையாக அதிகரித்து வந்திருக்கிறது. எனவே, உண்மையில் தடை நீக்கம் காரணமாக உலகவாணிபம் பெரிதும் வளர்ந்துள்ளது.

[8] *U.S. Business Investments in Foreign Countries*, Office of Business Economics, Department of Commerce (U.S. Government Printing Office, Washington, D. C., 1960), பட்டியல்கள் 1, 3.

**பட்டியல் 30·1. உலக வாணிபத்தின் மதிப்பு, விலை (அலகு மதிப்பு), அளவு, மற்றும் உலக உற்பத்தியின் அளவு (1953–61)**

| | 1953 | 1954 | 1955 | 1956 | 1957 | 1958 | 1959 | 1960 | 1961 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| உலக ஏற்றுமதிகளின் மதிப்பு[a] [ஆயிரம் மிலியன் டாலர்களில்; கப்பலேற்றுவதோடு அடங்கிய விலை (*f.o.b.*)] | | | | | | | | | |
| மொத்தம் ... ... ... | 77·6 | 82·3 | 90·8 | 100·5 | 108·8 | 104·8 | 113·1 | 125·9 | 131·3 |
| தொழிற்சாலை உற்பத்திகள்[b] ... | 35·0 | 38·0 | 44·0 | 49·8 | 54·5 | 54·1 | 59·6 | 67·8 | (70·8) |
| உலக ஏற்றுமதிகளின் அலகு மதிப்பு[c] (1953 = 100) | | | | | | | | | |
| மொத்தம் ... ... ... | 100 | 99 | 99 | 101 | 103 | 100 | 98 | 99 | 98 |
| தொழிற்சாலை உற்பத்திகள்[b] ... | 100 | 98 | 99 | 103 | 106 | 106 | 105 | 107 | 109 |
| உலக ஏற்றுமதிகளின் அளவு (1953 = 100) | | | | | | | | | |
| மொத்தம் ... ... ... | 100 | 107 | 118 | 128 | 136 | 135 | 149 | 164 | 173 |
| தொழிற்சாலை உற்பத்திகள்[b] ... | 100 | 111 | 127 | 138 | 147 | 146 | 162 | 181 | (186) |
| உலகப் பொருள் உற்பத்தியின் அளவு[c] (1953 = 100) | | | | | | | | | |
| எல்லாப் பொருள்களும் ... ... | 100 | 101 | 110 | 114 | 116 | 116 | 125 | 132 | 135 |
| சுரங்க வேலையும் தொழிற்சாலைகளும்[d] | 100 | 101 | 112 | 117 | 121 | 118 | 130 | 139 | 144 |

[a] அமெரிக்க ஐக்கிய நாட்டின் விசேஷ ஏற்றுமதிகளைச் சேர்க்காமல்.

[b] ஆதார உலோகங்கள் உட்பட.

[c] கிழக்கிந்திய வாணிபப் பிராந்தியத்தைச் சேர்க்காமல்.

[d] மதிப்புச் சேர்க்கப்பட்டது.

**மூலம்:** International Trade 1961 (The Contracting Parties to the General Agreement on Tariffs and Trade, Geneva, September, 1962.)

ஐரோப்பியப் பொருளாதாரச் சமூதாயத்தின் ஆறு நாடுகளுக் கிடையே வாணிபம் இதைவிட வேகமாக அதிகரித்ததும் இதேபோலக் குறிப்பிடத்தக்கதாகும். 1953-க்கும் 1961-க்கும் இடையே இந் நாடு களில் ஒன்றுக்கு ஒன்று அனுப்பிய ஏற்றுமதிகளின் மதிப்பு ஏறக்குறைய மும்மடங்கு ஆகியிருக்கிறது.[9] ஓரளவுக்கு இதற்குக் காரணம் ஐரோப்பா வில் பொருளாதார நடவடிக்கைகள் மிகவும் வேகமாக மீட்சி பெற்ற தாகும். ஆனால், அதன் பின்னர் பொதுச் சந்தை ஏற்படப் போவதை எதிர்பார்த்ததன் விளைவுகளும் உண்மையில் அஃது ஏற்பட்டதன் விளைவுகளும் ஏற்றுமதிகளை மேலும் அதிகரிக்கத் தூண்டின.

இனி நாடுகள் தனித்தனியாக, தத்தம் சுய தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளும் பிராந்தியத் தொகுதிகளாக ஐரோப்பியப் பொருளா தாரச் சமூதாயம், ஐரோப்பியத் தடையிலா வாணிபச் சங்கம், இலத்தீன் அமெரிக்கத் தடையிலா வாணிபப் பிராந்தியம், மத்திய அமெரிக்கப் பொதுச் சந்தை போன்ற பிராந்தியங்களாகப் பிரிந்து நிற்கப்போவதை இது முன்னதாகவே அறிவிக்கிறதா? இதற்கு விடை, அந்தப் பிராந்தியத் தொகுதிகள் புற இறக்குமதி வரிகளை எவ்வளவு அதிகமாக வைத்துள் ளன, பலமுகப்-பேச்சுவார்த்தைகளில் கலந்துகொள்ள எவ்வளவு தூரம் விரும்புகின்றன ஆகியவற்றைப் பொறுத்துள்ளது.

உதாரணமாக, தொழில் உற்பத்திப் பொருள்கள்மீது ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயம் விதிக்கும் இறக்குமதி வரிகள் மிதமான பாதுகாப்பை அளிப்பவையாக உள்ளன. ஆனால், விவசாயப் பொருள் களுக்கு உயர்ந்த குறிக்கோள் விலைகள் நிர்ணயிக்கப்பட்டால், மாறும் இறக்குமதி வரிகள் அதற்கு ஏற்றவாறு அதிகமாகவும் இறக்குமதிகளைச் சுருக்குபவையாகவும் இருக்கும். இதன் பயனாக மித சீதோஷ்ண மண்டல விவசாயப் பொருள்களில் நிறைய வாணிப வழிமாற்றம் ஏற்படக்கூடும். அல்லது சில பொருள்களின் ஐரோப்பிய உற்பத்தி மிகவும் அதிகமாக உலக உபரிப் பிரச்சினையை மேலும் தீவிரமாக்கக் கூடும்.

எதிர்காலம் எப்படி இருக்கும் என்பதற்கு, 1964-ல் நடக்கப் போகும் பொது ஒப்பந்தப் (GATT) பேச்சு வார்த்தைகள் ஒரு முதல் பரிசோதனையாக இருக்கும். இங்குப் பொதுச் சந்தையின் பிரதிநிதிகள் முதன்முறையாக அமெரிக்கப் பிரதிநிதிகள்மூலம் புதிய மாற்றியமைக் கப்பட்ட அமெரிக்க வாணிபக் கொள்கையோடு மோதப் போகிறார்கள்.

[9] அதிகமான வாணிபம் 197 சதவீதம். அந்தக் காலத்தில் விலைகள் அதிகம் மாறவில்லை; எனவே, வாணிபத்தின் அளவும் ஏறக்குறைய அதே அளவு அதிக மாயிற்று எனலாம். (தொழிற்சாலை உற்பத்திகளின் ஏற்றுமதிகளின் விலைகூட 9 சதவீதம்தான் உயர்ந்தது.)

அமெரிக்க வாணிபக் கொள்கையின் புது உருவை விளக்குமுன், நாம் 24ஆவது அத்தியாயத்தில் விட்ட இடத்திலிருந்து அஃது எப்படி வளர்ந்தது என்பதைப் பார்ப்போம்.

## அமெரிக்க இறக்குமதி வரிக் கொள்கை 1934–1962

1934 தொடங்கி அமெரிக்கா கையாண்ட இறக்குமதி வரிக் கொள்கையைச் சுருக்கமாகப் பின்வருமாறு கூறலாம்—ஏற்கெனவே அதிகமாக வளர்ந்திருந்த வரிகளைப் பேச்சு வார்த்தைகள்மூலம் குறைப்பது தான் அக் கொள்கை. அந்த ஆண்டு நிறைவேற்றப்பட்ட வாணிப ஒப்பந்தங்கள் சட்டம் அதன் பின் ஒவ்வோர் ஆண்டும் புதுப்பிக்கப் பட்டது. அதன்படி பிறநாடுகள் அதே போலச் சலுகை காட்டினால் அமெரிக்க ஜனாதிபதி இப்போது உள்ள இறக்குமதி வரிகளை 50 சதவீதம் வரை குறைக்கலாம். பல நாடுகளுடன் இருமுகப் பேச்சுவார்த்தைகள் அதன்படி நடந்தன. இத்தகைய பல சலுகைகள் பரிமாறிக் கொள்ளப்பட்டன. உச்சச் சலுகை-நாட்டுக் கொள்கையின் (most-favoured-nation principle) அடிப்படையில் இச் சலுகைகள் பிற நாடுகளுக்கும் விஸ்தரிக்கப்பட்டன. 1947-ல் இறக்குமதி வரிகளை இப்போதுள்ள புதிய அளவில் 50 சதவீதம் குறைக்க அதிகாரம் வழங்கப்பட்டது. 1956-ல் மேலும் இறக்குமதி வரிகள் 20 சதவீதத்துக்கு மேல் குறைக்கக்கூடாது என்று விதிக்கப்பட்டது.

அமெரிக்க இறக்குமதி வரிக் கொள்கையை வாணிப ஒப்பந்தங்கள் சட்டம் தீர்மானித்த இந்த 28 ஆண்டுகளில் அமெரிக்க இறக்குமதி வரிகளின் சராசரி அளவு மிகவும் குறைந்தது. சராசரி அளவு குறைந்ததற்கு இரு காரணங்கள் உண்டு. முதலாவது, பொருள்களின் விலை உயர்ந்தது. சில இறக்குமதி வரிகள் இன்ன பொருளுக்கு இவ்வளவு டாலர் என்று குறிப்பாக விதிக்கப்படுகின்றன. இறக்குமதிகளின் விலை உயர்ந்தபோது இந்தக் குறித்த அளவு வரிகளின் (specific duties) சதவீத அளவு குறைகிறது. மற்றொரு காரணம், இறக்குமதி வரிகள் வெட்டப்பட்டதாகும்.[10] இவ்வாறு 1934-ல் வரி செலுத்திய இறக்குமதிகள்மீது விதிக்கப்பட்ட சராசரி வரி அவற்றின் மதிப்பில் 46·7 சதவீதம். 1952 முடிவில், விலைகள் உயர்ந்துவிட்டதால் 1934-ல் வரிகள் அப்படியே இருந்தாலும் அவை 24·4 சதவீதமாகத்தான் இருக்கும். உண்மையில் இவ் வரிகளின் சராசரி வீதம் 12·2 சதவீதம்தான். எனவே, வாணிப ஒப்பந்தங்கள் அமெரிக்க இறக்குமதி வரிகளின் அளவைப் பாதியாகக்

10 உதாரணமாக, 1930ஆம் ஆண்டின் இறக்குமதி வரிப் பட்டியலில் பூண்டின் மீது குறிப்பாக விதிக்கப்பட்ட வரி இராத்தலுக்கு 1·5 சென்டுகள்: பொருளின் மதிப்பைப் பொறுத்து இவ் வரி 40 சதவீதம் ஆயிற்று. 1950-ல் பூண்டின் விலை உயர்ந்ததனால் 1·5 சென்ட் வரி, மதிப்பின்மீது (*ad valorem*) 22 சதவீதம் வரியாகத்தான் இருந்தது.

குறைந்துவிட்டன. 1952-க்கும் 1962-க்கும் இடையே வரி செலுத்திய இறக்குமதிகளின் மதிப்பில் செலுத்தப்பட்ட வரி சராசரியாக மேலும் குறைந்து சுமார் 12 சதவீதம் ஆயிற்று.

இது மிகவும் குறைவாகத்தான் தோன்றுகிறது. அதுவும் 1930–35ஒடு ஒப்பிட்டால் குறைவாகத்தான் இருக்கிறது. ஆனால், இது பல பொருள்களின் வரிகளின் சராசரி. சராசரியைக் கொண்டு நாம் ஏமாறக்கூடாது.[11] இச் சராசரியில் உண்மையில் இறக்குமதிகள்மீது விதிக்கப்பட்டவை எல்லாம்தான் அடங்கியுள்ளன. வெளி வாணிபத்தை உள்ளே வராமல் அடியோடு தடுக்கும் எல்லா வரிகளும் இதில் சேரவில்லை. அவற்றை இச் சராசரி நம் கண்ணில் படாமல் மறைத்து விடுகிறது. சராசரியில் சேர்க்கப்பட்ட சில வரிகள்கூட அதிகமாக இருந்தன. ஆனால், அவை வாணிபத்தைத் தடுக்கவில்லை. குறைவாக இருந்த சில வரிகள்கூட, பன்னாட்டு அடக்க விலை வித்தியாசங்கள் மிகக் குறைவாக இருந்ததால், அமெரிக்க உற்பத்தியாளர்களுக்கு நிறையப் பாதுகாப்பை அளித்தன. 1962-ல் இருந்த அமெரிக்க இறக்குமதி வரிகள் ஒரு மிதமான அளவுக்கு அமெரிக்கத் தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிக்கக்கூடியதாகத்தான் இருந்தது என்பது எல்லா நிபுணர்களும் கொண்ட அபிப்பிராயமாகும்.

மேலும், 1947-லிருந்து அமலிலிருந்த வாணிப ஒப்பந்தங்கள் சட்டத்தில் விலக்கு ஷரத்து (escape clause) ஒன்று இருந்தது. அதன்படி உள்நாட்டு உற்பத்தியாளர்களுக்கு, அவர்களைப் பாதிக்கக் கூடிய வெளிநாட்டுப் போட்டியிலிருந்து எப்போதும் பாதுகாப்பு அளிக்க முடிந்தது. ஒரு பொருளுக்கு இறக்குமதி வரிச் சலுகை கொடுத்த பின், ஓரளவுக்காயினும் அச் சலுகையின் காரணமாக, அப் பொருள் இறக்குமதியாகும் அளவு உண்மையிலேயே மிகவும் அதிகரித்ததனால், அல்லது உள்நாட்டு உற்பத்தியோடு ஒப்பிட்டால் (relative) மிகவும் அதிகரித்ததனால் அதனுடன் போட்டியிடும் உள்நாட்டுத் தொழிலுக்குப் பெரும் தீங்கு ஏற்பட்டதாகவோ, அல்லது ஏற்படக்கூடும் என்ற அபாயம் ஏற்பட்டுள்ளதாகவோ காப்புவரிக் கமிஷன் (Tariff Commission) கண்டுபிடித்தால், அச் சலுகையை மாற்றவோ, ரத்து செய்யவோ ஜனாதிபதிக்கு இச் சட்டம் அதிகாரமளிக்கிறது. "'ஒப்பிட்டால்' இறக்குமதி உயர்வு அதிகமாக இருந்தால்" என்று குறிப்பிடுவதனால், அமெரிக்கத் தொழில் உற்பத்தி அதிகமானால் கூட இறக்குமதிகள் அதைவிட வேகமாக அதிகரித்தால் மீண்டும் பாதுகாப்பு அளிக்க முடியும்.

[11] 1962-ல் அமெரிக்க இறக்குமதி வரிகள் 1 சதவீதத்திலிருந்து, ஏறக்குறைய 100 சதவீதம் வரை இருந்தன.

பின்னர் வாணிப ஒப்பந்தங்கள் சட்டம் விஸ்தரிக்கப்பட்டபோது ஒரே ஒரு பொருளை உற்பத்தி செய்பவர்களை 'ஒரு தொழில்' என விளக்கம் தரப்பட்டது. இதன் விளைவாக, பல பொருள்களை உற்பத்தி செய்யும் ஒரு தொழில், அவற்றுள் ஒன்றே ஒன்றில்மட்டும் வெளிநாட்டுப் போட்டி அதன் உள்நாட்டு உற்பத்தியோடு ஒப்பிட்டால் அதிகரித்தால்கூட, இறக்குமதி வரிச் சலுகையை நீக்கித் தனக்கு உதவ அரசாங்கத்துக்கு விண்ணப்பிக்கக்கூடிய அபத்தமான நிலை ஏற்பட்டது.[12]

இந்த விலக்கு ஷரத்தின்படி உள்நாட்டுத் தொழில்களுக்கு அளிக்கப்படும் பாதுகாப்போடு வேறு இரண்டு சட்டங்களும்கூடச் சேர்ந்து கொண்டன. ஒன்றன்படி, நாட்டுப் பாதுகாப்புக்கு அபாயம் ஏற்படும் அளவுக்கு இறக்குமதிகள் அதிகமானால், இறக்குமதி வரிச் சலுகையை வாபஸ் பெறலாம் அல்லது கோட்டாக்களை விதித்து இறக்குமதிகளைக் கட்டுப்படுத்தலாம் என்று ஜனாதிபதிக்கு அதிகாரம் வழங்கப்படுகிறது. இந்த ஏற்பாட்டின்படி கைக்கடிகாரங்களின் இறக்குமதிகள் கட்டுப்படுத்தப்பட்டன. நாட்டுப் பாதுகாப்புக்குக் கடிகாரங்கள் முக்கியம் தான் என்றாலும் அது பாதுகாக்கப்பட்ட ஒரு தொழிலினால்தான் அளிக்கப்பட வேண்டுமா என்பது தெளிவாகப் புரியவில்லை. இந்த நாட்டுப் பாதுகாப்புப்படி துணிமணிகளைப் பொருத்தி வைக்கும் பின்கள் (clothes pins) கூட இவ்வாறு பாதுகாக்கப்படுகின்றன. இவற்றுக்கும் நாட்டுப் பாதுகாப்புக்கும் நேரிடையான சம்பந்தம் இருப்பதாகத் தெரியவில்லை. இந்த ஏற்பாட்டைச் செய்யும் சட்டம் 1955-ன் தேசியப் பாதுகாப்புத் திருத்தச் சட்டம் (National Defense Amendment of 1955) வேலையின்மை அதிகமாவது, அரசாங்க வருவாய் குறைவது, மக்கள் தேர்ச்சி பெறுவதோ முதலீடோ பாதிக்கப்படுவது போன்று பொருளாதார நலனைப் பாதிக்கும் எந்த விளைவும் நாட்டுப் பாதுகாப்பைப் பாதிப்பதாக இச் சட்டம் விளக்கம் கூறுகிறது. உள்ளே பாதுகாப்புக் கொள்கை; அதை மூட நாட்டுப் பாதுகாப்பு என்னும் திரை. உள்ளே இருப்பது என்ன என்பதை எல்லாரும் அறிவர்.

இறுதியாக, 'அமெரிக்கப் பொருள்களை வாங்கு' சட்டம் ('Buy American' Act) ஒன்றும் உள்ளது. இஃது அமெரிக்கக் காங்கிரஸ் சபையால் அமெரிக்க உற்பத்தியாளர்களுக்கு முதற்சலுகை தர பெரு மந்தத்தின்போது நிறைவேற்றப்பட்டது. இதன்படி ஃபெடரல் அமைப்புகள் அரசாங்கக் கான்டிராக்டுகளை, வெளிநாட்டார் 6 சதவீத

12 தீங்கு நேர்ந்ததாகக் கண்டுபிடிக்கப்பட்டு இறக்குமதிச் சலுகை நீக்கம், பின்வரும் பல உற்பத்தித் தொழில்களில் ஒரே ஓர் உற்பத்தி விற்பனை பாதிக்கப்பட்டபோது செய்யப்பட்டது; ஏழிலிருந்து பதினேழுவரை கற்களைக் (jewels) கொண்ட கைக்கடிகாரங்கள்; ஃபிளாக்ஸ் (சணல்) துவாலைகள் (flax toweling); சேஃப்டி பின்கள் (safety pins); மருத்துவ உஷ்ணமானிகள், பூண்டு.

மாவது குறைத்து விலை கூறினாலொழிய, அமெரிக்க நிறுவனங்களுக்குத்தான் அளிக்கவேண்டும். (சில ஒப்பந்தங்கள் விஷயத்தில் இது 12 சதவீதமாகும்.)

சுருங்கக் கூறினால், வாணிப ஒப்பந்தங்கள் சட்டமும், இதனுடன் தொடர்புடைய பிற சட்டங்களும் சலுகைகளைப் பரிமாறுவதன்மூலம் அமெரிக்க ஏற்றுமதிகளை அதிகரிக்க முயன்றன. அதற்காகப் பேச்சு வார்த்தைகள் நடத்தியபோது, 1930–35-ல் இருந்த மிக அதிகமான இறக்குமதி வரிகளை அமெரிக்கா மிகவும் குறைத்தது; இருப்பினும், அயல்நாட்டுப் போட்டியைச் சமாளிக்கவேண்டிய பெரும்பாலான உள்நாட்டுத் தொழில்களுக்கு அமெரிக்கா தொடர்ந்து நல்ல பாதுகாப்பு அளித்தது. முக்கியமாக, அப் போட்டியினால் உள்நாட்டு உற்பத்தியாளர்களுக்கு ஒரு தீங்கும் நேராமல் பார்த்துக்கொண்டது. அப்படி ஏதாவது தீங்கு நேர்ந்தாலோ, நேரும் அபாயம் ஏற்பட்டாலோ அதற்கு நஷ்ட ஈடு கொடுப்பது அமெரிக்காவின் கொள்கை அன்று. அத்தகைய தீங்கோ, அபாயமோ நேராமல் தடுப்பதே அதன் கொள்கை.

## வாணிபப் பெருக்கச் சட்டம், 1962

1962-ல் காலம் தீர்ந்துபோன வாணிப ஒப்பந்தங்கள் சட்டத்தின் இடத்தில் ஒரு புதிய சட்டத்துக்கான யோசனைகளை ஜனாதிபதி கென்னடி காங்கிரஸ் சபையில் சமர்ப்பித்தார். இந்த யோசனைகள் புரட்சிகரமாக இல்லாவிடினும் அமெரிக்க இறக்குமதி வரிக் கொள்கையில ஒரு முக்கிய மாறுதல் எனக் கூறலாம். நீண்ட நாள் விசாரணைகளும் விவாதங்களும் நடந்தபின் அமெரிக்கக் காங்கிரஸ், இந்த யோசனைகளைப் பெரும்பாலும் ஒப்புக்கொண்டு 1962-ல் வாணிபப் பெருக்கச் சட்டத்தை (Trade Expansion Act) நிறைவேற்றியது.

இதற்கு முன் வந்த சட்டங்களுக்கும் இப் புதிய சட்டத்துக்கும் இரண்டு முக்கிய வித்தியாசங்கள்: இப் புதிய சட்டம், இறக்குமதி வரிகளைக் குறைக்கவும், நீக்கவும் கூட ஜனாதிபதிக்கு முன்னைவிட அதிகமான அதிகாரத்தை அளிக்கிறது; இதற்கு முன் வந்த சட்டங்கள் அயல்நாட்டுப் போட்டியால் உள்நாட்டுத் தொழில் பாதிக்கப்படுவதைத் தடுக்கும் எதிர்கணியக் கொள்கையை ஆதரித்தன; இந்தச் சட்டம், அப் போட்டியினால் பாதிக்கப்பட்ட தொழிலைத் திருத்தி அமைத்து வளர்க்க வழி செய்யும் நேர்கணியக் கொள்கையை ஆதரிக்கிறது.

### இறக்குமதி வரி குறைப்பு

இச் சட்டத்தின் அடிப்படைக் குறிக்கோள் இப்போதும் பேச்சு வார்த்தைகள் நடத்தி இறக்குமதி வரிகளைக் குறைப்பதுதான். இறக்கு

மதி வரிகளை வெட்டுவதற்கு மேலும் தாராளமான விதிகளைக் கொண்டிருப்பதால் இக் குறிக்கோளை அடைய முன்னைவிடத் தீவிரமாக முயல முடியும். இந்த அம்சத்தை இச் சட்டத்தின் நான்கு விதிகளில் குறிப்பாகக் காணலாம்.

1. 1962 ஜூலை 1 அன்று இருந்த விகிதத்தில் 50 சதவீதத்துக்கு, வெளிநாடுகளுடன் வாணிப ஒப்பந்தங்கள் செய்து கொள்வதன்மூலம், ஜனாதிபதி குறைக்கலாம். அந்தத் தேதிக்கு முன் வாணிப ஒப்பந்தங்கள்மூலம் பாதியாகக் குறைக்கப்பட்ட இறக்குமதி வரியை மேலும் பாதியாகக் குறைக்கலாம். இதுவரை குறைக்கப்படாத வரிகளையும் பாதியாகக் குறைக்கலாம்.

2. ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயத்துடன் வாணிப உடன்படிக்கை செய்துகொண்டு, அந்தச் சமுதாயமும் அமெரிக்காவும் இரண்டுமாக உலக வாணிபத்தின் மதிப்பில் 80 சதவீதத்துக்குமேல் அளிக்கும். எந்த வகைப் பொருள்களின்மீதும் இறக்குமதி வரியைக் குறைக்கவோ, நீக்கவோ ஜனாதிபதி செய்யலாம். இந்த முக்கியமான விதியின்படி பிரிட்டன் பொதுச் சந்தையில் சேர்ந்துவிடுமானால் சுமார் 30 வகைப் பொருள்கள் தடையின்றி இறக்குமதி ஆகும். இதில் பின்வரும் முக்கியமான பொருள்கள் அடங்கியுள்ளன: விவசாய எந்திரங்கள், விமானங்கள், கார்களும் பஸ்களும், உலோகங்கள்மீது வேலை செய்யும் எந்திரங்கள், ரப்பர் பொருள்கள், பல இரசாயனப் பொருள்கள். இப் பொருள்களை அமெரிக்கா அல்லது ஐரோப்பிய நாடுகள் அல்லது இரண்டும் திறம்பட உற்பத்தி செய்கின்றன. அமெரிக்கா, ஐரோப்பா இரு சாரார்களுக்கும் ஒருவர் அங்காடியில் தடையின்றி மற்றவர் விற்க வழி செய்வதன்மூலம் இப் பொருள்கள் பற்றிய பேச்சுவார்த்தைகள் வெற்றிபெற்றால் இரு சாராருக்கும் நல்லது.

பிரிட்டன் பொதுச் சந்தையில் சேராவிட்டால் இத்தகைய பொருள்களின் எண்ணிக்கை மிகவும் சுருங்கிவிடும். அவை அப்போது முக்கியமாக, விமானங்கள், தாவர எண்ணெய்கள், வாசனைத் தைலங்களோடு (perfumes) நிற்கும்.

3. இதே போன்ற சலுகையை ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயமும் காட்டினால் வெப்பமண்டல விவசாயப் பொருள்களும் காட்டு உற்பத்திகளும் குறைந்த வரி விதித்தோ, வரியில்லாமலோ இறக்குமதி செய்யலாம். பொதுச் சந்தையோடு சேர்ந்து சலுகை பெற்ற ஆஃப்ரிக்க நாடுகளல்லாத பிற வளர்ச்சி குறைந்த நாடுகளுடைய உற்பத்திகள் தொடர்ந்து பொதுச் சந்தையில் விற்பனை ஆக வழி செய்வதே இந்த ஏற்பாட்டின் நோக்கம்.

4. இறுதியாக, வாணிப ஒப்பந்தச் செயல்முறைமூலம் 5 சத வீதம் அல்லது அதற்குக் குறைவாக எந்த வரிகளையும் குறைக்கலாம்.

ஒரு வாணிப ஒப்பந்தத்தில் சலுகைகள் பரிமாறிக்கொள்வதற்காகப் பேச்சு வார்த்தைகளை மேற்கொள்ளுமுன் அத்தகைய சலுகைகளைக் கொடுப்பதனுல் அந்த இறக்குமதிகளுடன் போட்டியிடும் உள் நாட்டுத் தொழில் எப்படிப் பாதிக்கப்படும் என்பதைக் காப்பு வரிக் கமிஷன் (Tariff Commission) விசாரித்து ஜனுதிபதிக்கு யோசனை கூற வேண்டும். ஒரு பல இலாகாக் கமிட்டியின் (inter-agency committee) முன் விசாரணைகள் அதற்குப் பிறகு நடத்தப்படும். அதன் பிறகு பேச்சுவார்த்தைகளை ஒரு கமிட்டி நடத்தும். அந்தக் கமிட்டியில் பின்வரும் உறுப்பினர்கள் இருப்பார்கள்: வருவாய்கள் பற்றிய பாராளுமன்றச் சபைக் கமிட்டியின் (House Committee on Ways and Means) இரு உறுப்பினர்களும், நிதிபற்றிய செனட் கமிட்டியின் (Senate Committee on Finance) இரு உறுப்பினர்களும், ஜனுதிபதியால் நியமிக்கப்பட்ட வாணிபப் பேச்சுவார்த்தைகளுக்கான விசேஷப் பிரதிநிதி ஒருவரும் அக் கமிட்டியில் இருப்பார்கள். ஒரு வாணிப ஒப்பந்தத்தின்படி இறக்குமதி வரிகளை மாற்றுவது ஐந்தாண்டுகளில் படிப்படியாகச் செய்யவேண்டும். அப்போதுதான் எந்தவிதமான சீர்குலைவும் அதிகமாக ஏற்படாது.

நாம் முன்னர் பார்த்த 'விலக்கு ஷரத்து' (escape clause) அம்சங்களைப் போன்றவை, இறக்குமதி வரிச் சலுகைகளால் ஏற்படும் தீங்குபற்றிய ஏற்பாடுகளிலும் கொஞ்சம் சிறிய அளவில் காணப்படுகின்றன. தீங்குற்ற கட்சிக்காரர் இறக்குமதி வரி மாறுதல் கோரி விண்ணப்பிக்கலாம். அதன்மீது ஒரு காப்பு வரிக் கமிஷன் விசாரணை ஆரம்பிக்கிறது. 'வாணிப ஒப்பந்தங்களினுல் அளிக்கப்பட்ட சலுகைகளின் முக்கிய (major) காரணமாக', இறக்குமதிகள் அதிகரித்ததுதான் உள்நாட்டுத் தொழிலுக்கு மோசமான தீங்கு விளைவித்த அல்லது விளைவிக்கப்போகிற முக்கிய காரணமா என்பதைக் காப்பு வரிக் கமிஷன் தீர்மானிக்கவேண்டும. வேறு விதமாகச் சொன்னுல், தீங்கு மோசமாக இருக்கவேண்டும்; அதன் முக்கிய காரணம் இறக்குமதிகள் அதிகரித்ததாக இருக்கவேண்டும்; இறக்குமதிகள் அதிகமானது சலுகை கொடுத்ததனுல் இருக்கவேண்டும். பழைய விலக்கு ஷரத்தைவிட இது கடுமையாக வரையப்பட்டுள்ளது.

காப்பு வரிக் கமிஷன் இறக்குமதி வரிகளை உயர்த்தச் சொன்னுலுங் கூட அதன் யோசனையை ஜனுதிபதி ஏற்றுக்கொள்ள வேண்டியதில்லை. ஆனுல், காங்கிரஸ் சபைக்கு அந்த யோசனையைத் தான் ஏன் ஏற்கவில்லை என்பதை விளக்கவேண்டும். இரு சபைகளிலும் பெரும்பாலான வாக்குகள்மூலம் ஜனுதிபதியின் முடிவை ரத்துச் செய்யலாம்.

ஆனால், இறக்குமதி வரியை உயர்த்தினால், அது நான்கு ஆண்டுகள் வரையில்தான் அப்படி இருக்கலாம். ஆனால், ஜனாதிபதி அந்தக் காலத்தை நீட்டிக்கலாம். நாட்டு அக்கறைக்கு ஏற்றது என்று அவர் கருதினால் அதை அந்த நான்கு ஆண்களுக்குள்ளேயே முடித்தும் விடலாம்.

இறக்குமதி வரிகளை உயர்த்துவதன் இந்தக் கடுமையான நிபந்தனைகள் காரணமாக, முன்னர்விட இந்த வழியைக் கடைப்பிடிப்பது குறைவாகவே இருக்கும் என்று தோன்றும். இதற்கு முன் அவ்வளவு கடுமையாக இல்லாத நிபந்தனைகளின்படியே, டெமொக்ராடிக் நிர்வாகம், ரிபப்ளிகன் நிர்வாகம் இரண்டின்கீழிலுமே இறக்குமதி வரிகளை உயர்த்தினது மிகவும் அரிதாகவே கடைப்பிடிக்கப்பட்டது. எனவே, மற்றொரு மாற்றுவழியான 'திருத்த உதவி' (adjustment assistance)யைத்தான் மேலும் அதிகமாகப் பயன்படுத்தப்படும் வாய்ப்பு உள்ளது.

'திருத்த உதவி', என்பது, அயல்நாட்டுப் போட்டியினால் ஏற்படும் தீங்கைச் சரிசெய்யப் புதிய நல்லதொரு கொள்கையை அரசாங்கம் மேற்கொள்ள விரும்புவதைக் காட்டுகிறது. வெளிநாட்டுப் போட்டி என்பது உள்நாட்டுப் போட்டியைப் போன்றதே என்று அக் கொள்கை கருதுகிறது—இரண்டு போட்டிகளும் மாறுதலின் விளைவு, உற்பத்தித் திறன் உயர ஊக்கமளிக்கும் வழிகள். மாறுதலைச் செய்யாது மந்தமாக இருக்கும் போட்டியாளர் பாதிக்கப்பட்டுத் தீங்கடைவது தவிர்க்க முடியாதது. அதைத் தடுக்காமல் வரவேற்க வேண்டும். இறக்குமதி வரிகளைப்பற்றிய தன் யோசனைகளைக் காங்கிரஸில் சமர்ப்பிக்கும்போது அதனுடன் பின்வருமாறு ஜனாதிபதி கென்னடி இந்தக் கொள்கையை விவரிக்கிறார் :

> 'உலக அங்காடியின் ஒழுங்கானது திறனுக்குச் சிறந்த ஓர் அளவு; திடநிலையை ஏற்படுத்தும் ஒரு சக்தி. உலக அங்காடியின் ஒழுங்கு முறையிலிருந்து அமெரிக்கத் தொழில்களைக் காப்பாற்ற முயன்றால் நம் உள்நாட்டு விலைகளின் அளவுக்கும், உலக விலைகளுக்கும் உள்ள தொடர்பை அறுத்து விடுவோம். அதனால் உள்நாட்டில் பணவீக்கம் ஏற்பட்டு, நமது ஏற்றுமதிகள் மேலும் குறையும் ; அதன் பிறகு மேலும் விருப்பமற்ற தீர்வு முறைகளை அரசாங்கம் கையாளவேண்டியிருக்கும்.'

ஆனால், இறக்குமதிவரி குறைப்பினால் அதிகமான வெளிநாட்டுப் போட்டிக்கும், நாமறிந்த உள்நாட்டுப் போட்டிக்கும் ஒரு பெரும் வித்தியாசம் உள்ளது. பின்னர் கூறியது நாம் சாதாரணமாகத் தினந்

தோறும் தொழில்துறையில் பார்ப்பது. இப்போது உள்ள நிறுவனங்களும் புதிதாகத் தோன்றுபவையும் அஃது இருப்பதை என்றும் மறக்கக் கூடாது. ஆனால், ஒரு தொழில் வெகுநாட்களாகப் பாதுகாக்கப்பட்டிருந்தபோது, தொழிலதிபர்கள், தொழிற்சாலைகள் போன்று மாற்ற முடியாத சாதனங்களில் பெரும் தொகைகளை முதலீடு செய்வார்கள்; வேறு தொழில்களில் பயன்படாத தேர்ச்சியை ஊழியர்கள் பெறுவார்கள். எனவே, நாட்டு அக்கறையை முன்னிட்டு, நெடுநாளாகக் கையாண்ட பாதுகாப்புக் கொள்கையை அரசாங்கம் மாற்றினால், அதனால் ஏற்படும் தீங்கை நீக்கும் பொறுப்பை அஃது ஏற்கவேண்டும். 'திருத்த உதவி' பற்றி 1962-ன் வாணிபப் பெருக்கச் சட்டத்தில் உள்ள ஏற்பாட்டின் அடிப்படை இந்தப் பொறுப்புதான். உள்ள நிலைமையை அப்படியே வைத்திருக்காமல், சாதனங்களின் இடப்பெயர்ச்சியைத் தூண்டி அவை மேலும் திறம்படப் பயன்படுமாறு செய்து அதிகரித்த போட்டிக்கு ஏற்ப உள்நாட்டுத் தொழில்கள் திருந்த அரசாங்கம் உதவவேண்டும்.

இந்தப் புது இறக்குமதி வரிச் சட்டப்படி, நிறுவனங்களுக்குமட்டுமன்றி அவற்றின் ஊழியர்களுக்கும் பலவகைகளில், திருத்த உதவி தரப்படலாம். நிறுவனங்களுக்கு, நிர்வாகம், விற்பனை, அமைப்பு, ஆராய்ச்சி, வளர்ச்சி போன்றவற்றில், தொழில்நுட்ப உதவியை ஏற்கெனவே உள்ள அரசாங்க இலாக்காக்களோ, தனியார்துறை ஆலோசகர்களோ தரலாம். நிலம், தொழிற்சாலை, எந்திரங்கள் ஆகியவற்றை வாங்கவும், நடப்பு மூலதனத்துக்காகவும் 25 ஆண்டுக் காலத்தில் திருப்பித்தருமாறு கடன்களைக் கொடுத்தோ, அத்தகைய கடன்களுக்கு ஜாமீன் நின்றோ அரசாங்கம் நிதி உதவி செய்யலாம். இறுதியாக, வரிகள் விஷயத்திலும், நஷ்டங்களைப் பழைய இலாபங்களிலோ, இனி வரும் இலாபத்திலோ கழிக்க வழிசெய்து வரியைக் குறைக்கவும் அரசாங்கம் உதவலாம். இறக்குமதி வரிச் சலுகைகள் காரணமாக ஏதாவதோர் ஆண்டில் நஷ்டங்கள் ஏற்பட்டால் அதற்கு முந்திய ஐந்து ஆண்டுகளில் ஏற்பட்ட இலாபத்தில், இலாபம் ஏற்பட்டிருந்தால், அதைக் கழித்து வரியைக் குறைவாகக் கட்டலாம். அல்லது இந்த நஷ்டங்களை அடுத்துவரும் ஐந்து ஆண்டுகளில் ஏற்படும் இலாபங்களில் கழித்துக் குறைவாக வரி கட்டலாம்.

இறக்குமதி வரிச் சலுகைகள் காரணமாக வேலையை இழக்கும் தொழிலாளிகள் மூவகை உதவியைப் பெறுகிறார்கள். 'வாணிப மறுதிருத்தப் படிகளை' (trade readjustment allowances) 52 வாரங்களுக்கு அவர்கள் பெறலாம். இத் தொகை சராசரி வாராந்திர உற்பத்திக் கூலியில் 65 சதவீதத்துக்குச் சமமாக இருக்கும். அரசாங்கச் செலவில் இவ்வூழியர்கள் வேறு தொழிலில் சேர மறு பயிற்சி பெறுவார்கள். அவர்கள் வாழுமிடத்தில் தகுந்த வேலைகள் இல்லாவிட்டால்

வேலை கிடைக்கும் இடத்துக்கு அவர்கள் போகும் செலவையும் அரசாங்கம் ஏற்றுக்கொள்ளும்.

நெருக்கடி நிலைமைகளில், திருத்தத்துக்கான உதவி ஏற்றதல்ல என்று ஜனாதிபதி கருதும்போது அயல்நாடுகளுடன் பன்னாட்டு ஒப்பந்களை அவர் செய்து, இறக்குமதி அதிகமாவதால் அமெரிக்காவில் மோசமாகத் தீங்கு அடைந்த (அல்லது அடையும் போலிருக்கிற தொழில்கள் உற்பத்தி செய்யும் பொருள்கள் அவ் வெளிநாடுகள் ஏற்றுமதி செய்வதைக் கட்டுப்படுத்துமாறு செய்யலாம். நாட்டுப் பாதுகாப்பைப் பற்றியும் சில ஏற்பாடுகள் (பிரிவு 232) இந்தச் சட்டத்தில் உள்ளன. நிர்வாகம் பாதுகாப்பை மிகவும் விரும்புவதாக இருந்தால் இச் சட்டதின் அடிப்படையான தாராள மனப்போக்கை எதிர்த்து இவ் விதிகளை உபயோகிக்க முடியும். முன்னர் விளக்கம் கூறப்பட்டதுபோலவே, நாட்டுப் பாதுகாப்பு என்பதில், 'பொருளாதார நலனும்' அடங்கியதாகக் கருதப்படுகிறது. ஆனால், கொடுக்கப்பட்ட சலுகைகளை ஜனாதிபதி வாபஸ் பெற வேண்டியதில்லை. நாட்டுப் பாதுகாப்பு அக்கறைகள் பாதிக்கப்படுவதாக ஜனாதிபதி முடிவு செய்தால், 'அந்தப் பொருள் அல்லது அதிலிருந்து செய்யப்படுவனவற்றை இறக்குமதி செய்வதால் நாட்டுப் பாதுகாப்பு பாதிக்கப்படாதவாறு அவற்றின் இறக்குமதிகளின் அளவைக் குறைக்க எந்த நடவடிக்கையை, எத்தனை ஆண்டுகளுக்கு மேற்கொள்வது அவசியமெனக் கருதுகிறாரோ அந்த நடவடிக்கையை அவ்வளவு காலத்துக்கு மேற்கொள்ளலாம்.' இந்த ஷரத்து இந்தச் சட்டத்தின் தெளிவான குறிக்கோளைப் பயனற்றதாக்கி விடுமா அல்லது நாட்டுப் பாதுகாப்புக்கு அவசியமான வழியாகச் செயல்படுமா என்பது சந்தர்ப்பங்களைப் பொறுத்தது. காத்திருந்து பார்த்தால்தான் தெரியும்.

## முடிவுரை

உலக வாணிபத்தைப் பேச்சு வார்த்தைகள் மேற்கொண்டு தாராளமாக வளரச்செய்து மிகப் பெரிய அளவுடையதாக்கத் தேவையான வழியை அமெரிக்க அரசாங்கத்துக்கு வாணிபப் பெருக்கச் சட்டம் அளித்திருக்கிறது என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால், அமெரிக்க அரசாங்கத்தால் அதைச் செய்ய முடிகிறதா என்பது, தான் ஏற்றுக்கொண்ட கொள்கைகளை அது கடைப்பிடிக்கிறதா என்பதையும் ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயமும் சுதந்திர உலகின் பிற நாடுகளும் இவ் விஷயத்தில் எவ்வாறு நடக்கின்றன என்பதையும் பொறுத்தது. சமுதாய நாடுகளே இதுபற்றி ஒரே அபிப்பிராயத்தைக் கொண்டில்லை. அதன் தலைவர்களில் சிலர் தம் நோக்கை வெளியே பாய விடுகின்றார்கள்; இறுதியில் ஆறு நாடுகளும் அரசியல் துறையில் இணையவேண்டும் என்பதை ஒப்புக்கொண்டாலும், ஓர் உயர்ந்த

இறக்குமதி வரிப் பாதுகாப்புக்குப் பின் ஒளிந்துகொண்டு ஐரோப்பியச் சமுதாயத்தைப் பிற நாடுகளினின்று பொருளாதாரத் துறையில் தனியாக வைத்திருக்க அவர்கள் விரும்பவில்லை. பிற தலைவர்கள் பொருளாதார இணைப்பை முக்கியக் குறிக்கோளாகக் கருதுகிறார்கள். உறுப்பு நாடுகள்மட்டுமே அதன் பலனை அனுபவிக்கவேண்டும் என்பது அவர்களது அவா. எங்கு அமெரிக்காவின் ஆதிக்கம் தம்மீது படருமோ என்ற பயம், தன் நாடு சொற்படியே பிற எல்லோரும் நடக்க வேண்டும் என்ற உணர்ச்சி, உலகத்தில் நாடுகளின் அதிகாரத்தில் ஒரு சமநிலையை ஏற்படுத்த ஐரோப்பா ஒரு 'மூன்றாவது சக்தியாக' (third force) வளரவேண்டும் என்ற ஆசை, இவையெல்லாம் அமெரிக்காவைப்பற்றியும், பிரிட்டனைப்பற்றியும் பிற மேற்கு ஐரோப்பிய நாடுகளைப்பற்றியும், சுதந்திர உலகம் முழுவதையும்பற்றி ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயம் கொண்டிருக்கும் எண்ணத்தை நிர்ணயிக்கின்றன. இதுபோன்று எண்ணம், அக்கறைகளில் வித்தியாசம் பிற பிராந்தியங்களிலும், முக்கியமாக இலத்தீன் அமெரிக்காவில் உள்ளன. ஐரோப்பாவில் ஏற்படுவதெல்லாம் இந் நாடுகளின் மனப்போக்கையும் நிறைய பாதிக்கின்றன. இந்தக் கருத்து முரண்பாடெல்லாம் ஒரு வழியாகத் தீர்க்கப்பட்டால்தான் இனி உலகம் சுதந்திரமான பலமுக வாணிபத்தைப் பெற்று, எல்லா நாடுகளும் எல்லா நாடுகளிலும் விற்கச் சம வாய்ப்புப் பெறும் நிலை ஏற்படுமா, அல்லது உலகம் தம் தேவைகளைத் தாமே பூர்த்தி செய்துகொள்ளும் பல பிராந்தியத் தொகுதிகளாகப் பிரிந்திருக்குமா என்பது தெரியும்.

## பார்வைக்குரிய சில நூல்கள்

Balassa, Bela, *The Theory of Economic Integration*. Homewood, Ill.: Richard D. Irwin, Inc., 1961. பொருளாதார இணைப்பின் மாறுநிலை விளைவுகளையும், வளர்ச்சி விளைவுகளையும் பற்றியும், இணைப்பினால் எழும் கொள்கைப் பிரச்சினைகளையும் பயனுள்ள வகையில் விளக்குகிறது.

Humphrey, Don D., *American Imports*. New York: The Twentieth Century Fund, 1955. அமெரிக்க இறக்குமதிகளைப் பொறுத்தவரை அமெரிக்க வாணிப ஒப்பந்தங்கள் ஏற்பாட்டை விவரமாக ஆராய்கிறது.

———, *The United States and the Common Market*. New York: Frederick A. Praeger, 1962 (paperback). இதற்கு முன் கூறிய நூலில் உள்ள பல விஷயங்களைச் சமீப மாறுதல்களோடு விவரிப்பதோடு, அமெரிக்க ஐக்கிய நாட்டுக்கும் பொதுச் சந்தைக்கும் இடையே உள்ள வாணிபத் தொடர்பையும் ஆராய்கிறது.

Meade, J. E., *Problems of Economic Union.* London: George Allen & Unwin, Ltd., 1953. சுருக்கமான, சாதாரண மக்கள் புரிந்துகொள்ளக்கூடிய நூல்.

——, *The Theory of Customs Unions.* Amsterdam: North Holland Publishing Co., 1955. சுங்க இணைப்புகளின் மாறுநிலை விளைவுகள்பற்றிய சிறந்ததோர் ஆராய்ச்சி.

Commission on Foreign Economic Policy, *Staff Papers.* Washington, D. C.: Government Printing Office, 1954. அமெரிக்க வாணிபக் கொள்கையின் சிறப்பான பல அம்சங்களைப் பயனுள்ள வகையில் 4 முதல் 9 வரை அத்தியாயங்கள் விளக்குகின்றன.

Sannwald, Rolf E. and Jacques Stohler, *Economic Integration.* Princeton, N. J.: Princeton University Press, 1959. தடையிலா வாணிபக் கோட்பாட்டையும் பிராந்திய வாணிபக் கோட்பாட்டையும் ஒப்பிடுகிறது; இணைப்பு முறைகளை விவரிக்கிறது, பொருளாதார இணைப்புகளின் பண, நிதிக்கொள்கைகளை ஆராய்கிறது.

Scitovsky, Tibor, *Economic Theory and Western European Integration.* Stanford, Calif.: Stanford University Press, 1958. இணைப்பினால் வளர்ச்சிபற்றிய அம்சங்களை அழகாகக் கூறுகிறது.

United States Congress, Senate Committee on Commerce, *The United States and World Trade,* 87th Congress, 1st sess. Washington, D. C.: Government Printing Office, 1961. அமெரிக்காவின் வாணிபக் கொள்கையின் குறைகளைப்பற்றியும், அதை மாற்றவேண்டிய அவசியத்தைப்பற்றியும் ஆராய்கிறது.

United States Congress, Joint Economic Committee, *Factors Affecting the United States Balance of Payments,* 87th Congress, 2nd sess. Washington, D. C.: Government Printing Office, 1962. பொதுச் சந்தையால் அமெரிக்க ஏற்றுமதிகள் எப்படிப் பாதிக்கப்படுகின்றன என்பதைப்பற்றி க்ரேவிஸ் (Kravis), க்ராஸ் (Krause), மார்க்ஹாம் (Markham), கிண்டில்பெர்கர் (Kindleberger) ஆகியோர் கூறியிருப்பதை இரண்டாம் பாகத்தில் பார்க்கவும்.

## கலைச்சொற்கள்

### (ஆங்கிலம்—தமிழ்)

### A

| | | |
|---|---|---|
| Absorption | — | உறிஞ்சுதல் |
| Acceptance | — | ஏற்பு, ஒப்பு, உண்டியல் |
| Adjustable peg | — | முளைமாற்றியடிக்கும் முறை |
| Adjustment | — | திருத்தம், சீரமைவு |
| Aggregate demand | — | மொத்தத் தேவை |
| Aid | — | உதவி |
| Amortization | — | கடன் தீர்த்தல் |
| Appreciation | — | மதிப்பேற்றம் |
| Arbitrage | — | ஆர்பிட்ரேஜ் |
| Asset | — | சொத்து |
| Assimilate | — | ஏற்றுக்கொள் |
| Atlantic Community | — | அட்லான்டிக் சமுதாயம் |
| Automatic | — | தானே இயங்கும் |
| Autonomous | — | தன்னிச்சையான |

### B

| | | |
|---|---|---|
| Balance | — | நிலுவை |
| Balance of payments | — | (அயல்நாட்டுச்) செலுத்துநிலை |
| Balance of power | — | வல்லரசுச் சமநிலை |
| Bargaining power | — | பேரத்திறன் |
| Bearer | — | கொணர்பவர் |
| Bearish | — | 'கரடி மனப்பான்மையோடு', 'கரடித்தனமான' |
| Bilateral | — | இருமுக |
| Bill | — | உண்டியல் |
| Bloc | — | பிராந்தியம், கூட்டணி, நாடுகளின் தொகுதி |
| Blocked | — | தடைப்பட்ட |
| Bond | — | கடன் பத்திரம் |
| Boom | — | பூரிப்பு |
| Bullish | — | 'எருது மனப்பான்மையோடு' |

### C

| | | |
|---|---|---|
| Cable | — | தந்தி |
| Capital | — | மூலதனம் |

Capital flight — மூலதன ஓட்டம்
Capital movement — மூலதன இடப்பெயர்ச்சி
Cheap money — மலிவான பணம்
Cheque — செக்கு
Clearing — தீர்வு
Collapse — சரிவு
Compensatory — ஈடுகட்டும்
Composite demand — கலப்புத் தேவை
Constant — மாருத
Consumption — நுகர்வு
Convertibility — மாற்றுரிமை
Corporate profits — கம்பெனி லாபம்
Counterpart — எதிரிணை
Correspondent — தொடர்புடைய
Credit (Cr.) — வரவு
Credit — கடன் (செலாவணி)
Crisis — நெருக்கடி
Critical value — மாறுநிலை மதிப்பு
Cross rate — எதிரின வீதம்
Current account — நடப்புக் கணக்கு, நடப்பு வைப்பு
Customs union — சுங்க இணைப்பு

D

Debit — பற்று
Deficit — பற்ருக்குறை
Deflation — பணச்சுருக்கம்
Demand — தேவை
Demand deposit — நடப்பு வைப்பு
Depreciation — மதிப்பிறக்கம், தேய்மானம்
Depression — மந்தம்
Determinant — தீர்மானிக்கும் காரணி
Devaluation — (செலாவணி) மதிப்பைக் குறைப்பது
Development — வளர்ச்சி
Discount — கழிவு, கழிவுசெய்
Discriminating — பேதம்காட்டும்
Disinflation — வீக்கநீக்கம்
Disintegration — இணைப்புச் சிதைவு
Distribution — பங்கீடு
Disturbance — உலைவு

Dividend — பங்கு ஈவு
Dollar shortage — டாலர் பற்றுக்குறை
Double entry — இரட்டைப் பதிவு (முறை)
Drawee — எழுதப்படுவோன்
Drawer — எழுதுபவன்
Dual — இரட்டை
Dumping — விற்பனைக் குவிப்பு
Dynamic effects — வளர்ச்சி விளைவுகள்

E

Economies of scale — அளவுச் சிக்கனங்கள்
Elasticity — நெகிழ்ச்சி
Equation — சமன்பாடு
Equilibrium — சமநிலை
Exchange equalization (or stabilization) — நாணயமாற்றுச் சமன்காப்பு
Expansion — விரிவு, பெருக்கம்
External economies — புறச்சிக்கனங்கள்

F

Factor — காரணி
Factor endowment — காரணிப்பேறு
Factor proportions — காரணி வீதாசாரம்
Federal Reserve System — ஃபெடரல் ரிசர்வ் அமைப்பு
Financial integration — நிதித்துறை இணைப்பு
Financing — நிதி ஏற்பாடு செய்தல்
Fiscal policy — அரசாங்க நிதிக்கொள்கை
Fixed — மாறாத
Flexible — மாறக்கூடிய, நெகிழ்ச்சியுள்ள
Fluctuations — ஏற்ற இறக்கங்கள், மாறுதல்கள்
Foreign exchange — அன்னியச் செலாவணி, நாணய மாற்று
Foreign exchange control — நாணயமாற்றுக் கட்டுப்பாடு
Foreign Exchange Market — நாணயமாற்று அங்காடி
Forward exchange — முன்நோக்கிய நாணயமாற்று
Free market — தடையற்ற அங்காடி
Free world — சுதந்திர உலகம் (கம்யூனிச நாடுகள் அல்லாதவை)
Full employment — முழு வேலைநிலை
Function — சார்பு

G

Gains from trade — வாணிபமாற்று லாபம்
Gold bullion system — பொன்கட்டித் திட்டம்
Gold exchange standard — பொன் மாற்றுத் திட்டம்
Gold export point — பொன் ஏற்றுமதி எல்லை
Gold import point — பொன் இறக்குமதி எல்லை
Gold standard — பொன் திட்டம்
Great Depression — பெருமந்தம்
Gross — மொத்த
Gross National Product (GNP) — நாட்டின் மொத்த ஆக்கம்

H

Hard currency — 'கடினச்' செலாவணி
Hedge — எதிர்காப்பு

I

Imperfect competition — நிறை குறைந்த போட்டி
Imperial preference — பேரரசுச் சலுகை
Independent — சுதந்திரமான ; தன்னியலான
Index number — குறியீட்டெண்
Individual — தனிநபர்
Individualism — தனியார் நலன் கொள்கை
Induced — தூண்டப்பட்ட
Infant industry — சிற்றிளந் தொழில்
Inflation — பணவீக்கம்
Infinite — அனந்தம், அளவில்லாமல்
Insulation — பாதுகாப்பு
Interaction — பின்னிய விளைவு
Internal economies — அகச்சிக்கனங்கள்
International economy — பன்னாட்டுப் பொருளாதாரம்
International Monetary Fund — பன்னாட்டுச் செலாவணி நிதி
Inventory — சரக்கு இருப்பு
Investment — முதலீடு
Invisible — புலனாகாத

K

Key industries — ஆதாரத் தொழில்கள்

L

Lag — பின்தங்குதல்
League of Nations — சர்வதேச சங்கம்

Letter of credit — கடன் கடிதம்
Liability — பொறுப்பு
Liquid — எளிதில் காசாக்கக்கூடிய
Liquidity — நீர்மை
Longterm — நெடுங்கால
Luxury — ஆடம்பரப் பொருள், போகப் பொருள்

M

Marginal cost — இறுதிநிலைச் செலவு
Marginal propensity — இறுதிநிலை நாட்டம்
Marginal value — இறுதிநிலை மதிப்பு
Mint par — தங்கசாலைச் சமன்
Model — மாதிரி அமைப்பு
Monetary policy — செலாவணிக் கொள்கை, பணக் கொள்கை
Monetary reform — செலாவணிச் சீர்திருத்தம்
Money income — பண வருமானம்
Monopoly — சர்வாதீனம்
Moratorium — தவணை நீடிப்பு
Most favoured nation — உச்சச் சலுகை நாடு
Multilateral — பலமுக, பன்முக
Multiple — பல
Multiplier — பெருக்கி

N

National Account — நாட்டுக் கணக்கு
National income — நாட்டு வருமானம்
Nationalism — நாட்டுப் பற்று
Negative — எதிர்கணியமான
Net — நிகர
Neutralize — பயனற்றதாக்கு

O

Official — அதிகாரபூர்வமான
Overvaluation — மிகை மதிப்பீடு

P

Payee — பெறுவோன்
Payment — செலுத்தல்
Peg — முளை

Per capita income — தலா வருமானம்
Perfect competition — நிறைந்த போட்டி
Perverse — நெறி கோணிய
Positive — நேர்கணிய
Price support — விலை ஆதரவு
Private — தனிப்பட்ட, தனியார்
Prosperity — செழுமை, சுபீட்சம், வளமை
Purchasing power — வாங்கும் சக்தி
Purchasing power parity — வாங்கும் சக்திச் சமன்

Q

Quota — கோட்டா, அளவுக் கட்டுப்பாடு
Quotation — விலைப்புள்ளி

R

Rate — வீதம், விகிதம்
Real income — உண்மை வருமானம்
Recession — பின்னிறக்கம்
Reciprocal — பரஸ்பர, தலைகீழ்ப் பின்னம்
Reciprocal demand — பரஸ்பரத் தேவை
Reconstruction — புனரமைப்பு
Recovery — மீட்சி
Reform — சீர்திருத்தம்
Region — பிராந்தியம்
Relative — தாரதர, ஒப்பிட்ட
Reparations — நஷ்ட ஈட்டுத் தொகைகள்
Reserve — சேமநிதி
Resident — வாசி
Restraint — அடக்கம்
Reversal — நேர்மாறுதல்

S

Saving — சேமிப்பு
Security — பத்திரம்
Services — பணிகள், பணிவசதிகள்
Short term — குறுகிய காலம்
Sight bill — தரிசன உண்டியல்
Social overheads — சமுதாயப் பொது மூலதனம்
Soft currency — எளிய செலாவணி
Sovereign — சவரன்
Specialization — சிறப்பாக உற்பத்தி செய்தல், சிறப்புத் தேர்ச்சி

Specific duty — குறித்த அளவு வரி
Speculation — ஊகவாணிபம்
Spiral — ஏறும் சுழல்
Spot rate — உடனடி வீதம்
Stability — திடநிலை
Standard money — பிரமாண நாணயம்
Standby agreements — துணைநிற்கும் ஏற்பாடுகள்
Static — வளர்ச்சியற்ற
Staric effects — மாறுநிலை விளைவுகள்
Sterling area — ஸ்டர்லிங் பிராந்தியம்
Stock — கம்பெனி பங்கு, சரக்கு இருப்பு
Structure — அமைப்பு
Subsidiary — துணை நிறுவனம்
Subsidy — மானியம், பண உதவி
Substitute — மாற்றுப் பொருள்
Supply — அளிப்பு
Surplus — உபரி
Swap — பண்டமாற்று
Symmetry — செவ்வொழுங்கு

**T**

Tariff commission — காப்புவரிக்.கமிஷன்
Telegraphic transfer — தந்தி வழிமாற்று
Terms of trade — வாணிபமாற்று வீதம்
Time bill — தவணை உண்டியல்
Trade cycle — வணிகச் சுழல்
Transfer — மாற்றுகை
Transferable — மாற்றக்கூடிய
Transition period — மாறுதலுக்கான இடைக்காலம்
Treasury bill — கருவூல உண்டியல்

**U**

Underdeveloped — வளர்ச்சி குன்றிய
Unemployment — வேலை இன்மை
Unit — அலகு
United Nations — ஐக்கிய நாடுகள் அமைப்பு

**W**

Weighted average — எடையிட்ட சராசரி

## கலைச்சொற்கள்

### (தமிழ்—ஆங்கிலம்)

**அ**

அகச்சிக்கனங்கள் — Internal economies
அட்லாண்டிக் சமுதாயம் — Atlantic Community
(அயல்நாட்டுச்) செலுத்துநிலை — Balance of payments
அரசாங்க நிதிக்கொள்கை — Fiscal policy
அலகு — Unit
அளவுக் கட்டுப்பாடு — Quota
அளவுச் சிக்கனங்கள் — Economies of scale
அளிப்பு — Supply
அன்னியச் செலாவணி — Foreign exchange

**ஆ**

ஆதாரத் தொழில்கள் — Key industries
ஆர்பிட்ரேஜ் — Arbitrage

**இ**

இணைப்புச் சிதைவு — Disintegration
இரட்டைப் பொருளாதாரம் — Dual economy
இரட்டைப் பதிவு — Double entry
இருமுக வாணிபம் — Bilateral trade
இறுதிநிலைச் செலவு — Marginal cost
இறுதிநிலை நாட்டம் — Marginal propensity
இறுதிநிலை மதிப்பு — Marginal value

**ஈ**

ஈடுகட்டும் — Compensatory

**உ**

உச்சச் சலுகை நாட்டுக் கொள்கை — Most favoured nation principle
உடனடி வீதம் — Spote rate
உண்டியல் — Bill of exchange
உண்மை வருமானம் — Real income
உதவி — Aid

உபரி — Surplus
உலைவு — Disturbance
உறிஞ்சல் — Absorption

ஊ

ஊகவாணிபம் — Speculation

எ

எடையிட்ட சராசரி — Weighted average
எதிரிணை — Counterpart
எதிரின வீதம் — Cross rate
எதிர்கணிய — Negative
எதிர்காப்பு — Hedge
எருது மனப்பான்மை — Bullish tendency
எழுதப்படுவோன் — Drawee
எழுதுபவன் — Drawer
எளிதில் காசாக்கக்கூடிய சொத்து — Liquid asset
எளிய செலாவணி — Soft currency

ஏ

ஏற்பு, ஒப்பு — Acceptance

ஐ

ஐக்கிய நாடுகள் அமைப்பு — United Nations

க

கடன் கடிதம் — Letter of credit
கடன் (செலாவணி) — Credit (money)
கடன் பத்திரம் — Bond
கடினச் செலாவணி — Hard currency
கரடி மனப்பான்மை — Bearish tendency
கருவூல உண்டியல் — Treasury bill
கலப்புத் தேவை — Composite demand
கழிவு — Discount
காப்புவரிக் கமிஷன் — Tariff commission
காரணி — Factor
காரணிப்பேறு — Factor endowment
குறித்த அளவு வரி — Specific duty
குறியீட்டெண் — Index number
கொணர்பவன் — Bearer
கோட்டா — Quota

ச

| | |
|---|---|
| சமநிலை | — Equilibrium |
| சமன்பாடு | — Equation |
| சமுதாயப் பொது மூலதனம் | — Social overhead capital |
| சரக்கு இருப்பு | — Inventory, stock |
| சரிவு | — Collapse |
| சர்வதேச சங்கம் | — League of Nations |
| சர்வாதீனம் | — Monopoly |
| சவரன் | — Sovereign |
| சார்பு | — Function |
| சிறப்புத் தேர்ச்சி | — Specialization |
| சிற்றிளந் தொழில் | — Infant industry |
| சுங்க இணைப்பு | — Customs union |
| சுதந்திர உலகம் | — Free world |
| சுபீட்சம், செழுமை | — Prosperity |
| செக்கு | — Cheque |
| செலாவணி | — Money |
| செலாவணிச் சீர்திருத்தம் | — Monetary reform |
| (செலாவணி) மதிப்பைக் குறைப்பது | — Devaluation |
| செலுத்தல், செலுத்துகை | — Payment |
| செலுத்துநிலை | — Balance of payments |
| சேமநிதி | — Reserve |
| சேமிப்பு | — Saving |

ட

| | |
|---|---|
| டாலர் பற்றுக்குறை | — Dollar shortage |

த

| | |
|---|---|
| தங்கசாலைச் சமன் | — Mint par |
| தந்திவழி மாற்று | — Telegraphic transfer |
| தராதர | — Relative, comparative |
| தரிசன உண்டியல் | — Sight bill |
| தலா வருமானம் | — Per capita income |
| தலைகீழ்ப் பின்னம் | — Reciprocal |
| தவணை உண்டியல் | — Time bill |
| தவணை நீடிப்பு | — Moratorium |
| தனியார் நலன் கொள்கை | — Individualism |
| தன்னிச்சையான | — Autonomous |
| தானே இயங்கும் | — Automatic |

திடநிலை — Stability
திருத்தம் — Adjustment
தீர்மானிக்கும் காரணி — Determinant
தீர்வு — Clearing
துணை நிறுவனம் — Subsidiary
துணை நிற்கும் ஏற்பாடுகள் — Standby agreements
தூண்டப்பட்ட — Induced
தேய்மானம் — Depreciation
தேவை — Demand
தொடர்புடைய — Correspondent

ந

நடப்புக் கணக்கு — Current account
நடப்பு வைப்பு — Current account, demand deposit
நாட்டின் மொத்த ஆக்கம் — Gross National Product
நாட்டுக் கணக்கு — National account
நாட்டுப்பற்று — Nationalism
நாட்டு வருமானம் — National income
நாணயமாற்று அங்காடி — Foreign exchange market
நாணயமாற்றுச் சமன்காப்பு நிதி — Exchange Equalization (or Stabilization) Fund
நிகர — Net
நிதி ஏற்பாடு செய்தல் — Financing
நிதித்துறை இணைப்பு — Financial integration
நிலுவை — Balance
நிறை குறைந்த போட்டி — Imperfect competition
நிறைந்த போட்டி — Perfect competition
நீர்மை — Liquidity
நுகர்வு — Consumption
நெகிழ்ச்சி — Elasticity
நெருக்கடி — Crisis
நெறிகோணிய — Perverse
நேர்கணிய — Positive
நேர்மாறுதல் — Reversal

ப

பங்கீடு — Allocation, distribution
பங்கு ஈவு — Dividend
பத்திரம் — Security

பணச்சுருக்கம் — Deflation
பண வருமானம் — Money income
பணவீக்கம் — Inflation
பணிகள், பணவசதிகள் — Services
பரஸ்பரத் தேவை — Reciprocal demand
பல நாணயமாற்று வீதங்கள் — Multiple exchange rates
பலமுக வாணிபம் — Multilateral trade
பன்னாட்டுச் செலாவணி நிதி — International Monetary Fund
பன்னாட்டுப் பொருளாதாரம் — International economy
பற்று — Debit
பாதுகாப்பு — Insulation, protection
பிரமாண நாணயம் — Standard money
பிராந்தியம் — Region, bloc, area
பின்தங்குதல் — Lag
பின்னிய விளைவு — Interaction
பின்னிறக்கம் — Recession
புலனாகாத வாணிபம் — Invisible trade
புறச்சிக்கனங்கள் — External economies
புனரமைப்பு — Reconstruction
பெருக்கம் — Expansion
பெருக்கி — Multiplier
பெருமந்தம் — Great Depression
(உண்டியல்) பெறுவோன் — Payee
பேதம் காட்டும் — Discriminatory
பேரத்திறன் — Bargaining power
பேரரசுச் சலுகை — Imperial preference
பொறுப்பு — Liability
பொன் இறக்குமதி எல்லை — Gold import point
பொன் ஏற்றுமதி எல்லை — Gold export point
பொன் கட்டித் திட்டம் — Gold bullion standard
பொன் மாற்றுத் திட்டம் — Gold exchange standard

ம

மதிப்பிறக்கம் — Depreciation
மதிப்பேற்றம் — Appreciation
மந்தம் — Depression
மலிவான பணக் கொள்கை — Cheap money, policy
மாதிரி அமைப்பு — Model
மாறாத — Fixed constant

மாறுநிலை விளைவுகள் — Static effects
மாறுதலுக்கான இடைக்காலம் — Transition period
மாறுநிலை மதிப்பு — Critical value
மாற்றக்கூடிய கணக்கு — Transferable account
மாற்றுகை — Transfer
மாற்றுப் பொருள் — Substitute
மாற்றுரிமை — Convertibility
மானியம், பண உதவி — Subsidy
மிகை மதிப்பீடு — Overvaluation
மீட்சி — Recovery
முதலீடு — Investment
முளை — Peg
முழு வேலைநிலை — Full employment
முன்னோக்கிய நாணயமாற்று — Forward exchange
மூலதன இடப்பெயர்ச்சி — Capital movement
மூலதன ஓட்டம் — Capital flight
மொத்த — Gross, total, aggregate

வ

வணிகச் சுழல் — Trade cycle
வரவு — Credit (Cr.)
வல்லரசுச் சமநிலை — Balance of power
வளமை, செழுமை, பூரிப்பு, சுபீட்சம் — Prosperity
வளர்ச்சி — Growth, development
வளர்ச்சி குன்றிய நாடுகள் — Underdeveloped countries
வளர்ச்சி விளைவுகள் — Dynamic effects
வாங்கும் சக்திச் சமன் — Purchasing power par
வாசி — Resident
வாசி அல்லாதவர் — Non-resident
வாணிபமாற்று லாபம் — Gains from trade
வாணிபமாற்று வீதம் — Terms of trade
வீதம், விகிதம் — Rate
விரிவு, பெருக்கம் — Expansion
விலை ஆதரவு — Price support
விற்பனைக் குவிப்பு — Dumping
வீக்கநீக்கம் — Disinflation
வேலையின்மை — Unemployment
ஸ்டர்லிங் பிராந்தியம் — Sterling area

# பொருள் அகரவரிசை

# தமிழ் வெளியீட்டுக் கழகம்

## சென்னை–9

## 1966 வரை வெளியிட்டுள்ள நூல்கள்

### பொருளாதாரம்

| | | | |
|---|---|---|---|
| *1. | பொருளாதாரம்–II | சி. வேலாயுதம் | 9—00 |
| 2. | புதுமைப் பொருளாதாரக் கூறுகள் | திருமதி ஆர். தாமரஜாட்சி | 12—00 |
| 3. | பொருளாதாரம் ஓர் அறிமுகம்–I | தி. சி. மோகன் | 12—00 |
| 4. | ,, II | எம். ஏ. அபூர்வசாமி, பி. வி. ஸ்ரீநிவாசன் | 10—75 |
| 5. | பொருளாதாரக் கோட்பாடு வளர்ந்த வரலாறு | க. முத்தையன் | 7—00 |
| *6. | பணவியலும் பாங்கியலும்–II | சி. வேலாயுதம் | 11—50 |
| 7. | நவீன பாங்கு இயல் | க. வெற்றிவேல் | 7—50 |
| *8. | இந்தியச் செலாவணியும் பாங்கு முறையும் | பி. வி. ஸ்ரீநிவாசன் | 5—50 |
| *9. | அரசாங்க நிதி இயல் | அர. சேஷாசலம் | 4—75 |
| 10. | இந்தியப் பொருளியல்–I | எம். பாலசுப்பிரமணியன் | 10—00 |
| 11. | ,, II | எம். லூர்துநாதன் | 4—25 |
| 12. | நமது பொருளாதாரப் பிரச்சினை–I | சி. சுந்தரராஜன் | 10—75 |
| 13. | ,, II | எஸ். குழந்தைநாதன் | 10—50 |
| 14. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு–I | கீ. சீ. இராமசாமி | 6—00 |
| 15. | ,, II | ,, | 6—00 |
| 16. | அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி | தி. சி. மோகன் | 5—00 |

| | | | | |
|---|---|---|---|---|
| 17. | அமெரிக்கப் பொருளாதார வரலாறு—I | ... மு. க. சுப்பிரமணியம் | ... | 11—00 |
| 18. | ,, II | ... பி. வி. ஸ்ரீனிவாசன் | ... | 6—00 |
| 19. | ,, III | ... ,, | ... | 6—50 |
| 20. | அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்—I | ... மா. குமாரசாமி | ... | 10—00 |
| 21. | ,, II | ... அர. சேஷாசலம் | ... | 9—50 |
| 22. | இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி—I | ... தே. வேலப்பன் | ... | 10—00 |
| 23. | ,, II | ... ஜி. சிதம்பரம் | ... | 8—00 |
| 24. | பணம்—சிறு விளக்கம் ... | ... கோ. இராதாகிருஷ்ணன் | ... | 10—00 |
| *25. | வணிக இயலின் தத்துவங்கள் ... | ... கு. ஆளுடைய பிள்ளை | ... | 9—50 |
| 26. | பத்தொன்பதாம் நூற்றாண்டில் கிரேட் பிரிட்டனில் தொழில் வாணிபப் புரட்சி | ... சு. ரா. கறுப்பண்ணன் | ... | 11—00 |
| 27. | பென்ஹாம் பொருளாதாரம்—I | ... ஏ. குழந்தை | ... | 11—00 |
| 28. | ,, II | ... எஸ். குழந்தைநாதன் | ... | 7—00 |
| *29. | வரவுசெலவுத் திட்டம் ... | ... ஆர். ரங்காச்சாரி | ... | 6—00 |

**வரலாறு**

| | | | | |
|---|---|---|---|---|
| *30. | பிரிட்டன் வரலாறு—I ... | ... கி. ர. அனுமந்தன் | ... | 10—00 |
| *31. | ,, II ... | ... ,, | ... | 9—75 |
| *32. | ஐரோப்பிய வரலாறு—I ... | ... டி. வி. சொக்கப்பா | ... | 4—50 |
| 33. | ஐரோப்பா—கடந்த ஐந்து நூற்றாண்டுகாலச் சரித்திரம் | ... வை. விருத்தகிரீசன் | ... | 15—00 |
| 34. | இங்கிலாந்து வரலாறு—I ... | ... இரா. அண்ணாமலை | ... | 13—00 |
| 35. | ,, II ... | ... பா. மாணிக்கவேலு | ... | 13—00 |
| 36. | ,, III ... | ... என். ஜே. ராஜகோபால் | ... | 8—00 |

* மூல நூல் (Original Book)

**வரலாறு—தொடர்ச்சி**

37. இங்கிலாந்து வரலாறு–IV ... ... என். ஜே. ராஜகோபால் ... 8—00
38. இங்கிலாந்தின் வரலாறு–I ... ... க. த. திருநாவுக்கரசு ... 15—00
39. ,, II ... ... எம். எக்ஸ். மிராண்டா ... 8—00
40. ,, III ... ... ,, ... 5—00
41. இந்தியாவின் சிறப்பு வரலாறு–I ... தி. வெ. குப்புசாமி ... 7—50
42. ,, II ... ஏ. உஸ்மான் ஷெரீப் ... 9—00
43. ,, III ... அ. பாண்டுரங்கன் ... 11—00
44. கிரேக்க நாட்டு வரலாறு–I ... சைமன் ஜி. எஸ். பாக்கியநாதன் ... 7—50
45. ,, II ... ,, ... 7—00
46. ,, III ... பி. இராமானுஜம் தேவதாஸ் ... 7—75

**அரசியல்**

*47. இந்திய அரசியலமைப்பு ... ... வீ. கண்ணையா ... 4—75
48. அரசியலுக்கு ஓர் அறிமுகம் ... ... டி. செல்லப்பா ... 8—50
49. தற்கால அரசியல் அமைப்புகள் ... ... மோ. வள்ளுவன் கிளாரன்சு ... 8—50
50. பன்னாட்டு அரசியல்–I ... ... திருமதி நூர்ஜஹான் பாவா ... 16—00
51. பொதுத்துறை ஆட்சி இயல்–I ... ... வீ. கண்ணையா ... 9—00
52. ,, II ... ... அ. ஜெகதீசன் ... 7—25
53. பொதுத்துறை ஆட்சியியலுக்கு ஓர் அறிமுகம்-I ... வீ. கண்ணையா ... 7—50
54. ,, II ... டி. செல்லப்பா ... 7—50

**உளவியல்**

55. குழந்தை உளவியல்–I ... ... கி. ர. அப்புள்ளாச்சாரி ... 8—00
56. ,, II ... ... ,, ... 7—00
57. உட்கவர் மனம் ... ... சி. ந. வைத்தீஸ்வரன் ... 7—00

**உளவியல்—தொடர்ச்சி**

| | | | |
|---|---|---|---|
| 58. | இளையோர் உளவியல்–I ... | ... தி. இரா. அரங்கராசன் | ... 12—00 |
| 59. | ,, II ... | ... ,, | ... 9—00 |
| 60. | சமூக உளவியல் ... | ... என். வேதமணி மானுவேல் | ... 9—25 |
| 61. | பிறழ்நிலை உளவியல் ... | ... அ. பெசன்ட் கிரீப்பர்ராஜ் | ... 11—00 |
| 62. | பித்தரின் உள்ளம் ... | ... ,, | ... 3—00 |
| *63. | குமர உள்ளம் ... | ... டாக்டர் மு. அறம் | ... 6—25 |

**தத்துவம்**

| | | | |
|---|---|---|---|
| 64. | இந்து சமயத் தத்துவம் ... | ... ஞா. ராஜாபகதூர் | ... 5—50 |
| *65. | அறிவு ஆராய்ச்சி இயல் ... | ... ஆர். இராமானுஜாச்சாரி | ... 3—50 |
| *66. | மேலைநாட்டுத் தத்துவம் ... | ... ஆர். எஸ். தேசிகன் | ... 3—50 |
| 67. | அத்துவித தத்துவம் ... | ... கோ. மோ. காந்தி | ... 6—50 |
| 68. | ஆங்கிலேயப் பயன்வழிக் கொள்கையினர் | ... மோ. வள்ளுவன் கிளாரன்சு | ... 5—50 |
| 69. | இந்தியத் தத்துவம் ... | ... வ. அ. தேவசேனாபதி, பா. நா. சண்முகசுந்தரம் | ... 3—50 |

**அறவியல்**

| | | | |
|---|---|---|---|
| 70. | அறவியல்—ஓர் அறிமுகம் ... | ... கோ. மோ. காந்தி | ... 8—50 |

**அளவையியல்**

| | | | |
|---|---|---|---|
| 71. | அளவை இயல்—தொடக்க நூல் ... | ... கி. ர. அப்புள்ளாச்சாரி | ... 2—50 |

**மானிடவியல்**

| | | | |
|---|---|---|---|
| *72. | மானிடவியல் ... | ... ம. சு. கோபாலகிருஷ்ணன் | ... 4—75 |
| 73. | பண்பாட்டுக் கோலங்கள் ... | ... கி. பூ. சுப்பிரமணியன் | ... 5—50 |
| 74. | இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை | ... எஸ். இலட்சுமி | ... 3—50 |

* மூல நூல் (Original Book)

**சமூகவியல்**

| | | | |
|---|---|---|---|
| 75. | சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் | ஜெ. நாராயணன் | 10—00 |

**புவியியல்**

| | | | |
|---|---|---|---|
| 76. | ஆசியா–I | கொ. சேஷ. நரசிம்மன் | 9—50 |
| 77. | ,, II | ,, | 8—75 |
| 78. | ஐரோப்பாக் கண்டத்தின் புவியியல் | ஏ. எஸ். நாராயணன் | 8—50 |
| *79. | தென்கிழக்கு ஆசியா | ஜி. கிருஷ்ணமூர்த்தி | 8—50 |
| *80. | வட அமெரிக்கா | குமாரி இரா. அலமேலு | 8—25 |
| *81. | தென் அமெரிக்கா | எம். என். பத்மநாபன் | 9—00 |

**புவியியல்—தொடர்ச்சி**

| | | | |
|---|---|---|---|
| *82. | தென் கண்டங்கள்—ஆஸ்திரேலியா | திருமதி எச். நியூமன் | 4—00 |
| *83. | ,, —ஆஃப்பிரிக்கா | எஸ். முத்துக்கிருஷ்ணக் கரையாளர் | 3—25 |
| *84. | புவிப்புறவியல்–II | நா. அனந்தபத்மநாபன் | 6—00 |
| *85. | செய்முறைப் புவியியல் | சு. ஜெயச்சந்திரன் | 9—00 |
| *86. | மக்கட் பரப்பியல் | வி. எஸ். அனந்தபத்மநாபன் | 6—25 |
| *87. | சமுத்திரவியல் | கோ. இராமசாமி | 6—50 |
| 88. | காலநிலை இயல்–I | கொ. சேஷ. நரசிம்மன் | 10—00 |
| 89. | ,, II | ,, | 5—00 |
| 90. | வளியியலுக்கு ஓர் அறிமுகம் | கோ. இராமசாமி | 11—00 |
| *91. | புவி அமைப்பு இயல் | சி. விசுவநாதன் | 4—75 |

**புள்ளியியல்**

| | | | |
|---|---|---|---|
| *92. | புள்ளியியல்—அறிமுகம் | சு. வைத்தியநாதன் | 10—00 |

**புள்ளியியல்—தொடர்ச்சி**

| | | | | |
|---|---|---|---|---|
| 93. | புள்ளியியல் முறைகள்–I | கோ. சண்முகசுந்தரம் | ... | 10—00 |
| 94. | ,, II | கே. ஆர். இராஜகோபாலன் | ... | 14—00 |
| 95. | நம்மைச் சுற்றியுள்ள பேரண்டம் | தி. வி. லட்சுமிநரசிம்மன் | ... | 6—50 |

**உயர் கணிதம்**

| | | | | |
|---|---|---|---|---|
| *96. | ஆயத்தொலை வடிவகணிதம் | டி. கே. மாணிக்கவாசகம் பிள்ளை | ... | 12—50 |
| *97. | வகை நுண்கணிதம் | ,, | ... | 8—00 |
| *98. | தொகை நுண்கணிதம் | தி. கோவிந்தராசன் | ... | 9—00 |

**விலங்கியல்**

| | | | | |
|---|---|---|---|---|
| *99. | விலங்கியல் | பெ. மா. அண்ணாமலை, இரா. முருகேசன் | ... | 12—00 |

**பௌதிகவியல்**

| | | | | |
|---|---|---|---|---|
| 100. | ஒளி நூல் | ச. சம்பத்து | ... | 10—00 |

**விஞ்ஞானம்**

| | | | | |
|---|---|---|---|---|
| *101. | வானவெளி வெற்றி | டாக்டர் எம். ஏ. தங்கராஜ் | ... | 6—00 |
| *102. | ரேடியோ | ,, பி. திருஞானசம்பந்தம் | ... | 4—75 |
| *103. | எக்ஸ்-கதிர்கள் | பெ. நா. அப்புசாமி, ஜே. பி. மாணிக்கம் | | 4—50 |
| *104. | பாம்புகள் | பெ. மா. அண்ணாமலை | ... | 3—50 |
| *105. | தாவரம்—வாழ்வும் வரலாறும் | டாக்டர் கு. சீனிவாசன் | ... | 8—00 |
| *106. | கரும்பு | கு. பெரியசாமி | ... | 4—00 |

* மூல நூல் (Original Book)

**மருத்துவம்**

*107. நீரிழிவு–க்ஷயரோகம் ... ... டாக்டர் ஜி. வேங்கடசாமி, டாக்டர் ஏ. கதிரேசன் ... 2—50

108. மகப்பேறும் மாதர் நோயும் ... ... டாக்டர் (குமாரி) மணிமேகலை ... 8—25

*109. பாக்டீரியா ... ... சு. சுந்தரம் ... 2—50

**பொறியியல்**

110. நீங்களே வீட்டைக் கட்டலாம் ... ... கே. வி. கிருஷ்ணராஜ், சி. ஆர். சுப்பிரமணியம், ஆர். இராமசாமி, கே. வேணுகோபால் ... 8—50

**சட்டம்**

*111. குற்றவியல் சட்டம் ... ... எம். சண்முகசுப்பிரமணியம் ... 10—00

**பொது நூல்கள்**

112. மகாத்மா காந்தி ... ... சரஸ்வதி தங்கையன் ... 3—25

113. விவசாயப் புரட்சி ... ... வி. கார்த்திகேயன் ... 8—00

114. சேமக் கை-நூல் ... ... ஆ. சுப்பிரமணியம் ... 2—50

*115. முற்காலச் சோழர் கலையும் சிற்பமும் ... எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் ... 9—00

*116. உணவும் ஊட்டமும் ... ... தி. வேங்கடகிருஷ்ணய்யங்கார் ... 4—50

*மூல நூல் (Original Book)

